ஆறும்பாட்டு (வாழ்ந்தார்களித்யாதி) " அன்றுமுதலின்றறுதியாவாழ்ந்தார்கள் வாழ்ந்தேகிற்பரென்பதில்லை " என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (வைத்யர்களித்யாதி)

"வாழ்ந்தார்கள்" என்று - தம்மோடொட்டறச்சொல்லுவா னென்னென்ன (அவர்களித்யாதி) அப்படியவர்கள் வாழ்வாகநினைத்திருந்தத்தை யிவர் "விநாசம்" என்று நினைத்திருப்பரோவென்ன (அவர்களித்யாதி) "மொக்கலில்" என்றது - உபமாநார்த்தேபஞ்சமீ. ஜலபுத்புதவத்ஸமமென்றது - ஏககாலத்திலேபிறந்து போகிறதுக்கு ப்ரமாணம். சமம் - யுகபத். " [illegible] " (நக்ரமேணவிவ்ருத்தந்தஜ்ஜலபுத்புதவத்ஸமம் । பூதேப்யோண்டம்மஹாபுத்தேப்ருஹத்தததகேஸ்யம்) இதிப்ரதமேம்ஸேத்விதியே. "மழைமொக்கல்" என்னாமல், "மாமழைமொக்கல்" என்றதுக்குபாவம் (மாமழையென்கிறதித்யாதி) மாமழை-நிரந்தரவர்ஷம். மொக்கல்-குமிழி.

(முதலிலேயில்லை) " வாழ்ந்தேகிற்பர் " என்கிறவஸ்து ஸ்வரூபமேயில்லை, இனி யிவற்றுக்கு தர்மிகளைத்தேடுவானென்னென்றபடி.

ஆர்தல் - மிகுதியாய், பரப்பைச்சொன்னபடி. "ஆழ்ந்து, ஆர்" என்கிறவிசேஷணத்வயத்துக்குபாவம் ( திருமேனியினித்யாதி ) " கடற்பள்ளியண்ணல் " என்றுவிசேஷித்ததுக்குபாவம் (திருப்பாற்கடலிலேயித்யாதி) ( புருஷார்த்தத்தைப்பற்றுங்கோளிதி ) " அடியவராமினோ " என்றதுக்குபாவம். வ்ருத்திபர்யந்தம் விவக்ஷிதமென்றபடி. " [illegible] " ( தாஸபூதாஸ்ஸ்வதஸ்ஸர்வே ) என்னாநிற்க, " அடியவராமின் " என்றிப்போது விதிக்கிறதென்னென்ன ; தாத்பர்யத்வயம் (அவனித்யாதிவாக்யத்வயத்தாலே) முந்தினதுக்கு - சேஷத்வஸம்ப்ரதிபத்தியிலே தாத்பர்யம்; இரண்டாவது - ஈஸ்வராபிப்ராயத்தைப்பற்ற.

க்ரமேணாந்வய:............................................................................*

---

# ஏழாம் பாட்டு.

ஆமின்சுவையவையாறொடடிசிலுண்டார்ந்தபின்
றூமென்மொழிமடவாரிரக்கப்பின்னுந்துற்றுவா
ரீமினெமக்கொருதுற்றென்றிடறுவராதலிற்
கோமின்றுழாய்முடியாதியஞ்சோதிகுணங்களே.

## ஆறுயிரப்படி.

( ஆமின்சுவை ) அந்நபாநாதிவிஷயரசங்களு மத்யந்தமஸ்த்திரமதி க்ஷுத்ரமாதலால் துழாய்முடியாதியஞ்சோதி குணங்களைக்கோமின்களென்கிறார்.........................................................................*

# பன்னீராயிரப்படி.

அநந்தரம், தேஹபோஷணஹேதுவான அந்நபாநாதிபோகமு மநித்யமாகையாலே சர்வகாரணபூதனான சர்வஸ்மாத்பரனுடைய குணங்களை யநுசந்தியுங்களென்கிறார்.

ஆம்-ப்ரக்ருத்யநுகுணமாய். இன்-ஹ்ருத்யமாய். அவை-லோகப்ரசித்தமான. ஆறுசுவையோடு-மதுராம்லலவணதிக்தகடுகஷாயமாகிற ஆறுரசத்தோடேகூடின. அடிசில்-விலக்ஷணமான அந்நத்தை. உண்டு-புஜித்து. ஆர்ந்தபின்-பூர்ணரானபின்பு. அ-பரிவாலுண்டானசஹ்ருதயத்வத்தாலேசுத்தமாய். மென்-ஶ்ராவ்யமாம்படிம்ருதுவான. மொழி-பாஷணத்தையுடைய. மடவார்-பவ்யைகளானஸ்த்ரீகள். இரக்க-அபேக்ஷிக்கையாலே. அதுமறுக்கமாட்டாமல் பின்னும்-பின்னும். தற்றுவார்-வருந்திபுஜித்துப்போருமவர்கள். அந்தசம்பத்துநசித்தவாறே அந்தஸ்த்ரீகளிருந்தவிடத்தேசென்று; நீங்களெல்லீருங்கூட எமக்கு-எங்களுக்கு. ஒரு-ஒரு. தற்று-பிடிசோறு. ஈமின்-இடவேணும். என்று-என்றபேக்ஷித்து. இடறுவர்-ஒதுகிடையாதொழியிலும்வாசல்தோறும்தட்டித்திரிவர். ஆதலில் – ஆதலால். துழாய்-திருத்துழாயாலேயலங்க்ருதமான. முடி – திருமுடியையுடையனுகையாலேநிரதிசயபோக்யனாய். ஆதி-சர்வகாரணபூதனாய். அம்-தர்ஶநீயமாய். சோதி-தேஜோமயமானதிவ்யவிக்ரஹத்தையுடையனானசர்வேஶ்வரனுடைய. குணங்கள் – குணங்களை. கோமின் – "ஸோऽஶ்நுதே" (சர்வாந்காமாந்-அஶ்நுதே) என்கிறபடியேசேர்த்துபுஜியுங்கோள்.

கோத்தல்-சேர்த்தல். எமக்கென்னும் பன்மையால் – அவ்வவஸ்த்தையிலும் ஸ்வபஹுமாநந் தோற்றுகிறது.........................................*

## ஈடு - ஏழாம்பாட்டு.

ஐஶ்வர்யத்துக்கு நீர்சொல்லுகிற தோஷமுண்டேயாகிலும், அந்நபாநாதிகள் தாரகமுமாய் போக்யமுமாயிருக்கிற வாகாரமுண்டே என்ன; அதுவும் நிலைநில்லாதென்கிறார்.

(ஆமின்சுவை) ஆனவினியசுவை. நன்றான நல்லரசம். (அவையாறோடு) "ஷட்ரஸம்" என்று ப்ரசித்தமானவற்றோடேகூட. (அடிசிலுண்டு) முன்பிரந்துண்டு திரிந்தவன், நாழியரிசிபெற்று ஜீவிக்கப்புக்கவாறே ஒருவெள்ளாட்டியையும் சம்பாதித்து "முதலியார்" என்னவும்பண்ணி "அடிசிலுண்ணாநின்றார்" என்னவும்பண்ணும். (ஆர்ந்தபின்) கண்டதடையவிட்டு வயிற்றைநிரப்பி, உதிரங்குடித்துவாய்விட்ட அட்டைபோலேபெயரவும் திரியவும்மாட்டாதேகிடந்துபுரளாநிற்குமே; அவ்வளவிலேயிவனுக்கு ஸ்நேஹிகளாயிருப்பார் சில ஸ்த்ரீகள்வந்து, "உடம்புபதர்போலேயிருந்தது, இதுகொண்டெங்ஙனே ரக்ஷிப்பவர்க்கமானவெங்களை நோக்கப்பார்க்கிறது" என்பர்கள்; அத்தைக்கேளா, "நாமுண்டிலோமோ" என்று இவன்றானும் ப்ரமிக்கும்; முன்பிவர்களபேக்ஷித்தால் மறுக்குமே, ஒருதிரளையைத்திரட்டி, "இதென், பிடி" என்

பர்கள், பின்னை புஜியாதொழியமாட்டானே, அப்பேச்சினினிமையிலே துவக்குண்டுபின்னையும் புஜியாநிற்கும். இவர்களை யிக்கட்டளையிலேவேறே யொருவன்கைக்கொள்ளுமே, அவர்களையும் முன்புக்தையவனைப் போலே யிரந்தூட்டாநிற்பர்களே யிவர்கள்; அங்கே, தன்வயிறுவாழாமல்சென்று நீங்களெல்லாருமாகவெனக்கொரு பிடிதரவேணும்என்னும். (எமக்கு) பண்டுநல்லதுகண்டால் தன்வாயிலிடாதே இவர்களுக்காக்கிப்போந்தவன், தன்செல்லாமையாலேயெனக்கு என்கிறானிறே. அப்போதையவனுக்கு ப்ரியமாக அவர்கள்முகம்பாரார்களிறே. (இடறுவர்) பின்னையும் தட்டித்திரிவர்கள்.

(ஆதலில்) ஆனபின்பு. ஜீவநத்தின் நிலையாமை யிதுவானபின்பு சர்வைஸ்வர்யஸூசகமான திருத்துழாய்மாலையைத் திருமுடியிலேயுடையனாய், ஜகத்காரணபூதனாய், நிரவதிகதேஜோரூபமானவிக்ரஹத்தையுடையனா யிருந்துள்ளவனுடைய குணங்களைக்கோமின். (ஆதியஞ்சோதிகுணங்களை-கோமின்) ஸ்வரூபகதமாயும் விக்ரஹகதமாயுமுள்ள கல்யாணகுணங்களைச் சேர்த்தநுபவியுங்கோள்; "அஹமந்நாத:" (அஹமந்நாத:) "ஸோஶ்நுதே" (ஸோஶ்நுதே) என்று. "ஓவாதவூணாகவுண்" என்கிறபடியே யநுபவியுங்கோள்...................................*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு. (ஆமினித்யாதி) "அடிசிலுண்டார்ந்தபின், ஈமினெமக்கொரு துற்றென்றிடறுவர்" இத்யாதிகளைக் கடாக்ஷித்தவதாரிகை (ஐஶ்வர்யத்துக்கித்யாதி)

(நன்றானநல்ல) என்றமீமிசையால்-ஆதிக்யம்விவக்ஷிதம். மதுராம்லலவணதிக்த கடுகஷாயமிறே-ஷட்ரஸமாவது. சோறுண்டென்னாதே, "அடிசிலுண்டு" என்கிறதென்னென்ன (முன்பிரந்தித்யாதி) அவர்கள்வெள்ளாட்டிகள்சொல்லுகிறவார்த்தையை யநுவதிக்கிறபடியென்றுகருத்து. முதலியார்-ஶ்ரேஷ்டவாசி. வாய்விட்ட-கடித்தவிடத்தைவிட்ட. பெயரவும்-சலிக்கவும். (ப்ரமிக்கும்) ப்ரமத்துக்குஹேது - * தூய்மையும்மென்மையும் பவ்யதையும். "மடவாரிரக்க" என்னவமைந்திருக்க, "தூமென்மொழி" என்றுவிசேஷிக்கிறதென்னென்ன (முன்பிவர்களித்யாதி) பரிவாலுண்டான ஸஹ்ருதயத்வத்தாலே சுத்தமாய்ஶ்ராவ்யமாம்படி ம்ருதுவானபேச்சையுடையவர்களென்று சப்தார்த்தம். "தூமென்மொழி" என்றத்தைப்பற்ற (அப்பேச்சினினிமையாலேயென்றது)

"ஈமின்" என்கிறபன்மைக்கும், "ஒருதுற்று" என்றத்துக்கும்சேர (நீங்களெல்லாருமாகவெனக்கொருபிடியென்றது) இடறுவர் - (தட்டித்திரிவர்கள்)

விவரணம் (ஜீவநத்தினித்யாதி) "ஆதி" என்றத்தைப்பற்ற (ஸ்வரூபகதமாயுமென்றது) "அஞ்சோதி" என்றத்தைப்பற்ற (விக்ரஹகதமாயுமென்றது) (கோமின்) கோக்கை-சேர்க்கையாய், சேர்த்தநுபவியுங்கோளென்றபடி. "ஷட்ரசமானவந்நங்களைபுஜித்தவர்கள்" என்றதுக்கு ப்ரதிகோடியாகவர்த்தம்

(அந்நாதஇத்யாதி) ஜ்ஞாநசக்த்யாதி ஷட்குணங்களாகிற ஷட்ரசயுக்தமாக விஸ்வரணுகிறவந்நத்தை புஜிபுக்கோளென்றுகருத்து. (ஓவாதலூணுகவுண்ணிதி) கணை நாணி லோவாத்தொழிற்சார்ங்கன்தொல் சீரைநன்னெஞ்சே யோவாதலூணுகவுண்-திருச்சரங்கள் நாணினின்றும்மாறுதசெயலையுடைய ஸ்ரீசார்ங்கத்தையுடைய சக்ரவர்த்திதிருமகனுடைய ஸ்வாபாவிகமான சௌர்யாதிகல்யாணகுணங்களை நல்லநெஞ்சே நித்யபோகமாகபுஜியென்று பாசுரத்துக்கர்த்தம். ஓவாதலூணுக-நித்யபோகமாக. பெரியதிருவந்தாதி யெழுபத்தெட்டாம்பாட்டு. "துணைநாள்" இத்யாதி.

ஆமின்சுவைதொடங்கி, இடறுவாராதலில்-துழாய்முடியாதியஞ் சோதிகுணங்களை-கோமினித்யர்வய௦.......................................................*

## எட்டாம்பாட்டு.

குணங்கொணிறைபுகழ்மன்னர்கொடைக்கடன்பூண்டிருந்
திணங்கியுலகுடனாக்கிலுமாங்கவனையில்லார்
மணங்கொண்டபோகத்துமன்னியுமீள்வர்கள்மீள்வில்லை
பணங்கொளரவணையான்திருநாமம்படிமினோ.

### ஆறுயிரப்படி.

(குணங்கொள்) தாநாதிக்ஷத்ரதர்மோபேதராய்க்கொண்டு ராஜ்யாநுபவத்திலே ப்ரவ்ருத்தரானாலும் எம்பெருமானை யாஸ்ரயியாதொழியி லந்தராஜ்யம்சித்தியாது ; அவனையாஸ்ரயித்துப் பெற்றாலும் சிலகாலமநுபவித்து நிவ்ருத்தராவர் ; ஆதலால், தன்திருவடிகளை ப்ராபித்தாரை யொருநாளும்கைவிடாத வெம்பெருமான்திருவடிகளையே ப்ராப்யமாகப்பற்றுங்கள். அவன்திருவடிகளை ப்ராபித்தாரைக் கைவிடானோவென்னில் ; திருவநந்தாழ்வானைக் கைவிடிலன்றோ திருவடிகளை ப்ராபித்தாரைக் கைவிடுவதென்கிறார்.....................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், பகவத்ப்ரசாதமில்லாதபோது லப்தமானராஜ்யமும் நிலைநில்லாதாதலா லநந்தசாயி திருநாமங்களை யப்யசியுங்கோளென்கிறார்.

குணம்-சீலாதிகுணங்களுக்கு. கொள்-ஆகரபூதராய். நிறை-இக்குணங்களையுடையலோகமெல்லாம்கொண்டாடுகையாலேபூர்ணமான. புகழ்-புகழையுடையராய். மன்னர்-அபிஷிக்தக்ஷத்ரியபுத்ரர்களாய். கொடை-ஸ்வசம்பத்தைலோகோபஜீவ்யமாக்குமௌதார்யமாகிற. கடன்-ஸ்வபாவத்தை. பூண்டு-ஏறிட்டுக்கொண்டு. இருந்து-ப்ரதிஷ்டிதராய். இணங்கி- "அர்த்திநோத்ருஷ்டவாஸமேத்ய" (அர்த்திநோத்ருஷ்ட்வாஸமேத்ய) என்கிறபடியேபொருந்தி. உலகு-லோகம். உடனாக்கிலும்-உடன்படும்படிரக்ஷித்துப்போரிலும். ஆங்கு-அந்தவைஸ்வர்யவிஷயமாக.

அவனை-ஐஸ்வர்யப்ரதனான ஸர்வேஸ்வரனை. இல்லார் - ஆஸ்ரயித்துக்கொண்டுபோருகையில்லாதவர்கள். மணம்-நிதயோத்ஸவமான செவ்வியை. கொண்ட-உடைத்தான. போகத்து-ஐஸ்வர்யபோகத்திலே. மன்னியும் - இப்படி நிலைநின்றார்களேயாகிலும். மீள்வர்கள்-நிவ்ருத்தைஸ்வர்யராவர்கள். மீள்வில்லை-புநராவ்ருத்தியில்லாத புருஷார்த்தம்சித்திக்கும். பணங்கொள் - ஸ்வஸ்பர்ஸத்தாலேவிரிகிறபணங்களையுடைய. அரவு-திருவநந்தாழ்வானை. அணையான்-அணையாகவுடையனாகையாலே ஆஸ்ரிதசம்ஸ்லேஷஸ்வபாவனானவனுடைய. திருநாமம் - திருநாமங்களை. படிமின்- "ஈநந்தாநஞஶய நவ-பராணவ-பர-ஷொத்தம" (அநந்தாநந்தஶயந புராணபுருஷோத்தம" என்னுங்கணக்கிலே அப்யசியுங்கோள்.......................... ...*

## ஈடு - எட்டாம்பாட்டு.

ராஜ்யஸ்ரீநிலைநில்லாதொழிவது நாட்டோடுபொருந்தி வர்த்தியாதொழியிலன்றே, அவர்களோடுபொருந்தி வர்த்திக்கவே அதுநிலைநிற்குமேளன்ன ; பொருந்திவர்த்தித்தாலு மெம்பெருமானை யாஸ்ரயியாவிடில் கிடையாது, அவனையாஸ்ரயித்துப்பெற்றாலும் அவற்றின்ஸ்வபாவத்தாலே நிலைநில்லா, ஆனபின்பு அவன்றன்னையே ப்ரயோஜநமாக வாஸ்ரயியுங்கோளென்கிறார்

(குணங்கொளித்யாதி) குணங்கொண்டிருப்பாராய்-குணாதிகராயிருப்பாராய். நிறைந்தபுகழையுடையராய்-பூர்ணையான குணவத்தாப்ரதையை யுடையராய். இப்படியிருந்தாலு மபேக்ஷிப்பர்களப்ராப்தனாகில் (மன்னர்) அபிஷிக்தக்ஷத்ரிய புத்ரர்களாவது. ப்ராப்தராகிலும் கிட்டுவாரில்லையே லுப்தனாகில் ; கொடுக்கையே ஸ்வபாவமாயிருப்பது. உதாரனானாலும் ப்ரதாபியாயிருக்குமாகில் கிட்டுவாரில்லையிறே (இணங்கி) சுலபனா யெல்லாரோடும்பொருந்தி. (உலகுடனாக்கிலும்) லோகத்தைத்தங்களோடே சேர்த்துக்கொண்டார்களேயாகிலும். "ராமொராஜ்) ஊவாஸிக்ஷா" (ராமோராஜ்யமுபாஸித்வா) என்கிறபடியே சேர்த்துக்கொள்வது. (ஆங்கவனையில்லார்) அவ்வர்த்தத்திலவன் ப்ரசாதமில்லையாகில் அந்தராஜ்ய ஸ்ரீதான்கிடையாது. (மணங்கொண்டவித்யாதி) பகவத்ப்ரசாதத்தாலே யைஸ்வர்யத்தைப்ராபிப்பது. (மணங்கொண்ட போகம்) செவ்வியையுடைத்தான வைஸ்வர்யம். அந்தவைஸ்வர்யங்கிட்டினாலு மதுதன்னின் ஸ்வபாவத்தாலே மீளுவர்கள்.

(மீள்வில்லை) ஆனபின்பு " நவ-நாவாதெ" (நசபுநராவர்த்ததே) என்கிறபேற்றைப் பெறவமையும்.

எத்தாலேயென்னில் (பணங்கொளித்யாதி) ஸ்வஸ்பர்ஸத்தாலே விகசிதமானபணங்களையுடைய திருவநந்தாழ்வானை நிருபகமாகவுடையவனுடைய திருநாமங்களிலே யவகாஹியுங்கோள். திருநாமத்திலே யவகாஹித்தாரைத் திருவநந்தாழ்வானே பாதிவிடானென்கை. அன்றி

க்கே, "ஏவம்வித்பாதேநாத்யா ரோஹதி" (ஏவம்வித்பாதேநாத்யா ரோஹதி) என்கிறபடியே துகைத்தேறலாம்படியான படுக்கையையுடையவ னென்னுதல்.

பலாபிசந்திரஹிதமாக தாநதர்மத்தை யநுஷ்டித்தெம்பெருமானை யுத்தேஸ்யமாக்காதே, பலாபிசந்தியுக்தமாக வநுஷ்டித்து ஸ்வர்க்காதிபோகங்களைப்பற்றினால் நிலைநில்லாவென்றுமாம்......................*

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு. (குணங்கொளித்யாதி) "இணைக்கியுலகுடனாக்கிலும்" இத்யாதி, "திருநாமம்படியின்" இத்யந்தம் கடாக்ஷித்தவதாரிகை (ராஜ்யஸ்ரீயித்யாதி)

விவரணம் (குணுதிசராயித்யாதி) பூர்வவாக்யவிவரணம் (பூர்ணேயானவித்யாதி) பதங்களுக்குப்ரயோஜநம் (இப்படியிருந்தாலுமித்யாதி) கொடை-ஔதார்யம். கடன்-ஸ்வபாவம். பூண்டு-ஏறிட்டுக்கொண்டு. இருந்து-ப்ரதிஷ்ட்டிதராயிதிசப்தார்த்தஃ. கொடுக்கையே ஸ்வபாவமாக வுடையரா யிருந்தென்றபடி. கொடுக்கையேகடனென்று-அநதிலங்கநீயத்வ குணயோகத்தாலே ஸ்வபாவத்தைச்சொல்லுகிறது. உலகுடனாக்கிலும்-லோகங்களை ஸ்வவிதேயமாகப் பண்ணிக்கொண்டார்களே யாகிலுமித்யர்த்தஃ. இப்படிசேர்த்துக்கொண்டபேருண்டோவென்ன (ராமஇத்யாதி) "ராமோராஜ்யமுபாஸித்வா ப்ரஹ்மலோகம் ப்ரயாஸ்யதி" (ராமோராஜ்யமுபாஸித்வாப்ரஹ்மலோகம்ப்ரயாஸ்யதி) இதிசங்க்ஷேபே. ஆண்டென்னுதே, "உபாஸித்வா" என்கையாலே-எல்லாரையு மநுசரித்தானென்று தோற்றுகிறது.

ஆங்கு-அந்தவைஸ்வர்யத்தில். அவ்வர்த்தத்தில்-கீழ்ச்சொன்னராஜ்யஸ்ரீயில். ஆங்கவனையில்லார்-அந்தவைஸ்வர்யவிஷயமாக,ஐஸ்வர்யப்ரதனான சர்வேஸ்வரனையாஸ்ரயித்துக்கொண்டு போருகையில்லாதவர்களித்யர்த்தஃ. மணங்கொண்டபோகத்து மன்னியும்-நித்யோத்ஸவமான செவ்வியையுடைய வைஸ்வர்யபோகத்திலே நிலைநின்றார்களேயாகிலு மிதிசப்தார்த்தஃ. "மன்னியும்" என்ற அபிசப்தார்த்தம் (பகவத்ப்ரஸாதேத்யாதி)

சப்தார்த்தம் (ஸ்வஸ்பர்ஸத்தாலேயித்யாதி) "அரவணையான்" என்று-திருவநந்தாழ்வானோட்டைச்சேர்த்தியை யருளிச்செய்ததுக்கு பாவத்வயம். முந்தினது (திருநாமத்திலே யித்யாதி) இரண்டாவது (அன்றிக்கேயித்யாதி)

"மீள்வர்கள்" என்னும்போது—உயரவேறி மீள்வர்கள் என்றுதோற்றுகையாலே; ஐஹலௌகிக மைஸ்வர்யமஸ்த்திரமென்று கீழருளிச்செய்த யோஜனையன்றிக்கே, இத்தைப்பற்ற பாரலௌகிகைஸ்வர்யமான ஸ்வர்க்காதிகள் நித்யமாயிருக்குமேயென்ன; அதுவு மஸ்த்திரமென்று யோஜநாந்தரம் (பலாபிசந்திரஹிதேத்யாதி) "ஸ்வர்க்கசித்திக்குஇந்த்ரத்யும்நன் குணவத்தாப்ரதையையுண்டாக்கிக்கொண்டான்" என்று சொல்லக்கடவதிறே; ஆகையாலே குணவான்களானமை போராது, குணவத்தாப்ரதையும் வேணுமென்றுகருத்து.

மீள்வில்லை - மீட்சியில்லை. புநராவ்ருத்தியில்லை. குணங்கொளித்யாரப்ய, மீள்வர்கள்; ஆனபின்பு, பணங்கொள் தொடங்கி, படிமின்; மீள்வில்லையித்யந்வயః.



## ஒன்பதாம்பாட்டு.

படிமன்னுபல்கலன்பற்றோடறுத்தைம்புலன்வென்று
செடிமன்னுகாயஞ்செற்றார்களுமாங்கவனையில்லார்
குடிமன்னுமின்சுவர்க்கமெய்தியுமீள்வர்கண்மீள்வில்லை
கொடிமன்னுபுள்ளுடையண்ணல்கழல்கள்குறுகுமினோ.

### ஆறாயிரப்படி.

(படிமன்னு) இப்படி ஐஹிகமான ஐஶ்வர்ய மல்பமுமாயஸ்த்திரமுமாயிருந்ததாகில் ஸ்வர்க்காத்யைஶ்வர்யத்தை ப்ராப்யமாகப்பற்றினாலோவென்னில்; ஸ்வர்க்காத்யைஶ்வர்யவாஞ்சையாலே ஐஹிகவிஷயசங்க பரித்யாகபூர்வகமாக விந்த்ரியங்களைஜயித்து ஸ்வர்க்கப்ராப்திவிரோதி சரீரத்தை பரித்யஜித்தவர்களுக்கு மெம்பெருமானை யாஶ்ரயியாதொழியி லந்தஸ்வர்க்காத்யைஶ்வர்யம் சித்தியாது; ததாஶ்ரயணத்தாலே சித்தித்தா லு மஸ்த்திரம்; ஆதலால், இப்படி யல்பாஸ்த்திரத்வ பஹுளதுఃகத்வாநர்த்த ஹேதுத்வாத்யநேகதோஷ தூஷிதமான விந்தஐஶ்வர்யத்தைவிட்டு, பெரியதிருவடியைக்கைவிடிலும் ஸ்வாஶ்ரிதரை யொருநாளு மொருதசையிலும் கைவிடாத வெம்பெருமான்றிருவடிகளையேபரமப்ராப்யமாகப் பற்றுங்களென்கிறார்.................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், இப்படி பாரலௌகிகமான ஸ்வர்க்காதிசுகமும் நிலைநில்லாமையாலே, நிலைநின்றபுருஷார்த்தத்தைக் கொடிகட்டிக்கொடுக்கு மீஶ்வரனை யாஶ்ரயியுங்கோளென்கிறார்.

படி-க்ஷேத்ரத்தையும். மன்னு-கழற்றுமலென்றும் பூண்டுபோந்த. பல்-பலவகைப்பட்ட. கலன்-ஆபரணங்களையும். பற்றோடு-சங்கத்தோடேகூட. அறுத்து-விட்டு. ஐம்புலன்-விஷயாந்தரப்ரவணமான இந்த்ரியங்களைந்தையும். வென்று-ஸ்வவசமாம்படிவென்று. செடிமன்னு-தீர்க்ககாலம் தபஸ்ஸுபண்ணுகையாலே தூறுமண்டிக்கிடக்கிற. காயம்-சரீரத்தை. செற்றார்களும்-உபவாசாதிகளாலே வொறுத்துப்போந்தவர்களும். மன்னும் - இந்ததபఃபலமாய் கல்பாவசாநஸ்த்தாயியான. குடி-குடியிருப்பையுடைத்தாய். இன்-சுகோத்தரமான. சுவர்க்கம் -ஸ்வர்க்கத்தை. எய்தியும்-பெற்றார்களேயாகிலும். அந்தபோகஸ்த்தைர்யத்துக்குறுப்பாக, அவனை-பலப்ரதனானவவனை. ஆங்கு-அங்குமிருந்து. இல்லார்-ஆஶ்ரயிக்கையில்லாதவர்கள். மீள்வர்கள்-நிவ்ருத்தராய்ப்போவர்கள். மீள்வில்லை-நிவ்ருத்தியில்லாதபலமுண்டாகைக்கு. கொடி-த்வஜத்திலே. மன்னு-நித்யசந்நிதிபண்ணும். புள் - பெரியதிரு

வடிவை. உடை-உடைய. அண்ணல்-சர்வேஶ்வரனுடைய. கழல்கள்-திருவடிகளை. குறுகுமின்-கிட்டப்பாருங்கோள்.

படிமன்னுவென்று - சரீரத்தோடுபொருந்தினவென்றுமாம்...............*

## ஈடு - ஒன்பதாம்பாட்டு.

கீழெட்டுப்பாட்டாலே - ஐஹிகபோகமஸ்த்திரமென்றார்; இதில்-காயிகக்லேசாத்மகமான தபஸ்ஸைப்பண்ணி அந்ததபஃபலம் ஸ்வர்க்கமாகக்கொண்டு ஸ்வர்க்கத்தைப்ப்ராபிக்கும்போது பகவத்ப்ரஸாதம்வேணும், அதுண்டாய் ப்ராபித்தாலு மதுதன்னின் ஸ்வபாவத்தாலே நிலைநில்லாதென்கிறார்.

(படி) இவன்தபஸ்ஸிலே யந்வயிக்கும்போது விடுமவைசொல்லுகிறது. படி-பூமி. (மன்னுபலகலன்) க்ரமாகதமாயிருக்கிற ஆபரணஜாதம். அன்றியே (படிமன்னுபல்கலன்) தன்வம்சத்திலுள்ளார் பரம்பரையாகப் பூண்டுபோருகிற ஆபரணமென்னுதல். (பற்றோடறுத்து) அவற்றைவிட்டு வர்த்திக்கையன்றிக்கே வாஸனையும்போகை. (ஐம்புலன்வென்று) அவற்றில் ருசிக்கடியான ஶ்ரோத்ராதிகள்விஷயங்களிற் போகாதபடிவென்று. "ஐஂத்ரியாணிவ-ராஜித்வா" (இந்த்ரியாணிபுராஜித்வா) (செடிமன்னுகாயஞ்செற்றார்களும்) தபஸ்ஸுக்காக நெடுங்காலமோரோ ஆசநங்களிலேயிருந்தால் சலியாமையாலே உடம்பிலே தூறுமண்டும்படி சரீரத்தையொறுத்து தபஸ்ஸுபண்ணினவர்களும். "நெறியார்குழற்கற்றைமுன்னின்றுபின்தாழ்ந், தறியாதிளங்கிரியென்றெண்ணிப் - பிரியாது, பூங்கொடிக்கள்வைகும்" என்னக்கடவதிறே. (ஆங்கவனையில்லார்) அவன் ப்ரஸாதமில்லையாகில் தானேசித்தியாது. அவன்ப்ரஸாதமுண்டாய்ப்பெற்றதாகில் (குடிமன்னுமின் சுவர்க்கமெய்தியும்) "இதுக்குமாள்பற்றுவதே!" என்று பட்டர். குடிநெருக்கத்தையுடைத்தாய், நரகாத்வ்யாவ்ருத்தமான வினிமையையுடைத்தான ஸ்வர்க்கத்தை ப்ராபித்தாலும். (மீள்வர்கள்) மீளுவர்கள். புண்யக்ஷயம்பிறந்தவாறே "த்வம்ஸ" என்று தள்ளுவர்களிறே.

(மீள்வில்லை) அங்ஙனெருமீட்சியில்லை. அவனுடையபுண்யத்துக்கு க்ஷயமில்லையேயப்படி; "புணைக்கொடுக்கிலும் போகவொட்டாரே."

(கொடிமன்னுபுள்) கொடியாய் மன்னுகின்றுள்ளபுள். தன்னையாஶ்ரயித்தாரையும் தனக்கு வ்யாவர்த்தக விசேஷணமாகக்கொள்ளுமவனென்கை. அவன்றன்னை வ்யாவர்த்தக விசேஷணமாகக் கொள்ளவேண்டுவானென் அல்லரதாரிற்காட்டிலென்னில்; அவனுடைய மூக்குவலியும் அவன்பக்கல் பக்ஷபாதமுமதுக்கடி. (புள்ளுடையண்ணல்) "ஶ்ரியஃபதி" என்னுமாபோலே ஈஶ்வரனுக்கு நிரூபகமிறேயவன். (அண்ணல்)

சேஷி. (கழல்கள்குறுகுமினோ) உங்கள்சம்சாரங்கழல அவன் கழல்களை க்குறுகுங்கோள். "திருநாரணன்றாள்காலம்பெறச்சிந்தித்துய்ம்மினோ" என்றார் முதற்பாட்டில், இங்கே (புள்ளுடையண்ணல் கழல்கள்குறுகுமினோ) என்கிறார்காரணும்-அவளோபாதி யிவனுமங்குத்தைக்கு நிருபகதர்மமென்று.........................................................................*

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு. (படிமன்னுவித்யாதி) "மீள்வர்கள்" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை (கீழெட்டுப்பாட்டாலேயித்யாதி) கீழிற்பாட்டிலே "மீள்வர்கள்" என்கிறபத சாமர்த்த்யத்தைக்கொண்டு-ஸ்வர்க்கத்தைப்ராபித்தாலும் மீள்வர்களென்று சொன்னதுபோக்கி கண்டோக்தியில்லை; ஆகையாலிப்பாட்டிலே கண்டோக்தமாகவே யருளிச்செய்கிறாரென்றுகருத்து.

தாத்பர்யம் (இவனித்யாதி) த்விதீயார்த்தத்தில், "ஏழ்படிகால்" என்கிறகணக்கிலே, படியென்று - வம்ஶமாய், வம்சத்திலுள்ளார் நித்யமாகப் பூண்டு போந்தபலவகைப்பட்ட வாபரணங்களென்றபடி. படி-படிபடியாகவென்றுக்கி, வம்ஶபரம்பரையாக வென்றபடி. "பற்றேடு" என்றதுக்குபாவம் (அவற்றையித்யாதி) உபாசகனுக்கொழிய, ஐஸ்வர்யகாமனுக்கு விஷயாநுபவம் பலமாயன்றேவிருப்பது, இந்த்ரியஜயம்வேணுமோவென்ன (இந்த்ரியாணீத்யாதி) "ஐ_நி_யாணிவ-ாஜிக்ஷாஜிதஂதி_வநஂக்ஷயா|ஷஂதிஷி வதவெராகி_ெயெரெவநிஜிதஃ" (இந்த்ரியாணிபுராஜித்வாஜிதம்த்ரிபுவநம்த்வயா। ஸ்மரத்பிரிவதத்வைரமிந்த்ரியைரேவநிர்ஜிதஃ) இதிமண்டோதரீ. தூறுமண்டுகைக்கு ஹேதுவையருளிச்செய்துகொண்டு, சப்தார்த்தம் (தபஸ்ஸுக்காகவித்யாதி) உடம்பிலே தூறுமண்டும்படி தபஸ்ஸுபண்ணுவர்களோ வென்ன (நெறியாரித்யாதி) திருமலையாழ்வாரே யுத்தேஶ்யமாகவநுசந்தித்து மற்றொன்றறியாதேவழிபட நெடுங்காலமாஶ்ரயிக்கிறவர்களுடைய, குழற்கற்றையிலே முன்னேமுளைத்துப் பின்னளவும்வளர்ந்து தாழவிழுந்து, சலியாமலிருக்கிற விருப்பைக்கண்டு, "சேதநர்" என்றறியாதே சிறுமலைகளாயிருக்குமென்று புத்திபண்ணி யவ்விடத்தைவிட்டுநீங்காதே பூத்தகொடிகளானவை நித்யவாசம்பண்ணும் ஸ்த்தலமாயென்று பாசுரத்துக்கர்த்தம். இரண்டாந்திருவந்தாதி யைம்பத்து மூன்றாம்பாட்டு.

"குடிமன்னும்" என்றதுக்குபாவம் (இதுக்குமித்யாதி) மீளுகைக்குஹேது (புண்யக்ஷயமித்யாதி)

மீட்சியில்லாமைக்கு ஹேதுவேதென்ன (அவனுடையவித்யாதி) அவனுடைய-முக்தனுடைய. சித்ததர்மமாகையாலே யென்றபடி. "க்ருஷ்ணஂயூஂஸநாதநஂ" (க்ருஷ்ணம்தர்மம்ஸநாதநம்) இத்யாதி. அப்படிமீள்வற்றிருக்குமோ வென்ன (புணைகொடுக்கிலுமித்யாதி) நித்யமுக்தனைப் புணையிடிலும் போகவொட்டாரென்று பாசுரத்துக்கர்த்தம். பெரியாழ்வார்திருமொழி. "சீயினால்" இத்யாதி.

பெரியதிருவடியோட்டைச் சேர்த்திசொன்னதுக்குபாவம் (தன்னையித்யாதி) முக்குவலி-பலம். (பக்ஷபாதம்) பக்ஷஃபாதஃ - பக்ஷபாதஃ. ரஸோக்தி

(உங்களித்யாதி) கழல-திவ்ருத்தமாம்படி. குறுகுகை-கிட்டுகை. "ஸ்ரீயப்பதி யென்னுமாபோலே" என்றவாக்யவிவரணம் (திருநாரணனித்யாதி)

படிமன்னு இத்யாரப்ய, மீள்வர்கள்; கொடிமன்னு இத்யாரப்ய, குறுகுமினே; மீள்வில்லையித்யந்வய:.......................................................*

## பத்தாம்பாட்டு.

குறுக்மிகவுணர்வத்தொடுநோக்கியெல்லாம்விட்ட
விறுகலிறப்பென்னுஞானிக்கும்ப்பயனில்லையேல்
சிறுகநினைவதோர்பாசமுண்டாம்பின்னும்வீடில்லை
மறுகலிலீசனைப்பற்றிவிடாவிடில்வீடஃதே.

### ஆறுயிரப்படி.

(குறுக) அஸ்த்திரத்வாதி தோஷாஸம்பிந்நமான கைவல்யத்தை ப்ராப்யமாகப்பற்றினலோவென்னில்; ப்ராக்ருதவிஷய வைராக்யபூர்வகமாக ஜ்ஞாநயோகநிஷ்ட்டனானவனுக்கு மெம்பெருமானை யாஸ்ரயித்தாலல்ல தாத்மாவலோகந விரோதிகர்மம்போகாது; பகவத்ஸமாஸ்ரயணத்தாலே யாத்மாவலோகநம்பிறப்பது, பிறந்தாலு மந்திமதசையிலே பகவதநுசந்தாநம்பண்ணி ப்ரதிபந்தகத்தைப்போக்காதொழியில்பின்னை ஆத்மயாதாத்ம்யாவிர்ப்பாவ லக்ஷணமோக்ஷம் ஸித்தியாது; முக்யமான மோக்ஷமாகிறது மந்தபகவத்கைங்கர்யமே; இப்படி கைவல்யோபாயதயாபகவத் ஸமாஸ்ரயணம் பண்ணவேண்டுகையாலும், பகவத்கைங்கர்யந்தானே பரமமோக்ஷமாகையாலும், அந்தபகவத்கைங்கர்யாபேக்ஷயா அத்யல்பசுகமான கைவல்யத்தைவிட்டு பகவத்கைங்கர்யத்தையே பரமப்ராப்யமாகப் பற்றுங்களென்கிறார்.......................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், இப்படியஸ்த்திரமன்றியே ஸ்த்திரமானகைவல்யமும் பரமபுருஷார்த்தத்தைப்பற்றப் பசையற்றிருக்கையால் நியந்தாவான் சர்வேஸ்வர பகவத்ப்ராப்தியே அதிசயிதபுருஷார்த்தமென்கிறார்.

குறுக-விஷயாந்தரங்களிலகலப்போகாதபடி ப்ரத்யக்விஷயத்திலேயாஸங்நமாக. உணர்வத்தொடு-ஜ்ஞாநைகநிரூபணீயமான ஆத்மவஸ்துவோடேகூடி. மிக நோக்கி-தர்ஸநசமாநாகாரமாம்படி மிகவநுசந்தித்து. எல்லாம் - ஆத்மவ்யதிரிக்த சகலபுருஷார்த்தங்களையும். விட்ட-விட்டவனாய். இறுகல்-ஆத்மமாத்ரத்திலேபர்யவசித்த. இறப்பு-மோக்ஷத்தை. என்னும்-புருஷார்த்தமென்றிருக்கும். ஞானிக்கும்-ஜ்ஞாநிக்கும். அப்பயன்-ஸ்வயம்ப்ரயோஜநரூபமான, சர்வேஸ்வரனை யுபாயமாகப்பற்றுகை. இல்லையேல்-இல்லையாகில். சிறுக - அபக்ருஷ்டபுருஷார்த்தங்களை. நினைவதோர்-ஸ்மரிக்கைக்கடியான. பாசம்-சங்கம். உண்டாம்-உண்டாம். பின்னும்-

அதுக்குமேலே. வீடு-ஆத்மப்ராப்திரூபமானமோக்ஷமும். இல்லை-சித்தியாது. ஆன பின்பு, மறுகலில்-ஸ்வபாவபேதாதிரூபஸமஸ்தஹேயப்ரதிபடனாய். ஈசனை - ஸ்வாபாவிகசமஸ்தநியந்த்ருத்வாதி சமஸ்தகல்யாணகுணாத்மகனானஸ்வாமியை. பற்றி-ப்ராப்யத்வேநவும் ப்ராபகத்வேநவும் சமாஸ்ரயித்து. விடாவிடில்-அதிகார்யந்தரங்களைப்போலே ப்ரயோஜநாந்தரங்களைக்கொண்டகலாதொழியில். அஃதே - அதுவே. வீடு-பரமபுருஷார்த்தம்.

இறுகல்-சங்கோசமும், சிக்கெனவும். மறுகல்-ஸ்வபாவபேதம்............*

## ஈடு - பத்தாம்பாட்டு.

பூமியிலைஸ்வர்யம், ஸ்வர்க்கானுபவம், இவைநிலைநில்லாவென்றார்; கீழ்; இவைபோலன்றிக்கே ஆத்மலாபம் நிலைநின்றபுருஷார்த்தமேயென்னில்; கீழ்ச்சொன்னத்தைக்குறித்தொரு நன்மையுண்டேயாகிலும் பகவதாநந்தத்தைப்பற்ற இது ஏகதேசமாயிருக்கையாலே அதுவுந்தண்ணிது, ஆனபின்பு அவனைப்பற்றப்பாருங்கோளென்கிறார்.

(குறுகவித்யாதி) முதல்தன்னிலே ப்ரத்யாஹ்ருதேந்த்ரியனுக்கிறே ஆத்மப்ராப்தியி லதிகாரமுள்ளது. பாஹ்யவிஷயங்களிலே தூரப்போய் க்ரஹிக்கும் மநஸ்ஸை ப்ரத்யகர்த்தவிஷயமாக்குவது. அதாவது-கண்ணையிட்டுக்கண்ணைப்பார்த்தாப்போலே யிருப்பதொன்றிறே. சிரகாலம் பாஹ்யவிஷயங்களில் பண்ணிப்போந்த வாஸநையடைய ஆத்மாவிலேயாம்படி விசததமமாக அநுசந்தித்து, (எல்லாம்விட்ட) ஸ்ரீயஃபதி பெரியதிருவடி திருத்தோளிலேதோளும் தோள்மாலையுமாய்வந்து நின்றாலும், சாணகச்சரற்றேபாதி சுத்திமாத்ரத்தையே யுபஜீவித்து, போக்யதையில் நெஞ்சுசெல்லாதபடி யவனையும்விடுவது. (இறுகலிறப்பென்னும் ஞானிக்கும்) சங்கோசத்தை மோக்ஷமென்றுசொல்லுகிற ஆத்மஜ்ஞாநிக்கும். இவ்வருகுள்ளத்தைப்பற்ற "விஸ்த்ருதம்" என்றிருந்தானேயாகிலும், அவ்வருகுங்கண்டவராகையாலே "சங்கோசம்" என்றிருக்கிறாரிவர். இறப்பு-மோக்ஷம். (அப்பயனில்லையேல்) அந்தபகவதுபாசநமில்லையாகி லாத்மாநுசந்தாநம்பண்ணவொண்ணாது. உபாசநந்தான் சுகரூபமாயிருக்கையாலே-பயனென்கிறது. அவனுடையசாதந மிவருக்குப்ரயோஜநமாயிருக்கிறது. (சிறுகவித்யாதி) தன்னை முன்புத்தையிற்காட்டிலதிக்ஷூத்ரனாக நினைக்கும்படி, பந்தகமான அவித்யாதிகள் சதசாகமாகப்பணைக்கும். "தேவோஹம், மநுஷ்யோஹம்" என்கைக்கடியானபந்தமுண்டாம்;

(பின்னும்வீடில்லைமறுகலிலீசனைப்பற்றிவிடாவிடில்) இந்த்ரியநியமநாதிகளுண்டாய், பின்பு பகவதுபாசநத்தைப்பண்ணி கர்மக்ஷயத்தைப்பிறப்பித்து ஆத்மாவைலக்ஷிக்கப்பார்க்குமன்றும், சர்வேஸ்வரன்பக்கலந்திமஸ்ம்ருதிபண்ணி இஸ்ஸரீரத்தைவிடப்பாரானாகில் அந்தமோக்ஷ

தானில்லை. (மறுகலிலீசனை) ஹேயப்ரத்யநீகனான சர்வேஸ்வரனை. அன்றியே, மறுகலில்-மறுகுகிறசமயத்தில்; ப்ராணவியோகசமயத்தில் வருங்கலக்கத்திலென்னுதல். (ஈசனைப்பற்றிவிடாவிடில்) அந்திமஸ்ம்ருதியில்லையாகில். ஆதிபரதனைப்போலே மானுதல் மரையாதலாமித்தனை. (வீடஃதே) "திருநாரணன்றாள்காலம்பெறச்சிந்தித்துய்ம்மினோ" என்று நான் சொல்லுகிற வதுவேபுருஷார்த்தம் ......................................*

## ஜீயர்அரும்பதம்.

பத்தாம்பாட்டு. (குறுகவித்யாதி) "இறுகலிறப்பென்னும் ஞானிக்கு மப்பயனில்லையேல்" இத்யாதியைக்கடாக்ஷித்தவதாரிகை (பூமியிலித்யாதி) நன்மை-நித்யத்வாதி. தண்ணிது-அதிக்ஷுத்ரம்.

குறுக-குறுக்கி. மநஸ்ஸை ப்ரத்யாஹரித்து. ப்ரத்யகர்த்தவிஷயமாக்கியென்றபடி. உணர்வத்தொடு-ஆத்மாவோடேகூடி. * தத்குணசாரத்வத்தாலே, உணர்வென்று-ஆத்மாவைச்சொல்லுகிறது. மிகநோக்கி-விசதமாகவநுசந்தித்து இதிசப்தார்த்தஃ. குறுக்குகை-பாஹ்யவிஷயங்களினின்றும் மநஸ்ஸைத்திருப்புகையாகையாலே, அத்தையருளிச்செய்கிறார் (முதல்தன்னிலேயித்யாதி) பாஹ்யவிஷயப்ரவணமானமநஸ்ஸை ப்ரத்யகர்த்த விஷயமாக்குகையிலுண்டான வருமையையருளிச்செய்கிறார் (அதாவதித்யாதி) கண்ணையிட்டுக்கண்ணைப்பார்த்தாப்போலேயென்றது-தர்மபூதஜ்ஞாநத்தாலே ஜ்ஞாநஸ்வரூபனானவாத்மாவையறிகையாகையாலே. "உணர்வத்தொடு, மிக-நோக்கி" என்றந்வயித்தர்த்தம் (சிரகாலமித்யாதி) எல்லாம்விட்ட-ஆத்மவ்யதிரிக்தங்களையெல்லாம் விட்டவனாய். "எல்லாம்விட்ட" என்ற-சர்வத்யாகத்தின் சரமாவதி (ஸ்ரீயஃபதியித்யாதி) சாணகச்சாறு - பஞ்சகவ்யம். இறுகல்-சங்கோசம். சங்கோசமாவது-ஈஸ்வரனளவும் போகாதே அணுவானவாத்மமாத்ரத்திலே பர்யவசித்திருக்கை. சங்கோசமென்கிறதென், முக்திதசையிலநுபவமாகையாலே விபுவாயிராதோவென்ன (இவ்வருகித்யாதி) இவ்வருகுள்ளத்தைப்பற்ற-ஐஸ்வர்யாதிகளைப்பற்ற. "ஒண்டொடியாள்" இத்யாதியைப்பற்ற (அவ்வருகும் கண்டவராகையாலேயென்றது)

கீழிற்பாட்டில் "ஆங்கவனையில்லார்" இத்யேதத்விவக்ஷயா-"அப்பயன்" இத்யத்ரதச்சப்தம். ஆனால், உபாசநமில்லையேலென்றன்றேசொல்லவேணுமென்ன (உபாசநந்தானித்யாதி) அவனுக்கு சுகரூபதையுண்டோவென்ன (அவனுடைய வித்யாதி) ஆத்மாநுசந்தாநம்பண்ணவொண்ணமையே யன்றிக்கே விரோதியு மபிவ்ருத்தமாமென்னு மிடஞ்சொல்லுகிறது (தன்னையித்யாதி) முன்புத்தையிற்காட்டில்-ஸ்வர்க்காத்யைஸ்வர்யத்தைப்பற்றி நின்றபோதையிற்காட்டில்.

அந்தமோக்ஷம்-ஆத்மாநுபவம். "மறுகல்" என்று-ஹேயமாய், "இல்" என்று - இல்லாமையாய் ஹேயப்ரத்யநீகனான வீசனையென்னுதல்; "மறுகலில்" என்று-சப்தமீவிபக்தியாய், மறுகுகிறசமயத்திலேயென்னுதல். விவரணம்(ப்ராணவியோகேத்யாதி) விடாவிடில்-விடாவிட்டால். சரீரத்தை விடப்பாராநின்றாலென்றபடி. பற்றி-அநுசந்தித்து. ஸ்மரித்தென்றபடி. அந்திமஸ்ம்ருதியில்லாவிட்டாலேதென்ன (ஆதிபரதனையித்யாதி) மரை-கவயம்.

குறுகவென்றுதொடங்கி, அப்பயனில்லையே லாத்மாநுசந்தாநம்பண்ணவொண்ணாது, அதுக்குமேலே சிறுகநினைவதோர் பாசமுண்டாம்; பின்னும்-மறுக லிலீசனைப்பற்றிவிடாவிடில் - வீடில்லை; ஆனபின்பு, அஃதே-வீடித்யர்வயஃ.........*

# பதினொன்றும்பாட்டு.

அஃதேயுய்யப்புகுமாறென்றுகண்ணன்கழல்கண்மேற்
கொய்பூம்பொழில்சூழ்குருகூர்ச்சடகோபன்குற்றேவல்
செய்கோலத்தாயிரம்சீர்த்தொடைப்பாடலிவைபத்து
மஃகாமற்கற்பவராழ்துயர்போயுய்யற்பாலரே,

## ஆறாயிரப்படி.

( அஃதே ) ஆழ்வார் சர்வோஜ்ஜீவநார்த்தமாக வெம்பெருமானைப்பாடின இத்திருவாய்மொழியைத் தப்பாமல்கற்பார் நிரஸ்தாகிலதுஃகராய்க்கொண்டு பகவத்கைங்கர்ய மஹாரசத்தைப் பெறுவாரென்கிறார்....*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழிக்குபலமாக துஃகநிவ்ருத்திபூர்வகமான ஆத்மோஜ்ஜீவநத்தை யருளிச்செய்கிறார்.

உய்ய-உஜ்ஜீவிக்கைக்குறுப்பாக. புகும்-கிட்டும். ஆறு-உபாயம். அஃதே-அதுவே. என்று-என்றறுதியிட்டு. கண்ணன்-க்ருஷ்ணனுடைய. கழல்கள்மேல்-திருவடிகளின்மேலே. கொய் - கொய்யப்படும். பூ-புஷ்பசம்ருத்தியையுடைத்தான. பொழில்-பொழிலையுடைத்தான. குருகூர்-திருநகரிக்குநிர்வாஹகரான. சடகோபன்-ஆழ்வார். குற்றேவல்கள்-அந்தரங்கமானகைங்கர்யரூபங்களாக. செய்-செய்த. கோலம்-அலங்காரபூர்ணமாய். ஆயிரம்-சஹஸ்ரசங்க்யாதமாம். சீர்த்தொடை-சீருந்தொடையுமுடைய. பாடல்-பாடலானதிருவாய்மொழியில். இவைபத்தும்-இவைபத்தையும். அஃகாமல்-நழுவாதபடி. கற்பவர்-கற்பவர். ஆழ்-ஐஶ்வர்யகைவல்யங்களிலே ஆழங்காற்பட்டுவரும். துயர்-துஃகம். போய்-போய். உய்யற்பாலர்-பகவத்பக்திரூபமான ஆத்மோஜ்ஜீவநப்ரகாரத்திலேயாவர்கள்.

இது-கலித்துறை..........................................................................*

## ஈடு - பதினொன்றும்பாட்டு.

நிகமத்தில்-இத்திருவாய்மொழி பத்துங்கற்றார், ஐஶ்வர்யாதிக்ஷுத்ரபுருஷார்த்தத்தைத்தவிர்ந்து பகவத்கைங்கர்யைகபோகராவரென்கிறார்.

( அஃதேயுய்யப்புகுமாறென்று ) "திருநாரணன்தாள்" என்று நான்சொன்னவதுவே யுஜ்ஜீவிக்கைக் குபாயமுமுபேயமுமென்று. ( கண்ணன்கழல்கள்மேல் ) "கண்ணனைத்தாள்பற்றி" என்று தாமுஞ்சொல்லி, "கண்ணன்கழல்கள்நினைமினோ" என்றுபிறர்க்கு முபதேசித்துநின்றாரே ; அதுதன்னையே சொல்லுகிறார். "இப்படியடியுடையார்புறமில்லை" என்றிறே இவ்வடிகளைத் தாம்பற்றிற்று. "துயரறுசுடரடிதொ

ழூதெழு" என்று தந்திருவுள்ளத்துக் கருளிச்செய்தார், "வண்புகழ்நாரணன்திண்கழல்சேர்" என்றுபரோபதேசம் பண்ணினாங்கு ; இங்கே "கண்ணனைத்தாள்பற்றியானென்றும்கேடிலன்" என்றூர், "கண்ணன் கழல்கள்நினைமினோ" என்றுபரோபதேசம்பண்ணினார்; இதென்னவடிப்பாடுதான் ; "கண்ணனல்லாலில்லைகண்டீர்சரண்" என்றிறேபரோபதேசம் நிகமிக்கிறதும். (கொய்பூவித்யாதி) நித்யவசந்தமான திருச்சோலைசூழ்ந்த திருநகரிக்கு நிர்வாஹகரானவாழ்வார், சர்வேஸ்வரன்திருவடிகளிலே அந்தரங்கவ்ருத்திபண்ணினவையிவைதான். செய்-செய்தகவியென்னுதல் ; (குற்றேவல்-செய்) என்றுகீழேகூட்டி, வாசிகமானவடிமையென்னுதல். (கோலத்தாயிரம்) கவிக்குச்சொல்லுகிற வலங்காரத்தால் குறைவற்றவாயிரம். (சீரித்யாதி) அவன்குணங்களைத்தொடுத்துப்பாடினவிவற்றிலொன்றும் குறையாமேகற்றவர்கள் பகவத்வ்யதிரிக்த புருஷார்த்தங்களான ஐஸ்வர்யகைவல்யங்களாகிற அநர்த்தங்கள்போய் உஜ்ஜீவிக்கும் ஸ்வபாவராவர். அஃகல்-சுருங்கல். உய்யற்பாலர்-உஜ்ஜீவநமே ஸ்வபாவமாக வுடையராவர். "காலம்பெறச்சிந்தித்துய்ம்மினோ" என்று தாம்சொன்னபடியை யுடையராகை..... ........................*

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் (அஃதேயித்யாதி) "இவைபத்துமஃகாமல் கற்பவராழ்துயர்போ யுய்யற்பாலர்" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (நிகமத்திலித்யாதி)

"ஆறு" என்றதுக்கு - (உபேயம்) என்றர்த்தம்சொன்னது-கீழ்ச்சொன்ன உபேயாந்தர ப்ரதிகோடித்வேந. உபாயாந்தரங்களைக்கழித்து. "அவனையொழிய வேறுபாயமில்லை" என்றுசொல்லுகிறது-இம்மூன்றுபத்து முபாயவிஷயமாகையைப்பற்ற. "உபாயமுமுபேயமும்" என்றத்தைரசோக்தியாக வருளிச்செய்கிறூர் (இப்படியடியுடையாரித்யாதி) அடி-மூலமும், திருவடிகளும். "கழல்கள்மேல்" என்றத்தையுபஜீவித் தருளிச்செய்கிறூர் (துயரித்யாதி) அடிப்பாடு-அடியிலேபடுகை ; ப்ராவண்யமென்றபடி. ஏகப்ரகாரமும். பரோபதேசம் நிகமிக்கிறதுமென்றது-விரோதிஸ்வரூபவிஷயமான பரோபதேசம் நிகமிக்கிறதுமென்றபடி. பரோபதேசநிகமநம் - * கண்ணன்கழலிணையாலும், அது-சாமாந்யதஃ பரோபதேசமாகையாலே, விரோதிஸ்வரூபவிஷயமான - "வீடுமின்முற்றம்" "சொன்னூல்விரோதம்" "ஒருநாயகம்" "கொண்டபெண்டிர்" - என்கிற நாலுதிருவாய்மொழிகளிலும் வைத்துக்கொண்டு, "கொண்டபெண்டிர்" விரோதிஸ்வரூபவிஷயமான பரோபதேச நிகமநமென்னக் குறையில்லையென்று கருத்து.

கொய்பூம்பொழில்-கொய்யப்படும் புஷ்பங்களையுடைத்தான சோலையையுடைய.

செய்தகவியென்னுதலென்றது-சடகோபன் குற்றேவலாயிருப்பதாய்ச்செய்த கவியானகோலத்தாயிரமென்று ஆயிரத்துக்கு விசேஷணமென்றபடி. த்விதீயார்த்தத்தில், "குற்றேவல்செய்" என்று-முழுச்சொல்லாய், வாசிகமான வடிமையென்னுதலென்றபடி. அதுதானேதென்ன (கோலமித்யாதி) கோலம்-அலங்காரம்.

அஃகாமல்-குறையாமல். ஆழ்துயர்-ஆழங்கால்பட்டுவரும்துஃகம். ஐஸ்வர்யகைவல்ய ப்ராவண்யமாகிற மஹாநர்த்தமென்றபடி. பால்-ஸ்வபாவம்.

அஃதேயுய்யப்புகுமாறு இத்யாரப்ய, குற்றேவலுமாய், செய்கோலத்தாயிரமென்றுதொடங்கி யந்வயமாதல்; அன்றிக்கே, கொய்பூத்தொடங்கி, சடகோபன் - அஃதேயுய்யப்புகுமாறென்று கண்ணன்கழல்கள்மேல்-செய்த-குற்றேவலாய், கோலத்தாயிரமென்றுதொடங்கி யந்வயமாதல்..................................*

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

(ஒருநாயகம்.)

ஶ்ரீமாந்நாராயண: ஸ்வாம்யநுகுணமகுடோ வீரதாமாங்கமௌளிர்த்ரு-
ப்தாநாகாராதிஹந்தாத்புதநியததநு: கல்பபாதோதிதல்ப: । விஶ்வாத்ய
ஜ்யோதிருர்வீதரபணிஶயநோ வேதரூபஸ்வகேதுர்நிர்த்தூதா
ஶேஷதோஷ: ப்ரஹ்மாத்யாஸ்த்வல்பாஸ்திரைஶ்வர்யபாஜ:. (௩௫)

(ஶ்ரீமாந்நாராயண:) திருநாரணன்றாள் - பெரியபிராட்டியாரோடே பிரிவில்லாதவனுமாய்; (ஸ்வாம்யநுகுணமகுட:) செம்மின்முடித்திருமாலை-ஸ்வாமித்வத்துக்குத்தகுதியான திருவபிஷேகத்தையுடையனுமாய்; (வீரதாமாங்கமௌளி:) கடிசேர்துழாய்முடிக்கண்ணன்-சர்வாதிகத்வஸூசகமான திருத்துழாய்மாலையாலே யலங்க்ருதமான திருமுடியையுடையனுமாய்; (த்ருப்தாநாகாராதிஹந்தா) பனைத்தாள்மதகளிறட்டவன்-மதத்தாலே யொருவராலு மண்டப்போகாத குவலயாபீடத்தை ஸம்ஹரித்தவனுமாய்; (அத்புதநியததநு:) மணிமின்னுமேனிநம்மாயவன்-மணியைப்போலே ஸ்ப்ருஹணீயமாய் ஆஶ்சர்யங்களுக்காவாஸமான திருமேனியையுடையனுமாய்; (கல்பபாதோதிதல்ப:) ஆழ்ந்தார்கடற்பள்ளியண்ணல்- ப்ரளயகாலத்திலே ஏகார்ணவத்தைத் திருப்படுக்கையாகவுடையனுமாய்; (விஶ்வாத்யஜ்யோதி:) ஆதியஞ்சோதிருருவங்கள்-சர்வகாரணமாய் நிரவதிகதேஜோரூபனுமாய்; (உர்வீதரபணிஶயந:) பணங்கொளரவணையான் - தன்னுடைய திருமேனிஸ்பர்ஶத்தாலே விகஸிதங்களானபணங்களையுடைய திருவநந்தாழ்வான்மேலே கண்வளர்ந்தருளுமவனுமாய்; (வேதரூபஸ்வகேது:) கொடிமன்னுபுள்ளுடையண்ணல் - * வேதாத்மாவான விஹகேஶ்வரனை த்வஜமாகவுடையனுமாய்; (நிர்த்தூதாஶேஷதோஷ:) மறுகலிலீசனை - ஹேயப்ரத்யநீகனுமாயிருக்கிற வெம்பெருமானொருவனுமே நித்யநிரவதிகைஶ்வர்யத்தையுடையவன், தத்வ்யதிரிக்தரெல்லாரு மல்பாஸ்த்திரைஶ்வர்யரென்று "ஒருநாயகம்" என்கிறதசகத்திலே யாழ்வாருபபாதித்தருளினாரென்கிறார் ..........................................*

# திருவாய்மொழிநூற்றந்தாதி.

ஒருநாயகமாயுலகுக்குவானோ
ரிருநாட்டிலேறியுய்க்குமின்பம் - திரமாகா
மன்னுயிர்ப்போகந்தீதுமாலடிமையேயினிதாம்
பன்னியிவைமாறனுரைப்பால். (௩௧)

(ஒருநாயகமாய்) இதில் - ஐஶ்வர்யாதிகளினல்பாஸ்த்திரத்வதோஷத்தைப் பேசினபாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிறார். அதெங்ஙனேயென்னில்; "சீர்பர

வப்பெற்றநாள்" என்று-கீழ், பகவதநுபவத்தாலே ஹ்ருஷ்டரானவாழ்வார்; அந்த ஹர்ஷத்தாலே, இவ்விஷயத்தையொழிய ஐஶ்வர்யாதிகளிலே மண்டிக்கிடக்கிறவர்களைக்குறித்து, மீளவும், இவற்றினுடைய அல்பாஸ்த்திரத்வாதிதோஷங்களையறியாதே யிவற்றிலே மண்டுகிறார்களென்று இவற்றின்தோஷங்களைப் பரக்கப்பேசாநின்றுகொண்டு, பரமபுருஷார்த்தபூதனான ஸ்ரீய꞉பதி திருவடிகளை யாஶ்ரயியுங்கோளென்று பிறர்க்குபதேசித்துச்செல்லுகிற * ஒருநாயகத்தினர்த்தத்தை சங்க்ரஹித்து, " ஒருநாயகமாய் " இத்யாதியாலே யருளிச்செய்கிறாரென்கை.

(ஒருநாயகமாயென்றுதொடங்கி) உலகுக்கு - ஒருநாயகமாய்-உய்க்குமின்பமும், வானோரிருநாட்டிலேறியுய்க்குமின்பமும் திரமாகாவென்கிறார். "ஒருநாயகமாயோட வுலகுடனாண்டவர்" என்றத்தைநினைக்கிறது. சார்வபௌமராய் "𑌪𑌾𑌣𑍍𑌡𑌰𑌸𑍍𑌯𑌾𑌤𑌪𑌤𑍍𑌰𑌸𑍍𑌯" ( பாண்டரஸ்யாதபத்ரஸ்ய ) என்று ஏகாதபத்ரமாக நாட்டை நடத்துகிறவத்தால் வருகிறசுகமும், " ஏனத்தோருகங்களுமிவ்வுலகாண்டுகழிந்தவர் " என்றும், " வாழ்ந்தார்கள்வாழ்ந்தேநிற்பரொன்பதில்லை " என்றுஞ்சொல்லுகையாலே அஸ்த்திரமாயிருக்கும். வானோரிருநாட்டிலேறியுய்க்குமின்பமாவது-தேவர்களுக்கு வாசஸ்தாநமாய் ஐஹிகபோகவிலக்ஷணமான ஸ்வர்க்காத்யநுபவம். அதுவும் (திரமாகா) " 𑌤𑍇 𑌤𑌂 𑌭𑍁𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑌲𑍋𑌕𑌂 𑌵𑌿𑌶𑌾𑌲𑌂 𑌕𑍍𑌷𑍀𑌣𑍇 𑌪𑍁𑌣𑍍𑌯𑍇 𑌮𑌰𑍍𑌤𑍍𑌯𑌲𑍋𑌕𑌂 𑌵𑌿𑌶𑌨𑍍𑌤𑌿 " ( தேதம்புக்த்வாஸ்வர்க்கலோகம் விஶாலம்க்ஷீணேபுண்யேமர்த்யலோகம்விஶந்தி ) என்கிறபடியே அஸ்த்திரமாயிருக்கும். "குடிமன்னுமின்சுவர்க்கமெய்தியும்மீள்வர்கள்" என்றத்தைப்பின்சென்றபடி. (இருநாட்டிலித்யாதி) சுக்ருதவிசேஷத்தாலே ப்ராபித்தாலும்ஸ்த்திரமாகா. இது - * ஆப்ரஹ்மபவநம் புநராவ்ருத்தியென்னுமதுக்குபலக்ஷணம். (மன்னுயிர்ப்போகந்தீது) " இறுகலிறப்பு" என்று சங்கோசரூபமோக்ஷமாகையாலே அதுவும் தோஷயுக்தமாயிருக்கும். மன்னுயிர்ப்போகமென்கையாலே- நித்யமானவாத்மாநுபவம் கீழிலவைபோலே யஸ்த்திரபோகமன்றிக்கே நித்யபோகமாயிருந்ததேயாகிலும், பரப்ரஹ்மாநுபவத்தைக்குறித்துச் சிற்றின்பமாயிருக்குமாகையாலே - தீதென்றது. (பன்னியிவைமாறனுரைப்பால்-மாலடிமையேயினிதாம்) இவற்றினல்பாஸ்த்திரத்வாதிதோஷங்களை யாராய்ந்து ஆழ்வாரருளிச்செய்கையாலே, ஸ்ரீய꞉பதியான சர்வேஶ்வரனுடைய தாஸ்யமே சரசமாயிருக்கும். " திருநாரணன்றாள்காலம்பெறச்சிந்தித்துய்ம்மினோ" என்றும், "செம்மின்முடித்திருமாலைவிரைந்தடிசேர்மினோ" என்றும், " கடிசேர்துழாய்முடிக்கண்ணன்கழல்கள்நினைமினோ " என்றும், "பனைத்தாள்மதகளிறட்டவன்பாதம்பணிமினோ" என்றும், "மணிமின்னுமேனிநம்மாயவன்பேர்சொல்லிவாழ்மினோ" என்றும், "ஆழ்ந்தார்கடற்பள்ளியண்ணலடியவராமினோ" என்றும், " பணங்கொளரவணையான் திருநாமம்படிமினோ " என்றும், "கொடிமன்னுபுள்ளுடையண்ணல்கழல்கள்குறுகுமினோ" என்றும், " மறுகலிலீசனைப்பற்றிவிடாவிடில்வீடஃதே " என்றும், " அஃதேயுய்யப்புகுமாறு " என்றருளிச்செய்தவையெல்லாவற்றையும்நினைத்து (மாலடிமையேயினிதாம்) என்றருளிச்செய்தது.........................................................................*

நாலாம்பத்தில் - முதற்றிருவாய்மொழி முற்றிற்று.

---

ஆக - திருவாய்மொழி - ௩௧. பாட்டு - ௩௪௧.

ஸ்ரீ

# திருவாய்மொழி.

## நான்காம்பத்து.

## இரண்டாந்திருவாய்மொழி.

### பாலனாய் - ப்ரவேஶங்கள்.

### ஆறாயிரப்படி.

(பாலனாய்) இப்படி பரமப்ராப்யபூதனான வெம்பெருமானோடே கலந்து பரிமாறவேணுமென்றாசைப்பட்டுப்பெறாத நிரவதிகவ்யஸநத்தாலே தாமலற்றுகிறபடியை யந்யாபதேசத்தாலேபேசுகிறார் ...............*

### பன்னீராயிரப்படி.

இரண்டாந்திருவாய்மொழியில், கீழ்-இதரபுருஷார்த்தங்களுடைய அபகர்ஷோபதேச பூர்வகமாக ஈஶ்வரனுடைய பரமப்ராப்யத்வத்தை யுபதேசிக்கையாலே, ஆத்மாவினுடைய வநந்யபோக்யதையையநுசந்தித்து, அவ்வழியாலே, ப்ரஹ்லாதிதசஹஜபோக்யாகாரயுக்தனான சர்வேஶ்வரனுடைய விப்ரக்ருஷ்டாபதானங்களில் போகாபிநிவேஶயுக்தராய்; அவனுடைய வடதளசாயித்வத்தையும், கோபிகாலீலாசங்கித்வத்தையும், த்ரைவிக்ரமப்ரகாரத்தையும், பரத்வவைபவத்தையும், சப்தருஷபநிரஸநத்தையும், ஸ்ரீவராஹப்ராதுர்ப்பாவத்தையும், அம்ருதமதநவ்ருத்தாந்தத்தையும், லங்காநிரஸநத்தையம், அசாதாரணசிஹ்நங்களையும், ஆபரணசோபையையு மநுசந்தித்து, ஏவம்விசிஷ்டனான சர்வேஶ்வரன்றிருவடிகளிலே போக்யதாஸூசகமான திருத்துழாய்விஷயமாகத் தமக்குப்பிறந்த ஆதரவிசேஷத்தைப் பரிவர் பார்ஶ்வஸ்த்தர்க்குச்சொல்லுகிற பாசுரத்தை, விஶ்லிஷ்டையான நாயகியினுடைய வார்த்த்யதிசயங்கண்டநற்றாயானவள் வினவினார்க்குரைத்த பாசுரத்தாலே யருளிச்செய்கிறார் ........ .................................................*

### ஈடு.

ராமவிரஹத்தில் திருவயோத்யையிலுள்ளார் கூப்பிட்டாற்போலே, தாமும் தம்முடைய கரணக்ராமமுமாய்ப் பெருவிடாய்ப்பட்டுக்கூப்பிட்டார் - * மூடியானேயில்; இக்கூப்பீட்டை அல்லாதார் க்ஷுத்ரப்ரயோஜநங்களுக்காகப் புறம்பே கூப்பிடுகிறபடியைக்கண்டு, “ இதிவ்விஷயத்திலேயாகப்பெற்றதில்லையே ” என்று நொந்து, நாம் முந்தறமுன்

ன மிவ்விஷயத்திலே கூப்பிடப்பெற்றோமிறேயென்றுகந்தார் - * சொன்னால்விரோதத்தில் ; அவ்வளவேயோ, பகவதர்ஹக்ரணனாகவும் பெற்றோம் என்றார் - * சன்மம்பலபலவில்; அல்லாதார், தந்தாமுடையகரணங்களைப்பாழேபோக்குகைக்கடியான ஐஸ்வர்யகைவல்யங்களிலே ப்ரவணராயநர்த்தப்படுகிறபடியைக்கண்டு, அவற்றினுடைய அல்பாஸ்த்திரத்வாதி தோஷங்களையும், சர்வேஸ்வரன் பரமப்ராப்யனாயிருக்கிறபடியையு முபதேசித்து, அவற்றைவிட்டு அவனைப்பற்றுங்கோளென்றார்- *ஒருநாயகத்தில். ப்ரசங்காத், “ * இவ்வொருநாயக 'மருளிச்செய்தவோகிடிகோள் * சூழ்விசும்பணிமுகிலுமருளிச்செய்தார், இத்தை ஸ்ரீவைஷ்ணவர்கள் திருவுள்ளம்பற்றுங்கோள் ” என்று பிள்ளை யருளிச்செய்வர். அதாவது - இது ப்ரத்யக்ஷிக்கிறாப்போலே இஸ்ஸரீரஸமநந்தரமதுவுங் காணவன்றோ நாம் புகுகிறது, இனியெத்தனைநாளென்று. ஆக, மூன்று திருவாய்மொழியாலும் - இப்படி பரோபதேசம்பண்ணினவிது சம்சாரிகள் திருந்துகைக் குடலன்றிக்கே, அத்தாலும் தமக்கு பகவத்விஷயத்திலே விடாய்பிறந்தபடிசொல்லுகிறார் - இதில். அதாவது-இதரவிஷயங்களினுடைய தோஷாநுசந்தாநபூர்வகமாக பகவத்வைலக்ஷண்யத்தை யநுசந்தித்திறே, “ அவனைப்பற்றுங்கோள், இதரவிஷயங்களைவிடுங்கோள் ” என்கிறது; அது அவர்களுக்குடலன்றிக்கே தமக்கு வைஸத்யம்பிறக்கைக்குடலாயிற்று; ஸ்ரீவிபீஷணாழ்வான் ராவணனுக்குச்சொன்ன ஹிதமவனுக்குடலன்றிக்கே தனக்குப்பெருமாளைப்பற்றுகைக் குடலானாப்போலேயும், ஸ்ரீப்ரஹ்லாதாழ்வான் ஹிரண்யனுக்குச்சொன்னஹித மவன்நெஞ்சிலேபடாதே தனக்கு பகவத்பக்தி மிகுகைக்குடலானாப்போலேயும்; * வீடுமின்முற்றத்திலும் * சொன்னால்விரோதத்திலும் * ஒருநாயகத்திலும் - பிறரைக்குறித்துச்சொன்ன ஹிதமவர்களுக்குறுப்பன்றிக்கே, மூன்றுகளையும்பறித்துச் சங்காயமும்வாரினபயிர் சதசாகமாகப்பணைத்துப் பலிக்குமாபோலே தமக்கவன்பக்கலிலே அபிநிவேஸம் சதசாகமாகப்பணைக்கைக்குடலாயிற்று. இவர்களுக்குக்களையாவது-பகவத்வ்யதிரிக்தவிஷயங்களும், அஸேவ்யஸேவைபண்ணித்திரிகையும், “ ஐஸ்வர்யகைவல்யங்கள்புருஷார்த்தம் ” என்றிருக்கையும்; சங்காயமாவது - பயிர்தன்னிலேயுண்டாய் அறியாதார்க்குப் பயிர்போலே ப்ரதிபாஸித்து அச்சங்காயம் வாரிப்பொகடாதபோது நெல்பதர்க்கும் படியாயிருப்பதொன்று, அப்படியே கைவல்யமும். இவ்வபிநிவேஸமு மிப்படி செல்லாநிற்கச்செய்தே; முன்பு * முடியானேயில் பிறந்தவிடாய் ரசாந்தரங்களாலே அபிபூதமாய்க்கிடந்தது; அந்தவிடாய்தலையெடுத்து, “தேசகாலங்களால் விப்ரக்ருஷ்டமான அவன்படிகளையும் தத்தத்தேசகாலவிசிஷ்டமாக்கி இப்போதேபெற்றநுபவிக்கவேணும்” என்னும்விடாயும்பிறந்தது; அதப்போதே கிடையாமையாலே, அந்தவிடாய்தானவஸ்தாந்தரத்தைப் பிறப்பி

த்தது. அவ்வஸ்த்தாந்தரந்தான் - சர்வேஸ்வரனோடேகலந்து பிரிந்தாளொரு பிராட்டிதசையாய்; பிராட்டிதான் மோஹங்கதையாய்க்கிடக்க அவள்தசையை அநுசந்தித்த திருத்தாயார் “ தேசகாலங்களால்விப்ரக்ருஷ்டமான அவன்படிகளையும் தத்தத்தேஸகாலவிசிஷ்டமாக்கி யிப்போதே பெற்றநுபவிக்க வேணுமென்னாநின்றாள் ” என்கிறபாசுரத்தாலே ஸ்வதசையைப்பேசுகிறார். திருவடியைக்கண்ட பீமசேனன், “ 𑌸𑌾𑌗𑌰𑌂 𑌤𑌰𑍍𑌤𑍁𑌮𑍁𑌦𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌂 𑌰𑍂𑌪𑌮𑌪𑍍𑌰𑌤𑌿𑌮𑌂 𑌮𑌹𑌤𑍍 । 𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑍁𑌮𑌿𑌚𑍍𑌛𑌾𑌮𑌿 ” ( ஸாகரம்தர்த்துமுத்யுக்தம்ரூபமப்ரதிமம்மஹத் । த்ரஷ்டுமிச்சாமி ) என்று நீமுன்பு கடல்கடந்தவடிவை நானிப்போது காணவேணுமென்றானிறே, “இவன் சக்திமான் ” என்றுதோற்றுகையாலே; அப்படியேயிவளும் பகவச்சக்தியை யறிந்தபடியாலேயும், தன்சாபலாதிசயத்தாலேயும், அவாவின்மிகுதியாலேயும், பூதகாலத்திலுள்ளவற்றையுமிப்போதே பெறவேணுமென்றாசைப்படாநின்றாளென்கிறார்..........................................*

## ஜீயர் அரும்பதம்.

பாலனாய்ப்ரவேசே, * முடியானேயிலாற்றாமை தலையெடுத்ததென்கைக்காக அந்தநாலுதிருவாய்மொழிகளின் ப்ரமேயத்தை யநுவதியாநின்றுகொண்டு, இத்திருவாய்மொழிக்குசங்கதி ) ராமவிரஹத்திலித்யாதி, விடாய்பிறந்தபடி சொல்லுகிறாரிதிலென்னுமளவும் ) புறம்பே-தேவதாந்தரவிஷயத்திலே. பாழே-பகவத்விஷயமாக்காதேவ்யர்த்தமே. “ பணங்கொளரவணையான் ” என்றத்தைப்பற்ற ( பரமப்ராப்யனையென்றது ) அவற்றை-ஐஸ்வர்யகைவல்யங்களை. ப்ராசங்கிகமான வோரர்த்தமருளிச்செய்கிறார் (ப்ரசங்காதித்யாதி) இது- * ஒருநாயகத்திற்படி. அதுவும்- * சூழ்விசும்பில் ப்ரகாரமும். இனியெத்தனைநாளென்றது-தேஹசம்ஸ்ருஷ்டராய் துக்கப்படுகிறமையெத்தனைநாளென்றபடி. மூன்றுதிருவாய்மொழியாலுமென்றது-வக்ஷ்யமாணமான * வீடுமின்முற்றம், * சொன்னால்விரோதம், * ஒருநாயகமாகிற மூன்றுதிருவாய்மொழியாலுமென்றபடி. * வீடுமின்முற்றவும்பரோபதேசமுகே புத்திஸ்த்தமென்றத்தைப்பற்ற ( ஆகவென்றது ) அல்லது, * வீடுமின் முற்றத்தின் ப்ரமேயம்கீழுக்தமன்றே. அத்தாலும்-பரோபதேசத்தாலும். (அத்தாலும்) என்றசப்தத்தாலே- * முடியானேயிற்பிறந்த விடாயைசமுச்சயிக்கிறது. இதுக்குசூசகம்-மேலே “ இவ்வபிநிவேசமு மிப்படிசெல்லாநிற்க ” இத்யாதிவாக்யத்திலே விசதமாகக்கண்டுகொள்வது.

அர்யார்த்தமாகச்சொன்னது தமக்குசாபல்யம் பிறக்கைக்குடலாமோவென்ன ( அதாவதித்யாதி ) அவர்களுக்கு-சம்சாரிகளுககு. உக்தார்த்தத்துக்கு த்ருஷ்டாந்தகதநமுகேந “ ஆகமூன்றுதிருவாய்மொழியாலும் ” இத்யாதியைவிவரிக்கிறார் ( ஸ்ரீவிபீஷணாழ்வானித்யாதி ) சங்காயம்-ஆனைப்புல். சங்காயத்துக்கு ஸ்வாபதேசமாக கைவல்யத்தை வேறேசொல்லுகையாலே, ( ஐஸ்வர்யகைவல்யங்கள் ) என்கிறவிடத்தில் கைவல்யசப்தத்தில் தாத்பர்யமில்லை. இந்திருவாய்மொழியில

பிநிவேசம், கீழில்பரோபதேசம்பண்ணின வழியாலும், * முடியானே யிலிழவா லுமுண்டாயிற் றென்கைக்காக விரண்டுஹேதுவையும் காட்டுகிருர் (இவ்வபிநிவே சமுமித்யாதி) இவ்வபிநிவேசமும்-இப்படிபரோபதேசமடியான வபிநிவேசமும்-ரசாந்தரங்கள்-களையும் சங்காயமுமான ஐஸ்வர்யகைவல்யங்கள்.

(அவன்படிகளையும்) என்றசஸ்ரூபம்-விரோதசூசகம். அவஸ்த்தாந்தரம். நாயக்யவஸ்த்தை. தூர்லபத்திலே சாபலம்பண்ணுகைக் கடியேதென்ன, சத்ருஷ் டாந்தமாகக்காட்டுகிருர் (திருவடியையித்யாதி) அவாவென்ற-சாபலத்திலே யோ ரவஸ்த்தாவிசேஷமாய், ரசாந்தரங்களால் மாற்றவொண்ணுதேபெற்றன்றித்தரியா த வவஸ்த்தாவிசேஷத்தைச் சொல்லுகிறது. சாபலம் - பற்றிற்றுவிடாமை, "ஸாகரம் தா்த்துமுத்யுக்தம் ரூபமப்ரதிமம் மஹத். த்ரஷ்டுமிச்சாமி தேவீர" (ஸாகரம்தார்த்துமுத்யுக்தம்ரூபமப்ரதிமம்மஹத் । த்ரஷ்டுமிச்சாமிதேவீர) இத்யாதி.........................................................*

# முதற்பாட்டு.

பாலனாயேழுலகுண்டுபரிவின்றி
யாலிலையன்னவசஞ்செய்யுமண்ணலார்
தாளிணைமேலணிதண்ணந்துழாயன்றே
மாலுமால்வல்வினையேன்மடவல்லியே.

## ஆருயிரப்படி.

எம்பெருமானொருபிள்ளையாய்ப் பிள்ளைத்தனத்தாலே, முன்புகா ணப்படுகிற விந்தவேழுலகங்களையுமுண்டு அதினாலே ரங்ஷ்டகந்தமின் றியே யாலிலையிலே கண்வளர்ந்தருளினபோது அவன்றிருவடிகளிலேய ணிந்த திருத்துழாயை யிக்காலத்திலே பெறவேணுமென் றுசைப்படா நின்றாள்; இப்படி, சர்வசக்தியான வெம்பெருமான் றன்னாலும் சம்பாதி க்க வொண்ணாத வொன்றை யிவளாசைப்படுகிற தென்னுடையபாபமி றே என்றிவளுடைய திருத்தாயா ரலற்றுகிருள்.......................*

## பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், வடதளசாயி திருவடிகளில் திருத்துழாயைப் பெறவேணு மென்று ப்ரமியாநின்று ளென்கிருள்.

பாலனாய்-அதிபால்யமானவடிவையுடையனாய். ஏழுலகு-சமஸ்தலோகங்க ளையும். உண்டு-அமுதுசெய்து. அத்தால், பரிவு-ஒருமிறுக்கு. இன்றி-இன்றியே. ஆ லிலை-ஆலந்தளிர்மேலே. அன்னவசம்செய்யும்-உண்டதுக்கிடாகக்கிடக்கும். அண்ண

லார்-ஸ்வாமியானவருடைய. தாளிணைமேல்-திருவடிகளிரண்டின்மேலே. அணி-இவ்வபதாநத்துக்குத்தோற்று அன்புடையசூரிகள்சாத்தின. தண்-குளிர்ந்த. அம்-செவ்வியையுடைய. துழாய்-திருத்துழாயைப்பெறவேணும். என்றே-என்றே. மாலும் - "அதீதகாலத்திலதிப்போதுகிட்டாது" என்றறியாதேப்ரமியாநின்றாள். வல்-இச்சலக்கம்காண்கைக்கடியான. வினையேன்-பாபத்தையுடையளானவென்னுடைய. மடம்-பற்றிற்றுவிடாததவட்சியையுடையளாய். வல்லி-உபக்ராபேக்ஷமானகொடிபோலேயிருக்கிறவிவள்.

அகடிதங்களை கடிப்பிக்கும் சர்வசக்திக்குச் செய்யவொண்ணாததில்லை யென்றிருக்கை. "காலிணைமேலணிதண்ணந்துழாய்" என்றுபாடம் சொல்லுவாருமுளர்...........................................................................*

## ஈடு - முதற்பாட்டு.

வடதளசாயியினுடைய திருவடிகளில் சாத்தினதிருத்துழாயைச் செவ்வியோடேயிப்போதே பெறவேணுமென்றாசைப்படாநின்றாளென்கிறாள்.

(பாலனாய்) பருவம்நிரம்பினபின்பு லோகத்தையெடுத்து வயிற்றிலேவைத்து ஆலிலையிலே சாய்ந்தானாகி லென்மகளிப் பாடுபடாள்கிடீர், "அவனொருதசையிலேகாண்ரக்ஷகனாவது" என்றுமீட்கலாமிறே. (ஆய்) "𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌮𑌾𑌨𑍁𑌷𑌂 𑌮𑌨𑍍𑌯𑍇" (ஆத்மாநம்மாநுஷம்மந்யே) என்கிறபடியே, இவ்வவஸ்தையையொழிய பூர்வாவஸ்தை நெஞ்சிற்படாமை; "படியாதுமில்குழவிப்படி" என்னக்கடவதிறே. கலப்பற்றபிள்ளைத் தனத்தையுடையனாய். (ஏழுலகுண்டு) "இதுசாத்மிக்கும், இதுசாத்மியாது" என்றறியாதே, ஏதேனுமாக முன்புதோன்றினத்தை வாயிலே யெடுத்திடும்படி யாயிற்றுப்பருவம். ரக்ஷகவஸ்துவினுடைய வ்யாபாரமாகையாலே இதுரக்ஷணமாய்த் தலைக்கட்டினவித்தனை. அவன்பொறுக்கும் செயலைச்செய்தானாகில், இவளும்பொறுக்கும்படியானவற்றையாசைப்படாளோ. (ஏழுலகுண்டு) ஆபத்துண்டானால் வரைந்துநோக்குமதில்லை. (பரிவின்றி) ஒருவருத்தமின்றிக்கே. லோகங்களையெடுத்து வயிற்றிலே வைக்கிறவிடத்தில் அத்தாலொருவருத்தமின்றிக்கே. (ஆலிலை) ஒருபவனான ஆலிலையிலே. அவ்வடம்பண்ணிக்கொடுத்த சுத்தபத்ரத்திலே. (அன்னவசம்செய்யும்) தன்வசமாக வன்றிக்கே "𑌅𑌹𑌮𑌨𑍍𑌨𑌮𑍍" (அஹமந்நம்) என்கிறவந்நத்துக்குவசமாக. புக்தம்ஜரியாதபடி யதுக்கிடாகச்சாய்ந்தான். (அண்ணலார்) அவன் சைசவத்திலும் ரக்ஷணத்தில் அவதாநம்போலேயாயிற்றிவள் மோஹத்திலும் முறையில் கலக்கமற்றிருந்தபடி. (அண்ணலார்) சர்வரக்ஷகருமாய் சர்வஸ்வாமியுமானவர். சர்வரக்ஷகரானவர்க் கும்மையாசைப்பட்ட அபலையான வென்னபேக்ஷிதம் செய்யத்தட்டுண்டோவென்கிறாள். (அண்ணலார்தாளிணை) சேஷபூதன் பற்றுவதுசேஷியினுடைய திருவடிகளையிறே. (தாளிணைமேலணிதண்ணந்துழாய்) இப்படியிவளாசைப்படுகைக்கடியிலே பச்சையிட்டாள்காணும், ப்ராஹ்மணன்பிச்சேறினாலு மோத்

துச்சொல்லுமாபோலே, இவளுமடியி லப்யசித்தத்தையே சொல்லாநின்ருள்; "கெடுவாய், இதுதுர்க்கடங்காண், பூதகாலத்திலுள்ளதொன்றுகாண்" என்ருல் அதுசெவியிற்படுகிறதில்லை. யுக்திசாத்யையன்றிக்கேயிருக்கை. மாலும்-மோஹிக்கும். மாலுதல்-மயங்குதல். இதொருவுக்திமாத்ரமாய் அகவாயிலின்றிக்கே யிருக்கையன்றிக்கே, உள்ளழியாநின்ருள். மணிப்ரபையிலே யக்நிபுத்திபிறந்தால் அதுபின்னைச்சுடவும்வேணுமோ. (வல்வினையேன்) மோஹங்கதையாய்க்கிடக்கிற இவளுக்கொரு து:கானுசந்தானமில்லையிறே, உணர்ந்திருந் தநுசந்திக்கிறவென் பாபமிறே. (மடவல்லியே) பற்றிற்றுவிடாமை-மடப்பம். ஒருகொள்கொம்போடே சேர்க்கவேண்டும் பருவமாயிருக்கை (வல்லி) "பதிஸம்யோகஸுலபம்வய:" (பதிஸம்யோகஸுலபம்வய:) என்கிறபடியே யிருக்கை..........................................................*

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு (பாலனுயித்யாதி) "ஆலிலையன்னவசம்" இத்யாதி, "மாலுமால்" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை (வடதளசாயியினுடையவித்யாதி)

பாலனைக்கொண்டுலோகங்களை வயிற்றிலேவைத்து ஆலிலையிலேசாய்ந்தவன் திருவடிகளில் திருத்துழாயை யாசைப்படுகிருளென்று சொல்லுகிறதிருத்தாயாருடைய ஹார்த்தபாவத்தை யருளிச்செய்கிருர் (பருவமித்யாதி) அதெப்படியென்ன (அவனொருவித்யாதி) ஒருதசையிலே-ப்ரௌடதசையிலே. அதாவது-லோகத்துக்கோராபத்துவந்தபோதுகாண் தத்ரக்ஷணார்த்தமாக விச்செயலைச்செய்தது, இப்போது செய்யுமதுவோ அது என்றுமீட்கலாம், பருவம்நிரம்பினபின்செய்தால்; அங்ஙனன்றிக்கே, கார்யாகார்ய விவேகத்துக்கு யோக்யதையில்லாத பருவத்திலேசெய்ததாகையாலே யிப்போதுசெய்யத்தட்டென்னென்று மகளுக்குக்கருத்தென்றபடி. "ஆய்" என்றதுக்குவாசனை (ஆத்மாநமித்யாதி) "ஆத்மாநம் மாநுஷம்மந்யே ராமம் தசரதாத்மஜம்" (ஆத்மாநம்மாநுஷம்மந்யேராமம் தஸரதாத்மஜம்) இத்யாதிபூர்வமேவலிகிதம். யுத்தகாண்டே ப்ரஹ்மாதிந்ப்ரதிராமஃ. "பாலன்" என்னுமதுக்குப்ரமாணம் (படியாதுமித்யாதி) படி-உபமாநம். ஒப்பொன்றுமின்றிக்கே யிருக்கிறபிள்ளைத் தனத்தையுடையவனென்றபடி. சப்தார்த்தம் (கலப்பற்றவித்யாதி) அதிபால்யத்திலே யேழுலகுமுண்ணக்கூடுமோவென்ன (இதுசாத்மிக்குமித்யாதி) இந்தப்பருவத்தில்வ்யாபாரம் ரக்ஷணமாகக்கூடுமோவென்ன (ரக்ஷகவஸ்துவித்யாதி) தாயாருடைய ஹார்த்தபாவம் (அவன் பொறுக்குமித்யாதி) பொறுக்கும்செயல் - "இதுயோக்யம்" என்றுநிருபணத்தைப் பொறுக்குமதானசெயல். பொறுக்கும்படியானவற்றை - "இதாசைப்படுகைக்குயோக்யம்" என்னும்நிருபணத்தைப் பொறுக்கும்படியானவற்றை. "உலகு" என்றதுக்குபாவம் (ஆபத்துண்டானலித்யாதி) புத்திபூர்வகமாகவென்று பாவாந்தரமாதல். வரைந்து-தாரதம்யம்பார்த்து. சாடு (அவ்வடமித்யாதி) வடம்-இடமும், வடமும். அவ்வடம்பண்ணிக்கொடுத்தவென்றது-வேறுபடுக்கை படுப்பாரில்லையென்றபடி. த்ருதியோக்யமானதொன்றிலே சௌகுமார்யத்துக் கனுகுணமாக ம்ருதுவானவற்றைப் படுக்கலாமிறே, அதில்லையென்கிருர் (சுந்தபத்ரந்

நிலேயென்று ) சுத்தபத்ரம்-வெறுமில்லேயென்று ஸ்வபாவார்த்தம். விசுத்நியோ லேயென்றுசாடு. ( அஹமந்நம் என்கிற ) ஜீவர்களாகிற வந்நமென்றபடி. அர்த்சா ந்தரம் ( புக்ரம்ஜரியாதபடியித்யாதி ) விவரணமாதல். அதுக்கீடாகவென்றது-வ லக்ஷைகூோகவென்றபடி. கலங்கினதசையிலே " அண்ணலார் " என்னக்கூடு மோவென்ன ( அவன்சைசவத்திலுமித்யாதி ) முறை-சேஷத்வப்ராப்தி. " ஏழு லகுண்டு " என்றதின் த்விதியார்த்தத்துக்குச்சேரபாவம் ( சர்வரக்ஷகரானவர்க் கித்யாதி ) பாட்டுக்கெல்லாம் பாவமாதல்.

அவயவாந்தரங்கள்கிடக்க, " தாளிணை " என்கிறதென்னென்ன ( சேஷ பூதனித்யாதி ) சாடு ( இப்படியித்யாதி ) அடியிலே- முதலிலே. திருவடிகளிலே. பச்சை-உபஹாரம், திருத்துழாயும் ஆனாலும்பிராட்டியான வவஸ்த்தைக்குச்சேரா தேயென்ன ( ப்ராஹ்மணனித்யாதி ) ஒத்து-வேதம். அடியிலேயப்யசித்ததெங்கே யென்ன ( தாட்பட்டவித்யாதி )

" என்றே " என்கிறவவதாரணத்துக்குபாவம் ( எப்போதுமித்யாதி ) எப் போதும்சொல்லும்போது " வேண்டா " என்றுரில்லேயோவென்ன ( கெடுவாயி த்யாதி ) இது-துழாய். ( அதுசெவிப்படுகிறதில்லே ) " என்றே " என்று-பேச்சி னுடைய வறுவ்ருத்தியைச்சொல்லுகையாலே, வேறொன்று செவிப்படாமைசித்த மிறே. யத்வா, எப்போதுமித்யாதிவாக்யம்-சப்தார்த்தமாய், கெடுவாயித்யாதிவா க்யம்-ஏவகாரார்த்தமாதல். இத்தால்பலிதம் (யுக்திசாத்யையித்யாதி) " என்றே " என்றவநந்தரம், " மாலுமால் " என்றதுக்குபாவம் ( இதொருஉக்திமாத்ரமாயித் யாதி ) அகடிதத்தையாசைப்பட்டுக் கிடையாவிட்டால் மோஹிக்குமத்தை, அச ம்பாவித த்ருஷ்டாந்தத்தாலே யருளிச்செய்கிறார் ( மணிப்ரபையிலேயித்யாதி ) தூலபத்திலே " கிடைக்கும் " என்றுபுத்திபிறந்தால் மோஹம்வரவேணுமோவெ ன்றுகருத்து. அதீதகாலத்திலுள்ளத்தை யாசைப்படுகை, மணிப்ரபையிலே அக்நி புத்தி பிறந்தவோபாதியிறே. அது-அக்நி. நாயகனை விஸ்லேஷித்த நாயகியதன்றோ பாபமென்ன ( மோஹங்கதையாயித்யாதி ) " வல்லி " என்றதுக்குபாவம் ( ஒரு கொள்கொமபிலித்யாதி ) விவரணம் ( பதிசம்யோகேத்யாதி ) " பதிஸம்யோ ஸுலபம்வயோத்ருஷ்ட்வாசமேபிதா।சிந்தார்ணவகதஃபாரம்நாஸஸாதாப்லவோயதா " ( பதிஸம்யோகஸுலபம்வயோத்ருஷ்ட்வாசமேபிதா।சிந்தார் ணவகதஃபாரம்நாஸஸாதாப்லவோயதா ) இதி அயோத்யாகாண்டே அநஸூயாம் ப்ரதிசீதா.

வல்வினையேன் மடவல்லி, பாலனா யித்யாரப்ய, மாலுமா லித்யர்வயஃ....*

---

# இரண்டாம்பாட்டு.

---

**வல்லிசேர்நுண்ணிடையாய்ச்சியர்தம்மொடும்**
**கொல்லமைசெய்துகுரவைபிணைந்தவர் .**
**நல்லடிமேலணிநாறுதுழாயென்றே**
**சொல்லுமாற்சூழ்வினையாட்டியேன்பாவையே.**

## ஆறாயிரப்படி.

(வல்லிசேர்) தன்னுடைய ஸௌந்தர்ய ஸௌகந்த்ய ஸௌகுமார்யாதி கல்யாணகுணவிஷ்காரத்தாலே திருவாய்ப்பாடியில் பெண்பிள்ளைகளை வாயடித்துத் தந்திருவடிகளிலேவந்துவிழும்படி வசீகரித்து அவர்களோடே திருக்குரவைகோத்தருளின வண்டுவரைப்பெருமாளுடைய வவ்வழகிய திருவடிகளிலேயணிந்த நாறுதுழாயை யாசைப்படுகிறாளென்கிறாள்........................................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், திருக்குரவைகோத்த க்ருஷ்ணன்றிருவடிகளில் திருத்துழாயை யெப்போதும் பிதற்றாநின்றாளென்கிறாள்.

வல்லி-வல்லியோடு. சேர்-ஒத்த. நுண்-நுண்ணிய. இடை-இடையையுடைய. ஆய்ச்சியர்தம்மொடும்-ஆய்ச்சியர்தங்களோடொருகோவையாக. அவர்கள்வரம்பழியும்படி, கொல்லமை-அமர்யாதமானவ்யாபாரத்தை. செய்து-பண்ணி. குரவை-குரவையை. பிணைந்தவர்-கோத்தவருடைய. நல்-நருத்தத்துக்கேகமிதிக்கிற வழகிய. அடிமேல்-திருவடிகளிலே. அணி-அணியப்பட்ட. நாறு-பரிமளோத்தரமான. துழாயென்றே-திருத்துழாயென்றே. சொல்லும்-சொல்லாநின்றாள். சூழ்-இவளையிப்படிகாணும்படி தப்பாமல்சூழ்ந்த. வினையாட்டியேன்-பாபத்தையுடையவென். பாவை பெண்பிள்ளையானவள்..........................................................*

## ஈடு - இரண்டாம்பாட்டு.

சர்வரக்ஷகனான சர்வேஸ்வரன் ப்ரளயாபத்திலே தன்விபூதிரக்ஷணம்பண்ணினானாகிலதுவும் பேற்றுக்குடலாமோவென்ன ; அதுவுடலன்றாகில் தவிருகிறேன், என்பருவத்தில் பெண்களுக்குதவினவிடத்திலே எனக்கு தவத்தட்டென்றென்னா நின்றாளென்கிறாள்.

( வல்லிசேர்நுண்ணிடை ) “ வள்ளிமருங்குல் ” என்றாப்போலே, வள்ளிக்கொடிபோலே யிருக்கிறவிடையை யுடையவர்களென்னுதல் ; வல்லிபோன்றவடிவையுடையராய், இடைகருபமாகவில்லாமையாலே-நுண்ணிடை என்னுதல். ( ஆய்ச்சியர்தம்மொடும் ) என்பருவத்தின்பெண்கள் பலருக்குமுதவினவர் அவர்களெல்லார்விடாயுமுடைய வெனக்குதவத்தட்டென் என்னாநின்றாள். திருவாய்ப்பாடியிலிவள் பருவத்தில்பெண்கள்பலர்க்கு முதவினானிறே. ( கொல்லமைசெய்து ) வரம்பழிந்தசெயல்களைச்செய்து. ஸௌந்தர்யாதிகளாலே யவர்கள்மர்யாதையையழித்து. ( குரவைபிணைந்தவர் ) அவர்களோடேதன்னைத் தொடுத்தபடி. ( நல்லடி ) பெண்களுந்தானுமாய் மாறிமாறித்துவைத்த திருத்துழாய் பெறவேணும் என்றாசைப்படுகிறது. ப்ரஹ்மசாரி எம்பெருமான்திருவடிகளில் திருத்துழாயாசைப்படுமவளன்றேயிவள். (நாறுதுழாய்)

பேக்ஷித்தபடி யநுபவிக்கப்பெறாமையாலே தாம்நோவுபட்டுச்செல்லுகிறபடியை யந்யாபதேசத்தாலே யருளிச்செய்கிற * பாலனாயேழுலகினர்த்தத்தை யருளிச் செய்கிறார் "பாலனைப்போல்" இத்யாதியாலேயென்கை.

(பாலனைப்போல்சீழ்கி) ப்ராப்தாப்ராப்த விவேகம்பண்ணவறியாத பாலர்தேசத்தாலே விப்ரக்ருஷ்டமான அம்புலியம்மானையும், காலத்தாலேகைகழிந்து போன பலாகிவஸ்துக்களையும் "அப்போதேகொடுவந்துதரவேணும்" என்று, "ஸாஜஸ ௃ ... " (பாலஸ்யருதிதம்பலம்) என்னும்படிரோதநத்தை முன்னிட்டபேக்ஷிக்குமாபோலே, இவரும்தேசகால விப்ரக்ருஷ்டமான பராவஸ்த்தாத்யநுபவங்களை யப்போதேபெறவேணுமென்று "அழுவன்தொழுவன்" என்னும்படிபாலர் செய்யுமத்தைச்செய்து. "அபீதாநீம்ஸகாலஸ்ஸ்யாத் வநாத்ப்ரத்யாகதம்புநஃ" (அபீதாநீம்ஸகாலஸ்ஸ்யாத்வநாத்ப்ரத்யாகதம்புநஃ) என்றிரேயாசையுடையார் பவிஷ்யத்காலத்தை சமகாலமாக வபேக்ஷித்தபடியிருப்பது, அப்படியேயிவர் பூதகாலத்திற்படிகளை யபேக்ஷிக்கிறார் (பரனளவில்வேட்கையால்) சர்வஸ்மாத்பரனிடத்தில் பரபக்தியாலே. "பரன்பாதங்கள்மேலணி பைம்பொற்றுழாயென்றே யோதுமாலெய்தினள்" என்றத்தைநினைக்கிறது. காலத்தால்தேசத்தால் கைகழிந்தவையாவன-தேசவிப்ரக்ருஷ்டமான பரத்வவ்யூஹங்களும், காலவிப்ரக்ருஷ்டமானவிபவமும். பரவிஷயபக்தி ஏகதேசமாய், "ஆலிலையன்னவசம்செய்யுமண்ணலார் தாளிணைமேலணிதண்ணந்துழாயென்றே மாலுமால்" என்றுதொடங்கி, "கண்ணன்கழல்துழாய்பொன் செய்பூண்மென்முலைக்கென்றுமெலியும்" என்று-விபவப்ராவண்யமிறே விஞ்சவருளிச்செய்தது. அவையாவன - "குரவைபிணைந்தவர் நல்லடி" என்றும், "தேவர்கள் மாமுனிவரிறைஞ்சநின்றசேவடி" என்றும், "குடக்கூத்தனார்தாளிணை" என்றும், "அகலிடங்கீண்டவர்பாதங்கள்" என்றும், "திருமாதினைத்தடங்கொடார் மார்பினில்வைத்தவர்தாள்" என்றும், "இலங்கைநகரம்பெரியுய்த்தவர்தாளிணை" என்றும், "கண்ணன்கழல்" என்றுமிப்படி விபவத்தை யடிவிடாமலிருக்கிறபடியிதுவென்கை. ந்யக்ரோதசாயியையும் பீயூஷஹாரியையும் "ந்யக்ரோதஶாயீ பகவாந்பீயூஷாஹரணஸ்ததா" (ந்யக்ரோதஶாயீபகவாந்பீயூஷாஹரணஸ்ததா) என்றுவிபவங்களோடேயிறே சஹபடித்தது; இங்கும் - "மடந்தையை வண்கமலத்திருமாதினைத்தடங்கொள் தார்மார்பினில் வைத்தவர்" என்று - * விண்ணவரமுதுணவமுதில்வரும் பெண்ணமுதைஸ்வீகரித்தபடிசொல்லிற்று. (சாலவரிதானபோகத்திலாசையுற்றுநைந்தான்) இப்படி "தேசகாலங்களால் கைகழிந்திருக்கிற திருவடிகளில் திருத்துழாய், தத்காலவர்த்திகளுக்கும் தத்ரஸ்த்தரானவர்களுக்குமேயிறே யநுபாவ்யமாயிருப்பது" என்றறியாமல், அபிநிவேசாதிசயம் மறுபாடுருவும்படி யவகாடமாய், அத்தையப்போதேபெறாமையாலே சிதிலரானார். இதுக்கடி- * குருகூரில்வந்துதித்த கோவாகையாலே. திருவயோத்யையில்பிறப்பு ராமபக்தியை ஜநிப்பிக்குமாபோலே, திருநகரியில்பிறப்பும் பராபிநிவேசத்தைப்பிறப்பிக்குமிறே. கோ-ராஜா. ஸ்ரீவைஷ்ணவர்களுக்கெல்லாம் ராஜாவென்றபடி. இவ்விடம ராஜகமாகாமைக்காயிற்று ஆழ்வாரங்குநின்றும்போந்தாவிர்ப்பவித்தது............*

நாலாம்பத்தில்-இரண்டாந்திருவாய்மொழி முற்றிற்று.

ஆக - திருவாய்மொழி - ௩௨. பாட்டு - ௩௰௪.

ஸ்ரீ

# திருவாய்மொழி.

## நான்காம்பத்து.

## மூன்றாந்திருவாய்மொழி.

### கோவைவாயாள் - ப்ரவேஶங்கள்.

### ஆறாயிரப்படி.

(கோவைவாயாள்) இப்படி யவசந்நரான தம்முடைய வவசாத மெல்லாம் போம்படி தம்மோடேகலந்தருளின வெம்பெருமானுடைய ப்ரணயித்வகுணனுபவ ஜநிதப்ரீதியாலே யந்த ப்ரணயித்வத்தைப்பேசுகிறார்........................................................................*

### பன்னீராயிரப்படி.

*மூன்றாந்திருவாய்மொழியில் - இவருடையவார்த்திதீரும்படி சம்ஶ்லேஷித்த சர்வேஶ்வரனிவருடைய வபிநிவேசஹேதுவான அநுராகவிசேஷத்தைக்கண்டு அவனுமிவர்பக்கலிலே அத்யந்தாபிநிவிஷ்டனும்படி அநுரக்தனும்படியையநுசந்தித்தவிவர்;அவனுடைய ப்ராப்தி ப்ரதிபந்தக சமஸ்தவிரோதிநிவர்த்தகத்வத்தையும், ரக்ஷகத்வப்ரயுக்த சம்பந்தத்தையும், சர்வாத்மபாவாதியால்வந்த நாராயணத்வத்தையும்,அநுகூலசத்ரு நிரசநசாமர்த்த்யத்தையும்,சௌசீல்யாதிகுணயோகத்தையும்,ரக்ஷோபகரணவத்தையையும், அநந்யார்ஹமாக்கி யடிமைகொள்ளும் ஸ்வபாவத்தையும்,சர்வவ்யாபகத்வத்தையும், பாரமார்த்திகபரத்வௌஜ்ஜ்வல்யத்தையும், அபரிச்சேத்யமாஹாத்ம்யத்தையு மநுபவித்து,ஏவம்விதனான சர்வேஶ்வரன் தம்முடைய ஆத்மாத்மீயங்களெல்லாம் ஸ்ரக்வஸ்த்ராபரணாங்கராகாதிகளோபாதி தனக்கதிசயித போக்யமாம்படி விரும்பின ப்ரணயித்வத்தை யருளிச்செய்து சந்துஷ்டராகிறார் ........................................................................*

### ஈடு.

எல்லாத்தேசத்திலு மெல்லாக்காலத்திலுமுண்டான அவன்படிகளெல்லாமிப்போதே பெற்றநுபவிக்கவேணுமென்று விடாய்ப்பாரொருவரைப்பெறுகையாலே, இவர்சத்தையே தனக்கெல்லாமாம்படியிருக்கிற தன் ப்ரணயித்வகுணத்தைக்காட்டிக்கொடுக்கக்கண்டு, இவருமெல்லாம் பெற்றாராயநுபவிக்கிறார். சர்வேஶ்வரனுடைய * பாலனாயேழுலகு - இத்திருவாய்மொழி. இதுதனக்கு மூன்றுபடியாக நிர்வஹிப்பர்கள் நம்முதலிகள் - எம்பார், “ ‘அம்புலியம்மானைப்பிடித்துத்தரவேணும்’ என்றழுத ப்ரஜைக்குத் தேங்காயைக்கொடுத் தழுகையையாற்றுவானைப்போலே,

வேறொருகுணவிஷ்காரத்தைப்பண்ணி அநுபவிப்பிக்க வநுபவிக்கிறார்" என்றருளிச்செய்வர். திருமலைநம்பி, "ஒருவனொன்றையபேக்ஷித்தால், அவனுமதுசெய்வானாகத் தலைதுலுக்கினால், பெற்றானைப்பின்பு பின்னி ழவுதோன்றும்படியன்றிருப்பது; ஆகையாலே, அவனும் 'அப்படி செய்கிறோம்' என்னக்கீழ்இழவைமறந்து எல்லாம் பெற்றாராயநுபவிக்கிறார்" என்று; ஸ்ரீகௌஸல்யையார், பெருமாள் வநத்துக்கெழுந்தருளுகிறபோது "ஏகபுத்ராயான நானும்மைப்பிரிந்திருக்கமாட்டேன், கூடப்போமித்தனை" என்ன, "ஆச்சீ, நீர்சொல்லுகிறவிவை தர்மஹாநிகிடீர்" என்று முகத்தைப்பார்த் தொருவார்த்தையருளிச்செய்ய, இழவை மறந்து மங்களாசாஸநம்பண்ணிமீண்டாளிறே; க்ருஷ்ணன் "மாஶுச:" (மாஶுச:) என்றொருவார்த்தையருளிச்செய்ய, அர்ஜுநன் "ஸ்திதோஸ்மிகதஸந்தேஹ:" (ஸ்த்திதோஸ்மிகதஸந்தேஹ:) என்று தரித்தானிறே. பட்டர், "காலத்ரயத்திலுள்ளத்தையு மிப்போதே பெறவேணுமென்று விடாய்த்தவிவர்க்கு அப்படியேயநுபவிக்கலாம்படி, * காலசக்கரத்தானாகையாலே காலோபாதியைக்கழித்து, வர்த்தமானகாலத்திற்போலே அநுபவயோக்யமாம்படி காலத்தை யொருபோகியாக்கிக்கொடுக்க வநுபவிக்கிறார்" என்றருளிச்செய்வர் ...................... ..............*

## ஜீயர் அரும்பதம்.

கோவைவாயாள் ப்ரவேஶே, கீழோடே சேரசங்க்ரஹசங்கதி (எல்லாத்தேசத்திலுமித்யாதி) (சர்வேஶ்வரனுடைய பாலனாயேழுலகென்றது) * பாலனாயேழுலகிலே - ஆழ்வாருடைய ப்ரணயித்வகுணம் சொன்னாற்போலே, இத்திருவாய்மொழியில் - ஆழ்வார்பக்க லீஶ்வரனுக்குண்டான ப்ரணயித்வகுணம் சொல்லுகிறதென்றபடி. ப்ரணயித்வகுணமாவது வ்யாமோஹம்.

"எல்லாத்தேசத்திலும்" இத்யாதி ப்ரதமவாக்யம் - எம்பார்நிர்வாஹத்திலேயாய், அத்தைவிஸ்தரியாநின்றுகொண்டு நிர்வாஹாந்தரமு மருளிச்செய்கிறார் (இதுதனக்கித்யாதி, அநுபவிக்கிறானென்றருளிச்செய்வரென்னுமளவும்) லோகத்திலொருவரொருவரையொன்றபேக்ஷித்தாலத்தை மறக்கப்பண்ணி வேறொன்றைக் கொடுப்பது, அன்றிக்கே "அத்தையே கொடுக்கிறோம்" என்றுசொல்லுவது, கையிலேகொடுத்துவிடுவது; ஆக விம்மூன்று ப்ரகாரமாக நடக்கக்கடவதிறே, அம்மூன்று ப்ரகாரத்தையுமடைவே காட்டுகிறார் (எம்பாரித்யாதி) அம்புலியம்மான்-சந்த்ரன். வேறொருகுணவிஷ்காரத்தை-ப்ரணயித்வகுணத்தை. துலுக்கினால் - அசைத்தால். "அப்பா" என்றாலுச்சிகுளிருமோ, தலைதுலுக்கினமாத்ரத்தாலே பெற்றதாமோவென்ன; த்ருஷ்டாந்தத்வயம் (ஸ்ரீகௌசல்யையாரித்யாதி) பேச்சினினிமைவிஶ்வாசஹேதுவானமைக்குத்ருஷ்டாந்தம் (ஏகபுத்ரேத்யாதிவாக்யம்) க்ருஷ்ணனித்யாதிவாக்யம் - ப்ராமாண்யம் விஶ்வாசஹேதுவானமைக்கு த்ருஷ்டாந்தம். (காலசக்கரத்தானாகையாலேயென்றது) காலசக்ரநிர்வாஹகனாகையாலேயென்றபடி. "காலசக்கரத்தான்" என்றதுக்குமேலே வ்யாக்யாநத்திலருளிச்செய்த வர்த்தத்வயமன்றிக்கே, ருதுவத்ஸராதிரூபேண சக்ராகாரமானகாலத்துக்கு நிர்

வாஹகனென்றிவ்விடத்திலே விவக்ஷிதம். " [illegible] " ( காலஸ்யசஹிம்ருத்யோஶ்ச ) இத்யாதி. யத்வா, திருவாழிக்கு காலநிர்வாஹகத்வம் சொன்னபோதே - ஈஶ்வரனுக்கு மந்த்ரநிர்வாஹகத்வ மர்த்தஸித்தமென்னுதல். ( ஒருபோகியாக்கி) நடுத்தடையில்லாதவெளியாக்கி; ஏகமாக்கியென்றபடி. ஏககாலத்தில் பலமாக்கியென்னுதல். அபேக்ஷித்தபடியே யநுபவிக்கிறுமென்றதுக்குச்சந்தைகள்; "தோளிசேர்" இத்யாதிக்கு - "கோவைவாயாள்" இத்யாதியும், "கொம்புபோல்" இத்யாதிக்கு - "மதிளிலங்கைக்கோவைவீய" இத்யாதியும், "பாலனாய்" இத்யாதிக்கு - "ஞாலமுற்றுமுண்டுமிழ்ந்த" இத்யாதியும், " தேவர்கள், மாமுனிவரிறைஞ்சநின்ற " இத்யாதிக்கு - "குரைகழல்கணீட்டி" இத்யாதியும், மற்றுமிப்புடைகளிலே கண்டுகொள்வது. பட்டர்நிர்வாஹத்துக்கு நிதாநம் - " காலசக்கரத்தானுக்கு " என்றது. (எல்லாத்தேசத்திலும் இத்யாதியும்) (இதுதனக்குமூன்றுபடியாக வித்யாதியும்) தனித்தனியேசங்கதியாய், நாலுவிதசங்கதியாகவுமாம்.

ஏகபுத்ரையானநானும்மைப்பிரிந்திருக்கமாட்டேன், கூடப்போமித்தனையென்றது - " [illegible] " (ஏகபுத்ராவிநாபுத்ரமஹம்ஜீவிதுமுத்ஸஹே । கதம்ஹிதேநுஸ்ஸ்வம்வத்ஸம் கச்சந்தந்நாநுகச்சதி। அஹந்த்வாநுகமிஷ்யாமியத்ரபுத்ரகமிஷ்யஸி); என்றத்தைக்கடாக்ஷித்து. தர்மஹாநிகிடீரென்றது - " [illegible] " ( பர்த்துகிலபரித்யாகோ ந்ருஶம்ஸஃ கேவலம்ஸ்த்ரியாஃ । ஸபவத்யாநகர்த்தவ்யோமநஸாபிவிகர்ஹிதஃ । யாவஜ்ஜீவந்திகாகுத்ஸ்த்தஃபிதாமேஜகதீபதிஃ । ஶுஶ்ருஷாக்ரியதாந்தாவத்ஸஹிதர்மஸ்ஸநாதநஃ) இத்யாதியைக்கடாக்ஷித்து, மங்களாசாசநம்பண்ணியென்றது - " [illegible] " ( யந்மங்களம்ஸஹஸ்ராக்ஷே ) இத்யாதி, " [illegible] " (தத்தேபவதுமங்களம் இத்யாதியைக்கடாக்ஷித்து. (மாஶுச இதி) சரமஶ்லோகஃ. (ஸ்த்திதோஸ்மீத்யாதி) " [illegible] " ( நஷ்டோமோஹஸ்ஸ்ம்ருதிர்லப்தாத்வத்ப்ரஸாதாந்மயாச்யுத । ஸ்த்திதோஸ்மிகதஸந்தேஹஃ கரிஷ்யேவசநந்தவ ) இதிகீதாயாமஷ்டாதசே ...................................*

---

## மூன்றாந் திருவாய்மொழி.

## முதற்பாட்டு.

கோவைவாயாள்பொருட்டேற்றினெருத்தமிறுத்தாய்மதிளிலங்கைக்
கோவைவீயச்சிலைகுனித்தாய்குலநல்யானைமருப்பொசித்தாய்
பூவைவீயாநீர்தூவிப்போதால்வணங்கேனேலும்நின்
பூவைவீயாமேனிக்குப்பூசுஞ்சாந்தென்னெஞ்சமே.

## ஆருயிரப்படி.

அதிபலவ்ருஷரூபாசுர சப்தகஸபுத்ரஜநபாந்தவ தஸாஸ்யகுவலயாபீடகம் ஸாத்யாஸ்ரிதவிரோதிநிரசநஜநிதமான வுன்னுடையஸ்ரமாபநோதநார்த்தமான சிசிரோபசாரங்களை தத்தத்காலங்களிலே யுன்திறத்தில் நான்செய்யாதிருக்கச்செய்தேயும், என்னுடைய மநஸ்ஸானது சீதளமாய் நிரதிசய சுகந்தமாய் புஷ்பஹாஸ சுகுமாரமான வுன்னுடைய திருவுடம்புக்கு சத்ருஸமாய் சர்வஸ்ரமாபநோதநமான திவ்யாங்கராகமாவதே! இதென்னப்ரணயித்வமென்கிறார்.......... .. ..............................*

## பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், ப்ராப்திவிரோதிகளையழிக்கும் ஸ்வபாவனான சர்வேஸ்வரனை நோக்கி, என்னெஞ்சை யுனக்கங்கராகமாகக்கொண்டாயென்கிறார்.

கோவை-கோவைப்பழம்போலேசிவந்த. வாயாள்பொருட்டு - அதரத்தையுடைய நப்பின்னைப்பிராட்டிக்காக. ஏற்றின்-எருதுகளினுடைய. எருத்தம்-பிடரை. இறுத்தாய்-முறித்தவனாய். மதிள்-மதிளையுடைய. இலங்கை-லங்கைக்கு. கோவை-நிர்வாஹகனை ராவணனை. வீய-முடியும்படியாக. சிலை-வில்லை. குனித்தாய்-வளைத்தவனாய். குலம் - ஜாதிவைலக்ஷண்யத்தையும். நல் - லக்ஷண வைலக்ஷண்யத்தையுடைய. யானை - குவலயாபீடத்தினுடைய. மருப்பு-கொம்பை. ஒசித்தாய்-அநாயாசேநமுறித்தவனே. இப்படி நப்பின்னைக்கும் ஜநகராஜன்திருமகளுக்கும் மதுரையில் பெண்பிள்ளைகளுக்கும் ப்ராப்திவிரோதியைப்போக்கினவுன்னை, பூவை-புஷ்பத்தை. வீயா - அகலாத. நீர்-ஜலத்தை. தூவி-ப்ரேமத்தாலே அக்ரமமாகப்பணிமாறி. போது-உக்தகாலங்களிலே. வணங்கேனேலும்-வணங்கிற்றிலேனேயாகிலும். நின்-உன்னுடைய. பூவைவீயாம்- பூவைப்பூநிறத்தையுடைய. மேனிக்கு - திருமேனிக்கு. பூசும் - சாத்ததக்கதியான. சாந்து-அங்காராகம். என்னெஞ்சமே-என்னெஞ்சாவதே.

ஆஸ்ரயதோஷம்பாராதே அநுராகலேஸமேபற்றாசக அங்கராகமாக்கினாய், அதுக்கடி - அவஸ்த்தாசப்தசவிகாரத்தையும் கழித்து,* தசேந்த்ரியாநநமான * நிமனத்தையும்கெடுத்து, ப்ரவேஸவிரோதியான துர்மாநத்தையுமழித்த மவனுதலாலென்றுகருத்து ..................................................................*

## ஈடு - முதற்பாட்டு.

முதற்பாட்டில் - நப்பின்னைப்பிராட்டி, ஸ்ரீஜநகராஜன்திருமகள் தொடக்கமானருனக்கு ப்ரணயினிகளாயிருக்க, நீயவர்கள்பக்கலிலேயிருக்குமிருப்பை யென்பக்கலிலேயிருக்கும்படி யென்சத்தையே யுனக்கெல்லாமாய் விட்டதென்கிறார். அன்றிக்கே, ஆஸ்ரிதவிரோதிகளை நிரசிக்கிறவிடங்களில் அவ்வவசமயங்களில்வந்து முகங்காட்டி யடிமைசெய்யப்பெற்றிலேன்நான், இங்ஙனேயிருக்கவு மென்ஹ்ருதயத்தையே உனக்கு போக்யமாகக் கொள்ளுவதேயென்கிறாராதல்.

( கோவைவாயாள்பொருட்டு ) தன்னைப்பேணாதே அவனுக்கிவ் வெருதுகளின்மேலே விழவேண்டும்படியாயிருக்கு மவயவசோபை யெ

ன்கைக்காகச்சொல்லுகிறது. ருஷபங்களைமுன்னிட்டு "இவற்றையடர்த்தாருக்கு இவளைக்கொடுக்கக்கடவோம்" என்று, இவளையலங்கரித்து முன்னேகொண்டுவந்து நிறுத்தினர்கள்; "இவளையணையலாமாகில் இவற்றைமுறித்தாலாகாதோ" என்று, தன்னைப்பேணாதே யவற்றின்மேலே விழுந்தான். "நம்பிமூத்தபிரான் முற்படவந்துகிட்டினவிடத்து இவன்றலையிலே வெற்றிகிடந்தால்செய்வதென்" என்று வெறுப்பாலே அவாங்முகியாயிருந்தாள்; க்ருஷ்ணன்வந்துதோற்றினவாறே ப்ரீதிப்ரகர்ஷத்தாலே ஸ்மிதம்பண்ணினாள், அப்போதை யதரத்தில் பழுப்பிருந்தபடி. அந்தஸ்மிதத்திலேதோற்றுத் தன்னை யவளுக்காக்கினான். (ஏற்றினெருத்தமிறுத்தாய்) ஏற்றின்கருத்தைமுறித்தாய். எருத்தம் - அவற்றின்பிடர். அவற்றுக்கபிமாநஹேது கருத்திறே, அத்தைமுறித்தபடி. வீரராயிருப்பார் எதிரிகையிலாயுதத்தை வெறுங்கையோடேசென்று வாங்குமாபோலேயிருப்பதொன்றிறே யிவன்செய்தது; அவைதான் தலையான வாயுதத்தோடேயிறேநிற்கிறது. மாயாம்ருகத்தின்பின்னே பெருமாளெழுந்தருளுகிறபோது இளையபெருமாள் தெளிந்துநின்று, "இதுமாயாம்ருகங்கிடீர், ராக்ஷஸமாயை" என்றாற்போலே, நானு மவ்வளவிலேநின்று "இவையசுராவேஶமுண்டு" என்னவிறேயடுப்பது; அதுசெய்யப்பெற்றிலேனென்கிறார். (மதிளிலங்கை) "இம்மதிளுமுருமுண்டேநமக்கு" என்று சக்ரவர்த்திதிருமகனை யெதிரிட்டானாயிற்று. சர்வரக்ஷகரானபெருமாளைவிட்டு, மதிளை "ரக்ஷகம்" என்றிருந்தானாயிற்று; இதிறே தான் தனக்குப் பண்ணிக்கொள்ளும்ரக்ஷை. (இலங்கைக்கோவை) [ லஙாம்ராவணபாலிதாம்] [லங்காம்ராவணபாலிதாம்] மண்பாடுதானே யொருவர்க்கும் ப்ரவேஶிக்கவரிது, அதுக்குமேலே யுண்ணின்றுநோக்குகிறவனுடையபலம். "மதிளையுடைத்தான லங்கைக்கு நிர்வாஹகனல்லேனோ" என்றபிமாநித்திருக்கிற ராவணன்முடிய. (சிலைகுனித்தாய்) ராக்ஷசர் மாயாப்ரயோகமல்ல தறியாதாற்போலே, செவ்வைப்பூசலல்லதறியாரிவர், "நீர்தர்மயுத்தத்திலே குசலராயிருக்குமாபோலே, ராக்ஷஸர் மாயாப்ரயோககுசலர்கிடீர்" என்று ஸ்ரீவிபீஷணாழ்வானைப்போலே அறிவிக்கப்பெற்றிலேன். (குலநல்யானைமருப்பொசித்தாய்) ஆகரத்திலேபிறந்து சர்வலக்ஷணோபேதமான குவலயாபீடத்தினுடையகொம்பை யநாயாசேந முறித்தவனே. அவ்வளவிலே ஸ்ரீமதுரையில் பெண்களோடொக்கநின்று "நஸமம்யுத்தமித்யாஹு:" (நஸமம்யுத்தமித்யாஹு:) என்னப்பெற்றிலேன். (பூவைவீயாநீர்தூவி) பூவைத்திருவடிகளிலேபணிமாறி, நீரைத்தூவியென்னுதல்; அன்றிக்கே, பூவையொழியாநீர் - பூவோடேகூடினநீர், அத்தைத்தூவி. (போது) அவ்வவகாலங்களிலே பூவைவீயாநீர்தூவி வணங்கிற்றிலேனாகிலும். எருதேழடர்க்கை தொடக்கமானகாலங்களிலேபிறந்த ஶ்ரமமாற ஶிஶிரோபசாரம்பண்ணிற்றிலேனாகிலும்.

(நின்பூவைவீயாமேனிக்கு) பூவாலல்லது செல்லாத திருமேனிக்கு. அன்றிக்கே, பூவைப்பூவோடொத்தமேனியென்னுதல். வீயென்று - பூவுக்குப்பேர். புஷ்பஹாஸசுகுமாரமானமேனிக்கு. (மேனிக்குப்பூசும்சாந்து) "ஆவயோர்க்காத்ரஸத்ருஶம்" (ஆவயோர்க்காத்ரஸத்ருஶம்) என்கிறபடியே. நம்பிமூத்தபிரானும் தானுமாக ஸ்ரீமதுரையிற்போய்ப்புக்கவாறே கூனியைக்கண்டு, "அண்ணர்க்கும் நமக்கும் பூசலாம்படி சாந்திடவல்லையோ" என்ன; வழக்கனுயிருக்கிறசாந்தைக்கொடுத்தாள் [ஸுகந்தமேதத்] [ஸுகந்தமேதத்] இதுனக்காயிருந்தது. அதுக்குமேல் தரமாயிருப்பதொன்றைக்காட்டினாள் [ராஜார்ஹம்] [ராஜார்ஹம்] இதுகம்ஸனுக்காம். அதுக்குமேல் தரமாயிருப்பதொன்றைக்காட்டினாள் [ருசிரம்] [ருசிரம்] நிறமேயிதிலுபஜீவிக்கலாவது. இப்படி யருளிச்செய்தவாறே, "வெண்ணெய்நாற்றத்திலே பழகினோரிரண்டு மூக்கர் சாந்தின் வாசியறிந்தபடியென்" என்று, அத்தால்வந்த ஹர்ஷந்தோற்ற ஸ்மிதம் பண்ணினாள் [ருசிராநநே] [ருசிராநநே] நல்லசாந்திடுகைக்காக விதொருமுகமிருந்தபடி யென்றானென்கிறான். [ஆவயோர்க்காத்ரஸத்ருஶம்தீயதாம்] [ஆவயோர்க்காத்ரஸத்ருஶம்தீயதாம்] நற்சரக்குப்பரிமாறுவார், அதுகொண்டு விநியோகங்கொள்ளுவாருடம்புவாசியறியவேணுங்காண்; நம்முடம்புக்கு மண்ணருடம்புக்கு மீடானசாந்துதா. இப்படி தரமிட்டுப்பூசுந்திருமேனிக்குப்பூசும் சாந்தென் ஹ்ருதயமாய்விடுவதே.........*

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு. (கோவையித்யாதி) "கோவைவாயாள்" இத்யாரப்ய, "மருப்பொசித்தாய் - பூவைவீயாமேனிக்குப்பூசும் சாந்தென்னெஞ்சமே" என்று பூர்வார்த்தத்திலே நோக்காகவும், "பூவைவீயாநீர்தூவி" இத்யாத்யுத்தரார்த்தத்திலே நோக்காகவு மவதாரிகாத்வயம் (நப்பின்னையித்யாதி) ஈஶ்வரனுக்கு ஸ்வவிஷய ப்ரணயித்வகதந ப்ரகரணத்திலே பிராட்டிமார்க்குதவினத்தையும் "போதால் வணங்கேனேலும்" என்றும் சொல்லுவானென்னென்ன (நப்பின்னையித்யாதி வாக்யத்வயம்) என்னுதல்.

"கோவைவாயாள்" என்று விசேஷித்ததுக்கு பாவத்ரயம். முந்தினது (ஏன்னைப்பேணுதேயித்யாதி) இரண்டாவது (ருஷபங்களையித்யாதி) மூன்றாவது (நம்பிமூத்தவித்யாதி) அன்றிக்கே, "கோவைவாய்" என்றதுக்கிரண்டு தாத்பர்யமேயாய், "யாநஸம்க்யாபுராத்ரஷ்டும்" (யாநஸம்க்யாபுராத்ரஷ்டும்) என்னும்படி யிருக்கிறவளுடைய வவயவசோபை காணப்போமோவென்ன (ருஷபங்களையித்யாதி) என்னுதல். மூன்று தாத்பர்யமென்ற பக்ஷத்திலே - ஸ்வாபாவிகமான சிவப்பைச்சொல்லுதல், அலங்காரத்தால்வந்த சிவப்பைச்சொல்லுதல், ஸ்மிதத்தால்வந்த சிவப்பைச் சொல்லுதலென் றர்த்தத்ரயம். அவயவசோபை - ஸ்வாபாவிகமானசோபை. இவளை யலங்கரித்தென்கையாலே - அலங்காரத்துக்காக வாஹிதமான சிவப்பென்றபடி. அவளுக்காக்கினான் - அவளுக்கு சேஷமாக்கினா

ன். பிடர் - முசுப்பு. ஏற்றையிறுத்தாயென்னுதே, "எருத்தம்" என்று விசேஷிக்கிறதென்னென்ன (அவற்றுக்கித்யாதி) வெறுங்கையோடே முறித்தபடியென்னென்ன (வீராயித்யாதி) அதுக்காயுதமுண்டாகிலிறே எருத்தமிறுத்ததுக்குடலாவதென்ன (அவைதானித்யாதி) சாடு. (தலையான) தலையிலேயுள்ளதானவென்றும், ஶ்ரேஷ்ட்டமான வாயுதமென்றும். அபிமாநஹேதுவாகையாலே ஆயுதமென்றபடி. இரண்டாமவதாரிகைக் கநுகுணமாக, எருதேழடர்க்கிறவிடத்திலே உபசாரம் பண்ணுகையாவதேதென்ன; ஸங்கர்ஶநமாக வருளிச்செய்கிறார் (மாயாம்ருகேத்யாதி) "𑌮𑍃𑌗𑍋 𑌹𑍍𑌯𑍇𑌵𑌂𑌵𑌿𑌧𑍋 𑌰𑌤𑍍𑌨𑌵𑌿𑌚𑌿𑌤𑍍𑌰𑍋 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 𑌰𑌾𑌘𑌵। 𑌜𑌗𑌤𑍍𑌯𑌾𑌂 𑌜𑌗𑌤𑍀𑌨𑌾𑌥 𑌮𑌾𑌯𑍈𑌷𑌾 𑌹𑌿 𑌨 𑌸𑌂𑌶𑌯𑌃। 𑌤𑌮𑍇𑌵𑍈𑌨𑌮𑌹𑌂 𑌮𑌨𑍍𑌯𑍇 𑌮𑌾𑌰𑍀𑌚𑌂 𑌰𑌾𑌕𑍍𑌷𑌸𑌂 𑌮𑍃𑌗𑌮𑍍" (ம்ருகோஹ்யேவம்விதோ ரத்நவிசித்ரோ நாஸ்திராகவ। ஜகத்யாம்ஜகதீநாதமாயை ஷாஹிநஸம்ஶய: । தமேவைநமஹம்மந்யே மாரீசம் ராக்ஷஸம்ம்ருகம்) என்கிற ஶ்லோக மநுஸந்தேயம். அடுப்பது - ப்ராப்தம்.

ஊருமென்றது - "இலங்கை" என்றத்தைப்பற்ற. ஈடுபாடு (சர்வரக்ஷகனவித்யாதி) சேதநன் தனக்கு நன்மை பார்க்கிறுப்போலே, பண்ணும் ரக்ஷையிப்படியிருக்கும் கிடிகோளென்கிறார் (இதிறேயித்யாதி) "இலங்கை" என்றும், "கோ" என்றும் சொல்லுகிறதுக்கு ப்ரமாணபூர்வகமாகபாவம் (லங்காமித்யாதி) "𑌯𑌥𑌾 𑌰𑌾𑌘𑌵𑌨𑌿𑌰𑍍𑌮𑍁𑌕𑍍𑌤𑌃 𑌶𑌰𑌃 𑌶𑍍𑌵𑌸𑌨𑌵𑌿𑌕𑍍𑌰𑌮𑌃। 𑌗𑌚𑍍𑌛𑍇𑌤𑍍𑌤𑌦𑍍𑌵𑌤𑍍 𑌗𑌮𑌿𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 𑌲𑌙𑍍𑌕𑌾𑌂 𑌰𑌾𑌵𑌣𑌪𑌾𑌲𑌿𑌤𑌾𑌮𑍍" (யதாராகவநிர்முக்தஶ் ஶரஶ்ஶ்வஸநவிக்ரம: । கச்சேத்தத்வத் கமிஷ்யாமிலங்காம் ராவணபாலிதாம்) இதி சுந்தரகாண்டே ப்ரதமே மாருதி:. எடுத்த ப்ரமாணத்துக்கர்த்தம் (மண்பாடித்யாதி) சப்தார்த்தம் (மதிளையித்யாதி) "சிலைகுனித்தாய்" என்றதுக்குபாவம் (ராக்ஷஸரித்யாதி) செவ்வைப்பூசல் - ருஜுயுத்தம். இவ்வவஸ்த்தையிலே யிவர் ஶிஶிரோபசாரம்பண்ணும்படியை ஸங்தர்ஶநமாக வருளிச்செய்கிறார் (நீரித்யாதி)

சப்தார்த்தம் (ஆகரத்திலேயித்யாதி) மருப்பு - கொம்பு. ஆகரம் - உத்பத்திஸ்த்தாநம். ஸ்வரூபசிக்ஷை (அவ்வளவிலேயித்யாதி) "𑌸𑍍𑌥𑌲𑌸𑍍𑌥𑌸𑍍𑌯 𑌚 𑌰𑌾𑌮𑌸𑍍𑌯 𑌰𑌥𑌸𑍍𑌥𑌸𑍍𑌯 𑌚 𑌰𑌕𑍍𑌷𑌸𑌃। 𑌨 𑌸𑌮𑌂 𑌯𑍁𑌦𑍍𑌧𑌮𑌿𑌤𑍍𑌯𑌾𑌹𑍁𑌰𑍍𑌦𑍇𑌵𑌗𑌨𑍍𑌧𑌰𑍍𑌵𑌦𑌾𑌨𑌵𑌾𑌃" (ஸ்த்தலஸ்த்தஸ்யசராமஸ்ய ரதஸ்த்தஸ்யசரக்ஷஸ:। நஸமம்யுத்தமித்யாஹுர்த்தேவகந்தர்வதாநவா:) இதி யுத்தகாண்டே. பூர்வமேவலிகிதம்.

"வீயா" என்று - சமர்ப்பிக்கையாய், (பணிமாறி) என்றபடி. த்விதியார்த்தத்துக்கு, வீயா - ஒழியா, விடாதவென்றாய், பூவோடேகூடின நீரைத்தூவியென்றபடி. த்விதீயார்த்தவிவரணம் (பூவோடேயித்யாதி) போது - காலங்களிலே. ஆல் - அசை. "அவ்வவகாலம்" என்றத்தை யின்னதென்று விவரியாநின்றுகொண்டு, இக்காலங்களில் பூவையும் நீரையும் தூவுகிறதுக்கு ப்ரயோஜநம் (எருதேழடர்க்கையித்யாதி)

"பூவைவீயாமேனிக்கு" என்றதுக்கு முந்தினவர்த்தம், வீயாவென்று - ஒழியாவென்றாய், பூவாலல்லது செல்லாதமேனியென்றபடி. த்விதியார்த்தத்துக்கு, பூவையென்று - காயாவாய், வீயென்று - பூவாய், ஆமேனியென்று-அத்தோடொத்தமேனியென்றாய், பூவைப்பூவோடொத்த மேனியென்றபடி. பூவைப்பூ - காயாம்பூ. இரண்டாமர்த்தத்தால்பலிதம் (புஷ்பஹாஸேத்யாதி) சாந்துபூசுவதுடம்பிலேயாயிருக்க, "மேனிக்கு" என்று விசேஷிக்கிறதென்னென்ன (ஆவயோரி

த்யாதி) “ [illegible] ” ஸுகந்தமேதத்ராஜார்ஹம் ருசிரம்ருசிராநநே । ஆவயோர்க்காத்ரஸத்ருஶம் தீயதாமநுலேபநம்) இதி பஞ்சமேம்ஶே குப்ஜாம்ப்ரதிக்ருஷ்ண:. நம்பிமூத்தபிரான் - பலராமன். வழக்கன் - செலவுக்கு யோக்யம். “ சுகந்தம் ” என்கையாலே - ஸ்வாபாவிககந்தமன்று, புஷ்பாதிகளால்வந்த வௌபாதிககந்தமென்றபடி. ஸ்வாபாவிககந்தமாகில் - சுகந்தியென்றிருக்கவேணும். இதுக்கு வ்யாகரணஸூத்ரம் - “ [illegible] ” ( கந்தஸ்யேதுத்பூதிஸுஸுரபிப்ய:) “[illegible]” (ஏப்யோகந்தஶப்தஸ்ய இகாரோந்தாதேஶஸ்ஸ்யாத்) “ [illegible] ” (கந்தஸ்யேத்வேததேகாந்தக்ரஹணம்கர்த்தவ்யம்) இதிவார்த்திகம். கேசித்து “ [illegible] ” [illegible] ‘[illegible]’ [illegible] ‘ [illegible] ’ [illegible] ” ( ஏகாந்தபதஸ்யஸ்வாபாவிகபரத்வம், ஏவஞ்சஸ்வாபாவிககந்தவாசகாதேவாயமிகாராதேஶ:, ஸுகந்தி புஷ்பமிதி. ஆகந்துகவாசகாத்துநாயமாதேஶ:; அதஏவபட்டி: ‘ ஆ்யாயிவாங்கந்தவஹஸ்ஸுகந்த:’ இதி, தத்வ்யாக்யாநேச ‘ வாயோஸ்ஸ்வாபாவிககந்தாபாவாத் நேகாராதேஶ:கந்தஸ்யேத்வஇதிவார்த்திகாத் ’ இதிஸ்த்திதம்) இத்யாஹு:. இப்படி தரமிட்டுச்சொல்லுகிறதுக்கு வ்யஞ்சகம் - “ [illegible] ” (ஏதத்) என்கிற நிர்த்தேஶமும், “ [illegible] ” ( ராஜார்ஹம் ) என்றுவைத்து, “ [illegible] ” ( ஆவயோர்க்காத்ரஸத்ருஶம் ) என்கிறநிர்த்தேஶமும், “[illegible]” (ருசிராநநே) என்கிறநிர்த்தேஶமும். “[illegible]” ( ஸுகந்தம்-ஏதத், ராஜார்ஹம்-ஏதத், ருசிரம்-ஏதத்) என்று மூன்றிலு மநுஷங்கிக்கிறது. கூனியன்றோ ஸ்மிதம்பண்ணினாள், அது விக்ருதமாயன்றோ விருப்பதென்ன (நல்லசாந்தித்யாதி) “ [illegible] ” ( ருசிராநநே ) என்றதுக்குபாவமாதல். “[illegible]” (ராஜார்ஹம்) என்கையாலே - ஸர்வோத்தநுகையாலே யேதானும் விநியோகங்கொள்ளுமென்றபடி. “நெஞ்சம்” என்று-ஹ்ருதயவ்யாபாரம் சொல்லாமையாலே - சத்தாமாத்ரமேயெல்லாமென்றபடி ................................*

---

# இரண்டாம்பாட்டு.

பூசுஞ்சாந்தென்னெஞ்சமேபுனையுங்கண்ணியெனதுடைய
வாசகஞ்செய்மாலையேவான்பட்டாடையுமஃதே
தேசமானவணிகலனுமென்கைகூப்புச்செய்கையே
யீசன்ஞாலமுண்டுமிழ்ந்தவெந்தையேகமூர்த்திக்கே.

## ஆ று யி ர ப் ப டி.

(பூசும்சாந்து) நிகிலபுவநநிர்ஹணேக்ஷணவகத ஸர்வேஸ்வர ஸ்வபாவனாய், சதைகரூபனாய்க்கொண்டு ஸ்ரீவைகுண்ட நிலயனாயிருந்த வெம்பெருமானுக்கு, ஸ்வவிஷயமாக மத்க்ருதமான ஸ்ம்ருதிகீர்த்தநாஞ்சலி ப்ரப்ருத்யேகைக வ்ருத்தியே திவ்யகந்தாநுலேபந திவ்யமால்யாம்பர நிரதிஸயதீப்தியுக்த திவ்யபூஷணாதி ஸர்வபோகோபகரணங்களுமாயின; ஒருவனுடைய வ்யாமோஹமிருக்கும்படியேயென்கிறார்............*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், சர்வநியந்தாவாய் சர்வரக்ஷகனான ஸ்வாமிக்கு என் கரணத்ரயமும் போக்யமாகாநின்றதென்கிறார்.

ஈசன் - நிருபாதிகநியந்தாவாய். ஞாலமுண்டுமிழ்ந்த - ப்ரளயாபத்திலே உண்பதுமிழ்வதாகையாலே சமஸ்த பதார்த்தத்துக்கும் சர்வ ப்ரகாரரக்ஷகனாய். எந்தை - இவ்வபதாநத்தாலே யென்னை யடிமைகொண்ட அஸ்மத்ஸ்வாமியாய். ஏகம் - நிரதிசயபோக்யமாகையாலே அத்விதீயமான. மூர்த்திக்கு - விக்ரஹத்தையுடையவனானவனுக்கு. பூசும் - கூனியிட்ட சாந்தபோலே தகுதியான. சாந்து - சாத்துப்படி. என்னெஞ்சம் - என்னெஞ்சாகாநின்றது. புனையும் - ஸ்ரீமாலாகாரர் மாலைபோலே யுகந்துசாத்தும். கண்ணி - திருமாலை. எனதுடைய - என்னுடைய. வாசகம் - வாக்வ்ருத்தியான சப்தத்தாலே. செய் - தொடுக்கப்பட்ட. மாலை - மாலையாயிராநின்றது. "பூம்பட்டாம" என்கிறபடியே திருவநந்தாழ்வான் சமர்ப்பித்ததென்னலாம்படி, வான் - சீரியதான. பட்டுடையும்-பரிவட்டமும். அஃதே - அந்த வாக்வ்ருத்தியே. தேசமான - தேசஸ்கரமாம்படி. அணி - அணியப்பட்ட. கலனும் - ஆபரணமும். என் - என்னுடைய. கைகூப்புச்செய்கையே - அஞ்சலிபந்தமே.

வாசகம் பட்டாடையாவது - ஒப்பனைக்கு பௌஷ்கல்யகரமாகை. அஞ்சலி ஆபரணமாகையாவது - இவர்தலையிலேவைத்த அஞ்சலி அவன்றிருமுடியில் அபிஷேகாத்யாபரணங்களோபாதி யவனுக்கௌஜ்ஜ்வல்யாவஹமாகை...............*

## ஈடு - இரண்டாம்பாட்டு.

என்னுடைய கரணகார்யமான ஸ்ம்ருத்யாதிகளே பரிபூர்ணனானவனுக்கு போகோபகரணங்களெல்லா மாயிற்றென்கிறார்.

(பூசும்சாந்தென்னெஞ்சமே) இத்திருமேனியினுடைய வைலக்ஷண்யத்தையும், அவனுக்குத் தம்பக்கலுண்டான விருப்பத்தையு மநுசந்தித்துப் பின்னுடித்திரியவுஞ் சொல்லுகிறார்.

(புனையுங்கண்ணி) வழக்கனான மாலையன்றிக்கே சாத்தப்படும்மாலை. (எனதுடைய வாசகஞ்செய்மாலையே) இவர் "அவனுக்கு" என்று சொல்லவேண்டா, இவருடைமையாகி லவனுக்கேயாயிருக்கும். (வாசகஞ்செய்மாலையே) இவர்நெஞ்சிற்காட்டிலும் வாக்கு பரிமளம் விஞ்சியிருக்கும்போலே காணும். பூக்கட்டியிறே சாந்து மணங்கொடுப்பது.

(வான்பட்டாடையுமஃதே) அந்த வுக்திதானே யவனுக்கு பும்ஸ்த்வாவஹமான பரிவட்டமும். இவருடையபா, நல்லநூலாகையாலே வான்பட்டாடையாயிற்றுக்காணும், "நல்லநூலாகவேணும்" என்றடியிலேநோற்று நூற்றவரிறே.

(தேசமானவணிகலனும்) தனக்கு தேஜஸ்கரமான வாபரணமும். (என்கைகூப்புச்செய்கையே) சேரபாண்டியன் தம்பிரானேபாதி, அவனுக்கு தேசஸ்கரமாகாநின்ற இவருடைய அஞ்சலி. இவற்றாலே நிறம்பெற்றானாயிருக்கிறவன்றான் ஒருதுறைவாளனாயிருக்கப்பெறாதோ (ஈசன்) சர்வேஶ்வரன். "ரக்ஷகன்" என்னும் பேரோயாய் உடைமைநோவுபட விட்டிருக்குமோவென்னில (ஞாலமுண்டுமிழ்ந்த) ஜகத்துக்கு சர்வப்ரகாரரக்ஷகன். (எந்தை) அந்த ரக்ஷணத்தாலே யென்னை யெழுதிக்கொண்டவன். (ஏகமூர்த்திக்கு) அத்விதீயமான திருமேனியையுடையவனுக்கு. (ஏகமூர்த்திக்கு - பூசும் சாந்தென்னெஞ்சமே) "ஸர்வகந்த:" (ஸர்வகந்த:) என்கிற திருமேனிக்கிதுசேருமே..........................*

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு (பூசும்சாந்தித்யாதி) "வாசகம்செய்மாலை, என்கைகூப்புச்செய்கையே" என்று - மேலே கரணகார்யம் சொன்னதுக்குச்சேர, "நெஞ்சம்" என்றத்தை - ஸ்ம்ருதி பரமாக்கியருளிச்செய்கிறார் (என்னுடைய கரணேத்யாதி)

அன்றிக்கே, உக்தாநுவாதபரமாக வர்த்தாந்தரம் (இத்திருமேனியித்யாதி) (பின்னடி) அதாவது - முதற்பாட்டிலுமிப்பாட்டிலும் "நெஞ்சம்" என்று - நெஞ்சு தன்னையே சொல்லுகிறதாய், அது பின்னடுகிறதென் றர்த்தாந்தரமாகவுமாமென்றபடி.

"கண்ணி" என்ன வமைந்திருக்க, "புனையும்" என்று விசேஷித்ததுக்கு பாவம் (வழக்கனனவித்யாதி) வழக்கனன - செலவுக்கு யோக்யமான. வாக்காலே செய்யப்பட்ட வென்னுடைய மாலையென்றபடி. மமகாரம்பண்ணலாமோ வென்ன (இவரவனுக்கித்யாதி) "யானே நீயென்னுடைமையும்நீயே" என்றிருக்குமவராகையாலே தம்மையிட்டுச்சொன்னாலும், "யஸ்யைதே தஸ்ய தத்தநம்" (யஸ்யைதேதஸ்யதத்தநம்) என்கிறபடியே யிவருடைமையாகில் அவனுக்கேயாயிருக்குமென்றபடி. வாசகங்கள் புஷ்பங்களாய், அவற்றால் செய்யப்பட்ட மாலையென்றதுக்குபாவம் (இவர்நெஞ்சிற் காட்டிலுமித்யாதி) விஞ்சியிருக்கைக்கடியேதென்ன (பூக்கட்டியித்யாதி) இத்தால் வாக்பரிமளமே மநஸ்ஸுக்கும் பரிமளம் கொடுப்பதென்றதாயிற்று.

பும்ஸ்த்வாவஹமானவென்றது - "வான்" என்றத்தைப்பற்ற. வான் - பெருமை. அதாவது புருஷோத்தமத்வ லக்ஷணமென்றபடி. பும்ஸ்த்வம் - புருஷோத்தமத்வம். வாசகம்பட்டாடையாம்படி யெங்ஙனேயென்ன ; சாடுவாலே யருளிச்செய்கிறார் (இவருடையவித்யாதி) பா-சந்தஸ்ஸும், தந்துசமுதாய விசேஷமு

ம். நூல் - சாஸ்த்ரமும், தந்துவும். நல்லநூலாகையாலே யென்றத்தை யுபபாதிக்கிறார் (நல்லநூலாகவித்யாதி) நோற்று நூற்றவரிறேயென்றது - "வண்டமிழ் நூற்கநோற்றேன்" என்றத்தைப்பற்ற. நோற்கை - சாதநாநுஷ்ட்டாநம்பண்ணுகை. நூற்கை - பண்ணுகையும், நூற்கையும்.

தேஜஸ்கரமான வாபரணமேதென்ன (சேரபாண்டியனித்யாதி) சேரபாண்டியன் தம்பிரானென்று - பெருமாளுடைய வொரு திருப்பதக்கத்துக்குப்பேர்.

மேலுக்கவதாரிகை (இவற்றாலேயித்யாதி) "ஈசன்" என்றத்தாலே-ரக்ஷகத்வமர்த்தாத்ஸித்தம். சாந்தபூசுவது திருமேனியிலே யாகவேண்டுகையாலே, * மூர்த்திசப்தத்துக்கு - விக்ரஹபரமாக வர்த்தமருளிச்செய்தது. "நெஞ்சமே" என்ற ஸ்வரத்துக்குபாவம் (சர்வகந்த இத்யாதி) சேருமே- சேருமோ. சேராதென்றபடி. பாட்டிலே அடிதோறும் "ஏ" என்கிறவிது - ஸ்வரத்திலே.

கைகூப்புச்செய்கை - அஞ்சலி. ஈசனித்யாதி, ஏகமூர்த்திக்கு - என்னெஞ்சமே - பூசும்சாந்து, எனதுடைய வாசகம்செய்மாலையே - புனையுங்கண்ணி, அஃதே - வான்பட்டாடையும், என்கைகூப்புச்செய்கையே - தேசமானவணிகலனுமித்யந்வயः.........................................................................*

# மூன்றாம்பாட்டு.

ஏகமூர்த்திமிருமூர்த்திமூன்றுமூர்த்திபலமூர்த்தி
யாகியைந்துபூதமாயிரண்டுசுடராயருவாகி
நாகமேறிநடுக்கடலுட்டுயின்றநாராயணனேயுன்
னாகமுற்றுமகத்தடக்கியாவியல்லன்மாய்த்ததே.

## ஆறாயிரப்படி.

(ஏகமூர்த்தி) அப்ராக்ருதநித்யஸித்த திவ்யரூபவிசிஷ்டனாய், ஸ்ரீவைகுண்டநிலயனாய்க்கொண்டு ப்ரக்ருதிமஹத் த்ரிவிதாஹங்காரமநःப்ரப்ருதிகரணபஞ்சபூத சந்த்ரஸூர்யாதிபதார்த்தங்களுக்கும் தததந்தர்வர்த்தி சேதநஜாதத்துக்கும் ஸ்ரஷ்டாவாய், அவற்றினுடைய ஸ்த்தித்யர்த்தமாக வந்தர்யாமிதயாவஸ்த்திதனாய், ஸ்ருஷ்டமான ஜகத்தினுடைய ரக்ஷணார்த்தமாகத் திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளி நாகபர்யங்கசாயியாயிருந்த நாராயணனே, உன்திருமேனிக் கபேக்ஷிதமான சர்வபோக்யங்களும் நானுன்றிறத்துப்பண்ணும் ஸ்ம்ருதிகீர்த்தநாதி வ்ருத்திகளேயாகக் கொண்டிருக்கிற வுன்னுடைய மஹாகுணத்தையநுபவித் தென்னுடைய க்லேஶமும் தீர்ந்தேனென்கிறார் .......................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், சர்வாத்மபாவாதியால்வந்த சம்பந்தத்தையுடைய உன்வடிவழகை யிப்படியநுபவித்து என்னுத்மாவானது கீழ்ப்ராக்ருததுःகம் தீரப்பெற்றதே யென்கிறார்.

ஏகமூர்த்தி-ஸூக்ஷ்மசிதசித்விசிஷ்டமாய் "ஏகமேவ" என்கிறபடியேகாரணரூபத்தையுடையனாய். இருமூர்த்தி-அந்தஅவ்யக்தகார்யமான மஹதஹங்காரங்களைவடிவாகவுடையனாய். மூன்றுமூர்த்தி - "ஸாத்த்விகோராஜஸஶ்சைவ தாமஸஶ்ச த்ரிதா மஹாந்" (ஸாத்த்விகோராஜஸஸ்சைவதாமஸஸ்சத்ரிதாமஹாந்) என்றும், "வைகாரிகஸ்தைஜஸஶ்ச பூதாதிஶ்சைவ தாமஸ:" (வைகாரிகஸ்சைஜஸஸ்சபூதாதிஸ்சைவதாமஸ:) என்றும் அந்தமஹதஹங்காரங்களினுடைய த்ரைவித்யஹேதுவான சத்த்வரஜஸ்தமோரூபகுணத்ரயவைஷம்யங்களைப்ரகாரமாகவுடையனாய். பலமூர்த்தியாகி - வைகாரிககார்யமான ஏகாதசேந்த்ரியங்களைப்ரகாரமாகவுடையனாய். ஐந்துபூதமாய் - பூதாதியான தாமசாஹங்காரகார்யங்களான பஞ்சபூதங்களைப்ரகாரமாகவுடையனாய். இரண்டுசுடராய் - அண்டாந்தர்வர்த்தியான வ்யஷ்டி ஸ்ருஷ்டிக்குதாஹரணமான "ஸூர்யாசந்த்ரமஸௌ" (ஸூர்யாசந்த்ரமஸௌ) என்றுசொல்லப்பட்ட சுடரிரண்டையும் வடிவாகவுடையனாய். அருவாகி-அவற்றுக்கந்தராத்மதயா அநுப்ரவேசித்து ஸூக்ஷ்மபூதனாய். ஸ்ருஷ்டமான ஜந்துக்களினுடைய ரக்ஷணார்த்தமாக, நாகம் - திருவநந்தாழ்வான் மேலே. ஏறி-ஏறி. நடுக்கடலுள்-திருப்பாற்கடல்நடுவே. துயின்ற - கண்வளர்ந்தருளி. நாராயணனே - இந்தஅந்தராத்மத்வத்தாலும் சமுத்ரசாயித்வத்தாலும் சித்தமான நாராயணசப்தத்துக்குவாச்யனானவனே. கீழ்ச்சொன்னப்ரக்ரியையாலே, உன்-உன்னுடைய. ஆகம்-வடிவையும். முற்றும்-என்சகலகரணங்களையு முனக்கு சர்வாலங்காரமுமாகக்கொண்டவழகையுமெல்லாம். அகத்து - என்னெஞ்சுக்குள்ளே. அடக்கி-கவளீகரித்தநுபவித்து. ஆவி - என்னாத்மாவானது. அல்லல்-கீழ்த்திருவாய்மொழியிற்பட்ட து:கத்தை. மாய்த்ததே-போக்கப்பெற்றதே.

"பலமூர்த்திஎன்னுமளவும் - பரவ்யூஹவிபவவிக்ரஹங்களைச்சொல்லி, ஐந்துபூதமிரண்டுசுடர் என்கிறவிடம்-லீலாவிபூதிசம்பந்தத்தைச்சொல்லுகிறது" என்பாருமுளர்; அதில், சர்வப்ரதாநமாய் ப்ராப்யமாகையாலே யத்விதீயமான வாசுதேவமூர்த்தியாய், அதுதான் சாந்தோதிதநித்யோதித பேதத்தையுடைத்தாய்க்கொண்டு இருமூர்த்தியாய், நித்யோதிதவேஷந்தான் சங்கர்ஷணப்ரத்யும்நாநிருத்தபேதத்தாலே மூன்றுமூர்த்தியாய், அவைதாம் கேசவாதித்வாதசமூர்த்தியாயும் தசாவதாரரூபமாயும் பலமூர்த்தியாயிருக்குமென்றபடி..........................*

## ஈடு - மூன்றும்பாட்டு.

இத்தலையையுனக்காக்கி அத்தாலே க்ருதக்ருத்யனாயிருக்கிறாயே யென்கிறார்.

(ஏகமூர்த்தி) "ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீத்" (ஸ்தேவஸோம்யேதமக்ரஆஸீத்) என்கிறபடியே - ஸ்ருஷ்டே:பூர்வகாலத்திலே இதம்சப்தவாச்யமாய்க்கிடந்த ப்ரபஞ்சமடைய அழிந்து சதவஸ்த்தமாய் சத்யவஸ்த்த ப்ரஜையைப்போலே பேரைவயுடையத் தன்பக்கலிலேகிடக்கத் தானொருவனுமேயாய் நிற்கும்நிலையைச்சொல்லுகிறது. (ஸ்ருஷ்டிக்குமுன்புத்தை ஸ்வாஸாதாரணவிக்ரஹத்தைச் சொல்லுகிறதாகவுமாம்.) ஆக,

ஸ்ருஷ்ட்யுந்முகனாயிருக்கு மிருப்பைச்சொல்லுகிறது. (இருமூர்த்தி) ப்ரக்ருதிமஹான்க ளிரண்டையும் கடாக்ஷித்துக்கொண்டு அவற்றைத்திருமேனியாகக்கொண்டிருக்கு மிருப்பைச்சொல்லுகிறது. கார்யகாரணங்களிரண்டையும் தனக்குத்திருமேனியாகவுடையனாயிருக்கு மிருப்பைச்சொல்லுகிறது. இரண்டுக்குமுண்டான அண்மையைப்பற்றச்சொல்லுகிறது; அவ்யக்தத்தினுடைய வ்யக்ததசையிறே மஹானாகிறது. (மூன்றுமூர்த்தி) த்ரிவிதாஹங்கார சரீரனாயிருக்கு மிருப்பைச்சொல்லுகிறது. சாத்விகமாயும், ராஜஸமாயும், தாமஸமாயும், மூன்றுவகைப்பட்டிறே அஹங்காரந்தானிருப்பது. (பலமூர்த்தியாகி யைந்துபூதமாய்) கீழ்ச்சொன்ன வடைவன்றிக்குச்சொல்லுகிறது. சாத்விகாஹங்காரகார்யம் ஏகாதசேந்த்ரியங்கள், தாமசாஹங்காரகார்யம் ப்ருதிவ்யாதிபூதங்கள், இரண்டுக்குமுபகாரகமாய்நிற்கும் ராஜஸாஹங்காரம்; ஆக, ஏகாதசேந்த்ரியங்களையும், சகுணமான பூதபஞ்சகங்களையும்சொல்லி, அவற்றைத்திருமேனியாகவுடையனாயிருக்கும்படி சொல்லுகிறது. (இரண்டுசுடராய்) "ஸூர்யாசந்த்ரமஸௌ தாதா யதாபூர்வமகல்பயத்" (ஸூர்யாசந்த்ரமஸௌதாதாயதாபூர்வமகல்பயத்) என்கிறபடியே, சந்த்ராதித்யர்கள்-கார்யவர்க்கத்துக்குபலக்ஷணம். (அருவாகி) இவற்றையுண்டாக்கி, "தத்ஸ்ருஷ்ட்வா ததேவாநுப்ராவிசத் ததநுப்ரவிஶ்ய ஸச்ச த்யச்சாபவத்" (தத்ஸ்ருஷ்ட்வாததேவாநுப்ராவிஶத் ததநுப்ரவிஶ்யஸச்சத்யச்சாபவத்) என்கிறபடியே, இவற்றினுடைய வஸ்துத்வநாமபாக்த்வங்களுக்காகத்தானநுப்ரவேசித்து நிற்குநிலையைச்சொல்லுகிறது. அசித்தைச்சொல்லிற்றாகில்-கீழ், அருவென்று-ஆத்மாவைச்சொல்லிற்றாலோவென்னில்; "அநேந ஜீவேநாத்மநாநுப்ரவிஶ்ய" (அநேநஜீவேநாத்மநாநுப்ரவிஶ்ய) என்று - ஜீவாந்தர்யாமிக நுப்ரவேஶமாகையாலே, அதுவும்சொல்லிற்றாயிற்று. (நாகமேறி) ஸ்ருஷ்டரான ப்ரஹ்மாதிகளுக்கு சமாஶ்ரயணீயனாகைக்காகத் திருப்பாற்கடலின்நடுவே திருவநந்தாழ்வான்மேலே சாய்ந்தருளினவன். பயிரைச்செய்து செய்த்தலையிலே குடிகிடக்குமாபோலே, ஸ்ருஷ்டங்களான பதார்த்தங்களினுடைய ரக்ஷணார்த்தமாகக் கண்வளர்ந்தருளினானென்னவுமாம். (நாராயணனே) இப்படி சர்வகாலமுமொருபடிப்பட வநுக்ரஹசீலனாகைக்கடியான ப்ராப்திசொல்லுகிறது. (உன்னாகமுற்றுமகத்தடக்கி) ஆகம்-உடம்பு. உன்திருமேனிக்குவேண்டும்சாந்து, பூமாலை, பரிவட்டம், ஆபரணங்கள், இவையெல்லாம், அகத்தடக்கி - என்னுள்ளே யுண்டாம்படிபண்ணி. இகிறே ஸ்ருஷ்டிக்குப்ரயோஜநம். இப்படிசெய்தத்தால் நிர்த்துஃகரானாரோவென்னில், அவனாயிற்று (ஆவியல்லல்மாய்த்ததே) உன்திருவுள்ளத்திலுண்டானவல்லல் ஒருபடி

நசிக்கப்பெற்றதே. இத்தலையையொருபடி களைமரஞ்சேர்த்து நீ க்ருத க்ருத்யனானாயே!. அன்றிக்கே, என்னாவியானது நிர்த்துஃகமாயிற்றென்றுமாம். அதவா, ஏகமூர்த்தியென்று - பரத்வத்தைச்சொல்லி, இருமூர்த்தியென்று - வ்யூஹத்தைச்சொல்லி வாஸுதேவசங்கர்ஷணர்களை நினைத்து, மூன்றுமூர்த்தியென்று - ப்ரத்யும்நனைச்சொல்லிற்றாய், பலமூர்த்தியென்று-விபவங்களைச்சொல்லிற்றாய், ஐந்துபூதமாயிரண்டுசுடராயென்று-இன்னார்ஸ்ருஷ்டிக்குக்கடவர், இன்னார் பாலனத்துக்குக்கடவர் என்கிறபடியாலே சொல்லுகிறதென்று நிர்வஹிப்பாருமுண்டு..................*

## ஜீயர் அரும்பதம்.

மூன்றாம்பாட்டு (ஏகமூர்த்தியித்யாதி) "ஆவியல்லல்மாய்த்ததே" என்றதைக்கடாக்ஷித்தவதாரிகை (இத்தலையையித்யாதி)

"ஏகமூர்த்தி"என்று-அவிபக்ததமஸ்ஸோடேகூடி யிருக்குமிருப்பைச்சொல்லுகிறது. "ஏகமூர்த்தி" என்றதுக்குப்ரமாணமாக - "𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌦𑌿𑌷𑍁 𑌪𑍍𑌰𑌲𑍀𑌨𑍇𑌷𑍁 𑌨𑌷𑍍𑌟𑍇 𑌲𑍋𑌕𑍇 𑌚𑌰𑌾𑌚𑌰𑍇 । 𑌆𑌭𑍂𑌤𑌸𑌂𑌪𑍍𑌲𑌵𑍇 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍇 𑌪𑍍𑌰𑌲𑍀𑌨𑍇 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑍌 𑌮𑌹𑌾𑌨𑍍 । 𑌏𑌕𑌸𑍍𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑌿 𑌵𑌿𑌶𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌾 𑌸 𑌤𑍁 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌃 𑌪𑌰𑌃" (ப்ரஹ்மாதிஷுப்ரலீநேஷுநஷ்டேலோகேசராசரே । ஆபூதஸம்ப்லவேப்ராப்தேப்ரலீநேப்ரக்ருதௌமஹாந் । ஏகஸ்திஷ்டதிவிஸ்வாத்மாஸதுநாராயணஃபரஃ) இத்யாத்யநுசந்தேயம். (சதேவேத்யாதி) அஸ்யார்த்தஃ, அக்ரே - ஸ்ருஷ்டேபூர்வகாலே, இதம் - ஜகத், ஸதேவாஸீத் - சச்சப்தவாச்யமேவாஸீத்இதி. சக்த்யவஸ்த்தப்ரபை-பொடிமூடினதணல். சக்த்யவஸ்த்தப்ரபையென்றும், விகாஸாவஸ்த்தப்ரபையென்றும் - ப்ரபைத்விவிதம். அதில், சக்த்யவஸ்த்தப்ரபையாவது - நீறுபூத்த அங்காராவஸ்த்தையைச் சொல்லுகிறது. விகாஸாவஸ்த்த ப்ரபையாவது-ஜ்வாலாவஸ்த்தப்ரபையைச்சொல்லுகிறது. (நானொருவனுமேயாய்நிற்கும்நிலையை) "தமஆஸீத்" என்கிற வவிபக்ததமஸ்ஸரீரகனாய்நிற்கும்நிலையென்றபடி. (ஸ்ருஷ்ட்யுந்முகனாயித) "இருமூர்த்தி"என்றுதொடங்கி-ஸ்ருஷ்டியைச் சொல்லுகிறாராகையாலே, கார்யோந்முகாவஸ்த்தையைச்சொல்லுகிறதென்றபடி.

(ப்ரக்ருதிமஹான்களிரண்டையும் கடாக்ஷித்துக்கொண்டென்றது) விபக்ததமஸ்ஸையும் அக்ஷரத்தையும் அவ்யக்தத்தையும் அவிபக்ததமஸ்ஸான மூலப்ரக்ருதிக்குள்ளே அந்தர்ப்பவிப்பித்து, ஆக, ப்ரக்ருதியும் தத்கார்யமான மஹானுமாகிறவிரண்டையும் கடாக்ஷித்துக்கொண்டென்றபடி. கடாக்ஷித்துக்கொண்டு - முன்னோட்டுக்கொண்டு. விவரணம் (கார்யகாரணங்களித்யாதி) அஹங்காராதிகளும் ப்ரக்ருதிகார்யமாயிருக்க, ப்ரக்ருதிக்கநந்தரம் மஹானைச்சொல்லுவானென்னென்ன (இரண்டுக்குமித்யாதி) அண்மையெப்படியென்ன (அவ்யக்தத்தினுடையவித்யாதி) அவ்யக்தமாவது - ப்ரக்ருதியினுடைய வவஸ்த்தாபேதம். ப்ரக்ருதிதான் - அவிபக்ததமஸ்ஸென்றும், விபக்ததமஸ்ஸென்றும், அக்ஷரமென்றும், அவ்யக்தமென்றும் நாலுவிதமாயிருக்கும்; அந்த அவ்யக்தத்தினுடைய வ்யக்ததசை - மஹான் என்றபடி. "[illegible]

உஷூ-ஞ நவீஜஸோ நாகாரஓவ்)க்தம், சஜ-ஈஞூ நீயொஓஹாநு ” (பூதலி ஹிதபீஜஸ்த்தாநீயமவிபக்தம்தம:, ம்ருண்ணிஸ்ஸ்ருதபீஜவத்விபக்தம்சம:, ஸலிலஸம்ஸ்ருஷ்டார்த்ரசிதிலாவயவபீஜதுல்யமக்ஷரம், உச்சூநபீஜஸமாநாகாரமவ்யக்தம், அங்குரஸ்த்தாநீயோமஹாந்) என்னக்கடவதிறே.

அஹங்காரம் த்ரிவிதமாயிருக்குமோவென்ன (சாத்த்விகயித்யாதி) “ ஸாத்விகோராஜஸஶ்சைவ தாமஸஶ்ச த்ரிதாமஹாந்। வைகாரிகஸ்தைஜஸஶ்ச பூதாதிஶ்சைவ தாமஸ:। த்ரிவிதோயமஹங்கார: ” ( ஸாத்த்விகோராஜஸஶ்சைவதாமஸஶ்சத்ரிதாமஹாந் । வைகாரிகஸ்தைஜஸஶ்சபூதாதிஶ்சைவதாமஸ:। த்ரிவிதோயமஹங்கார: ) இத்யாத்யநுசந்தேயம்.

கீழ்ச்சொன்னவடைவன்றென்றது - “ஏசமூர்த்தி” என்றுதொடங்கிச்சொன்ன கார்யகாரணபாவமான வடைவன்றென்றபடி. அடைவல்லாதபடியெப்படியென்ன (சாத்த்விகேத்யாதி) சாத்த்விகாஹங்காரகார்ய மேகாதசேந்த்ரியங்களென்னுமதுக்குப்ரமாணம் - “ தைஜஸாநீந்த்ரியாண்யாஹுர்தேவா வைகாரிகா தஶ। ஏகாதஶம் மநஶ்சாத்ர தேவா வைகாரிகா: ஸ்ம்ருதா: ” ( தைஜஸாநீந்த்ரியாண்யாஹுர்த்தேவாவைகாரிகாதஶ। ஏகாதஶம்மநஶ்சாத்ரதேவாவைகாரிகாஸ்ஸ்ம்ருதா: ) இத்யாதி. தேவா: - இந்த்ரியாணீத்யர்த்த:. தாமசாஹங்காரகார்யம் ப்ருதிவ்யாதி பூதங்களென்னுமதுக்கு ப்ரமாணம் - “ பூததந்மாத்ரஸர்க்கோயமஹங்காராத்து தாமஸாத் ” (பூததந்மாத்ரஸர்க்கோயமஹங்காராத்து தாமஸாத்) இத்யாதி. சகுணமான பூதபஞ்சகங்களென்றது - வேதவ்யாசருடைய பக்ஷத்தைப்பற்ற. அதாவது-சகுணமான என்கையாலே- தந்மாத்ராவிசிஷ்டமான பூதத்தை ஏகமாக்கி - “ஐந்தபூதம்” என்று சொல்லுகிறதென்று கருத்து. இந்தபக்ஷத்தில், ஏகாதசேந்த்ரியங்களும், தந்மாத்ராவிசிஷ்டமான பூதங்களைந்தும், சப்தாதிகுணங்களைந்தும், ப்ரக்ருதிமஹதஹங்காரங்கள் மூன்றும், ஆக விருபத்துநாலுதத்த்வங்கள்; பராசரபக்ஷே, ஏகாதசேந்த்ரியங்களும், தந்மாத்ரைகளைந்தும், பூதங்களைந்தும், ப்ரக்ருதிமஹதஹங்காரங்களும் கூடவிருபத்துநாலென்று கண்டுகொள்வது. ஆக “ ஐந்தபூதமாய் ” என்கிறவளவும் - சமஷ்டிஸ்ருஷ்டியையருளிச்செய்தார்.

“இரண்டுசுடராய்” என்றுதொடங்கி - வ்யஷ்டி ஸ்ருஷ்டியையருளிச்செய்தாரென்றபடி. அருவாகி - அந்தராத்மதயா அநுப்ரவேசித்து. சூக்ஷ்மபூதனுயென்று சப்தார்த்தம். (அசித்தையித்யாதி) “அருவாந்” என்று-ஆத்மாவைச்சொல்லில், அநுப்ரவேசம் சித்தியாமையாலும்; அநுப்ரவேசகதநத்தில, ஜீவாந்தர்யாமிக்கநுப்ரவேசமாகையாலே ஆத்மாசித்திக்கையாலும், அநுப்ரவேசத்தையே சொல்லுகிறதென்றபடி.

ஸ்ருஷ்டிசொன்னவநந்தரம் க்ஷீராப்திசாயித்வகதநத்துக்கு தாத்பர்யத்வயம் (ஸ்ருஷ்டாநவித்யாதிவாக்யத்வயேந) செய்த்தலே-கழனித்தலே.

ப்ரணயித்வகுணகதநப்ரகரணத்திலே ஸ்ருஷ்டியை யெதுக்காகச்சொல்லுகிறதென்ன (இதிறேயித்யாதி) அதாவது-இப்படிவிநியோகங்கொள்ளுகையே ஸ்ரு

ஷ்டிக்கு ப்ரயோஜநமென்று தோன்றுகைக்காக வருளிச்செய்தாரென்றபடி.| இதிறே-இப்படிவிநியோகிக்கப்படுகையிறே. "ஆவியல்லல்" இத்யாதிக்கவதாரிகை (இப்படியித்யாதி) " அகத்தடக்கி " என்று - அவன் அவ்யவதாநேந ப்ரஸ்துதனுகையாலே யருளிச்செய்கிறுர் (உன்திருவுள்ளத்திலித்யாதி) " அகத்தடக்கி " என்றதோடேகூட்டிபாவம் (இத்தலையையித்யாதி) ( அன்றிக்கேயித்யாதி ) இன்னுராவியென்னுதே, சாமாந்யேந " ஆவி " என்கையாலே - (என்னுவியானது நிர்த்தூநமாயிற்றென்றுமாம்) என்றபடி. முந்தினவர்த்தத்திலே, " மாய்த்ததே! " என்ற ஏகாரம் - ஸ்வரத்திலேயாய், க்ருதார்த்தனுயேயென்றபடி.

(ஆதவேத்யாதி) ஏகமூர்த்தி-பரவாசுதேவர்; இருமூர்த்தி—வ்யூஹவாசுதேவரும், சங்கர்ஷணரும்; மூன்றுமூர்த்தியென்று - மூன்றும்மூர்த்தியென்றுய், ப்ரத்யும்நனைச்சொல்லுகிறது; ஐந்தபூதமாயித்யாதியாலே-ப்ரத்யும்நக்ருத்யமானஸ்ருஷ்டியையும், "நாகமேறி" இத்யாதியாலே-அநிருத்தனையும் தத்க்ருத்யமானபாலநத்தையும் சொல்லுகிறது; சங்கர்ஷணக்ருத்யமான சம்ஹாரமும், ஸ்ருஷ்டிஅப்யயபூர்விகையாகையாலே ஸ்ருஷ்டிசொன்னபோதே அர்த்தாத்ஸித்தம். (கடவதொன்கிறபடியாலே சொல்லுகிறது) வ்யூஹங்களைச்சொல்லுகிறதென்றபடி. நிர்வஹிப்பாருமுண்டென்றது - இது ஸ்வாரசிகமன்றென்றபடி. இன்னுர் ஸ்ருஷ்டிக்குக்கடவதொன்றவிடத்திலே - " ஷாடுஹுணஹாரஹூாஸுஹெவஃவோஈஜ.திவஹவாநு " (ஷாட்குண்யாத்வாஸுதேவ:பரஇதிசபவாந்) இத்யாதிஶ்லோகமநுசந்தேயம்..........*



## நான்காம்பாட்டு.

மாய்த்தலெண்ணிவாய்முலைதந்தமாயப்பேயுயிர்
மாய்த்தவாயமாயனேவாமனனேமாதவா
பூத்தண்மாலைகொண்டுன்னைப்போதால்வணங்கேனேலுநின்
பூத்தண்மாலைநெடுமுடிக்குப்புனையுங்கண்ணியெனதுயிரே.

### ஆருயிரப்படி.

(மாய்த்தல்) ஆஶ்ரிதவிரோதிநிரஸநஸ்வபாவனுய், ஆஶ்ரிதசமீஹிதப்ரதனுய், ஶ்ரிய:பதியாயிருந்த வுன்னைப்ராப்தகாலங்களிலே பூத்தண்மாலைகொண்டு வணங்காதிருக்கச்செய்தேயும், உன்னுடைய பூத்தண்மாலை நெடுமுடிக்கென்னுடைய வாத்மாவேபுனையுங்கண்ணியாயிற்றென்கிறுர்..........................................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், அநுகூலசத்ருவான பூதனையைநிரஸித்து என்னையநந்யார்ஹமாக்கிக்கொண்ட ஶ்ரிய:பதியான வுனக்கு என்ப்ராணன்திருமுடிக்கு விசேஷாலங்காரமாவதேயென்கிறுர்.

மாய்த்தல்-முடிப்பதாக. எண்ணி-நினைத்து. வாய் - திருப்பவளத்திலே. முலை-முலையை. தந்த-வைத்த. மாயம் - அநுகூலமான மாத்ருவேஷபரிக்ரஹத்தையுடைய. பேய்-வஞ்சப்பேயினுடைய. உயிர் - ப்ராணனை. மாய்த்த - முடித்துவிட்ட. ஆயன்-கோபாலபாலகத்வத்தில்புரையற்ற. மாயனே - ஆஶ்சர்யபூதனே. வாமநனே-இந்தஅபதாநத்தாலே "ரஸ்யமாஸீஜ்ஜகத்குரோ:" (ரஸ்யமாஸீஜ்ஜகத்குரோ:) என்று ஜகத்தை யநந்யார்ஹமாக்கும் ஸ்வாமித்வத்தை ப்ரகாஶிப்பிக்கிற வாமநாவதாரத்தையும் சபலமாக்கி. மாதவா - ஸ்வாபாவிகமான ஸ்ரிய:பதித்வத்தையும் நிலைநிறுத்தினவனே. உன்னை - இப்படியநுகூலசத்ரு நிராசகனுனவுன்னை. பூ-விலக்ஷணபுஷ்பயுக்தமாய். தண்-குளிர்ந்த. மாலை-மாலைகளை. கொண்டு-கொண்டு. போது-அவஸ்த்தாநுரூபமாக. வணங்கேனேலும்-ஆராதிக்கப்பெற்றிலேனேயாகிலும். நின்-உன்னுடைய. பூ-புஷ்பமயமாய். தண் - செவ்வியையுடைத்தான. மாலை-மாலையாலே யலங்க்ருதமாய். நெடு - ஆதிராஜ்யஸூசகமான ஔக்கத்தையுடைய. முடிக்கு-திருமுடிக்கு. புனையும்-அலங்காரமாகச்சாத்தும். கண்ணி-மாலை. எனது-என்னுடைய. உயிரோ-ப்ராணனுவதே ..........................................................*

## ஈடு - நான்காம்பாட்டு.

பூதநாதிகளுடைய நிரஸநசமயத்தில் ஶ்ரமஹர ஶிஶிரோபசாரம் பண்ணப்பெற்றிலேனேயாகிலும் ஶிஶிரோபசாரத்தாலல்லது செல்லாதவுன் சுகுமாரமான திருமேனிக்குச் சாத்தும்மாலை யென்சத்தையேயாய் விடுவதேயென்கிறார்.

(மாய்த்தலெண்ணி) அவள்கோலிவந்தபடி அவஶ்யம் சிலர் பரியவேண்டும்படியாயிற்று. இன்னை மாய்த்தலெண்ணியென்றமையாலே-ஜகதுபஸம்ஹாரணம்பண்ணக்கிடீரிவள் கோலிவந்ததென்கிறார்; சரீரியை நலிந்தால் சரீரம் தன்னடையே நசிக்குமிறே; உயிரிலேநலிந்தால் அவயவந்தோறும் தனித்துநலியவேண்டாவிறே, * உலகங்கட்கெல்லாமோருயிரிறே. "ஹந்தும் நஸம்ஶய:" (அஸ்மாந்ஹந்தும்நஸம்ஶய:) என்றாரிறே மஹாராஜர். (வாய்முலைதந்த) அவன் திருப்பவளத்திலே நஞ்சைக்கொடுத்தது தம்முடைய திருப்பவளத்திலே நஞ்சைக்கொடுத்தாற்போலேயிருக்கையாலே - தந்தவென்கிறாராதல்; அன்றிக்கே, தருகையும், கொடுக்கையும் - பர்யாயமாய், கொடுத்த என்னும்பொருள்பெற்றுக்கிடக்கிறதாகவுமாம். (மாயப்பேய்) ஜந்மத்தால்வந்த வறிவுகேட்டுக்குமேலே, வஞ்சநபரையாயும்வந்தாள். அதாவது - பேயாய்வருகை யன்றிக்கே, தாயாய்வருகை. "தாயாய்வந்தபேய்" என்னக்கடவதிறே. (உயிர்மாய்த்த) அவள்கோலிவந்தது தன்னை அவள் தன்னோடேபோக்கினபடி. (ஆயமாயனே) ஆஶ்சர்யசக்தியுக்தனான ஆயனே. இவனும்பிள்ளையாயே முலையுண்டான், அவளும்தாயாய் முலைகொடுத்தாள்; வஸ்துஸ்வபாவத்தாலே முடிந்தவித்தனை. (வாமநனே) அந்தஅவதாரத்தில், பூதனைமு

லைகொடுத்தாலதுக்கு ப்ரத்யௌஷதமாக முலைகொடுக்கைக்கொரு தாயாகிலுமுண்டிறேயங்கு, "வெங்கொங்கையுண்டானைமீட்டாய்ச்சியூட்டுவான், தன்கொங்கைவாய்வைத்தாள்சார்ந்து" என்றும், "பேய்ச்சிபாலுண்டபெருமானைப்பேர்த்தெடுத்து, ஆய்ச்சிமுலைகொடுத்தாளஞ்சாதே" என்றும்; அதுவுமின்றிக்கே, இவனைப்பெற்றிட்டுவைத்துத் தாயும் தமப்பனும்தபஸ்ஸிலே யந்யபரராக, ஆசுரப்ரக்ருதிகளிருந்தவிடத்தேதானே போய்க்கிட்டும்படியாயிறேயிருப்பது. அவர்கள்தா னிருந்தவிடத்தேவந்துகிட்டினாற்போலே யன்றிறே, தானெதிரிகளிருந்தவிடத்தேசென்று கிட்டுமதுமிகவும் வயிறெரித்தலுக் குடலாயிருக்குமிறே. அத்தையிறே "சீராற்பிறந்துசிறப்பால்வளராது, பேர்வாமனாகாக்கால்பேராளா" என்று வயிறுபிடித்தது. (மாதவா) "திநாள் திருவுடையார்க்கில்லை" என்கிறபடியே, இவ்வபாயங்களிலிவன் தப்பிற்றவள்நெஞ்சோடே கடாக்ஷிக்கையிறே. ஒரு அபாயங்களில்லையேயாகிலும் பெரியபிராட்டியாருமவனுமான சேர்த்திக்கு மங்களாசாஸநம்பண்ணுவார் தேட்டமாயிருக்குமிறே, "வடிவாய்நின்வலமார்பினில்வாழ்கின்ற மங்கையும்பல்லாண்டு" என்னுநின்றார்களிறே பரிவர். (பூத்தண்மாலைகொண்டு) குளிர்த்தியையுடைத்தான பூமாலையைக்கொண்டு. பூதநாதிகள்வந்துகிட்டின அவ்வவகாலங்களிலே திருவடிகளிலேவந்துவிழுந்து ஶிரோபசாரம்பண்ணப்பெற்றிலேனேயாகிலும். (நின்பூத்தண்மாலைநெடுமுடிக்கு) உன்னுடைய, குளிர்ந்தபூமாலையாலல்லது செல்லாதபடியாய் ஆதிராஜ்யஸூசகமான திருவபிஷேகத்துக்கு விரும்பிச்சாத்தும்மாலை, என்ப்ராணன்-என்சத்தையாய்விட்டது.........................................*

## ஜீயர் அரும்பதம்.

நாலாம்பாட்டு (மாய்த்தலித்யாதி) "போதால்வணங்கேனேலும்-புனையுங்கண்ணியெனதுயிர்" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (பூதநாதீத்யாதி) ஆதிசப்தத்தால்-பலிச்சக்ரவர்த்தியைச்சொல்லுகிறது. "எனதுயிர்" என்கையாலே (என்சத்தையேயாயென்றது)

"மாய்த்தலெண்ணி" என்கிறவருடையஹார்த்தபாவம் (அவள்கோலியித்யாதி) க்ருஷ்ணனையென்னுமல், சாமாந்யேந "மாய்த்தலெண்ணி" என்றதுக்கு பாவம் (இன்னாரையித்யாதி) க்ருஷ்ணனோலிந்தால் ஜகதுபஸம்ஹாரமாமோவென்ன; இரண்டுவகையாகவருளிச்செய்கிறார் (சரீரியையித்யாதிவாக்யத்வயத்தாலே) அவன்றானுயிரோவென்ன (உலகங்கட்கித்யாதி) உயிர்-ப்ராணன். அவனைமுடிக்கவந்ததுதம்மை முடிக்கவந்ததாகத் திருவுள்ளம்பற்றி - "மாய்த்தலெண்ணி" என்றாராகவுமாமென்று விவக்ஷித்து அதுக்குப்ரமாணம் (அஸ்மாகித்யாதி) "[illegible]" (ஏஷஸர்வாயுதோபேதஶ்சதுர்ப்பிஸ்ஸஹ

ராக்ஷஸை꞉ । ராக்ஷஸோப்யேதிபஶ்யத்வமஸ்மாந்ஹந்தும் நஸம்ஶய꞉ ) இதிவிபீஷணம் த்ருஷ்ட்வாசுக்ரீவ꞉. கொடுத்த என்றதே, " தந்த " என்றதுக்கிரண்டுவகையாகபாவம் (அவன் திருப்பவளத்திலித்யாதி வாக்யத்வயத்தாலே) " பேய் " என்றதே, "மாயப்பேய்" என்றதுக்குபாவம் ( ஜந்மத்தாலித்யாதி ) மாயந்தானின்னதென்கிறர் ( அதாவதித்யாதி ) தாயாய்வந்ததுக்கு ப்ரமாணம் ( தாயாயித்யாதி ) திருமொழி முதற்பத்து ஐந்தாந்திருமொழி ஆரும்பாட்டு ( தாயாய்வந்தபேயுயிரும் தயிரும்விழுதமுடனுண்டவாயான் ) தாய்வடிவுகொண்டுவந்த பூதனையுடையவுயிரையும் யசோதைப்பிராட்டியினுடையதயிரையும் வெண்ணெயையுமொக்க வமுதுசெய்த திருப்பவளத்தையுடையவனென்று பாசுரத்துக்கர்த்தம். " மாய்த்தலெண்ணி " என்றத்தைக்கடாக்ஷித்தர்த்தம் (அவளித்யாதி) "மாயனை-ஆயனே" இத்யந்வய꞉. மாயன்-ஆஶ்சர்யசக்தியுக்தன். ஆயனுயிருக்கச்செய்தே ஆஶ்சர்யசக்தியேதென்ன (இவனுமித்யாதி) ஆனல் முடியும்படி யெப்படியென்ன (வஸ்துஸ்வபாவேத்யாதி) ஆயன்மாயனுகையாலேயென்றபடி.

வாமநனேயென்றது - அதிலுமிதுபரியவேண்டுகையாலே யென்கிறர் (அந்தவவதாரத்திலித்யாதி) உக்தார்த்தத்துக்குப்ரமாணம் (வெங்கொங்கையித்யாதி) பூதனையுடையவெவ்வியமுலையை யமுதுசெய்தவனையவள்பக்கலினின்றும் மீட்டு யசோதைப்பிராட்டி புஜிப்பிக்கைக்காகப்பிள்ளையிருந்தவிடத்தளவும்சென்றுகிட்டித்தன்னுடையமுலையை யவன திருப்பவளத்திலேகொடுத்தாளென்றபடி. ஊட்டுவான்-புஜிப்பிக்கைக்காக. சார்ந்து-சேர்ந்து. சென்றுகிட்டி. மூன்றாந்திருவந்தாதி எழுபத்துநாலாம்பாட்டு, "நலமேவலிதுகொல்" இத்யாதி. (பேய்ச்சிபாலுண்டவித்யாதி) பூதனையுடைய முலைப்பாலையுண்ட வுபகாரகனை தான் நின்றவிடத்தில் நின்றும் பேர்ந்துவந்து கிட்டியெடுத்து யசோதைப்பிராட்டி பயப்படாதே முலைகொடுத்தாளென்று பாசுரத்துக்கர்த்தம். மூன்றாந்திருவந்தாதி யிருபத்தொன்பதாம்பாட்டு. தானேபோய்க்கிட்டுமதுபயஹேதுவோவென்ன ( அவர்களித்யாதி ) அப்படிவயிறெரிந்தாருண்டோவென்ன ( அத்தையிறேயித்யாதி ) அத்தையிறே-அத்தைப்பற்றவிறே. அதாவது-இவன்பிறந்தபோதே மாதாபிதாக்களிவனைவிட்டுப்போனத்தைப்பற்றவிறேயென்றபடி. பெரியதிருவந்தாதி பதினாம்பாட்டு ( சீராலித்யாதி) சக்ரவர்த்திதிருமகனைப்போலே சீர்மையோடேபிறந்துவலாலநத்தோடேவளராதே, பேரும் " ஶ்ரிய꞉பதி " என்றாற்போலன்றிக்கே சிறுமைக்குவாசகமான "வாமநன்" என்னும் திருநாமத்தையுடையையாகாதொழிந்தால், ஜகத்ரக்ஷணத்திலே நிரவதிக வ்யாமோஹத்தையுடையவனேயித்யர்த்த꞉. வாமன் - வாமநன். ஆகாக்கால்-ஆகாதொழிந்தால்.

திருவுடையார்க்குத்திநாளில்லையென்றபடி. திருவுடையார் - ஶ்ரீமான்கள். தீநாள்-பொல்லாநாள், கெடுநாளென்றபடி. நெஞ்சோடேயென்றது-சாடு. நெஞ்சோடே-திருமார்பிலேயிருந்தென்று ஸ்வபாவார்த்தம்; சாடுவுக்கு - ஸஹ்ருதயமாகவென்றபடி. " மாதவா-பூத்தண்மாலைகொண்டுன்னைப் போதால்வணங்கேனேலும் " என்று மேலேகூட்டி தாத்பர்யாந்தரம் ( ஒருஅபாயங்களித்யாதி ) அபாயங்களில்லாவிடினு மதிசங்கையாலே மங்களாசாசநம்பண்ணினபேருண்டோவென்ன (வடிவாயித்யாதி) திருப்பல்லாண்டு. உனக்குநிறமாய் - தேஜஸ்கரையாய், உன்வலமார்பிலே நித்யவாசம்பண்ணுகிற பெரியபிராட்டியாரும் நித்யஶ்ரீயாய்ச்செல்லவேணுமென்றபடி. வடிவு-நிறமும், அழகும்.

(பூத்தண்மாலை) "தண்-பூமாலை" இத்யந்வய꞉.

மேலுமிப்படியே யந்வயிப்பது. நெடுமுடி-நீண்டதிருவபிஷேகம்.

"மாதவா" என்றதின் முந்தினவர்த்தமான "தீநாள்" இத்யாதிவாக்யத்திலே-'ஆரப்யஶைஶவமநாரதமப்ரயத்நாத்யத்பூதநாதிவிபதுத்தரணம் முராரே:। கல்யாணி ருக்மிணி ஜகஜ்ஜநநி த்வதீயமாங்கல்யஸூத்ரமஹிமா கலு தத்ர ஹேது:" (ஆரப்யஸௌஸவமநாரதமப்ரயத்நாத்யச்பூதநாதிவிபஞத்தாணம்முராரே:। கல்யாணிருக்மிணீஜகஜ்ஜநநித்வதீயமாங்கள்யஸூத்ரமஹிமாசலுதத்ரஹேது:) என்கிறஶ்லோகமநுசந்தேயம். க்ரமேணாந்வய: ..........*

---

# ஐந்தாம்பாட்டு.

கண்ணியெனதுயிர்காதல்கனகச்சோதிமுடிமுதலா
வெண்ணில்பல்கலன்களுமேலுமாடையுமஃதே
நண்ணிமூவுலகுநவிற்றுங்கீர்த்தியுமஃதே
கண்ணனெம்பிரானெம்மான்காலசக்கரத்தானுக்கே.

## ஆருயிரப்படி.

(கண்ணி) ப்ரதிகூலநிரஸநஸ்வபாவனான திருவாழியுடையனானகண்ணனுக்கு, தன்திருவடிகளிலும் திருமார்விலும் திருத்தோளிலும் சாத்தியருளக்கடவ திருத்துழா யென்னுடையவாத்மா; அசங்க்யேயநாநாவித திவ்யபூஷணங்களும் ஸ்வோசிதநிவ்யபீதாம்பரமும், சர்வலோகங்களும்சொல்லியேத்தும் தன்னுடையகீர்த்தியும், மற்றுமெல்லாமென் காதலேயென்கிறார் ........ ............................ ..........................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், போக்யனாய் ஸ்வாமியாய் உபகாரகனாய் சுலபனான க்ருஷ்ணனுக்கு என்னுடைய ப்ரேமாதிகள் ஆபரணாதி சமஸ்தமுமாகாநின்றனவென்கிறார்.

காலம்-காலநிர்வாஹகமான. சக்கரத்தான்-திருவாழியையுடையனாய். எம்மான்-அவ்வழகைக்காட்டி காலவஸ்டனாகாதபடி யென்னையடிமைகொண்ட ஸ்வாமியாய். எம்பிரான்-காலமுள்ளதனையுமவ்வழகை யநுபவிப்பிக்குமஹோபகாரகனாய். கண்ணனுக்கு - சாலாநுரூபமாக அவதரித்த சுலபனானக்ருஷ்ணனுக்கு. எனது-என்னபிமாநாந்தர்க்கதமான. உயிர்-ஆத்மவஸ்து. கண்ணி-சிரஸாவாஹ்யமான மாலையாகாநின்றது. காதல்-ஆத்மதர்மமான ப்ரேமமானது. கனகம்-கநகமயமாய். சோதி-ஆதிராஜ்யசூசகமான ஔஜ்ஜ்வல்யத்தையுடைய. முடிமுதலா-முடிமுதலாக. எண்ணில்பல்-அசங்க்யேயமான. கலன்களும் - ஆபரணங்களுமாகாநின்றது. ஏலும்-அநுரூபமாய் ஸர்வஸ்மாத்பரத்வசூசகமான. ஆடையும்-திருப்பீதாம்பரமும். அஃதே-அதுவே. மூவுலகும்-த்ரிவிதாத்மவர்க்கமும். நண்ணி-கிட்டி. நவிற்றும்-வாய்புலற்றக்கடவ. கீர்த்தியும்-கீர்த்தியும். அஃதே-அதுவே.

இவருடைய ப்ரேமத்துக்குத்தான் விஷயீபவிக்கையை, பேறொப்பனையாகவும் பெருமபுகழாகவும் நினைத்தானென்றுகருத்து.............................*

## ஈடு-ஐந்தாம்பாட்டு.

தம்முடைய ஸ்நேஹாதிகளோரொன்றே ஆபரணுதி சர்வபரிச்சதங்களுமாயிற்றவனுக்கென்கிருர்.

(கண்ணியெனதுயிர்) நான் "என்னது" என்றிருக்கிறத்தைக்கிடீர் அவன் தனக்குமாலையாகக்கொண்டது. "மார்வத்துமாலை" என்கிறவனைத்தனக்கு மாலையாகக்கொள்ளுகை ப்ராப்தம், அதொழியவென் சத்தையைக்கிடீர் தனக்குமாலையாகக்கொள்ளுகிறது.

(காதலித்யாதி) ஸ்ப்ருஹணீயமாயாதிராஜ்ய சூசகமான திருவபிஷேகம் முதலான எண்ணிறந்து பலவகைப்பட்ட திருவாபரணங்களும் என்னுடையகாதல். இவருடையஸ்நேஹ மாபரணமாவதென்னென்னில்; இவருடைய ஸ்நேஹத்துக்குத்தான்விஷயமாகப்பெற்றவித்தையே, தனக்கநேகாபரணங்கள் சாத்தினல் பிறக்கும் புகருண்டாக அவன் நினைத்திருக்கையாலே, அத்தைப்பற்றச்சொல்லுகிறது.

(ஏலுமாடையுமஃதே) திருவரைக்குத் தகுதியான திருப்பீதாம்பரமுமக்காதலே. ஒருநாள் ஸ்ரீவைஷ்ணவவண்ணுத்தான், திருப்பரிவட்டங்களை யழகியதாக வாட்டிக்கொண்டுவந்து எம்பெருமானர்க்குக்காட்ட, போரத்ருப்தராய் அவனைப்பெருமாள் திருவடிகளிலேகைபிடித்துக்கொண்டுபுக்கு "நாயன்றே,இவன்திருவரைக்கீடாம்படி வாட்டினபடிதிருக்கண் சாத்தியருளவேணும்" என்றிவற்றைக்காட்டியருள, கண்டுகந்தருளி உடையவரை அருள்பாடிட்டருளி, "இவனுக்காக ரஜகன் நம்திறத்திற்செய்த குற்றம்பொறுத்தோம்" என்று திருவுள்ளமாயருளினர். (ஏலுமாடையுமஃதே) ஏகஜாதீயங்கள் பலவாகைதவிர்ந்து, விஸஜாதீயங்களும் பலவாகத்தொடங்கிற்று. புருஷோத்தமலக்ஷணமான திருப்பீதாம்பரமுமக்காதலே. இவர்நெடுங்காலங்கூடிப்பண்ணுகிற திருவாபரணமும் திருப்பரிவட்டமுமிறே. "அறியாக்காலத்துள்ளே யடிமைக்கணன்புசெய்வித்து" என்று இவருடையகாதல் சத்தாப்ரயுக்தமிறே. "மஹாரஜதம்வாஸ:" (மஹாரஜதம்வாஸ:) * பொய்யில்பாடலாகையாலே, "இதுகூடுமோ" என்று சம்சயிக்கவேண்டா.

(நண்ணிமூவுலகுமித்யாதி) விசேஷஜ்ஞரோயன்றிக்கே, மூவுலகிலுள்ளாரும்வந்து கிட்டிக்கடல்கிளர்ந்தாற்போலே ஸ்துதிக்கிறகீர்த்தியுமக்காதலே. "இவர்காதலித்தபின்பு அந்யபரரும் அநந்யபரராயேத்தாநின்றார்கள்" என்றாயிற்றவன் நினைத்திருக்கிறது. இக்காதலுக்குக்கைதொட்டுக்ருஷிபண்ணினபடி சொல்லுகிறதுமேல்; வ்ருத்தவான்களைக்காட்டிக்காணுமிவனா வ்ருத்திபரராக்கிற்று (காலசக்ரத்தான் - எம்பிரான் எம்

மான் - கண்ணனுக்கு) கையும்திருவாழியுமான வழகைக்காட்டி எனக்க நந்யபரத்வமஹோபகாரத்தைப்பண்ணி, "கழிவதோர்காதலுற்றார்க்குமு ண்டோகண்கள்துஞ்சுதல்" என்னப்பண்ணின வென்ஸ்வாமியான க்ருஷ்ணனுக்கு. (காலசக்கரம்) பகலை யிரவாக்கவல்லவனிறே. காலத்தைநடத்துகிறதிருவாழி. காலவஶ்யதையைப்போக்கும்திருவாழியென்னுதல். "நார்ச்சயிஷ்யந்தி" (நார்ச்சயிஷ்யந்தி) என்கிறகாலத்திலும் * இருள்தருமாஞாலத்திலு மிருளையோட்டி * அருளார் திருச்சக்கரமாய், திருக்கையைத்தான் பிரியாதாற்போலே திருவடிகளைநான்பிரியாதபடியான ருசிஜநகமானதிருவாழி. அவன்கையிலேநின்றே, இவன்காலிலேவிழும்படி பண்ணுமவனிறே..........................................................*

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு (கண்ணியெனதித்யாதி) பூர்வார்த்தத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (தம்முடையவித்யாதி) (ஸ்நேஹாதிகள்) என்றவாதிசப்தத்தாலே-உயிரைச்சொல்லுகிறது. (ஆபரணாதி) என்ற ஆதிசப்தத்தாலே -வஸ்த்ராதிகளைச்சொல்லுகிறது.

கீழேயும் "கண்ணியெனதுயிர்" என்றுவைத்துமீளவும் சொல்லுவானேனென்ன (நானித்யாதி) நானென்னது என்றது - பூர்வவ்ருத்தம். பின்னையாரைமாலையாகக்கொள்ளவேணுமென்ன (மார்வத்தித்யாதி) "எனதுயிர்" என்றதுக்கு தாத்பர்யாந்தரமாதல்.

"கனகச்சோதி" என்றபதத்துக்குபாவம் (ஸ்ப்ருஹணீயமாயித்யாதி) தாமொரு சம்சாரியாயிருக்க, தம்முடையகாதலை யாபரணாதிகளாய்க்கொண்டு அதிசயகரங்க ளென்னலாமோவென்று சங்காதாத்பர்யம். உத்தரம் (இவருடையவித்யாதி)

ஏலுமாடை - திருவரைக்குத்தகுதியான ஆடையென்னுதல், புருஷோத்தமத்வத்துக்குத்தகுதியான ஆடையென்னுதல். முந்தினவர்த்தத்துக்கு சம்வாதம் (ஒருநாளித்யாதி) வண்ணத்தான்-ரஜகன். வாட்டி-திருத்தி. "ஏலுமாடையும், கீர்த்தியும்" என்கிறசப்தத்துக்குபாவம் (ஏகஜாதீயங்களித்யாதி) அதாவது-காதலான தேகஜாதீயங்களான திருவாபரணங்கள் பலவகையாகைதவிர்ந்து விஜாதீயங்களான திருப்பரிவட்டம் கீர்த்திதொடக்கமானவை பலவாகத்தொடங்கிற்றென்றபடி. த்விதீயார்த்தம் (புருஷோத்தமேத்யாதி) "அஃதே" என்று - அவதரிக்கிறதென், அல்லாதார்காதலுமிவையாகமாட்டாதோவென்ன (நெடுங்காலமித்யாதி) நெடுங்காலம் கூடிப்பண்ணினமைக்கு ப்ரமாணம் (அறியாவித்யாதி) ஸ்பஷ்டோர்த்தः. பும்ஸ்த்வலக்ஷணமான திருப்பீதாம்பரஸத்பாவத்துக்குப்ரமாணம் (மஹாரஜதமித்யாதி) இந்தஶ்ருதி - விக்ரஹத்ருஷ்டாந்தமாகிலும், இவ்விடத்திலிவர்க் கிப்படிவிவக்ஷிதம். ப்ருஹதாரண்யகே கார்க்கிப்ரஶ்நே, "தஸ்யஹைதஸ்யபுருஷஸ்யரூபம் யதாமஹாரஜதம்வாஸः" (தஸ்யஹைதஸ்யபுருஷஸ்யரூபம் யதாமஹாரஜதம்வாஸः) இதி. ஶ்லாக்யமான பீதாம்பரமுண்டென்றபடி. இவர்காத லாபரணமாகக்கூடுமோ, இதர்த்தவாதமன்றோவென்ன (பொய்யில்பாடலித்யாதி)

ப்ரயோஜநாந்தரபரர் ஸ்துதிக்கிறகீர்த்தியை அநந்யப்ரயோஜநரான தம்முடையகாதலென்னலாமோவென்ன (இவர்காதலித்தவித்யாதி) காதலித்தபின்பு.

காதல்பண்ணினபின்பு. அதாவது - "ஊரும்நாடும்" இத்யாதிப்படியே தம்மைப் போலே திருந்துகையாலே ப்ரயோஜநாந்தரபரரு மநந்யப்ரயோஜநரா யேத்துகிறார்களென்றுமிற்றவன் நினைத்திருக்கிறதென்றபடி.

"சக்கரம்" என்றதுசக்ரடாக்ஷித்தருளிச்செய்கிறார் (இக்காதலுக்கித்யாதி) இப்பதத்தையுட்கொண்டுசாடு(வ்ருத்தவான்களையித்யாதி)வ்ருத்தம்-நடைவடியும், வளையமும், அநந்யபரத்வமஹோபகாரமேதென்ன (கடுவதோரித்யாதி) "தொல்லைமாலைக்கண்ணாரக்கண்டு கழிவதோர்காதல்" இத்யாதி - அநாதியான வாத்ஸல்யத்தையுடையவனைக் கண்கள்நிறையும்படி யநுபவித்து காலம்கழியும்படி அத்விதீயமானவாசையிலே நின்றவர்களுக்கு மவன்பக்கல்வைத்தகண்கள் செம்பளிக்கைக்குவிரகுண்டோ வித்யர்த்த8. திருவிருத்தம் தொண்ணூற்றேழாம்பாட்டு, "எழுவதும்மீண்டே" என்கிறபாட்டு. காலத்தைநடத்துகிற திருவாழியென்றுவிவக்ஷித்து, திருவாழியோகாலத்தை நடத்துகிறதென்ன (பகலையித்யாதி) த்விதீயார்த்தத்துக்குபாவம் (நார்ச்சயிஷ்யந்தீத்யாதி) "கலௌஜகத்பதிம்விஷ்ணும்ஸர்வஸ்ரஷ்டாரமீஸ்வரம். நார்ச்சயிஷ்யந்திமைத்ரேய பாஷண்டோபஹதாஜநா:" (கலௌஜகத்பதிம்விஷ்ணும்ஸர்வஸ்ரஷ்டாரமீஸ்வரம்। நார்ச்சயிஷ்யந்திமைத்ரேயபாஷண்டோபஹதாஜநா8) இந்தஸ்லோகம். காலவம்பதையைபோக்குமென்றது-தேசதோஷத்தைப்போக்குமதற்கு முபலக்ஷணம்; (இருள்தருமாஞாலத்திலும்) என்கையாலே. அருளார்திருச்சக்கரம்-அருள்மிக்க திருவாழி. திருவிருத்தம் முப்பத்துமூன்றாம்பாட்டு. "தஹ, பச" என்று இவன் ருசிஜநகனுவதென்ன; அவன்றிருக்கையிலே நிற்கிறவழகாலேயென்கிறார் (அவன்கையிலேயித்யாதி)

காலசக்கரத்தான் - எம்பிரானெம்மான்-கண்ணனுக்கு - எனதுயிர்-கண்ணி, கனகச்சோதிதொடங்கி-பல்கலன்களும்-காதல், எலுமாடையுமஃதே, நண்ணிதொடங்கி, கீர்த்தியுமஃதே யித்யந்வய8..........................................*

# ஆறாம்பாட்டு.

காலசக்கரத்தொடுவெண்சங்கங்கையேந்தினாய்
ஞாலமுற்றுமுண்டுமிழ்ந்தநாராயணனேயென்றென்
றோலமிட்டுநானழைத்தாலொன்றும்வாராயாகிலும்
கோலமாமென்சென்னிக்குன்கமலமன்னகுரைகழலே.

## ஆறாயிரப்படி.

(காலசக்கரத்தொடு) சர்வஜ்ஞனாய் சர்வசக்தியாயிருந்த வுன்னாலும் விஸ்லேஷிக்கவொண்ணாததொருபடி யென்னோடே சம்ஸ்லேஷித்தருளினாயென்கிறார். ஆஸ்ரிதவிரோதி நிரஸநஸ்வபாவமான சங்கசக்ராதி திவ்யாயுதோபேதனாய், காருண்யசௌஹார்த்த சௌசீல்யாதி கல்யாணகுணவிசிஷ்டனாயிருந்த நீயிப்படி யென்னோடு சம்ஸ்லேஷியாதொழிந்தாலு முன்னுடையசத்தையே யெனக்கு சர்வபோக்யமாம்படி யென்னைப்பண்ணியருளினாயென்னவுமாம். ......................*

ட்டினானென்றபடி. ப்ராந்திதசையிலே கைகாட்டக்கூடுமோவென்ன; "'தேறியும் தேறாத மாயோன்றிறத்தனள்' என்கையாலேகூடும்" என்றருளிச்செய்வர். ப்ராந்த்யநுகுணமாக "விண்" என்றதுக்கு-ஆகாசமாக விரண்டாமர்த்தம் (நாமசாம்யத்தாலுமித்யாதி)

"மேவுவைகுந்தம்" என்றதுக்கு வ்யாவர்த்யபூர்வகமாகவர்த்தம் (என்னோடேயித்யாதி) "மேவு" என்றதுக்குபலிதம் (அவதாரேத்யாதி) "வைகுந்தம்" என்றத்தைப்பற்ற (தனக்கிழக்கவேண்டாமையுமென்றது) அவன்-முன்பு தன்னோடுகலந்தகுணாதிகன். "கைகாட்டும்" என்றதுக்குவாசனை (அவனேகரூபமாயித்யாதி) தாத்பர்யாந்தரமாதல், கீழ்வாக்யவிவரணமாதல் (பரமபதத்திலேயித்யாதி)

ஏகரூபமாயிருக்கும் ப்ரகாரமின்னதென்று விவரியாநின்றுகொண்டு, இதுவே * கண்ணீர்மல்குகைக்கு ஹேதுவென்கிறாராதல், கீழெல்லாம்கடாக்ஷித்து பாவமாதல் (அவதாரமித்யாதி) "கண்ணை" என்கிறஐகாரம்-அவ்யயம். கண்ணுள் நீர்மல்கவென்றபடி. "பெருமயல்" என்றத்தைக்கடாக்ஷித் திதுக்குபாவம் (அவ்வடிவையித்யாதி) ஆகையாலே யிவளத்தையே சொல்லாநின்றாளென்கிறார் (இவளுமித்யாதி) த்விதீயபாதத்தையு முட்கொண்டுபாவம் (ஒருகருங்கடலித்யாதி) செவ்வே-ஊர்த்த்வமாக. அங்கிருக்கு மிருப்பென்றது - "வைகுந்தம்" என்றத்தைப்பற்ற. பரமபதத்திலிருப்பென்றபடி. (மன்னேயென்னவுமாமிதி) அதுவும்-அப்பாவென்று விஷாதாதிசய ஸூசகமாயிருப்பதொரு அவ்யயம். ஆக, இத்தால் - அம்மே அப்பா என்னுமாபோலேயென்கை.

"சிறுமான்" என்றத்தைக்கடாக்ஷித் திதுக்குபாவம் (யுவதிஸ்சேத்யாதி) * பெருமைக்கர்த்தம் (தம்மைக்கலந்தித்யாதி) கலந்துபிரிந்தார்படும் வ்யஸநத்தளவல்லவென்றது - "மைபலேற்றிமயக்க" என்றவாண்டாளையும், "உந்மாதஜோவிகாரோவா" (உந்மாதஜோவிகாரோவா) என்றபிராட்டியையும் வ்யாவர்த்திக்கிறது. பிராட்டியுமாண்டாளு மிப்படிகலங்கினார்களில்லையேயென்றுகருத்து. இவளுக்குவாசியேதென்ன (ஸத்ருஸேத்யாதி) (என்செய்கேன்) அவன்ஸ்வதந்த்ரனாகையாலு மிவளதிப்ரவணையாகையாலும் தனக்கசக்யமென்றபடி.

பெய்தல்-இடுதல். இவளுடைய து:காதிசயஞ் சொல்லுகிறவளவிலே "பெய்வளையீரோ" என்கிறவளுடைய ஹார்த்தபாவத்தை யிரண்டுவகையாக வருளிச்செய்கிறார் (ப்ரளயத்திலித்யாதிவாக்யத்வயத்தாலே) புறவடி-புறங்கால். இந்தவ்யஸநங்கண்டவுங்களுக்கு து:கமில்லையென்றபடி. தாத்பர்யாந்தரம் (நீங்களித்யாதி) கைமேலேயென்றது-ரஸோக்தி. கைமேலே வளைதொங்கும்படி பரிஹாரத்தைப்பண்ணிப்பார்க்கவென்று ஸ்வபாவார்த்தம், ஸத்ய: அநுஷ்டித்துப்பார்க்கவென்றுத்வநி.

பெய்வளையீரோ இத்யாரப்யாந்வய:..........................................*

## இரண்டாம்பாட்டு.

பெய்வளைக்கைகளைக்கூப்பிப்பிரான்கிடக்குங்கடலென்னுஞ்
செய்யதோர்நாயிற்றைக்காட்டிச்சிரீதரன்மூர்த்தியீதென்னு
நையுங்கண்ணீர்மல்கநின்றுநாரணனென்னுமன்னேயென்
றெய்வவுருவிற்சிறுமான்செய்கின்றதொன்றறியேனே.

## ஆருயிரப்படி.

(பெய்வளை) இக்கடலை யவன்கண்வளர்ந்தருளுகிற திருப்பாற்கடலாகக்கருதி, தன்னுடைய பெய்வளைக்கைகளைக்கூப்பி, பிரான்கிடக்கும்கடலென்னும். எம்பெருமானும் பிராட்டியு மாதித்யனு மவனுடைய ப்ரபையும்போல விருக்கையாலே, அந்தவாதித்யனைக்காட்டி, சிரீதரன் மூர்த்தியீதென்னும். தன்கைக்கவனெட்டாதொழிந்தவாறேநையும். அந்தவ்யஸநத்தை சஹிக்கமாட்டாமையாலே கண்ணீர்மல்கநின்று, நாரணனென்னும். ஆஶ்சர்யபூதையான இவள்செய்கிற செயலொன்றும் தெரிகிறதில்லையென்கிறாள் ..............................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அவனோடுசெம்பந்தமுடைய கடலையு மாதித்யனையுங்கண்டு சிதிலையாகாநின்றாளென்கிறாள்.

பெய் - பலகாலும் சுழன்றிடப்படாநிற்கிற. வளை - வளைகளையுடைய. கைகளை - கைகளை. கூப்பி - கூப்பி அஞ்சலிபண்ணி. தன்முன்பே கோஷிக்கிறகடலைப் பார்த்து, பிரான் - சரணம்புக்க தேவர்களுக்கு முகங்காட்டு முபகாரசனானவன். கிடக்கும் - எனக்கு முகங்காட்டக்கிடக்கிற. கடல் - கடல். என்னும் - என்னாநிற்கும். ராத்ர்யவஸாநத்திலேஉதித்து, செய்யது-சிவந்தவொளியாலே. ஓர்-அத்விதியனை. நாயிற்றை-ஆதித்யனை. காட்டி - கைகாட்டி. சிரீதரன் - "ஷித்யாஸஹாய வஞ்ஶாஶதஷி ஸநாதநம்" (வித்யாஸஹாயவந்தம் மாமாதித்யஸ்த்தம் ஸநாதநம்) என்று பெரியபிராட்டியாரோடேகூடி உபாஸ்யனான ஸ்ரீதரனிருக்கிற. மூர்த்தி-வடிவு. ஈது-இது. என்னும்-என்னாநிற்கும். நையும்-இப்படி ஶரண்யனுமாய் உபாஸ்யனுமானவனைக்கிட்டி யநுபவிக்கப்பெறாமையாலே சிதிலையாகாநிற்கும். அந்தசைதில்யத்தாலே, கண்ணீர்-கண்ணநீர். மல்க-மல்க. நின்று-நின்று. நாரணன்-நிருபாதிகசம்பந்தயுக்தனானநாராயணன். என்னும் - என்னாநிற்கும். அன்னே-அம்மே. என்-என்னுடைய. தெய்வவுருவில்-சூரிகள்வடிவுபோலே அப்ராக்ருதமான வடிவையுடையளாய். சிறு - முக்தமான. மான் - மான்போலே யிளையபருவத்தையுடையளானவிவள். செய்கின்றது-செய்கிறது. ஒன்று - ஒன்றும். அறியேன்-அறிகிறிலேன்.

சரண்யஸ்த்தலத்தை அஞ்சலிபண்ணாநின்றாள், உபாஸ்யஸ்த்தலத்தைக்காட்டாநின்றாள், ஒன்றிலேநின்றாளாக வறியப்போகிறதில்லையென்றுகருத்து......*

## ஈடு - இரண்டாம்பாட்டு.

அப்ராக்ருதரூபையானவிவள் செய்கிறனவொன்றும் தெரிகிறதில்லையென்கிறாள்.

(பெய்வளைக்கைகளைக்கூப்பி) அவனைத்தொழுவித்துக்கொள்ளும் பரிகரத்தையுடையவள், தான்தொழாநின்றாள். அவனைத்தொழுவித்துக் கொள்ளப்போலேகாணும் கையில்வளையிட்டது. "கடல்வண்ணன்" என்

நவாறே கழன்றவளைகளொழியச் சரிந்தவளைகள் பூரித்தனகாணும். கையிலே ப்ரஹ்மாஸ்த்ரமிருக்கப்படும்பாடேயிது. வீரக்கழலோடே பட்டுக் கிடப்பாரைப்போலேயிறே யிவள்கிடக்கிறகிடை. இங்ஙனே நோவுபடாநிற்கச்செய்தே கடலோசை வாராச்செவிப்படுமே. (பிரான்கிடக்குங்கடலென்னும்) "திருப்பாற்கடலிலேசாய்ந்தால் நம்மார்த்திக்குக்கடுகவுதவவொண்ணாது" என்று, அணித்தாக விக்கடலிலேசாய்ந்தருளின மஹோபகாரகனென்னும்.

இப்படிராத்ரியெல்லாம் கடலோசைபோடேயலைந்து, விடிந்தவாறே ஆதித்யன்வாராத்தோற்றுமே(செய்யவித்யாதி) உதயகாலத்திலாதித்யனைக்கண்டு, ஸ்ரீதரனுடைய வடிவிதென்னும். சர்வதாசாத்ருஸ்யம் வேண்டாதே, அல்பசாத்ருஸ்யமமையாநின்றதாயிற்றிவள் ப்ரமிக்கைக்கு. ப்ரபாப்ரபாவான்களைக்கண்டவாறே, அவளுமவனுமாக விருக்குமிருப்பை நினையாநின்றாள்; "ஹாஸ்யேணவ்ரூஹாயயா" (பாஸ்கரேணப்ரபாயதா)

(னையும்) மாதாபிதாக்கள் சேரவிருக்க, அவர்கள் சந்நிதியிலேபசித்த ப்ரஜைகளைப்போலே சிதிலையாகாநின்றாள். "புருஷகாரபூதையருகேயிருக்கப்பெறாத நான் இனியார்புருஷகாரமாகப் பெறவிருக்கிறேன்" என்று சிதிலையாகாநின்றாள்.

(கண்ணீர்மல்கநின்று) தளர்த்தியின் மிகுதியாலே கண்ணீர்வெள்ளமிடாநின்றது. (நாரணனென்னும்) "அம்மே" என்பாரைப்போலே. "ஸ்ரீமந்நாராயணன்" என்றுகூடச்சொல்லமாட்டாதேதளர்ந்து, கண்ணீராலே கைகழுவி, பின்னைநாரணனென்னாநின்றாள். (அன்னே) "மைத்ரேய" என்னுமாபோலே, தனக்கோருற்றங்கோல்தேடுகிறாள்.

(என்தெய்வவுருவில்) சத்ருஶபதார்த்தங்களையும் சம்பந்திபதார்த்தங்களையு மநுசந்திக்க வநுசந்திக்க, நித்யாநுபவம்பண்ணுகிற நித்யசூரிகள் வடிவிற்பிறக்கும்புகர் பிறவாநின்றதாயிற்றிவளுக்கு; அவர்களிலிவளுக்கு வாசியுண்டு (சிறுமான்) "வடீபாணா:" (புராணா:) என்றும், "விண்ணாட்டவர்மூதுவர்" என்றுஞ்சொல்லுகிறபடியே பழையராயிருப்பர்களிறேயவர்கள். (செய்கின்றதொன்றறியேனே) இவள்தொடங்குகிறதேது, தலைக்கட்டுகிறதேது என்று ஒன்றும் தெரிகிறதில்லை ..............*

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு (பெய்வளையித்யாதி) "தெய்வவுருவிற்சிறுமான்" இத்யாதி மேலெல்லாங்கடாக்ஷித்தவதாரிகை (அப்ராக்ருதேத்யாதி)

"பெய்வளை" என்றுவைத்து "கைகளைக்கூப்பி" என்றவளுடையஹார்த்தபாவம்(அவளையித்யாதி) தொழுவித்துக்கொள்ளும்பரிகரமோவென்ன (அவளைத்தொ

மூவித்துக்கொள்ளவித்யாதி ) விஶ்லேஷதசையில்வளையுண்டோவென்ன (கடல்வண்ணனித்யாதி ) கழன்ற - நழுவின - சரிந்த - நழுவாநின்ற. "அவனை" இத்யாதிவாக்யத்வயவிவரணம் (கையிலே ப்ரஹ்மாஸ்த்ரமித்யாதிவாக்யத்வயம்) இது-பரிஹாராந்தரமாதல். அதாவது-பூர்வாவஸ்த்தையில் வளைகளென்றபடி.

விஶ்லேஷதசையி லுபகாரமேதென்ன ( திருப்பாற்கடலிலேயித்யாதி ) அணித்தாக-சமீபமாக. இக்கடலிலே யென்றது - "நீலக்கடலுள்நெடுங்காலம் கண்வளர்ந்தான்" என்றத்தைப்பற்றவாதல்; " இதுவும் கடலன்றோ, இங்கேயும் கிடவாதோ" என்றிருக்கிறாளாதல்.

அலைந்து-க்லேசித்து. வாரா-வந்து. "சாம்யமுண்டாய் ப்ரமிக்கவேண்டாவோ, ஶ்யாமமான விக்ரஹத்தையுடையவனை யாதித்யனாக ப்ரமிக்கக்கூடுமோவென்ன (சர்வதேத்யாதி) அல்பசாத்ருஶ்யமேதென்ன (ப்ரபேத்யாதி) செய்யது-சிவந்த. உதிக்கிற வாதித்யனுகையாலே, " சிவந்த " என்கிறது. உதயகாலத்தில் சிவந்தவொளியா லத்விதியனுன வாதித்யனைக்காட்டி இத்யர்த்தம். இவள் ப்ரபாஸ்த்தானீயையோவென்ன (பாஸ்கரேணேத்யாதி) " அநந்யாஹி மயா ஸீதா பாஸ்கரேண ப்ரபா யதா " ( அநந்யாஹிமயாஸீதாபாஸ்கரேணப்ரபாயதா ) இதியுத்தகாண்டேராமம்; " அநந்யா ராகவேணாஹம் பாஸ்கரேண ப்ரபா யதா " ( அநந்யாராகவேணுஹம்பாஸ்கரேணப்ரபாயதா ) இதிஸுந்தரகாண்டேராவணம்ப்ரதிஸீதா.

அவளுமவனுமானசேர்த்திசொன்னதுக்குபாவம் (மாதாபிதாக்களித்யாதி) தார்ஷ்டாந்திகத்திலே, பிராட்டியைச்சொன்னவநந்தர மிவள்சிதிலையாய் ப்ரகாரத்தை யுபபாதிக்கிறர் (புருஷகாரேத்யாதி) புருஷகாரபூதையென்றது - " சிரீதரன் " என்றவிடத்தில் * சிரீயின்தாத்பர்யம்.

"மையும்" என்றத்தைக்கூட்டிபாவம் ( தளர்த்தியினித்யாதி ) ( அம்மேயென்பாரைப்போலேயிதி ) சம்பந்தம் - நாராயணசப்தார்த்தமிறே யென்றுகருத்து. " சிரீதரன் " என்றவநந்தரம் " நாரணன் " என்னுதே, " மையும் " இத்யாதிபதவ்யவதாநத்துக்குதாத்பர்யம் (ஸ்ரீமந்நாராயணனித்யாதி) (கண்ணீராலேகைகழுவியிதி) சிஷ்டர்களொரு வைதிகக்ரியை செய்யும்போது முந்தற ஹஸ்தப்ரக்ஷாளநம்பண்ணிக்கொண்டு, பின்னையிறேசெய்வது; அப்படியே இவள்முந்தறக்கண்ணீர்விட்டு, பின்னைச்சொல்லாநின்றுளென்றபடி. தனக்கு - தாயாரானதனக்கு. ஊற்றங்கோல் - ஊன்றுகோல்.

"மையும்" என்றுவைத்து "தெய்வவுரு" என்கிறதென்னென்ன (ஶத்ருஶேத்யாதி) இங்கு * தெய்வசப்தம் - " திவ்க்ரீடா " இத்யாதி தாதுவிற்சொல்லுகிற காந்தியைச்சொல்லுகிறது. தெய்வவுரு - காந்திமத்தானவடிவு. உருவில் - உருவையுடையவள். " அப்ராக்ருதமான வடிவையுடையவள் " என்றுமா. அவர்கள் வ்ருத்தர்களோவென்ன (புராணஇத்யாதி) (பழையராயிருப்பர்களிறேயவர்கள்) ஆகையாலே யவர்களுக்கு ப்ரமிக்கைக்குஹேதுவில்லை, இவளதிமுக்தையாகையாலேமிகவும் கலங்குகைக்குடலாயிருக்குமென்றபடி. சந்தோஷமும் துக்கமுமுண்டாகையாலே (ஒன்றும்தெரிகிறதில்லை) என்கிறர். "தெய்வவுரு" என்று - காந்தியைச்சொல்லுகையாலே, சந்தோஷம்; "பெய்வளை" என்று - பலகாலும் கழன்றிடப்படாநிற்கிறவளையென்கையாலே, துக்கம்.

(விண்ணாட்டவர்மூதுவரொன்று) திருவிருத்த மிரண்டாம்பாட்டு. "செழுநீர்த்தடத்து" இத்யாதி; பரமபதத்திலிருக்குமவர்களாய்ப் பழையராயிருக்குமவர்களித்யர்த்த8. க்ரமேணாந்வய8.........................................*

## மூன்றாம்பாட்டு.

அறியுஞ்செந்தீயைத்தழுவியச்சுதனென்னுமெய்வேவா
ளெறியுந்தண்காற்றைத்தழுவியென்னுடைக்கோவிந்தனென்னும்
வெறிகொள்துழாய்மலர்நாறும்வினையுடையாட்டியேன்பெற்ற
செறிவளைமுன்கைச்சிறுமான்செய்கின்றதென்கண்ணுக்கொன்றே.

### ஆறாயிரப்படி.

(அறியும்) எல்லாராலும் தாஹகஸ்வபாவத்வேந அறியப்படுகிற செந்தீயை யதினுடைய வௌஜ்ஜ்வல்யத்தாலே யெம்பெருமானாகக்கருதிச்சென்று சம்ஶ்லேஷித்து அந்த சம்ஶ்லேஷஜநிதப்ரீதியாலே, அச்சுதனென்னும் மெய்வேவாள், அதினுடைய சைத்யாதிசயத்தாலே நிரஸ்த சமஸ்தசந்தாபையாயிருக்கும். அதிசீதளமாய்க்கொண்டு வருகிறதென்றலே, பசுமேய்க்கப்பெற்றுவருகிற வண்டுவரைப்பெருமாளென்று நிஶ்சயித்து அக்காற்றைத்தழுவி, அடியேனிவனென்னுடைய கோவிந்தனென்னும். வெறிகொள்துழாய்மலர்நாறும். இப்படி யெம்பெருமானைப் பிரிந்துபடுகைக்கர்ஹையன்றியே யிருக்கச்செய்தே, இவளென்னுடையபாபத்தாலே பிச்சேறிச்செய்கிறசெயல்களிவ்வளவோவென்கிறாள் ... ...*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், அவனுடைய ப்ரதாபாநுக்ரஹங்களைநினைத்து, அக்நியையும்வாயுவையு மவன்றானாக ப்ரதிபத்திபண்ணி மேல்விழாநின்றாளென்கிறாள்.

அறியும் - சுடுமென்றறிந்துபோரப்படுவதாய். செம்-சிவந்தநிறத்தையுடைத்தான. தீயை - நெருப்பை. தழுவி - தேஜோமயவிக்ரஹத்தை யுடையவனாகக்கொண்டு மேல்விழுந்தணைத்து. அச்சுதன் - என்னைவிடாதவனன்றோ. என்னும்-என்னும். இப்படிதாஹகமானஅக்நியைமேல்விழச்செய்தே ப்ரஹ்லாதசரீரம்போலே, மெய் - உடம்பு. வேவாள்-வேகிறிலள். இவள் ப்ரமித்தாலு மவனுக்கஞ்சுகையாலே தஹியாதிறே. எறியும்-வீசுகிற. தண்-குளிர்ந்த. காற்றை-தென்றலே. தழுவி-அணைத்து அதுகுளிர்ந்திருக்கையாலே ப்ரணயியான வவனாகநினைத்துத்தழுவி. என்னுடை-எனக்குபவ்யனான. கோவிந்தன்-கோவிந்தன்பசுமேய்க்கப்போய் "நான் க்லேசிக்கிறேன்" என்று * காற்றிற்கடியனாய்வந்ததென். என்னும்-என்னும். இவள், வெறிகொள்-பரிமளப்ரசுரமான. துழாய்மலர்-திருத்துழாய். நாறும் - நாறாநிற்கும். "ஓர்தண்டென்றல்வந்து - அம்பூந்துழாயினின்றேன் புயலுடைநீர்மையினாற்றடவிற்றென்புலன்கலனே" என்கிறபடியேயிவள் * உயலிடம்பெற்றுய்கைக்காகக்காற்றேடேகலந்துபுகுந்தாராகக்கூடும். வினையுடையாட்டியேன்-இப்படி ப்ரமி

க்கக்காணும்படியானபாபத்தையுடையநான். பெற்ற-பெற்றவளாய். செறி-போலி கண்டு அவனுகநினைத்து மேல்விழுகையாலே பூரித்துச்செறிந்த. வளை - வளையையுடைத்தான. முன்கை-முன்கையையுடையளாய். சிறு-முக்தமான. மான் - மான் போலேயிருக்கிறவிவள். செய்கின்றது-செய்கிறவ்யாபாரம். என்-என். கண்ணுக்கு-கண்ணுக்கு. ஒன்றே-ஒன்றுகவிருக்கிறதில்லை, பஹுவிதமாயிருக்கிறது.

நெருப்புச்சுடாமையாலே லோகத்தார்படியல்லள், காற்றுச்சுடாமையாலே பிரிந்தார்படியல்லள், போலிகண்டு ப்ரமிக்கையாலே கூடினார்படியல்லள், திருத்துழாய்மணக்கையாலே கூடாதார்படியல்லளென்றுகருத்து ...... .........*

## ஈடு - மூன்றும்பாட்டு.

இவளுடைய அதிப்ரவ்ருத்திகளைச்சொல்லப்புக்கு, அவற்றுக்கெண்ணில்லையென்கிறாள்.

( அறியுஞ்செந்தீயைத்தழுவி ) "ஒன்றுலவிக்கவொண்ணாது, தாஹகம்" என்றறியும் நெருப்பைத்தழுவாநின்றாள். இவள் தானும் ப்ரமத்துக்குமுன்பு அறிந்து பரிஹரித்துப்போருமதாயிற்று. "மந்த்ரௌஷதாதிகளாலே ப்ரதிபத்தஸக்திகம்'' என்று தான் தழுவுகிறாளோ ( செந்தீயைத்தழுவி ) "தேஜஸாம்ராஸிமூர்ஜிதம்" ( தேஜஸாம்ராஸிமூர்ஜிதம் ) என்றொளியுடைமையையேபார்த்துத்தழுவாநின்றாள். "பொருநீர்க்கடல் தீப்பட்டெங்கும் திகழுமெரியொடுசெல்வதொப்ப" என்னுமாபோலே. இப்போது தனக்காகவொரு மாணிக்கப்படிசாத்தி யணைக்கைக்காகவந்தானென்றிருக்கிறாளிவள். (அச்சுதனென்னும்) உடைமையை மங்கக்கொடாமைக்காக வந்ததே ! என்னும்.

( மெய்வேவாள் ) இவள்தான் ப்ரமத்தாலே கட்டிக்கொள்ளுகிறாள் அதுபின்னை ஸ்வகார்யம் செய்யாதொழிவானென்னென்னில்; அச்சுதன்முகத்தாலே வந்ததாகையாலே; "ஊவாக்நிஸ்ச" (முகாதிந்த்ரஸ்சாக்நிஸ்ச ) இறே. ( செந்தீயைத்தழுவி யச்சுதனென்னும்மெய்வேவாள் ) இவளுடைய அக்நிஸ்தம்பகமந்த்ர மிருக்கிறபடி. ( மெய்வேவாள் ) "தத்ஸ்ம்ருத்யாஹ்லாதஸம்ஸ்த்திதஃ" (தத்ஸ்ம்ருத்யாஹ்லாதஸம்ஸ்த்திதஃ) என்கிறபடியே, அவனுடைய ஸ்ம்ருதியாலே நனைந்திருக்கையாலே சுடமாட்டுகிறதில்லை; "பஸ்யாமிபத்மாஸ்தரணாஸ்த்ருதாநிஸீதாநி ஸர்வாணிதிஸாம்முகாநி" (பஸ்யாமிபத்மாஸ்தரணாஸ்த்ருதாநிஸீதாநி ஸர்வாணிதிஸாம்முகாநி) என்றானிறே ப்ரஹ்லாதன். "ஸீதோபவ" என்றானுமில்லை யிவர், "ஸீதோபவ'' என்றவள்தானிறே யிங்ஙனேசெய்கிறாள். வாயுபுத்ரனைத்தழுவுகை நாயகனுக்கும் நாயகிக்கும் பணியிறே விஸ்லேஷத்தில்; "பரிஷ்வங்கோஹநூமதஃ" (பரிஷ்வங்கோஹநூமதஃ) "வாயோரக்நிஃ" (வாயோரக்நிஃ) இறே.

(எறியுமித்யாதி) வீசுகிற குளிர்ந்தகாற்றைத்தழுவி. இதிறே ஆஶ்சர்யம்; விரஹிணிகளைச்சுடுமதிறேகாற்று. இக்காற்று மவனுடைய ப்ராணபூதமாயிருப்பதொன்றிறே, ஆகையாலே அதுவும் சுட்டதில்லை, “𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌦𑍍𑌵𑌾𑌯𑍁𑌰𑌜𑌾𑌯𑌤” (ப்ராணாத்வாயுரஜாயத) இறே. (என்னுடைக்கோவிந்தனென்னும்) “𑌨𑌜𑍀𑌵𑍇𑌯𑌂𑌕𑍍𑌷𑌣𑌮𑌪𑌿” (நஜீவேயம்க்ஷணமபி) என்கிறபடியே பிரிவில் பொறுக்கவல்லனே; அவனுண்மை பரார்த்தமாயன்றே யிருப்பதென்று சொல்லாநிற்கும். (என்னுடைக்கோவிந்தனென்னும்) கன்றுமேய்த்தவடிவோடே என்னோர்த்திநீர வணைக்கவந்தானென்னும். லௌகிகர்படியுமன்று, விரஹிணிகள் படியுமன்று; லௌகிகர் படியாகில் நெருப்புச்சுடவேணும், விரஹிணிகள் படியாகில் காற்றுச்சுடவேணும், இரண்டும் கண்டிலோமென்கை.

(வெறிகொள்துழாய்மலர்நாறும்) * கோவைவாயாளில் கலவியால்வந்த பரிமளம் பத்தெட்டுக்குளிக்கும் நிற்குமிறே, அத்தாலேயாதல்; வந்தேறிகழிந்தால் ஆத்மஸ்வரூபம் பகவதர்ஹமாயிறேயிருப்பது, அத்தாலேயாதல். அன்றிக்கே, காற்றோடேகலந்துவந்து புகுந்தணைந்தானென்று காரியத்தைக்கொண்டுகல்பித்தல்; “அன்றிமற்றொருபாயமென்னிவளந்தண்டுழாய்கமழ்தல்” என்னக்கடவதிறே.

(வினையுடையாட்டியேன்பெற்ற) இவளித்தனை யவகாஹித்தது நான்பண்ணினபாபமிறே. அநேகஜந்மசஞ்சிதமான புண்யபலத்தை பாபபலமாகச் சொல்லுகிறாளிறே யிப்போதை யிழவைப்பற்ற. பிரிவிலும் வடிவுதிருத்துழாய்நாறும்படி யவகாஹித்து, பின்பு போலிகண்டு ப்ரமிக்கும்படி ப்ரமமேயாய் விடுகைக்கடி, பாபத்தைப்பண்ணின என் வயிற்றிற்பிறப்பிறே. பகவத்விஷயத்திலவகாஹித்தவர்கள் பெற்றவர்களுக் காகார்களிறே, “அன்னையுமத்தனுமென்றடியோமுக்கிரங்கிற்றிலள்” என்னக்கடவதிறே. (செறிவளைமுன்கைச்சிறுமான்) இதுகிடீர்! இருக்கத்தகும்படி. இவள்வளைத்தழும்பவனுடம்பிலேகாண்கையன்றிக்கே, இவளுடம்பிலே அவனுடம்பில் திருத்துழாய்காணுமத்தனையாவதே. (சிறுமான்) முன்கையிலேசெறிந்த வளையையுடையவள். முன்பிருக்கும்படியாதல், பின்புமப்படியேயிருக்கத்தகுமவளென்னுதல். (சிறுமான்) இதுக்கெல்லாமாஶ்ரயமெங்குத்து, அதிமுக்தை. (செய்கின்றதென்கண்ணுக்கொன்றே) ஒன்றன்று, அநேகமென்கிறாள். நெருப்பைக்கட்டிக்கொள்வது, காற்றைத்தழுவுவது, திருத்துழாய் நாறுவதாகாநின்றாள். “லௌகிகை” என்று நிஶ்சயிக்கவொண்ணுகிறதில்லை நெருப்புச்சுடாமையாலே “ஸம்ஶ்லிஷ்டை” என்னவொண்ணாது போலியானகாற்றைத் தழுவுகையாலே, “விரஹிணி” என்னவொண்ணாது திருத்துழாய் நாறுகையாலே; ஆகையாலொன்றிலே வைக்கப்பட்டிருக்கிறதோவிவள்படி.....................*

## ஜீயர் அரும்பதம்.

மூன்றும்பாட்டு (அறியுமித்யாதி) "செய்கின்றதென்கண்ணுக்கொன்றே" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (இவளுடையவித்யாதி) "ஒன்றே" என்கிறவுகாரம்-பிரிநிலையிலேயாக்கி, எண்ணில்லையென்கிறுளென்றது)

ஸர்வரும் "தாஹகம்" என்றறியும்செந்தீயென்றர்த்தம் (ஒன்றுலவிக்கவித்யாதி) "செம்" என்றதினர்த்தம் (தாஹகமென்றது) இவள்தான் தாஹகமென்றறியுமென்றர்த்தாந்தரம். (இவள்தானுமித்யாதி) * செம்மைக்கர்த்தம் (மந்த்ரௌஷதேத்யாதி) செந்தீக்கச்சுதனோடே சாம்யமுண்டாயே ப்ரமிக்கவேணுமே, எவ்வாகாரத்தாலே சாம்யமென்ன; த்ரேதாபரிஹரிக்கிறுர் க்ரமேண (தேஜஸாமித்யாதிவாக்யத்ரயத்தாலே) "𑌅𑌪𑍂𑌰𑍍𑌵𑌰𑍂𑌪𑌸𑌂𑌸𑍍𑌥𑌾𑌨𑌂 𑌤𑍇𑌜𑌸𑌾𑌂 𑌰𑌾𑌶𑌿𑌮𑍂𑌰𑍍𑌜𑌿𑌤𑌮𑍍" (அபூர்வரூபஸம்ஸ்தாநம்தேஜஸாம்ராஶிமூர்ஜிதம்) இதிப்ரதமேஶ்லோ. பூர்வமேவலிகிதம். (பொருநீர்க்கடலித்யாதி) அலைபொராநின்றுள்ள நீரையுடையகடலானது நெருப்புக்கொளுந்தியெங்கும்விளங்குகிற ஜ்வாலைகளோடே நடப்பதுபோலவென்றர்த்தம். திவ்யாயுத விசிஷ்டமான வடிவுக்குப்போலியான வாகாரத்தாலே தழுவுகிறுளென்றபடி. மாணிக்கப்படி-ரத்நாங்கி.

ஆஶ்ரிதாந்நச்யாவயதீத்யச்யுத: என்கிற வ்யுத்பத்தியைப்பற்ற (உடைமையையித்யாதி)

வேவாதிருக்கைக்கு ஹேதுவை சதுர்த்தாவருளிச்செய்கிறுர். முந்தினது (அச்சுதன்முகத்தாலேயித்யாதி) இது - சாடு. தழுவும்படி வ்யாமோஹத்தைப்பண்ணினவனிது செய்யமாட்டாமையில்லையிறேயென்று ப்ரக்ருதார்த்தம். முகத்தாலே வந்தமைக்குப்ரமாணம் (முகாதித்யாதி) இரண்டாவது (இவளுடையவித்யாதி) இத்தால் - சப்தமாத்ரந்தானே போருமாயிற்று வேவாமைக்கென்றபடி. மூன்றுவது (தத்ஸ்ம்ருதீத்யாதி) "𑌸𑌤𑍍𑌵𑌾𑌸𑌕𑍍𑌤𑌮𑌤𑌿𑌃 𑌕𑍃𑌷𑍍𑌣𑍇 𑌦𑌶𑍍𑌯𑌮𑌾𑌨𑍋 𑌮𑌹𑍋𑌰𑌗𑍈𑌃। 𑌨 𑌵𑌿𑌵𑍇𑌦𑌾𑌤𑍍𑌮𑌨𑍋 𑌗𑌾𑌤𑍍𑌰𑌂 𑌤𑌤𑍍𑌸𑍍𑌮𑍃𑌤𑍍𑌯𑌾𑌹𑍍𑌲𑌾𑌦𑌸𑌂𑌸𑍍𑌥𑌿𑌤𑌃" (ஸத்வாஸக்தமதி:க்ருஷ்ணே தஶ்யமாநோமஹோரகை: । நவிவேதாத்மநோகாத்ரம் தத்ஸ்ம்ருத்யாஹ்லாதஸம்ஸ்தித:) இதிப்ரதமேஶ்லோஸப்ததஶே. தத்ஸ்ம்ருதியாலே சுடாதிருக்குமென்னுமதுக்கு ப்ரமாணம் (பஶ்யாமீத்யாதி) "𑌤𑌾𑌤𑍈𑌷 𑌵𑌹𑍍𑌨𑌿𑌃 𑌪𑌵𑌨𑍇𑌰𑌿𑌤𑍋𑌽𑌪𑌿 𑌨 𑌮𑌾𑌂 𑌦𑌹𑌤𑍍𑌯𑌤𑍍𑌰 𑌸𑌮𑌨𑍍𑌤𑌤𑍋𑌽𑌹𑌮𑍍" (தாதைஷவஹ்நி:பவநேரிதோபிநமாந்தஹத்யத்ரஸமந்ததோஹம்) இதிபூர்வார்த்தம், தத்ரைவப்ரஹ்லாத:. இவ்விடத்திலே - "𑌶𑌮𑌾𑌯𑌾𑌲𑌂 𑌜𑌲𑌂 𑌵𑌹𑍍𑌨𑍇𑌸𑍍𑌤𑌮𑌸𑍋 𑌭𑌾𑌸𑍍𑌕𑌰𑍋𑌦𑌯𑌃 । 𑌕𑍍𑌷𑌾𑌨𑍍𑌤𑌿𑌃 𑌕𑌲𑍇𑌰𑌘𑍌𑌘𑌸𑍍𑌯 𑌨𑌾𑌮𑌸𑌙𑍍𑌕𑍀𑌰𑍍𑌤𑌨𑌂 𑌹𑌰𑍇𑌃" (ஶமாயாலம்ஜலம்வஹ்நேஸ்தமஸோபாஸ்கரோதய:। க்ஷாந்தி:கலேரகௌகஸ்யநாமஸங்கீர்த்தநம்ஹரே:) என்றதநுசந்தேயம். நாலாவது (ஶீதோபவேத்யாதி) "𑌯𑌦𑍍𑌯𑌸𑍍𑌤𑌿 𑌪𑌤𑌿𑌶𑍁𑌶𑍍𑌰𑍂𑌷𑌾 𑌯𑌦𑍍𑌯𑌸𑍍𑌤𑌿 𑌚𑌰𑌿𑌤𑌂 𑌤𑌪𑌃। 𑌯𑌦𑌿 𑌵𑌾𑌸𑍍𑌤𑍍𑌯𑍇𑌕𑌪𑌤𑍍𑌨𑍀𑌤𑍍𑌵𑌂 𑌶𑍀𑌤𑍋 𑌭𑌵 𑌹𑌨𑍂𑌮𑌤𑌃" (யத்யஸ்திபதிஶுஶ்ருஷாயத்யஸ்திசரிதந்தப:। யதிவாஸ்த்யேகபத்நீத்வம்ஶீதோபவஹநூமத:) இதிஸுந்தரகாண்டேஸீதா. இங்ஙனேசெய்கிறுள் - தீயைத்தழுவாநின்றுளென்றபடி. இத்தால் - ஸ்வஶக்தியாலே வேவாதிருந்தாளென்றபடி. "செந்தீயைத்தழுவி" என்றதுக்குசாடு (வாயுபுத்ரணயித்யாதி) வாயுபுத்ரன்-அக்நியும்,

திருவடியும். வாயுபுத்ரனை நாயகன் தழுவினதுக்கு ப்ரமாணம் (பரிஷ்வங்கஇத்யாதி) அக்நிவாயுபுத்ரனென்னுமதுக்கு ப்ரமாணம் (வாயோரக்நியிறேயென்று)

(இதிறேயாஸ்சர்யமென்றது) "தண்" என்றதின் தாத்பர்யம். (விரஹிணிகளைச்சுடுமதிறே) என்றதுக்கு ப்ரமாணத்வேந "அறைகூயாமங்கடோறெரிவீசும்" இத்யாத்யநுசந்தேயம். சுடாமைக்கு ஹேதுவேதென்ன (இக்காற்றுமித்யாதி) ப்ராணபூதமாயென்றது - சாடு. ப்ராணமாயென்றும், ப்ராணுதத்பூதமாயென்றும். இதுக்குப்ரமாணம் (ப்ராணுதித்யாதி)

"என்னுடை" என்றதுக்குபாவம் (நஜீவேயமித்யாதி) "நஜீவேயம்க்ஷணமபிவிநாதாமஸிதேக்ஷணாம்" (நஜீவேயம்க்ஷணமபிவிநாதாமஸிதேக்ஷணாம்) இதிராமஃ. (அவனுண்மையென்றது) "கோவிந்தன்" என்றதின்பாவம். அதாவது - பூமிம்பாதீதி - கோவிந்தனென்றாய், பெருமாளென்றபடி. அர்த்தாந்தரம் (கன்றுமேய்த்தவித்யாதி) கோவிந்தன் - க்ருஷ்ணன். இத்தால் - பசுக்களை ரக்ஷிக்கையாலே பரோபகார சீலதையைச்சொல்லுகிறது; வாயுவுக்கும் பரோபகாரசீலதையுண்டே, அம்மாத்ரம் சாம்யம்கொள்வது.

கீழிரண்டுபாதங்களையு முபஸம்ஹரிக்கிறது (லௌகிகர்படியுமித்யாதி)

பிரிவிலேவடிவு திருத்துழாய்நாறும்படியென்னென்ன (கோவைவாயாளிலித்யாதி) இரண்டாம்ஹேது (வந்தேறியித்யாதி) ஸ்வாபதேசத்திலே. வந்தேறி - அவித்யாதிகள். ஆத்மஸ்வரூபத்தை நிஷ்கர்ஷித்தால், அதுபகவதர்ஹமென்று ஜ்ஞாதமாயிருக்கும்; அந்தபகவத்ஸம்பந்த ஜ்ஞாநத்தை - "நாறும்" என்று விவக்ஷிக்கிறதென்றபடி. கார்யத்தைக்கொண்டு கல்பித்தவிடமுண்டோவென்ன (அன்றிமற்றொரித்யாதி) பகவத்ஸம்பந்தஸூசகமென்றபடி. அவன்சம்பந்தமன்றிக்கேவேறொரு உபாயமேது இவளழகியதாய்க்குளிர்ந்த திருத்துழாய்சமழ்கைக்கென்றர்த்தம்.

ஹார்த்தபாவம் (இவளித்தனையித்யாதி) பிரிவிலும் ப்ரமிக்கும்படி யவகாஹித்தது புண்யபலமன்றோவென்ன (அநேகஜந்மேத்யாதி) "இவளித்தனையவகாஹித்தது" என்றவாக்யவிவரணம் (பிரிவிலுமித்யாதி) "வினையுடையாட்டியேன்" என்னும்படிதாயாரைநோவுபடுத்தவேணுமோ, பகவத்விஷயாவகாஹநத்தை த்தவிர்ந்தாலோவென்ன (பகவத்விஷயத்திலித்யாதி) "பெற்றவர்களுக்காகார்கள்" என்னுமதுக்குப்ரமாணம் (அன்னையுமித்யாதி) அடியோமானவெங்களுக்குத்தாயுந்தமப்பனுமென்று பேரிட்டிரங்கிற்றிலளென்றபடி திருமொழிமூன்றாம்பத்து ஏழாந்திருமொழி யேழாம்பாட்டு.

இதுகிட நிருக்கத்தகும்படியென்றது - இவள்கையும்வளையுமாயன்றோ விருக்கவடுப்பதுஅதின்றிக்கேயிருப்பதேயென்றபடிதாத்பர்யாந்தரமாதல், விவரணமாதல் (இவள்வளைத்தழும்பித்யாதி) இங்கே, "சிறுமான்" என்கிற ப்ரீதிகோபாதாநம்-லேககதோஷக்ருதம். இவளுக்கிப்போதுவளையுண்டோவென்ன (முன்பித்யாதி)

"ஒன்றே என்ற ஏகாரம் - ஸ்வரத்திலேயாய்; ஒன்றேயோஅநேகமென்றபடி. "ஒன்றே" என்றதுக்குதாத்பர்யாந்தரம் (லௌகிகையென்றித்யாதி) அதாவது "ஒன்றே" என்று - ஒருவகையிலேயடைக்கப்பட்டதோ அன்றேஎன்றபடி. கீழே (விரஹிணிகள்படியாகில் காற்றுச்சுடவேணுமென்றது) "தன்காற்று" என்றத்தைப்பற்ற. இங்கு (போலியானகாற்றைத்தழுவுகையாலேயென்றது) "காற்றைத்தழுவி" என்றத்தைப்பற்ற. க்ரமேணாந்வயஃ.....................................*

## நான்காம்பாட்டு.

ஒன்றியதிங்களைக்காட்டியொளிமணிவண்ணனேயென்னும்
நின்றகுன்றத்தினைநோக்கிநெடுமாலேவாவென்றுகூவும்
நன்றுபெய்யுமழைகாணினாரணன்வந்தானென்றாலு
மென்றினமையல்கள்செய்தாரென்னுடைக்கோமளத்தையே.

### ஆறாயிரப்படி.

(ஒன்றிய) அதிசீதள ப்ரபனான பூர்ணசந்த்ரனைக்காட்டி, இவனொளி மணிவண்ணனேயென்னும். நின்றகுன்றத்தினைநோக்கி, இந்த லோகத்தை யளந்தருளுகைக்காக மண்ணும்விண்ணும் நிறையமலர்ந்த வெம்பெருமானென்று நிஶ்சயித்து, நெடுமாலேவாவென்று கூப்பிட்டழைக்கும். * இலங்கொலிநீர் பெரும்பௌவம் மண்டியுண்டபெருவயிற்ற கருமுகிலைக்காணில், நாரணன்வந்தானென்று, மயில்கணின்றாலுமாபோலேயாலும். என்றிப்படியே பித்தேறப்பண்ணினானென்னுடைக்கோமளத்தையென்கிறாள்..........................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், உஜ்ஜ்வலமா யுத்துங்கமாய் ஶ்ரமஹரமான வடிவையுடையவனை யநுசந்தித்து, சந்த்ரனையும் மலையையும் மேகத்தையும்கண்டு அவனாகப்ரமியா நின்றாளென்கிறாள்.

ஒன்றிய-எல்லாக்கலைகளாலுமொன்றப்பட்ட. திங்களை-சந்த்ரனை. காட்டி-அருகுநின்றார்க்குக்காட்டி. "ஸாஹ்லாதிகலஹாஸம்" (ஶுத்தஸ்படிகஸங்காஶம்) என்கிறபடியே, ஒளி-ஒளியையுடைத்தான. மணி-ஸ்படிகமணிபோன்ற. வண்ணனே-வடிவையுடையவனே. என்னும்-என்னாநிற்கும். நின்ற-அந்தசந்த்ரபதத்தளவுமுயர்ந்துமுன்னேநிற்கிற. குன்றத்தினை-மலையை. நோக்கி-பார்த்து. நெடு-உன்னுடையவடிவுபோலேநெடிதான. மாலே-ஸ்நேஹத்தையுடையவனே. வா-சாபராதனைப்போலேதேங்கிநிற்கிறதென், கேளாமற்போனநீயானாக்கேட்டுப் புகுருகைக்குநிற்கிறது, வாராய். என்று-என்று. கூவும்-தன்ப்ரணயம்தோன்றஅழையாநிற்கும். நன்று-உருவினபயிர்கொந்தளிக்கும்படிநன்றாக. பெய்யும்-வர்ஷிக்கும். மழை-மேகத்தை. காணில்-காணில். நாரணன் - நாரசப்தவாச்யமான அப்புக்களையுடைய நாராயணன். வந்தான்-நம்முறுவுதல்தீரவந்தான். என்று-என்று. ஆலும்-மேகசந்நிதியில்மயிலாலிக்குமாப்போலே ஹர்ஷசப்தத்துடன்ஸஸம்ப்ரமந்ருத்தம்பண்ணாநிற்கும். கோமளத்தை - ம்ருதுஸ்வபாவையானபெண்பிள்ளையை. என்று-என்றுகாண். இன-இப்படிப்பட்ட. மையல்கள்-ப்ரமங்களை. செய்தார்-பண்ணினார்.

இவ்வவஸ்தையிலே இதுக்கெல்லாம் காலமுண்டோவென்றுகருத்து......*

### ஈடு - நான்காம்பாட்டு.

வ்யஸநஸஹையல்லாதவிவளை யிப்படிநோவுபடுத்துவதே யென்கிறாள்.

(ஒன்றியதிங்களைக்காட்டி) எல்லாக்கலைகளும் நிரம்பினசந்த்ரனை க்காட்டி யருகுநின்றவர்களுக்கு. (ஒளிமணிவண்ணனேயென்னும்) ஒளிமணிவண்ணனேயென்று சம்போதியாநின்றாள். புகையுடைத்தான ரத்நம்போலே குளிர்ந்தவடிவோடே யணைக்கவந்ததேயென்னும். இவனௌஜ்ஜ்வல்யத்தையுடைய ஸர்வேஶ்வரனென்று அவர்களுக்குச் சொல்லாநிற்குமென்றுமாம். "இம்மழுங்கல்சந்த்ரனவனுகையாவதென்" என்பர்களே (ஒளிமணிவண்ணனே) ஸாநிஸ்சிதம், இவனவனே யென்னுநின்றாள். (நின்றகுன்றத்தினைநோக்கி) இவ்வளவிலே யேதேனுமொருமலைவாராக்கண்ணுக்குத்தோற்றுமே; அத்தைப்பார்த்து. (நெடுமாலே வாவென்றுகூவும்) "வடிவில்பெருமையைக்கண்டவாறே, 'ஜகத்தையடையத்தன்றிருவடிகளின் கீழேயிட்டுக்கொள்ளும்படி பெரியவடிவையுடைய திருவுலகளந்தருளின ஸர்வேஶ்வரன்' என்றுநினைத்து, இங்ஙனே வாராயோ வென்றழைக்கும்" என்றுபிள்ளான்பணிக்கும்; அங்ஙனன்றிக்கே, ஜீயர் "மலைபேரமாட்டாதே, பலகால்வர்ஷிக்கையாலே யழுக்கற்றுப் பசுகுபசுகு என்றிருக்குமே; அத்தைக்கண்டு, 'அவன்ஸாபராதனுகையாலே லஜ்ஜித்து, வந்துகிட்டமாட்டாமையாலே பச்சைப்படாத்தையிட்டு முட்டாக்கிட்டுநிற்கிறான்' என்று, ஆனைக்கூட்டத்துக்குக் கதவிடிலன்றோ வுமக்குலஜ்ஜிக்கவேண்டுவது, இங்ஙனேபோரீரென்றுநின்றாள்" என்று.

(நன்றித்யாதி) கெட்டுமழையன்றிக்கே ப்ராப்தகாலத்தில் வர்ஷத்தைக்கண்டவாறே, நிர்ஹேதுகமாக சத்தைநோக்குமவன் வந்தானென்று, மயில்கள் வர்ஷாகாலத்திலே ஸஸம்ப்ரம ந்ருத்தம்பண்ணுமாபோலே ஸம்ப்ரமியாநின்றாள்.

(என்று) இப்படிகளைச்சொல்ல. (இனமையல்கள்செய்தார்) இப்படிபிச்சுக்களைப்பண்ணினார். இப்படிபிச்சேற்றிற்றென்றென்றுமாம் இவளெனக்கு பவ்யயாகைதவிர்ந்தபின்பு இதுக்கெல்லாம் காலமுண்டோவென்கிறாள். "என்சொல்லுமென்வசமுமல்லள்" என்றதெப்போது, இப்படியிவளைப் பிச்சேற்றிற்றெப்போது. (என்னுடைக்கோமளத்தையே) அதுதான்செய்யும்போது ஆஶ்ரயம்வேண்டாவோ. கலவியுங்கூடப்பொறுத சுகுமாரியைப்பிரிவு பொறுக்கப்பண்ணுவதே............*

## ஜீயர் அரும்பதம்.

நாலாம்பாட்டு. (ஒன்றியவித்யாதி) "என்னுடைக்கோமளத்தை-இனமையல்கள்செய்தார்" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (வ்யஸநஸஹையல்லாத வித்யாதி)

அருகுநின்றவர்களுக்கு - (காட்டி) என்றந்வயம். சம்போதநபக்ஷத்தில், "காட்டி" என்றது-கண்டென்றபடி. சந்த்ரனை, ஒளிமணிவண்ணனேயென்றது-சைத்யகுணசாம்யத்தாலே. "ஒளிமணிவண்ணனே" என்றசப்தம் - சம்போதந

மாம்போது, வாராயென்றத்யாஹார்யம். சம்போதநத்துக்கு ப்ரயோஜநம் (புகரையுடைத்தானவித்யாதி) ஒளிமணிவண்ணனென்று சொல்லாநிற்குமென்ற பக்ஷத்தில், அவதாரணத்துக்கு தாத்பர்யம் (இம்மழுங்கவித்யாதி)

வாரா-வந்து. இது-வார்த்தைப்பாடு. பிள்ளான் நிர்வாஹத்துக்கு - "'குன்றம்' என்றபத ஸ்வாரஸ்யத்துக்காக, 'நெடு' என்று-வடிவிற்பெருமையாய், 'மால்,' என்று-சர்வேஶ்வரனாய், திருவுலகளந் தருளினவனென்றபடி" என்றரும்பதாந்தரங்களில் நிர்வாஹம். "நெடுமால்" என்று-பெரியோனென்றபடி. "நெடுமை-சேஷித்வத்தாலேவந்தபெருமை" என்று - அப்பு அரும்பதத்தில் நிர்வாஹம்; "மால்-வடிவில்பெருமை" என்று பெரியவாச்சான்பிள்ளை. ஜீயர்நிர்வாஹத்துக்கு. "நின்ற" என்றபத ஸ்வாரஸ்யத்துக்காக, *நெடுமை-மிகுதியாய், "மால்" என்று-வ்யாமோஹமாய், மிக்கவ்யாமுக்தனென்றபடி. பேர-சலிக்க. பசுகுபசுகென்று-ஶ்யாமமாயென்றபடி. "நஜீவேயம்" என்னும்விஷயத்தைப் பிரிகையாலே அவன்சாபராதனாய்க்கொண்டு. "ஹ்ரீரேஷாஹி" என்றுலஜ்ஜித்தென்றபடி. பச்சைப்படாத்தை-பச்சைப்பச்சைவடத்தை. (நிற்கிறானென்று) என்றபுத்திபண்ணி. (ஆனைக்கூட்டத்துக்குக்கதவிடில்) என்றவாக்யத்துக்கு தாத்பர்யம் - "அதுக்குலஜ்ஜையுண்டானாலன்றோ வுமக்கும் லஜ்ஜையுண்டு" என்றொரு அரும்பதத்தில் நிர்வாஹம். ஆனைக்கூட்டம்= ஆனையினுடைய ஸம்ஶ்லேஷம். கூட்டம் - கூட்டரவு. (ஆனைக்கூடம்) என்றுபாடமாகில், ஆனைக்கூடம்-ஆனைகட்டுகிற சாலையாய், அதுக்குக் கதவிடிலன்றோவென்றபடி. "ஆனைக்கூட்டத்துக்குக்கதவிடில்-மைதுநாவரணமிடில். அதாவது-போகப்ரதிபந்தகம்பண்ணிலென்றபடி" என்றரும்பதாந்தரத்தில் நிர்வாஹம்.

(நன்றித்யாதி) உபகாரமும் கருமையும் குளிர்த்தியும் ஸாத்ருஶ்யம். "நன்று" என்றதுக்கர்த்தம் (கெட்டுமழையன்றிக்கேயென்றது) நிர்ஹேதுகமாக சத்தைநோக்குமவனென்றது - "நாரணன்" என்றத்தைப்பற்ற. ஆனும் - (ஸம்ப்ரமியாநின்றாள்)

(இப்படிகளைச்சொல்ல) சொல்லும்படி. இப்படிகளாவன - "ஒளிமணிவண்ணன், நெடுமால், நாரணன்வந்தான்" என்றுசொல்லுமவைகள். இப்படிபிச்சுக்களையென்றது-இப்படிசொல்லும்படி பிச்சுக்களைப்பண்ணினானென்றபடி. (இனமையல்கள்-என்று-செய்தார்) எப்போதுசெய்தானென் றிரண்டாமர்த்தம். ஏதது பபாதநம் (இவளெனக்கித்யாதி) என், காலமில்லையோவென்ன (என்சொல்லுமித்யாதி) கலவியுங்கூடப் பொருதவென்றது-காடாலிங்கநார்த்தமாக விட்டணைக்கவுங் கூடப்பொருதவென்றபடி.

ஒன்றிய-எல்லாக்கலைகளாலு மொன்றப்பட்ட. க்ரமேணாந்வய:............*

# ஐந்தாம்பாட்டு.

கோமளவான்கன்றைப்புல்கிக்கோவிந்தன்மேய்த்தனவென்னும்
போமிளநாகத்தின்பின்போயவன்கிடக்கையீதென்னு
மாமளவொன்றுமறியேனருவினையாட்டியேன்பெற்ற
கோமளவல்லியைமாயோன்மால்செய்துசெய்கின்றகூத்தே

## ஆறாயிரப்படி.

(கோமளம்) கோமளவான்கன்றுகளைப்புல்கி, இவைகோவிந்தன் மேய்த்தனவென்னும். போமிளநாகத்தின் பின்போயத்தைப்புல்கி ; இவ்விளமையும் மார்த்தவமுமழகு மெம்பெருமானோடுகலந்த திருவநந்தாழ்வானுக் கல்லதுகூடாது, ஆதலாலவன் கிடக்கையீதென்னும். அருவினையாட்டியேன் பெற்றகோமளவல்லியை மாயோன்மால்செய்து செய்கின்றகூத்து என்னைய்விளையுமென்றறி கிறிலேனென்கிறாள்................ ..*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அவனுடைய ரக்ஷணப்ரவ்ருத்திகளை யநுசந்தித்து, கன்றுகளையும் சர்ப்பத்தையும்கண்டு, அவன்ரக்ஷித்தவையென்றும் ரக்ஷணார்த்தமாகவந்து கிடக்கும் படுக்கையென்றும் சொல்லாநின்றாளென்கிறாள்.

கோமளம்-இளையவாய். வான்-பெரியவான. கன்றை-கன்றுகளை. புல்கி-தழுவி. கோவிந்தன்-பசுமேய்க்கமுடிசூடினகோவிந்தன். மேய்த்தன - * இனிதுகந்து மேய்த்தன. என்னும்-என்னாநிற்கும். போம்-ஸ்வைரசஞ்சாரமாகப்போகாநிற்கிற. இளம்-இளையதான. நாகத்தின்-நாகத்தின். பின்-பின்னே. போய் - " இதுபோனவிடத்திலேயவனையும்காணலாம் " என்றுநினைத்துப்போய். அவன்-அவன். கிடக்கை-கிடக்கிறபடுக்கை. ஈது-இது. என்னும்-என்னாநிற்கும். அரு-அநுபவித்துமுடிக்கவரிய. வினையாட்டியேன் - பாபத்தையுடையேனானநான். பெற்ற-இப்படியீடுபடுகைக்குறுப்பாகப்பெற்ற. கோமளம்-ம்ருதுஸ்வபாவையாய். வல்லியை-கொள்கொம்பிலாதகொடிபோலேதறைப்படுகிறவிவளை. மாயோன் - ஆஶ்சர்யகுணசேஷ்டிதங்களையுடையவன். மால்செய்து-பிச்சேற்றி. செய்கின்ற-பண்ணுகிற. கூத்து-கூத்தாட்டு. ஆமளவு-எவ்வளவாமென்று. ஒன்றும்-ஒன்றும். அறியேன்-அறிகிறிலேன்.

இவள்பாம்பின் வாயிலேயகப்பட்டு முடியுமாகிலவனுமவன் விபூதியுங்கூட முடியுமிறே யென்றுகருத்து. கிடக்கை-படுக்கை. " ஆண்கன்றை " என்றுபாடமாகவுமாம்..........................................................................*

## ஈடு - ஐந்தாம்பாட்டு.

இவளுக்கிவ் வவசாதமெவ்வளவாய் முடியக்கடவதென் றறிகிறிலேனென்கிறாள்.

(கோமளவான்கன்றைப்புல்கி) பருவத்தாலிளையதாய் வடிவால் பெருத்திருக்கிற கன்றுகளைத்தழுவி யென்னுதல், மாணிக்கம்போலேயறவிலக்ஷணமாய்ப்பெருத்திருக்கிற கன்றுகளைப் புல்கியென்னுதல். கோமளமென்று-மாணிக்கத்துக்கும், இளமைக்கும்பேர். ஆக, இப்படிதர்ஶநீயமுமாய் சுகுமாரமுமான கன்றுகளைத்தழுவி. க்ருஷ்ணன்பருவம்போலேயாயிற்றிவற்றின் பருவமிருக்கும்படி ; கிட்டினார்க்கு சாம்யாபத்தியிறே பலம். (கோவிந்தன்மேய்த்தனவென்னும்) " வத்ஸமத்யகதம்பாலம் " (வத்ஸமத்யகதம்பாலம்) என்றும், "கன்றுமேய்த்தினிதுகந்தகாளாய்" என்கிறபடியே, இவற்றினுடைய ரக்ஷணத்துக்கு முடிசூடினவனுகந்து

ரக்ஷித்தவையென்னும். "ப்ராப்தனானவனுணர்ந்துநோக்கினவை" என்று தோற்றுகிறதாயிற்றிவற்றின் வடிவில்பௌஷ்கல்யம். கன்றின்கழுத்தைக் கட்டிக்கொண்டவாறே அதுதுள்ளிப்போகாநிற்குமே, அவன்பரிகரமாயே யிருந்ததென்னும்.

அவ்வளவிலே யொருசர்ப்பம் போகாநிற்குமே, அதின்பின்னே போகாநிற்கும். இவளுடையபோக ப்ராவண்யமிருக்கிறபடி. (இளநாகம்) முக்தர்பஞ்சவிம்ஶதி வார்ஷிகராயிருப்பர்களிறே நிரந்தர பகவதநுபவத்தாலே, அவ்விளமையிதுவென்றிருக்கும். "கன்றைப்புல்கினாள்" என்றது, "இதின்பின்னேபோனாள்" என்னாநின்றது, இத்தனையுணர்த்தியுண்டோவென்னில்; அதோரிடத்தே நிற்கையாலே கழுத்தைக்கட்டிக் கொள்ளும்; இதோடாநிற்குமே அம்புக்கெட்டாதபடி, ஆகையாலே பின்னேபோகாநிற்கும், "அதுபுக்கவிடத்திலே அவன்வரவுதப்பாது" என்று, காண்கைக்காக அதின்பின்னேபோகாநிற்கும். அவன்றானும் பரமபோகியா யிருப்பானொருவனிறே. (அவன்கிடக்கையீதென்னும்) அதொருதூற்றிலே போய்ப்புகுமே, அத்தைநோக்கிக்கொண்டு கிடக்கும் அவன்வந்தால்காண்கைக்கு.

(ஆமளவொன்றுமறியேன்) ஜகதுபசம்ஹாரம்பிறக்கப் புகுகிறதோ, அறிகிறிலேன். "சர்ப்பம்" என்று மீளமாட்டுகிறிலள், இதென்னாய் விளையக்கடவதென்கிறாள். * பாம்போடொருகூரையிலே பயின்றாற்போலேயிறே திருத்தாயார்க்கிருக்கிறது. இவளையிழக்கவே ஜகத்காரணமானவனைக்கிடையாது; காரணமில்லாமையாலே கார்யம் தன்னடையேயில்லையாமிறே. (அருவினையாட்டியேன்பெற்ற) இவளுக்கிங்ஙனேயொருபுத்திபிறந்து படுகிறதுநான் பண்ணினபாபமிறே. அன்றியே, "நெடுங்காலமும் கண்ணனீண்மலர்ப்பாதம் பரவிப்பெற்ற" என்கிறபடியே, செய்துமுடிக்கவொண்ணாத புண்யங்களைப்பண்ணிப்பெற்ற சுகுமாரையான விவளையென்றுமாம். (பெற்ற) "பிறந்திட்டாள்" என்கிறபடியே, அக்கரையளாய் இவள்தனக் கலப்யலாபமா யிருக்கிறபடி. (கோமளவல்லியை) கேவலம்வல்லியல்ல, கோமளவல்லியாயிற்று. உபக்நத்தோடே சேர்க்கவேண்டும்பருவம் பிள்ளைப்பருவம். (மாயோன்) தன்னைக்கண்டால் தந்தாமையறியாதபடி பண்ணவல்ல ப்ரணயித்வகுணத்தை யுடையவள். (மால்செய்து) பிச்சேற்றி. (செய்கின்றகூத்து) அடிக்கிற ஆட்டம் "ஆமளவொன்றுமறியேன்" என்றந்வயம்.........*

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு. (கோமளமித்யாதி) "ஆமளவொன்றுமறியேன்" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை (இவளுக்கித்யாதி)

“ கோமளம் ” என்று-இளமையாய், “ வான் ” என்று-பெருமையாகை யாலே, இரண்டுக்கு மவிரோதேநார்த்தம் ( பருவத்தாலித்யாதி ) “ மேய்த்தன ” என்றபன்மைக்குச்சேர, “ கன்றை ” என்றவேகவசநம்-ஜாத்யபி ப்ராயமென்கி ருர் ( கன்றுகளைத்தழுவியென்று ) உக்தார்த்த த்வயத்துக்கும் நியாமகம் ( கோம ளமென்றித்யாதி ) கோமளசப்தம்-மாணிக்யவாசியாம்போது தர்ஶநீயத்தையும், இளமையாம்போது ஸௌகுமார்யமுமாக்கி, இரண்டர்த்தத்தையும்கூட்டி நிகமிக் கிருர் ( ஆகவென்றுதொடங்கி ) சுகுமாரமுமானவென்றது - “ கோமளம் ” என் றதுக்கு மூன்ருமர்த்தமாதல். இளையதான கன்றுகளைத்தழுவுகைக் கடியேதென்ன ( க்ருஷ்ணன்பருவமித்யாதி ) இவற்றுக்குக்ருஷ்ணன் பருவம்வருகைக்கடியேதெ ன்ன ( கிட்டினர்க்கித்யாதி )

க்ருஷ்ணன்மேய்த்தானே, அவனும்கன்றுகளுமொத்தபருவமாயிருக்குமோ வென்ன ( வத்ஸமத்யேத்யாதி ) மத்யகதமென்றது - மேய்த்ததுக்குப்ரமாணம். ( வத்ஸ, பாலம்; கன்று, காளாயென்றது ) ஒத்தபருவத்துக்கு ப்ரமாணம். “ [illegible] ” ( ஸததர்ஶததாதத்ரக்ருஷ்ணமாதோஹரேகவாம் । வத்ஸமத் யகதம்பாலம்நீலோத்பலதளச்சவிம் ) இதுபஞ்சமேம்ஶே சப்ததஶே அக்ரூரஉ. ( கன்றுமேய்த்தினிதுகந்தகாளாயென்றும் ) கன்றுகளைமேய்த்து மிகவுமுகந்த இ ளகிப்பதித்த பருவத்தையுடையவனே யென்றுமித்யர்த்தஃ. திருநெடுந்தாண்டகம் பதினும்பாட்டு. கோவிந்தன் மேய்த்தனவாகையாலே - “ வான்கன்று ” என்று விவக்ஷித்துபாவம் (ப்ராப்தனுனவனித்யாதி) “ கோவிந்தன்மேய்த்தன ” என்றது க்கு வெறுப்பாகதாத்பர்யாந்தரம் ( கன்றின்கழுத்தையித்யாதி ) துள்ளிப்போகா நிற்குமேயென்றது - “ கோமளவான் ” என்றதின்தாத்பர்யம். அவனோடுமா போலேயிதுவு மோடாநின்றதென்றுகருத்து.

சர்ப்பத்தின்பின்னே போகைக்குஹேதுவை ரஸோக்தியாகவருளிச்செய்கி ருர் ( இவளுடையவித்யாதி ) போகம்-சர்ப்பத்தினுடலும், அநுபவமும். “ இளநா கம் ” என்றதுக்கு-திருவநந்தாழ்வானுக ப்ரமிக்கிருளென்று விவக்ஷித்து, இவ்விள மைக்குபாவம் ( முக்தரித்யாதி ) தடஸ்த்தசங்கையை யநுவதித்து பரிஹரிக்கிருர் ( கன்றையித்யாதி ) பின்னேபோகிற தெதுக்காகவென்ன ( அதுபுக்கவிடத்திலே யித்யாதி ) அப்படியவன் வரவுதப்பாதோவென்ன ( அவன்ருனுமித்யாதி ) பரம ஞனபோகியை யுடையவனென்றும், பரமனை போகியென்று மிரண்டர்த்தம். “ ஈது ” என்றதுக்குபாவம் ( அதொருநூற்றிலேயித்யாதி )

தாத்பர்யாந்தரம் (சர்ப்பமென்றித்யாதி) சர்ப்பத்தைத்தழுவாதிருக்க, “எ ன்னுய்விளையக்கடவது ” என்பானென்னென்ன (பாம்போடித்யாதி) சர்ப்பத்துட னே யொருக்ருஹத்திலே வசிப்பாரைப்போலே யித்யர்த்தஃ. திருமொழி பதினெ ராம்பத்து “ மாற்றமுள ” என்கிறதிருமொழி மூன்ரும்பத்து, “ தூங்கார் ” இத் யாதி. ஜகதுபசம்ஹாரமாம்படி யென்னென்ன ( இவளையித்யாதி )

பிச்சேறுகிற விவளதன்ருே பாபமென்ன ( இவளுக்கித்யாதி ) “ அருவினை யேன் ” என்றதுக்கு புண்யமாகவர்த்தாந்தரம் ( நெடுங்காலமுமித்யாதி ) நானு ண்டாக்கினவென்னுதே “ பெற்ற ” என்கிறதுக்குபாவம் ( பிறந்திட்டாளித்யாதி) ( பெற்ற ) “ நிதிபெற்ற ” என்னுமாபோலே. “ கோமளவல்லி ” என்றதுக்கு ( சுகுமாரையான ) என்ருேரார்த்தஞ்சொல்லி, இளம்பருவ மென்றர்த்தாந்தரம் ( உபக்ரத்தோடேயித்யாதி )

கிடக்கை-படுக்கை. ஆமளவொன்றுமறியேன்-எவ்வளவாமென்றொன்று மறிகிறிலேன். "செய்கின்றகூத்து-ஆமளவொன்றுமறியேன்" என்றந்வயமென்றபடி..........................................................................*

# ஆறும்பாட்டு.

கூத்தர்குடமெடுத்தாடிற்கோவிந்தனாமெனாவோடும்
வாய்த்தகுழலோசைகேட்கின்மாயவனென்றுமையாக்கு
மாய்ச்சியர்வெண்ணெய்கள்காணிலவனுண்டவெண்ணெயீதென்னும்
பேய்ச்சிமுலைசுவைத்தார்க்கென்பெண்கொடியேறியபித்தே.

## ஆறாயிரப்படி.

(கூத்தர்) கூத்தர்குடமெடுத்தாடில், "கோவிந்தனல்லன்காண்." என்றாலும், ஆங்காணென்னாவோடும்; அன்றியே[illegible] யொழிந்தவாறேதளரும். 'அழகியகுழலோசைகேட்கி லிவளைப்பெறவொண்ணாது" என்று கேளாததொருபடி காத்துச்செல்லாநிற்கச்செய்தே, எங்கேனுமோரிடத்திலே பின்னையும் லப்தமானவாறே, அடியேன் மாயவனென்றோடும்; அவனன்றியேயொழிந்தவாறே மோஹிக்கும். பின்னையும், ஆய்ச்சியர் வெண்ணெய்கள்காணில், அவனுண்டவெண்ணெயீதென்னும். * மாய்த்தலெண்ணிவாய்முலைதந்த பேய்ச்சியைமாய்த்தவிச்செயல்கிடை[illegible]சிவளையிப்பாடுபடுத்துகிறதென்கிறாள்........................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அவனுடைய மநோஹரசேஷ்டிதங்களை யநுசந்தித்து, அவற்றுக்குப்போலிகண்டு ப்ரமியாநின்றாளென்கிறாள்.

கூத்தர்-கூத்தாடுமவர்கள். குடம்-குடம். எடுத்து-எடுத்து. ஆடில்-ஆடினார்களாகில். கோவிந்தன்-கோஸம்ருத்தியையுடையனாகையாலே செருக்கு மிக்குக்கூத்தாடுகையே ஸ்வபாவமாகவுடைய க்ருஷ்ணன். ஆம்-ஆம். எனா - என்று. ஓடும்-காண்கைக்கோடாநிற்கும். வாய்த்த-நன்றாய்நெஞ்சைவருத்தும். குழலோசை-குழலோசை. கேட்கில்-கேட்டாளாகில். மாயவன்-இடைப்பெண்களுடைய ப்ரணயரோஷமாறும்படி தன் தாழ்ச்சிவைத்தூதும் குழலோசையையுடைய ஆஸ்சர்யபூதனான க்ருஷ்ணன். என்று-என்று. மையாக்கும் - மோஹியாநிற்கும். ஆய்ச்சியர்-இடைச்சிகள்கையிலே. வெண்ணெய்கள்-வெண்ணெயை. காணில்-கண்டாளாகில். அவன்-அவன். உண்ட-அமுதுசெய்த. வெண்ணெய் - வெண்ணெயோடுஸஜாதீயம். ஈது-இது. என்னும்-என்னாநிற்கும். பேய்ச்சி-பூதனையுடைய. முலை-முலையை. சுவைத்தார்க்கு-ப்ராணனோடேசுவைத்துத்தம்மைமேலோகத்துக்குக்கொடுத்தமஹோபகாரகர்க்கு. கொடி-கொடிபோலேமெல்லியவடிவையுடைய. என்-என். பெண்-பெண்பிள்ளை. ஏறிய-தலைமண்டையிடும்படிகொண்ட. பித்து - பிச்சிருந்தபடி...........*

## ஈடு - ஆரும்பாட்டு.

தன்மகள் பிச்சுக்கு நிதாநத்தையும் அதடியாகவந்தபிச்சு தன்னையும்சொல்லுகிருள்.

(கூத்தர்குடமெடுத்தாடில்) இவள்ப்ரக்ருதி அறிந்திருக்கையாலே "இவளைக்கிடையாது" என்று கூத்துவிலக்கிப்போலேகாணும்கிடப்பது. இடையர் செருக்குக்குப்போக்குவிட்டாடுவதொருகூத்தாயிற்று-குடக்கூத்தாகிறது. விளைவதறியாதே வழிப்போக்கர் புகுந்தாடாநிற்பர்களே, அத்தைக்கண்டு (கோவிந்தனுமெனுவோடும்) இக்குடக்கூத்தாடும்போது கோஸம்ருத்தியையுடைய க்ருஷ்ணனைசவேணுமென்றுகாணவோடும். "இரந்துதிரிகிறவிவர்களவனுகையாவதென்" என்பர்களே (ஆமெனுவோடும்) அவன்க்ருஷ்ணனேயென்று காணவோடும்.

(வாய்த்தகுழலோசைகேட்கில்) "விசேஷஜ்ஞர், அவிசேஷஜ்ஞர்" என்று வாசியின்றிக்கே எல்லாரையுமொக்க ஈடுபடுத்தும்குழலின் நல்லிசைவந்து செவிப்படில். (மாயவனென்றுமையாக்கும்) "நடங்குகேள்வியிசை" என்னக்கடவதிறே அவன்றன்னை. அதவா, "பகலெல்லாம் பசுக்களின்பின்னேபோனேன், பித்ராதிகளுக்குப்பரதந்த்ரனேன், பிரிந்தேன், ஆற்றேன், * ஒருபகலாயிரமூழி" என்றுற்போலேசொல்லி சாந்த்வநம்பண்ணிக்கொண்டுவந்து தோற்றுமவனென்று, அவன்குழலிலேவைத்துச்சொல்லும் தாழ்ந்தசொற்களை நினையாமோஹிக்கும்.

(ஆய்ச்சியர்வெண்ணெய்கள்காணில்) "ப்ராஹ்மணிகள் ஸ்பர்ஶித்தவெண்ணெயிது" என்றால் கொள்ளாள், முடைநாற்றம் மிக்கவெண்ணெய்கள்காணில். (அவனுண்டவெண்ணெயீதென்னும்) களவுகாணப்புக்கு வாயதுகையதாக வகப்பட்டபோது சேஷித்தவெண்ணெயோடே ஸஜாதீயமானவெண்ணெயீதென்னும்.

இவளிப்படிகலங்குகைக்கு நிதாநமென்னென்னில் (பேய்ச்சிமுலைசுவைத்தார்க்கு) அவன்முன்பே யொரு உபகாரத்தைப்பண்ணிவைத்தான், அதிலேதோற்றவன்றுதொடங்கி இவள் பிச்சேறத்தொடங்கினள். தாயுங்கூட வுதவாதசமயத்திலே பூதனைவந்து முலைகொடுக்க, அவ்வளவிலேயுணர்த்தியுண்டாய் அவளைமுடித்துத்தன்னைநோக்கித்தந்தானே; அவ்வுபகாரத்திலேதோற்று அன்றுதொடங்கி யிவள்பிச்சேறினள். "பூத்தருபுணர்ச்சி, புனல்தருபுணர்ச்சி, களிறுதருபுணர்ச்சி" என்றிவைபுணர்ச்சிக்குஹேது. அதாவது - எட்டாதகொம்பிலேநின்றதொருபூவையாசைப்பட்டால் இவன்தன்னைப்பேணுதேயிவளாசையைமுடித்துக்கொடுக்கை, "இவன்தன்னைப்பேணுதே நங்நினைவைமுடித்தானே" என்று அதுக்காகத்தன்னைக்கொடுக்கை - பூத்தருபுணர்ச்சி. ஆற்றிலேயழுந்துகிற இவளைத்தான் புக்கேறவிட்டதுக்காகத் தன்னைக்கொடுக்கை - புனல்தரு

புணர்ச்சி. அசிந்திதமாக வானையின்கையிலே யகப்பட்டவளை மீட்டுக் கொடுத்ததுக்காகத் தன்னைக்கொடுக்கை - களிறுதருபுணர்ச்சி. இவை யொன்றுமல்ல, அவன் தன்னை நோக்கினதுக்கு இவள் தன்னை யெழுதிக் கொடுக்கிறாள். (என்பெண்கொடி) அவர்களில் வ்யாவ்ருத்தி. நிருபாதிக ஸ்த்ரீத்வத்தையுடையவள். (ஏறியபித்து) இவள்கொண்டபிச்சு.........*

## ஜீயர் அரும்பதம்

ஆரும்பாட்டு (கூத்தரித்யாதி) பிச்சுக்குநிதாநம்-பேய்ச்சிமுலைசுவைத்தது. சேஷமெல்லாம்-பிச்சுக்கள்.

"ஆடில்" என்றயதிசப்தார்த்தம் ( இவள்ப்ரக்ருதியித்யாதி ) விலக்கிப்போலே - விலக்கியிருந்தாப்போலே. இக்கூத்தர்டிறு லிவளைக்கிடையாமைக்கு ஹேதுவையருளிச்செய்கிறார் ( இடையரித்யாதி ) இடையர்குடமெடுத்தாடிலென்னுதே: " கூத்தர் " என்றுவிசேஷித்ததுக்குபாவம் (விளைவதறியாதேயித்யாதி) " கோவிந்தன் " என்றதுக்கு " விஜ்ஞாஹே " (வித்ர்லாபே) என்கிறதாதுவை யுட்கொண்டர்த்தம் ( இக்குடக்கூத்தாடுமித்யாதி )

வ்யதிதையாயிருக்கிறவள் பாட்டுக்கேட்டுத்திரிகிறாளன்றேயென்ன; " கேட்கில் " என்கிறயதிசப்தார்த்தம் ( விசேஷஜ்ஞரித்யாதி ) போக்யதாசாம்யத்தாலே " மாயவன் " என்று மோஹிக்குமென்றபடி. ஆனாலவன் குழலோசைபோலே போக்யனாயிருக்குமோவென்ன (நடங்குகேள்வியிசையித்யாதி) கேட்டாரையீடுபடுத்தும் கேள்வியையுடைய காநமித்யர்த்தஃ. " குழல் - வாய்த்தவோசை " இத்யந்வயஃ. வாய்த்த-நன்றான. மாயவன்-ஆஶ்சர்யபூதன். மாயவனுடையகுழலோசையென்று மையாக்குமென்றர்த்தாந்தரம் (அதவாபகலெல்லாமித்யாதி) இப்போது "மாயவன்" என்றதுக்கு - வ்யாமோஹமுடையவனென்று சப்தார்த்தம். தாழ்ந்த சொற்கள் - நீசோக்திகள். நினையா - நினைத்து. முந்தினது-அவனுக்குப்போலியானதுகொண்டு. இரண்டாவது - அவனுடையபேச்சுக்குப்போலியானதுகொண்டென்று கண்டுகொள்வது. மையாக்கும் - மோஹியாநிற்கும்.

"ஆய்ச்சியர்வெண்ணெய்கள்" என்றதுக்கு வ்யாவர்த்யம் ( ப்ராஹ்மணிகளித்யாதி ) அவனுண்டுவிட்டதென்னவொண்ணாது; அவனுண்டுசேஷித்ததென்னவொண்ணாது, காலாந்தரமாகையாலே யதுவுமறுபடிபந்நமென்று விவக்ஷித்தவிரோதேநார்த்தம் ( களவுகாணவித்யாதி ) " அவனுண்டு சேஷித்தவெண்ணெயோடு ஸஜாதீயமான வெண்ணெயைக்காணி லவனுண்டு சேஷித்தவெண்ணெயென்னும் " என்று பெரியஜீயரருளிச்செய்வர், சம்பந்தி ஸத்ருஶபதார்த்தங்களைக்காணில் சம்பந்திபதார்த்தங்களென்று ப்ரமிக்கிறதுக்குச்சேரவேண்டுகையாலே. " (சேஷித்த வெண்ணெயோடு ஸஜாதீயமான) வெண்ணெயை யந்தசேஷித்த (வெண்ணெயீதென்னும்) ஈதென்று ப்ரமியாநிற்குமென்று கூட்டிக்கொள்வது " என்று மருளிச்செய்வர்.

கீழ்வாக்யவிவரணம் (தாயும்கூடவித்யாதி) அவன் தன்னைநோக்கினதுக்குப்பிச்சேறவேணுமோவென்ன; இதுலோகவ்யாவ்ருத்தமென்கிறார் (பூத்தருவித்யாதிவாக்யஷட்சத்தாலே) உபபாதகம் (அதாவதிக்யாதி) இவையொன்றுமல்லவென்றது - இவர்களெல்லாரும் தங்களைரக்ஷித்த வுபகாரத்திலேதோற்றுத் தங்களையெ

ழுதிக்கொடுப்பர்கள்; இவளுத்தமநாயகியாகையாலே, அவன் தன்னை நோக்கினதுக் குத் தன்னையெழுதிக்கொடுக்கிறுளென்றபடி. விவரணம் (கிருபாதிகேத்யாதி) பெண்கொடி-கொடிபோலே ம்ருதுவானவடிவையுடையவென்பெண்பிள்ளை.

என்பெண்கொடி-பேய்ச்சிமுலைசுவைத்தார்க்கு - பித்து-ஏறி - கூத்தரித்யாரப்யாந்வயஃ. ........................................................*

# ஏழாம்பாட்டு.

ஏறியபித்தினோடெல்லாவுலகுகண்ணன்படைப்பென்னும்
நீறுசெவ்வேயிடக்காணினெடுமாலடியாரென்றோடும்
நாறுதுழாய்மலர்காணினாரணன்கண்ணியீதென்னும்
தேறியுந்தேறாதுமாயோன்றிறத்தனளேயித்திருவே.

## ஆறாயிரப்படி.

(ஏறிய) எத்தனையேனும் பித்தேறினாலும், எல்லாவுலகுகண்ணன் படைப்பென்னும்; இதொன்றும் தப்பாமல்சொல்லும். த்ரவ்யமேதேனுமாகிலு மூர்த்வமாகவிடக்காணில், நெடுமாலடியாரென்றோடும். ததீயவஸ்துஸாத்ருஶ்யத்தாலே ததீயமல்லாதவற்றையும் ததீயமாகக்கருதிப்பிதற்றுகிறவிவள் அவனுக்கஸாதாரண சேஷபூதமான திருத்துழாயைக் கண்டாலென்படும். பலசொல்லியென்னினி, தேறியும்தேறாதும் மாயோன்றிறமல்லதறியா ளித்திருவென்கிறாள்.........................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அவனுடையபரத்வ சிஹ்நங்களை யநுசந்தித்துக் கலங்கினபோதோடு, தேறினபோதோடு வாசியற வவன்படிகளிலே யுள்ளாயிராநின்றாளென்கிறாள்.

ஏறிய-மிகைத்த. பித்தினோடு-ப்ரமத்தோடேகூடியிருக்கச்செய்தே. வேதாந்தவித்துக்கள் சொல்லுமாபோலே "க்ருஷ்ணஏவஹிலோகாநாமுத்பத்திஃ" (க்ருஷ்ணஏவஹிலோகாநாமுத்பத்திஃ) என்று, எல்லாவுலகு-சர்வலோகமும். கண்ணன்-க்ருஷ்ணனுடைய. படைப்பு-ஸ்ருஷ்டி. என்னும்-என்னாநிற்கும். நீறு-பஸ்மத்தைக்கொண்டு. செவ்வே-செவ்விதாக. இட-இட. காணில்-கண்டாளாகில். "த்ரவ்யமின்னது" என்றறியாதே ஊர்த்வபுண்ட்ரமேயுடையாளமாக, நெடுமால்-ஆஶ்ரிதர்பக்கலத்யந்தவ்யாமுக்தனான சர்வேஶ்வரனுடைய. அடியார்-அடியார். என்று-என்றுப்ரமித்து. ஓடும்-அவர்களிருந்தவிடத்தைநோக்கியோடாநிற்கும். நாறு-பரிமளோத்தரமான. துழாய் - திருத்துழாயின். மலர்-பூந்தாரை. காணில்-காணில். நாரணன்-சர்வஸ்வாமியானநாராயணனுடைய. கண்ணி-மாலை. ஈது-இது. என்னும்-என்னாநிற்கும். இப்படி, தேறியும்-தேறினவளவிலும். தேறாதும்-கலங்கினவளவிலும். இத்திரு- "நாதந்ருஸிம்ஹம்க்ஷோப்யதே" (நாத்யர்த்தம்க்ஷுப்யதே) என்றும்,

" தத்ஸ்ய ஸத்ருஸம் பவேத் " (தத்தஸ்யஸத்ருஸம்பவேத்) என்றுமென்னும் படிமிகவும் [illegible] அந்தத்திருவைப்போலன்றியே பிரிந்ததசையில் ஸத்ருஸவஸ் துக்களேயும் சம்பந்திபதார்த்தங்களேயும்கண்டு கலங்குமித்திருவானவள். மாயோன்-ஆஸ்சர்யமானபரத்வசிஹ்நங்களேயுடையவன். திறத்தனள் - திறத்திலேயாகாநின்றாள்.

அநபாயிநியான சம்பத்தாயிருக்கை யிருவர்க்கு மொக்குமிறே,...........*

## எடு - ஏழாம்பாட்டு.

தேறினபோதோடுதேறாதபோதோடுவாசியற எப்போதுமவன்றிறமல்லதறியாளேயென்கிறாள்.

( ஏறியவித்யாதி ) இவள்பிச்சேறிச்சொல்லும் வார்த்தைகேட்கைக்கு, மைத்ரேயாதிகளைப்போலே தொடர்ந்துதிரியவேண்டிக்காணும் திருத்தாயார்க்கிருக்கிறது. " விஷ்ணோஸ்ஸகாஸாதுத்பூதம் ஜகத் " (விஷ்ணோஸ்ஸகாஸாதுத்பூதம்ஜகத்) என்றுநின்றாள். ப்ராஹ்மணர்பித்தேறினு மோத்துச்சொல்லுமாபோலே யிவ்விஷயத்தில வாசனையிருக்கிறபடி. " க்ருஷ்ண ஏவ ஹி லோகாநாமுத்பத்திரபி சாப்யய: " ( க்ருஷ்ண ஏவஹிலோகாநாமுத்பத்திரபிசாப்யய:) என்கிறவிதிலொருகாலும் கலக்கமில்லை, இவள்பிச்சேறியிருக்கிறதசையிலே, இஜ்ஜகத்தெல்லாம் க்ருஷ்ணனாலேஸ்ருஷ்டமாயிற்றென்னும்.

(நீறுசெவ்வேயிடக்காணில்) ப்ராயஸ்சித்தப்ரகரணங்களிலே ப்ரஹ்மஹத்யாதிபாபங்களைப்பண்ணினார்க்கு ப்ராயஸ்சித்தமாகவிதித்தத்ரவ்யத்தை தாமசபுருஷர்கள் தரித்துப்போந்தார்கள், அந்தத்ரவ்யத்தைப் பாராதே செவ்வைமாத்ரத்தைக்கொண்டு ப்ரமிக்குமாயிற்றிவள், அது பொடிபட்டுக்கிடக்கிறதென்றறிகிறிலள். அவர்கள்செவ்வேயிடுவர்களோ வென்னில் அதுவுமன்றிக்கே (இதுவுமன்றிக்கே) மசகப்ராயராயிருப்பார்கள் தரிப்பர்களிறே. அல்பசாமயமமையுமாயிற்றிவளுக்குப்ரமிக்கைக்கு. இந்த ஊர்த்வதாமாத்ரத்தையேகொண்டு " உத்ருதாஸி வராஹேண " (உத்ருதாஸிவராஹேண) இத்யாதியில் சொல்லுகிறபடியே, என்றுமொக்கபகவத்ஸம்பந்தம் மாறாததேசத்தில் மண்ணைக்கொண்டு தரித்துப்போருமவர்களாகக்கொண்டுப்ரமித்து, இவர்கள் சர்வேஸ்வரனடியார் என்றோடாநிற்கும். அதஸ்மிம் ஸ்தத்புத்தியிருக்கிறபடி.

( நாறுதுழாய்மலர்காணில் ) அதல்லாதத்தையதாகப்ரமிக்கிறவள் அதுதானானவற்றைக்கண்டால்விடாளிறே. அவன்சிரசாவஹித்து அடியார்க்குக்கொடுக்குமதிறேயதுதான். அதாவது - ஸ்ரீசடகோபனுக்குச் சாத்துகையிறே. * சுடர்முடிமேலும் தாளிணைமேலும் புனைந்ததண்ணந் துழாயிறே. பரிமளத்தையுடைத்தானதிருத்துழாயைக்காணில், உபயவிபூதியுக்தனான சர்வேஸ்வரனைஸ்வர்யத்துக்கிட்ட தனிமாலையிதென்னும்.

(தேறியுமித்யாதி) தேறியுமென்கிறது - துழாய்மலர் காணிலென்றத்தைதேராதுமென்கிறது-நீறுசெவ்வேயிடக்காணிலென்றத்தை. அன்றிக்கே, * கோவைவாயாளிற்படியும், இத்திருவாய்மொழியிற்படியுமாகவுமாம் (மாயோனித்யாதி) பிறந்தஜ்ஞாநம் கலக்கத்துக்குடலாம்படி பண்ணவல்ல வாஸ்சர்யபூதன். அவனிடையாட்டத்திலாளித்திரு. (இத்திரு) அநபாயிநியானவவளோடொக்க விகல்பிக்கலாம்படி காணுமிவள் படிகள்தான். அவளுக்கவனுத்தேஸ்யன், இருவருமுத்தேஸ்யரானசேர்த்தியுண்டிவளுக்கு.......................................................................*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு. (ஏறியபித்தித்யாதி) "தேறியும்தேறாதுமாயோன்திறத்தனள்" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (தேறினபோதோடித்யாதி)

(இவள்பிச்சேறியிதி) ஸ்ரீபராசரபகவான் தெளிந்திருந்து வசிஷ்ட்டபுலஸ்த்யவரதாந லப்தபரதேவதா பாரமார்த்யஜ்ஞாநத்தோடே சொன்னவார்த்தை கேட்க, மைத்ரேயனுக்குத் துவளவேண்டினாற்போலே யிருக்கிறதிவளுக்கும் இவள்பிச்சேறிச்சொல்லும் வேதாந்தரஹஸ்யமான வார்த்தைகேட்கைக்கென்றபடி. அவன்தெளிந்திருந்துசொல்லும் வார்த்தையாயிற்றிவள் பிச்சேறிச்சொல்லுகிறது. மைத்ரேயாதிகளுக்குச்சொன்ன வார்த்தையேதென்ன (விஷ்ணோரித்யாதி) ப்ரதமமேம்ப்ரதமே. மைத்ரேயன் ஸ்ரீபராசரபகவானை. ப்ரஸ்நம்பண்ணினது - "யந்மயஞ்ச ஜகத் ப்ரஹ்மந் யதஶ்சைதச்சராசரம் । லீநமாஸீத்யதா யத்ர லயமேஷ்யதி யத்ர ச" (யந்மயஞ்சஜகத்ப்ரஹ்மந்யதஸ்சைதச்சராசரம் । லீநமாஸீத்யதாயத்ரலயமேஷ்யதியத்ரச) என்கிறஸ்லோகம். அதுக்குத்தரம்- "விஷ்ணோஸ்ஸகாஶாதுத்பூதம் ஜகத்தத்ரைவ ச ஸ்திதம் । ஸ்திதிஸம்யமகர்த்தாஸௌ ஜகதோঽஸ்ய ஜகச்ச ஸঃ" (விஷ்ணோஸ்ஸகாஶாதுத்பூதஞ்ஜகத்தத்ரைவசஸ்த்திதம். ஸ்திதிஸம்யமகர்த்தாஸௌஜகதோஸ்யஜகச்சஸঃ) என்கிறஸ்லோகம். இவளும் ஸ்ரீபராசரபகவானைப்போலே சொல்லுகிறாளென்றபடி. "ஸகாஶாத்" என்றதுக்கு மூன்றர்த்தம். அதாவது - "காஶ்ருதீப்தௌ" என்று-தீப்திவாசகமாய், ப்ரகாஶரூப சங்கல்பஜ்ஞாந விசிஷ்டாத்விஷ்ணோருத்பூதமென்னுதல்; "ஸோபித்யாய ஶரீராத் ஸ்வாத்" (ஸோபித்யாயஶரீராத்ஸ்வாத்) என்கிருக்கையாலே, ப்ரகாசமயசரீரவிசிஷ்டாத்விஷ்ணோঃ என்னுதல்; இதுக்கும் கீழ்ச்சொன்னதேதாது; ஸகாஶாத்-காஶஸஹிதாத் என்றபடி; அன்றிக்கே, ஸகாஶமென்று-சமீபமாய், விஷ்ணு சமீபாத் என்னுதல். விஷ்ணுபதம் - பூர்வார்த்தத்வயத்தில், பஞ்சம்யந்தம்; த்ருதீயார்த்தே, ஷஷ்ட்யந்தம். ப்ராந்திசமயத்தில் தத்த்வகதநங்கூடுமோவென்ன (ப்ராஹ்மணரித்யாதி) "விஷ்ணோஸ்ஸகாஶாத்" (விஷ்ணோஸ்ஸகாஶாத்) என்றாற்போலேசொல்லாதே "கண்ணன்படைப்பு" என்பானென்னென்ன (க்ருஷ்ண ஏவஹீத்யாதி) ராஜஸூயேபீஷ்மঃ. "க்ருஷ்ணஸ்ய ஹி க்ருதே பூதமிதம் விஶ்வம் சராசரம்" (க்ருஷ்ணஸ்யஹிக்ருதேபூதமிதம்விஸ்வஞ்சராசரம்) இத்யுத்தரார்த்தம். சப்தார்த்தம் (இவள்பிச்சேறியித்யாதி)

நிஷித்தமான நீற்றையிடலாமோவென்ன (ப்ராயஸ்சித்தேத்யாதி) த்ரவ்யத்தை - சாம்பலை. "ஶ்ரேயம்க்ருத்வா மஹாபாதகாநாம் ஸர்வகாஸமநாம் வீக்ஷா

ஸ்தேயம்க்ருத்வா... ” ( ஸ்தேயம்க்ருத்வாகுருதாராம்ஶ்ச கத்வா ஸுராம்பீத்வாப்ரஹ்மஹத்யாஞ்சக்ருத்வா । பஸ்மச்சந்நோபஸ்மஶய்யாஶயாநோ ருத்ரத்யாயீமுச்யதேஸர்வபாபை: ) இதிஶாதாதபஸ்ம்ருதௌ ப்ராயஶ்சித்தப்ரக ரணோக்த மநுசந்தேயம். பொடிபட்டென்கிறவிது-சாடு. தூளியாயென்றும், பரா ஹதமாயென்றும். அவர்கள் செவ்வேயிடுவர்களோவென்றது - திர்யக்புண்ட்ரமா கவன்றோ விடுவர்களென்றபடி. அதுவுமன்றிக்கே - நியமேநதிர்யக்காகவுமன்றிக் கே. மசகப்ராயராயிருப்பார்கள் - அஜ்ஞராயிருப்பார்கள் ; “ பஸ்மத்தை திர்யக் காகவும், ம்ருத்தை ஊர்த்வபுண்ட்ரமாகவும் தரிக்கவேணும் ” என்றறியாதவர்க ளென்றபடி. சாம்யமுண்டாயே ப்ரமிக்கவேண்டாவோவென்ன (அல்பசாம்யமித் யாதி) அல்பசாம்யமேதென்ன ( இந்தஊர்த்வதேத்யாதி ) நெடுமாலடியார்சரிக்கி றதரவ்யமின்னதென்று காட்டாநின்றுகொண்டு, அவர்களாக ப்ரமிக்குமென்கிறார் ( உத்த்ருதாஸீத்யாதி ) ஜ்ஞாநாதிகரானவிவர் அவர்களை - “ நெடுமாலடியார் ” எ ன்னலாமோவென்ன ( அதஸ்மிந்நித்யாதி ) பித்தேறியருளிச்செய்த வார்த்தை யென்றபடி. அதஸ்மிம்ஸ்தத்புத்தியென்று - “ எல்லாவுலகுகண்ணன்படைப்பு ” என்றதில் வ்யாவ்ருத்திசொன்னபடி.

பூர்வப்ரதிகோடியாகபாவம் (அதல்லாதத்தையித்யாதி ) பகவத்ஸம்பந்த முடையதல்லாதவற்றைவிட்டுத் திருத்துழாய்சொல்லுகிறது அதினுடையகௌர வ்யதையைப்பற்றவென்கிறார் ( அவன்சிரசேத்யாதி ) அடியார்களில்வைத்துக்கொ ண்டாழ்வார் ப்ரதாநராகையாலே “ நமக்கன்றிநல்கான் ” என்றத்தைக்கடாக்ஷித் தருளிச்செய்கிறார் ( அதாவதித்யாதி ) அத்தை, தான்சூடவாசைப்படுகிறாளென்று கருத்து. சிரசாவஹிக்கிறதுக்கு ப்ரமாணம் ( சுடர்முடிமேலுமென்றது ) அடியார் க்குக்கொடுக்குமதுக்கு ப்ரமாணம் ( தாளிணைமேலுமித்யாதி ) ஈஶ்வரனுக்காழ் வார், திருவடிகளிறே. சப்தார்த்தம் (பரிமளத்தையித்யாதி) தத்புருஷஸமாஸார் த்தம் ( உபயவிபூதீத்யாதி )

கோவைவாயாளிற்படி - ஜ்ஞாநகார்யம். இத்திருவாய்மொழியிற்படி - ப்ர மகார்யம். த்விதீயார்த்தத்துக்குச்சேரவர்த்தம் (பிறந்தவித்யாதி) இடையாட்டத்தி லாள் - இடையாட்டத்திலே யிருக்குமவள். “ திரு ” என்றதுக்குபாவம் ( அந பாயிநியித்யாதி ) “இத்திரு” என்கிறவை லக்ஷண்யமேதென்ன ( அவளுக்கித்யாதி) தேறியும் - தெளிந்தவளவிலும். தேறாதும் - கலங்கினவளவிலும் - திறத்தனள் - தத்விஷயகவ்யாபாரவதீத்யர்த்த:.

ஏறியபித்தினோடு - ஏறினப்ரமத்தோடே யிருக்கச்செய்தே. “ மிகைத்தப்ர மத்தோடேகூடியிருக்கச்செய்தே ” என்றுவாயில் சப்தார்த்தம். படைப்பு-ஸ்ருஷ் டி. க்ரமேணாந்வய:......................................................................*

---

## எட்டாம்பாட்டு.

திருவுடைமன்னரைக்காணிற்றிருமாலைக்கண்டேனேயென்னு
முருவுடைவண்ணங்கள்காணிலுலகளந்தானென்றுதுள்ளும்
கருவுடைத்தேவில்களெல்லாங்கடல்வண்ணன்கோயிலேயென்னும்
வெருவிலும்வீழ்விலுமோவாக்கண்ணன்கழல்கள்விரும்புமே.

## ஆறுயிரப்படி.

(திருவுடை) ஸ்ரீமான்களான ராஜாக்களைக்காணில், "ஏவம்விதையான ஸ்ரீமத்தையானது ஸ்ரிய:பதியான சர்வேஶ்வரனுக்கல்லது கூடாதாதலாலிவன் ஸ்ரிய:பதியே" என்றுநிஶ்சயித்து, திருமாலைக்கண்டேனே யென்னும். அழகியநீலமேகங்கள் குவளைகள் காயாமலர்கள்கடலென்னுமிவற்றைக்காணில், உலகளந்தானென்றுதுள்ளும். கருவுடைத்தேவில்களெல்லாம் கடல்வண்ணன் கோயிலேயென்னும் ; அங்கேபோய்ப்புக்கு அவனன்றியே யொழிந்தவாறே யேங்கிவிழும். பின்னையும்தவிராதே கண்ணன்கழல்கள் விரும்புமென்கிறாள்.................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம். அவனுடைய ஐஶ்வர்யாபி ரூப்யாதாரணீயத்வங்களை யநுசந்தித்து, போலிகண்டாலும் சர்வாவஸ்த்தையிலு மவனையே விரும்பாநின்றாளென்கிறார்.

திரு - பூர்ணமானஐஶ்வர்யத்தை. உடை - உடைய. மன்னரை - ராஜாக்களை. காணில் - காணில். திருமாலை - பரிபூர்ணவிபூதிகனான ஸ்ரிய:பதியை. கண்டேனே - கண்டேனே. என்னும் - என்னாநிற்கும். கடலும் காயாவும் கருவிளையும்தொடக்கமான, உரு - விலக்ஷணரூபங்களை. உடை-உடையவாயுள்ள. வண்ணங்கள்- பதார்த்தங்களை. காணில் - காணில். உலகளந்தான் - திருவுலகளந்தருளினபோது ஒருநாளேவளர்ந்தருளின செவ்வியையுடைய ரூபசோபையையுடையவன். என்று - என்று. துள்ளும் - சம்ப்ரமித்தாடாநிற்கும். கரு-ப்ரதிமாகர்ப்பத்தை. உடை- உடைத்தான. தேவில்கள் - தேவக்ருஹங்கள். எல்லாம் - எல்லாம். ஆஶ்ரிதராத்ரிக்கைக்காக, கடல் - கடல்போலேதர்ஶநீயமான. வண்ணன் - வடிவையுடையஸர்வேஶ்வரன். கோயிலே - ஸந்நிதிபண்ணினகோயில்களே. என்னும் - என்னாநிற்கும். வெருவிலும் - பந்துசந்நிதியாலஞ்சினபோதோடு. வீழ்விலும் - ஆர்த்தியாலே மோஹித்தபோதோடுவாசியற. ஓவாள் - இடைவிடாதாளாய்க்கொண்டு. கண்ணன் - க்ருஷ்ணன். கழல்கள் - திருவடிகளை. விரும்பும் - ஆதரியாநிற்கும்.

வெருவுதல் - அஞ்சுதல். வீழ்தல் - மோஹித்தல்..............................*

## ஈடு - எட்டாம்பாட்டு.

எட்டாம்பாட்டில்-அத்யந்ததுர்த்தசை வர்த்தியாநின்றாலு மிவள் ததேகபரையா யிருக்குமென்கிறாள்.

(திருவுடைமன்னரைக்காணில்) குறைவற்ற வைஶ்வர்யங்களையுடையரான ராஜாக்களைக்காணில், ஸ்ரிய:பதியை யொருபடிகாணப்பெற்றேனேயென்னும். நாதமுநிகள், ராஜாசாமந்தன்றலையிலே அடியையிட்டு ஆனைக்கழுத்திலே புக்கபடியைக்கண்டு, "சர்வேஶ்வரன் ப்ரஹ்மாதிகள் தலையிலேயடியிட்டு பெரியதிருவடியை மேற்கொள்ளும்படி யிதுவாகாதே" என்றுமோஹித்தாரென்று ப்ரசித்தமிறே ; ராஜாசபரிகரமாக கங்

கைகொண்ட சோழபுரத்தேறப் போகச்செய்தே, பெரியமுதலியார் மன்னனார் திருவடிகளிலே சேவித்திருக்கச்செய்தே பெண்பிள்ளைவந்து, "நம்மகத்திலேயொருகுரங்கு மிரண்டுவில்லிகளுமொரு பெண்ணுமாக வந்து புகுந்தார்கள்" என்றவாறே, "பெருமாளு மிளையபெருமாளும் பிராட்டியும் ஐந்த்ரவ்யாகரண பண்டிதனும்" என்றுபுத்திபண்ணிப்பின்றொடர்ந்துபோய், முன்னேபோய், "போகிறார்கள், போகிறார்கள்" என்னக்கேட்டுக் கிழைவாசலிலே சென்றவாறே, "இப்படிபோகிறவர்களைக்கண்டிகோளோ" என்றுவாசலி லவர்களைக்கேட்க, அவர்கள் "கண்டிலோம்" என்ன, அதுவேஹேதுவாகத் திருநாட்டுக்கெழுந் தருளினாரிறே. (உருவுடைவண்ணங்கள்காணில்) நீலம், குவளை, காயா, உருப்பெறவெழுதினசித்ரம், இவற்றைக்காணில், நிறம்மாத்ரத்தையும் மாம்ஸசக்ஷுஸ்ஸுக்கு விஷயமான சௌலப்யத்தையுங்கொண்டு, குறைகுண நிருபணம்பண்ணாதே யெல்லார்தலையிலும் திருவடிகளைவைத்தவனென்று, பசுவினருகே கட்டிவைத்தகன்று துள்ளுமாபோலே ஸஸம்ப்ரமவ்யாபாரத்தைப் பண்ணாநிற்கும்.

(கருவுடையித்யாதி) கல்புதைத்துக்கிடக்கும் ஸ்த்தாநங்கள்காணில், அவையெல்லாம் பெரியபெருமாள் பள்ளிகொண்டருளுகிறகோயிலேயென்னும். இவற்றுக்குள்ளீடு சர்வேஸ்வரனாகையாலே, இவற்றைகருவென்கிறார். "திசைமுகன்கருவுள்வீற்றிருந்து படைத்திட்டகருமங்களும்" என்கிறபடியே. (கருவென்று-கர்ப்பத்துக்கும், கர்ப்பாதாரத்துக்கும்பேர். ப்ரதிமையையுடைத்தான, தேவில்கள் - தேவாலயங்களெல்லாம்கண்டால்.)

(வெருவிலுமித்யாதி) தெளிவுடையளாய் பந்துக்களைக்கண்டஞ்சியிருக்கும்போதோடு அறிவழிந்துமோஹித்த சமயத்தோடுவாசியற, இடைவிடாதே க்ருஷ்ணன்திருவடிகளை விரும்பாநிற்கும். இதென்று மேகரூபமாயிருக்கும். மாறிவருவது மோஹமுமுணர்த்தியும், ஸ்த்தாயியாயிருப்பதிதுவே. இத்தால் - பகவத்ப்ராவண்ய மிவர்க்குசத்தா ப்ரயுக்தமென்கை.......................................................*

## ஜீயர்அரும்பதம்.

எட்டாம்பாட்டு. (திருவுடையித்யாதி) "வெருவிலும் வீழ்விலுமோவாக் கண்ணன் கழல்கள்விரும்பும்" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (அத்யந்தேத்யாதி)

"திருவுடை" என்கிறவிடத்தில்மதுப்பு-பூமாவிலேயென்கிறார் (குறைவற்றவித்யாதி) கண்டேனென்னாதே, "கண்டேனே" என்றதுக்குபாவம் (ஒருபடிகாணப்பெற்றேனேயென்றது) இப்படி சத்ருஸதர்ஸநத்தாலே ப்ரமித்தாருண்டோவென்ன (நாதமுநிகளித்யாதி) சம்வாதாந்தரம் (ராஜாவித்யாதி) பெரியமுதலியார்-நாதமுநிகள்.

"உருவுடைவண்ணங்கள்" என்றது-அழகுடைய நிறத்தையுடைத்தான நீலம்முதலான வஸ்துக்களாதல், உருப்பெறவெழுதின சித்ரங்களாதல். இரண்டர்த்தத்தையுங்கூட்டி யருளிச்செய்கிறார் (நீலங்குவளையித்யாதி) உருப்பெற-அழகுபெற. முந்தினவர்த்தத்தில், வண்ணங்கள்-நிறமுடையவஸ்துக்கள்; இரண்டாமர்த்தத்தில், வண்ணங்கள்-வர்ணகலாபங்கள். அன்றிக்கே, ஏகார்த்தமாகவுமாம். நீலம்-நீலமணி. குவளை-கருநெய்தல்.

தேவதாந்தர ப்ரதிமைகளைக்கண்டால் த்ருணீகரித்திருக்குமவராகையாலே (கற்புதைத்துக்கிடக்கும்ஸ்த்தாநமென்கிறார்) தேவதைகளை - "கரு" என்னலாமோவென்ன (இவற்றுக்குள்ளீடித்யாதி) அப்படி அந்தர்யாமியா யிருக்குமோவென்ன (திசைமுகனித்யாதி) உள்ளேபதார்த்தாந்தரத்தை யுடைத்தானதுக்கு-கருவென்றுபேர். தேவில்-தேவாலயம்.

வெருவு-பயமும், தெளிவும். வீழ்வு-கலக்கம். "ஒவாக்கண்ணன் கழல்கள் விரும்பும்" என்றதுக்குபாவம் (இதென்றுமித்யாதி) பலிதம் (இத்தாலித்யாதி)

"கருவுடை-ப்ரதிமாகர்ப்பத்தையுடைத்தான" என்றுரையில் சப்தார்த்தம். க்ரமேணாந்வய:.....................................................................................*

## ஒன்பதாம்பாட்டு.

விரும்பிப்பகவரைக்காணில்வியலிடமுண்டானேயென்னும்
கரும்பெருமேகங்கள்காணில்கண்ணனென்றேறப்பறக்கும்
பெரும்புலவாநிரைகாணிற்பிரானுளனென்றுபின்செல்லு
மரும்பெறற்பெண்ணினைமாயோனலற்றியயர்ப்பிக்கின்றானே.

### ஆறாயிரப்படி.

(விரும்பி) அபரிமித பகவத்ஜ்ஞாநவிசிஷ்டராய் அதனை பகவத்வ்யதிரிக்த விஷயங்களில் நிரபேக்ஷராயிருப்பாரைக்காணில், ஏவம்வித நைரபேக்ஷ்ய மெம்பெருமானுக்கல்லது கூடாதாதலால் வியலிடமுண்டானேயென்று சாதரமாகச்சொல்லும். கரும்பெருமேகங்கள்காணில், அடியேன் கண்ணனென்று தன்னுடைய ப்ரீத்யதிசயமே சிறகாகக்கொண்டேறப்பறக்கும்; தனக்கெட்டாதொழிந்தவாறே தளரும். பின்னையும் லப்தஸம்ஜ்ஞையாய், அதிஸம்ருத்தமான பசுநிரைகாணில், அடியேன் பிரானுளனென்று அவற்றின்பின்செல்லும். இப்படி யென்னுடைய வரும்பெறற்பெண்ணினைமாயோன் தன்னையலற்றியயர்க்கும்படி பண்ணாநின்றானென்கிறாள்.................................................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஸ்ரிதர்பக்கலவனுடைய வுபகாரகத்வத்தை யநுசந்தித்து, தத்ஸம்பந்திகளைக்கண்டு வாய்புலற்றி மோஹிக்கும்படி பண்ணினானென்கிறாள்,

பகவரை-ஜ்ஞாநாதிகுணபூர்த்தியாலே ஆஸ்ரிதரைஸ்வாபிமாநாந்தர்க்கதரா க்கிரக்ஷிப்பாராயுள்ள பகவத்ரூபராரமோக்ஷாஸ்ரமிகளை. காணில்-காணில். விரும்பி-அத்யாதரத்தைப்பண்ணி. வியல்-விஸ்தீர்ணமான. இடம்-ஜகத்தை. உண்டானை-வயிற்றிலேவைத்துநோக்கின சர்வரக்ஷகனை, இதுநிஸ்சிதம். என்னும்-என்னாநிற்கும் கரும்-கறுத்து. பெரு-பெருத்த. மேகங்கள்-மேகங்களை. காணில்-காணில். கண்ணன்-ஜ்ஞாநாஜ்ஞாநவிபாகமறத்தன்வடிவைக்காட்டியுபகரிக்கும்க்ருஷ்ணன். என்று-என்று. ஏற-மேலேயெழ. பறக்கும்-பறக்கத்தேடாநிற்கும். பெரும்-அதிப்ரபூதமாய். புலம்-தர்ஸநீயமான. ஆநிரை-பசுத்திரளை. காணில்-கண்டாளாகில். பிரான்-இவற்றைவயிறுநிறையமேய்த்துரக்ஷிக்கும்மஹோபகாரீகன். உளன் - கூடவருகிறுர். என்று-என்று. பின்-அவற்றின்பின்னே. செல்லும்-போகாநிற்கும். பெறல்-பெறுதற்கு. அரும்-அரியளான. பெண்ணினை-இப்பெண்ணே. மாயோன்-இப்படியுபகாரசேஷ்டிதங்களையுடையவாஸ்சர்யபூதன். அலற்றி - வாய்விட்டலற்றும்படிபண்ணி, அயர்ப்பிக்கின்ருன்-அறுக்குமேலேமோஹிக்கும்படிபண்ணுகின்ருன்.

பகவர்-சந்யாசிகள்.........................................................*

## ஈடு - ஒன்பதாம்பாட்டு.

பெறுதற்கரியவிவள், தன்னையே வாய்வெருவி மோஹிக்கும்படி பண்ணுகின்ருனென்கிருள்.

( விரும்பிப்பகவரைக்காணில் ) ( பகவரைக்காணில்-விரும்பி ) ஜ்ஞாநாதிகுணங்களால் பூர்ணராய் இதரவிஷயங்களில் விரக்தராயிருக்கும் சந்யாசிகளைக்காணி லாதரித்து; ப்ரளயாபத்திலே ஜகத்தையடைய வயிற்றிலேவைத்துநோக்கி, ரக்ஷ்யவர்க்கத்தினுடைய ரக்ஷணத்தைப்பண்ணுகையாலேவந்த நைரபேக்ஷ்யம்தோற்ற விருக்கிறசர்வேஸ்வரனென்னும். வியலிடம்-விஸ்மயநீயமானபூமி. * நின்றகுன்றத்தினை நோக்கி " நெடுமாலே " என்றுப்ரமித்தவோபாதிகாணும் சேஷபூதனை சேஷியாகக்கொண்டு ப்ரமிக்கிறவிதுவும். ( கரும்பெருமேகமித்யாதி ) கறுத்துப்பெருத்து ஸ்ரமஹரமான மேகத்தைக்கண்டவாறே, அவ்வடிவையுடையக்ருஷ்ணனென்று, பறப்பாரைப்போலேயிருக்க சம்ப்ரமியாநிற்கும். மேகதர்ஸநத்தில் சிறகெழும்போலேகாணும். மேகத்தைக்கண்டவாறே ஒருபக்ஷபாதமுண்டாகக் கடவதிறே. ராஜேந்த்ரசோழனிலே திருவாய்க் குலத்தாழ்வாரொன்றொருத்தருண்டு, அவர்வர்ஷாவிலே " பயிர்பார்க்க " என்றுபுறப்பட்டு மேகதர்ஸநத்திலே மோஹித்துவிழுந்தார் ; இவர்விழுந்தத்தைக்கண்டு நின்றகுடிமகனோடிவந்து அவரையெடுத்துக்கொண்டுவந்து க்ருஹத்திலேவிட்டு, " இவர்ப்ரக்ருதி யறிந்திருந்து மிந்நாளிலேயிவரை வயல்பார்க்கப் புறப்படவிடுவாருண்டோ " என்ருன்.

( பெரும்புலமித்யாதி ) அளவுபட்டிருக்கையன்றிக்கே பெருத்து தர்ஸநீயமாயிருக்கிற பசுநிரைகளைக்காணில். என்நசையறிந்துவந்து

தவுகைக்கர்கக்கடைக்குழையிலே வாராநின்றானென்று, அவற்றுக்குப்பி ன்பேறப் போகாநிற்கும். அன்றிக்கே, அவற்றின் திரளுக்குள்ளே யவனை யும் காணலாமென்று, அவற்றின்பின்னே போகாநிற்குமென்றுமாம்.

(அரும்பெறல்பெண்ணினை) "உஹுதாதவஸாராஉ" (மஹு தாதபஸ்ாராம) என்றுதம்மைப்பெற்றவர்கள்பட்ட வருத்தமல்லகிடீர் நானிவளைப்பெறப்பட்டது, * அடியிலே நெடுங்காலமும் தபஸ்ஸுபண் ணியிறே யிவளைப்பெற்றதிவள். (மாயோன்) "ஶுரவஃகிம்கரிஷ்யந்தி" (குரவஃகிங்கரிஷ்யந்தி) என்றுபெற்றவர்களைக் கைவிடும்படிபண்ணவல் லவன், (அலற்றியயர்ப்பிக்கின்றான்) எப்போதும்தன்னையே வாய்வெ ருவும்படிபண்ணி, அவ்வளவிலுமன்றிக்கே மோஹிக்கும்படி பண்ணுகின் றான்.........................................................................*

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு. (விரும்பியித்யாதி) "அருப்பெறற்பெண்ணினை" என் றுதொடங்கி மேலெல்லாம் கடாக்ஷித்தவதாரிகை (பெறுதற்கரியவித்யாதி)

ஜ்ஞாநசக்த்யாதி குணபூர்த்தியுள்ள விடத்திலேயிறே-பகவச்சப்தம்வர்த்தி ப்பது; இனித்தான் "ஹெயெர்குணாதிஹிஸ்நா" (ஹேயைர்குணாதிபிர்வி நா) என்கையாலே, பகவச்சப்தம்-வைராக்யத்தையுமர்த்தாத் சொல்லிற்றாயிறே; இவைகளுள்ளது சந்யாசிகளுக்காகையாலே: பகவச்சப்தத்தாலே - சந்யாசிக ளைச்சொல்லுகிறது. பகவரை-பகவான்களை. "உண்டான்" என்றபூத நிர்த்தேசத் துக்குபாவம் (நைரபேக்ஷ்யந்தோற்றவென்றது) சேஷபூதரான சந்யாசிகளை சேஷியென்னலாமோவென்ன (நின்றகுன்றத்தினையித்யாதி) அதாவது-சேஷபூ தனை சேஷியென்றுசொன்னது-அதஸ்மிம் ஸ்தத்புத்தியாகையாலே, ஐக்யம்வாரா து; "நின்றகுன்றத்தினைநோக்கி" என்றபோது-அசித்துக்கு மீஸ்வரனுக்கும் பே தமுண்டாயிருக்கச்செய்தேயும், ஐக்யம்ப்ரமசார்யமானாற்போலே யிதுவும் ப்ரம கார்யமென்றபடி.

ப்ரமஹுரமானவென்றது - "மிஹசேசநே" என்கிறதாதுவிலே மேகசப் த முத்பந்நமாகையாலே. பறக்கும்போது சிறகுவேண்டாவோவென்ன (மேகதர் ஶநத்திலித்யாதி) "பறக்கும்" என்றதுக்குரசோக்தி (மேகத்தையித்யாதி) மேகத்தைக்கண்டு கண்ணனுகப்ரமித்ததுக்கு சம்வாதம் (ராஜேந்த்ரேத்யாதி) ராஜேந்த்ரசோழன்-ஒருக்ராமவிசேஷம். குடிமகன்-குடியானவன்.

அளவுபட்டு-அல்பமாய். "புலம்" என்றது-புலப்படுமதென்றதாய், தர்ஶ நீயமான வென்றபடி. (என்தலைசயறிந்து) என்க்குத்தன்பக்கல் ப்ரேமமுண்டோ வென்றறிந்து, கடைக்குழை-எல்லார்க்கும்பின்னே வருகிறதிரள், "பின்செல்லு ம்" என்றதுக்கர்த்தத்வயும். முந்தினது-முன்னேயிருந்தவள், "க்ருஷ்ணன்பசுக் களின்பின்னே வாராநின்றான்" என்றுபின்னே போகாநிற்குமென்று, இரண்டா வது - "நடுவேயிருப்பான்" என்றுபின்னே போகாநிற்குமென்று. இரண்டாமர் த்தம் - "உளன்" என்றதுக்குச்சேரும். த்விதீயார்த்தத்திலே, பின்செல்லுகையா வது-அவற்றுடனே செல்லுமென்றபடி, நடுவேசெல்லுமென்றபடி,

அவர்களைப்பற்றத் தனக்குவ்யாவ்ருத்தியேதென்ன (அடியிலேயித்யாதி) "பாதம்பரவிப்பெற்ற" என்றத்தைப்பற்ற (அடியிலேயென்றது) இது - சாடு. ஆதியிலே, திருவடிகளிலேயென்றும்.

"ஹததாபஸாராமஹதாவாபிகருணா।ராஜாதிஸமயேநாஸிமாந்தஶிவாமநௌ:" (மஹதாதபஸாராமமஹதாசாபிகர்மணு। ராஜ்ஞாதஸாதேநாஸிலப்தோம்ருதமிவாமனாः) இத்யாரண்யகாண்டே ஷட்ஷஷ்டிதமோராமம் ப்ரதிலக்ஷ்மணः. "குரவஸ்நாகுதாவ ... வீக்ஷ்ந ... குரவஸ்கிம்கரிஷ்யந்திதக்தாநாம்விரஹாக்நிநா" (குருணுமக்ரதோவக்தும்கிம்ப்ரவீஷிநःக்ஷமம் । குரவஃகிங்கரிஷ்யந்திதக்தாநாம்விரஹாக்நிநா) இதிபஞ்சமேம்லே பரஸ்பரம்கோபிகாः. க்ரமேணுர்வயः......................*

# பத்தாம்பாட்டு.

அயர்க்கும்சுற்றும்பற்றிநோக்கு மகலவேநீணுக்குக்கொள்ளும்
வியர்க்குமழைக்கண்டுளும்பவெவ்வுயிர்க்கொள்ளுமெய்சோரும்
பெயர்த்தும்கண்ணுவென்றுபேசும்பெருமானேவாவென்றுகூவும்
மயற்பெருங்காதலென்பேதைக்கென்செய்கேன்வல்வினையேனே.

## ஆறுயிரப்படி.

(அயர்க்கும்) வ்யஸநாதிசயத்தாலே யறிவழிந்துகிடக்கும். பின்னேயும். நெடும்போதுகூடப்ரபுத்தையாய்,தன்னருகேவந்தானுகக்கருதிச் சுற்றும்பற்றிநோக்கி, அருகுகாணுதொழிந்தவாறே யகலவேநீணுக்குக் கொள்ளும். தூரத்திலும்காணுதொழிந்தவாறே நீராயுருகும். மழைக்கண்டுளும்பவெவ்வுயிர்க்கொள்ளும். மெய்சோரும். பின்னேயும்கண்ணுவென்று பேசும். பெருமானேவாராயென்று கூப்பிட்டழைக்கும். இப்படிகாதல் மையலேறினவென் பெண்பேதைக் கென்செய்கேன் பாவியேனென்றலற்றுகிருள்..........................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அவனுடையசௌலப்யாதிசயத்தையநுசந்தித்து சத்ருசசம்பந்திவஸ்துக்களையும் காண்கைக்கு யோக்யதையில்லாத ஆர்த்திவிஞ்சினபடியைச் சொல்லி இவளுக்கென்செய்வேனென்கிருள்.

அயர்க்கும் - துல்யசம்பந்திவஸ்துக்களையும்காணவொண்ணுதபடி மோஹியாநிற்கும்.

உணர்த்திவந்தவாறே, "இவ்வவஸ்த்தையில் அவன் வாராதொழியான்" என்று நினைத்து. - சுற்றும்-சுற்றும். பற்றி-பலகாலும். நோக்கும்-பாராநிற்கும். அவ்வளவிலும் காணுவிட்டவாறேதூரத்திலேநிற்கிருனுகநினைத்து, அகல-பார்த்தகண்ணை

யோட்டி, நீணுக்குக்கொள்ளும்-நெடும்போதுபாரா நிற்கும். வியர்க்கும்-அங்கும் காணாமையாலே ப்ரணயரோஷத்தாலே வேர்த்துநீராகாநிற்கும். மழை - மழை போலே அருவிச்சொரிகிற கண்ணீரானது கோபாக்நியாலே சுவறியடியற்று, கண்-கண்ணளவிலே. துளும்ப-துளும்பும்படி. வெம்-அவ்வெம்மைதோன்ற. உயிர்க்கொள்ளும்-நெடுமூச்செறியும். மெய்-அந்தபரிதாபத்தாலேசரீரம்தரிக்கமாட்டாமல். சோரும்-சோரும். பெயர்த்தும்-பின்னையும். ஆசைபேசாதிருக்கவொட்டாமையாலே, கண்ணு-பெண்களுக்குசர்வகாலசுலபனானக்ருஷ்ணனே. என்று-என்று பேசும்-சம்போதித்துச் சொல்லாநிற்கும். இப்பேர்கேட்டவாறேவந்தானாக நினைத்து, பெருமானே-என்னினைவளவன்றியே அதிசயிதமாகவுபகரிக்குமென்னுடைய நாதனே. வா-வரலாகாதோ. என்று-என்று. கூவும்-அழையாநிற்கும். மயல்-இப்படிபிச்சேறும்படி. பெரும்-பெரிய. காதல்-காதலையுடைய. என்-என். பேதைக்கு-சொற்கேளாப்பெண்ணுக்கு. வல்வினையேன் - இவளையிப்படிகாண்கைக்கடியான அதிப்ரபலபாபத்தையுடையனான். என்-எத்தை. செய்கேன்-செய்வேன்.

வாராதவனை, வரப்பண்ணுவேனோ, இதுகண்டு பொறுத்திருப்பேனோவென்று கருத்து..................................................................................*

## ஈடு - பத்தாம்பாட்டு.

சத்ருசபதார்த்தங்களையநுசந்திக்க க்ஷமமல்லாதவ்யசநாதிசயத்தாலே யிவளுக்குப்பிறந்தவிக்ருதிகளைச்சொல்லி, நானென்செய்வேனென்கிறாள்.

( அயர்க்கும் ) நின்றாற்போலேநில்லா, சித்தாவ்யபாராமற்றுமோஹிக்கும்.

( சுற்றும்பற்றிநோக்கும் ) பின்னையுமறிவுகுடிபுகுரா, தன்னுபத்தேசெப்பேடாக அவன் வரவையத்யவசித்து வந்தருகேநின்றானாக சாதரமாகச் சுற்றும்பாராநிற்கும்.

அங்குக்காணாமையாலே, "சர்வதா இவ்வளவில் புறப்படாதொழியான்" என்று ப்ரதம பரிஷ்வங்கந்தொடங்கிக்காண்கைக்காகப் பரக்கக்கொண்டு பரமபதத்தளவும் செல்லப் பாராநிற்கும். அங்குக்காணாமையாலே, "என்னளவிதுவாயிருக்க வாராதொழிவதே" என்று நொந்து ( வியர்க்கும் ) இளைப்பாலே வேராநிற்கும்.

( மழையித்யாதி ) ஸ்வேதமாய்ப் புறப்பட்டுப் புறப்படாதது கண்ணீராய்ப்புறப்படும், கண்ணீராய்ப்புறப்படாதது நெடுமூச்சாய்ப் புறப்படும். மழைபோலே அருவிச்சொரிகிற கண்ணநீரானது கோபாக்நியாலே சுவறியடியற்றுக்கண்ணளவிலே துளும்பும்படி அவ்வெம்மைதோன்ற நெடுமூச்செறியும்.

( மெய்சோரும் ) அகவாயிலுள்ளது நேரகப்போனவாறே பரவசகாத்ராயாம். இவள்படியே இப்படி துவளுவது.

அறமுடியவொட்டாதே ஆசாபந்தம், (பெயர்த்தும் கண்ணவென்றுபேசும்) திரியவும் க்ருஷ்ணனேயென்று சம்போதித்து, அந்தத்திருநாமத்தால் பிறந்தவநுசந்தாநப்ரகர்ஷத்தாலே வந்தவுருவெளிப்பாட்டாலே வந்தானாகக்கொண்டு (பெருமானே வாவென்றுகூவும்) பின்னையும் "உடையவன் உடைமையை யிழக்கவிடுமோ, நாம்படுவதுகாணமறைய நின்றானத்தனை" என்று வாவென்னும்.

(மயலித்யாதி) மயலைப்பண்ணக்கடவதான பெரியகாதலையுடைய வென்பாலைக்கு. (என்செய்கேன்) இவள் மோஹியாதபடிபண்ணவோ, அவனை வரப்பண்ணவோ, நானித்தைப் பொறுத்திருக்கவோ. (வல்வினையேனே) இவளை யிப்படிகாணும்படி மஹாபாபத்தைப்பண்ணினேன். ஆழ்வான்திருநயநங்கள் நோவுபட்டபின்பு எம்பெருமானார்திருவுள்ளம் நோவுபட்டாற்போலேகாணும் திருத்தாயார் திருவுள்ளமும்படுகிறது.........................................................................*

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு (அயர்க்குமித்யாதி) பாட்டெல்லாம் கடாக்ஷித்தவதாரிகை (சத்ருசேத்யாதி)

நின்றுப்போலேநில்லா - நிற்கச்செய்தேயித்யர்த்தஃ.

மோஹித்தவள் சுற்றும்பார்க்கைக்கு ஹேதுவேதென்ன (பின்னையுமித்யாதி) அறிவுகுடிபுகுரா - ஜ்ஞாநம்வந்தவாறே. செப்பேடு - தாம்ரசாஸநம். பற்றிநோக்கும்-சாதரமாகநோக்கும்.

"அகலவே நீளேக்குக்கொள்ளும்" என்றதுக்கர்த்தம் (அங்குக்காணாமையாலேயித்யாதி) அகலவேநீளேக்குக்சொள்ளும் - பரக்கநீட்சியாகப்பார்க்குமித்யர்த்தஃ.

வியர்க்கை - வேர்க்கை-ஸ்வேதிக்கையென்றபடி.

"மழைக்கண்டுளும்ப" என்றதுக்கு தாத்பர்யத்வயம். முந்தினது - கண்மழைபோலே துளிக்கவென்று; இரண்டாவது - மழைபோலேகுளிர்ந்த கண்துளிக்கவென்று. சமபிவ்யாஹாரதாத்பர்யம் (ஸ்வேதமாயித்யாதி) "மழைக்கண்டுளும்ப - வெவ்வுயிர்க்கொள்ளும்" என்றசேர்த்திக்குபாவம் (கண்ணீராயித்யாதி) துளும்புவானென்னென்ன (கோபேத்யாதி)

நோாக-யாவத்தும். தாயாருடைய வீடுபாடு (இவள்படியேயித்யாதி) படி-சரீரமும், ப்ரகாரமும். முடிந்து பிழைக்கவொண்ணுதோவென்ன (அறமுடியவித்யாதி)

பெயர்த்தும் - திரியவும். புநஸ்சேத்யர்த்தஃ.

உருவெளிப்பாடு-ஜ்ஞாநவைசத்யம். "பெருமானேவா" என்றதுக்கிரண்டு தாத்பர்யம்-உருவெளிப்பாட்டாலே வந்தானாகக்கொண்டென்றதொன்று. இரண்டாவது - மறையநின்றானென்று. இத்தையருளிச்செய்கிறார் (பின்னையுமுடையவனித்யாதி) முந்தினதாத்பர்யம் - பாவநாப்ரகர்ஷத்தாலே முன்னேதோன்

னாகையாலேவாவென்றழைக்கிறாளென்றபடி ; இரண்டாவது-இவ்வவஸ்த்தையிலே யுடையவன் நம்மைவிட்டுப்போகான், அண்டையிலே மறைய நிற்கிறானென்று நினைத்துவாவென்றழைக்கிறாளென்றபடி.

மயலை - பிச்சை. "என்செய்கேன்" என்ற பதத்துக்கு ஸம்வாதம் (ஆழ்வாநித்யாதி) "என்செய்கேன்" என்று திருத்தாயார் (திருவுள்ளமும்படுகிறது) என்றபடி.

க்ரமேணார்வய:......................................................................*

# பதினொன்றாம்பாட்டு.

வல்வினைதீர்க்குங்கண்ணனைவண்குருகூர்ச்சடகோபன்
சொல்வினையாற்சொன்னபாடலாயிரத்துள்ளிவைபத்து
நல்வினையென்றுகற்பார்கணலனிடைவைகுந்தநண்ணித்
தொல்வினைதீரவெல்லாருந்தொழுதெழவீற்றிருப்பாரே.

## ஆறாயிரப்படி.

(வல்வினைதீர்க்கும்) ஆஸ்ரிதஜந சமஸ்ததுஃகாபநோதந ஸ்வபாவனா யாஸ்ரிதசுலபனாயிருந்த வெம்பெருமானைச் சொல்வினையாற்சொன்ன பாடலாயிரத்துள் ளிவைபத்தும் அநந்யப்ரயோஜநராய்க்கொண்டு கற்பார்கள் நலனுடைவைகுந்தம் நண்ணியெல்லாரும் தொழுதெழவீற்றிருப்பாரென்கிறார்..........................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழி யப்யசித்தவர்கள் நித்யஸூரிக ளாதரிக்கும்படியாக ஸ்வசேஷத்வ சாம்ராஜ்ய ப்ரதிஷ்டிதராவர்களென்று பலத்தையருளிச்செய்கிறார்.

வல்-ஆஸ்ரிதர்தன்னைசம்ஸ்லேஷிக்கைக்குவிலக்கான. வினை - சகலபாபங்களையும். தீர்க்கும் - "ஸர்வபாபேப்யோமோக்ஷயிஷ்யாமி" (ஸர்வபாபேப்யோமோக்ஷயிஷ்யாமி) என்றுபோக்கும்ஸ்வபாவனான. கண்ணனை-க்ருஷ்ணனை. வண்-சர்வசம்பத்சம்ருத்தமான. குருகூர்-திருநகரிக்குநிர்வாஹகரான. சடகோபன்-ஆழ்வார். சொல்வினையால்-வாசிகசேஷவ்ருத்திரூபத்தாலே. சொன்ன-அருளிச்செய்த. பாடல்-காநரூபமானபாட்டுக்கள். ஆயிரத்துள்-ஆயிரத்துள். இவைபத்தும்-இவைபத்தையும். நல்வினை-விலக்ஷணவ்ருத்திவிசேஷம். என்று-என்று. கற்பார்கள்-கற்குமவர்கள். நலன்-பகவதநுபவாநந்தத்தை. உடை-உடைத்தான. வைகுந்தம்-பரமபதத்தை. நண்ணி - கிட்டி. தொல்-அநாதிசித்தமான. வினை-அவித்யாதிதோஷங்கள். தீர-மறுவலிடாதபடி. எல்லாரும்-அங்குள்ளஸூரிகளெல்லாரும். தொழுது-தங்களுடையததீயசேஷத்வம்தோன்றும்படிதாழ்ந்தாதரித்து. எழ-சம்ப்ரமத்தாலேபெரியகிளர்த்தியையுடையராம்படியாக. வீற்று-தங்கள்சேஷத்வசாம்ராஜ்யத்தாலுள்ளவேறுபாடுதோன்ற. இருப்பார் - இருக்கப்பெறுவர்கள்.

இது-அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்..............................*

## ஈடு - பதினொன்றும்பாட்டு.

நிகமத்தில்-இத்திருவாய்மொழிகற்றார், ஸம்ஸாரதுரிதமும் போய் பகவத்விஶ்லேஷகந்தமில்லாத திருநாட்டிலேயெல்லாரும் சிரஸாவஹிக்கும் மேன்மையோடேயிருக்கப் பெறுவரென்கிறார்.

( வல்வினைதீர்க்குங்கண்ணனை ) பெற்றவர்கள்கைவிட்டால் பிடித்தவர்கள் கைவிடார்களே. ஆஶ்ரிதருடைய விஶ்லேஷஹேதுவான மஹாபாபத்தைப்போக்கும் ஸ்வபாவனான க்ருஷ்ணனை. ( வண்குருகூர்ச்சடகோபன் ) பரமோதாரனான ஆழ்வார். இன்று நாமுங்கூடவிருந்து பகவத்குணாநுஸந்தாநம்பண்ணும்படி பண்ணினவௌதார்யமிறே. (சொல்வினையாற்சொன்னபாடல்) சொல்லியல்லது நிற்கவொண்ணாதபக்திபாரவஶ்யத்தாலேயென்னுதல், பகவத்குணபலாத்காரத்தாலே யென்னுதல், சொற்றொழிலாலேயென்னுதல். அதாவது-வாசிகமானவடிமை (ஆயிரத்துள்ளிவைபத்தும்) ஆயிரம்திருவாய்மொழியிலும், இவர்சத்ருஸபதார்த்தங்களைக்கண்டு அவனாகப்பிச்சேறினவித்திருவாய்மொழி. இப்படிபிச்சேறினவிதுஎல்லார்க்கும்கூடுவதொன்றன்றிறே, ஆனபின்பு ( நல்வினையென்றுகற்பார்கள்) இதுபாவநமென்றாகிலு மப்யஸிக்கவல்லவர்கள். இதுவிலக்ஷணக்ருத்யமென்று கற்குமவர்களென்றுமாம். (நலனிடைவைகுந்தம்நண்ணி ) விஶ்லேஷகந்தமில்லாத பரமபதத்தைக்கிட்டி. ( தொல்வினைதீர ) அநாதியாய்வருகிற அவித்யாதிகள்தீர்ந்து. ( எல்லாருந்தொழுதெழ ) அஸ்ப்ருஷ்டஸம்ஸாரகந்தரான நித்யஸூரிகளும் தொழுதாதரிக்க. * பணியாவமரருங்கூட, “ பதியினில் பாங்கினில் பாதங்கள் கழுவினர் ” என்கிறபடியே, அவர்களநுவர்த்தித் தாதரிக்கும்படி யாவர்கள். “ தொழுதெழென்மனனே ” என்று-அநாதிகாலம் “அஸந்நேவ” என்னும்படி போந்தவரவனைத்தொழு துஜ்ஜீவித்தாற்போலேகாணும் இவர்பாடின திருவாய்மொழியைக் கற்றவர்களைத்தொழுது நித்யஸூரிகளுஜ்ஜீவிக்கும்படி. ( வீற்றிருப்பாரே ) அவன்சேஷித்வத்துக்கு முடிசூடி யிருக்குமாபோலே, இவர்களும் சேஷத்வஸாம்ராஜ்யத்துக்கு முடிசூடியிருக்கப்பெறுவர்கள். “ ஸஸ்வராட்பவதி ” ( ஸ்வராட்பவதி ) என்னக்கடவதிறே. வீற்றென்பது-வேறுபாடு.........................................................*

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் ( வல்வினையித்யாதி ) அவதாரிகைக்கு - உத்தரார்த்தத்திலே நோக்கு.

“ என்செய்கேன் ” என்றுகைவாங்கினவநந்தரம், “ வல்வினைதீர்க்குங்கண்ணனை ” என்றதுக்குபாவம் ( பெற்றவர்களித்யாதி )

ஔதார்யமேதென்ன ( இன்றுநாமுமித்யாதி )

“ வினை ” என்றதுக்கு மூன்றர்த்தம்-பக்தியாதல் ; பகவத்குணமாதல் ; வினையென்று-வ்யாபாரமாய், சொற்றொழிலாதல். முந்தினவர்த்தத்தில், வினையென்று-கர்மஸாத்யையான பக்தியைலக்ஷிக்கிறது ; இரண்டாமர்த்தத்தில், சேஷ்டிதங்களாலே குணம்ப்ரகாசிக்க வேண்டுகையாலே, வினையென்று-குணங்களைச்சொல்லுகிறது ; மூன்றாவது-ஸ்பஷ்டம்.

பாவநம்-உபாயம். போக்யதா புத்தியில்லையேயாகிலும் பாவநமென்றுகிலு மப்யசிக்க வல்லவர்களென்றபடி. நல்வினை-சுக்ருதம். இரண்டாமர்த்தத்தில், நல்லவர்கள் வினையென்றாய், (விலக்ஷணக்ருத்யம்) என்றபடி. விலக்ஷணக்ருத்யம்-போக்யம். நலனிடை-நன்மையினிடத்திலேயான. நன்மையாவதேதென்ன (விஶ்லேஷத்யாதி) "நலனுடை" என்றுபாடமானபோது-நன்மையையுடைய வென்றபடி. தீர-தீர்ந்து. (தீர) பெற்றென் றத்யாஹார்யமாதல். நித்யஸூரிகள் * பணியாவமரரன்றோ, அவர்கள் தொழுவார்களோவென்ன (பணியாவமரரித்யாதி) "தொழுதெழ" என்றதுக்குபாவம் (தொழுதெழித்யாதி) "வீற்றிருப்பார்" என்று-முழுச்சொல்லாய், அத்தாலே-முடிசூடி யிருக்கையென்றர்த்தம் (அவன் சேஷித்வத்துக்கித்யாதி) ஸ்வராட்-ஸ்வதந்த்ர:. அகர்மவஶ்ய:. அர்த்தாந்தரம் (வீற்றென்பதுவேறுபாடென்று) அதாவது-இதரரி லுத்க்ருஷ்டராக வேறுபட்டிருப்பர்களென்றபடி. பலிதார்த்தமொன்று.

க்ரமேணாந்வய:.......................................................................*

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

(மண்ணையிருந்து.)

भूम्याद्यैः सागराद्यैर्ज्वलनशशिमुखैर्वस्तुभिर्वत्स
पूर्वैर्नृत्यद्भिस्स्वैश्च लोकादिभिरपि पृथिवीक्षिद्भिरात्मीयदा
सैः । सौलभ्यैश्वर्यवर्गैरपि च गुणगणै [illegible]
[illegible]
[illegible] शठारिः. (நுஅ)

(பூம்யாத்யை:) மண்ணையிருந்தித்யாதி-ப்ருதிவியாலு மாகாசத்தாலும்; (சாகராத்யை:) பிரான்கிடக்குமித்யாதி-சமுத்ரத்தாலும் சூரியனாலும்; (ஜ்வலநசசிமுகை:) அறியும்செந்தீயைத் தழுவியித்யாதி, ஒன்றியதிங்களைக்காட்டியித்யாதி-சிவந்தவக்நியாலும் குளிர்ந்தகாற்றாலும் சந்த்ரனாலும் பர்வதத்தாலும் வர்ஷத்தாலும்; (வஸ்துபிர்வத்ஸபூர்வை:) கோமளவான் கன்றையித்யாதி-சுகுமாரங்களான வத்ஸங்களாலும் சர்ப்பத்தாலும்; (ந்ருத்யத்பிஸ்ஸ்வைஶ்ச) கூத்தர்குடமெடுத்தாடிலித்யாதி-குடக்கூத்தாடுகிற கோபாலர்களாலும் குழலோசையாலும் இடைச்சிகள் கையில் நவநீதத்தாலும்; (லோகாதிபி:) எல்லாவுலகுகண்ணன் படைப்பென்னுமித்யாதி-லோகங்களாலு மூர்த்வபுண்ட்ரதரராலும் துளசிதாமத்தாலும்; (ப்ருதிவீக்ஷித்பி:) திருவுடைமன்னரைக் காணிலித்யாதி-ஸ்ரீமான்களான ராஜாக்களாலும் ப்ரதிமைகளெழுதியிருக்கிற சித்ரத்தாலும் தேவதையையுள்ளே யுடைத்தாயிருக்கிற வாலயங்களாலும்; (ஆத்மீயதாஸை:) விரும்பிப் பகவரைக்காணிலித்யாதி-விஷயவிரக்தராய் ஜ்ஞாநாதிகரான மஹாத்துக்களாலும் நீலமேகங்களாலும் சோசமூஹங்களாலும்; (ஸௌலப்யைஶ்வர்யவர்க்கைரபிசகுணகணை:) பெயர்த்தும் கண்ணாவென்றுபேசுமித்யாதி - ஸ்வாமித்வசௌலப்ய சௌசீல்யவாத்ஸல்ய காருண்யாதிகளாலும்; இப்படிஸ்வகீயங்களாயும் ஸ்வஸத்ருஶங்களாயு மிருக்கிறவஸ்துக்களாலே வண்டுவரைப்பெருமாள் விஶ்லேஷசமயத்திலே யாஶ்ரிதரை து:கிப்பியாநிற்பரென்று "மண்ணையிருந்துதுழாவி" என்கிறதசகத்திலே மாறனருளிச்செய்தானென்கிறார்................................................(நுஅ)

# திருவாய்மொழி நூற்றந்தாதி.

மண்ணுலகில்முன்கலந்துமால்பிரிகையான்மாறன்
பெண்ணிலைமையாய்க்காதல்பித்தேறி - யெண்ணிடில்முன்
போலிமுதலானபொருளையவனாய்நினைந்து
மேல்விழுந்தான்மையல்தணின்வீறு. (௩௪)

(மண்ணுலகில்) இதில்-சத்ருசபதார்த்தங்களையும் சம்பந்திபதார்த்தங்களையு மவனாகப்ரமித்துப்பேசின பாசுரத்தையநுவதித் தருளிச்செய்கிறார். அதெங்ஙனேயென்னில்; கீழ் "காதல்மையலேறினேன்" என்று-ப்ரணயித்வகுணத்தை யநுபவித்துவிளைந்த ப்ரீதிப்ரகர்ஷம் ஆஶ்ரயத்தையு மழிக்கும்படி கரையழியப்பெருக அத்தையனாயாறு படுத்துகைக்காக அவன்பேரநிற்க, பிரிந்ததவனையாகையாலே யவஸந்நராய்,ராமகுணங்களுக் கிட்டுப்பிறந்தபரதாழ்வான் ஒருவேடன்வாயிட்டு ராமசரிதத்தைக்கேட்டு தரித்தாற்போலே, இவ்வாழ்வாரு மவனோடு சத்ருசபதார்த்தங்களையும் சம்பந்திபதார்த்தங்களையு மவனென்றுபிச்சேறும்படி தமக்குப் பிறந்த வவஸ்த்தாவிசேஷத்தை அந்யாபதேசத்தாலே பேசின * மண்ணையிருந்துதுழாவியினர்த்தத்தை "மண்ணுலகில்" இத்யாதியாலே யருளிச்செய்கிறா ரென்கை.

(மண்ணுலகில்முன்கலந்துமால்பிரிகையால்) பூலோகமான இவ்விபூதியிலே முன்னம் * சோலைவாயாளிலே பெருப்பேறுன ஸம்ஶ்லேஷத்தையுண்டாக்கி ஸர்வேஶ்வரன் விஶ்லேஷிக்கையால். (மாறன்பெண்ணிலைமையாய்) ஆழ்வார் அபலையினுடைய வவஸ்த்தையையடைந்து. (காதல்பித்தேறி) "என்பெண்கொடியேறியபித்தே" என்னும்படி பக்தியாலேபித்தேறி. "க்வசித்ப்ரமதே" (க்வசிதுத்ப்ரமதே) இத்யாதிப்படியே சித்தவிப்ரமம்பிறந்து. (எண்ணிடில்) அந்தபித்தேறின ப்ரகாரத்தைநிரூபிக்கில். அன்றிக்கே, (பித்தேறியெண்ணிடில்) பித்தேறினவாகாரத்தோடே தாம்நிரூபிக்கப்புகில். (முன்போலிமுதலானபொருளையவனாய்நினைந்து) அதாவது - * மண்ணையிருந்துதொடங்கி, * அவர்க்குமளவும் ப்ரதிபாதிக்கப்படுகிற முன்கண்டசத்ருசபதார்த்தங்களையும் சம்பந்திபதார்த்தங்களையும் அவனாகவே ப்ரதிபத்திபண்ணியென்கை. இதெத்தாலேயென்னில் (மையல்தணின்வீறு-மேல்விழுந்தான்) வ்யாமோஹாதிஶயத்தாலே அவற்றிலேயத்யபிநிவிஷ்டரானார். இவருடைய வபிநிவேசாதிசய மிருந்தபடியென்னென்று ஜீயருக்குமிதுகண்டு ஸஹிக்கவொண்ணாதபடியாயிற்று. "சத்ருசபதார்த்தங்களாவன-விண், கடல், நாயிறு, செந்தீ, தண்காற்று, ஒன்றியதிங்கள், நின்றகுன்றம், நன்றுபெய்யும்மழை, கூத்தர், நீறுசெவ்வேயிட, திருவுடைமன்னர், உருவுடைவண்ணங்கள், கருவுடைத்தேவில்கள், விரும்பிப்பகவர், கரும்பெருமேகங்கள்; சம்பந்திபதார்த்தங்களாவன-நாறுதுழாய், வாமனன்மண், கோமளவான்கன்று; சம்பந்திபதார்த்த சத்ருசங்கள்-போமிளநாகம், வாய்த்தகுழலோசை, ஆய்ச்சியர்வெண்ணெய்" என்றுவிபஜித்தாயிற்று ஆத்தானருளிச்செய்யும்படி................ (௩௪)

நாலரம்பத்தில் - நாலாந்திருவாய்மொழி முற்றிற்று.

ஆக - திருவாய்மொழி - ௩௪. பாட்டு - ௩௪௰.

ஸ்ரீ

# திருவாய்மொழி.

## நான்காம்பத்து.

## ஐந்தாந்திருவாய்மொழி.

### வீற்றிருந்து - ப்ரவேஶங்கள்.

#### ஆறுயிரப்படி.

( வீற்றிருந்து ) ஸ்ரீவைகுண்டநிலயனாய் * அநந்தபோகிநி ஸ்ரியா ஸஹாஸீநனாய் ஸேஷஸேஷாஸநவைநதேய ப்ரப்ருத்யபரிமித பரிஜநபரிவ்ருதனாயிருந்த வெம்பெருமானை யவனுடைய நிரவதிககாருண்யத்தாலே கண்களாலேகண்டு, கைகளாரத்தொழுது, வாயாலே திருவாய்மொழிபாடப்பெற்ற வெனக்கினியென்ன குறையுண்டென்கிறார்.......................*

#### பன்னீராயிரப்படி.

அஞ்சாந்திருவாய்மொழியில், கீழ்-சத்ருசமாயும் சம்பந்தியாயுமுள்ள வஸ்துக்களுடைய தர்ஶநத்தாலே ப்ரமிக்கும்படி யிவர்க்குண்டான ஆர்த்யதிசயந் தீருகைக்காக சர்வேஸ்வரன் தன்னுடைய நிரதிசயபோக்யமான ஸ்வரூபரூபகுணங்களையும், மஹிஷீபூஷாயுத பரிஜநாதிரூபமான விபூதிவைலக்ஷண்யத்தையும், மஹோதாரசேஷ்டிதங்களையு மநுபவிப்பிக்க அநுபவித்து ப்ரீதராய் ; அவனுடைய அகிலலோக நிர்வாஹகத்வத்தையும், அதுக்கடியான லக்ஷ்மீபதித்வத்தையும், உபயசித்தமான ஆநந்தாதிகுண யோகத்தையும், இக்குணநிதி போக்தாக்களைக்காத்தூட்டும் வாஹநாயுதவத்தையையும், போகாநுகுணமான ஜ்ஞாநப்ரேமாதி ப்ரதத்வத்தையும், அஸ்கலிதஜ்ஞாநர்க்கநுபாவ்யமான விக்ரஹவைலக்ஷண்யத்தையும், இந்தபோக்யதைக்கு சர்வாவஸ்த்தையிலுமொத்தாரும் மிக்காருமில்லாத மேன்மையையும், அதுக்குபபாதகமானவிபூதித்வயயோகத்தையும், தத்விஷயமான வ்யாப்த்யாதிகளையும், வ்யாப்யரக்ஷணார்த்தமான தர்ஶநீயவ்யாபாரங்களையு மநுசந்தித்து, இப்படி பரிபூர்ணனான சர்வேஸ்வரனை யநுபவித்துப்பிறந்த ஹர்ஷாதிசயத்தாலே சூரிகளைப்போலே வாய்விட்டுப்புகழ்ந்து, இந்தளத்தில் தாமரைபோலே யிங்கேயிந்தவநுபவங்கிடைக்கையாலே யெனக்கு சத்ருசருண்டோவென்று தமக்குப்பிறந்த செருக்கை யருளிச்செய்கிறார்.........................................................*

ஈடு.

கீழ்த்திருவாய்மொழியிலே-அப்படிவிடாய்த்தவர் "இனியென்னகுறையெழுமையுமே" என்னப்பெறுவதே. * பொய்ந்நின்ற ஞானந் தொடங்கிக் கீழெல்லாம் - * மண்ணையிருந்து துழாவியில் விடாய்க்கு க்ருஷிபண்ணினபடி; அப்படிவிடாய்க்கப்பண்ணின க்ருஷியின்பலம் சொல்லுகிறதிதில். பேற்றுக்கிதுக்கவ்வருகு சொல்லலாவதினியொன்றில்லை. "* சூழ்விசும்பணிமுகிலுக்கநந்தரமித்திருவாய்மொழியாகப் பெற்றதில்லையே" என்றருளிச்செய்வர் ஜீயர். பெருமாளு மிளையபெருமாளுமான விருப்பிலே பிராட்டிக்குப் பிரிவுண்டாக, மஹாராஜனையும் பரிகரத்தையும் கூட்டிக்கொண்டுசென்று விரோதிவர்க்கத்தைக் கிழங்கெடுத்து அவளோடே கூடினாற்போலே போலிகண்டிவர்ப்ரமித்த விழவெல்லாம்போம்படி, நித்யவிபூதியையும் லீலாவிபூதியையு முடையனாயிருக்கிற தன்படிகளொன்றும் குறையாதபடிகொண்டுவந்து காட்டிக்கொடுத்து, "கண்டீரோநாமிருக்கிறபடி, இந்த ஐஶ்வர்யமெல்லா மொன்றாய்த்தலைக்கட்டுவது நீரும்முடையவாயாலேஒருசொல்லுச்சொன்னால்காணும்" என்று இவர்திருக்கையிலே தாளத்தைக்கொடுக்க, அவ்விருப்புக்கு மங்களாசாசநம்பண்ணு ( உபயவிபூதியிலு மென்னோடொப்பாரில்லையென்றதிப்ரீதரா ) கிறார். "நின்றகுன்றத்தினைநோக்கி" என்றுப்ரமித்ததுக்கு, * வானமாமலையான தன்னைக்காட்டிக்கொடுத்தான் ; * நீறுசெவ்வேயிடக்காணில் நெடுமாலடியா ரென்றோடினதுக்கு, "தூவியம்புள்ளுடையானடலாழியம்மான்" என்கிற-நித்யசித்தபுருஷர்களைக் காட்டிக்கொடுத்தான் ; * செய்யதோர் நாயிற்றைக்காட்டிச் சிரீதரன்மூர்த்தி யீதென்றதுக்கு, "மையகண்ணாள்மலர்மேலுறைவாளுறைமார்பினன்" என்று - தானும் பெரியபிராட்டியாருமாக விருக்கிறவிருப்பைக் காட்டிக்கொடுத்தான் ; * திருவுடைமன்னரைக்காணில் "திருமால்" என்றதுக்கு, உபயவிபூதியுக்தனை தன்னைஶ்வர்யத்தைக் காட்டிக்கொடுத்தான்; பிறர்வாயாலே "என்செய்கேன்" என்றத்தைத்தவிர்த்து, தம்வாயாலே "என்னகுறையெழுமையும்" என்னப்பண்ணினான் ; "விரும்பிப்பகவரைக்காணில் வியவிடமுண்டான்" என்று-ஆநந்தலேசமுடையானைக்கண்டு ப்ரமித்தவர்க்கு, "வீவிலின்பமிகவெல்லைநிகழ்ந்த நம்மச்சுதன்" என்று-ஆநந்தமயனாயிருக்கிற விருப்பைக்காட்டிக்கொடுத்தான் ..................*

## ஜீயர் அரும்பதம்.

*வீற்றிருந்து ப்ரவேஶே, கீழ்-உந்மஸ்தகமானவப்ரீதியையும், இதில்-உந்மஸ்தகமான ப்ரீதியையுமநுசந்தித்து வ்யாக்யாதாவினிடுபாடு ( கீழிற்றிருவாய்மொழியிலேயித்யாதி ) கீழுண்டான வார்த்தியொன்றும் தோற்றாதே யெப்போதும் ப்ரீதனானேனென்று சொல்லும்படியாவதே என்றாஶ்சர்யப் படுகிறானென்றபடி.*

"இனியென்னகுறை" என்றிடுபடுகிறதென், *பொய்ந்நின்றஞானந்தொடங்கி யிவ்வளவும்-சம்ஸ்லேஷ விஸ்லேஷமாயன்றோசென்றது; அவற்றைப்பற்ற விவ்விரண்டு திருவாய்மொழிகளுக்கு மதிசயமேதென்ன (பொய்ந்நின்றஞானமித்யாதி) அர்ச்சிராதிமார்க்கம் முதலாக பலம்பெறவேண்டியிருக்க, இத்தையேபலமாகச் சொல்லுகிறதென்னென்ன (பேற்றுக்கித்யாதி) அதாவது-அங்குப்போய்ச் செய்யுமடிமைகளை யிங்கேயிருந்தே செய்யும்படி தன்ஸ்வரூபாதிகளை விசதமாகக்காட்டிக் கொடுத்தானாகையாலே யவ்வருகுசொல்லலாவதில்லை யென்றபடி. "பேற்றுக்கிதுக்கவ்வருகுசொல்லலாவதில்லை" என்னுமதுக்கு சம்வாதம் (சூழ்விசும்பித்யாதி) அதாவது-இத்திருவாய்மொழியிலுண்டான வநுபவகைங்கர்யங்களர்ச்சிராதிகதிக்கநந்தரம் சித்திக்குமதாகையாலே, தத்ப்ரதிபாதகமான *சூழ்விசும்புக் கநந்தரமாகப்பெற்றதில்லை யென்றபடி.

கீழ்த்திருவாய்மொழியோடேசங்கதி (பெருமாளுமித்யாதி) கீழே விடாய்த்தமைக்கு "ஸூவிஷூஹூ ஜெதவெமாகூ" (ச்வசிதுத்ப்ரமதேவேகாத்) இத்யாதியாலே-பெருமாளை த்ருஷ்டாந்தமாக்கினாற்போலே, விடாய்தீர்ந்தமைக்கும் பெருமாளை த்ருஷ்டாந்தமாக்குகிறார். இச்சேர்த்திக்கு வர்த்தகர்கூட விருக்கச்செய்தே பிரிகையும், போலிகண்டுப்ரமிக்கையும், அநுரூபமான பரிகரத்தைக்கொண்டு பரிஹரிக்கையு மிரண்டிடத்திலு முண்டாகையாலே த்ருஷ்டாந்ததார்ஷ்டாந்திகபாவம். அங்கசேர்த்திக்கு வர்த்தகரிளையபெருமாள், இங்குநித்யசூரிகள். அங்கும்ருகத்தின்போலி, இங்குஅவன்போலி. அங்குபரிகரம் மஹாராஜப்ரப்ருதிகள்; இங்குயாதோ ராகாரத்தைக்கண்டு ப்ரமித்தது,அந்த ஆகாரவிசிஷ்ட வேஷத்தைக்காட்டுகை. அவளோடேகூடி ஹர்ஷித்தாற்போலே இவர்கையிலே தாளத்தைக்கொடுக்க இவரும்ஹர்ஷித்து மங்களாசாசநம் பண்ணுகிறொன்றபடி. "வீற்றிருந்தேழுலகும்" இத்யாதியைக்கடாக்ஷித்து (நித்யவிபூதியையுமித்யாதி) ஒருசொல்லுச்சொன்னால் காணுமென்றதுக்கு - "சொன்மாலைகளேற்ற" என்றதிலேநோக்கு. தாளத்தைக்கொடுக்கவென்றது - "போற்றி" என்றும், "இசைமாலைகளேத்தி" என்றுமித்யாதியைப்பற்ற. "போற்றியென்றே" என்றத்தைப்பற்ற (மங்களாசாசநம்பண்ணுகிறொன்றது)

"போலிகண்டிவர்ப்ரமித்த விழவெல்லாம்போம்படி" என்றதினுபபாதநம் (நின்றகுன்றத்தினையித்யாதி) வானமாமலையான தன்னையென்றது-ஸ்வபாவகதநம். பிறர்வாயாலே-திருத்தாயார் பாசுரத்தாலே.............................*

## ஐந்தாந்திருவாய்மொழி.

## முதற்பாட்டு.

வீற்றிருந்தேழுலகுந்தனிக்கோல்செல்லவீவில்சி
ராற்றன்மிக்காளுமம்மானைவெம்மாபிளந்தான்றன்னைப்
போற்றியென்றேகைகளாரத்தொழுதுசொன்மாலைக
ளேற்றநோற்றேற்கினியென்னகுறையெழுமையுமே.

## ஆறாயிரப்படி.

ஸ்ரீவைகுண்டத்திலே திருவநந்தாழ்வான்மேலே தன்னுடைய சர்வலோகாதி ராஜ்யமெல்லாம் தோன்றும்படியிருந்தருளி, ஸ்வசங்கல்ப சஹஸ்ராகதேசத்தாலே நிர்வாஹித சர்வலோகனாய், நித்யநிர்த்தோஷ நிரவதிக கல்யாணகுணவிசிஷ்டனாய், இப்படி பரிபூர்ணனாயிருக்கச்செய்தே யநுத்ரிக்த ஸ்வபாவனாய், ஆஸ்ரித பரித்ராணார்த்தமாக வசுதேவக்ருஹேவதீர்ணனா யாஸ்ரிதவிரோதி நிரசனைக ஸ்வபாவனாயிருந்த வெம்பெருமானைத் திருப்பல்லாண்டு பாடிக்கொண்டு என்கைகளினுடைய விடாயெல்லாம் தீரும்படிதொழுது, திருவாய்மொழிபாடுகைக்கு பாக்யம்பண்ணினேன்; எனக்கினியொருநாளு மொருகுறையில்லையென்கிறார்......*

## பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், சமஸ்தலோக நிர்வாஹகனான சர்வேஸ்வரனை மங்களாசாசநம்பண்ணி ஸ்துதிக்கப்பெற்றவெனக்கு சர்வகாலத்திலு மொருகுறையில்லையென்கிறார்.

வீற்று-சர்வாதாரத்வ சர்வநியந்த்ருத்வ சர்வசேஷித்வ சர்வவ்யாபகத்வாதிகளாலே ஸ்வேதரஸமஸ்தவ்யாவ்ருத்தனைக்கொண்டு. இருந்து - *லோகாநாமசம்பேதார்த்தமாக திவ்யவிபூதியிலே திவ்யபர்யங்கத்திலேயிருந்து. ஏழுலகும் - வ்யக்தாவ்யக்தகாலரூபமாயும் சுத்தசத்வரூபமாயும் சதுர்விதமான அசேதநவர்க்கமும், பத்தமுக்தநித்யரூபேண த்ரிவிதமாயுள்ள சேதநவர்க்கமுமாகிற ஏழுவகைப்பட்ட லோகங்களிலும். தனி-ஸ்வசங்கல்பரூபமாய் அத்விதீயமான. கோல்-செங்கோல். செல்ல-நடக்கும்படி. வீவில் - அப்ரதிஹதமான. சீர்-ஜ்ஞாநசக்த்யாத்யசங்க்யேய கல்யாணகுணகனைக்கொண்டு. ஆற்றல்மிக்கு-ஸ்வாபாவிகமாகையாலே மதோத்ரேகரஹிதமாய் நிரவதிகமானசாந்தியோகத்தாலே. ஆளும்-இதுசாத்ம்யமாம்படி ஸ்வரூபவைபவத்தையுடையனைக்கொண்டுபோருகிற. அம்மானை-சர்வஸ்வாமியாய். வெம்-ரக்ஷணீயவர்க்கத்துக்குவிரோதியாய் "மஹாரௌத்ர:" எனகிறபடியே வெம்மையேநிரூபகமான. மா-கேசியாகிற அசுராவிஷ்டமாயுள்ளகுதிரையை. பிளந்தான்தன்னை-"நிபபாத த்விதாபூத:" (நிபபாதத்விதாபூத:) என்னும்படியேயிருகூறாய்விழும்படி வாய்பிளந்தசர்வேஸ்வரனை. போற்றியென்றே-போற்றிபோற்றியென்று இப்பெருமைக்கு மங்களாசாசநம்பண்ணிக்கொண்டே. கைகள் - "விண்ணைத்தொழுது" என்றகைகள். ஆர-வயிறுநிறையும்படி. தொழுது-அஞ்சலிபந்தம்பண்ணி. சொல்-சப்தசந்தர்ப்பரூபமான. மாலைகள் - மாலைகளை. ஏற்ற-அவன்சிரசாவஹிக்கும்படி சமர்ப்பிக்கைக்கு. நோற்றேற்கு - "விதிவாய்க்கின்று" என்கிறபடியே அவனுடையநிர்ஹேதுக க்ருபாரூபபுண்யத்தை யுடையவெனக்கு. இனி-இனிமேல். எழுமையும் - "ஸப்தஸப்தஸப்த" (ஸப்தஸப்தஸப்த) என்கிறபடியே ஏழேழுபடிகாலான ஜந்மமுண்டாகிலும். என்னகுறை-என்னகுறையுண்டாம்.

சரீரவிமோசந தேசப்ராப்த்யாதிகளாகிற குறையுண்டாகாதென்றுகருத்து. ஆற்றல்-பொறையும், மிடுக்கும்.......................................................*

## ஈடு - முதற்பாட்டு.

முதற்பாட்டில் - சர்வேஶ்வரனையும் வைத்து ஆஶ்ரிதரக்ஷணார்த்தமாக மநுஷ்யஸஜாதீயனாய்வந் தவதரித்த க்ருஷ்ணனைக் கவிபாடப்பெற்ற வெனக்கொருநாளு மொருகுறை யில்லையென்கிறார்.

(வீற்றிருந்து) வீற்றென்று - வேறுபாடாய், தன்வேறுபாடுடங் களும் தோற்றவிருக்கை. ஸ்வவ்யதிரிக்த சமஸ்தவஸ்துக்களும் தனக்கு சேஷமாகத்தான் சேஷியாகையாலேவந்தவ்யாவ்ருத்திதோற்றவிருக்கை; இங்ஙனன்றாகில், பரஸ்பரம் வ்யாவ்ருத்தியெல்லார்க்குமுண்டிறே. சகலாத்மாக்களுக்கு மவனோடு ஜ்ஞானைகாகாரதயா சாம்யமுண்டாயிருக்கச்செய்தேயும், விபுத்வசேஷித்வ நியந்த்ருத்வங்களாகிற விவை அவ்வாஶ்ரயமொன்றிலுமே கிடக்குமவையிறே. தன்னையொழிந்தாரடையத் தனக்குக் கிஞ்சித்கரிக்கக்கடவனாய், தான் சர்வகதனாய் - ஆகாசவ்யாப்திபோலன்றிக்கே ஜாதிவ்யக்திதோறும் பரிசமாப்ய வர்த்திக்குமாபோலே வர்த்திக்கக்கடவனாய், இப்படி வ்யாபரிக்கிறதுதான் நியமநார்த்தமாகவிறே. ஸ்வவ்யதிரிக்த சமஸ்தவஸ்துக்களையுமுடையனாகையால் வந்தவாநந்தம் தோற்ற விருக்கிறவிருப்பைச்சொல்லுகிறது. வீற்றிருந்தென்று - இவ்வருகுள்ளாரையடையக் கலங்கப்பண்ணக்கடவதான அஜ்ஞாநாதிகளையடையத் தன்னாசநத்திலே கீழேயமுக்குண்ணும்படி அவற்றை யதிஷ்டித்துக்கொண்டிருக்கும்படியைச் சொல்லுகிறது. (ஏழுலகும்தனிக்கோல் செல்ல) சுற்றுப்பயணம்வந்து ஜகந்நிர்வாஹம்பண்ணுகையன்றிக்கே, இருந்தவிருப்பிலே லோகமடையச் செங்கோல்செல்லும்படியாகவாயிற்றிருப்பது. ஏழுலகென்று - விபூதித்வயத்தையும் சொல்லிற்றாகில், வீவில்சீர் என்கிறவிடம்-கல்யாணகுணவிஷயமாகக்கடவது; அன்றிக்கே, ஏழுலகென்று - லீலாவிபூதிமாத்ரத்தைச்சொல்லிற்றாகில், வீவில்சீரென்கிறவிடம் - நித்யவிபூதி விஷயமாகக்கடவது. உபயவிபூதியையும் சொல்லிற்றானபோது, த்ரிவிதசேதநரையும் சதுர்விதப்ரக்ருதியையும் சொல்லிற்றாகிறது. சதுர்வித ப்ரக்ருதியாகிறது - கார்யகாரணரூபமான த்வைவித்யமங்கு, இங்குமப்படியுண்டான த்வைவித்யம். லீலாவிபூதிமாத்ரத்தைச்சொல்லிற்றானபக்ஷத்தில், பாதாளாதிகளையும் பூமியோடேகூட்டியொன்றாக்கி, பரமபதத்துக் கிவ்வருகுள்ளத்தையாறாக்கி, ஆக ஏழையும்சொல்லிற்றாகிறது. (வீவில்சீர்) நித்யமான குணங்களைச்சொல்லுதல், நித்யமானவிபூதியைச்சொல்லுதல். இப்படி உபயவிபூதியுக்தனானவன் செருக்காலேதன்பக்கல் சிலர்க்குக்கிட்டவொண்ணாதபடி யிருக்குமோவென்னில் (ஆற்றல்மிக்காளும்) அநந்ததனாயாயிற்றாள்வது; [ராமோராஜ்யமுபாஸித்வா] [ராமோராஜ்யமுபாஸித்வா] என்கிறபடியே. ராஜ்யத்தை

ஸவிநயமாக நடத்துகையாலே, ராஜ்யத்தையுபாசித்தாரென்றதிறே. வழியல்லாவழியேவந்த ஐஸ்வர்யமுடையவன் பிறர்க்குத்திரியவொண்ணாதபடி நடக்குமிறே, உடையவனுடைய ஐஸ்வர்யமாகையாலே ப்ராப்தமாயிருந்தபடி. அன்றிக்கே, ஆற்றலென்றது - வலியாய், "இத்தையடைய நிர்வஹிக்கைக்கடியான தாரணசாமர்த்த்யத்தையுடையனாயிருக்கும்"என்றுசொல்லுவாருமுண்டு. (அம்மானை) நியந்த்ருத்வத்தால்வந்த ஐஸ்வர்யந்தோற்ற விருக்கிற சர்வேஸ்வரனை. (வெம்மாபிளந்தான்றன்னை) "ஆற்றல்மிக்காளும்படிசொல்லுகிறது" என்றுபட்ட ரருளிச்செய்யும்படி; "ஆற்றல்மிக்காளுமம்மானென்றால், இன்னானென்கிறது" என்று அம்மங்கியம்மாள் நிர்வஹிக்கும்படி. இவற்றையடைய வுடையவனானால், இருந்தவிடத்தேயிருந்து "दह, पच" (தஹ, பச) என்றுநிர்வஹிக்கையன்றிக்கே, இவற்றோடே சஜாதீயனாய் வந்தவதரித்து, இவர்கள்பண்ணும் பரிபவங்களை யடையப்பொறுத்து, களைபிடுங்கி ரக்ஷிக்கும்படி சொல்லுகிறது. ஸ்யமந்தகமணி ப்ரப்ருதிகளிலே பரிபவம்ப்ரசித்தம்; "दास्यमैश्वर्यवादेन ज्ञातीनाञ्च करोम्यहम्" (தாஸ்யமைஶ்வர்யவாதேநஜ்ஞாதீநாஞ்சகரோம்யஹம்) என்றும், "अर्धभोक्ता च भोगानां वाग्दुरुक्तानि च क्षमे" (அர்த்தபோக்தாசபோகாநாம்வாக்துருக்தாநிசக்ஷமே) என்றுமருளிச்செய்தான். (வெம்மாபிளந்தான்) கேசிபட்டுப் போகச்செய்தேயும், தம்வயிறெரித்தலாலே (வெம்மா) என்கிறாரிவர். [illegible] [வ்யாதிதாஸ்யோமஹாரௌத்ரஸ்ஸோஸுரஃக்ருஷ்ணபாஹுநா| நிபபாதத்விதாபூதோ வைத்யுதேநயதாத்ருமஃ] கேசி, வாயை அங்காந்துகொண்டுவந்தபோது, சிறுப்ரஜைகள் த்வாரம்கண்டவிடங்களிலே கையைநீட்டுமாபோலே, இவன்மௌக்த்யத்தாலே அதின்வாயிலே கையைநீட்டினான்; அபூர்வதர்ஶநத்தாலே கைபூரித்துக்கொடுத்தது, கையைப்புரிந்துவாங்கினான், அவனிருபிளவாய்விழுந்தான். (போற்றி) ஸ்வரூபாநுரூபமாயிறே பரிவுசனிருப்பது. கேசிபட்டுப் போகச்செய்தேயும் சமகாலத்திற்போலேவயிறெரிந்து படுகிறாராயிற்றிவர். (என்றே) ஒருகால் "பல்லாண்டு" என்றால், பின்னையும் "பல்லாண்டுபல்லாண்டு" என்னுமத்தனை. "[illegible]" (நமஇத்யேவவாதிநஃ) என்னுமாபோலே. (கைகளாரத்தொழுது) "வைகுந்தமென்றுகைகாட்டும்" என்று-வெறுமாகாசத்தைப் பற்றித்தொழுத கைகளின்விடாய்தீர்ந்து வயிறுநிறையும்படி தொழுது. (சொன்மாலைகள்) வாடாதமாலைகள். அநசூயை கொடுத்த மாலைபோலே செவ்வியழியாதமாலைகள். (ஏற்ற) திருக்குழலிலே யேற்றும்படியாக. "[illegible]" (க்ருஷ்ணஶிரஸாவ்வய [illegible]

ம் ) என்கிறபடியே. ( நோற்றேற்கு ) இவரிப்போது நோற்றாராகச்சொல்லுகிறது - * மண்ணையிருந்து துழாவியில் விடாயையாதல், பகவத்க்ருபையையாதல், பூர்வக்ஷணவர்த்தியிறே ஒன்றுக்குஹேதுவாவது. ( இனியென்னகுறை ) அவ்வருகுபோனாலும் கிஞ்சித்காரத்தாலேயாகில் ஸ்வரூபம், அத்தையிங்கேபெற்ற வெனக்கொருகுறையுண்டோ. இதெத்தனைகுளிக்கு நிற்குமென்னில் ( எழுமையுமே ) முடியநிற்குமவற்றை யெவ்வேழாகச்சொல்லக் கடவதிறே. "ஃபவ-ஸூ நாஸாவராநாத்மாநஞ்ச" ( தஸ்பூர்வாந்தஸாபராநாத்மாநஞ்ச ) "ஸப்த ஸப்த ச" ( ஸப்த ஸப்தசஸப்தச ) இங்கேயிருந்தேயங்குத்தை யநுபவத்தையநுபவிக்கப் பெற்றவெனக்கு "அங்கேபோகப்பெற்றிலேன்" என்கிறகுறையுண்டோ. அங்கேபோனாலும் * சூழ்ந்திருந்தேத்துவர் பல்லாண்டேயிறே...*

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு, ( வீற்றிருந்தித்யாதி ) "அம்மானை" என்றுதொடங்கி மேலெல்லாம் கடாக்ஷித்தவதாரிகை ( சர்வேஶ்வரனுமித்யாதி ) க்ருஷ்ணனைக் கவிபாடவென்றது - "வெம்மாபிளந்தான்றன்னை" என்றத்தைப்பற்ற.

வேறுபாடாவது - உத்க்ருஷ்டதயா வ்யாவ்ருத்தியென்று விவக்ஷித்து, அதுதான்-விபுத்வசேஷித்வ நியந்த்ருத்வரூபேண த்ரிவிதமாயிருக்கையாலே ( வேறுபாடடங்கலுமென்கிறார் ) வ்யாவ்ருத்தி யெவ்வாகாரத்தாலேயென்ன ( ஸ்வவ்யதிரிக்தேத்யாதிவாக்யத்வயம் ) சகலாத்மாக்களு மீஶ்வரனோடு ஜ்ஞானைகாகாரதயாஸமமாயிருக்க, வ்யாவ்ருத்திசொல்லும்படி யெங்ஙனேயென்கிற சங்கையையும் பரிஹரியாநின்றுகொண்டு, "வேறுபாடடங்கலும்" என்றதில் விவக்ஷிதாகாரவிசேஷங்களையும் காட்டுகிறார் ( சகலாத்மாக்களுக்குமித்யாதி ) வ்யாவ்ருத்திதான் சொல்லவேண்டுவது ஸாம்யமுண்டாகிலிறேயென்ன; அதுக்காகஸாம்யஞ்சொல்லுகிறது. "யோலோகத்ரயமாவிஶ்ய பிபர்த்யவ்யய ஈஶ்வர:" ( யோலோகத்ரயமாவிஶ்யபிபர்த்யவ்யயஈஶ்வர: ) என்றத்தைக்கடாக்ஷித்து ( விபுத்வசேஷித்வ நியந்த்ருத்வங்களென்றது ) இதில், ஈஶ்வரசப்தம்-ஸ்வாமிவாசகம், "அஸ்மாத்க்ஷரமதீதோஹமக்ஷராதபி சோத்தம: । வ்யாபநாத்பரணாத்ஸ்வாம்யாத்" ( அசிந்மிஶ்ராத்விஶுத்தாச்சசேதநாத்புருஷோத்தம: । வ்யாபநாத்பரணாத்ஸ்வாம்யாதந்ய:பஞ்சதஶோதித: ) என்றுளவந்தார் கீதார்த்தசங்க்ரஹத்திலே யருளிச்செய்கையாலே. விபுத்வசேஷித்வ நியந்த்ருத்வங்களை வ்யுத்க்ரமேண விவரிக்கிறார் ( தன்னையொழிந்தாரித்யாதியாலே ) * ஈஶ்வரசப்தார்த்தம் ( தன்னையொழிந்தாரித்யாதி ) ஈஶ்வரத்வமும், சேஷித்வமும்-பர்யாயமாகையாலே, கிஞ்சித்கார ப்ரதிசம்பந்திதவேந வருளிச்செய்தது. * ஆவிஶ்யவுக்கர்த்தம் ( தான்சர்வசதனுயென்றது ) இதுக்குவிவரணம் ( ஆகாஶேத்யாதி ) * பிபர்த்திக்கர்த்தம் ( இப்படியித்யாதி ) "வ்யாபநாத்பரணாத்ஸ்வாம்யாத்" ( வ்யாபநாத்பரணாத்ஸ்வாம்யாத் ) என்றாரிறே. "வீற்றிருந்து" என்று-முழுச்சொல்லாகி, ராஜாவாயென்றர்த்தாந்தரம் ( ஸ்வவ்யதிரிக்தேத்யாதி ) முந்தினவர்த்தத்திலே "இருந்து" என்றதுக்கர்த்தம் ( இவ்வருகுள்ளாராயித்யாதி ) தர்மாதிபீட

ம்விவக்ஷிதம். அஜ்ஞாநாதிகளாவன-ஜ்ஞாநதர்ம வைராக்யைஶ்வர்யங்களும், அஜ்ஞாநாதர்மாவைராக்யா நைஶ்வர்யங்களும். "ஜீயெ௱ஸிஂஹாஸநஂ௱ஜ௱ய௱ாெஜௌஸு௱ஸிஹிவ௱தழ" (மத்யேஸிம்ஹாஸநம்ரம்யம்தர்மாத்யைஸ்ஸமாவ்ருதம் ) என்னக்கடவதிறே.

"இருந்து" என்றபதத்தையுங்கூட்டிபாவம் (சுற்றுப்பயணமித்யாதி) சுற்றுப்பயணம் வந்தென்றவிடத்திலே - "வ௱ஂ௱ஸ௱ாதவ௱ஸ௱ஷூாயாயாஂஜஸிதஂஜயா" (பாண்டரஸ்யாதபத்ரஸ்யச்சாயாயாம்ஜரிதம்மயா) இத்யாத்யநுசந்தேயம். செங்கோல்-ஆஜ்ஞை. "ஏழுலகு" என்றபதத்துக்கு-த்ரிவிதசேதநரையும், சதுர்வித ப்ரக்ருதிகளையும்சொல்லுதல்; அன்றிக்கே, பூமியோடேகூடக் கீழெல்லாமொன்று, மேலாறுங்கூட வேழென்னுதல் இரண்டர்த்தமாக விவக்ஷித்துக்கொண்டு, "சீர்" என்கிறபதத்துக்கர்த்தத்வயம் (ஏழுலகென்று விபூதித்வயத்தையுமித்யாதி) முந்தினவர்த்தத்திலே ஏழுலகுக்கும் வகையருளிச்செய்கிறார் (த்ரிவிதேத்யாதி) (கார்யகாரணரூபமான த்வைவித்யமங்கென்றது) விமாநகோபுராதிகள் - கார்யம், திவ்யாசித்து-காரணமென்றபடி. இங்குமப்படி யுண்டானவென்றது-ப்ரக்ருதியும், தத்கார்யமான மஹதாதிகளுமென்றபடி. நித்யவிபூதியைச் சொன்னபக்ஷத்தில், "வீவில்சீர்" என்றது-நித்யஸ்ரீயென்றபடியாய், அத்தாலே-நித்யவிபூதியைச்சொல்லுகிறது. இரண்டாமர்த்தத்திலே அப்பதத்துக்குவகை யருளிச்செய்கிறார் (பாதாளேத்யாதி)

செருக்கு-கர்வம். ஆற்றல்-க்ஷமை. (அநுத்ததனுயிதி) "வீற்றிருந்து" இத்யாதி ஸமபிவ்யாஹார ப்ரஸக்தமான வௌத்தத்யத்தினுடைய வ்யாவ்ருத்தலிங்குவிவக்ஷிதமென்றபடி. அநுத்ததனாய்-ஸவிநயனாய். "அநுத்ததனாயாளும்" என்றதுக்கு ப்ரமாணம் (ராமோராஜ்யமித்யாதி) "உஶவஷ௯ஸஹஸ௱ாணிஉஶவஷ௯ஶதாநிவ।௱ாமொ௱ாஜ௱ஂ௨பாஸிக்வாப்௱ஹ௱ொகஂ஗மிஷ௱தி" (தஶவர்ஷஸஹஸ்ராணிதஶவர்ஷஶதாநிச।ராமோராஜ்யமுபாஸித்வா ப்ரஹ்மலோகம்கமிஷ்யதி) இதிஸங்க்ஷேபே. பெருமாளுபாசித்தாரோவென்ன (ராஜ்யத்தையித்யாதி) ஆற்றல்மிக்காளுகைக்கு ஹேதுவேதென்ன; அம்மானுகையாலேயென்கிறார் (வழியல்லாவித்யாதி) இவ்விடத்திலே - "கூஜாமெ௯ணாமதாஂஜகூீஂவ௱ாபெ௱வாநுயவஜி௯தஃ" (அமார்க்கேணகதாம்லக்ஷ்மீம்ப்ராப்யேவாந்வயவர்ஜிதஃ) என்றும், "கூவ௱ாயெஶ்௱மநஂ" (ஆக்ராயேஶ்வரகந்தம்) என்று மித்யாத்யநுசந்தேயம். ப்ராப்தமாயிருந்தபடி-ஸ்வாபாவிகசேஷமென்றபடி. ஆற்றல் - பொறையாதல், வலியாதல். "அம்மான்" என்றதுக்கபரபாவியாக வர்த்தாந்தரம் (நியந்த்ருத்வத்தாலித்யாதி) அதாவது-ஆளுகையாலே அம்மானுனென்றபடி. "அம்மான்" என்றபதத்துக்கு பூர்வபாவியாக வர்த்தமருளிச்செய்தது - "ஆற்றல்மிக்காளும்" என்றவிடத்தில்-பொறையென்கிற வர்த்தத்துக்குச்சேரக் கண்டுகொள்வது; "அம்மான்" என்றபதத்துக் கபரபாவியாக வர்த்தமருளிச்செய்தது - வலியென்கிற வர்த்தத்துக்குச்சேரக்கண்டுகொள்வது.

"ஆற்றல்" என்றதினுடையவும், "அம்மான்" என்றதினுடையவு மர்த்தத்வயாநுகுணமாக மேலுக்கவதாரிகாத்வயம் (ஆற்றல்மிக்காளும்படியித்யாதி) பட்டர்நிர்வாஹம் - "ஆற்றல்" என்றதுக்கு-பொறையென்றவர்த்தத்துக்குச்சேர. இரண்டாவது-வலியென்கிறவர்த்தத்துக்குச்சேர. இந்தநிர்வாஹத்தில், இன்றுனென்

கிறது-க்ருஷ்ணனென்றபடி. பட்டர்நிர்வாஹத்துக்கு, "வெம்மாபிளந்தான்" என்கிறதுக்கு - விரோதிநிரஸநத்திலே தாத்பர்யம். பட்டர்நிர்வாஹவிவரணம் ( இவற்றையடையவித்யாதி ) அவர்கள் பரிபவங்களைப்பண்ணுகிறதுக்கும், இவனத்தைப் பொறுத்துக் களைபிடுங்கிரக்ஷிக்கிறதுக்கும் ப்ரமாணமுண்டோவென்ன ( ஸ்யமந்தகமணியித்யாதி ) களைபிடுங்கிரக்ஷிக்கிறதுக்கு-பூர்வார்த்தம் ப்ரமாணமாகையாலே ( என்றுமென்றது ) பரிபவங்களைப் பொறுக்கிறதுக்குப்ரமாணம் - உத்தரார்த்தம். "ஊாஸ்ஹ-கரோமி" ( தாஸ்யம்-கரோமி ) என்கையாலே - களைபிடுங்கிரக்ஷிக்கை. (தாஸ்யமைஸ்வர்யேத்யாதி) மஹாபாரதே. "வெம்" என்றதுக்குபாவம் ( கேசிபட்டித்யாதி ) அவன்படி க்ரூரமாயிருக்குமோவென்ன (வ்யாதிதாஸ்யஇத்யாதி) "வ்யாதிதாஸ்யோ மஹாரௌத்ரஸ்ஸோஸுரஃக்ருஷ்ணபாஹுநா। நிபபாதத்விதாபூதோவைத்யுதேநயதா த்ருமஃ" (வ்யாதிதாஸ்யோ மஹாரௌத்ரஸ்ஸோஸுரஃக்ருஷ்ணபாஹுநா । நிபபாதத்விதாபூதோவைத்யுதேநயதா த்ருமஃ ) இதிபஞ்சமேம்ஶே. ஶ்லோகதாத்பர்யம் (கேசிவாயையித்யாதி) "பாஹுநா" ( பாஹுநா ) என்றவேகவசநத்துக்குபாவம் ( இவன்மௌக்த்யத்தாலேயித்யாதி ) புத்திபூர்வகமாக "பிளக்கவேணும்" என்றிருந்தால் இரண்டுகையையும் நீட்டவேணுமென்று கருத்து. பூரித்து-பெருத்து. புரிந்து-திரும்பி.

"நூறுபிராயம்புகுவீர்" என்றாற்போலேசொல்லாலே, "போற்றி" என்கிறதென்னென்ன (ஸ்வரூபேத்யாதி) அதாவது-சேஷத்வாநுகுணமாகப்பரிந்து "போற்றி" என்று மங்களாசாசநம் பண்ணுகிறானென்றபடி. கீழே "கேசிபட்டு" இத்யாதிவாக்யவிவரணம் (கேசிபட்டுப்போகவித்யாதி) ஏவகாரார்த்தம் (ஒருகாலித்யாதி) இப்படி பலகால்சொன்னபேருண்டோவென்ன (நமஇத்யாதி) "முக்தாநாம்லக்ஷணம்ஹ்யேதத்யச்ச்வேதத்வீபவாஸிநாம்। நித்யாஞ்சலிபுடாஹ்ருஷ்டாநமஇத்யேவவாதிநஃ" ( முக்தாநாம்லக்ஷணம்ஹ்யேதத்யச்ச்வேதத்வீபவாஸிநாம்। நித்யாஞ்சலிபுடாஹ்ருஷ்டாநமஇத்யேவவாதிநஃ ) இதிநாராயணீயே.

வாடாதமாலைகளுண்டோவென்ன ( அநசூயையித்யாதி ) "இதம்திவ்யம்வரம்மால்யம் வஸ்த்ரமாபரணாநிச" ( இதம்திவ்யம்வரம்மால்யம் வஸ்த்ரமாபரணாநிச ) இத்யாரப்ய, "அநுரூபமஸம்க்லிஷ்டம்நித்யமேவபவிஷ்யதி" ( அநுரூபமஸம்க்லிஷ்டம்நித்யமேவபவிஷ்யதி ) இத்யநசூயா. ஏற்ற - சிரசாதரிக்கும்படி. "திருக்குழலிலேஏற்றும்" என்கிறதுக்குப்ரமாணம் (க்ருஹ்ணுதீத்யாதி) "அஹோஹ்யேகாந்திநஸ்ஸர்வாந்ப்ரீணுதிபகவாந்ஹரிஃ। விதிப்ரயுக்தாம்பூஜாஞ்சக்ருஹ்ணுதிஶிரஸாஸ்வயம்" ( அஹோஹ்யேகாந்திநஸ்ஸர்வாந்ப்ரீணுதிபகவாந்ஹரிஃ । விதிப்ரயுக்தாம்பூஜாஞ்சக்ருஹ்ணுதிஶிரஸாஸ்வயம் ) இதி ஸ்ரீஸாத்வதே. ( பகவத்க்ருபையையாதல் ) "நன்றுசூட்டும்விதியெய்தினம்" என்றபகவத்க்ருபையை யாதலென்றபடி. * மண்ணேயிருந்து துழாவியில்விடாயை சாதநமாகச்சொல்லலாமோவென்ன ; அந்தவார்த்தியைக் கண்டநுபவிப்பிக்கையாலே பூர்வக்ஷணவர்த்தித்வமாத்ரத்தைக்கொண் டருளிச்செய்கிறதொழிய வுபாயமன்றென்று திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார் ( பூர்வக்ஷணவர்த்தியித்யாதி ) ஈஶ்வராபிப்ராயத்தாலே ஹேதுவென்றபடி.

"இனியென்னகுறை" என்னலாமோ, பரமபதப்ராப்திமுதலானவை வேண்டாவோவென்ன (அவ்வருகித்யாதி) கிஞ்சித்காரத்தாலேயென்றது. "அஹம் லோககருத்" (அஹம்ஸ்லோகக்ருத்) என்றத்தைநினைத்து. "எழுமையும்" என்றதுக்கு - சர்வகாலமுமென்று விவக்ஷித்து, அதுக்குசப்தம்வசிக்குமோவென்ன (முடியநிற்குமித்யாதி) பனைநிழல்போலே யும்மையொருவரையும் நோக்கிக்கொண்ட மாத்ரமோவென்கிற சங்கையிலே யர்த்தாந்தரம் (தசபூர்வாநித்யாதி) அதாவது-ஏழேழுதலைமுறைக்கும் குறையில்லையென்றபடி. "தசபூர்வாந் தசபராந் ஆத்மாநஞ்சைகவிம்சதிம் பங்க்திஞ்ச புநாதி" (தசபூர்வாந்தச பராநாத்மாநஞ்சைகவிம்சதிம் பங்க்திஞ்சபுநாதி) இதிபோதாயநதர்மே. "ஏகாஹமபி கௌந்தேய பூமிஸ்தமுதகம் குரு। குலம் தாரயதே தாத ஸப்த ஸப்த ச ஸப்த ச." (ஏகாஹமபிகௌந்தேயபூமிஸ்த்தமுதகம்குரு। குலம்தாரயதேதாதஸப்த ஸப்தசஸப்தச) இதிபாரதே தர்மஸூநும் ப்ரதிபீஷ்மஃ. "இனியென்னகுறை" என்றதுக்கு "சொன்மாலைகளேற்றநோற்றேற்கு" என்றபதத்தோடேகூட்டிபாவமருளிச்செய்து, "போற்றி" என்றபதத்தோடேகூட்டி தாத்பர்யாந்தரம் (இங்கேயிருந்தேயித்யாதி) அங்குத்தையநுபவமேதென்ன (அங்கேபோனாலுமித்யாதி)

[ஆக்ராயேஸ்வரகந்தமித்யாதி] ஹே ஈச-ஸ்ரீரங்கநாத. இந்த்ராதயஸ்தவேஸ்வரகந்தமாக்ராய தவஸத்ருசம்மந்யாஃ முஹ்யந்தி - இந்த்ராதிதேவர்கள் தேவரீருடைய வைஸ்வர்யத்துக்குள்ளே யொருதிவலையையுடையராய், தேவரீருக்கு ஸத்ருசமாகநினைத்துக்கொண்டு மோஹியாநிற்பர்கள். நிரவதேர்பூம்நஃ ஸ்ணேஹத்யத்வமநாவில இதியத், அத்ரநசித்ரீயேமஹி - நிரவதிகமாயிருக்கிற சம்பத்தையநாதரித்து தேவரீர் கர்வமின்றிக்கே யிருக்கிறீரென்பது யாதொன்றுண்டு, இதிலே யாஸ்சர்யப்படுகிறோமில்லை. இதுக்கு ஹேதுவேதென்ன [ரங்கரஸிகேத்யாதி] ஹே ரங்கரஸிக, வைபுல்யாத்த்வம்த்வந்மஹிம்நஃபரஃ - தேவரீருடைய ஸ்வரூபம் விபுவாகையாலே, தேவரீர் தேவரீருடைய வைஸ்வர்யத்திலும் பரராயிருப்பீர். அன்றிக்கே, [மஹிமஸ்வபாவ இதி வா அத்ர நசித்ரீயேமஹி] [மஹிமஸ்வபாவஇதிவா அத்ரநசித்ரீயேமஹி] தேவரீருக்கைஸ்வர்யம் ஸ்வபாவமென்றுகொண்டு அதிலே யாஸ்சர்யப்படுகிறோமில்லை. இப்படியாகையாலே, தேநஸாத்ம்யம்நிர்நாம-தேவரீருக்கு ஸாத்ம்யமன்றிக்கேயிருக்கிறதுண்டோவென்றபடி. பூம்நஃகணேஹத்ய-பூமாநமநாத்ருத்யேத்யர்த்தஃ. பூம்ந இதி-கர்மணிஷஷ்ட்டீ. க்ரமேணாந்வயஃ ............*

---

# இரண்டாம்பாட்டு.

மையகண்ணாண்மலர்மேலுறைவாருறைமார்பினன்
செய்யகோலத்தடங்கண்ணன்விண்ணோர்பெருமான்றன்னை
மொய்யசொல்லாலிசைமாலைகளேத்தியுள்ளப்பெற்றேன்
வெய்யநோய்கண்முழுதும்வியன்ஞாலத்துவீயவே.

## ஆறுயிரப்படி.

(மையகண்ணாள்) இப்படி சர்வலோகாதிராஜ்யத்தைச்செலுத்திக்கொண்டு சேஷபோகபர்யங்கத்திலே, விதனநிந்நிவரலோசனைபாயிருந்

த பெரியபிராட்டியாரோடேகூட சுகாசீநனாய், தத்ஸம்ஶ்லேஷஜநிதநிரதிசய ப்ரீதியாலே செய்யகோலத்தடங்கண்ணனாய், அநந்த வைநதேயவிஷ்வக்ஸேந ப்ரப்ருத்ய சங்க்யேய திவ்யபரிஜந பரிவ்ருதனாயிருந்த வெம்பெருமானை என்னுடைய வெய்யநோய்கள் முழுதுமிந்த ப்ரக்ருதியிலேயிருக்கச்செய்தே வீயும்படி, அழகியசொல்லாலே யின்சமாலைகளேத்தியுள்ளப்பெற்றேனென்கிறார்..................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இந்தமேன்மைக்கடியான லக்ஷ்மீசம்பந்தத்தையுடையவனை ஜகத்ஸம்பந்தியான சகலக்லேசமுந் தீரும்படி புகழப்பெற்றேனென்கிறார்.

மைய - அவன்மார்பிலே எப்போதும் கணிசமாகையாலே அவ்வடிவு நிழலிட்டதடியாக; * அஸிதேக்ஷணையான ஸ்வபாவத்துக்குமேலே மையணிந்ததென்னலாம்படியான. கண்ணாள்-கண்ணையுடையளாய். இந்தவாபிருப்யத்துக்குமேலே, மலர்மேலுறைவாள்-தாமரைப்பூவில் பிறப்பாலும் வாசத்தாலும் அபிஜாதையுமாய் பரிமளம் வடிவுகொண்டாற்போலே போக்யபூதையுமானலக்ஷ்மீ. உறை-நித்யவாசம்பண்ணும்படி நிரதிசயபோக்யமான. மார்பினன்-மார்பையுடையனாய். செய்ய - பத்மவர்ணையானவவளை யநுபவிக்கையாலே, பழையசிவப்புக்குமேலேசிவந்த. கோலம்-அழகையுடைத்தாய். தடம்-ப்ரேமபாரவஶ்யத்தாலே விஸ்தீர்ணமான. கண்ணன்-திருக்கண்களையுடையனாய். விண்ணோர்-இப்படி பரஸ்பரஸம்ஶ்லேஷசரஸ்யத்தை பரமபதவாசிகளுக்கநுபவிப்பித்து. பெருமான்றன்னை- அவர்களுக்கதிபதியாயிருக்கிற சர்வேஶ்வரனை. மொய்ய - அவர்கள்சாமகாநம்பண்ணுமாபோலே செறிந்த. சொல்லால்-சொற்களாலேசமைந்ததாய். இசை-இசையையுடைத்தான. மாலைகள்-மாலைகளாலே. வியல்-விஸ்தீர்ணமான. ஞாலத்து-ஜகத்திலேயிருக்கச்செய்தே. வெய்ய - " ந தத்ர ஸம்வரிஷ்யந்தி " (நதத்ரஸஞ்சரிஷ்யந்தி) என்னுமாபோலே பரிதாபஹேதுவாயிருக்கிற. நோய்கள்முழுதும் - அவித்யாகர்மவாசநாருசிப்ரக்ருதிசம்பந்தங்களானசமஸ்தக்லேசங்களும். வீய - நாட்டிலேநடையாடாதபடிஸ்வயமேவநசிக்கும்படியாக. ஏத்தி-ஏத்தி. உள்ள - * ஸ்தவப்ரியனானவவனுடையமுகமலர்த்தியையென்னெஞ்சாலேயநுபவிக்க. பெற்றேன்-பெற்றேன்.

மையகண்ணாள், செய்யகோலத் தடங்கண்ணனென்கிறவிடம் - அவள்கண்ணிழலீட்டாலே யிவனுடைய ஶ்யாமளத்வமும் இவன்கண்ணிழலீட்டாலே யவளுடைய பத்மவர்ணமுமென்று கருத்தாகவும் சொல்லுவர்கள்; ஆகிலும், கண்ணுக்கு விஷயாதீநத்வமுசிதம்..................................................*

## ஈடு - இரண்டாம்பாட்டு.

இம்மஹைஶ்வர்யத்துக்கடியான ஸ்ரீய:பதித்வத்தை யருளிச்செய்கிறார். சர்வேஶ்வரன் ப்ரசாதத்தாலே அவன்கருத்தறிந்துநடத்தும் ப்ரஹ்மாவின் ப்ரசாதமடியாக, நாரதாதிகள் முன்னிலையாகவாயிற்று ஸ்ரீமத்

ராமாயணம் ப்ரஸ்துதமாயிற்றது ; இப்படிப்பட்ட ஸ்ரீராமாயணத்திற்காட்டில் தாமருளிச்செய்த ப்ரபந்தத்துக்கேற்ற மருளிச்செய்கிறார். "திருமாலாலருளப்பட்டசடகோபன்" என்கிறபடியே அவர்களிருவருடையவும் ப்ரசாதமடியாகவாயிற்று இப்ப்ரபந்தங்கள்பிறந்தது. "ஸீதாயாஶ்சரிதம்மஹத்" (ஸீதாயாஸ்சரிதம்மஹத்) என்கிறது இரண்டுக்குமொக்கும்; "திருமாலவன்கவியாதுகற்றேன்" என்றாரிறேயிவரும். அவன்பாடித்தனியேகேட்பித்தான், அவளோடேகூடக்கேட்பித்து அச்சேர்த்தியிலே மங்களாசாசநம்பண்ணப் பெற்றாரிவர் ; * மையகண்ணாள் மலர்மேலுறைவாளுறை மார்பினனானவனையாயிற்றுக் கவிபாடிற்று.

(மையகண்ணாள்) "அஸிதேக்ஷணா" (அஸிதேக்ஷணா) என்னக்கடவதிறே. பெரியபிராட்டியார் திருக்கண்களாலேயொருகால் கடாக்ஷித்தால், ஒருபாட்டம் மழைவிழுந்தாற்போலே சர்வேஶ்வரன்திருமேனி குளிரும்படியாயிற்றிருப்பது ; * மழைக்கண் மடந்தையிறே. இவள்கடாக்ஷ மில்லாமையிறே அல்லாதார் விரூபாக்ஷராகிறது. "நமஶ்ஶ்ரீரங்கநாயக்யை யத்ப்ரூவிப்ரமபேததః। ஈஶேஶிதவ்யவைஷம்யநிம்நோந்நதமிதம்ஜகத்" (நமஸ்ஸ்ரீரங்கநாயக்யையத்ப்ரூவிப்ரமபேததః । ஈஸேஸிதவ்யவைஷம்யநிம்நோந்நதமிதம்ஜகத்) ஒருவனழகியமணவாளப் பெருமாளாயிருக்கிறதும், ஒருவன் பிக்ஷுகனாயிருக்கிறதும். (மலர்மேலுறைவாள்) செவ்வித்தாமரைப்பூவில் பரிமளமுபாதாநமாகப்பிறந்தவள். அவயவசோபையது, சௌகுமார்யமிது. (உறைமார்பினன்) பூவிலும்கூசி யடியிடுமவள் பொருந்திவர்த்திக்கும் மார்வுபடைத்தவன். ஸ்ரீஜநகராஜன்திருமகள் பெருமாளைக் கைப்பிடித்தபின்பு ஸ்ரீமிதிலையை நினையாதாப்போலே, இவளுமிவன்மார்வில் சுவட்டிந்தபின்பு தாமரையை நினையாதபடி. "நோபஜநம்ஸ்மரந்நிதம்ஶரீரம்" (நோபஜநம்ஸ்மரந்நிதம்ஶரீரம்) என்று-முக்தர் சம்சாரயாத்ரையை ஸ்மரியாதாப்போலே, இவள்பூவைஸ்மரியாதபடி. (செய்யகோலத்தடங்கண்ணன்) ஒருசாயையிலே மேகம்வர்ஷியாநின்றால் அவ்விடம்குளிர்ந்திருக்குமாபோலே, இவள்திருக்கண்ணிலே அவன்திருமேனியில் நிறமூறியிவள் மையகண்ணாளாயிருக்கும் ; * மைப்படிமேனியிறே. அத்தையொருபடியேபார்த்துக்கொண் டிருக்குமிறேயிவள். அவளையொருபடியே கடாக்ஷித்துக்கொண்டிருக்கையாலே அவள்திருமேனியில் சிவப்பூறி இவன்புண்டரீகாக்ஷனாயிருக்கும் ; * செய்யாள்திருமார்பினில் சேர்திருமாலிறே. இருவர்படியு மிருவர்கண்ணிலும்காணலாம். அவன்படியிவள் கண்ணிலேகாணலாம். இவள்படியவன்கண்ணிலேகாணலாம். இவர்களுடைய கண்கலவி யிருக்கிறபடியிறேயிது. சிவந்துதர்ஶநீயமாய்ப் பரப்பையுடைத்தான திருக்கண்களையுடையவன். இவர்கவிவிண்ணப்பம் செய்யக்கேட்டு அத்

தாலேவந்த ப்ரீதிக்குப்போக்குவிட்டு அவன்பிராட்டியைப்பார்க்க, அவள் "அந்யபரதைபண்ணுதே யத்தைக்கேட்கலாகாதோ" என்றுப்ரேரிக்க, இப்படிகாணும்கேட்டது. (விண்ணோர்பெருமான்றன்னை) இக்கண்ணின் குமிழிக்கீழேவிளையும் நாட்டைச்சொல்லுகிறது. இக்கண்ணழகுமிச்சேர்த்தியழகும் காட்டிலெறித்தநிலாவாகாமே அநுபவிக்கைக்கு போக்தாக்களையுடையவனை. "தாமரைக்கண்ணனைவிண்ணோர் பரவும்தலைமகனை" என்கிறபடியே. பெரியபிராட்டியாரு மவனுங்கூடவிருக்க, நித்யசூரிகளோலக்கங் கொடுக்கவாயிற்றுக்கவிகேட்பித்தது. (மொய்யசொல்லால்) விஷயவைலக்ஷண்யத்தை யநுசந்தித்து "கவிபாட" என்றொருப்பட்டு, "யதொவாவொநிவ தஂனெ" (யதோவாசோநிவர்த்தந்தே) என்றுமீளுகையன்றிக்கே, விஷயத்துக்கு நேரானபாசுரமிட்டுக் கவிபாடப்பெற்றேன். மொய்யென்று-செறிவைச்சொல்லுதல், பெருமையைச்சொல்லுதல், ஸலதபந்தமா யிருக்கையன்றிக்கே கட்டுடைத்தாயிருக்கையாதல், விஷயத்தைவிளாக்கொலைகொள்ளவற்றாயிருக்கையாதல். (இசைமாலைகள்) பரிமளப்ரசுரமானமாலைபோலே, கேட்டார் துவக்குண்ணும்படி யிசைவிஞ்சியிருக்கை. (ஏத்தியுள்ளப்பெற்றேன்) "மநஃ பூர்வோவாகுத்தரஃ" (மநஃபூர்வோவாகுத்தரஃ) என்கிற நியதியில்லையாயிற் றிவர்பக்கல். நினைத்தன்றுபோலேகாணுமேத்திற்று. அவன்நினைவு மாறுமையாலே யிதுசேரவிழுமிறே, "என்முன்சொல்லும்" என்றிறே, * நாமுதல்வந்துபுகுந்து நல்லின்கவிதூமுதல் பத்தர்க்குத்தான் தன்னைச்சொன்னதாகையாலே சேரவிழுமிறே. * முடியானேயில் கரணங்கள் விடாய்த்தாப்போலே, இங்கும்-தனித்தனியேயாயிற் றநுபவிக்கிறது. தாமும்கரணங்களோ பாதியந்வயித்தார். [நாட்டினுயென்னையுனக்கு முன்தொண்டாக] அடிமையில் சுவட்டறியாதவென்னை, "இவன்நம்முடையான்" என்றங்கோநாட்டென்று நிறுத்திவைத்தாய்; உன்னுடைய வங்கீகாரத்தைக்கொண்டு என்ப்ராக்தநமான்கர்மங்களை வாசனையோடே போக்கினேன். [பாட்டினுவித்யாதி] பாடினகவிவழியாலே, சர்வஜ்ஞனுய் சர்வசக்தியாயிருக்கிற நீ என்ஹ்ருதயத்திலே யிருந்தமையை ப்ரகாசிப்பித்தாய். [கண்ணபுரத்துறையம்மானே] பாடுவித்தவூர் திருக்கண்ணபுரம். பாடுவித்தமுக்கோட்டை யிருக்கிறபடி. அப்படியே யிவர்வாக்குக் கவிபாட, இவர்தாம்நம்மோபாதி யநுசந்தித்தாரித்தனை. (வெய்யநோய் கண்முழுதும்) "அவஸ்யமநுபோக்தவ்யம்" (அவஸ்யமநுபோக்தவ்யம்) என்கிறபடியே-அநுபவித்தாலல்லது நசிக்கக்கடவதல்லாத கர்மங்களடையநசித்து. (வியன்ஞாலத்துவீயவே) இவ்விபூதியிலே யிருக்கச்செய்தே, இதடையப்போயிற்று என்றுசொல்லலாம்படியாயிற்று பகவதநுபவத்தால் பிறந்தவைலக்ஷண்யம். பனைநிழல்போலே யென்னையொருவனையும் நோக்கிக்கொள்ளுகையன்றிக்கே, * ஊரும்நாடுமுலகமும் தன்னை

ப்போலேயாம்படி, நாணிருந்த விபூதியிலுண்டான கர்மங்களுமடைய நசித்ததென்னவுமாம். அங்ஙனுமன்றிக்கே, "வியன்ஞாலமென்று - வேறொருதேசம்பேர்லே யிருக்கச்சொல்லுகையாலே, தாம் *வீற்றிருந்தேழுல கருளிச்செய்கிறது பரமபதத்திலேயிருந்துபோலேகாணும்" என்றருளிச்செய்வர். பாவநாப்ரகர்ஷத்தாலே யங்குத்தாராய்த் தோற்றினபடி, திருவுள்ளமங்கேயாய். விஸ்மயநீயமானஞாலமென்னுதல், பரப்பையுடைத்தான ஞாலமென்னுதல்.................................................*

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு. (மையகண்ணளித்யாதி) இப்பாட்டில் ஸ்ரீயஃபதித்வம் சொல்லுகிறதுக்கு நாலுதாத்பர்யம். முந்தினது (இம்மஹைஸ்வர்யத்துக்கித்யாதி) "மையகண்ணாள்" என்கிறபதத்தைக்கடாக்ஷித்து-அவதாரிகை. இம்மஹைஸ்வர்யமென்றது - "வீற்றிருந்தேழுலகும்" இத்யாதியைக்கடாக்ஷித்து.

பின்னையும்பலரும் கவிபாடாநிற்க, இவர்கவிக் காதிக்யமேதென்ன (சர்வேஸ்வரனித்யாதி) "𑌮𑌚𑍍𑌛𑌨𑍍𑌦𑌾𑌦𑍇𑌵 𑌤𑍇 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌨𑍍" (மச்சந்தாதேவதேப்ரஹ்மந்) இத்யாதியைக்கடாக்ஷித்து (ப்ரஹ்மாவினித்யாதி) "𑌮𑍁𑌨𑍇 𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌾𑌮𑍍𑌯𑌹𑌂 𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌵𑌾" (முநேவக்ஷ்யாம்யஹம்புத்த்வா) இத்யாதியைப்பற்ற (நாரதாதிகளித்யாதி) முன்னிலையாக-தத்புரஸ்காரோண. ஏவம்பூதமான ஸ்ரீராமாயணத்திற்காட்டில் வ்யாவ்ருத்தமாயிருக்கும்ப்ரகாரத்தை யிப்பாட்டிலே யருளிச்செய்கிறொன்கிறூர் (இப்படிப்பட்டவித்யாதி) தம்முடைய விப்ரபந்தத்துக் கேற்றமேதென்ன (திருமாலாலித்யாதி) ஆக, இவரருளிச்செய்த ப்ரபந்தத்துக்குப் பெரியபிராட்டியாருடைய ப்ரசாதம் ஹேதுவென்று - ஸ்ரீயஃபதித்வம் சொல்லுகிறதுக்கிரண்டாம்தாத்பர்யம். கவிக்குவிஷயம் பிராட்டியுமவனுமென்கிறவிது - ராமாயணத்துக்கு மிதுக்குமொக்குமென்று மூன்றும்தாத்பர்யம் (ஸீதாயாஸ்சரிதமித்யாதி) "𑌕𑌾𑌵𑍍𑌯𑌂 𑌰𑌾𑌮𑌾𑌯𑌣𑌂 𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌂 𑌸𑍀𑌤𑌾𑌯𑌾𑌶𑍍𑌚𑌰𑌿𑌤𑌂 𑌮𑌹𑌤𑍍 । 𑌪𑍌𑌲𑌸𑍍𑌤𑍍𑌯𑌵𑌧𑌮𑌿𑌤𑍍𑌯𑍇𑌵 𑌚𑌕𑌾𑌰 𑌚𑌰𑌿𑌤𑌵𑍍𑌰𑌤𑌃" (காவ்யம்ராமாயணம் க்ருத்ஸ்நம்ஸீதாயாஸ்சரிதம்மஹத் । பௌலஸ்த்யவதமித்யேவ சகாரசரிதவ்ரதஃ) இதிபாலகாண்டே. இவர் கவிக்கு விஷயம் பிராட்டியுமவனுமென்கிறவிது இவர்திவ்யஸூக்தியிலே காணலாமென்கிறூர் (திருமாலவனித்யாதி) யாதொன்றுநான்கற்றேன், அது திருமாலவன்கவி-ஸ்ரீயஃபதியினுடையகவி. அவளுமவனுமான சேர்த்திக்குத் தகுதியானகவியென்றபடி. தம்முடையகவிக்குவிஷயம் பிராட்டியு மவனுமென்றபடி. திருவிருத்தம் நாற்பத்தெட்டாம்பாட்டு, "மெல்லியல்" இத்யாதி. கவிகேட்பித்தது பிராட்டியுமவனுமான சேர்த்தியிலேயென்று ஸ்ரீயஃபதித்வம் சொல்லுகிறதுக்கு நாலாம்தாத்பர்யம் (அவன்பாடியித்யாதி) "திருமாலவன் கவியாதுகற்றேன்" என்றத்தைவிவரிக்கிறூர் (மையகண்ணளித்யாதி) யத்வா, இப்பாட்டுக்கு நாலுதாத்பர்யம் சொல்லலா யிருந்ததேயாகிலும், கவிக்குவிஷய மவளுமவனுமான சேர்த்தியென்னுமதுவே யிப்பாட்டுக்கு முக்யார்த்தமென்னு மிடந்தோன்ற வருளிச்செய்கிறூர் (மையகண்ணளித்யாதி) என்னுதல். ஆக, கவிக்குவிஷயம் ராமாயணத்துக்கு மிதுக்குமொக்கும்; கவிக்குஹேது அவளுமவனுமாகையாலும், பாடினகவிகேட்டது அவளுமவளுமாகையாலும், இரண்டுமிப்ப்ரபந்தத்துக் கேற்றமென்றபடி. ஆக, ஸ்ரீராமாயண

த்தில்வ்யாவ்ருத்தி யிரண்டாகாரத்தாலே ; ஓராகாரத்தாலேசாம்யம். ஆக, இப்பா ட்டிலே “ மையகண்ணாள் ” என்றுதொடங்கி - ஸ்ரீபசுபதித்வத்தை யருளிச்செய்த தக்து நாலுப்ரயோஜநம். அதாவது-கீழிற்பாட்டிற்சொன்ன வைஸ்வர்யஹேதுத் வேநவாதல், தம்முடையகவிக்கு ஹேதுத்வேநவாதல், கவிக்கு விஷயத்வேநவாத ல், கவிக்கு ஸ்ரோத்ருத்வேந வர்தலென்றதாயிற்று.

“ மை ” என்று-கறுப்பைச்சொல்லுகிறதென்று அதுக்குப்ரமாணம் ( அஸி தேக்ஷணேத்யாதி ) “ அஸிதேக்ஷணா ” ( அஸிதேக்ஷண ) இத்யாதிஸ்லோகத்தடி. இ த்தால்-ஸ்வாபாவிகமான கறுப்பைச்சொல்லுகிறது. அவயவசோபையைச் சொன் னபடி. அன்றிக்கே, “ மை ” என்று-கறுப்பாய், அத்தாலே-குளிர்த்தியை விவக்ஷி த்துபாவம் ( பெரியபிராட்டியாரித்யாதி ) ஒருபாட்டம்-ஒருபாறல். ஒருகால் மஹ த்தான வென்றுமாம். மழை-வர்ஷம். மழைபெய்தாற்போலேயிருக்குமோ திருக்க ண்கள்குளிர்த்தியென்ன ( மழைக்கணித்யாதி ) மழைபோலே குளிர்ந்தகண்ணையு டையளாய், மடப்பம் முதலானஸ்த்ரீத்வ குணத்தையுடையவளென்றபடி. திருவி ருத்தம் ஐம்பத்திரண்டாம்பாட்டு, “ அழைக்கும்கருங்கடல் ” இத்யாதி. “ செய்ய கோலத்தடங்கண்ணன் ” என்றத்தைக்கடாக்ஷித்துபாவம் ( இவள்கடாக்ஷமித்யா தி ) இவள்கடாக்ஷமுண்டாகில் புண்டரீகாக்ஷனுமையும், அதில்லாவிடில் விரூபாக்ஷ னுமையுமாகிறவிதுக்கு நியாமகமேதென்ன ( நமஇத்யாதி ) ஸ்ரீரங்கராஜஸ்தவே, “ நமஃஶ்ரீரங்கநாயக்யை யத்ப்ரூவிப்ரமபேதத:। ஈஶேஶிதவ்யவை ஷம்யநிம்நோந்நதமிதம் ஜகத் ” ( நமஸ்ஸ்ரீரங்கநாயக்யையத்ப்ருவிப்ரமபேதத: । ஈஸேஸிதவ்யவைஷம்யநிம்நோந்நதமிதம்ஜகத்) இஸ்லோகார்த்தம் (ஒருவனித்யா தி ) ( பிக்ஷாசனுமிருக்கிறதும் ) இதினுடையசத்பாவா சத்பாவமிறேயென்றுகூட் டுவது. “ மலர்மேல் ” என்றதுக்கர்த்தம் ( செவ்வியித்யாதி ) கீழிற்பதத்தையும் கூட்டிபாவம் ( அவயவேத்யாதி ) “ பாதாரவிந்தமேவ ” ( பாதாரும்துத மேவ ) இத்யாதியைக்கடாக்ஷித்து ( பூவிலும்கூசியென்றது ) “ உறை ” என்கிற வர்த்தமாநத்துக்கு த்ருஷ்டாந்தமுகேநார்த்தம் ( ஸ்ரீஜநகராஜனித்யாதி ) த்ருஷ் டாந்தாந்தரம் ( நோபஜநமித்யாதி )

“ மையகண்ணாள் ” என்றத்தைக்கடாக்ஷித்து, இவள் * மையகண்ணாளா கைக்கும் அவன் * செய்யகோலத் தடங்கண்ணனுகைக்கும் ஹேதுவையருளிச்செ ய்கிறார் ( ஒருசாயையிலேயித்யாதி ) சாயை-ப்ரதேசம். அவன்திருமேனி கறுத்தி ருக்குமென்னைக்குப்ரமாணம் ( மைப்படியித்யாதி ) திருவிருத்தம் தொண்ணூற்று நாலாம்பாட்டு, “ மைப்படிமேனியும் ” இத்யாதி. அஞ்சநத்தின்படியான திருமே னியும். கண்டார்கண் குளிரும்படியான வடிவுமென்றபடி. திருமேனியைப் பார்த்தி ருக்குமோவென்ன ( அத்தையொருபடியேயித்யாதி ) இவள்திருமேனி சிவந்திருக் குமோவென்ன ( செய்யாளித்யாதி ) செய்யாள்-சிவந்திருக்குமவள். இருவர்படி யுமென்றவாக்யம்-சாபேக்ஷியாய், மேலுக்குவிவரணம். கீழ்வாக்யவிவரணம் ( அவன் படியித்யாதி ) இங்ஙனன்றிக்கே மாறுடி, இவள்கடாக்ஷத்தாலே யவன்திருமேனி கறுத்தும், அவன்கடாக்ஷத்தாலே யிவள்திருமேனி சிவந்துமிருக்குமென்கிறார் ( இ வர்களுடையவித்யாதி ) கண்கலவி-சக்ஷுஸ்ஸம்யோகமும், சக்ஷு:ப்ரீதியும். கண் களின்நிறம் திருமேனிகளிலேயூறி செய்யாளானதும் மைப்படிமேனியானதுமென் று தாத்பர்யம். இவ்வர்த்தம் “ மையார்கருங்கண்ணி ” என்கிறபாட்டிலேவ்யக்த

ம். சப்தார்த்தம் ( சிவந்தித்யாதி ) இருவர்கண்ணழகையும் வர்ணிக்கிறதுக்குபாவம் ( இவர்கவியித்யாதி )

( இக்கண்ணின்குமிழிக்கீழேயிதி ) ஸ்வாமித்வப்ரயுக்தமான ரக்ஷகத்வம்சொன்னபடி. தாரகத்வமும் போஷகத்வமும்சொன்னபடி. குமிழி-மதகுமோழை. தாத்பர்யாந்தரம் ( இக்கண்ணழகுமித்யாதி ) இந்தவர்த்தத்தில், “ பெருமான் ” என்று-போக்யதை யளவிறந்தமைசொல்லுகிறது. இவர்கள் கண்ணழகுக்கு போக்தாக்களோவென்ன ( தாமரைக்கண்ணனையித்யாதி ) கீழெல்லாவற்றையும் கூட்டிபாவம் ( பெரியபிராட்டியாருமித்யாதி )

விஷயத்துக்கு நேரானபாசுரமென்றது - ( பெருமையை ) என்றவிரண்டாமர்த்தத்துக்குச்சேர. செறிவையும் பெருமையையும் விவரிக்கிறூர் ( ஸ்லதபந்தமித்யாதி வாக்யத்வயத்தாலே ) விளாக்கொலைகொள்ள-கபளீகரிக்க. மாலை என்னுதே, “ இசைமாலை ” என்றதுக்குபாவம் ( பரிமளேத்யாதி ) உள்ளியேத்தப் பெற்றேனென்னுதே, “ ஏத்தியுள்ளப்பெற்றேன் ” என்கிறதுக்குபாவம் ( மநஇத்யாதி ) இயம்யஜுஸ்ஸம்ஹிதாயாம். (கியதியில்லையாயிற்று) ட்ரீதிவழிந்த சொல்லாகையாலே ரென்றபடி. பலிதம் ( கினைத்தன்றித்யாதி ) ஆனால் கவிசேரவிருந்தபடியெப்படியென்ன ( அவன்கினைவித்யாதி ) அவன்கினைவு மாருமலிருக்கு மென்னுமதுக்கு ப்ரமாணம் ( என்முன்சொல்லு மித்யாதிவாக்யத்வயம் ) (நாமுதலித்யாதி) என்னுக்கிலே முற்பாடனாய்வந்துபுகுந்து லக்ஷணோபேதமான விலியகவிகளை அஸ்ப்ருஷ்ட சம்சாரகந்தரான நித்யஸூரிகளுக் கநுபாவ்யமாம்படிதானே தன்னைச்சொன்னவித்யர்த்த:. தாத்பர்யாந்தரம் ( முடியானேயிச்யாதி ) முந்தினவர்த்தத்துக்கு-வாய்வெருவினபடியைச் சொல்லுகிறது. அன்றிக்கே, ஏகார்ந்தமென்னுதல். கரணங்கள் தனித்தனியே யநுபவிக்கிறனவாகில்*முடியானேயிற்போலே யவற்றைக் கர்த்தாக்களாகச்சொல்லாதே “ ஏத்தியுள்ளப்பெற்றேன் ” என்னக்கூடுமோவென்ன ( தாமுமித்யாதி ) கரணங்களோபாதி யந்வயிக்கைக்கு ப்ரமாணம் ( நாட்டினாயித்யாதி ) திருமொழி யெட்டாம்பத்து பத்தாந்திருமொழி ஒன்பதாம்பாட்டு. இப்பாட்டுக்கர்த்தம் ( அடிமையிலித்யாதி ) நாட்டுகை-ஓலையி லெழுத்தாணியைநாட்டுகை. அதாவது-எழுதுவிக்கை. நாட்டென்று-எழுதென்று. “ பாட்டினுலுன்னையென்னெஞ்சத்திருந்தமைகாட்டினாய் ” என்றபோதே - வாக்கேஸ்வதந்த்ரமாய்ப் பாடினதென்று தோற்றுகிறது. ஆக, “ ஏத்தியுள்ளப்பெற்றேன் ” என்றதுக்கிரண்டுதாத்பர்யம் - “ நாமுதல்வந்துபுகுந்து ” என்று, அவனுள்ளே யிருந்துசொல்லுகையாலே யென்றென்று; இரண்டாவது-கரணங்கள் * முடியானேயில் தனித்தனியே கூப்பிட்டாற்போலே அநுபவத்திலும் பரஸ்பரநிரபேக்ஷமாக வநுபவிக்கிறதென்று. முக்கோட்டை-எல்லார்க்கும் கவிதோற்றுவிக்கும் விநாயகஸ்த்தலம். இத்தால்பலிதம் ( அப்படியேயித்யாதி )

வியன்ஞாலத்திலே யிருக்கச்செய்தே வினைகள் வீயக்கூடுமோவென்ன ( இவ்விபூதியிலேயித்யாதி ) யோஜநாந்தரம் ( பனிமிழலித்யாதி ) இவ்வர்த்தத்துக்கு, “ வியன்ஞாலம் ” என்றது-வியன்ஞாலத்திலுள்ளாருடைய வெய்யநோய்கள் முழுதும்வீயவென்றபடி. மூன்றும்தாத்பர்யம் ( அங்ஙனுமன்றிக்கேயித்யாதி ) இவ்வர்த்தத்துக்கு, ஞாலம் என்னுதே, “ வியன்ஞாலம் ” என்று-ஆஸ்சர்யமான பூமியென்றபோதே, தேசாந்தரஸ்த்தனுக்கிறே தேசாந்தரமாஸ்சர்யமாய்த் தோற்றுவது ; ஆகையாலே, பரமபதத்திலேயிருந் தருளிச்செய்கிறுனென்று தாத்பர்யம்.

அங்஖னுமன்றிக்கே யித்யாதிவாக்யம் - " வியன்ஞாலம் " என்கிறபரோக்ஷநிர்த்தேசத்துக்கு பாவமாதல். இங்கேயிருக்கச்செய்தே அங்குத்தாராய்ச் சொல்லக்கூடுமோவென்ன ( பாவநேத்யாதி ) ஆக, " வியன்ஞாலத்துவீய " என்றதுக்குமூன்று தாத்பர்யம்-முக்தியிலேயன்றே வீவதென்னில், இங்கேயிருக்கச்செய்தே தமக்குப்போயிற்றென்றென்று ; பூமியிலுள்ளார் பாபம்நசிக்கும்படி யென்றிரண்டாவது ; " வியன்ஞாலம் " என்றுவேறே யொன்றாகவருளிச்செய்கையாலே-பாவநாப்ரகர்ஷத்தாலே தாம்பரமபதத்திலே யிருக்கிறவரா யிந்தவிபூதியில் தம்முடைய சம்பந்தமுள்ளவர்களுடைய பாபம்நசிக்கும்படி பாடப்பெற்றேனென்று மூன்றுவது.

மையகண்ணாளித்யாரப்ய, மொய்யசொல்லாலே சமைந்தவிசையை யுடையமாலைகளாலே-வியன்ஞாலத்து-வெய்யநோய்கள் முழுதும்-வீயும்படி-ஏத்தியுள்ளப்பெற்றேனென்றந்வயம். வெய்ய-க்ரூரங்களான. நோய்கள்-வ்யாதிமுதலான க்லேசங்களாதல், தத்ஹேதுவான கர்மங்களாதல். மையகண்ணாள்-கறுத்தகண்ணை யுடையவளென்னுதல், மையணிந்தகண்ணையுடையவளென்னுதல். " அவஶ்யமநுபோக்தவ்யம் க்ருதம்கர்ம ஶுபாஶுபம் । நாபுக்தம்க்ஷீயதே கர்ம கல்பகோடிஶதைரபி " ( அவஶ்யமநுபோக்தவ்யம்க்ருதம்கர்மஶுபாஶுபம் । நாபுக்தம்க்ஷீயதேகர்மகல்பகோடிஶதைரபி. )..............................................*

## மூன்றாம்பாட்டு.

வீவிலின்பமிகவெல்லைநிகழ்ந்தநம்மச்சுதன்
வீவில்சீரன்மலர்க்கண்ணன்விண்ணோர்பெருமான்றன்னை
வீவில்காலமிசைமாலைகளேத்திமேவப்பெற்றேன்
வீவிலின்பமிகவெல்லைநிகழ்ந்தனன்மேனியே.

### ஆறாயிரப்படி.

(வீவிலின்பம்) ஆஶ்ரிதவாத்ஸல்ய ஸௌஶீல்யைஶ்வர்ய ஸௌந்தர்யாத்யநவதிக மங்களகுணவிஶிஷ்டனாய், ஸ்வபரிசரணபோகஶேஷஶேஷாஶநாத்ய பரிமிதநித்யஸித்தபரமஸூரிபி ரநவரதஸம்ஸேவ்யமானனாய், ஸ்ரீவைகுண்டநிலயனாய், லக்ஷ்மீபூமிநீளாநாயகனாயிருந்த தன்னைத்தானநுபவித்ததினாலே தனக்குவந்த நிரவதிகாநந்தமும், தன்னைத்திருவாய்மொழி பாடுகையாலெனக்குவந்த வாநந்தமுமானால் இதிலே ஸஹஸ்ராம்ஶைகதேசத்துக்குப் போருமோவதென்கிறார் ..............................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், மேன்மையாலும் ஸ்ரிய:பதித்வத்தாலும் ஸித்தமான வாநந்தாதிகுணயோகத்தையுடையவனை ஸ்தோத்ரம்பண்ணிக்கிட்டப்பெற்று நிரதிசயாநந்தபூர்ணனானேனென்கிறார்.

வீவில்-அவிச்சிந்நமான. இன்பம்-ஆநந்தமானது. மிக-ஆநந்தவல்லீக்ரமத்திலே அவாங்மநஸகோசரமாம்படி மிகுதியான. எல்லை-எல்லையிலே. நிகழ்ந்த-வர்த்திக்கிறவாகாரத்தை. நம்-என்போல்வார்க்கநுபவிப்பிக்கிற. அச்சுதன்-அப்ரச்யுதஸ்வபாவனுய். அவ்வாநந்தத்துக்கடியாகச்சொல்லப்பட்ட, வீவில்-முடிவில்லாத. சீரன்-யுவத்வாதிநித்யகுண விபூதிவைலக்ஷண்யத்தையுடையனுய். மலர்க்கண்ணன்-இவ்வதிசயத்துக்கு ஸூசகமாம்படிபுண்டரீகாக்ஷனுய். இக்கண்ணழகாலே, விண்ணோர் - * விண்ணோர்பரவும். பெருமான்றன்னை - தலைமகனனவனை. வீவு - ஒழிவு. இல்-இல்லாத. காலம்-காலமெல்லாம். இசை-காநரூபமான. மாலைகள்-சந்தர்ப்பத்தாலே. ஏத்தி-ஸ்துதித்து. மேவப்பெற்றேன்-கிட்டப்பெற்றேன். மேவி- "ல஬்ஹ்வாநந்தீஹவதி" (லப்த்வாநந்தீபவதி) என்கிறபடியே ஆநந்தமயனனவனைக்கிட்டி. "ஶ்ரோத்ரியஸ்யசாகாமஹதஸ்ய" (ஶ்ரோத்ரியஸ்யசாகாமஹதஸ்ய) என்னும்கணக்கிலே அவனேடொத்த, வீவில்-முடிவில்லாத. இன்பம்-ஆநந்தத்தினுடைய. மிகவெல்லை-அபரிச்சேத்யமான அபிவ்ருத்திகள். நிசழ்ந்தன - உண்டாயிற்றின.

நிகழ்ந்தனமென்று-ப்ரீதியாலே பஹுமாநோக்தியாகவுமாம்..............*

## ஈடு - மூன்றாம்பாட்டு.

சமஸ்தகல்யாணகுணுத்மகனுய் உபயவிபூதியுக்தனை சர்வேஶ்வரனைக்கிட்டிக் கவிபாடுகையாலே, அவனுடைய வாநந்தத்தையும் விளாக்கொலைகொள்ளும்படியான வாநந்தத்தையுடையனுனேனென்கிறுர்.

(வீவிலின்பமித்யாதி) வீவின்றிக்கே - ஒருவிச்சேதமின்றிக்கேயிருப்பதான தான், இன்பமாய் - ஆநந்தமாய்; அதுதா னெவ்வளவுபோருமென்னில் (மிகவெல்லைநிகழ்ந்த) "இனியிதுக்கவ்வருகில்லை" என்னும்படியான வெல்லையிலேவர்த்திக்கிற. (நம்) ஆநந்தவல்லியில் ப்ரசித்தி. (அச்சுதன்) இதொரு ப்ரமாணங்கொண்டுபபாதிக்கவேணுமோ, இதுக்கொருகாலும் விச்சேதமில்லையென்னுமிடம் திருநாமமே சொல்லுகிறதன்றே. (வீவில்சீரன்) இவ்வாநந்தத்துக்கடியான நித்யவிபூதியையுடையவன். நித்யமானகுணங்களை யுடையவனென்றுமாம். குணவிபூதிகளாநந்தாவஹமாயிறேயிருப்பது (மலர்க்கண்ணன்) ஸ்வாபாவிகமான வாநந்தத்தையுடையவனென்னுமிடம் திருக்கண்கள்தானே கோள்சொல்லிக்கொடுக்கும். (விண்ணோர்பெருமான்றன்னை) இக்கண்ணழகுக்குத்தோற்று "ஜிதம்" என்பாரை யொருநாடாகவுடையவனை. "தாமரைக்கண்ணனைவிண்ணோர்பரவும் தலைமகனை" என்னக்கடவதிறே. (வீவில்காலமித்யாதி) க்ஷுத்ரவிஷயங்களை யநுபவிக்கப்புக்கால், அவை யல்பாஸ்த்திரத்வாதி தோஷதுஷ்டமாகையாலே யநுபவிக்கும் காலமுமல்பமாயிருக்கும்; இங்கு, அநுபாவ்யவிஷய மபரிச்சிந்நமாகையாலே காலமுமநந்தகாலமாகப்பெற்றது. * ஒழிவில்காலமெல்லா மென்னவேண்டியிருக்கும். (இசைமாலைகள்) வாசிகமான அடிமையிறே செய்கிறது. "கருமுகைமா

லை '' என்னுமாபோலே, இசையாலேசெய்தமாலை. ( ஏத்திமேவப்பெற்றேன் ) ஏத்திக்கொண்டு கிட்டப்பெற்றேன்.

இத்தால்பலித்ததென்னென்னில் ( வீவிலின்பமிகவெல்லைநிகழ்ந்தனன் ) நித்யமாய் நிரதிசயமான வாநந்தத்தையுடையேனானேன். அவனுடைய வாநந்தத்தையு மும்முடையவாநந்தத்தையு மொக்கச்சொன்னீர், பின்னை யுமக்கு வாசியென்னென்னில்; சிறிதுவாசியுண்டெனக்கு (மேவியே) அவனுக்குஸ்வதঃ, எனக்கவனைமேவி; அவனுடையவாநந்தத்துக்கடியில்லை, என்னுடையவாநந்தத்துக்கடியுண்டு. “ ஸைஷஹெ்வா நந்யாதி ” (ஏஷஹ்யேவாநந்தயாதி) என்கிறவேற்றமுண்டெனக்கு, அவனுக்கதுதான்றேன்றி ..........................................*

## ஜீயர் அரும்பதம்.

மூன்றும்பாட்டு ( வீவிலின்பமித்யாதி ) “வீவில்சீரன், விண்ணோர்பெருமான்” என்றத்தைப்பற்ற (சமஸ்தேத்யாதிவிசேஷணத்வயமும்) அவனுடைய வாநந்தத்தையும் விளாக்கொலை கொள்ளும்படியானவென்றது - ஈஸ்வரனுடைய வாநந்தத்தைச்சொல்லி “ மிகவெல்லைநிகழ்ந்தனன் ” என்று - அநந்தரம் தம்முடையவாநந்தத்தைச்சொல்லுகையாலே.

லோகத்தி லாநந்தத்துக்கு அல்பத்வபரிச்சிந்நத்வங்களுண்டிறே, அந்தவிரண்டுமில்லையென்கிறது (வீவிலின்பமித்யாதி மூலவாக்யத்தாலே) வீவு-நாசம். இல்-இல்லாமை. “வீவில்” என்றத்தாலே-நித்யத்வம், “மிகவெல்லைநிகழ்ந்த” என்றத்தாலே-அபரிச்சிந்நதை. விச்சேதமின்றிக்கேயிருக்கிற வாநந்தத்தினுடைய முடிந்தவெல்லையிலேவர்த்திக்கிறவென்று சப்தார்த்தம். தானென்றது-ஸ்வயமென்றாய், ஆநந்தத்தை. மிகவெல்லை-முடிந்தவெல்லை. ஆநந்தவல்லியில் ப்ரசித்தியென்றது-“யதொவாசொநிவத்தந்தே” (யதோவாசோநிவர்த்தந்தே) இத்யாதியைப்பற்ற. இது-நித்யநிரதிசயாநந்ததை யுடையனாயிருக்கிறவிது. இதுக்கு-ஆநந்தத்துக்கு. “ யஸ்மாந ச்யுதபூர்வோஹமச்யுதஸ்தேநகர்மணா” ( யஸ்மாந்நஸ்யுதபூர்வோஹமச்யுதஸ்தேநகர்மணா ) இதி வசநமத்ரவிவக்ஷிதம். ஆநந்தாந்நச்யவதீதி-அச்யுதঃ என்றிவ்விடத்துக்குவிவக்ஷிதம்.

“சீர்” என்றது - ஸ்ரீயென்றபடியாய், விபூதியைச்சொல்லுகிறது. ஆநந்தத்தைச்சொன்னவநந்தரம் குணவிபூதிகளைச்சொல்லுவானென்னென்ன (குணவிபூதிகளித்யாதி) ஆநந்தஹேதுத்வேந சொல்லுகிறதென்றபடி. இறேயென்றது - “ யுவாஸ்யாத் ” ( யுவாஸ்யாத் ) இத்யாதிஸ்ருதி ப்ரசித்தியைப்பற்ற.

“வீவிலின்பம்” இத்யாதியைக்கூட்டி தாத்பர்யம் (ஸ்வாபாவிகேத்யாதி)

“மலர்க்கண்ணன்” என்றவநந்தரம் “விண்ணோர்பெருமான்” என்றதுக்கு வாஸநை (இக்கண்ணழகுக்கித்யாதி) கண்ணழகுக்குத்தோற்று “ஜிதம்” என்பர்களோவென்ன; அதுக்கு ப்ரமாணம் (தாமஹாயித்யாதி)

"வீவில்காலம்" என்று விசேஷிக்கிறதென், வீவையுடைத்தான காலமுண்டோவென்ன (க்ஷாத்ரவிஷயங்களையித்யாதி) இவ்விபூதியிலே அநந்தகாலமேத்தக்கூடுமோவென்ன (ஒழிவில்காலமித்யாதி) விஷயமபரிச்சிந்நமாகையாலேயிறே "ஒழிவில்காலம்" என்னவேண்டிற்று. அதாவது-இந்தவிபூதியிலே யிப்படிகூடாவிடினும், பாரிக்கவேணுமென்றபடி. "மேவப்பெற்றேன்" என்று - பெற்றபேறேதென்ன (வாசிகமானவித்யாதி) "இசைமாலைகள்" என்கையாலே -சப்தமொழிய இசையாலேபண்ணப்பட்டவெவென்றபடி. இசையோடேகூடின மாலையென்னாதே, கேவலம் "இசைமாலைகள்" என்றதுக்குபாவம் ( கருமுகைமாலையித்யாதி ) கருமுகைமாலையென்றது-புஷ்பாந்தரம்சலசாதே கேவலம் கருமுகைப்பூக்களாலேசெய்யப்பட்டதென்றபடி. (கிட்டப்பெற்றேன்) கிட்டுகை-மாநஸாநுபவவைஸத்யம்.

மேலுக்கவதாரிகை (அவனுடையவித்யாதி) (அவனுக்குஸ்வதஇதி) இத்தால், (ஸ்வதஃ) ஆகையாலே (அவனுடையவாநந்தத்துக்கடியில்லை) (அவனைமேவி) ஆகையாலே (என்னுடையவாநந்தத்துக்கடியுண்டு) என்றபடி. "மேவி" என்றத்தைப்பற்றவிறே, ப்ரஹ்மசப்தார்த்தமான "ஹ்யூஹாவமெதாநிரஹ்ரூநிஷி" ( ஸ்வபாவதோநிரஸ்தநிகில ) இத்யாதிபாஷ்யத்துக்கு ஶ்ருதப்ரகாசிகையிலே த்விதீயயோஜநையாக "கூநுஷிகெ நஹ்ஹாவுதஊதிவஷெநவாமிக்ஷ)ஊக்ஷு வ்வெஷுஃ" (அநுஷக்தேநஸ்வபாவத இதிபதேநவாரித்யமுக்தவ்யவச்சேதஃ) என்றருளிச்செய்தது. ஆநந்தத்துக்கடிதன்னைக்காட்டுகிறார் (ஏஷஹ்யேவேத்யாதி) இத்தால்-ஸ்வார்ஜிதம்போலே யவனுடையவாநந்தம், பித்ரார்ஜிதம்போலே தம்முடையவாநந்தமென்றதாயிற்று. க்ரமேணாந்வயஃ.......................................................*

---

## நான்காம்பாட்டு.

மேவிநின்றுதொழுவார்வினைபோகமேவும்பிரான்
றூவியம்புள்ளுடையானடலாழியம்மான்றன்னை
நாவியலாலிசைமாலைகளேத்திநண்ணப்பெற்றே
னாவியென்னாவியையானறியேன்செய்தவாற்றையே.

### ஆறுயிரப்படி.

(மேவிநின்று) கீழ்ச்சொன்னவிண்ணோராகிறார் - பெரியதிருவடி, திருவாழி, திருச்சங்கு, திருவநந்தாழ்வான், ஸ்ரீசேநாதிபதியாழ்வான் முதலான திவ்யபுருஷர்கள். அந்ததிவ்யபுருஷர்களாலே பரிசர்யமாணசரணாரவிந்த யுகளனாய், பக்தியுக்த ஜநஸமஸ்ததுःகாபநோதந ஸ்வபாவனாய் தத்ஸம்ஶ்லேஷஸ்வபாவனாயிருந்த வெம்பெருமானைத் திருவாய்மொழி பாடிக்கொண்டு ஸம்ஶ்லேஷிக்கப்பெற்றேன்; அத்யந்த நிக்ருஷ்டனானவென்னையிப்படி விஷயீகரித்தருளுவதே!, ஒருவனுடைய குணவத்தையிருக்கும்படியே ! யிதுவென்கிறார் .......................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், போக்தாக்களான அநந்யப்ரயோஜநரைக் காத்தூட்டும் வாஹநாயுதாதிகளையுடையவனை ஸ்துதித்துக்கிட்டப்பெற்றேனென்கிறார்.

மேவி-அநந்யப்ரயோஜநராய்க்கலந்து. நின்று-நிலைநின்று. தொழுவார் - அநுபவிப்பாருடைய. வினை-அநுபவவிரோதிபாபங்கள். போக-ஸ்வயமேவநசிக்கும்படி. மேவும்-தானவர்களோடேஸம்ஶ்லேஷிக்கும். பிரான் - மஹோபகாரகனாய். தூவி - " அஞ்சிறைப்புள்ளுமொன்றேறிவந்தார் " என்கிறபடியே யிவர்களிருந்தவிடத்தே தன்னைக்கொண்டுவருவதான பக்ஷபாதத்தையும். அம்-அழகையுடைய. புள்-பெரியதிருவடியை. உடையான்-வாஹநமாகவுடையனாய். அடல் - " கைகழலாநேமியான் நம்மேல்வினைகடிவான் " என்கிறபடியே ஆஶ்ரிதவிரோதி நிரஸநார்த்தமாகயுத்தோந்முகமான. ஆழி-திருவாழியையுடையனான. அம்மான்றன்னை-சர்வேஶ்வரனை. நா-நாவினுடைய. இயலால்-வ்ருத்தியாலே. இசை-கா்நரூபமான. மாலைகள்-சந்தர்ப்பங்களையிட்டு. ஏத்தி-ஏத்துகையாகிற. நண்ண-நண்ணுதலை. பெற்றேன்-பெற்றேன். ஆவி-எனக்கந்தராத்மபூதனாய்தாரகனானவன். என்- தனக்குசரீரமானவென்னுடைய. ஆவியை-ஆத்மாவை. செய்தஆற்றை-ஸ்துதிப்பித்துகப்பித்துவிரும்புகிற ப்ரகாரம். யான்-நான். அறியேன் - " ஏவம்விதம் " (ஏவம்விதம்) என்று பரிச்சேதித்தறியமாட்டுகிறிலேன்.

அறிவு மாழங்காற்படுகைக் குறுப்பாயிற்றென்றுகருத்து....................*

## ஈடு - நான்காம்பாட்டு.

அநந்யப்ரயோஜநரையும், முதலிலே ப்ரயோஜநாந்தரங்களிலிழியாத நித்யசூரிகளையுமுடையனாய்வைத்து, நித்யசூரிகளுக் கவ்வருகான தான் நித்யசம்சாரியான வென்பக்கல்பண்ணின மஹோபகாரமென்னால் பரிச்சேதிக்கவொண்ணுகிறதில்லையென்கிறார்.

(மேவிநின்றுதொழுவார்) கிட்டக்கொண்டு " தேஹிமேதாமிதே " (தேஹிமேதாமிதே) என்று ப்ரயோஜநாந்தரத்துக்கு மடியேற்றுக்கொண்டுபோகையன்றிக்கே, " வழுவாவகைநினைந்துவைகல்தொழுவார் " என்கிறபடியே அவன்றன்னையே ப்ரயோஜநமாகக்கொண்டு தொழுமவர்கள். " இன்றுவந்தித்தனையுமமுது செய்திடப்பெறில் " என்று தொழுமவர்கள். (வினைபோக) அவர்களுக்குப்பின்னைவினையுண்டோவென்னில்; ப்ரயோஜநாந்தரத்திலே நெஞ்சுசெல்லுகைக்கடியான பாபங்கள்போம்படியாக. (மேவும்பிரான்) இவனநந்யப்ரயோஜநனுகக்கிட்டினவாறே அவனுமநந்யப்ரயோஜநனாய்க்கிட்டுமே; நடுவு வினைக்கொதுங்கநிழலில்லாமையாலே நசித்துப்போம்; " வல்வினையார்தாம் - மடியடக்கிநிற்பதனில் - ஈண்டடியெடுப்பதன்றோவழகு" என்றாரிறே. (பிரான்) உபகாரமேசீலமாம்படி யிருக்குமவன். முன்புநிலநாள் ப்ரயோஜநாந்தர

பராய்ப் பின்புதன்னையே ப்ரயோஜநமாக விரும்பினர்திறத்தி லுபகரிக்கும்படிசொல்லிற்று? முதலிலேப்ரயோஜநாந்தரத்தில் நெஞ்சுசெல்லாதபடியான அநந்தவைவநதேயாதிகளையுடையனு யிருக்கும்படிசொல்லுகிறது (தூவி) சிறகு. இத்தால்நினைத்தவிடத்திலே கொண்டோடுகைக்கடியான பரிகரத்தையுடையனுய். (அம்புள்) "ஸுஷ்ழீ ஸஂஸகிணாஜு ஶோபிநா" (த்வதங்க்ஸிஸம்மர்த்தகிணாங்கஶோபிநா) என்னும்படியான வழகையுடையனுகையால் வந்தவேற்றத்தையுடையவன். (அடலாழி) அஸ்த்தாநேபயசங்கியாகையாலே யெப்போதுமொக்க யுத்தோந்முகனுயிருக்கும் அடல்-மிடுக்கு. (அம்மான்றன்னை) பெரியதிருவடிதிருத்தோளிலே பேராதிருத்தல், திருவாழியைச்சுவியாதேபிடித்தல் செய்யவல்லனுயிற்று-சர்வாதிகனுவான். (நாவியலாலிசைமாலைகளேத்தி) நெஞ்சொழியவே, வாக்ப்ரவ்ருத்திமாத்ரமே இசைமாலைகளாயிற்றின. நாப்புரட்டினதெல்லா மியலுமிசையுமாய்க்கிடக்கை. (ஏத்திநண்ணப்பெற்றேன்) இவர், நண்ணியல்லவேத்திற்று; ஏத்தியாயிற்று நண்ணிற்று.

(ஆவியென்னுவியை - செய்தவாற்றை-யானறியேன்) ஆவி - நிருபாதிகனுன சர்வாத்மா. "உலகங்கட்கெல்லாம்-ஓருயிர்," "ஆத்மந ஆகாஶஸ்ஸம்பூதஃ," (ஆத்மநஆகாஶஸ்ஸம்பூதஃ) "சர்வாத்மா." (என்னுவியை) அத்யந்தம் ஹீநனுனவென்னை, செய்தவாற்றையறியேன். விபுவானதான் அணுவானவென்னை, "ஏஷஹ்யேவாநந்தயாதி" (ஏஷஹ்யேவாநந்தயாதி) "வீவிலின்பமிகவெல்லைநிகழ்ந்தனன்" என்று - தன்னேடொத்த வாநந்தத்தையுடையேனும்படி பண்ணினுன். சர்வசரீரியானவன் ஸ்வஶரீரத்திலே யொன்றைப் பெறுப்பேறுபெற்முனைகத் தலையாலேசுமப்பதே. (யானறியேன்) அநுபவித்துக் குமிழிநீருண்டுபோமித்தனைபோக்கி, அதுபேச்சுக்கு நிலமல்லவென்கிறார். உபகாரஸ்ம்ருதியுமவனதென்னவுமாம் ..........................................................*

## ஜீயர் அரும்பதம்.

நாலாம்பாட்டு (மேவிநின்றித்யாதி) "மேவிநின்று" என்றுதொடங்கி, "செய்தவாற்றை-யானறியேன்" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை (அநந்யேத்யாதி) "அம்மான்" என்றத்தைக்கடாக்ஷித்து (அவ்வருகானதானென்றது) "யானறியேன்செய்தவாற்றையே" என்றத்தைக்கடாக்ஷித்து (நித்யசம்சாரியானவித்யாதி)

"நின்று" என்றுவிசேஷித்ததுக்குபாவம் (கிட்டக்கொண்டித்யாதி) (தேஹிமே இத்யாதி) மேதேஹி-எனக்கபீஷ்டத்தைத்தா. தேததாமி-உனக்குத்தருகிறேன்; அதுக்கிடான சாதநாநுஷ்ட்டாநம் பண்ணுகிறேனென்றபடி. அடியொற்றிக்கொண்டு-பின்சென்றுகொண்டு. இது-பாடாந்தரோ. (வழுவாவகையித்யாதி) ப்ர

யோஜநாந்தரத்தைக்கொண்டுவிட்டு நமுவாதேகிட்டிநின் றநுபவிக்கும்ப்ரகாரத்தை யநுசந்தித்து சர்வகாலமு மநுபவிக்குமவர்களென்று பாசுரத்துக்கர்த்தம். முதற்றிருவந்தாதி யிருபத்தாரும்பாட்டு. "எழுவார்" இத்யாதி. இப்படிதொழுகிற பேரானென்ன (இன்றுவந்தித்யாதி) (இன்றுவந்தித்தனையுமமுதுசெய்திடப் பெறில் நானொன்று நூறாயிரமாகக்கொடுத்துப் பின்னுமாளும்செய்வன்) நான்ப்ரார்த்திக்கிறவின்றுவந்து. இத்தனையும்-நூறுதடாவில்வெண்ணெயும் நூறுதடாநிறைந்தவக் காரவடிசிலும், அமுதுசெய்யப்பெற்றால், இப்படிப்ரார்த்திக்கிறநான், ஒன்றுநூறாயிர மாகக்கொடுத்து-நூறுதடாவுக்கு நூறாயிரம்தடாவாகக்கொடுத்து, பின்னையுமடிமையும் செய்வேனென்றபடி. நாய்ச்சியார்திருமொழி யொன்பதாந்திருமொழி யேழாம்பாட்டு. கொடுத்துக்கொள்ளாதே, கொண்டதுக்குக் கைக்கூலி கொடுக்க வேணுமிதிவத்.

அவர்களுக்கென்றது - மேவிநின்று தொழுமவர்களுக் கென்றபடி. பாபவிமோசகமாகையாலேயன்றோ அநந்யப்ரயோஜநராய்க்கொண்டு தொழுகிறார்கள், அவர்களுக்குப்பின்னை வினையுண்டோவென்னி லென்றபடி. (ப்ரயோஜநேத்யாதி) இத்தால்-ஆஶ்ரயணவிரோதி கழிந்ததேயாகிலும்,பாபஹேதுவான ஶரீரமிருக்கையாலே ப்ரயோஜநாந்தரத்திலே நெஞ்சுசெல்லுகைக்கடியான பாபமுண்டாகயோக்யதை யுண்டிறேயென்றுகருத்து. அவன்கிட்டினால்பாபம் நசித்துப்போமென்னுமதுக்கு ப்ரமாணம் (வல்வினையாரித்யாதி) வல்வினையார்தாம்-வல்வினையாரானவர். முழுச்சொல்லு. புடவையொதுக்கி நெருக்குப்பட்டு நிற்குமதிற்காட்டில் மீளக்கால்வாங்கிப்போகையன்றோ வழகியதென்றபடி. பெரியதிருவந்தாதி முப்பதாம்பாட்டு, "இங்கில்லை" இத்யாதி. நலிந்தகொடுமையை நினைத்து-வல்வினையாரொன்கிறார். மடியடக்கி-ஒதுங்கி, மீண்டு-மீள. "ஈண்டு" என்னுபதபேதமாய்-சீக்ரமாகவென்னுதல்.

உத்தாநுவாத பூர்வகமாக மேலுக்கவதாரிகை (முன்பித்யாதி) சிறகைச் சொன்னதுக்கு ப்ரயோஜநம் (இத்தாலித்யாதி) (த்வதங்க்ரீத்யாதி) ஸ்தோத்ரே "ஜாவஸூவா" (தாஸஸ்ஸகா) இத்யாதி. அர்த்தாந்தரம் (அடல்மிடுக்கென்று) யுத்தோந்முகமென்று முந்தினவர்த்தம், "தூவியம்புள்ளுடையான்" இத்யாதியைக் கடாக்ஷித்துபாவம் (பெரியதிருவடியித்யாதி)

ஏத்துமதுநாவாலேயாயிருக்க "நாவியலால்" என்றுவிசேஷித்ததுக்கு பாவமேதென்ன (நெஞ்சொழியவித்யாதி) வாக்ப்ரவ்ருத்திமாத்ரமே-வாக்ஸ்ப்புரணமாத்ரமே யென்றபடி. ஏதத்விவரணம் (நாப்புரட்டினதித்யாதி) புரட்டினதென்கிறது - "இயல்" என்கிறதினர்த்தம். நாவினுடையவ்ருத்தியாலே காநரூபமான சந்தர்ப்பங்களையிட்டேத்தி யென்றுசப்தார்த்தம். * இசை-இயலுக்குபலக்ஷணம். நண்ணியல்ல வேத்திற்றென்றது - "ஏத்தியுள்ளப்பெற்றேன்" என்றாப்போலே மாநஸபூர்வமன்றென்றபடி.

(நிருபாதிகனுனசர்வாத்மா) "ஆவி" என்று-சாமாந்ய சப்தமாகையாலே, நிருபாதிகத்வமும் சர்வாத்மத்வமும் சொல்லுகிறது. உபாதி, ப்ரதிசம்பந்திவிசேஷாநுபாதாநத்தாலே-நிருபாதிகத்வமும் சர்வவிஷயத்வமுமென்றபடி. அவனை சர்வாத்மாவென்று சொல்லுமோவென்ன; ப்ரமாணத்ரயம் (உலகங்கட்கித்யாதி) (ஆத்மநஆகாஶஇதி) உபாதி, ப்ரதிஸம்பந்தி விசேஷாநுபாதாநாத் நிருபாதிக

ஸர்வாத்மந இத்யர்த்தඃ. "ஆவி" என்றத்தைப்பற்ற (விபுவானதானென்றது) செய்தவாறேதென்ன (ஏஷஹீத்யாதி) தாத்பர்யாந்தரம் (சர்வஶரீரியித்யாதி) "ஏற்றநோற்றேற்கு" என்றதிலேநோக்கு. ஆக, "செய்தவாற்றை" என்றதுக்கிரண்டு தாத்பர்யம். முந்தினது-ஸ்வஸாம்யாபத்தி; இரண்டாவது - தலையாலேசுமப்பதேயென்றது. செய்தவாற்றை - செய்தப்ரகாரத்தை. "யானறியேன்" என்றதுக்கர்த்தாந்தரம் (உபகாரஸ்ம்ருதியுமித்யாதி) ஆக, "யானறியேன்" என்றதுக்கிரண்டு தாத்பர்யம். முந்தினது - அந்தப்ரகாரம் நான்சொல்லவறியேனென்று; இரண்டாவது-அறிந்தாலும் "செய்தவாற்றை" என்று-செய்தவுபகாரஸ்ம்ருதிபண்ண நீயறியவேணுமதொழிய நானறியேனென்று.

மேவிநின்று தொழுவாரித்யாதி அடைவேயர்வயம் ......................*

# ஐந்தாம்பாட்டு.

ஆற்றநல்லவகைகாட்டுமம்மானையமரர்த
மேற்றையெல்லாப்பொருளும்விரித்தானையெம்மான்றன்னை
மாற்றமாலைபுனைந்தேத்திநாளும்மகிழ்வெய்தினேன்
காற்றின்முன்னங்கடுகிவினைநோய்கள்கரியவே.

## ஆறுயிரப்படி.

(ஆற்றநல்ல) * அயர்வறுமமரர்களதிபதியாய், வஸுதேவக்ருஹேவதீர்ணனாயர்ஜுநவ்யாஜத்தாலே சர்வாத்மாக்களுக்கும் சகலவேதார்த்த ப்ரகாஶகனாயிருந்த தன்னையெனக்கு சாத்மிக்க சாத்மிக்கக்காட்டித் தந்தருளினன். நானுமவனைக்கண்டு, காற்றின்முன்னம்கடுகி வினைநோய்கள்கரியும்படி திருவாய்மொழிபாடி, நாளும் மகிழ்வெய்தினேனென்கிறார்................................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அநுபவோபகரணமான ஜ்ஞாநாதிகளைக்கொடுத்து அநுபவிப்பிக்கும் சர்வேஸ்வரனை, சகலக்லேஶமும் சகாரணமாகச் சடக்கென ஸ்வயமேவ நசிக்கும்படி ஸ்துதிக்கப்பெற்றேனென்கிறார்.

ஆஶ்ரயாநுரூபமாக, ஆற்ற-பொறுக்கும்படி. நல்ல-அநுபவோபகரணமாம்படி விலக்ஷணமாயுள்ள. வகை - ஜ்ஞாநபக்திகள் பரபக்திபரஜ்ஞாநபரமபக்திகளாகிற ப்ரகாரங்களை. காட்டும்-போக்தாக்களுக்குப்ரகாசிப்பிக்கும். அம்மானை-நிருபாதிகஸ்வாமியாய். அமரர்தம்-இந்தப்ரகாரமுடையாரை நித்யசூரிகளநுபவிக்குமாபோலே யநுபவிப்பிக்கும். ஏற்றை-செருக்கையுடையனாய். கீதோபநிஷந்முகத்தாலே, எல்லாப்பொருளும்-இவ்வர்த்தவிசேஷங்களை. விரித்தானை - விஸ்தீர்ணமாகவுபதேசித்து. எம்மான்றன்னை - எனக்குநிர்ஹேதுகமாக வுபகரித்தஸ்வாமியானவனை. வினை-ஜ்ஞாநப்ரேமாதிப்ரதிபந்தகங்களானபாபங்களும். நோய்கள்-ராகத்வேஷாதிவ்யாதிகளும். காற்றின்-சீக்ரகாமியானகாற்றுக்கு. முன்னம்-முற்

பட. கடுகி-சடக்கெனவோடிப்போய். கரிய-"கூருளவெராதம்" (அக்ரௌப்ரோதம்) என்கிறபடியே வெந்துபோம்படியாக. மாற்றமாலை- சப்தஸந்தர்ப்பங்களை. புனைந்து-நிர்மித்து. ஏத்தி-ஸ்தோத்ரம்பண்ணி. நாளும்-ஸர்வகாலமும். மகிழ்வு-மகிழ்ச்சியை. எய்தினேன்-பெற்றேன்.

மாற்றம்-சப்தம். புனைதல் - தொடுத்தல்..................................*

## ஈடு - ஐந்தாம்பாட்டு.

தான் சர்வாதிகனாய்வைத்து அர்ஜுநனுக்கு சர்வார்த்தங்களையும் சாத்மிக்க சாத்மிக்க வருளிச்செய்தாப்போலே யெனக்குத்தன்படிகளைக் காட்ட, கண்டநுபவித்து நானென்னுடைய ப்ரதிபந்தகங்களெல்லாம் போம்படி திருவாய்மொழிபாடி நிரதிசயாநந்தியானேனென்கிறார்.

(ஆற்ற) அமைய. பொறுக்கப்பொறுக்க. குளப்படியிலே கடலை மடுத்தாற்போலேயன்றிக்கே, சாத்மிக்க சாத்மிக்கவாயிற்று தன்கல்யாணகுணங்களை யநுபவிப்பித்தது. "இங்கின்றநீர்மை யினியாமுறுமை" என்றவநந்தரத்திலே * விற்றிருந்தேழுலகிலநுபவத்தை யநுபவிப்பித்தானாகில் என்னைக்கிடையாதுகிடீர். (நல்லவகைகாட்டும்) தன்குணசேஷ்டிதங்களை யநுபவிப்பிக்கும். (அம்மானை) உடையவன் உடைமையின்நிலையறிந்தன்றோ நடத்துவது. (அமரர்தமேற்றை) க்ஷுத்ரவிஷயங்களையு முண்டறுக்கமாட்டாதேபோந்த வென்னைக்கிடீர் நித்யஸூரிகள் நித்யாநுபவம்பண்ணுகிற தன்னையநுபவிப்பித்தது. தனக்கொரு குறையுண்டாயன்று, போக்தாக்கள்பக்கல் குறையுண்டாயன்று; தான் சர்வேஸ்வரனாவது, தன்படிகளை யநுபவிப்பிக்க நித்யஸூரிகளையுடையனாவது, இப்படியிருக்கக்கிடீ ரென்னையநுபவிப்பித்தது. (எல்லாப்பொருளும்) தம்மையநுபவிப்பித்த ப்ரகாரத்தைச் சொல்லுகிறார். முதல்வார்த்தையிலே "தர்மாதர்மங்களின்னதென்றறிகிறிலேன், சிஷ்யஸ்தேஹம் ஶாதிமாந்த்வாம்ப்ரபந்நம்" என்றவர்ஜுநனுக்கு ப்ரக்ருதிபுருஷவிவேகத்தைப்பிறப்பித்து, கர்மயோகத்தைவிதித்து, "அதுதன்னை, கர்த்ருத்வத்தைப்பொகட்டுப் பலாபிஸந்திரஹிதமாக வநுஷ்டி" என்று, அநந்தரம் ஆத்மஜ்ஞாநத்தைப்பிறப்பித்து, அநந்தரம் பகவத்ஜ்ஞாநத்தைப்பிறப்பித்து, அநவரதபாவநாரூபமான வுபாஸநக்ரமத்தையுவிதித்து, இவ்வளவும்கொண்டுபோந்து இதினருமையை யிவன்நெஞ்சிலேபடுத்தி, "இவையஶக்யம்" என்று சோகித்தவநந்தரம் "ஆகிலென்னைப்பற்றிநிர்ப்பரனாயிரு" என்று தலைக்கட்டினாப்போலேயாயிற்று க்ரமத்தாலே தன்குணசேஷ்டிதங்களை யிவரையநுபவிப்பித்தபடி. (எம்மான்றன்னை) அர்ஜுநனுக்கு பலித்ததோஇல்லையோ, அறியேன், அந்தவுபதேஶபலம் நான்பெற்றேன். அவனு மிவ்வர்த்தத்தைக்கேட்ட வநந்தரம் "ஸ்திதொஸ்மி" (ஸ்த்திதோஸ்மி) என்னச்செய்தேயும் "நஎநம்வஶயொ

ஷி” (நாகம்ஸம்ஶயோஸ்தி) என்றுனிறே. உபதேசிக்கிறவனும் சர்வசாதாரணனுப் உபதேசிக்கிறவர்த்தமும் சர்வசாதாரணமாகையாலே, அதநிந்த விவர்க்குப்பலித்ததென்னத் தட்டில்லையிறே, “விட்டுசித்தர் கேட்டிருப்பர்” என்னக்கடவதிறே. இவர்மநோரதத்திலே நின்றுபோலேகாணுமருளிச்செய்தது. (மாற்றமாலைபுனைந்தேத்தி) சொன்மாலையைத்தொடுத்தேத்தி. அவன்பண்ணினவுபகாரத்திலே தோற்றேத்தினர், அதுதிருவாய்மொழியாய்த் தலைக்கட்டிற்று. மாற்றம்-சொல்லு. (நாளும்மகிழ்வெய்தினேன்) நித்யாநந்தியானேன். எய்துகை-கிட்டுகை. இப்படி பெரியபேற்றைப்பெற்றிராகில் விரோதிசெய்ததென்னென்ன (காற்றின்முன்னம்கடுகிவினைநோய்கள்கரியவே) வினைகளும் வினைப்பயனான ஜந்மங்களும் காற்றிற்காட்டிலும்கடுகி தக்தமாயிற்றின. புதுப்புடவை யழுக்குக்கழற்றுமாபோலே க்ரமத்தாலே போக்கவேண்டுவது, தானே போக்கிக்கொள்ளப்பார்க்குமன்றிறே; அவன்போக்குமன்று அவனுக்கருமைப்படவேண்டாவே!, “வினைப்படலம்விள்ளவிழித்து” என்கிறபடியே, ஒருகால்பார்த்து விடவமையுமே. [மேருமந்தரேத்யாதி] நிதாநஜ்ஞனான பிஷக்கைக்கிட்டினவ்யாதிபோலேயிறே ஸர்வேஸ்வரனைக்கிட்டினவிவை நசிக்கும்படி “வானேமிகடலோ” இத்யாதி.................*

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு (ஆற்றவித்யாதி) “அமரர்தமேற்றை” என்றத்தைப்பற்ற (சர்வாதிகனென்றது) “ஆற்ற” என்றத்தைப்பற்ற (சாத்மிக்கசாத்மிக்கவென்றது) “காற்றின்முன்னம் கடுகிவினைநோய்கள்” இத்யாதியைப்பற்ற (ப்ரதிபந்தகங்களெல்லாமித்யாதி) “மாற்றமாலை” இத்யாதியைப்பற்ற (திருவாய்மொழிபாடியித்யாதி) “நல்லவகை - ஆற்ற - காட்டும்” என்றந்வயம்.

“பொறுக்கப்பொறுக்க” என்றதின்விவரணம் (அளப்படியிலேயித்யாதி) சாத்மிக்க சாத்மிக்க வநுபவிப்பிக்கைக்கடியேதென்ன (இக்கின்றவித்யாதி) “ஆற்ற நல்லவகைகாட்டும்” என்றத்தோடேகூட்டிபாவம் (உடையவனித்யாதி)

“ஆற்றநல்லவகைகாட்டும்” என்றத்தைக்கூட்டி யீடுபாடு (க்ஷுத்ரவிஷயங்களையுமித்யாதி) “அம்மானை - அமரர்தமேற்றை - ஆற்றநல்லவகைகாட்டும்” என்றுகூட்டிபாவாந்தரம் (தனக்கொருநேறையித்யாதி) ஆக, “அமரர்தமேற்றை” என்றதுக்கிரண்டுதாத்பர்யம். முதலது - நித்யஸூரிகளுக்கு போக்யனென்றபடி; இரண்டாவது - “ஏறு” என்று - சர்வாதிகனுய், “அமரர்” என்று - போக்தாக்களையுடையனுயிருந்து மென்னையநுபவிப்பித்தானென்று.

எப்படியநுபவிப்பித்தானென்ன; த்ருஷ்டாந்தமாக வருளிச்செய்கிறார் (எல்லாப்பொருளுமென்று) தம்மையநுபவிப்பித்த - ஸாத்மிக்க ஸாத்மிக்க வநுபவிப்பித்த. ப்ரகாரத்தைச்சொல்லுகிறதென்றது - ப்ரகாரத்துக்கு த்ருஷ்டாந்தம் சொல்லுகிறதென்றபடி. முதல் வார்த்தையென்றது-ப்ரதமாத்யாயத்திலேயென்றபடி. அடியிலேயென்னவுமாம். தர்மாதர்மங்களின்னதென்றறிகிறதிலேயென்றது

“ [illegible] ” ( தர்மஸம்மூடசேதா: ) என்றத்தைப்பற்ற. “ [illegible] ” ( கார்ப்பண்யதோஷோபஹதஸ்வபாவ: ப்ருச்சாமித்வா தர்மஸம்மூடசேதா: । யச்ச்ரேயஸ்ஸ்யாந்நிஸ்சிதம் ப்ரூஹிதந்மே சிஷ்யஸ்தேஹம் ஸாதிமாந்த்வாம்ப்ரபந்நம்) இதிபகவத்தோயாம் த்விதீயே. “ [illegible] ” ( தேஹிநோஸ்மிந்யதாதேஹே ) “ [illegible] ” ( நத்வேவாஹம்ஜாதுநாஸம் ) இத்யாதியைப்பற்ற ( ப்ரக்ருதிபுருஷேத்யாதி ) கர்மயோகத்தைவிதித்தென்றது - “ [illegible] ” ( கர்மணைவ ஹிஸம்ஸித்திமாஸ்த்திதாஜநகாதய: ) இத்யாதியைப்பற்ற. “ [illegible] ” ( ஸங்கம்த்யக்த்வாபலஞ்சைவ ) இத்யாதியைப்பற்ற ( பலாபிஸந்தித்யாதி ) ஆத்மஜ்ஞாநத்தைப்பிறப்பித்தென்றது - “ [illegible] ” ( ஸர்வம்கர்மாகிலம்பார்த்தஜ்ஞாநேபரிஸமாப்யதே ) “ [illegible] ” ( நஹிஜ்ஞாநேநஸத்ருஸம்பவித்ரம் ) இத்யாதியைப்பற்ற. ஆத்மஜ்ஞாநமென்றது - ஆத்மவிஷயஜ்ஞாநமென்றபடி. பகவத்ஜ்ஞாநத்தைப்பிறப்பித்தென்கிறது - “ [illegible] ” ( மய்யாஸக்தமநா: பார்த்தயோகம்யுஞ்ஜந்மதாஸ்ரய: ) “ [illegible] ” ( அஹம்ஸர்வஸ்ய ப்ரபவோமத்தஸ்ஸர்வம்ப்ரவர்த்ததே ) “ [illegible] ” ( ஸர்வஸ்யசாஹம்ஹ்ருதிஸந்நிவிஷ்ட: ) இத்யாதியைப்பற்ற. “ [illegible] ” (பக்த்யாலப்யஸ்த்வநந்யயா) “ [illegible] ” ( பக்த்யாத்வநந்யயாஸக்ய: ) இத்யாதியைப்பற்ற ( உபாஸநக்ரமத்தையென்றது ) இதினருமையையென்றது — “ [illegible] ” (தத்கிங்கர்மணிகோரேமாம்நியோஜயஸிகேஸவ) “ [illegible] ” (சஞ்சலம்ஹிமந:க்ருஷ்ண) இத்யாதியைப்பற்ற; பக்தியினருமையர்த்தாத்ஸித்தம், சரமஸ்லோகத்திலே - “சோகியாதேகொள்” என்றுசொல்லுகையாலே.

“ எல்லாப்பொருளும்விரித்தானை - எம்மான்றன்னை ” என்றுகூட்டிதாத்பர்யாந்தரம் ( அர்ஜுநனுக்கித்யாதி ) “ [illegible] ” (ஸ்த்திதோஸ்மி) என்னும்படிபலித்திருக்க, “ பலித்ததோவில்லையோ ” என்கிறதென்னென்ன (அவனுமித்யாதி) “ [illegible] ” ( நஷ்டோமோஹஸ்ஸ்ம்ருதிர்லப்தாத்வத்ப்ரஸாதாந்மயாச்யுத । ஸ்த்திதோஸ்மிகதஸந்தேஹ:கரிஷ்யேவசநந்தவ ) இதிகீதாயாமஷ்டாதஸே. ( நாநம்ஸம்ஸயோஸ்தீத்யாதி ) முந்தறகீதோபதேஸம்பண்ணியிருக்கவும் அந்தவர்த்தவிஷயமாக புந:ப்ரஸ்நம்பண்ணின வர்ஜுநனைக்குறித்து அநுகீதையிற்சொன்ன க்ருஷ்ணவாக்யம் - “ [illegible] ” (நூநமஸ்ரத்ததாநோஸிதுர்மேதாஸ்சாஸிபாண்டவ) என்று; இதினுடையவர்த்தாநுவாதம் ( நூநம்ஸம்ஸயோஸ்தியென்று ) அர்ஜுநனுக்குபதேசித்திருக்க, “ நான்பெற்றேன் ” என்கிறதெப்படியென்ன (உபதேசிக்கிறவனுமித்யாதி) இப்படி யுபதேஸம்பலித்தவிடமுண்டோவென்ன ( விட்டுசித்தரித்

யாதி ) ( மெய்ம்மைப்பெருவார்த்தைவிட்டுசித்தர்கேட்டிருப்பர்) யதார்த்தமுமாய் சீரியதுமாய் சுலபமுமான சரமஶ்லோகமாகிறவார்த்தையைப் பெரியாழ்வார்கேட்டு தந்நிஷ்டராயிருப்பரென்றபடி. நாய்ச்சியார்திருமொழி பதினோராந்திருமொழி சாற்றுப்பாட்டு. உபதேசித்தது திருத்தேர்த்தட்டிலேயாயிருக்க, "விட்டுசித்தர்கேட்டிருப்பர்" என்னக்கூடுமோவென்ன ( இவர்மநோரதத்திலேயித்யாதி ) இவர்மநோரதத்திலே - பெரியாழ்வாருடைய மநோரதத்திலே. இவர்க்குபலிக்கையாலே (இவர்மநோரதத்திலே நின்றுபோலேகாணும்) என்கிறார். அர்ஜுநனுக்கு பலியாமையாலே, அவனுடையரதத்தி லன்றுபோலே. இது - * விட்டுசித்தபதத்தின் தாத்பர்யம்; விஷ்ணுஶ்சித்தேயஸ்யஇறே. இவர்மநோரதத்திலேயென்றதுசாடு.

ஆனால் புத்திபூர்வகமாகச்சொன்னாரோவென்ன (அவன்பண்ணினவித்யாதி) வினைநோய்கள் - வினைகளும்நோய்களும். வினையென்று - கர்மம்; நோயென்று - ஜந்மம். "நோய்" என்றால் - ஜந்மத்தைச்சொல்லுமோவென்ன; "வ்யாயிஹிஃவரிவ-ஐணெ-ஃாஷூி" ( வ்யாதிபிஃபரிபூர்ணோஸ்மி ) என்னக்கடவதிறே. கடுகி - த்வரித்து. கரிய -( தக்தமாயிற்றின ) இவையொருகாலே தக்தமாகக்கூடுமோவென்ன (புதுப்புடவையித்யாதி) வினைநோய்களைப்போக்குகை யீஷத்கரமென்கிறார் (வினைப்படலமித்யாதி) ப்ராப்திப்ரதிபந்தக கர்மஸமூஹமானது என்னைவிட்டுநீங்கும்படியாக நீகடாக்ஷித்தென்றபடி. பெரியதிருவந்தாதி யெழுபத்தாறும்பாட்டு. உக்தார்த்தத்துக்குப்ரமாணம் (மேருவித்யாதி ) "மெரு-மஉநூரஊமெத்ரா விராஶிஃவாவஸ்ரகஉ-ணஃ। கெஶவஂமெவஞ்ஊஸாத ஜீஞூதாயாஸிவநஶ்ரதி" ( மேருமந்தரமாத்ரோபிராஶிஃபாபஸ்யகர்மணஃ । கேஶவம்வைத்யமாஸாத்யதுர்வ்யாதிரிவநஶ்யதி ) ஸ்ரீவிஷ்ணுதர்மே அஷ்டஸப்ததிதமேத்யாயே இதுக்கர்த்தம் ( நிதாநஜ்ஞேத்யாதி ) ப்ரமாணாந்தரம் ( வானேவித்யாதி ) பெரியதிருவந்தாதி ஐம்பத்துநாலாம்பாட்டு. துஃகஹேதுவானகர்மத்தை நம்முடையசமீபத்திலே கண்டிலோம்; இது, வானே - ஆகாஶத்திலே பறந்துபோயிற்றோ. திரைக்கிளப்பத்தையுடைய கடலிலேயோ காற்றிலேயோ நெருப்பிலேயோ காட்டிலேயோ ஒருங்கிப்போயிற்றென்றபடி.

ஆற்றநல்லவகையென்றுதொடங்கி, வினைநோய்கள் - காற்றின்முன்னம்கடுகி-கரிய-மாற்றமாலைபுனைந்தேத்தி நாளுமகிழ்வெய்தினேனித்யந்வயஃ............*

# ஆறும்பாட்டு.

கரியமேனிமிசைவெளியநீறுசிறிதேயிடும்
பெரியகோலத்தடங்கண்ணன்விண்ணோர்பெருமான்றன்னை
உரியசொல்லாலிசைமாலைகளேத்தியுள்ளப்பெற்றேற்
கரியதுண்டோவெனக்கின்றுதொட்டுமினியென்றுமே.

## ஆறாயிரப்படி.

( கரியமேனி ) நீலமேகநிபதிவ்யரூபோசித திவ்யாங்கராகத்தாலே யநுலிப்தனாய், அதிவிசாலமா யதிரமணீயமாயிருப்பதொரு தாம

ணைத்தடாகம்போலேயிருந்ததிருக்கண்களையுடையனாய்,அவ்வழகாலேவிண்ணோர் பெருமானாயிருந்த வெம்பெருமானை, அவனுக்கு ஸத்ருஶமான சொற்களாலே யிசைமாலைகளேத்தி யுள்ளப்பெற்றவெனக்கின்றுதொட்டு மினியென்று மரியதுண்டோவென்கிறார்...............................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அஸ்கலிதஜ்ஞாந ப்ரோமரானார்க்கு நிரதிசயாநுபாவ்யமான வழகையுடையவனை ஸ்தோத்ரமுகத்தாலே யநுபவிக்கப்பெற்ற வெனக்கு துர்லபமுண்டோவென்கிறார்.

கரிய-ஶ்யாமளமான. மேனிமிசை-வடிவழகுக்குமேலே. வெளியநீறு-அஞ்சநசூர்ணத்தை. சிறிதே-அளவில். இடும்-அணிகிற. பெரியகோலம்-நிரதிசயசௌந்தர்யயுக்தமாய். தடம்-விஸ்தீர்ணமான. கண்ணன்-கண்ணழகையுடையனாய். இவ்வழகுவெள்ளத்திலே, விண்ணோர்-சூரிகளை. பெருமான்றன்னை-குமிழிநீருட்டும்மேன்மையை யுடையனான சர்வேஶ்வரனை. உரிய-இவ்வழகுக்குத்தகுதியான. சொல்லால்-சொல்லாலேசமைந்த. இசைமாலைகள்-கானரூபசந்தர்ப்பங்களையிட்டு. ஏத்தி-ஸ்துதித்து. உள்ள-அநுபவிக்க. பெற்றேற்கு-பெற்றேனான. எனக்கு-எனக்கு. இதொட்டும்-அநுபவாரம்பமானவின்றுதொடங்கி. இனி-இனி. என்றும்-மேலுள்ளகாலமெல்லாம். அரியது-துர்லபமாயிருப்பது. உண்டோ-ஓரர்த்தமுண்டோ.

வெளியம்-அஞ்சநம். அன்றியே, ஶ்யாமளமான திருமேனிமேலே "𑌕𑌰𑍍𑌪𑍂𑌰𑌧𑍂𑌳𑍀𑌧𑌵𑌳𑌂𑌚𑌰𑍁𑌤𑌵𑌾𑌦𑍇𑌵𑌸𑍍𑌯𑌵𑌿𑌗𑍍𑌰𑌹𑌃" (கர்ப்பூரதூளீதவளங்சருதவாதேவஸ்யவிக்ரஹம்) என்கிறபடியே அலங்காரார்த்தமான கர்ப்பூரசூர்ணத்தை யளவுபடச்சாத்தின பெரியவொப்பனையை யுடையவென்றுமாம்............*

## ஈடு - ஆறாம்பாட்டு.

சர்வேஶ்வரன்றிருவடிகளிலே யடிமைசெய்யவும்பெற்று ப்ரதிபந்தகமும் போகப்பெற்றேனென்றார் - கீழ்; "ஆனாவினி யுமக்குச்செய்யவேண்டுவதென்" என்றானீஶ்வரன்; இதுக்குமுன்பு பெறாததாயினிப்பெறவேண்டுவதொன்றுண்டோ வென்கிறாரிதில்.

(கரியமேனிமிசை) மேனியென்று-நிறமாய், திருக்கண்களில் கருவிழியினுடைய கறுத்தநிறத்தால்வந்தவழகுக்குமேலே. "கரியவாகிப்புடைபரந்து" என்னக்கடவதிறே. (வெளியநீறு) அஞ்சநசூர்ணம். அத்தையளவே கொண்டலங்கரிக்கும். "ஆராயில்வேற்கண்ணஞ்சனத்துநீறணிந்து" என்னக்கடவதிறே. (சிறிதேயிடும்) அழகுக்கிட வேண்டுவதில்லையே, இனிமங்களார்த்தமாகையாலேயளவேயாயிற்றிடுவது. (பெரியகோலம்) ஒப்பனைவேண்டாதபடி அழகளவிறந்திருக்கிறபடி. (தடங்கண்ணன்) போக்தாக்களளவன்றிக்கே போக்யம்மிக்கிருக்கிறபடி. அதவா, (கரியவித்யாதி) கறுத்தநிறத்தாலே வந்தவழகுக்குமேலே அதுக்குபராபாகமான திருக்கண்களிலே அஞ்சநத்தையிடுமென்றுமாம். அ

ன்றிக்கே, "கரிஎன்று-ஆனையாய், அத்தால்நினைக்கிறது-குவலயாபீடமாய்; குவலயாபீடமானது, அம்மேனியிலே - அழகியதிருமேனியிலே, வெளிய-சீற, அத்தை, நீறுசிறிதேயிடும்-பொடியாக்கும்" என்றொருதமிழன் நிர்வஹித்தான். (விண்ணோர்பெருமான்) இக்கண்ணழகுக்கு போக்தாக்கள் நித்யஸூரிகளாயிற்று. (பெருமான்) த்ரிபாத்விபூதியாகவநுபவியாநின்றாலும், அநுபூதாம்ஸம்சுருங்கி அநுபாவ்யாம்ஸம் விஞ்சியிருக்கும். (உரியசொல்லால்) அவயவசோபையது, போக்தாக்களவர்கள், இப்படியிருந்தால், "நாம்பாடுகிறகவிகளுக்கிதுவிஷயமன்று" என்றுமீளவிறேயடுப்பது; இப்படியிருக்கச்செய்தேயும், இவ்விஷயத்துக்கு நேரோவாசகமானசொல்லாலே. (இசைமாலைகள்) "ஸம்ஶ்ரவேமதுரம்வாக்யம்" (ஸம்ஶ்ரவேமதுரம்வாக்யம்) என்கிறபடியே, திருச்செவிசாத்தலாம்படியிருக்கை. (ஏத்திபுள்ளப்பெற்றேற்கு) ஏத்தியநுபவிக்கப்பெற்றவெனக்கு. (அரியதுண்டோ) "நாநவாப்தமவாப்தவ்யம்" (நாநவாப்தமவாப்தவ்யம்) என்கிறபடியே. இதுக்கு முன்படையாததாயினியெனக்கடையப் படுவதொன்றுண்டோ, (எனக்கு) "ஈஶ்வரோஹம்" என்றிருக்கிறசம்சாரத்திலே சேஷத்வம்ரசிக்கப்பெற்று, ஸ்வரூபாநுரூபமாக வாசிகமானவடிமை செய்யப்பெற்று, "வினைநோய்கள்கரிய" என்று-விரோதிகழியப் பெற்றிருக்கிறவெனக்கு. (இன்றுதொட்டுமினியென்றுமே) அடிமையிலிழிந்த வின்றுதொடங்கி யினிமேலுள்ள காலமெல்லாம், அரியதில்லை. "அபயஶோகஹம்கதோபவதி" (அபயஶோகஹம்கதோபவதி) என்கிறபடியே. அநந்தரம் * தீர்ப்பாரையாமினியாவதறியாமலிறே யிவரிவ்வார்த்தை சொல்லுகிறது.................*

## ஜீயர்அரும்பதம்.

ஆறும்பாட்டு. (கரியமேனியித்யாதி) அடிமைசெய்யவும் பெற்றேன்றது-"மாற்றமாலைபுனைந்தேத்தி" என்றத்தைப்பற்ற. "வினைநோய்கள்கரிய" என்றத்தைப்பற்ற (ப்ரதிபந்தகமும் போகப்பெற்றேனென்றது) கீழென்றது-கீழ்ப்பாட்டிலென்றபடி. "அரியதுண்டோ" இத்யாதியைக்கடாக்ஷித்து (ஆஞலீத்யாதி)

"மேனி" என்று-நிறமாய், "கரியமேனி" என்று-கறுத்தநிறமாய், "மிசை" என்று-மேலாய், மேலே "பெரியகோலத்தடங்கண்" என்றிருக்கையாலே, திருக்கண்களினுடைய கறுத்தநிறத்தால்வந்த வழகுக்குமேலேயென்கிறார் (மேனியென்றித்யாதி) அழகுக்கென்று - அத்யாஹார்யம். "கரிய" இத்யாதி-கண்ணுக்கு விசேஷணமென்றுகருத்து. திருக்கண்கள் கறுத்திருக்குமென்றதுக்கு ப்ரமாணம் (கரியவாகியித்யாதி) கறுத்து அகன்றிருக்கிற வென்றபடி. புடைபரந்து-பர்யந்தங்கள் விசாலமாய். "சிறிதே" என்றதுக்குவாசனை (அத்தையித்யாதி) "இடும்" என்றால்-அலங்கரிக்குமென்று சொல்லுமோவென்ன (ஆராரித்யாதி) சிறியதிருமடல். "ஆர்" என்று-அழகாய், "ஆர்" என்று-மிகுதியாய். அழகுமிக்கிருக்கிறதாய்; அயில்-கூர்மையையுடைத்தா யிருக்கிறவேல்போலே யிருக்கிறகண்ணிலே அஞ்சநசூர்ணமிட் டலங்கரித்தென்று பாசுரார்த்தம். "சிறிது" எ

ன்பானென்னென்ன (அழகுக்கித்யாதி) அளவே-ஸ்வல்பமே. "பெரியகோலம்" என்றதின்தாத்பர்யம் (ஒப்பனையித்யாதி) "தடம்" என்றதுக்குபாவம் (போக்தாக்களித்யாதி) (அதவேத்யாதி) த்விதீயார்த்தம். கறுத்தநிறத்தாலேவந்தவென்றது-திருமேனியில் கறுத்தநிறத்தாலே வந்தவென்றபடி. இந்தபக்ஷத்திலே, "கரியமேனி" இத்யாதி-கண்ணுக்கு விசேஷணமன்றென்று தாத்பர்யம். அதுக்குபராபாகமான - திருமேனிக்கு பராபாகமான இத்யர்த்த8. த்விதீயார்த்தத்திலே, "மேனி" என்று-காந்தியைச்சொல்லி, திருமேனியென்றத்யாஹார்யம். பராபாகமென்றது-சிவப்பைப்பற்ற. அத்தை-ஆனையை. (நீறுசிறிதேயிடும்) சிறிது-நீறு-இடும். ஸ்வல்பபஸ்மமாக்கும். (பொடியாக்கும்) என்றபடி.

கண்ணைச்சொன்னவநந்தரம், "விண்ணோர்பெருமான்" என்றதுக்குபாவம் (இக்கண்ணழகுக்கித்யாதி) பெருமையெப்படியென்ன; ப்ரக்ருதோபயுக்தமான சமபிவ்யாஹாரசித்த தாத்பர்யம் (த்ரிபாத்விபூதியாகவித்யாதி)

"பெரியகோலத்தடங்கண்ணன், விண்ணோர்பெருமான்" என்றத்தைக்கடாக்ஷித்துபாவம் (அவயவசோபையித்யாதி) "உரியசொல்" என்றதுக்கர்த்தம் (இப்படியித்யாதி) "ஸ்தோத்ரம்பண்ணயோக்யதையில்லை" என்று, "உரியசொல்லால்" என்னக்கூடுமோவென்ன; "தம்மைப்பார்த்தால்கூடாது, அவனடியாக வந்ததாகையாலே விரோதமில்லை" என்றருளிச்செய்வர். உரியசொல்-சம்யக்வாசகமானசப்தம். காநத்தோடேகூடின மாலைகளென்கையாலே - உகந்துகேட்கைக்குயோக்யமான வாகாரந்தோன்றுகிற தென்கிறார் (ஸம்ஸ்ரவ இத்யாதி) "ஸவஂ஬ஹுவிய௱ஂவிஞாஂவிஞயிக்ஷாசஹாகுவிஃ। ஸஂஶ்ருவெஆய௱ஂ வாக்யஂவெவெஷஹ்ராவ்யாஜஹாரஹ" (ஏவம்பஹுவிதாம்சிந்தாம் சிந்தயித்வாமஹாகபி8। ஸம்ஸ்ரவேமதுரம்வாக்யம் வைதேஹ்யாவ்யாஜஹாரஹ) இதி. சுந்தரகாண்டே ஹநுமான்.

ஶ்லோகத்துக்கர்த்தம் (இதுக்குமுன்பித்யாதி) இனிமேலடையப்படுவதாகக்கொண்டு எனக்குப்பெறுததில்லையென்று தாத்பர்யம். அல்லாதாரிலுமக்குவ்யாவ்ருத்தியேதென்ன (ஈஶ்வரோஹமித்யாதி) "போற்றி" என்றத்தைப்பற்ற (சேஷத்வம்ரசிக்கப்பெற்றென்றது) "இசைமாலைகள்" இத்யாதியைப்பற்ற (ஸ்வரூபாநுருபமித்யாதி) பகவத்விஷயத்திலே யந்வயித்தவனுக்கு விரோதிகளால்வரும் பயமில்லையென்னுமதுக்கு ப்ரமாணம் (அதசோபயமித்யாதி) மேல் *தீர்ப்பாரையாமினியாயிருக்க, "இனியென்றும்" என்கிறதென்னென்ன (அநந்தரமித்யாதி)

க்ரமேணாந்வயஃ. "நமெஆவாமூஜாஸ்திகத்தவ்யஂத்ரிஷுலொகெஷுகிஂச்ந। நாநவாபூஆவாப்தவ்யஂவாத்தஅவசகஜ்ணி" (நமேபார்த்தாஸ்திகர்த்தவ்யம் த்ரிஷுலோகேஷுகிஞ்சந। நாநவாப்தமவாப்தவ்யம் வர்த்தஏவசகர்மணி) இதிகீதாயாம்த்ருதீயே..............................................................*

# ஏழாம்பாட்டு.

என்றுமொன்றாகியொத்தாருமிக்கார்களுந்தன்றனக்
கின்றிநின்றானையெல்லாவுலகுமுடையான்றன்னைக்
குன்றமொன்றால்மழைகாத்தபிரானைச்சொன்மாலைக
ணன்றுசூட்டும்விதியெய்தினமென்னகுறைநமக்கே.

## ஆறாயிரப்படி.

( என்றுமொன்றாகி ) சர்வகாலமு மேகப்ரகாரமாக நிரஸ்த சமாப்யதிகனாய், சர்வலோகேஸ்வரனாய் பரமகாருணிகனாயிருந்த வெம்பெருமானைத் திருவாய்மொழிபாடுகைக்கு, அவனுடைய நிர்மர்யாதக்ருபையாகிற மஹாபாக்யத்தை யுடையோமானோம்; இனிநமக்கென்ன குறையுண்டென்கிறார்,........................ ....................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், சமாப்யதிக ரஹிதையான போக்யதையையுடைய்க்ருஷ்ணனை ஸ்துதிக்கப்பெற்ற வெனக்கென்னகுறை யுண்டென்கிறார்.

என்றும்-பரத்வத்தோடு அவதாரத்தோடு வாசியற ஸர்வாவஸ்தையிலும். ஒன்றாகி-ஒருப்ரகாராந்வயியாய்க்கொண்டு. ஒத்தாரும் - சமராயும். மிக்கார்களும்-அதிகராயுமிருப்பார். தன்றனக்கு-தன்னுடையநிரதிசயபோக்யமான சௌலப்யாதிகளாகிற அசாதாரணாகாரத்துக்கு. இன்றி-இன்றியிலே. நின்றானை - நின்றவனாய். “க்ருஷ்ணஸ்ய ஹி க்ருதே” (க்ருஷ்ணஸ்யஹிக்ருதே) என்கிறபடியே அந்நிலையிலே, எல்லாவுலகும்-சமஸ்தலோகத்தையும். உடையான்றன்னை-தனக்குசேஷமாகவுடையனாய். மழை-சேஷவஸ்துக்களுக்கு இந்த்ரனால்வந்தவர்ஷாபத்தை. குன்றமொன்றால்-கண்டதொருமலையாலே. காத்த-காத்த. பிரானை - மஹோபகாரகனானவனை. சொல்-சப்தமயமான. மாலைகள்-மாலைகளை. நன்று-அவனாதரித்து. சூட்டும்-சூடும்படிபண்ணுகைக்கிடான. விதி - அவன் க்ருபாரூபமானபாக்யத்தை. எய்தினம்-கிட்டப்பெற்றோம். நமக்கு-நமக்கு. என்னகுறை-ஒருகுறையுண்டோ.

அத்தலையில் க்ருபையில் குறையுண்டாகிலிறே யித்தலையில் பேற்றிற்குறையுண்டாவதென்றுகருத்து. விதி-தப்பவொண்ணாதக்ருபையைநினைக்கிறது. நமக்கென்கிறபன்மை - பஹுமாநத்தாலே. “ஆத்மநி பஹுவசநம்” ( ஆத்மநிபஹுவசநம்........................................................................................*

## ஈடு - ஏழாம்பாட்டு.

“அரியதுண்டோவெனக்கு” என்கிறவிப்பூர்த்தி யுமக்கெத்தாலேவந்ததென்ன, பகவத்க்ருபையாலேவந்ததென்கிறார்.

என்றும்-எல்லாக்காலமும். (ஒன்றாகியொத்தாரும் மிக்கார்களும்) எல்லாங்கூடின சமுதாயத்துக்கொப்பில்லாமையேயன்றிக்கே, ஓரோவ

யைக்குமோரொப்பின்றிக்கேயிருக்கும், "𑌨 𑌤𑌤𑍍𑌸𑌮𑌶𑍍𑌚" (நதத்ஸமஶ்ச) என்கிறபடியே ஒருப்ரகாராந்வயியாய்க்கொண்டு சமராயுமதிகராயுமிருப்பார். (தன்றனக்கின்றிநின்றானை) எம்பெருமானார் தெற்கேயெழுந்தருளினநாளிலே ஆளவந்தார்மகனார் சொட்டைநம்பிப்ரசாதித்தவார்த்தை- "தன்றனக்கென்றது-தானானதனக்கென்றபடி. ஒருவகைக்கொப்பின்றிக்கேயிருக்கிறது பரத்வத்திலல்ல, '𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌮𑌾𑌨𑍁𑌷𑌂 𑌮𑌨𑍍𑌯𑍇' (ஆத்மாநம் மாநுஷம்மந்யே) என்கிறபடியே - அவதரித்து மனிச்சேறிட்டுக்கொண்டு நிற்கிறநிலையிலே" என்றாராம். (எல்லாவுலகுமுடையான்றன்னை) சர்வலோகேஶ்வரனானக்ருஷ்ணனை. "𑌕𑍃𑌷𑍍𑌣 𑌏𑌵 𑌹𑌿 𑌲𑍋𑌕𑌾𑌨𑌾𑌂" (க்ருஷ்ண ஏவஹிலோகாநாம்) இறே. இப்படி யெல்லாவற்றையுமுடையசெருக்காலே, உடைமை நோவுபடவிட்டுப் பார்த்திருக்குமோவென்னில் (குன்றமித்யாதி) இந்த்ரன்பசிக்கோபத்தாலே பசுக்களுமிடையரும் தொலையவர்ஷித்தபோது, தோற்றிற்றொருமலையையெடுத்து அந்தவாபத்தைரக்ஷித்தவுபகாரகனை. * தீம்மழையிறே. (சொன்மாலைகளித்யாதி) பரத்வத்தில்வந்தால் குணசத்பாவமிறேயுள்ளது, அவதரித்தவிடத்தேயிறேயது ப்ரகாசிப்பது; இப்படிவிஷயம் பூர்ணமானால் "பேசவொண்ணாது" என்று மீளுகையன்றிக்கே, இந்நிலையிலே விளாக்கொலைகொண்டுபேசும்படியானேன், சொன்மாலைகள் நன்றுசூட்டும்படியான பாக்யத்தைப்ராபிக்கப்பெற்றோம். இவரிப்போது, விதியென்கிறது - பகவத்க்ருபையை. தமக்குபலிக்கையாலும், அவனுக்குத்தவிரவொண்ணாதாகையாலும்-விதியென்கிறார். "விதிசூழ்ந்ததால்" என்றதிறே.

(என்னகுறைநமக்கே) * நக்ஷமாமிக்கிலக்காகாதே க்ருபைக்குவிஷயமான நமக்கொருகுறையுண்டோ. நமக்கொருகுறையுண்டாகையாவது-க்ருபையை பரிச்சிந்நமாக்குகையிறே. [𑌸𑌃] ரக்ஷணமே ஸ்வரூபமாயிருக்குமவர். [தம்] ப்ராதிகூல்யத்திலே முதிரநின்றவனை. [𑌨𑌿𑌪𑌤𑌿𑌤𑌂 𑌭𑍂𑌮𑍌] [நிபதிதம்பூமௌ] தேவத்வத்தாலேதறையில் கால் பாவாதவன் போக்கற்றுத் தறையிலேவந்துவிழுந்தான். ப்ரஜைதீம்புசெய்தால் பிதாசிக்ஷிக்கத்தொடர்ந்தால் மாதாவின்காலிலேவிழுமாபோலே காணுமிவன் பூமியிலேவிழுந்தது. [𑌶𑌰𑌣𑍍𑌯𑌃] [ஶரண்ய:] ஏதேனும் தசையிலும் சரணவரணார்ஹரானவர். [𑌶𑌰𑌣𑌾𑌗𑌤𑌂] [ஶரணாகதம்] கண்வட்டத்திலே யநந்யகதித்வம் தோற்றவிழுந்துள்ளவனை. [𑌵𑌧𑌾𑌰𑍍𑌹𑌮𑌪𑌿] [வதார்ஹமபி] பெருமாள் சித்தாந்தத்தாலும் வதார்ஹனே. [𑌕𑌾𑌕𑍁𑌤𑍍𑌸𑍍𑌥𑌃] [காகுத்ஸ்த:] குடிப்பிறப்பால்வந்த நீர்மையாலேரக்ஷித்தார். குடிப்பிறப்புதண்ட்யனைதண்டிக்கைக்கு முடலாயிராதோவென்னில் [𑌕𑍃𑌪𑌯𑌾] [க்ருபயா] நாம் தொடங்கினகார்யம் ப்ரபலகர்மத்தால் தலைக்கட்டவொண்ணா

தாப்போலே, அவரும் க்ருபாபரதந்த்ரராகையாலே நினைத்தவைதலைக்க ட்டமாட்டார். அவன்க்ருபைவிளையும் பூகதனுனுன், அதுக்குமேலே க்ருபைவிளைந்தது, இனி அவரொவ்வழியாலே தண்டிப்பர். ( என்னகுறைநமக்கே ) எனக்குக்குறை யுண்டாகையாவது-அவன்க்ருபை பரிச்சிந்நவிஷயமாகையிறே..................................................................*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு (என்றமித்யாதி) "சொன்மாலைகள்நன்று சூட்டும்விதியெய்தினம்" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (அரியதுண்டோவித்யாதி) "விதி" என்று-பகவத்க்ருபை.

" ஒன்ருகி " என்றுவிசேஷித்ததுக்கர்த்தம் ( எல்லாம்கூடினவித்யாதி ) ஓரோவகைக்கு - ஸ்வரூபகுணுதிகளிலே யோரோப்ரகாரத்துக்கு. இதுக்குப்ரமாணம் (நதத்ஸமம்சேத்யாதி) " ஒன்ருகி " என்றவிடத்திலே-ஐக்யபக்ஷத்தைநிவர்த்திப்பிக்கிருர் (ஒருப்ரகாராந்வயியாயித்யாதி) இதுவே-சப்தார்த்தமும். தனக்கென்ருதே, "தன்றனக்கு" என்றதுக்குக்கருத்தேதென்ன (எம்பெருமாஞரித்யாதி) சில ஸ்ரீவைஷ்ணவர்கள்கேட்க, சொட்டைநம்பியருளிச்செய்தவார்த்தை என்றபடி. "தன்றனக்கு" - அவதரித்தா ஸ்ரிதபரதந்த்ரனுயிருக்கிறதனக்கு. தன்றனக்கு-தானுனதனக்கு. தானுனதன்மையாவது-ஸ்வாஸாதாரணுகாரம். அதாவது-ஆஸ்ரிதபாரதந்த்ர்யம். மேலே "மழைகாத்தபிரான்" என்றிருக்கையாலே - (மனிச்சேறிட்டுக்கொண்டு நிற்கிறநிலையிலே) என்னுமிடம்ஸித்தமிறே. மனிச்சு-மநுஷ்யத்வம்.

" குன்றமொன்ருல்மழைகாத்தபிரான் " என்று மேலேயருளிச்செய்கையாலே (சர்வலோகேஸ்வரனுனக்ருஷ்ணனையென்றது) க்ருஷ்ணன் சர்வலோகேஸ்வரனேயென்ன ( க்ருஷ்ணஏவஹீத்யாதி ) " 𑌕𑍃𑌷𑍍𑌣 𑌏𑌵 𑌹𑌿 𑌲𑍋𑌕𑌾𑌨𑌾𑌮𑍁𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑌿𑌰𑌪𑌿 𑌚𑌾𑌪𑍍𑌯𑌯𑌃 " ( க்ருஷ்ணஏவஹிலோகாநாமுத்பத்திரபிசாப்யய: ) இதிராஜஸூயேபீஷ்ம:.

தொலைய-நசிக்கும்படி. "ஒன்று" என்றதுக்கர்த்தம் (தோற்றிற்ருருமலையையென்றது) இத்தையுபகாரமாகச்சொல்லுகைக்கப்படி கனத்தவாபத்தோவென்ன (தீய்மழையிறேயென்கிருர்)

"நன்று" என்றதுக்குபாவம் (பாத்வத்தாலித்யாதி) "மழைகாத்தபிரான்" என்று - ஆபத்ஸகத்வாதிகுணங்களைச்சொல்லுகையாலே ( அதுப்ரகாசிப்பதென்றது ) விளாக்கொலைகொண்டென்றது - " நன்று " என்றதுக்கர்த்தம். சப்தார்த்தம் ( சொன்மாலைகளித்யாதி ) அநந்யோபாயரான விவர்க்கொரு ஸுக்ருதமுண்டோ, " விதியெய்தினம் " என்கிறதென்னென்ன (இவரிப்போதித்யாதி) பகவத்க்ருபையை - "விதி" என்னலாமோவென்ன (தமக்கித்யாதி) ப்ரயோகம்காட்டுகிருர் (விதிசூழ்ந்ததித்யாதி)

க்ருபாவிஷயபூதராகையைக்கொண்டு "ஒருகுறையுமில்லை" என்ருர்; குறையில்லாமையை வ்யதிரேகத்தாலே த்ருடீகரிக்கிருர் (நமக்கித்யாதி) க்ருபையவனுக்குத்தவிரப்போகாதென்றதுக்கு ப்ரமாணம் ( ஸஇத்யாதி ) " [illegible]

பாவயசு" (ஸதந்விபதிதம்பூமௌஸரண்யஸ்ஸரணுகதம் । வதார்ஹமபிகாகுத்ஸ்த்த: க்ருபயாபர்யபாலயத் ) இதிசுந்தரகாண்டே ஹநூமந்தம்ப்ரதிஸீதா. * தச்சப்தம்-ரக்ஷகத்வப்ரஸித்தியிலே. " வர்ய்வாவயசு" (பர்யபாலயத்) என்றத்தைக்கடாக்ஷித்து (ரக்ஷணமேயித்யாதி) * த்விதீயதச்சப்தம் - ப்ராதிகூல்யப்ரசித்தியிலே. " நிபதிதம் " என்கிறபதசாமர்த்த்யங்கொண்டு-பூமியிலென்கிறது சித்தமாயிருக்க, "பூமௌ" என்றுவிசேஷித்ததுக்குபாவம் (தேவத்வத்தாலேயித்யாதி) பாவாத - வைக்கப்போகாத. போக்கற்று-கதிகெட்டு. பூமியிலேவிழுகைக்குஹேத்வந்தரம் ( ப்ரஜையித்பாதி ) ரசோக்தியாதல். ( கண்வட்டத்திலேயிதி ) "சரணம்" என்று - க்ருஹமாய், அதாவது-இவர்கண்வட்டத்தைச்சொல்லுகிற தென்றபடி. " தொஷோயத்யபி " (தோஷோயத்யபி ) இத்யாதியைக்கடாக்ஷித்து அபிஸப்தத்துக்கர்த்தம் (பெருமாளித்யாதி) ( அபி ) ப்ராணனோடே யிருக்கப்பண்ணும் தண்டத்துக்கர்ஹனன்றிக்கேவதத்துக்கே அர்ஹனுனுமென்றபடி. குடிப்பிறப்பால்வந்தநீர்மையாவது-ஸரணுகதனுனவிந்த்ரனுக்காகவசுரர்களை நிக்ரஹித்ததயை. அவனை வதியாமைக்கு ஹேத்வந்தரம் (அவனித்யாதி) (விளைந்தது) விளைந்தால் தண்டிப்பாரில்லையேயென்று த்வநி. ப்ரமாணகதநாநந்தரமும் குறையில்லாமையை த்ருடீகரிக்கிருர் ( எனக்கித்யாதி ) " உத்தூஸ்வவம்வாவிநிநாம்கூவஷ்ஹ்யே நாரா: । வதிகொடிஸுதெநாவிநக்ஷ்மிவஸுநுரெ" (மத்பக்தம்ஸ்வபசம்வாபிநிந்தாம்குர்வந்தியேநரா: । பத்மகோடிஸதேநாபிநக்ஷமாமிவஸுந்தரே ) இதி ஸ்ரீவாராஹே.

க்ரமேணுர்வட:......................................................................*

---

# எட்டாம்பாட்டு.

---

நமக்கும்பூவின்மிசைநங்கைக்குமின்பனேஞாலத்தார்
தமக்கும்வானத்தவர்க்கும்பெருமானேத்தண்டாமரை
சுமக்கும்பாதப்பெருமானைச்சொன்மாலைகள்சொல்லுமா
றமைக்கவல்லேற்கினியாவர்நிகரகல்வானத்தே.

## ஆருயிரப்படி.

( நமக்கும் ) இன்றுதன்றிருவடிகளை யாஸ்ரயித்தநாமும் பெரியபிராட்டியாருமானுல், பெரியபிராட்டியார் பக்கலிற்காட்டிலும்நம்பக்கலிலே வ்யாமுக்தனுய், அநாஸ்ரிதரான தேவர்களுக்கும் மநுஷ்யர்களுக்கு மொருவாசியின்றியே யொக்கவரியனுய், விகஸதருணுரவிந்தாதிக சௌகுமார்ய சரணயுகளனுயிருந்த வெம்பெருமானென்னை, " ஒன்றுசொல்லுங்காண் " என்றருளிச் செய்தருளினுல், சொல்லலாம்படி சொன்மாலைகளமைக்கவல்லேற்கினித்திருநாட்டிலேதான் நிகருண்டோ வென்கிருர்......................................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், உபயவிபூதியுக்தனான சர்வேஶ்வரனை ஸ்துதிக்கிறவெனக்கு பரமபதவாசிகளில் ஸத்ருஶருண்டோவென்கிறார்.

நமக்கும்-அநாத்யஜ்ஞாநாதிசம்சர்க்கத்தாலே நித்யசம்சாரிகளுக்குமிவ்வருகானநமக்கும். பூவின்மிசை-பூவில்பிறப்பால்வந்தபோக்யதையாலும். நங்கைக்கும்-ஆத்மகுணபூர்த்தியாலும்நித்யசூரிகளுக்கு மவ்வருகானபிராட்டிக்கும். இன்பனை-தன்போக்யதாதிசயத்தாலே ஆநந்தஜநகனானவனை. இவ்விரண்டாகாரத்துக்குமுபபாதகமாய், ஞாலத்தார்தமக்கும்-அவிசேஷஜ்ஞான லீலாவிபூதியிலுள்ளாரோடு. வானத்தவர்க்கும்-விசேஷஜ்ஞானபரமபதவாசிகளோடுவாசியற. பெருமானை-நிருபாதிகமானசர்வசேஷித்வத்தையுடையனாய். இந்தபோக்யதைக்கும்மேன்மைக்கும்மேலே, சௌந்தர்யசௌகந்த்யசௌகுமார்ய லாவண்யாதிகுணங்களுக்குத்தோற்று, தண்-செவ்வியையுடைய. தாமரை-தாமரை. சுமக்கும்-சுமக்கும்படியான. பாதம்-திருவடிகளையுடையனான. பெருமானை-சர்வாதிகனை. இவ்வாகாரானுசந்தாநத்தாலே உடைகொலைப்படாதே, சொன்மாலைகள் - சப்தசந்தர்ப்பங்களை. சொல்லுமாறு-சொல்லும்படியாக. அமைக்கவல்லேற்கு-என்னையமைத்துதரிக்கவல்லவெனக்கு. அகல்-அதிவிஸ்தீர்ணயான. வானத்து-த்ரிபாத்விபூதியில். யாவர்-அவிகாராகாரராயநுபவிக்கிறவர்கள்ஆர்தான். இனி-இனி. நிகர்-ஒப்பார்.

இந்தளத்தில் தாமரைபோலே * இருள்தருமாஞாலத்திலே அநுபவிப்பார்க்கு, * தெளிவிசும்பி லநுபவிப்பார் ஸத்ருஶரல்லர்களென்றுகருத்து..............*

## ஈடு - எட்டாம்பாட்டு.

எம்பெருமானுக்குத் தம்பக்கலுண்டான சங்காதிசயத்தை யநுசந்தித்து, அவனுடையவுபயவிபூதி யோகத்துக்கும் சௌகுமார்யத்துக்கும் தகுதியாகக்கவிசொல்லவல்ல வெனக்குத்திருநாட்டிலும் நிகரில்லையென்கிறார்.

( நமக்கும் ) இன்றுதன்திருவடிகளை யாஶ்ரயித்த நமக்கும். நித்யசம்சாரிகளுக்கு மிவ்வருகாயிருக்கிறநமக்கும். “ நீசனேன்நிறைவொன்றுமிலேன் ” என்றாரிறே. ( பூவின்மிசைநங்கைக்கும் ) நித்யசூரிகளுக்குமவ்வருகாய், ரூபகுணத்தாலு மாத்மகுணத்தாலும் பூர்ணையாயிருக்கிறவளுக்கும். ( பூவின்மிசைநங்கை ) புஷ்பத்தில் பரிமளத்தைவகுத்தாற்போலே யிருந்துள்ள சௌகுமார்யத்தையும் போக்யதையையு முடையவள். இத்தலைநிறைவின்றியிலே யிருக்கிறாப்போலேயாயிற்று அத்தலைகுறைவற்றிருக்கிறபடி. ( இன்பனை ) இன்பனுமிடத்தில், மூற்பாடிங்கேயாய்ப் பின்பாயிற்றவளுக்கு ஸ்நேஹித்திருப்பது. [ கூயிகிஂவி தஸாவஞெ கிஂகாரூ)ஂவீ தயாஂஂ ] (த்வயிகிஞ்சித்ஸமாபந்நேகிம்கார்யம்ஸீதயாமம) பெருமாளெழுந்தருளி நிற்கச்செய்தே ராவணன் கோபுரசிகரத்திலேவந்து தோற்றினவரிறே, “ ராஜத்ரோஹியான பையல்திருமுன்பே நிற்கை

டாவதென்" என்றுமஹாராஜரவன்மேலே யெழப்பாய்ந்துசென்றுவந்தபோது பெருமாளருளிச்செய்கிறார் [ ஏவம்ஸாஹஸயுக்தாநிநகுர்வந்திஜநேஶ்வராঃ ] ( ஏவம்ஸாஹஸயுக்தாநிநகுர்வந்திஜநேஶ்வராঃ ) சிலர்மேல் விழவேண்டினல், பரிகரபூதர்நிற்க ப்ரதாநரோமேல் விழுவார். [ லோகநாதঃபுராபூத்வாஸுக்ரீவந்நாதமிச்சதி ] ( லோகநாதঃபுராபூத்வாஸுக்ரீவந்நாதமிச்சதி ) கிடைப்பது கிடையாதொழிவது, இச்சியாநின்றார். [ ஸுக்ரீவம்ஶரணங்கதঃ ] ( ஸுக்ரீவம்ஶரணங்கதঃ ) "'ஸ்ரீவிபீஷணுஷ்வானைப்புகுரவொட்டேன்' என்றார்மஹாராஜர், 'இவன்புகுராவிடில் நாமுளோமாகோம்' என்கிறார்பெருமாள், இப்படியிருவரும் விப்ரதிபத்திபண்ணின விதுக்குக்கருத்தென்" என்றுஜீயர்கேட்க; "இருவரும் 'சரணுகதரானவர்களைவிடோம்' என்றுவிப்ரதிபத்திபண்ணுகிறார்கள்காணும்" என்றுபட்டரருளிச்செய்தவார்த்தை. "ஸுக்ரீவம்ஶரணங்கதঃ" (ஸுக்ரீவம்ஶரணங்கதঃ) என்றத்தைநடத்தப்பார்த்தார் மஹாராஜர், "ராகவம்ஶரணங்கதঃ" ( ராகவம்ஶரணங்கதঃ ) என்றத்தைநடத்தப்பார்த்தார்பெருமாள். ஆகையிறே "ஆநய" என்று-அவனைவிடுவித் தழைத்துக்கொள்ளவேண்டிற்று. [ த்வயிகிஞ்சித்ஸமாபந்நே ] ( த்வயிகிஞ்சித்ஸமாபந்நே ) நீர்மஹாராஜரான தரம்குலைய அவனொருவார்த்தை சொல்லுமாகில், நீர்தேடிப்போகிற சரக்குத்தான்நமக்கென்செய்யவென்றாரிறே. இப்படியவனிருக்கைக் கடியென்னென்னில் ( ஞாலத்தாரித்யாதி ) இப்படிநெடுவாசிபட்ட விஷயங்களிலே ஸ்நேஹமொத்திருக்கைக்கடி ; இரண்டிடத்திலுள்ளாரோடு மொத்திருக்கச்செய்தேப்ராப்தி, இவர்படுக்கைப்பற்றி லுள்ளவராகையாலே. அவன்சேஷியானநிலையுமித்தலை பரதந்த்ரமான நிலையுமொத்திருக்கையாலே. மாதாபிதாக்கள் ப்ரஜைகளில் குறைவாளர்பக்கலிலேயிறே யிரங்குவது, அத்தாலே சம்சாரிகள் முற்படவேண்டுகிறது. அவ்விபூதியு முண்டாயிருக்கவிறே "ஸஏகாகீநரமேத" ( ஸஏகாகீநரமேத ) என்கிறது. ( தண்டாமரை சுமக்கும் பாதப்பெருமானை ) குளிர்ந்த ஆசநபத்மத்தாலே தரிக்கப்பட்டதிருவடிகளையுடைய சர்வஸ்வாமியை. குளிர்த்தியாலும் பரிமளத்தாலும் செவ்வியாலும் தாமரைதிருவடிகளுக்குத் தோற்றுச்சுமக்கிறாப்போலே யாயிற்றிருக்கிறது, "தாமரைநின்கண்பாதம்கையொவ்வா" என்றதிறே. ( சொன்மாலைகள் ) "சர்வேஶ்வரன் 'ஆழ்வீர், நம்மையொருகவிசொல்லும்' என்றால் அப்போதேகவிசொல்லிச் சமையும்படியாகவல்லவெனக்கென்கிறார்" என்றுமுன்புள்ளமுதலிகள் நிர்வஹிக்கும்படி ; அங்ஙனன்றிக்கே, பட்டர் "'என்னாகியே தப்புதலின்றித்தனைக் கவிதான்சொல்லி' என்கிறபடியே-சர்வேஶ்வரன் கவிபாடினனாகையாலே கவிபாடத்தட்டில்லை; அவனங்கீகரித்துத் திருக்கண்களாலே குளிரக்கடாக்ஷி

ஜனன்றிக்கே, இவளோடொக்க மோஹிப்பாரைக் கிடைக்குமத்தனை போக்கி பரிஹாரம்பண்ணுவாரை யெங்கேதேடுவோம். * ஊரும்நாடுமு லகமும் தன்னைப்போல வாக்கிக்கொண்டிறேயிருப்பது. அன்றிக்கே, தா னுமிப்போதுபரிஹரிப்பாரையாராயாகிற்கிறளென்றுதோற்றியிருந்தது. அன்றிக்கே, "கடல்வண்ணரிதுசெய்தார்காப்பாரார்" என்கிறபடியே, ஔ ஷதமேஅபத்யமானால்பரிஹாரமுண்டோ. *நச்சுமாமருந்தமிறே அபத்ய மாகிறது; "நிர்வாணம்பேஷஜம்பிஷக்" (நிர்வாணம்பேஷஜம்பிஷக்) என் கிறவனுயிற்றுபாதகனாகிறான். (யாம்) "அன்னைமீர்" என்னுநிற்கச்செய்தே யிறே "யாம்" என்கிறது - தாய்மார்க்கும் தோழிமார்க்கும்வாசியற்றபடி. தா ய்மார் மங்களாசாஸநம்பண்ணி மீளாநிற்க, "ஶோகபாரேண சாக்ராந்தாஶ்ஶயநம்நஜஹாஸ்த தா" (ஶோகபாரேணசாக்ராந்தாஶ்ஶயநம்நஜஹாஸ்த தா) என்று அதுவும்மாட்டாதே கிடந்தார்களிறேதோழன்மார்; ஆகையா லே, தாய்மார்க்கும் தோழிமார்க்கும் வாசிபறுக்கும் விஷயமென்னுதல்; தோழிமார்க்கேற்றம் சொல்லுகிறதாதல், (இனி) "நோயின்னது" என்றறி ந்தபின்பு. (எங்ஙனம்நாடுதும்) இனிபரிஹாரமுண்டோ. "எங்கேதேடக் கடவோம்" என்றவாறே, "இவள்கைபது நம்காரியம், இவளறிந்தாளா கவடுக்கும்" என்றுபார்த்து பந்துவர்க்கமடைய இவள்மேலே யொரு முகம்செய்தது ; "இனிநாம்முன்னேயறிந்தோமாகச்சொல்லில் நம்கா வற்சோர்வாலேவந்ததாம், நாமிப்போது நிரூபித்தோமாவோம்" என்று பார்த்து (ஓர்ப்பால்) இப்போது ஓர்ந்துபார்த்தவிடத்து. நீங்களுமாரா யா நின்றிகோளிறே, உங்களோபாதி நானுமாராய்ந்து பார்த்தவிடத்தில் இங்ஙனேதோற்றிற்று. இவள்தானொரு கூரத்தாழ்வானோடொக்குங்கா ணும், மநஸ்ஸை ப்ரத்யக்ஷவிஷயமாககினால் தத்த்வத்ரயத்தையு மலகலகா கக் காணவல்லளாயிற்று. (இவ்வொண்ணுதல்) இவ்விலக்ஷணமானநு தலையுடையவள். இம்முகத்தையுடையவளுக்கு முகாந்தரத்தாலே வரு வதொருநோயுண்டோ. "கண்ணன்கோளிழைவாண்முகமாய்க கொடி யேனுயிர்கொள்கின்றது" என்கிறபடியே அம்முகத்தாலே வரவேண்டா வோ. இவள்நோயென்று லவனடியாகவேண்டாவோ; ஸ்ரீபரதாழ்வான் நோயென்றால் சாதுர்த்திகமாயிருக்குமோ, ராமவிரஹத்தாலேவந்ததெ ன்று ப்ரஸித்தமன்றோ. இவளையிப்படிபடுத்துவதொரு விஷயமாகவேண் டாவோ. அம்புபட்டவாட்டத்தோடே முடிந்தாரையும், நீரிலேபுக்குமு டிந்தாரையும் முகத்திலேதெரியாதோ. க்ஷுத்ரவிஷயத்தை யாசைப்பட் டுப் பெருமையாலுண்டான மோஹமாகையாலே முகத்தில்செவ்விக்கு ஆலத்திவழிக்கவேண்டும்படி யாயிற்றிருக்கிறது. (உற்ற) பரிஹாரமில் லாதபடி மறுபாடுருவக்கொண்டநோய். (நன்னோய்) இந்நோவுதான் பரிஹரிக்கவேண்டா. கைக்கூலிகொடுத்துக் கொள்ளவேண்டும்நோய், ப ரிஹரிக்கவேண்டா. இந்நோய்கொள்ளுகைக்கிறே முமுக்ஷுக்கள் புருஷ

காரம்பண்ணுகிறது. இந்நோய்கொள்ளுகையன்றிக்கே, பரிஹாரம்சொல்ல விருப்பதேநான். ஜ்ஞாநம்பிறந்தபின்பு சரீராவசாநத்தளவும்செல்ல தேஹயாத்ராக்குறுப்பாய், பின்புதானே நித்யப்ராப்யமானநோயிறே. இதரசாதநாபேக்ஷயா ப்ராபகமாய், சாதநபுத்திகழிந்தவன்றுதானே ப்ராப்யமாயிருக்குமிறே. [ வஈவஉவநூ ] ( பரமாபதமாபந்ந: ) அடிக்கழஞ்சுபெற்ற ஆபத்தாயிற்று. இடர்பட்டவிடத்திலே சர்வேஸ்வரன்அரைகுலையத் தலைகுலையவந்து விழும்படியான வாபத்தாயிற்றிது. “ ஹ்ரூாகூநந்யாஶகூ ”(பக்த்யாத்வநந்யயாஶக்ய:)என்கிறவிதுண்டானால் பின்னையவன் கைப்பட்டானேயன்றோ.

( தேறினோம் ) இவர்கள்கோஷ்ட்டியில் தெளிவரிதாயா யிற்றிருப்பது, ருஷிகள்கோஷ்ட்டியில் கலக்கமரிதா யிருக்குமாபோலே. “ இதரவிஷயப்ராவண்யமாகாது ” என்கிறதெளிவிறே ருஷிகளுக்குள்ளது, பகவத்ப்ராவண்ய மடியாகவந்த கலக்கமிறேயிது.

ஆகிலதுசொல்லிக்காணுமென்ன ( போர்ப்பாகித்யாதி ) இரண்டுதலைக்கு முறவாய்ப்பொருந்தவிடச்சென்று, வினைத்தலையிலேவந்தவாறே, “ யஸ்யமந்த்ரீசகோப்தாச ” ( யஸ்யமந்த்ரீசகோப்தாச ) என்கிறபடியே-அவர்கள்பரித்துக்கொண்ட பரிகரமெல்லாந்தானேயாய் நின்றாயிற்று. போர்க்குவேண்டும் நிர்வாஹமெல்லாம் தானேசெய்து. பாகென்று-நிர்வாஹகர்செய்யும்தொழில். ( தான்செய்து ) * ஏழுலகும் தனிக்கோல்செல்ல வீற்றிருந்ததான்செய்து. தன்னுசநபலத்தாலே சர்வத்தையும் நடத்தக்கடவதான்செய்து கைதொடனாய். தானென்று-மேன்மைசொல்லிற்று. இவள்மோஹிக்கிறதவனுடைய சௌலப்யத்துக்கிறே. எளியவனெளிமைக் ககப்படுமவளன்றேயிவள், அம்மேன்மையுடையவன் தாழநின்றதிலே யகப்படுமவளிறேயிவள். ( தான்செய்தன்றைவரைவெல வித்த ) அவர்கள் நூற்றுவராய் துர்வர்க்கமடங்கவங்கேதிரண்டு, இவர்கள் தாங்களைவராய் வெருவியராய் நின்றவன்று ; தான்கையுமணியும்வருத்து, படைபொருத்தி, சாரத்யம்பண்ணி, குதிரைகளிளைத்தவிடத்திலே வாருணாஸ்த்ரங்கள் விடலாமிடங்கள்காட்டிவிடுவித்து, அங்கேகுதிரைகளைவிட்டு நீரூட்டிப்பூட்டி வென்றானென்னுமிடம். அர்ச்சுநன்மேலேயாகவேண்டும் வ்யாபாரங்களையடையத் தானேசெய்தானிறே. ( ஐவரைவெல்வித்த ) துர்யோதநாதிகளைத் தோற்பித்தவதிலு மரிதுகாணும் பாண்டவர்களை வெல்வித்தது. அவர்களை துர்மாநத்தாலே தோற்பிக்கையரிது ; இவளை ஸ்த்ரீத்வாபிமாநத்தாலே தோற்பிக்கையரிது, அப்படியே, “நகாங்க்ஷேவிஜயங்கூஷ்ண ” ( நகாங்க்ஷேவிஜயம்க்ருஷ்ண ) என்றவிவர்களை ஜயிப்பிக்கையுமரிதிறே. ( துர்யோதநாதிகளைத்தோற்பிக்கலாம், இவளைத்தோற்பிக்கையரிது ; அவர்களை ஸ்வாதந்த்ர்யாபிமாநத்தாலே தோற்

பிக்கையரிது, அப்படியேயிவளை ஸ்த்ரீத்வாபிமாநத்தாலே தோற்பிக்கை யரிது.) (மாயப்போர்) ஆஸ்சர்யமான யுத்தமென்னுதல், க்ருத்ரிமயுத் தமென்னுதல். பகலையிரவாக்குவது, "ஆயுதமெடேன்" என்று ஆயுத மெடுப்பதானவை யித்தலையிலுமுண்டு; மஹாரதரநேகர்கூடி அபிமந்யு ஒருவனைநிரசித்தவை தொடக்கமானவை யத்தலையிலுமுண்டு; இவற் றைச்சொல்லிற்றாகவுமாம். (தேர்ப்பாகனார்க்கு) அர்ச்சுநனையெதிரிகள் சீறினால் அழியச்செய்வது தன்னையாம்படி, உடம்புக்கிடாதே வெறுங் கையோடே தேர்த்தட்டிலே முன்னேநின்று சாரத்யம்பண்ணினபடியை ச்சொல்லுகிறது. [அயமஸ்மி] நானுன்னடியானன்றோ, ஏவிக்கார்யங் கொள்ளலாகாதோ என்னும். (இவள்) அப்பாகிலே பிடிபட்டவிவள். "நிரூணஃவாஶாஹாவளஷெஹஷெவ௱ாவ௱திஷதி" (நிர்க்குணஃப ரமாத்மாஸௌதேஹந்தேவ்யாப்யதிஷ்ட்டதி) என்கிறபடியே, சாரத்ய வேஷமிவள் வடிவிலேகிழலெழுந்து தோற்றுகிறதில்லையோ. இவள்நெ ஞ்சுகலங்கிமோஹிக்கிறது தேர்ப்பாகனார்க்கு; "கடல்கலங்கிற்று" எ ன்றால், "மந்தரத்தாலே" என்றிருக்கவேண்டாவோ. சாரத்யவ்ருத்தா ந்தத்தையொழிய, பரமபதத்தில் முதன்மைக்கு மோஹிக்குமோ * மயர் வறமதிநல மருளப்பெற்றவிவள். * மயர்வறமதிநல மருளப்பெற்றார் கல ங்கும்போது அவனுடையவாஸ்ரித பாரதந்த்ர்யத்திலே யாகவேண்டா வோ. ஒருவனுக்கு சோகநிவர்த்தகனானவன் காணுங்கோளிவளுக்கு சோ கத்தைவிளைத்தான். ஆணுக்குசோகத்தைப் போக்கினான், அபலைக்குசோ கத்தைவிளைத்தான்..........................................................*

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு (திர்ப்பாரையித்யாதி) "தேர்ப்பாகனார்க்கு" இத்யாதியை ப்பற்ற (நிதாநத்தைச்சொல்லியென்றது) நீங்கள்செய்கிறவை பரிஹாரமன்றென் றது - "திர்ப்பாரையாமினியெங்ஙனம்நாடுதும்" என்றத்தைப்பற்ற.

"மூன்றுபடியாக" என்றத்தைவிவரிக்கிறார் (திர்ப்பாரையித்யாதி) அ தெப்படியென்ன (இவர்களித்யாதி) இவள்மோஹித்தாலெல்லாரும் மோஹிக்க வேணுமோவென்ன (ஊரும்நாடுமித்யாதி) "எங்ஙனம்" என்றது-இரண்டர்த் தத்திலு மாக்ஷேபாபிப்ராயம்; மூன்றாமர்த்தத்தில்-ப்ரஸ்நாபிப்ராயம். "மூன்றர் த்தம்" என்றுப்ரதிஜ்ஞைபண்ணி, பின்னையுமோரர்த்தம் தோற்றுகையாலே யருளி ச்செய்கிறார் (அன்றிக்கேகடல்வண்ணரித்யாதி) அன்றிக்கே, இவ்வாக்யம்- "நோ யின்னதென்றறிந்தபின்பு" என்கிறவாக்யாநந்தரம் "இனி" என்றதுக்குதாத்பர்யா ந்தரத்வேநகோசாந்தரங்களிலே யிருக்கிறது. "யாம்" என்கிறபஹுவசநம்-தா ய்மாரையும்கூட்டியென்று விவக்ஷித்து,"அன்னைமீர்"என்றால் நீசொன்னதே"யாம்" என்கிறதென்னென்ன (அன்னைமீரித்யாதி) அதாவதேதென்ன(தாய்மார்க்குமித்யா தி) இத்தால்பெண்பிள்ளையிடத்தில்துஃக்கத்தில்வந்தால் தாய்மார்க்கும்தோழிமா ர்க்கும் வாசியில்லையென்றபடி. தோழிமாரை பெற்றதாய்மார்க்கு வாசியில்லை

யோ, இவர்க்கும் சாம்யம்சொல்லலாமோவென்ன; சாம்யமாத்ரமன்றிக்கே,தாய்மாரிற்காட்டில் தோழிமாருக்கு வ்யாவ்ருத்தியுண்டென்று சப்ரமாணமாகவருளிச்செய்கிறார் ( தாய்மாரித்யாதி ) மங்களாசாஸநம்பண்ணியென்றது - " யநூஜஉ ஸுவண ஷஸ) " (யந்மங்களம்ஸுபர்ணஸ்ய) இத்யாதியைப்பற்ற. "யெதரா ராமஸ) ஸுஹ்ருதஸ்வெ தெமூடசெதஸ: ஶோகஹாரேணவாகூரா ஜா ஹூய நஜஹதூ " யேதுராமஸ்ய ஸுஹ்ருதஸ்ஸர்வேதேமூடசேதஸ: ஶோகபாரேணசாக்ராந்தாஶ்ஶயநந்நஜஹுஸ்ததா ) இத்யயோத்யாகாண்டேவநவாசப்ரயாணாநந்தரே. ( ஆகையாலே ) "யாம்" என்று - அன்னையர்க்கும் தங்களுக்குமுண்டானஸாம்யத்தாலே யவர்களையுங்கூட்டிக்கொண்டு சொல்லுகிறதாதல், அவர்களிற்காட்டில் தங்களுக்குண்டான வேற்றத்தாலே தங்களைச்சொல்லிற்றுதல். த்விதீயார்த்தத்துக்கு, " யாம் " என்று-ஆத்மநிபஹுவசநம். நோயின்னதென்றென்றது-தேர்ப்பாகனார் விஷயமென்றென்றபடி. " இனி " என்றதுக்கு தாத்பர்யாந்தரம் ( அன்றிக்கேகடல்வண்ணரித்யாதி ) இதுகோசாந்தரங்களில் பாடக்ரமபக்ஷத்திலே ; அவனாலேவந்ததென்று தாத்பர்யம். " கடல்வண்ணர் " இத்யாதிக்கு-ஸ்பஷ்டோர்த்த:. திருநெடுந்தாண்டகம் பதினோராம்பாட்டு, " பட்டுடுக்கும் " இத்யாதி. " அவனௌஷதம் " என்னுமதுக்கு ப்ரமாணத்தை யருளிச்செய்யாநின்றுகொண்டு, அபத்யமாம் ப்ரகாரத்தையருளிச்செய்கிறார் ( நச்சுமாமருந்தமித்யாதி ) " மருந்து " என்னுமதுக்கு சஹஸ்ரநாமத்தில் ப்ரமாணமும்காட்டுகிறார் ( நிர்வாணமித்யாதி ) நிர்வாணம்-ஆநந்தம். அன்றிக்கே கடல்வண்ணரித்யாதி வாக்யத்ரயமும் - " அன்றிக்கேதானுமிப்போதுபரிஹரிப்பானை " இத்யாதிவாக்யாநந்தரத்திலேயே யிருக்கிறது. முன்பின்னா யிருந்தபோதும், அவதாரிகை கீழ்ச்சொன்னபடியே.

மேலுக்கவதாரிகை ( எங்கேதேடவித்யாதி ) " அன்னைமீர் " என்கிறபஹுவசநார்த்தம் (பந்துவர்க்கமித்யாதி) ஆராய்ந்தமாத்ரத்தாலே, " தன்காவற்சோர்வாலேவந்தது " என்கிறதோஷம் போமோவென்ன ( நீங்களுமித்யாதி ) உக்தார்த்தத்துக்கு த்ருஷ்டாந்தம் ( இவள்தானித்யாதி ) இவள்தான்-இத்தோழிதான். த்ருஷ்டாந்தகததர்மத்தை தார்ஷ்டாந்திகத்திலே காட்டுகிறார் ( மநஸ்ஸைமித்யாதி ) அலகலகாக-வ்யக்தமாக.

ஸ்வாபாவிகமான வழகையுடையநுதலென் றர்த்தமருளிச்செய்கிறார் (இவ்விலக்ஷணேத்யாதி ) " இ " என்றத்தை - முகத்துக்கு விசேஷணமாக்கியர்த்தம் ( இம்முகத்தையித்யாதி ) இது-ரசோக்தி. பின்னையெம்முகத்தாலே வரவேணுமென்ன ( கண்ணனித்யாதி ) க்ருஷ்ணனுடைய, தன்னொளிதானே ஆபரணமாம்படி உஜ்ஜ்வலமான திருமுகமாய்க்கொண்டு பாபத்தின்கொடுமையை யுடையவென் ப்ராணனை யபஹரியாநின்றதித்யர்த்த:. கோள்-ஒளி. இழை-ஆபரணம். வாள்-ஔஜ்ஜ்வல்யம். " இ " என்றத்தை-நுதலையுடையவளுக்கு விசேஷணமாக்கி யர்த்தாந்தரம் ( இவள்நோயித்யாதி ) உக்தார்த்தத்துக்கு த்ருஷ்டாந்தம் ( ஸ்ரீபரதாழ்வானித்யாதி ) " தேர்ப்பாகனார்க்கு " என்றத்தைக் கடாக்ஷித்துபாவம் ( இவளையிப்படியித்யாதி ) " ஒண்ணுதல் " என்றதுக்கு-ஸ்வாபாவிகமான வொண்மையாகக் கீழருளிச்செய்து, பகவதநுபவத்தால்வந்த வொண்மையென்றர்த்தாந்தரம் ( அம்புபட்டவித்யாதி ) ப்ரக்ருதத்திலேயேதென்ன ( குணதிகேத்யாதி ) குணாதிகவிஷய

மாகையாலே யவனடியாகவந்ததாய், அத ஏவ ஆகந்துகமென்றபடியாய், அவனு ள்ளே யிருக்கையாலே மோஹதசையிலும் காந்திபோகாதென்றபடி. இந்தவர்த்தத் துக்கு - "வஸதிஹ்ருதி-ஸௌம்யரூப:" (வஸதிஹ்ருதி-ஸௌம்யரூப:) இ த்யாதியை ப்ரமாணமாகக்கண்டுகொள்வது.

கைக்கூலிகொடுத்தென்றது-ஸ்வாபதேசத்திலே, சாதநாநுஷ்டாநத்தை ப் பண்ணியென்றபடி. "நோய்" என்றதுக்கு-ஸ்வாபதேசத்திலே, பக்தியென்று விவக்ஷித்து, இதிப்படி ப்ரார்த்யமாயிருக்குமோவென்ன (இந்நோயித்யாதி) (பு ருஷகாரம் பண்ணுகிறதென்றது) "தைவம்புருஷகாரேண நிவர்த்தயிதுமுத்ஸஹே" (தைவம்புருஷகாரேண நிவர்த்தயிதுமுத்ஸஹே) என்கிறந்யா யத்தாலே, புருஷகாரமென்றது-யத்நமாய், "பக்திமபிப்ரயச்சமே" (பக்திம பிப்ரயச்சமே) "பரபக்தியுக்தம்மாம்குருஷ்வ" (பரபக்தியுக்தம்மாம்குரு ஷ்வ) என்றுயத்நித்து ப்ரார்த்திக்கிறதென்றபடி. புருஷகாரமாவது-புருஷன்பண் ணும்வ்யாபாரம். ஹார்த்தபாவம் (இந்நோய்கொள்ளுகை யன்றிக்கேயித்யாதி) இந்நோய்க்கு நன்மையேதென்ன (ஜ்ஞாநம்பிறந்தவித்யாதி) யத்வா, உபாசகர் க்குப்போலே இவர்க்கிது சாதநமோவென்ன (ஜ்ஞாநம்பிறந்தவித்யாதி) (தேஹ யாத்ரைக்குறுப்பாய்) என்றதுக்கும், (பின்புதானே நித்யப்ராப்யம்) என்றதுக் கு மத்யர்தபேதம்தெரியாதே; "தேஹயாத்ராசேஷம்" என்கிறதென், சாதநத் வமில்லையோவென்ன (இதரசாதநேத்யாதி) இதரசாதநாபேக்ஷயாவென்றது - ப்ரபத்திக்கிதரமான சாதநமாக வபேக்ஷித்தபோதென்றபடி. "நன்னோய்" என் றதுக்கு-ஶ்லாக்யமான நோயென்றுவிவக்ஷித்து, அதுக்குப்ரமாணம் (பரமபத மித்யாதி) பரமசப்தம்-இவ்விடத்தில், ஶ்லாக்யதையிலே. அத்தை யருளிச்செய்கி றார் (அடிக்கழஞ்சித்யாதி) அடிக்கழஞ்சுபெற்ற-ஶ்லாக்யமான. அதுக்குஹேது (இடரித்யாதி) "பரமாபதமாபந்நோ மநஸாசிந்தயத்தரிம்" (பரமாபதமா பந்நோமநஸாசிந்தயத்தரிம்) இதிஸ்ரீவிஷ்ணுதர்மே. "இது" என்கைக்கு-அப்ப டி ஶ்லாக்யமாயிருக்குமோவென்ன (பக்த்யாத்வித்யாதி) "பக்த்யாத்வநந்யயாஶக்ய அஹமேவம்விதோர்ஜுந" (பக்த்யாத்வநந்யயாஶக்ய அஹமேவம்விதோ ர்ஜுந) இதிகீதாஸ்வேகாதஶே.

"உற்றநன்னோயிது" என்னவமைந்திருக்க, "தேறினோம்" என்கிறவிதுக் கு - இந்தத்தேற்றந்தானுமரிதென்றுதாத்பர்யமென்கிறார் (இவர்கள்கோஷ்டியி லித்யாதி) இவர்கள் - ஆழ்வார்கள். பகவத்பாகவதவிஷயங்களில் ப்ராவண்யாதி சயத்தாலே "சர்வாந்தேவாந்" என்கிறபடியே வழியல்லாவழியேயாகிலும் நட க்கப்பார்க்கு மவர்களாகையாலே, "இதரவிஷயங்களாகாது" என்னும்தெளிவரி தென்றபடி. தெளிவரிதாகில் கலக்கம் த்யாஜ்யமன்றோவென்ன (இதரேத்யாதி) இதுஶ்லாக்யதாவஹமென்றுகருத்து. விஷயதோஷதர்ஶநமே ப்ரதாநம் ருஷிகளு க்கு, பகவத்விஷயவைலக்ஷண்யஜ்ஞாநமேப்ரதாநமாழ்வார்களுக்கென்றபடி.

போர்ப்பாகுசெய்த ப்ரகாரத்தை யருளிச்செய்கிறார் (இரண்டுதலைக்குமித் யாதி) பொருந்தவிட - சந்திபண்ண. வினைத்தலை - யுத்தபூமி. "யஸ்யமந்த்ரீ ச கோப்தா ச ஸுஹ்ருச் ..." (யஸ்யமந்த்ரீசகோப்தாசஸுஹ்ருச்

லசவஜாார்த்தா8) இதிராஜஸூயே த்ருதராஷ்ட்ர:. ஆளிட்டுச்செய்யாதே தானே செய்தென்ருரார்த்தமருளிச்செய்தது, "தான்" என்றதுக்கு சர்வாதிகனான தானென்றர்த்தாந்தரம் (ஏழுலகுமித்யாதி) எடுத்தசந்தைக்கர்த்தம் (தன்ஞசகபலத்தாலேயித்யாதி) விவரணமென்னவுமாம். கைதொட்டாய் - கையாலேதொட்டுச்செய்கிற சஹாயபூதனாய். இவள்மோஹிக்கிறதவன் சௌலப்யத்துக்காயிருக்க, மேன்மையைச்சொல்லுகிறதெதுக்கென்ன (இவள்மோஹிக்கிறதித்யாதி) அவனுடைய-பரனானவனுடைய. விவரணம் (எளியவனித்யாதி) "தான்" என்றதுக்குபாவாந்தரம் (அவர்கள்நூற்றுவரித்யாதி) அதாவது-அர்ஜுனாதிகளும் தானுமன்றிக்கே, தானேயென்றபடி. "ஐவர்" என்றதுக்கிரண்டுதாத்பர்யம் - வெருவியராயிருக்குமவரென்றென்று, "நகாங்க்ஷே" என்றிருக்குமவரென்றிரண்டாவது. வெருவியராய்-அல்பசஹாயராய். (கையுமணியும்வகுத்து) வ்யூஹவிபாகம்பண்ணி. படைபொருத்தி-யுத்தம்பண்ணுவித்து. பூட்டி-தேரிலேகட்டி. "வெல்வித்த" என்று - அகடிதம்போலே சொல்லுகைக்கப்படியரிதோவென்ன (துர்யோதநாதித்யாதி) மேலில்விவரணவாக்யாநுகுணமாக (துர்யோதநாதிகளை) யுமிவனையும் (தோற்பித்தவதிலும்) என்றுகூட்டிக்கொள்வது. விவரணம் (அவர்களையித்யாதி) யத்வா, அரிதானபடியெப்படியென்ன (அவர்களையித்யாதி) என்னுதல். "சிந்தைதுழாய்த்திசைக்கின்றதே" என்கையாலே-இவள் தோல்வியும் சித்தமிறே. "நகாங்க்ஷே விஜயம்க்ருஷ்ண நசராஜ்யம்ஸுகாநிச । கிந்நோராஜ்யேந கோவிந்தகிம்போகைர்ஜீவிதேநவா" (நகாங்க்ஷேவிஜயம்க்ருஷ்ணநசராஜ்யம்ஸுகாநிச । கிந்நோராஜ்யே நகோவிந்தகிம்போகைர்ஜீவிதேநவா) இதிகீதாஸப்ரதமே.

க்ருத்ரிமமேதென்ன (பகலையித்யாதி) சாரதிலக்ஷணத்தைக்காட்டுகிருர் (அர்ச்சுநனையித்யாதி) ஈடிடாதே - கவசம்தரியாதே. பாகனுக்குடம்புக்கிட வொண்ணுது. சாரத்யத்தாலே - பாரதந்த்ர்யத்தைவிவக்ஷித்து, அதுக்குப்ரமாணம் (அயமஸ்மீத்யாதி) "அயமஸ்மி மஹாபாஹோ ப்ருஹி யத்தே விவக்ஷிதம் । கரிஷ்யாமி ஹி தத்ஸர்வம் யத்த்வம் வக்ஷ்யஸி பாரத" (அயமஸ்மிமஹாபாஹோப்ருஹியத்தேவிவக்ஷிதம் கரிஷ்யாமி ஹிதத்ஸர்வம்யத்த்வம்வக்ஷ்யஸிபாரத) இத்யுத்யோகபர்வண்யேகசப்ததிதமேயுதிஷ்டிரம்ப்ரதிக்ருஷ்ண:. இதுக்கர்த்தம் (நானித்யாதி)

"இவள்" என்றதுக்குமூன்றுதாத்பர்யம் (அப்பாகிலேயித்யாதிவாக்யத்ரயத்தாலே) முந்தினது அபரபாவியாக (அப்பாகிலேபிடிப்பட்டவிவளென்றது) இது-சாடு.சாரத்யவேஷத்திலேயீடுபட்டவிவளென்றபடி.இரண்டாவது-ப்ரகாசமானத்வத்தைப்பற்ற. நிர்க்குண:என்றது - நாணியிறக்கிட்டவில்லையுடையவனென்றபடி. "நிர்குண: ஸாத்விகோ ஹ்யேஷ தோஷஹீனோ ஹி அஸ்தி ... தஹம்ஜ்ஞான விஜ்ஞேயம் நாவமந்யே" (நிர்க்குண:பரமாத்மாஸௌதேஹம்தேவ்யாப்யதிஷ்டதி । தமஹம்ஜ்ஞாநவிஜ்ஞேயம்நாவமந்யேநலங்கயே) இத்யாரண்யபர்வணிஹநுமந்தம் ப்ரதிபீமசேந:. மூன்ருவது - பூர்வபாவித்வேந. த்ருதீயார்த்தோபபாதநம் (கடலித்யாதி) அன்றிக்கே கடலித்யாதிவாக்யம் - "இவள்" என்றதுக்கு த்ருதீயார்த்தமாய், இவள்நெஞ்சுகலங்கிஇித்யாதிவாக்யம் - "சிந்தைதுழாய்" இத்யாதிக்கர்த்தமென்னுதல். திசைக்கின்றதேயென்ற-ஏகாரத்தை - தேர்ப்பாகனர்க்கு" என்கிறத்தோடேயந்வயித்து அவதாரணதாத்பர்யம் (சாரத்யே

த்யாதி) விவரணம் ( மயர்வறவித்யாதி ) ஆஶ்ரிதபாரதந்த்ர்யத்திலே யாகவேண்டாவோவென்றது - "எத்திறம்" என்றத்தைப்பற்ற. கீழே "கடல்வண்ணர்" இத்யாதியாற்சொன்னநாலாமர்த்தத்தையிங்கேகாட்டுகிறார் (ஒருவனுக்கித்யாதிவாக்ய த்ரயத்தாலே ) "சிந்தை" ( நெஞ்சு ) "துழாய்" - ( கலங்கி ) ப்ரமித்து. திசைக்கின்றது - அறிவழியாநின்றது "தேறினோம்" என்றபன்மைக்கு - அவர்கள் கலக்கம் தனக்கொத்தவோபாதி, தன்தெளிவேயவர்களுக்கும் தெளிவென்றுகருத்து.

ஓர்ப்பாலிவ்வொண்ணுத லித்யாரப்ய, திசைக்கின்றது - இனி அன்னைமீர் - யாம் - தீர்ப்பாரை - எங்ஙனம்நாடுதுமித்யந்வயः......................................*

# இரண்டாம்பாட்டு.

திசைக்கின்றதேயிவளுேயிதுமிக்கபெருந்தெய்வ
மிசைப்பின்றிநீரணங்காடுமிளந்தெய்வமன்றிது
திசைப்பின்றியேசங்குசக்கரமென்றிவள்கேட்கநீ
ரிசைக்கிற்றிராகினன்றேயில்பெறுமிதுகாண்மினே.

## ஆறாயிரப்படி.

( திசைக்கின்றதே ) நீங்களிவளுடையநோயினையொன்றுமறிகிறிலீர். இந்நோய்மிக்க பெருந்தெய்வத்தாலேவந்தது. விஸத்ருஶமாக நீங்களின்றணங்காடுகிற க்ஷுத்ரதைவக்ருதமல்ல. இதுக்கு பரிஹாரமென்னென்னில்; சொல்லுவார்சொல்லிற்றைக்கேட்டுத்திகையாதே, சங்குசக்கரம் என்று இவள்கேட்க நீரிசைக்கிற்றிராகில் நன்றேயிவளைப்பெறலாம். இப்போதே யிப்பொருளை ப்ரத்யக்ஷிக்கலாமென்கிறாள் ............*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இவள்நோய் க்ஷுத்ரதேவதாமூலமல்ல, சர்வாதிகதேவதாமூலம், அவனுடைய வஸாதாரணசிஹ்நங்களைச்சொல்லி லிவளைக்கிடைக்கலா மென்கிறாள்.

திசைக்கின்றது-இவளோடுங்களோடு வாசியறமதிகெடுகிறது. இவள்நோய்-இவள்நோயாலாயிருக்கும். இது—இது. மிக்க-சர்வாதிகமாய். பெரும் - அபரிச்சேத்யமாஹாத்ம்யத்தையுடைய. தெய்வம்-தேவமூலம். இது-இது. இசைப்பின்றி-உங்களுக்குமிவள்தனக்கும் நோய்க்கும்சேராதபடி. நீர்-நீங்கள். அணங்காடும்-தைவாவிஷ்டராயாடுகிற. இளந்தெய்வம்-அல்பதேவதை. அன்று-அன்று. திசைப்பின்றியே-புறம்புசொல்லுவார் வார்த்தையைக்கேட்டு ப்ரமியாதே. சங்குசக்கரம்-அந்தசர்வாதிகதேவதைக்கு அசாதாரணசிஹ்நங்களான சங்கசக்ரங்கள். என்று - என்று. இவள்-மோஹித்துக்கிடக்கிறவிவள். கேட்க-கேட்க. நீர்-நீங்கள். இசை - சொல்ல. கிற்றிராகில்-வல்லீர்களாகில். நன்றே-நன்றாகவே. இவள், இல் - இல்லிருப்பு. பெறும்-பெறும். இது-இத்தை. காண்மின்-அபரோக்ஷித்துக்காணுங்கோள்.

இல்லென்று - இருப்பிடமாய், இவ்விடத்திலே, இவள்சத்தையோடே யிருக்கப்பெறுமென்றபடி. அன்றியே, நாயகன்பக்கலிலே யில்வாழ்க்கையைப்பெறுமென்றுமாம்.........................................................................*

## ஈடு - இரண்டாம்பாட்டு.

க்ஷுத்ரதேவதாசாந்தியாலிந்நோய்போக்குகையரிது, பகவத்விஷயத்தைச்சொல்லி யிவளைப்பெறலாமென்கிறாள்.

(திசைக்கின்றதேயிவள்நோய்) இவளவன்குணநிமித்தமாக வறிவுகெடாநின்றாள், நீங்களிவள்நோய்நிமித்தமாக வறிவுகெடாநின்றிகோள். இவள் நோவுக்குநிதாநம் நீங்கள், "அவனடியாகவந்தது" என்றறியமாட்டுகிறிலிகோள். திசைக்கின்றதேயென்கையாலே - தாய்மாராகையாலே கௌரவித்து வார்த்தைசொல்லவேணுமிறே. இவள்நோய்நிமித்தமாக வறிவுகெடுவதே ! நாம்.

நாங்களறிந்திலோமாகில், இதுக்கு நிதாநமறிந்தாயாயிருக்கிற நீ பின்னைச்சொல்லிக்காணுயென்ன (இதுமிக்கபெருந்தெய்வம்) "ஸம்ஸீரஃ வரொஜேவஃ" (கம்பீரஃபரமோதேவஃ) என்றும், " வானோர்தலைமகனும் சீராயினதெய்வநன்னோய்" என்றும்சொல்லுகிறபடியே, சர்வேஸ்வரனடியாகவந்த கனவியநோவிது. இவள்நோவுக்கும், இந்நோவுக்குநிதாநபூதனானவனுக்கு முண்டான வபேதத்தைபுத்திபண்ணி, இதுமிக்கபெருந்தெய்வமென்று - இதுதன்னை யவனாகச்சொல்லுகிறாள்.

(இசைப்பின்றியித்யாதி) நீங்கள்பண்ணுகிறபரிஹாரத்துக்கு மூங்களுக்குமொரு சேர்த்தியில்லை, இந்நோய்க்கு மிவளுக்கு மொருசேர்த்தியில்லை. முதல்தன்னிலே பகவத்விஷயத்திலே கைவைத்தார்கொள்ளுகைக்கு சம்பாவனையுடையநோவன்றிதுதான். ஒருவழியாலு மொரு சேர்த்தியின்றிக்கே. இதுங்களுக்குச்சேர்ந்ததல்ல, உங்கள்மகளாய் நோவுகொண்டவிவளுக்குச்சேர்ந்ததல்ல, நோவுக்கு நிதாநபூதனானவனுக்குச்சேர்ந்ததல்ல, இதரதேவதைக ளிந்நிலத்தில்வந்து புகுரமாட்டாமையாலே நீங்கள் நினைக்கிற தேவதைகளுக்குச்சேர்ந்ததல்ல. இங்கேயருளிச்செய்யும்வார்த்தை - பிள்ளையுறங்காவில்லிதாசர் குடிமகனொருவனுக்கையனுரோறிவலித்துநலிந்தவாறே, " உனக்குவேண்டுவதென் " என்றுகேட்க, " எனக்குப்பாலும்பழமுமாகவுண்ணவேணும், சாந்தும்புழுகும்பூசவேணும், நல்லபுடவையுடுக்கவேணும், நல்லவாபரணம்பூணவேணும், தண்டேறவேணும், அணுக்கனிடவேணும்" என்ன, அவர்களும் " அப்படியேசெய்கிறோம " என்று, பிள்ளைதிருமாளிகையிலேவந்து, சாந்து, புழுகு, ஆபரணுதிகளைவாங்கிக்கொண்டுபோய் அவற்றையலங்கரித்து சாந்தியும்பண்ணிவிட்டுவந்த அவ்விரா, பண்டையிலுமிரட்டியாக அவனைவலிக்க, "இதென்" என்றுகேட்க, "பிள்ளைசாதநுகிறவற்றையெ

ல்லாம் கொண்டுவந்திகோள்; அவர்க்குச்சாத்துகிற அனுக்கனையிட்டிகோள், நானதின்கீழேபோவேனே; என்னைவெயிலிலேகொண்டுபோனிகோள், என்னுடம்பிலே நெருப்பை வழியட்டினுப்போலே அவர்சாத்துகிறவற்றைப்பூசினிகோள், அரிகண்டமிட்டாப்போலே அவர்சாத்துகிறவாபரணத்தைப் பூட்டினிகோள்; நீங்கள்செய்தசெயலுக்கு இவனைக்கொண்டல்லதுபோகேன்" என்றுவலித்ததாம். ஆகையாலவற்றுக்குச்சேராது. (நீர்) பகவத்விஷயத்திலே விக்ருதராகக்கடவநீங்கள். (அணங்காடுமிளம்தெய்வமன்றிது) தேவாவிஷ்டராய்க்கொண்டு ஆடுகிற, மறுமூட்டுப்பொருத க்ஷுத்ரதேவதையடியாகவந்தநோயன்றிது.

(திசைப்பின்றியே) இவள்நோய்க்கு நிதாநத்திலறிவுகெட்டாப்போலே பரிஹாரத்திலும் மதிகெடாதே. நிதாநத்தில் கலக்கம்பிறந்தாலும், பரிஹாரத்தில் கலக்கம்பிறவாதொழியவே நோவுபரிஹ்ருதமாமிறே. நாங்கள் நிதாநத்திலறிவுகெட்ட வம்ஸமென், பரிஹாரத்திலறிவுகெடாத வழியென்னென்னில் (சங்கித்யாதி) " சங்கென்னும் சக்கரமென்னும் " என்றிறே யிவள்நோயிருப்பது, நீங்களும் சங்குசக்கரமென்று பரிஹரிக்கப்பாருங்கோள். நோவுவந்தவழியையறிந்து பரிஹரிக்கவேண்டாவோ. " சங்கென்னும்சக்கரமென்னும் " என்று நீங்கள் சொல்லவன்றோ நானுமறிந்தது, இப்போது பரிஹாரத்திலேவந்தவாறே அறிவுகெடுகிறதென். அதுசெய்யுமிடத்தில் குளப்படியிலே கடலைமடுத்தாப்போலேயாகாமே, "சங்கென்னும்சக்கரமென்னும்" என்றிவள்சொன்னுப்போலே சொல்லப்பாருங்கோள். (இவள்கேட்க நீரிசைக்கிற்றிராகில்) மோஹித்துக்கிடக்கிறவிவள்கேட்கவல்லளாமன்றுகாணும் தெளிந்திருக்கிறவிவர்கள்சொல்லவல்லராவது; ஆகையிறே "திசைப்பின்றியே" என்றது. இவளுக்கிங்நன்சொல்லுமதொழிய மற்றொன்றுதான் செவிப்படாதுகாணும். இவள்செவியிலேபடும்படி, நீங்கள் தரித்துநின்று ஒரு உக்திமாத்ரம்சொல்லவல்லிகோளாகில். ஆய்ச்சிமகனுடைய அந்திமசமயத்திலேபட்டர் " அறிய " என்றெழுந்தருளியிருந்தாராய், தம்மையறியாதே கலங்கிக்கிடக்கிறபடியைக்கண்டு, பெருமாளுக்கிவர் ஸ்நேஹித்திருக்கும்படியை யறிந்திருக்கையாலே, மெள்ளச்செவியிலே யூதினுப்போலே " அழகியமணவாளப்பெருமாளே சரணம் " என்றாராம்; அநந்தரம் அதிலேயுணர்த்தியுண்டாய் நெடும்போதெல்லாம், " அழகியமணவாளப்பெருமாளேசரணம் " என்று திருநாட்டுக்குநடந்தாராம். " பெற்றமக்கள்பெண்டிரென்றிவர்பின்னுதவாதறிந்தேன் - பிறிந்தேன்" சரமதசையிலேயிருந்து "பொன்வைத்தவிடஞ்சொல்லிக்காணுய்" என்னுமித்தனைபோக்கி, திருநாமத்தையருகேயிருந்துசொல்லுவாரைக்கிடையாதிறே - * சோர்வினுல்பொருள்வைத்ததுண்டாகில் சொல்லுசொல் என்று சுற்றுமிருக்குமித்தனையிறே. (நன்றே) இதுசாலவழகியது. சாலநன்றும். நன்மைக்கவதியே

தென்ன ( இல்பெறும் ) ஆத்மாவுக்காயதநமான சரீரத்தைப்பெறுமென்னுதல்; ஒருதமிழனிட்டுவைக்கிறன், " இல்-கிழத்தியாய், க்ருஹிணியாகப்பெறும்" என்று; அன்றிக்கே, ( ஏயில்பெறும் ) என்றாய், ஏயிலென்று-காநமாய், * பண்ணைவென்றவின்சொல் மங்கையாகையாலே, இவள் வார்த்தைசொல்லுமென்று. " 𑌮𑌧𑌰𑌾𑌮𑌧𑌰𑌾𑌲𑌾𑌪𑌾 " (மதுராமதுராலாபா) என்னக்கடவதிறே. ஆக, சரீரத்தைப்பெறுமென்னுதல், க்ருஹிணியாமென்னுதல, வார்த்தைசொல்லவல்லளாமென்னுதல்.

(இதுகாண்மினே) தேவதாந்தரஸ்பர்ஶமுடையாரும் புகுந்து ஸ்பர்ஶிக்கவிராநின்றிகோளிறே, அவவோபாதி நான்சொன்னபரிஹாரத்தையும் செய்துபார்க்கமாட்டிகோளோ. நானிது கைகண்டன்றேசொல்லுகிறது, நீங்களு 'மித்தைச்செய்துபார்க்கமாட்டிகோளோ.ஒன்றேயோ பரிஹாரம். இதுநதீமாத்ருகம்போலே பலவ்யாப்தம். அதவா, ( இதுகாண்மினே ) " வெள்ளைச்சுரிசங்கொடாழியேந்தி தாமரைக்கண்ணனென்னெஞ்சினூடே புள்ளைக்கடாகின்றவாற்றைக்காணீர் " என்னுமாபோலே, இவள்தன்னெஞ்சிலே ப்ரகாசிக்கிறபடியை; " நான்சொன்னமருந்திவளுக்குச்செய்விகோள் தவிருவிகோள், செய்தபடிசெய்ய, இப்போதித்தைப்பாருங்கோள்" என்று காட்டுகிறளாகவுமாம். அப்போதைக்கு, நன்றேயில்பெறுமென்று - பாட்டுமுடியும்; இதுகாண்மினென்று - தனியே வாக்யம் ...........................................................................*

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு (திசைக்கின்றதேயித்யாதி) " நீரணங்காடுமிளந்தெய்வமன்றிது" என்றத்தால் பலிதத்தை யருளிச்செய்யாநின்றுகொண்டு, " சங்குசக்கரமென்றிவள்கேட்க நீரிசைக்கிற்றிராகில் நன்றேயில்பெறும் " என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (க்ஷுத்ரோத்யாதி) சாந்தி-ஆராதநம்.

கீழிற்பாட்டிலும் " திசைக்கின்றதே " என்றுவைத்து, இங்கும் " திசைக்கின்றதேயிவள்நோய் " என்றதுக்குபாவம் ( இவளவனித்யாதி ) ( குணநிமித்தமாக ) "தேர்ப்பாகனூர்க்கு" என்றசௌலப்யகுணநிமித்தமாக. திசைக்கின்றதே-ப்ரமிப்பதே. இவள்நோய் - இவள்நோய்நிமித்தமாக. "பெருந்தெய்வம்" என்றத்தைக்கடாக்ஷித்துபாவம் ( இவள்நோவுக்கித்யாதி ) திசைக்கின்றிகோளென்னுதே, " திசைக்கின்றதே " என்கிறதென்னென்ன (திசைக்கின்றதேயென்கையாலேயித்யாதி ) நாமென்றது - நீங்களென்றபடி. தேவரீர்களென்றபடி. " திசைக்கின்றதே " என்கிறவிது - பூஜ்யோக்தி; எழுந்தருளிற்றென்னுமாபோலே.

" 𑌗𑌮𑍍𑌭𑍀𑌰𑌃 𑌪𑌰𑌮𑍋 𑌦𑍇𑌵𑌃 " (கம்பீரஃபரமோதேவஃ) என்றதுக்கு-ப்ரமாணத்திரட்டிலாகரங்காணும், ஆகரங்கண்டுகொள்வது. வானோர்தலைமகனுமித்யாதிக்கு - நித்யஸூரிகளுக்குத்தலைவனான சர்வேஶ்வரனுடைய தானகுணங்களடியாகவுண்டாய்திவ்யமரய்போகபலமான நோயாயிருக்குமிதென்றுசப்தார்த்தம்

திருவிருத்தம் ஐம்பத்துமூனரும்பாட்டு, "வாராயின" இத்யாதி. அவனடியா கவந்தநோயென்னுதே, சாமாநாதிகரண்யேநசொல்லுவானென்னென்ன (இவள் நோவுக்குமித்யாதி) கார்யகாரணபாவேநவுண்டான சாமாநாதிகரண்யத்தைப்பற்ற - "பெருந்தெய்வம்" என்கிறதென்றபடி. அபேதத்தை-ஹேதுஹேதுமத்பாவே நவுண்டானவபேதத்தை.

(உங்களுக்கும்) "நீர்" என்கையாலே, பகவத்விஷயத்திலே விக்ருதராகக் கடவ வுங்களுக்கும். இந்நோய்க்கும் - நீங்கள் நினைத்தநோய்க்கும். இந்நோய்க்கு மிவளுக்குமொரு சேர்த்தியில்லாமையைக் காட்டுகிறுர் (முதல்தன்னிலேயித்யாதி) இன்னுர்க்கிசைப்பின்றியென்னுதே, சாமாந்யமாசச்சொன்னதுக்குபாவம் (ஒருவழியாலு மொருசேர்த்தியின்றிக்கே யென்றது) ஒருவழியாலும் சேர்த்தியில்லாமையைக்காட்டுகிறுர் (இதுங்களுக்கித்யாதி) (நிதாநபூதனுனவனுக்கு) நிதாநபூதனுன விஸ்வரனுக்கு. நிக்ராஹஹேதுவாகையாலே யவனுக்குச்சேர்ந்ததல்லவென்றபடி. "இளந்தெய்வம்" என்றத்தைப்பற்ற (இந்நிலத்தில்வந்துபுகுரமாட்டாமையாலே யென்றது) இதரதேவதைகள் பாகவதக்ருஹங்களிலேவந்து புகுரமாட்டாதென்கைக்கு ஐதிஹ்யம் (பிள்ளையுறங்காவில்லியித்யாதி) குடிமகன் - படியாள். ஐயனுர்-சாஸ்தா. தண்டு-ஆந்தோளிகை. அணுக்கன்-குடை. அவ்விரா-அன்றுராத்ரி. வலிக்க-பாதிக்க.வழியட்டினுப்போலே-வழியவிட்டாப்போலே.மறுமுட்டுப்பொருத-பின்னையொருகார்யத்துக்காகாத. "இளந்தெய்வம்" என்கிற சாமாநாதிகரண்யம்-கார்யகாரணபாவ நிபந்தநம்.

திசைப்பின்றியே-கலக்கமின்றிக்கே. பரிஹாரத்தில் கலக்கமில்லாமைகொண்டு கார்யகரமாமோவென்ன (நிதாநத்திலித்யாதி) நிதாநம் - சங்குசக்கரம். பரிஹாரம் - அத்தைச்சொல்லுகையே. சங்குசக்கரம் நிதாநமென்றறியும்படி யெப்படியென்ன (சங்கென்னுமித்யாதி) நோயதுவானுல் பரிஹாரமு மதுவாகவேணுமோ வென்ன (நோவுவந்தவழியையித்யாதி) எங்களுக்கு நோவுவந்தபடியறியும் ப்ரகாரமேதென்ன (சங்கென்னுமித்யாதி) தனித்தனியாகச்சொன்னதுக்குபாவம் ( அது செய்யுமிடத்திலித்யாதி ) சங்குசக்கரங்களென்றுசொல்லாமல், "சங்கு, சக்கரம்" என்று - ஏகவசநமாகச் சொன்னதின்பாவமிது. மடுத்தாப்போலே - அடக்கினுப்போலே. "ஆகில்" என்றயதிசப்தத்துக்குபாவம் (மோஹித்தித்யாதி) தெளிந்திருக்கிறவிவர்களென்றது - ப்ரமித்துக்கிடக்கிறவர்களென்றபடி. சங்குசக்கரமேயாக வேணுமோ, வேறென்றைச்சொன்னுலாகாதோவென்ன (இவளுக்கித்யாதி) இது-"கேட்க" என்றதுக்குபாவம். சப்தார்த்தம் (இவள்செவியிலேயித்யாதி) "சங்குசக்கரம்" என்கிறதொழிய மற்றென்று செவிப்படாததுக்குஹேது அதில்ப்ராவண்யமென்றுவிவக்ஷித்து, இதுக்கைதிஹ்யம் (ஆய்ச்சிமகனித்யாதி) யத்வா, மோஹதசையிலே திருநாமோச்சாரணமுண்டானுல் தரிக்கலாயிருக்குமோவென்ன; ஐதிஹ்யம் (ஆய்ச்சிமகனித்யாதி) என்னுதல். இசைக்கிற்றிராகில்-சொல்லவல்லிகோளாகில். "ஆகில்" என்கிறயதிசப்தத்தாலே-திருநாமம்சொல்லுகை யரிதென்றதுக்குப்ரமாணம் (பெற்றமக்களித்யாதி) பெற்றமக்கள் - புத்ரர்கள், பெண்டிரிவர்-ஸ்த்ரீகள், இவர்கள். பின்-பின்பு. உதவாதென்றறிந்தேன் - நமக்குதவார்களென்றறிந்தேன். பிறிந்தேன்-அத்தாலே யவர்களைவிட்டேனென்றர்த்தம். திருமொழியாரும்பத்து இரண்டாந்திருமொழி நாலாம்பாட்டு. வக்ஷ்யமாண ப்ரமாணத்தைக்கடாக்ஷித்

தருளிச்செய்கிறர் (சரமதசையிலேயித்யாதி) பெரியாழ்வார்திருமொழி நாலாம்பத்து அஞ்சாந்திருமொழி மூன்ரும்பாட்டு (சோர்விஞலித்யாதி) காணமல்பொருள் வைத்ததுண்டாகில் சொல்லுசொல்லென்று பலகாலும்சொல்லி, “ இவனொருத்தரை யொருத்தரறியாமல் கொடுக்கிற்செய்வதென் ” என்று விடாதேசுற்றுமிருந்தித்யர்த்தஃ.

அவதாரணதாத்பர்யமாகவிவரணம் (சாலநன்ருமென்று) கிழத்தி - உத்தமநாயகி. “ நக்ருஹம்க்ருஹமித்யாஹுர்க்ருஹிணீக்ருஹமுச்யதே ” ( நக்ருஹம்க்ருஹமித்யாஹுர்க்ருஹிணீக்ருஹமுச்யதே ) என்றத்தைப்பற்ற ( க்ருஹிணியாகப்பெறுமென்றது ) உக்தார்த்தத்துக்குப்ரமாணம் (மதுரோத்யாதி) “ மதுரா மதுராலாபா கிமாஹ மம பாமிநீ ” ( மதுராமதுராலாபாகிமாஹமமபாமிநீ ) இத்யாதி, ஸுந்தரகாண்டே ஹநுமந்தம்ப்ரதிராமஃ. உக்தார்த்தங்களை புத்திஸமாதாநார்த்தமாகச்சேர்க்கிறர் ( ஆகவித்யாதி ) ( பண்ணைவென்றவின்சொல்மங்கை ) பாட்டைவென்றிருக்கிறவினியபேச்சையும் பருவத்தையுமுடைய பிராட்டியுடையவித்யர்த்தஃ. திருச்சந்தவிருத்தம் நூற்றைந்தாம்பாட்டு, “மண்ணையுண்டுமிழ்ந்து” இத்யாதி.

“ இதுகாண்மின் ” என்றதுக்கு மூன்றுதாத்பர்யம், முந்தினது (தேவதாந்தரோத்யாதி) அதாவது - நான்சொல்லுகிறவித்தையு மொருபரிஹாரமாகக்காணுங்கோளென்றபடி. உக்தார்த்தத்வயவிவரணம் (ஒன்றேயோவித்யாதி) இரண்டாமர்த்தத்திலே, கைகண்டென்றது-சாடு. இதுக்கு-“சங்குசக்கரம்”என்றதிலேநோக்கு, ப்ரத்யக்ஷமாகக்கண்டென்றும். மூன்ருமர்த்தம் (அதவேத்யாதி) அதாவது-“வெள்ளைச்சுரிசங்கு” என்றுதொடங்கி, “காணீர்” என்றுமாபோலே, இவளுடையநெஞ்சிலே சங்குசக்கரங்களோடேயிருக்கிறவிது காண்மினென்றபடி.

(பாட்டுமுடியுமென்றது)இந்தபக்ஷத்திலே,“திசைக்கின்றதே”என்றுதொடங்கி, “ இளந்தெய்வமன்றிது, இதுகாண்மின், சங்குசக்கரமென்றிவள்கேட்க-திசைப்பின்றியே-நீரிசைக்கிற்றிராகில் நன்றேயில்பெறும்” என்றந்வயம் முடியுமென்றபடி. மற்றவிரண்டர்த்தத்துக்கும், இருந்தபடியேயந்வயம்.

(பிறிந்தேனித்யாதி) பின்னுதவாது-மரணதசையிலுதவார். பின்னுதவாதென்றபதம் - இங்குவேண்டுவது. இதுக்குபாவம் - மரணதசையில், “ ஏதேனுமுண்டானதுசொல் ” என்னுமதொழிய, இவனுக்குதாரகமான பகவத்விஷயத்தைச்சொல்லுவாரில்லையென்றபடி.........................................................*

---

## மூன்றும்பாட்டு.

இதுகாண்மினன்னைமீரிக்கட்டுவிச்சிசொற்கொண்டுநீ
ரெதுவானுஞ்செய்தங்கோர்கள்ளுமிறைச்சியுந்தூவேன்மின்
மதுவார்துழாய்முடிமாயப்பிரான்கழல்வாழ்த்தினு
லதுவேயிவளுற்றநோய்க்குமருமருந்தாகுமே.

## ஆறாயிரப்படி.

( இதுகாண்மின் ) இக்கட்டுவிச்சிசொற்கொண்டு நீர் எதுவானு மொன்றைச்செய்து அங்கோர் கள்ளுமிறைச்சியும் தூவேன்மின். மற்று ச்செய்வதென்னென்னில் ; மதுவார்துழாய் முடிமாயப்பிரான் கழல்வா ழ்த்துங்கோள் ; வாழ்த்தினுல், அதுவேயிவளுற்ற நோய்க்கருமருந்துமா ம், யுக்தமுமதுவே, இதுநிஸ்சிதமென்கிறுள்...............................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், நிந்த்யமானசுராமாம்சங்களைக்கொண்டு இதரதேவதா சாந்நிப ண்ணுதே, நிரதிசயபோக்யனுனவன் திருவடிகளையேத்தினுலதுவே யிவள்நோய்க் கு பேஷஜமாய் போக்யமுமாமென்கிறுள்.

அன்னைமீர்-அன்னைமீர். பெற்றுவளர்த்தோமென்கிறமேன்மையாலே, சொ ல்லிற்றுக்கேளாதிராதே. இது - நான்சொன்னபரிஹாரத்தைப்பண்ணி. காண்மின்- பலத்தைக்காணுங்கோள். இ-இந்தத்தண்ணியளான. கட்டுவிச்சி - கட்டுவிச்சியுடை ய. சொல்-தகுதியில்லாதவார்த்தையை. கொண்டு-கைக்கொண்டு. நீர்-உங்கள்ஸ்வ ரூபத்தைப்பாராதே. எதுவானும் - ஹேயதேவதாநுவ்ருத்திரூபமானதேதேனுமொ ன்றை. செய்து-அநுஷ்டித்து. அங்கு-அந்தஸ்த்தலத்திலே. ஓர்-ஹேயமாயிருப்ப தொரு. கள்ளும்-மதுவையும். இறைச்சியும்-மாம்சத்தையும். தூவேன்மின்-தூவிதூ ஷியாதேகொள்ளுங்கோள். ஆனுல்பரிஹாரமேதென்னில் ; " பானுமாய்மருந்து மாய் " என்னுமாபோலே, மதுவார் - மதுஸ்யந்தியான. துழாய்-திருத்துழாயா லே யலங்க்ருதமான. முடி-முடியையுடையனுய். மாயம் - ஆஸ்சர்யமானகுணசே ஷ்டிதங்களை. பிரான்-ஆசைப்பட்டார்க்கநுபவிப்பிக்கும்மஹோபகாரகனுடைய. க ழல்-திருவடிகளுக்கு. வாழ்த்தினுல்-மங்களாசாசநம்பண்ணினுல். அதுவே-அந்தம ங்களாசாஸந முங்கள்ஸ்வரூபாநுருபமாமளவன்றியே• இவள்-இவள். உற்ற-உள் ளுறக்கொண்ட. நோய்க்கு-நோய்க்கு. அரு-பெறுதற்கரிய. மருந்துமாகும் - மருந் துமாய், இவளுக்கு போக்யமுமாய், இவள் நோய்கண்டு நீங்கள்படுகிற கலக்கத் துக்கு பரிஹாரமுமாம்.................................................*

## ஈடு - மூன்றும்பாட்டு.

அயுக்தங்களைச்செய்யாதே யவன்திருவடிகளை யேத்துங்கோள், அதுவே யிந்நோய்க்கும் பேஷஜமென்கிறுள்.

( இதுகாண்மினன்னைமீர் ) வயிற்றிலே பிறந்தவர்களென்னுங் காட்டில்சொன்னஹிதம் கேளாதொழியவேணுமோ. நியாமிகைகளென் னுமித்தனையோ வேண்டுவது, வயிற்றிலே பிறந்தவர்களாகிலும் சொன் னவார்த்தை நன்றுயிருக்குமாகில் கைக்கொள்ளவேண்டாவோ ; * திரு மாலைப்பாடக்கேட்டு வளர்த்ததனுல் பயன்பெற்றேன் வருகவென்றுமட க்கிளியைக்கைக்கூப்பி வணங்கினுளூழுங்களிலே யொருத்தியன்றே. அதுகிடக்க, " லாலதூகாஜதிஹொவாவ " ( புத்ராகாஇதிஹோவாச )

இல்லையோ, ஆரேனும்சொல்லிலும் வார்த்தைநன்றாகில் கைக்கொள்ள வேண்டாவோ.

(இக்கட்டுவிச்சி) "காணிலுமுருப்பொலார்" (சொற்கொண்டு) "செவிக்கினுதகீர்த்தியார்" (இக்கட்டுவிச்சிசொற்கொண்டு) பரிஹாரம்சொல்லுகிறவிவள்படி கண்டிகோளே, இவள்வார்த்தை கேட்டிகோளே, இத்தையே ஆதரிப்பது. நான்சொல்லுகிறவார்த்தையையே யிவள் சொன்னாலும் கைக்கொள்ளக்கடவதோ, இவள்சொன்னவார்த்தையை நான் சொன்னாலும் என்னையுங்கூட த்யஜிக்கும்படியன்றோ வார்த்தையின்பொல்லாங்கு. (நீர்) "பேய்முலைநஞ்சுணாகவுண்டானுருவொடுபேரல்லால் காணுகண்கேளாசெவி" என்றிருக்கக்கடவநீர். நாஸ்திகரான பௌத்தார்ஹதாதிகளும் "பரஹிம்ஸையாகாது, கள்ளாகாது" என்பர்களிறே; அவ்வழியாலே கைக்கொள்ளுமவர்களோநாம், * நஹிம்ஸ்யாத்ஸர்வாபூதா நியோபாதி வைதஹிம்ஸையும் கைக்கொள்ளவேண்டாவோ. (இக்கட்டுவிச்சியித்யாதி) "ஜாநிநஸ்தத்வதர்ஸிநः" (ஜ்ஞாநிநஸ்த்தத்த்வதர்ஶிநः) என்னுமவர்களன்றோ வுங்களுக்குபதேசிப்பார். (எதுவானும்செய்து) அதுவுமாமிறே உங்களாசாரத்தோடு சேர்ந்திருக்கப் பெற்றதாகில். ஏதேனுமசங்கதங்களைச்செய்து, "செய்யாதனசெய்யோம்" என்றும், "மேலையார்செய்வனகள் வேண்டுவன" என்றுமன்றோ உங்கள்நிஷ்டை. (அங்கோரித்யாதி) நிஷித்தத்ரவ்யங்களைக்கொண்டு வைஷ்ணவக்ருஹத்தை தூஷியாதேகொள்ளுங்கோள். அங்கென்று-முகத்தைமாறவைத்துச் சொல்லுகிறாள்.

ஆகில்தவிருகிறோம், பரிஹாரத்தைச்சொல்லிக் காணுயென்ன (மதுவாரித்யாதி) "விரைமட்டலர் தண்டுழாயென்னும்" என்றுநீங்கள் சொல்லவன்றோ நான்கேட்டது. திருக்குழலில் ஸ்பர்ஶத்தாலே மதுஸ்யந்தியாநின்றுள்ள திருத்துழாயைத் திருவபிஷேகத்திலே யுடையனாய், சௌந்தர்ய ஶீலாதிகளாலாஶ்சர்யபூதனாய், அந்தசௌந்தர்யாதிகளையாஶ்ரிதார்த்தமாக்கிவைக்குமுபகாரகன்திருவடிகளை வாழ்த்தினால். இவர்கள்திருநாமம் சொல்லுவதுதான் மங்களாசாஸநமுகத்தாலேயாயிற்று, "உன்சேவடிசெவ்விதிருக்காப்பு" என்றிறேவாழ்த்துவது. [கெண்டையொண்கணுந்துயிலும்] உறக்கத்தாலல்லது செல்லாதபடியாய் முக்தமாய் சுகுமாரமான கண்ணுமுறங்கும். [என்னிறம்பண்டுபண்டுபோலொக்கும்] அதாவது-கலப்பதற்கு முன்புபோலேயாம். கலக்கையாகிறது ஆற்றாமைக்கடி யிடுகிறதிறே. ஒருவிஷயத்தில் வாசியறியாதார் நிரபேக்ஷரிறே. கண்ணுறங்குவதும், நிறம்பழையபடியே யாவதுமென்செய்தாலென்னில் [மிக்கஶீரித்யாதி] அநந்யப்ரயோஜநரான ஸ்ரீவைஷ்ணவர்களிட்ட திருத்துழாயில் பரிமளத்தை வண்டுகொண்டுவந்தூதுமாகில். இப்படிஜீயரருளிச்செய்தவாறே, "'துளவின்வாசமே' என்னவமையாதோ,

'மிக்கசீர்த்தொண்டர்' என்கிறவிவ்விசேஷணத்துக்குக்கருத்தென் '' என்றுநான்கேட்டேன்; இவள்தான்நோவுபடுகிறது 'அத்தலைக்குப்பரிவரில்லை' என்றுயிற்று, 'அங்கேஅநந்யப்ரயோஜநர் பரிமாறுநின்றார்கள்' என்றவாறே உறங்காதகண்ணுமுறங்கும், பழையநிறமும்வருங்காண் '' என்றருளிச்செய்தார். ( அதுவே ) ப்ராப்தமுமாய் போக்யமுமான வதுதானே. ( இவளுற்றநோய்க்குமருமருந்தாகும் ) இவள்மறுபாடுருவக்கொண்ட நோய்க்கும், அருமருந்தாகும்-பெறுதற்கரியமருந்தாம். மேற்காற்றிலே காட்டப் பரிஹாரமாம்... ...........................................................*

## ஜீயர்அரும்பதம்.

மூன்றும்பாட்டு. ( இதுகாண்மினித்யாதி ) '' கள்ளுமிறைச்சியுந்தூவேன்மின், வாழ்த்திலுலதுவே யிவளுற்றநோய்க்கு மருமருந்தாகும் '' என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை ( அயுக்தங்களையித்யாதி ) ( நோய்க்கும் ) என்கிறசசப்தத்தாலே-ஸ்வரூபாநுரூபமு மென்றபடி.

மேழையும் '' இதுகாண்மின் '' என்றுவைத்து, பின்னையும் சொன்னதுக்கு பாவம் ( வயிற்றிலேயித்யாதி ) என்னுங்காட்டில்-என்றமாத்ரத்திலே. '' அன்னைமீர் '' என்றதுக்குபாவம் ( நியாமிகைகளித்யாதி ) வயிற்றில் பிறந்தவர்கள்வார்த்தை கேட்டபேருண்டோவென்ன ( திருமாலையித்யாதி ) திருவெஃகாவிலே கண்வளர்ந்தருளுகிற ஸ்ரிய:பதியைப் பாடக்கேட்டு, உன்னைவளர்த்தத்தால் ப்ரயோஜநம்பெற்றேன், அருகேவாவென்றழைத்து, பவ்யமான கிளியைக்கைகூப்பி வணங்கினளித்யர்த்த:. திருநெடுந்தாண்டகம் பதினாலாம்பாட்டு, '' முளைக்கதிரை '' இத்யாதி. அம்மாத்ரமன்றிக்கே, ஜ்ஞாநோபதேசம்பண்ணினாரு மில்லையோவென்கிறார் ( அதுகிடக்கவித்யாதி ) அதுகிடக்கவென்றது-உங்கள்வார்த்தையே யன்றிக்கே ருஷிகள் கோஷ்டியிலு மிப்படியிறேயென்றபடி. '' 𑌅𑌧𑍍𑌯𑌾𑌪𑌯𑌾𑌮𑌾𑌸 𑌪𑌿𑌤𑍄𑌨𑍍𑌶𑌿𑌶𑍁𑌰𑌾𑌙𑍍𑌗𑌿𑌰𑌸𑌃 𑌕𑌵𑌿𑌃 । 𑌪𑍁𑌤𑍍𑌰𑌕𑌾 𑌇𑌤𑌿 𑌹𑍋𑌵𑌾𑌚 𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨 𑌪𑌰𑌿𑌗𑍃𑌹𑍍𑌯 𑌤𑌾𑌨𑍍 । 𑌤𑍇 𑌤𑌮𑌰𑍍𑌥𑌮𑌪𑍃𑌚𑍍𑌛𑌨𑍍𑌤 𑌦𑍇𑌵𑌾𑌨𑌾𑌗𑌤𑌮𑌨𑍍𑌯𑌵𑌃 । 𑌦𑍇𑌵𑌾𑌶𑍍𑌚𑍈𑌤𑌾𑌨𑍍𑌸𑌮𑍇𑌤𑍍𑌯𑍋𑌚𑍁𑌰𑍍𑌨𑍍𑌯𑌾𑌯𑍍𑌯𑌂 𑌵𑌃 𑌶𑌿𑌶𑍁𑌰𑍁𑌕𑍍𑌤𑌵𑌾𑌨𑍍 । 𑌅𑌜𑍍𑌞𑍋 𑌭𑌵𑌤𑌿 𑌵𑍈 𑌬𑌾𑌲𑌃 𑌪𑌿𑌤𑌾 𑌭𑌵𑌤𑌿 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌦𑌃 । 𑌅𑌜𑍍𑌞𑌂 𑌹𑌿 𑌬𑌾𑌲𑌮𑌿𑌤𑍍𑌯𑌾𑌹𑍁𑌃 𑌪𑌿𑌤𑍇𑌤𑍍𑌯𑍇𑌵 𑌤𑍁 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌦𑌮𑍍 '' ( அத்யாபயாமாஸபித்ரூ்ஶிஶுராங்கிரஸ:கவி: । புத்ரகாஇதிஹோவாசஜ்ஞாநேநபரிக்ருஹ்யதாந் । தேதமர்த்தமப்ருச்சந்ததேவாநாகதமந்யவ: । தேவாஶ்சைதாந்ஸமேத்யோசுர்ந்யாய்யம்வஶ்ஶிஶுருக்தவாந் । அஜ்ஞோபவதிவைபால: பிதாபவதிமந்த்ரத: । அஜ்ஞம்ஹிபாலஇத்யாஹு:பிதேத்யேவசமந்த்ரதம் ) இதிமாநவே. அதாவது-ப்ரஹ்மாபித்ராதிகளைப்பார்த்து '' மூடராய்ப்போங்கோள் '' என்றுசபிக்க, அவர்கள்சுக்ரன்பக்கலிலே யத்யயநம்பண்ண, அவர்களைப்பார்த்து, '' பிள்ளைகாள்வாரிகோள் '' என்றானிறே சுக்ரனென்றபடி. குலமர்யாதையும் சாஸ்த்ரமார்க்கமுமாகையாலே, ஆர்சொன்னதேயாகிலும் நல்லவார்த்தையாகில் கேட்கவேணுமென்கிறார் ( ஆரேனுமித்யாத் )

'' இக்கட்டுவிச்சி, இச்சொல் '' என்று-பரிஹாரம்பண்ணுகிறவளுடைய தேவதாந்தர ஸிஹ்நங்களைதரிக்கையாலே வந்ததண்மையையும், க்ரூரவ்யாபாரங்களு

டைய தேவதாந்தரங்களை ஸ்த்தோத்ரம்பண்ணுகிறவனுடையு க்ரூரவார்த்தைகளையும் சொல்லுகையாலே பலிதங்களை யருளிச்செய்கிறார் ( காணிலுமித்யாதி ) திருச்சந்தவிருத்தம் அறுபத்தொன்பதாம்பாட்டு. ( காணிலுமுருப்பொலார் செவிக்கிணுதகீர்த்தியாரித்யாதி ) முமுக்ஷுவுக்கு த்ரஷ்டவ்யரன்றிக்கேயிருக்கிற க்ஷுத்ரதாமசதேவதைகளைக்கண்டாலும், அவர்கள்விரூபாக்ஷத்வாதிகளாலே வடிவுபொல்லாதாயிருப்பர்கள் ; பித்ருவதப்ரசித்தி, பிக்ஷாடநப்ரசித்தி, அத்வரத்வம்சநப்ரசித்திமுதலான ஶ்ரவணகடுவான கீர்த்தியையுடையரா யிருப்பர்களித்யர்த்தஃ. " இக்கட்டுவிச்சி, இச்சொல் " என்றிரண்டிடத்திலும் கூட்டிபாவம் ( பரிஹாரம் சொல்லுகிறவித்யாதி ) " இக்கட்டுவிச்சி, இச்சொல் " என்றத்தால்சொன்ன நிஹீநதையின் சரமாவதியைக்காட்டுகிறார் ( நான்சொல்லுகிறவித்யாதி ) " காணிலுமுருப்பொலார் " இத்யாதிக்குப்ரதிகோடியான வாகாரமிவர்களுக்குண்டென்னுமத்தை சப்ரமாணமாக வருளிச்செய்கிறார் ( பேய்முலையித்யாதி ) பூதனையுடையமுலையில் விஷத்தைதாரகமாக வமுதுசெய்தவனுடைய வடிவையொழியக்கண்காணுது, குணசேஷ்டிதாதிகளுக்கு வாசகமான திருநாமங்களையொழியச் செவிகேளாதென்றபடி. முதற்றிருவந்தாதி பதினோராம்பாட்டு, " வாயவனையல்லது " இத்யாதி, இக்கட்டுவிச்சி சொல்லாகிறது ஹிதவசநமாயிருந்ததாகில் கேட்கலாகாதோவென்ன ( நாஸ்திகரானவித்யாதி ) அவ்வழியாலே-ததுபதேசத்வாரா. அவ்வழியாலே கைக்கொண்டாலோவென்ன ( நஹிம்ஸ்யாதித்யாதி ) அப்போதுவைதஹிம்ஸாத்யாகமும் கைக்கொள்ளவேண்டி வருமென்றபடி. ஆனால் ஆர்வார்த்தை கேட்கக்கடவதென்ன ( ஜ்ஞாநிநஇத்யாதி ) " 𑌤𑌦𑍍𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌪𑍍𑌰𑌣𑌿𑌪𑌾𑌤𑍇𑌨 𑌪𑌰𑌿𑌪𑍍𑌰𑌶𑍍𑌨𑍇𑌨 𑌸𑍇𑌵𑌯𑌾 । 𑌉𑌪𑌦𑍇𑌕𑍍𑌷𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌤𑍇 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌿𑌨𑌸𑍍𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌦𑌰𑍍𑌶𑌿𑌨𑌃 " ( தத்வித்திப்ரணிபாதேநபரிப்ரஶ்நேநஸேவயா । உபதேக்ஷ்யந்திதேஜ்ஞாநம்ஜ்ஞாநிநஸ்தத்த்வதர்ஶிநஃ ) இதிகீதாசுசதுர்த்தே.

( அதுவுமாமிறே ) அவள்சொன்னது கேட்கவுமாமிறே. சங்கதமாகச் செய்யுமதேதென்ன (செய்யாதனவித்யாதி) பெரியோர்கள் செய்யாதத்தைச் செய்யக்கடவோமல்லோம். ( மேலையாரித்யாதி ) பூர்வர்கள்செய்து போருமவையா யபேக்ஷிதமா யிருப்பனவென்றபடி. இந்தப்ரமாணத்வயத்தாலும்-பூர்வர்களுடைய வநுஷ்டாநாநுஷ்டாநங்கள் த்யாஜ்யோபாதேயங்களென்றதாயிற்று. இறைச்சி-மாம்ஸம்.

"இதுபரிஹாரம்" என்று நீயறிந்தபடியென்னென்ன (விரைமட்டலரித்யாதி) சப்தார்த்தம் (திருக்குழலிலித்யாதி) வாழ்த்தினல்-மங்களாசாசநம்பண்ணினல். ஏத்தினலென்னுதே, "வாழ்த்தினல்" என்பானென்னென்ன (இவர்களித்யாதி) "மங்களாசாசநமுகத்தாலே" என்றத்தைக்காட்டுகிறார் (உன்சேவடியித்யாதி) உன்னுடையசிவந்ததிருவடிகளுடைய காந்திக்குக்குறைவற்றரக்ஷையாய்ச் செல்லவேணுமித்யர்த்தஃ. மங்களாசாசநபரதைக்குப்ரமாணாந்தரம் ( கெண்டையித்யாதி ) "கெண்டையொண்கணும் துயிலுமென்னிறம்।பண்டுபண்டுபோலொக்குமிக்கசிர்த்।தொண்டரிட்ட பூந்துளவின்வாசமே।வண்டுகொண்டுவந்தூதுமாகிலே." திருமொழிபதினோராம்பத்து முதற்றிருமொழி யொன்பதாம்பாட்டு. இதற்கர்த்தம் ( உறக்கததாலித்யாதி ) ஒண் – சௌகுமார்யம். " பண்டுபண்டு " என்றத்விருக்திக்கு பாவம் ( அதாவதித்யாதி ) பண்டு - விஶ்லேஷாத்பூர்வம்; இரண்டாம்பண்டாவது

அதுக்கு பூர்வாவஸ்த்தையாய், பால்யாவஸ்த்தையைச்சொல்லுகிறது. "கலப்பதற்குமுன்பு" என்றுவிசேஷிக்கிறதென்னென்னவருளிச்செய்கிறார் (கலக்கையித்யாதி வாக்யத்வயத்தாலே) ப்ராசங்கிகம் (இப்படியித்யாதி) தளவின்வாசமேயென்னவமையாதோவென்றது-விஶ்லேஷவ்யசநம்திருகைக்கு "அவன்சம்பந்தமுள்ளதிருத்துழாய்" என்னவமையாதோவென்றபடி, இவளுக்குத் தன்னுற்றாமைதீருகிறமாத்ரமே ப்ரயோஜநமாகையன்றிக்கே அத்தலைக்குப்பரிகையும் மங்களங்களை யாசாஸிக்கையுமவஶ்யாபேக்ஷிதமாகையாலேஇப்படி விசேஷிக்கிறாளென்று பரிஹாரம் பரிவரில்லையென்றாயிற்றென்றது-தன்விஶ்லேஷவ்யஸநத்திற்காட்டிலுமென்றபடி.

விவரணம் ( மேற்காற்றிலேயித்யாதி )

க்ரமேணாந்வயஃ.......................................................*



## நான்காம்பாட்டு.

மருந்தாகுமென்றங்கோர்மாயவலவைசொற்கொண்டுநீர்
கருஞ்சோறுமற்றைச்செஞ்சோறுங்களனிழைத்தென்பய
னொருங்காகவேயுலகேழும்விழுங்கியுமிழ்ந்திட்ட
பெருந்தேவன்பேர்சொல்லகிற்கிலிவளைப்பெறுதிரே.

### ஆறாயிரப்படி.

(மருந்தாகும்) மருந்தாகுமென்று, வஞ்சகையாய்த்தோற்றிற்றுச்சொல்லக்கடவளாயிருப்பாளொரு கட்டுவிச்சிசொற்கொண்டுநீர்கருஞ்சோறும் மற்றைச்செஞ்சோறும் களனிழைத்தென்னப்ரயோஜநமுண்டு. ஒருங்காகவேயுலகேழும் விழுங்கியுமிழ்ந்திட்ட பெருந்தேவனுடையதிருநாமத்தைச்சொல்லி இவளைப்பெறலாமென்கிறாள்.......................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், க்ருத்ரிமையான கட்டுவிச்சிசொல்லிற்றுச் செய்தொருப்ரயோஜநமில்லை, ஆபத்சகனான ஸர்வேஶ்வரனுடைய திருநாமத்தைச்சொல்லி இவளைக்கிடைக்குமென்கிறாள்.

பரிஹாரமல்லாதத்தை, மருந்தாகும்-பரிஹாரம். என்று-என்றுப்ரதிபத்திபண்ணி. அங்கோர் - "இன்னவிடத்திலாள், இன்னாள்" என்றுசொல்லவுமொண்ணாதாளொரு. மாயம்-க்ருத்ரிமையாய். அலவை - ப்ரதிபந்நபாஷிணியானவளுடைய. சொல்-வார்த்தையை. கொண்டு-விஶ்வசித்து. நீர்-தேவதாந்தரஸ்பர்ஶயோக்யதையில்லாதநீங்களிவள்பக்கல்பரிவாலேகலங்கி. ஸாத்த்விகாந்நமானசுத்தாந்நமன்றியேதாமசமாயும்ராஜசமாயுமுள்ள. கருஞ்சோறும்-கருஞ்சோற்றையும். மற்றை-தத்வ்யதிரிக்தமான. செஞ்சோறும்-செஞ்சோற்றையுங்கொண்டு. களன்-தேவதாந்தரஸந்நிதாநஸ்த்தலத்திலே. இழைத்து-அவற்றுக்குப்ரீணநமாம்படிசொல்லுகிறகணக்கிலேயிட்டால். என்-என்ன. பயன்-ப்ரயோஜநமுண்டு. உலகேழும் -ஆஶ்ரிதாநாஶ்ரிதவிபாகமறஸர்வலோகங்களையும். ஒருங்காகவே-ஒருகாலே. விழுங்கி-ப்ரள

யம்விழுங்காதபடிதான்விழுங்கிரக்ஷித்து. உமிழ்ந்திட்ட-அதுபோனவாறேமீளவுமிழ்ந்த. பெருந்தேவன்-பரதேவதையினுடைய. பேர்-திருநாமத்தை. சொல்ல-சொல்ல. கிற்கில் - வல்லீர்களாகில். இவளை - விலக்ஷணையானவிவளை. பெறுதிர்-பெறுதிகோள்..........................................................................—..........*

## ஈடு - நான்காம்பாட்டு.

வஞ்சகையாய்த்தோற்றிற்றுச்சொலலுகிற விவளுடைய பஹுஜல்பாதிகளைவிட்டு, ஆபத்ஸகனை சர்வேஸ்வரனுடைய திருநாமத்தைச் சொல்ல வல்லிகோளாகில் இவளைக்கிடைக்குமென்கிறுள்.

(மருந்தாகுமென்று) அபத்யஸேவைபண்ணுவார் "பத்யம்" என்று வ்யவஹரித்துக்கொள்ளவும்வேணுமோ. மருந்தா! மென்றபடி. (அங்கோர்) அங்கேயொருத்தி - என்றநாதரோக்தி. (மாயவலவைசொற்கொண்டு) வஞ்சகையாய் ப்ரதிபந்நங்களையே சொல்லக்கடவளான இவள்வார்த்தையைக்கேட்டு.(நீர்)சாத்த்விகராய், பகவத்விஷயமல்லதுசொல்லக்கடவரன்றிக்கே ருஜுக்களாயிருக்குமவர்கள் வார்த்தையைக்கேட்கக்கடவ நீங்கள்படுமெளிவரவே. (நீர்) "போனகம்செய்தசேடம்தருவரேல் புனிதமன்றே" என்ற-சாத்த்விகரமுதுசெய்த ப்ரசாதவைபவமறியும் நீர். சாத்த்விகாந்நமல்லது ஸ்பர்ஶிக்கக்கடவரல்லாதநீர். (கருஞ்சோறுமித்யாதி) தாமசாந்நமும், அத்தோடு தோள்திண்டியான ராஜசாந்நமும். (களனிழைத்தென்பயன்) களனென்றது - களமென்றபடி. இழைக்கை - படுகை. அதாவது-க்ஷுத்ரதேவதைகள்வந்து சந்நிதிபண்ணும் ஸ்த்தலங்களிலே-நாற்சந்திதொடக்கமானவற்றிலே, இழைத்து - அவற்றுக்குச்சொல்லுகிற நியமங்களோடேயிட்டு. ராஜஸதாமஸ தேவதைகளுக்கு, அவ்வோதேவதைகள்வந்து சந்நிதிபண்ணும் ஸ்த்தலங்களிலே ராஜஸமாயும் தாமஸமாயுமுள்ள அந்நங்களைக்கொண்டிடச்சொல்லுகிற க்ரமத்திலேயிட்டால் என்னப்ரயோஜநமுண்டு. ப்ரயோஜநமில்லாமையேயன்று, விநாசத்தோடேபலிக்கும்.

ப்ரளயகாலத்தில் சர்வரக்ஷகனை சர்வேஸ்வரனையொழிய ப்ரளயாபத்து ரக்ஷிக்கலாமாகிலாயிற்று இவளை க்ஷுத்ரதேவதைகளைக்கொண்டு ரக்ஷிக்கலாவது. இதில் ப்ரயோஜநமில்லையாகில், மற்றுப்ரயோஜநமுண்டாக நீநினைத்தத்தைச்சொல்லாயென்ன; 'உங்களுக்கொருபேரிறே நான்சொல்லுகிறது செய்விகோளாகிலென்கிறுள் (ஒருங்காகவே) ஒருவர்களனிழையாதிருக்கச்செய்தேவந்து, வளையாதேரக்ஷிக்கு மவனைப்பற்றப்பாருங்கோள். ஒருவரர்த்தியாதிருக்க, ஆபத்தேஹேதுவாகவந்துதவுமவனுயிற்று. (உலகேழும்) அதுதன்னிலும், "ஆஶ்ரிதர், அநாஶ்ரிதர்" என்று பாராதே எல்லாரையுமொக்க ஏககாலத்திலே திருவயிற்றிலேவைத்துநோக்கி, ப்ரளயம்கழிந்தவாறே வெளிநாடுகாணப் புறப்படவிட்ட.

(பெருந்தேவன்) பரதேவதை. சர்வரக்ஷகனாகையாலே சர்வாதிகனான சர்வேஶ்வரன். தளர்ந்தார்தாவளமாயிற்று; முன்புமுகந்தோற்றாதேநின்றானாகிலும் ஆபத்துவந்தவாறே முகங்காட்டி ரக்ஷிக்குமவனாயிற்று. அவனிப்படியிருப்பானொருவனாகையாலே ஸ்வாராதன், நீங்களாஶ்ரயிக்கிற தேவதைகளைப்போலே துஶ்ஶீலமாய், “ அட்டதொழியச் சுட்டதுகொடுவா ” என்னும்துராராதனல்லன். தான்ரக்ஷிக்குமிடத்தில் இத்தலையிலாநுகூல்யத்துக்கு ஸூசகமான அப்ரதிஷேதமேயாயிற்றுவேண்டுவது. ( உலகேழுமித்யாதி ) அந்தப்ரளயம்தீர்த்தவனேகாணு மிந்தப்ரளயத்துக்கும். நம்மோடொக்கப்ரளயத்திலேயழுந்தும் க்ஷுத்ரதேவதையையோபற்றுவது, வரையாதே சர்வரக்ஷகனானவனையன்றோபற்றுவது. (பேர்சொல்லகிற்கில்) திருநாமத்தைச்சொல்லவல்லிகோளாகில். இப்படி நேர்த்தியற்றிருக்குமாகில் பலமும மளவுபட்டிருக்குமோவென்னில் ( இவளைப்பெறுதிரோ ) அங்குநேரவேண்டுவதெல்லாம் நேர்ந்தாலும், என்பயன் என்று - ப்ரயோஜநமில்லையாகச்சொல்லிற்று; இங்குநேர்த்தி திருநாமமாத்ரம்சொல்லுகையாய், பேற்றில்வந்தால் இவளைப்பெறுகையாகிற பெரியபலத்தைப்பெறலாம். பேர்சொல்லவல்லிகோளாகிலிவளைப்பெறலாம், இல்லையாகிலிழக்குமித்தனை ..............................................*

## ஜீயர் அரும்பதம்.

நாலாம்பாட்டு (மருந்தாகுமித்யாதி) “மாயவலவை;” என்றுதொடங்கிமேலெல்லாம்கடாக்ஷித்தவதாரிகை (வஞ்சகையாயித்யாதி) மருந்தென்னாதே “ மருந்தாகும் ” என்கிறவ்யங்க்யோக்திக்குபாவம் ( அபத்யேத்யாதி ) மருந்தாகாதத்தை “மருந்தாகும்”என்றுசொல்லிஎன்றபடி. “ஆகும்” என்றது - ஆ!மென்றபடி. அலவை-ஜல்பாகை. “நீர்-மாயவலவைசொற்கொண்டு” என்றுகூட்டி, “மாயவலவை” என்றதுக்கு ப்ரதிகோடியாக “நீர்” என்றதுக்கர்த்தம் ( சாத்த்விகராயித்யாதி ) எளிவரவு-தைந்யம். “நீர்-கருஞ்சோறும்” என்றுமேலே கூட்டிதாத்பர்யம் (போனகமித்யாதி ) ததுச்சிஷ்ட பக்ஷணமர்த்தசித்தம். முந்தினது - ஜ்ஞாநிகள்பக்கல் கேட்கக்கடவ நீரொன்றுபாவம் ; இரண்டாவது - “ தருவரேல்புனிதமன்றே ” என்றப்ரசாதவைபவ மறிந்தநீரென்றபடி. ( போனகமித்யாதி ) அமுதுசெய்தசேஷம் தருவராகில் அப்போதே பரிசுத்தமித்யர்த்தஃ. திருமாலை நாற்பத்தோராம்பாட்டு, “ வானுளார் ” இத்யாதி. “ களனிழைத்து ” என்றதிலே - ததுச்சிஷ்டபோஜநபர்யந்தம்விவக்ஷிதம். “ கருஞ்சோறும் ” என்றதிலேநோக்காக “ நீர் ” என்றதுக்குபாவம் ( சாத்த்விகாங்கமித்யாதி )

நிறத்தைப்பற்ற (தாமஸாங்கமும், ராஜஸாங்கமுமென்றது) தோள்தீண்டியான-சமமான. “களம்” என்றதுக்கர்த்தம் (அதாவதித்யாதி) ஸ்தலங்களைக்காட்டுகிறார் (நாற்சந்தியித்யாதி) சிமுக்தமான வர்த்தத்தையெல்லாம் கூட்டியருளிச்செய்கிறார் (ராஜஸதாமஸதேவதைகளுக்கித்யாதி) “ என்பயன் ” என்றவிடத்திலே, என்னென்கிறவிடத்தை-ஆக்ஷேபமாக்கியர்த்தம் (என்னப்ரயோஜநமுண்டென்று) “ என் ” என்றத்தை-ப்ரஶ்நபரமாக்கி தாத்பர்யார்த்தம் (ப்ரயோஜநமில்லாமையேயித்யாதி)

" விழுங்கியுமிழ்ந்த " என்றத்தை-கீழுக்குத்ருஷ்டாந்தமாக்கிபாவம் ( ப்ரளயகாலத்திலித்யாதி) " பேர் " என்றதுக்குபாவம் ( இதில்ப்ரயோஜநமித்யாதி ) " உலகேழும்விழுங்கியுமிழ்ந்த " என்றதுக்கு - ( ப்ரளயகாலத்திலித்யாதிவாக்யத்தாலே ) ஒருதாத்பர்யமருளிச்செய்து, தாத்பர்யாந்தரம் ( ஒருவர்களனிழையாதிருக்கவித்யாதி) இப்போது "விழுங்கியுமிழ்ந்து" என்றது - மேலுக்குவிசேஷணம். வரையாதே-தாரதம்யம்பாராதே. "உலகு" என்றவசேதநசமாதிக்குபாவம் ( ஒருவரர்த்தியாதிருக்கவித்யாதி ) " உலகேழும்-ஒருங்காகவே விழுங்கியுமிழ்ந்திட்ட " என்றதுக்கு சப்தார்த்தம் (அதுதன்னிலுமித்யாதி) ஒருங்காகவே - ஏககாலத்திலே. ஒருகாலேயென்றுமாம். " உலகேழும் விழுங்குகையாலே-பெருந்தேவன் " என்று அபரபாவியாக வர்த்தமருளிச்செய்கிறர் ( சர்வரக்ஷகனித்யாதிவாக்யத்வயத்தாலே ) தளர்ந்தார்தாவளம் - ஆர்த்தரக்ஷகன். தாவளம்-ஆஶ்ரயம். "பெருந்தேவனுயிருந்துவைத்து-உலகேழும்விழுங்கினுன்" என்று பூர்வபாவியாகதாத்பர்யாந்தரம் (முன்புமுகமித்யாதி) "பெருந்தேவன்" என்றதுக்கர்த்தாந்தரம் ( ஸ்வாராதனென்று ) அட்டதொழியச்சுட்டதுகொடுவாவென்னும் - சமைந்தத்தைவைத்துச்சமையாதத்தைக்கொண்டுவாவென்னுமென்றபடி. " அட்டமாம்சத்தையொழியச்சுட்டதலையைக்கொண்டுவா " என்றுருத்ரன்வார்த்தை. ஆனுல் பேர்சொல்லுவானென்னென்ன (தான்ரக்ஷிக்குமிடத்திலித்யாதி) " இவளைப்பெறுதிரோ " என்னுமளவுக்கும்பாவம் (அந்தப்ரளயமித்யாதி) (இந்தப்ரளயத்துக்கும்) கடவனென்றபடி. பூர்வபாவியாக "பெருந்தேவன்" என்றதுக்கு தாத்பர்யாந்தரம் ( நம்மோடித்யாதி ) நேர்த்தி - ப்ரயாசம். அளவுபட்டு-அல்பமாய். அங்கு - க்ஷுத்ரதேவதாவிஷயத்திலே. நேரவேண்டுவதெல்லாம் - செய்யவேண்டுவதெல்லாம். " பேர்சொல்லகிற்கிலிவளைப்பெறுதிரோ " என்றதுக்குபாவம் (பேர்சொல்லவித்யாதி) " பேர்சொல்லகிற்கில் " என்கையாலே-சொல்லமாட்டாதபோது விநாசமென்றபடி.

க்ரமேணுந்வய: ........................................................................*

## ஐந்தாம்பாட்டு.

இவளைப்பெறும்பரிசிவ்வணங்காடுதலன்றந்தோ
குவளைத்தடங்கண்ணுங்கோவைச்செவ்வாயும்பயந்தனள்
கவளக்கடாக்களிறட்டபிரான்றிருநாமத்தாற்
றவளப்பொடிகொண்டுநீரிட்டிடுமின்றணியுமே.

### ஆருயிரப்படி.

(இவளை) க்ஷுத்ரதைவாவிஷ்டராய்நின்று நீரணங்காடுகிறவிதிவளைப்பெறுகைக்குபாயமன்று. இவள் குவளைத்தடங்கண்ணும் கோவைச்செவ்வாயும் பயந்தனள்; ஆனபின்பு, ஈண்டு, கவளக்கடாக்க ளிறட்டபிரான்றிருநாமத்தைச்சொல்லி பரிசுத்தமானபொடியைக்கொண்டு நீங்களிடும்கோள்; இடவேயிவள்நோய் தணியுமென்கிறள் ..................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், நீங்கள்பண்ணுகிறபரிஹார மிவள்நோய் விஞ்சாநின்றது, ப்ர பலவிரோதி நிவர்த்தகனான க்ருஷ்ணனுடைய திருநாமத்தையுச்சரித்து பரிசுத்தசூர்ணத்தை ஸ்பர்ஶிப்பியுங்கோளென்கிறாள்.

இவளை-நிரதிசயவைலக்ஷண்யத்தையுடையவிவளை. பெறும்-பெறும். பரிசு-ப்ரகாரம். இ-இந்த. அணங்காடுதல் - அணங்கேறியாடுதல். அன்று - அன்று. அந்தோ-ஐயோ. இவளுக்குநோய்விஞ்சினபடி, குவளை - குவளைப்பூப்போலேமைத்து. தடம்-பரப்பையுடைத்தான, கண்ணும்-கண்களும். கோவை - கோவைப்பழம்போலே. செம்-சிவந்த. வாயும்-அதரமும். பயந்தனள்-தன்னிறமழிந்து பயந்தநிறத்தையுடையவளாம்படியானாள். இனி யிதுக்குபரிஹாரமாவது, கவளம்-மதகரமான மருந்துகளைக்கவளங்கொண்டு. கடா-கடமிழியும்படிமதித்த. களிறு - குவலயாபீடமாகிறவானையை. அட்ட-கொன்று. பிரான் - "ஸம்வ்ருதஃபஶ்யதக்ருஷ்ணஸ்யமுகம்" (ஸக்யஃபஶ்யதக்ருஷ்ணஸ்யமுகம்) என்று மதுராயிற் பெண்களுக்குமுகங்கொடுத்த மஹோபகாரகனுடைய. திருநாமத்தால்- விரோதிநிரசநஸூசகமான திருநாமோச்சாரணத்தாலே. "ப்ராஹ்மணாஃபாதரேணவஃ" (ப்ராஹ்மணாஃபாததோமேத்யாஃ) என்கிறபடியே ப்ரஹ்மநிஷ்டரான பாகவதருடைய, தவளம்-பரிசுத்தமான. பொடி-பாததூளியை. கொண்டு-கொண்டு. நீர்-இவள்பக்கல்பரிவாலே வழியல்லாவழியேயாகிலும் பரிஹரிக்கத்தேடுகிறநீங்கள். இட்டிடுமின்-இவள்ஸ்பர்ஶிக்கும்படி சடக்கென ப்ரயோகியுங்கோள். தணியும்-இவளுக்கு விஞ்சியிருக்கிறவைவர்ண்யம்தணியும்.

குவளை-நெய்தல். கடா-மதமாதல், ஆனையின்கதுப்பாதல். தவளமென்று-வெளுப்பாய், சுத்தியைச்சொல்லுகிறது ... ...... ......................................*

## ஈடு - ஐந்தாம்பாட்டு.

நீங்கள்பண்ணுகிற பரிஹாரம் நோயைமிகப்பண்ணுநின்றது; அத்தைவிட்டு, நோய்க்கு யோக்யமானபரிஹாரத்தைப்பண்ணுங்கோளென்கிறாள்.

(இவளைப்பெறும்பரிசிவ்வணங்கரடுதலன்று) இந்நற்சரக்கைப்பெறப்பார்ப்பாரிந்நிஷித்தாநுஷ்டாநத்தாலேயோ பெறப்பார்ப்பது. இவ்விலக்ஷணமாயிருக்கிற விவளைப்பெறுகைக்குபாய மித்தேவதாவிஷ்டமாயாடுமதன்று. இவளிப்படிசொன்னவிடத்திலுமவர்கள் மீளாதொழிகையாலே (அந்தோ) ஐயோ! இவளையிழந்தோமாகாதேயென்கிறாள்.

இதநுவர்த்திக்குங்காட்டி லிவளையிழக்கவேணுமோவென்ன; பார்க்கமாட்டிகோளோ (குவளைத்தடங்கண்ணும் கோவைச்செவ்வாயும்பயந்தனள்) அவனுடையவாய்ப்புகுசோறன்றோ பறியுண்கிறது. "தொண்டையம்செங்கனிவாய்நுகர்ந்தானை" என்றும், "மணநோக்கமுண்டான்" என்றும்-இவையிறே யவனுக்கூண். "குவளையங்கண்ணி" என்னக்கடவதிறே; குவளைப்பூப்போலேயாய் போக்தாக்களளவல்லாத பரப்

பையுடைத்தானகண்ணும்; *கோவைவாயாளிறே, கோவைப்பழம்போன்ற சிவந்தவதரமும் விவர்ணமாயிற்றின. பசந்தனளென்றபடி. பகவத்விரஹத்துக்கு மகஞ்சுரிப்படாதவை, தேவதாந்தர ஸ்பர்ஶத்தாலும் ததியஸ்பர்ஶத்தாலுமாக விவர்ணமாயிற்றினவென்றபடி.

ஆனல் பரிஹாரம்சொல்லாயென்ன; நீங்களேயன்றோ "நெடுங்காலமும் கண்ணனீண்மலர்ப்பாதம்பரவிப்பெற்ற" என்று சொன்னிகோள், அப்படியே க்ருஷ்ணன்றிருவடிகளை யாஶ்ரயித்து அவனலேபரிஹ்ருதமாகவேணுமென்கிறள் (கவளமித்யாதி) இரண்டநீதியுண்டிங்கேபுகுந்தது, அவ்விரண்டுக்கு மிரண்டையுங்கொண்டு பரிஹரிக்கப்பாருங்கோள். கவளங்கொண்டிருப்பதாய். துர்த்ரவ்யங்களைப்பருக்கிப் பிச்சேற்றுவித்து நிறுத்தினர்களாயிற்று. கடாஎன்று - மதஜலம். மதஜலமொழுகாநின்றுள்ள குவலயாபீடத்தை முடித்தவுபகாரகன். ப்ரபலப்ரதிபந்தகங்களை அநாயாசேநபோக்கவல்லவன் திருநாமத்தாலே பரிஹரிக்கப்பாருங்கோள். (தவளப்பொடிகொண்டு) பரிசுத்தமானபொடியைக்கொண்டு. (நீர்) பாயம்பண்ணுகைக்கு ஸஹகரித்தார்க்கு ப்ராயஶ்சித்தத்துக்கும் கூட்டுப்படவேண்டாவோ. (இட்டிடுமின்) இவள்மேலேயிடுங்கோள். தேவதாந்தரஸ்பர்ஶமுண்டானதுக்கு பகவந்நாமத்தைச்சொலவி பரிஹரிக்கப்பாருங்கோள், தேவதாந்தரஸ்பர்ஶமுடையாருடைய ஸ்பர்ஶத்துக்கு ஸ்ரீவைஷ்ணவர்களுடைய பாதரேணுவைக்கொண்டு பரிஹரிக்கப்பாருங்கோள்.

இப்படிசெய்தால் பரிஹாரப்படுமோவென்ன (தணியுமே) இவள்கண்ணும்விழித்து நிறமும்வரும்படிகாட்டித்தரக்கடவேன்............*

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு (இவளையித்யாதி) "அணங்காடுதல், பயந்தனள், தவளப்பொடி, இட்டிடுமின்" என்றபதங்களைக்கடாக்ஷித்தவதாரிகை (நீங்களித்யாதி)

"இவளை, இவ்வணங்கு" என்கிறவிடத்தில், "இ" என்றது - உத்கர்ஷத்திலும், நிகர்ஷத்திலுமாயருளிச்செய்கிறர் (இக்நஞ்சாரகித்யாதி) சப்தார்த்தம் (இவ்விலக்ஷணமாயித்யாதி) "ஐயோ" என்றதுக்குபாவம் (இவளையித்யாதி)

இவளுடையகண்ணையும் வாயையும் வர்ணிக்கிறவளுடைய ஹார்த்தபாவத்தையருளிச்செய்கிறர் (அவனுடையவித்யாதி) அவனுக்கு வாய்ப்புகுசோறுபிருக்குமோ விவளுடையகண்ணும் வாயுமென்ன (தொண்டையித்யாதி) கோவைப்பழம்போலே சிவந்தழகியகனிபோலே யினிதானவாயை புஜிக்கவேயென்றபடி. திருமொழி மூன்றும்பத்து ஏழாந்திருமொழி யிரண்டாம்பாட்டு, "பண்டிவன்" இத்யாதி. எட்டாம்பத்து பத்தாந்திருமொழி முதற்பாட்டு, (வண்டார்பூமாமலர்மங்கைமணநோக்கமுண்டானேயித்யாதி) வண்டுகள் படிந்திருப்பதாய் தர்ஶநீயமாய்ப் பரப்பையுடைத்தான தாமரைப்பூவைப் பிறப்பிடமாகவுடைய பெரியபிராட்

டியாருடைய செவ்வியையுடையகண்ணழகை புஜிக்கிறவனே இத்யர்த்த꞉. மணம்-செவ்வி. குவளையைக்கண்ணுக்கொப்பாகச்சொன்னதுக்கு சம்வாதம் (குவளையங்கண்ணியித்யாதி) குவளைப்பூப்போன்ற கண்ணழகையுடையவளித்யர்த்த꞉. திருமொழியிரண்டாம்பத்து ஏழாந்திருமொழிமுதற்பாட்டு, "திவளும்" இத்யாதி. சப்தார்த்தம் (குவளைப்பூப்போலேயித்யாதி) பயந்தனள் - பசந்தனள். "தடங்கண்ணும், செவ்வாயும்" என்றசம்ப்ரதத்தை - ப்ராதார்யத்திலேயாக்கிபாவம் (பகவத்விரஹத்துக்குமித்யாதி) பகவத்விரஹத்துக்கு மகஞ்சரிப்படாதவையென்றது- "மாமைநோக்கொன்றும்வாட்டேன்மின்" என்றத்தைப்பற்ற. அன்றிக்கே, * தீர்ப்பாரையாமினியில் விரஹத்துக்கு மகஞ்சரிப்படாதவையென்னுதல். அகஞ்சரிப்படுகை-குறைகை.

"களிறட்டபிரான்திருநாமத்தால்" என்னுமளவுக்கு மவதாரிகை (ஆறுலித்யாதி) சர்வேஶ்வரன் திருநாமத்தாலென்னாதே, "க்ருஷ்ணன்திருநாமத்தால்" என்றதுக்குப்ரயோஜநம் (நீங்களேயித்யாதி) (நெடுங்காலமுமித்யாதி) அநேககாலங்களும் க்ருஷ்ணனுடைய, சர்வசமாஶ்ரயணீயமாய் நிரதிசயபோக்யமான திருவடிகளை கீர்த்தநாதிமுகத்தாலே யாஶ்ரயித்துப்பெறப்பட்டவித்யர்த்த꞉. திருவிருத்தம் முப்பத்தேழாம்பாட்டு, "கொடுங்காற்சிலையர்" இத்யாதி. க்ருஷ்ணன்திருநாமஞ்சொன்னால்போராதோ, "தவளப்பொடி" என்கிறதெதுக்கென்ன (இரண்டுநீதியித்யாதி) கவளம்-கபளம். அவ்வபதாநத்தைச்சொன்னதுக்குபாவம் (ப்ரபலேத்யாதி) திருநாமத்தாலேயென்றது - திருநாமத்தைச்சொல்லியென்றபடி. "தவளப்பொடி" என்றது - சாமாந்யசப்தமானாலும், தேவதாந்தரதீயஸ்பர்ஶத்துக்கு பரிஹாரமாக பாகவதபாதரேணுவைச் சொல்லுகிறது. "இட்டிடுமின்" என்னாதே, "நீர்" என்றுவிசேஷித்ததுக்குபாவம் (பாபமித்யாதி) "இட்டிடுமின்" என்று-முழுச்சொல்லு. இடுங்கோளென்றபடி. "இரண்டநீதி" இத்யாதிவாக்யவிவரணம் (தேவதாந்தரேத்யாதி)

தணியும் - சமிக்கும். அவதாரணத்துக்கர்த்தம் (இவள்கண்ணுமித்யாதி) க்ரமேணாந்வய꞉ .......................................................................*

---

# ஆறும்பாட்டு.

தணியும்பொழுதில்லைநீரணங்காடுதிரன்னைமீர்
பிணியுமொழிகின்றதில்லைபெருகுமிதுவல்லான்
மணியிலணிநிறமாயன்றமரடிநீறுகொண்
டணியமுயலின்மற்றில்லைகண்டீரிவ்வணங்குக்கே.

## ஆறாயிரப்படி.

(தணியும்) தவளப்பொடியாகிற தின்னதென்கிறது.

நீரணங்காடுகிறவித்தா லொருக்ஷணமாத்ரமிவளுக்கொரு சுகலேசமும் பிறக்கிறதில்லை. அதுவேயோ, பிணியுமொழிகின்றதில்லை; பெருகுகிற வித்தனையல்லது. ஆனபின்பு, மணியிலணிநிறமாயன்றமரடிநீறு

கொண்டணியமுயலு மித்தனையல்லது மற்றிவளுக்கொரு பரிஹாரமுமி ல்லையென்கிறாள் ..........................................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், நீங்களிடைவிடாமலணங்காடுகிற வித்தாலிவள்நோய் வளருகி றதொழிய மீளுகிறதில்லை, ஆதலால் விலக்ஷணவிக்ரஹ விசிஷ்டனான சர்வேஶ்வர ன்பக்கலிலே பக்தவான்களான பாகவதருடைய சரணரேணுவை தரிப்பிக்கையி லே யுத்யோகியுங்கோ ளென்கிறாள்.

அன்னைமீர்-அன்னைமீர். பெற்றியோளானபக்வதையாலே " பாலையன்றோ விவள் " என்று என்வார்த்தைகேளாதே. தணியும்பொழுது-தவிருவதொருபொழு து. இன்றி-இன்றி. நீர்-நீங்கள். அணங்காடுதிர்-அணங்காடாநின்றிகோள். இது-இ துதானேஹேதுவாக. பிணியும்-இவள்நோயும். பெருகுமல்லால்-பெருகிவருகிறதொ ழிய. ஒழிகின்றது-தவிருகிறது. இல்லை-இல்லை. இனிமீளுகைக்குபரிஹாரம், மணியி ல்-நீலரத்நத்திற்காட்டில். அணி-நிரதிசயவிலக்ஷணமான. நிறம் - நிறத்தையுடைய னாய். மாயன்-ஆஶ்சர்யபூதனானக்ருஷ்ணன்விஷயமாயுள்ள. தமர்-சேஷத்வசம்பந் தஜ்ஞானவான்களானபாகவதருடைய. அடிநீறு - " தவளப்பொடி " என்றுசொல் லப்பட்டபாததூளியை. கொண்டணிய-தரிப்பிக்கும்படி. முயலில்-உத்யோகிக்கப் பெறில். இ-இந்த. அணங்குக்கு-திவ்யஸ்வபாவையானபெண்பிள்ளைக்கு. மற்று-இத் தோடொத்தவேறொருபரிஹாரம். இல்லைகண்டீர்-இல்லைகாணுங்கோள்.

இதுப்ரயோகித்தபோதே ஆஶ்வாஸம்கண்டிகோளென்றே வென்றுகருத்து. அழகுக்கிடு பட்டவிவளுக்குபரிஹாரம் அத்துறையிலகப்பட்டாருடைய வநுபந்த மேயென்றபடி. மணியிலென்கிற வைந்தாம்வேற்றுமை - உவமையாகவுமாம்......*

## ஈடு - ஆறும்பாட்டு.

இப்பெருநேர்த்தியெல்லாம்வேண்டா; " தவளப்பொடி " என் றுசொன்னது இன்னதென்றுவிசேஷித்து, அத்தைச்செய்ய வுத்யோகிக் கவே யிவள்நோய் தீருமென்கிறாள்.

( தணியுமித்யாதி ) நிஷேதிப்பாருண் டாகையாலே " இன்ன போது தவிரச்சொல்லுவர்கள் " என்றறியாமையாலே, உச்சிவீடுவிடா தே அவர்களாடத் தொடங்கினார்கள்.

( பிணியுமித்யாதி ) காரணநுவ்ருத்தியாலே கார்யமுமநுவர்த்தி யாநின்றது. ( பெருகுமிதுவல்லால் ) கிண்ணகப் பெருக்குப்போலே மேன்மேலனகிளர்ந்து வாராநின்றது.

( மணியிலித்யாதி ) நீலமணிபோலே அழகியநிறத்தையுடையனா ய், குணசேஷ்டிதங்களா லாஶ்சர்யபூதனானவனுடை யாருடையபாதரே ணுவைக் கொண்டுவந்து அணிய உத்ஸாஹிக்கில். விசிஷ்டகுலத்திற்பிறந் த அபவாதமாகையாலே ப்ராயஶ்சித்தத்தைக் கனக்கவிதித்தோமத்தனை; அதுதன்னின் ப்ரபாவத்தைப்பார்த்தால் இதெல்லாம்வேண்டா, உத்யோ கமாத்ரமமையும். " தொண்டரடிப்பொடியாடநாம் பெறில்கங்கைநீர்கு டைந்தாடும் வேட்கையென்னாவதே " என்றாரிறே. [ரூ-௩-௩-௭௦)ஸூ)

𑌸𑌂𑌕𑌲𑍍𑌪𑌃𑌪𑍍𑌰𑌾𑌤𑌿𑌕𑍂𑌲𑍍𑌯𑌸𑍍𑌯𑌵𑌰𑍍𑌜𑌨𑌮𑍍 ” ( ஆநுகூல்யஸ்யஸங்கல்ப: ப்ராதிகூல்யஸ்யவர்ஜநம் ) ஆநுகூல்யத்தில் சங்கல்பமாத்ரமேயமையும், ப்ராதிகூல்யத்தில் வர்ஜநமேவேணும். ( மாயன்றமரடிநீறுகொண்டு ) வண்டரும் சொண்டரும் என்கிறவர்களுக் கரையன்சொன்னவார்த்தைக்குப் பிள்ளையுறங்காவில்லி தாசர்பரிஹாரம்பண்ணினபடியை நினைப்பது. அதாவது-அகளங்க நாட்டாழ்வான் இவர்களுக்கு அமணன்பாழியில் சிம்ஹத்தைக்காட்டி, “ திருமுற்றம், திருவடிதொழுங்கோள் ” என்ன, அவர்களும் “ மெய் ” என்றுதிருவடிதொழுது, அது “ அமணன்பாழி ” என்றறிந்தவாறே மோஹித்துவிழ, பிள்ளையுறங்காவில்லிதாசர்தம் ஸ்ரீபாததூளியை அவர்களுக்கிட, உணர்ந்தெழுந்திருந்தார்கள். திருக்கொட்டாரத்தினருகே கைநிரைகட்டிக் கொண்டிருக்கிறநாளிலே, ஜீயரித்திருவாய்மொழி யருளிச்செய்கிறுராய் இவ்வளவிலேவந்தவாறே, “‘ தேர்ப்பாகனுர்க்கு’ என்று-நோவுக்குநிதாநம் சொன்னுளாகில், அவனையிட்டு பரிஹரியாதே ‘மாயன்றமரடி நீறுகொண்டணியமுயலில்’ என்று-இத்தைபரிஹாரமாகச் சொல்லுவானென் ; நோவுக்கு நிதாநமொன்றும் பரிஹாரமொன்றுமாயோ விருப்பது ” என்றுநான்கேட்டேன் ; “ மோர்க்குழம்பிழியாதே மோஹித்துக்கிடந்தசமயத்தில் சுக்கிட்டுதிப்பின்பு மோர்க்குழம்புகொடுத்துபரிஹரிப்பாரைப்போலே, ‘தேர்ப்பாகனுர்க்கு’ என்றபோதே அவரைக்கொடுவந்து காட்டப்பெருமையாலே, முற்பட இவ்வழியாலே யாஶ்வசிப்பித்துப் பின்னை யவனைக்கொடுவந்து காட்டுவதாகக்காணும் ” என்றருளிச்செய்தார், ( மணியிலித்யாதி ) சௌந்தர்யசீலாதிகளிலே யாயிற்றிவள் மோஹித்தது, நீங்களும் சௌந்தர்யசீலாதிகளிலே தோற்றிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களுடைய பாதரேணுவைக்கொண்டு பரிஹரிக்கப்பாருங்கோள். பொடிபடத்தீரும்.

( மற்றித்யாதி ) இதல்லது பரிஹாரமில்லாதபடியான வைலக்ஷண்யத்தையுடைய இவளுக்கித்தையே பரிஹாரமாகப் பண்ணப்பாருங்கோள்.........................................................................*

## ஜீயர் அரும்பதம்.

ஆறும்பாட்டு. ( தணியுமித்யாதி ) “ மாயன்றமரடிநீறுகொண்டு ” இத்யாதியைக்கடாக்ஷித்தவதாரிகை ( இப்பெருநேர்த்தியித்யாதி ) ( தவளப்பொடியென்றுசொன்னதின்னதென்று விசேஷித்து-இப்பெருநேர்த்தியெல்லாம்வேண்டா-அத்தைச்செய்ய வுத்யோகிக்கவே இவள்நோய்தீரும் ) என்றந்வயிப்பது. “ நீரிட்டிடுமின் ” என்கிறபெருநேர்த்தியெல்லாம் வேண்டாவென்றபடி.

தணியும்பொழுதில்லை - இல்லையாம்படி. இன்றிக்கேயென்றபடி. தணியும்பொழுது-தவிருவதொருபொழுது. தணியாதேயாடுகிற தெதுக்கென்ன ( நிஷேதிப்பாரித்யாதி )

பிணி-வ்யாதி. ( காரணநுவ்ருத்தி ) ரோகசமநார்த்தமாகச் செய்கிறவாட்டம் தத்காரணமா யநுவர்த்திக்கிறதாகையாலேயென்றபடி. பெருகுமிதுவல்லால்-பெருகுமதொழிய.

"மணியில்" என்றபஞ்சமி-உபமார்த்தேயாய், மணிபோலென்றபடி. "எல்லைநீக்கமேதுவமை" என்றுபமார்த்தே பஞ்சமி தமிழுக்குள்ளதொன்று; எல்லை-ஆக்ராமமென்றது; நீக்கம்-வ்யுக்ஷாத்பர்ணம் பதநியென்றது; ஏது-ஹேது. தூமவத்த்வாத் என்றது; உவமை-மணியிலென்றது. முயலுகைபோருமோவென்ன (விசிஷ்டகுலத்திலித்யாதி) யத்வா, கீழ் "நீரிட்டிடும்" என்றுவைத்து, இங்கே "அணியமுயலில்" என்றால் வ்யாஹதமன்றோவென்ன (விசிஷ்டகுலத்திலித்யாதி) என்னுதல். "முயலில்நோய்தீரும்" என்கையாலே-அதினுடையபரமபாவநத்வம் பலிதமென்றுவிவக்ஷித்து, அதுக்குப்ரமாணம் (தொண்டரடியித்யாதி) பெருமாள்திருமொழி யிரண்டாந்திருமொழி யிரண்டாம்பாட்டு, "தோடுலா" இத்யாதி. ஸ்ரீவைஷ்ணவர்களுடைய பாதரேணுக்களிலே யவகாஹிக்கப்பெறில், கங்காஜலத்திலேபுக் கவகாஹிக்கவேணுமென்கிற வாசையாலென்ன ப்ரயோஜநமுண்டென்றபடி. தேவதாந்தரஸ்பர்ஶத்தை நேராகவிடச்சொல்லி, இத்தை யுத்யோகிக்கச்சொன்னதால் பலிதத்தையருளிச்செய்கிறார் (ஆநுகூல்யஸ்யேத்யாதி) தேவதாந்தர ஸ்பர்ஶத்தால் வந்தவசுத்திக்கு பாகவதபாதரேணு பரிஹாரமென்றதுக் காப்தசம்வாதம் (வண்டருமித்யாதி) அணையன்-ராஜா. ஏதத்விவரணம் (அகளங்கேத்யாதி) அமணன்பாழி-ஜைநதேவாலயம். "மாயன்றமரடி நீறுகொண்டணியமுயலில்-தணியும்" என்றுகீழேகூட்டுவது. தேவதாந்தரஸ்பர்ஶத்தால்வந்தவசுத்திக்கு பரிஹாரமாமளவன்றிக்கே, முதற்பாட்டில்சொன்ன பகவத்விஶ்லேஷத்தால் வந்தநோய்க்கு மிதுவேபரிஹாரமென்னுமத்தை ஐதிஹ்யமுகத்தாலே தர்ஶிப்பிக்கிறார் (திருக்கொட்டாரத்தினித்யாதி) ஆக, இவ்விரண்டுபாட்டாலும்-பாகவதபாதரேணு, தேவதாந்தரபருடைய ஸ்பர்ஶத்தால்வந்த வசுத்திக்கும், பகவத்விஶ்லேஷத்தால்வந்த நோய்க்கும் சாமகமென்றதாயிற்று. ஒருகலஹத்திலே திருக்கொட்டாரத்தினருகே கைநிரைகட்டிக்கொண்டிருக்கிறநாளிலே யென்றபடி. கைநிரை-நிரைச்சல். இத்திருவாய்மொழியிலே-தேவதாந்தர ததியஸ்பர்ஶத்தாலும், பகவத்விரஹத்தாலுமாக நோவுத்விவிதமாகையாலே, அதில் பகவத்விரஹ வ்யசநத்துக்கிது பரிஹாரமாம்படியென்னென்று-சங்காவாக்யம். மோர்க்குழம்பிலும் சுக்குஶ்லாக்யமா யாஶ்வாசகரமா யிருக்குமாபோலே, பகவானிலும் பாகவதர்களத்யந்தோத்க்ருஷ்டராகையாலே முற்படவவர்களையிட்டு பரிஹரித்து, பின்பு * வண்டுவரா பதிமன்னனைக்கொண்டு பரிஹரிக்கிறதென்று தாத்பர்யம். ஆக, இத்தால்-தேவதாந்தரஸ்பர்ஶததீய ஸ்பர்ஶபகவத்விஶ்லேஷ வ்யசநங்களாகிற மூன்றுக்கும் பாகவதபாதரேணு, பரிஹாரமென்றதாயிற்று. "மணியிலணிநிறம்" என்று விசேஷித்ததுக்குபாவம் (ஸௌந்தர்யேத்யாதி) சாடு (பொடிபடத்திருமென்று) ஸ்ரீபாததூளிபடவென்று ஸ்வபாவார்த்தம், தூளியாய்ப்போமென்று சாடுவுக்கர்த்தம்.

அணங்கு-தெய்வப்பெண்.

அன்னைமீர்-தணியும்பொழுதில்லை நீரணங்காடுதிர், பெருகுமிதுவல்லால்-பிணியுமொழிகின்றதில்லை, மணியிலென்றுதொடங்கி, முயலில்-பிணியும் - தணியும், இவ்வணங்குக்கு-மற்றில்லை கண்டீரித்யந்வய:. மற்றில்லைகண்டீர்-இத்தோடொத்த வேறொருபரிஹாரமில்லை காணுங்கோளென்று சப்தார்த்தம். "ஆநுகூல்யஸ்ய ஸங்கல்ப: ப்ராதிகூல்யஸ்ய வர்ஜநம் । ரக்ஷிஷ்யதீதி விஶ்வாஸோ கோப்த்ருத்வவரணம் ததா" (ஆநுகூல்யஸ்யஸங்கல்ப: ப்ராதிகூல்யஸ்யவர்ஜநம்। ரக்ஷிஷ்யதீதிவிஶ்வாஸோ கோப்த்ருத்வவரணந்ததா) இத்யாதிபகவச்சாஸ்த்ரே...*

# ஏழாம்பாட்டு.

அணங்குக்கருமருந்தென்றங்கோராடுங்கள்ளும்பராய்ச்
சுணங்கையெறிந்துநுந்தோள்குலைக்கப்படுமன்னைமீ
ருணங்கல்கெடக்கழுதையுதடாட்டங்கண்டென்பயன்
வணங்கிர்கண்மாயப்பிரான்றமர்வேதம்வல்லாரையே.

## ஆறாயிரப்படி.

( அணங்குக்கு ) இவள்தளராநிற்க, இவளுக்கருமருந்தென்றங் கோ ராடுங்கள்ளும்பராய்ச் சிலவசங்கதங்களைப்பண்ணிறு லுங்களுக்கெ ன்ன ப்ரயோஜநமுண்டு. ஆனபின்பு, இவளுடைய நோயெல்லாந்தீரும் படி வேதவிதக்ரேசரரான ஸ்ரீவைஷ்ணவர்களைச்சென் றாஸ்ரயியுங்கோ ளென்கிறாள்......... ..............................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இவள்சத்தையழியும்படி தேவதாந்தரவிஷய ப்ரவ்ருத்திபண் ணினால் ப்ரயோஜநமில்லை. ஆஸ்சர்யபூதனான சர்வேஸ்வரனுக்கு சேஷபூதரான வைதிகாக்ரேசரரை யாஸ்ரயியுங்கோ ளென்கிறாள்.

அன்னைமீர்-அன்னைமீர். உங்கள்பக்வதைபாராதே, அணங்குக்கு - திவ்யை யானபெண்பிள்ளைக்கு. அரு-பெறுதற்கரிய. மருந்து-மருந்து. என்று-என்றுநினைத் து. அங்கு-அந்தேவதாந்தரவிஷயமாக. ஓர்-நிஷித்தமான. ஆடும்-ஆடுறுக்கவும். கள்ளும்-மதுநிவேதிக்கவும். பராய்-ப்ரார்த்தித்து. அத்தேவதாவேசத்தாலே உடம் பு, சுணங்கை-மயிர்க்கோள். எறிந்து-எறிந்து. நும்-உங்கள். தோள்-தோள்கள். கு லைக்க-அசைத்தாட. படும்-படாநின்றது. உணங்கல்-உணங்குகிறநெல்லு. கெட-கெ ட. கழுதை-அறுதின்கிறகழுதையினுடைய. உதடாட்டம்-உதடாட்டத்தை. கண்டு- கண்டு. என்-என்ன. பயன்-ப்ரயோஜநமுண்டு. அதுபோலே இவள்சத்தையழிய தேவதாந்தரவிஷய வ்யாபாரத்தால்ப்ரயோஜநமில்லை. ஆனாலென்செய்யப்பெறு மென்னில், மாயம்-ஆஸ்சர்யகுணசேஷ்டிதங்களை. பிரான் - இவளுக்குபகரித்தநுப விப்பித்தவனுடைய. தமர்-அடியாராய். வேதம்வல்லாரை - வைதிகாக்ரேசரரான பாகவதரை. வணங்கீர்கள்-வணங்கும்படிபாருங்கோள்.

சுணங்கை-மயிர்க்கோள். துணங்கையென்றுபாடமாய்-துணங்கை யென்ற கூத்தாகவுமாம். “ சுணங்கையாலேயெறிந்து ” என்றுஞ்சொல்லுவர்............*

## ஈடு - ஏழாம்பாட்டு.

இதரதேவதைகளை யாஸ்ரயித்தாலிவளுடைய விநாசமேபலித்து விடும், இவள்பிழைக்கவேண்டி யிருந்தீர்களாகில் ஸ்ரீவைஷ்ணவர்களை யாஸ்ரயியுங்கோ ளென்கிறாள்.

(அணங்குக்கருமருந்தென்று) அணங்கென்று-தெய்வப்பெண். "சூருமணங்குந்தெய்வப்பெண்பெயர்" என்னக்கடவதிறே. அப்ராக்ருத ஸ்வபாவையான விவளுக்குத்தகுதியான பெறுதற்கரியமருந்தென்று. இவள்வைலக்ஷண்யமு மறிந்திலிகோள், செய்கிறதின் தண்மையுமறிந்திலிகோள். (அங்கோராடும்கள்ளும்பராய்) நிஷித்தத்ரவ்யங்களை ப்ரார்த்தித்து. பராய்-பராவி ப்ரார்த்தித்து. (சுணங்கையெறிந்து) சுணங்கையென்று - ஒருந்ருத்தவிசேஷம். எறிதல்-இடுதல். ஆடலிட்டென்றபடி. சுணங்கைக்கூத்தென்று- கைதட்டியாடுவ தொருகூத்துண்டு, அத்தைச்சொல்லிற்றுதல்; மஞ்சள்பொடியைக் கையிலேபிடித்து ஒருவர்க்கொருவ ரெறிந்தாடுவதொன்றுண்டு, அத்தைச்சொல்லிற்றுதல். (நுந்தோளித்யாதி) பகவத்விஷயத்தில்பண்ணின அஞ்சலிமாத்ரமும் "சரண்யன் நீர்மையாலேமிகை" என்றிருக்கக்கடவநீங்கள் படுமெளிவரவேயிது. "தொழுது-எழுதுமென்னுமிதுமிகை" என்றிறே யிவர்களிருப்பது. (உணங்கலித்யாதி) ஜீவநசாதநமான வ்ரீஹியானது நசித்துப்போம்படிக்கிடாக, அத்தைத்தின்கிற கழுதையினுடைய வுதட்டின்வ்யாபாரங் கண்டிருந்தாலென்ன ப்ரயோஜநமுண்டு; அப்படியே இவளைக்கொண்டுஜீவிக்கவிருக்கிறநீங்கள் இவள்விநாசத்தை பலிப்பிப்பதான தேவதாந்தரஸ்பர்ஶமுடையார் வ்யாபாரம்கண்டிருக்கிற வித்தாலென்னப்ரயோஜநமுண்டு. ப்ரயோஜநமில்லாமையேயன்று, விநாசமேபலிப்பது. அன்றிக்கே, ஐயன்திருக்குருகைப் பெருமாளரையர் நிர்வஹிக்கும்படி - "உணங்கல்கெட-இவளுடைய வுணங்குதல்கெட. இவளிளைப்புத்தீர. கழுதென்றது-பேய். கழுதை-பேயை. உதடாட்டம் கண்டென்பயன்-நீங்களாடும் கள்ளும் ப்ரார்த்தித்துக்கொடுக்க, அத்தையது விநியோகம்கொள்ளும்போது அதினுடைய வுதடாடுகிறத்தைக் கண்டிருக்கிறத்தாலென்ன ப்ரயோஜநமுண்டு" என்று. "கழுது பேயும் பரணும்" என்றுனிறே.

இதில்ப்ரயோஜநமில்லையாகில், ப்ரயோஜநவத்தா யிருக்குமத்தைச் சொல்லாயென்ன (வணங்கிர்கள்) அவர்கள்திருவடிகளிலே விழப்பாருங்கோள். அவர்களென்கிற தாரையென்ன (மாயப்பிரானித்யாதி) குணசேஷ்டிதங்களா லாஶ்சர்யபூதனானவனுடைய குணங்களிலே யீடுபட்டிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களை. "வெடெஶ்ச ஸவைரஹமெவவெ்வெ்யஃ" (வேதைஶ்சஸர்வைரஹமேவவேத்ய꞉) என்றும், "ஸவ்வெ வெ்ாயடெ்ர கஂஹவ்ஂதி" (ஸர்வேவேதாயத்ரைகம்பவந்தி) என்றும், "நதாஸ்ஸஸவ்வவஸாஂவ்ரதிஷ்டாயத்ரஶாஶ்வதீ" (நதாஸ்ஸ்மஸர்வவசஸாம் ப்ரதிஷ்டாயத்ரஶாஶ்வதீ) என்றும்சொல்லுகிறபடியே வேததாத்பர்யம் கைப்பட்டிருக்குமவர்களை. (வேதம்வல்லாரையே) என்கிற இவ்விசேஷணத்துக்குக் கருத்தென்னென்னில்; தேவதாந்தரஸ்பர்ஶ

முடையார்புகுந்து சிக்ஷிக்கிறதுக்கு பரிஹாரமிறே யிவள்சொல்லவி ழிந்தது ; அதில், " அவனையொழிந்ததொரு தேவதைக்குத்தனித்தோ ருயிர்ப்பில்லை, அவனே யுத்தேஶ்யம் " என்றிருக்கு மவர்கள்காலிலே வி ழுங்கோளென்கை. " தேவதைகள்தோறும்தனித்தனியேகார்யமுண்டு" என்றிராதே, " சகலசப்தங்களுமேகார்த்தவாசகம் " என்றிருக்குமவர்க ளை யாஶ்ரயிக்கப்பாருங்கோள்... ..........................................*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு. ( அணங்குக்கித்யாதி ) " கழுதையுதடாட்டங்கண்டென்ப யன், மாயப்பிரான்றமர் வேதம்வல்லாரை-வணங்கீர்கள் " என்றத்லைதக்கடாக்ஷித் தவதாரிகை ( இதரதேவதைகளையித்யாதி ) " என்பயன் " என்றபதத்தைக்கடா க்ஷித்து-அவதாரிகையிலே, ( விநாசமேபலித்துவிடுமென்றது )

" அணங்கு " என்றால்-தெய்வப்பெண்ணைச் சொல்லுமோவென்ன ( சூரு மித்யாதி ) சப்தார்த்தம் ( அப்ராக்ருதேத்யாதி ) இப்பதத்தை ப்ரயோகிக்கிறவ ருடைய ஹார்த்தபாவம் ( இவளித்யாதி )

" ந்ருத்தவிஶேஷம் " என்றதின்விவரணம் ( சுணங்கைக்கூத்தித்யாதி ) த்விதீயார்த்தமாதல். த்ரிதீயார்த்தம் ( மஞ்சட்பொடியித்யாதி ) இவ்வர்த்தத்தில், சுணமென்று-சூர்ணமாய், மஞ்சட்பொடியென்றபடி. சுணங்கையெறிந்து-சூர்ண த்தைக் கையிலேபிடித்தெறிந்து. " நும் " என்றதுக்குவாசனை ( பகவத்விஷயத்தி லித்யாதி ) எளிவரவு-ஹீநதை அஞ்சலிமாத்ரமும் மிகையென்றிருப்பார்களோவெ ன்ன ( தொழுதெழுதுமித்யாதி ) தொழுது உஜ்ஜீவிப்போமென்னுமிது அதிக மித்யர்த்தஃ.

ஒன்றேயோபரிஹாரம், நாங்களுமிந்த பரிஹாரத்தைச்செய்து பார்க்கிறோ மென்ன ( உணங்கலித்யாதி ) உணங்கல்-புழுங்கல். ப்ரக்ருதத்திலேயேதென்ன ( அப்படியேயித்யாதி ) த்விதீயார்த்தத்திலே, அசரீரங்களானவை யுதடாட்டுகை யாவது-அவற்றையொருவன்பக்கலிலே யாவேசிப்பித்து பக்ஷபங்களையிட்டு அதி னுடைய வோஷ்டஸ்புரணம்கண்டென் பயனென்றபடி. " கழுது " என்று - பேயைச்சொல்லுமோவென்ன ; நிகண்டு ( கழுதித்யாதி )

கீழே, " மாயன்றமர் " என்கையாலே, ததநுகுணமாகபாவம் ( அவர்களி த்யாதி ) (வேதைஶ்சஸர்வைரித்யாதி) கீதாஶ்லோகபஞ்சதஶே. "𑌶𑌤𑌂 𑌶𑍁𑌕𑍍𑌰𑌾𑌣𑌿 𑌯𑌤𑍍𑌰𑍈𑌕𑌂 𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 । 𑌸𑌰𑍍𑌵𑍇 𑌵𑍇𑌦𑌾 𑌯𑌤𑍍𑌰𑍈𑌕𑌂 𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 । 𑌸𑌰𑍍𑌵𑍇 𑌹𑍋𑌤𑌾𑌰𑍋 𑌯𑌤𑍍𑌰𑍈𑌕𑌂 𑌭𑌵𑌨𑍍𑌤𑌿" ( ஶதம்ஶுக்ராணியத்ரைகம்பவந்தி।ஸர்வேவேதா யத்ரைகம்பவந்தி।ஸர்வேஹோதாரோயத்ரைகம்பவந்தி ) இதிதைத்திரீயகே. யத்ர சுக்ராணி சதமேகம்பவந்தி-பரிசுத்தங்களாயிருக்கிற நூறுகள்யாதொரு சர்வேஶ் வரனிடத்திலே ஏகீபவித்திருக்கிறது. " 𑌨𑌤𑌾𑌸𑍍𑌸𑍍𑌮 𑌸𑌰𑍍𑌵𑌵𑌚𑌸𑌾𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌾 𑌯𑌤𑍍𑌰 𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑍀 । 𑌤𑌮𑌾𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑌮𑌶𑍇𑌷𑌸𑍍𑌯 𑌜𑌗𑌤𑌃 𑌪𑌰𑌮𑌂 𑌪𑍍𑌰𑌭𑍁𑌮𑍍" ( நதாஸ்ஸ்ம ஸர்வவசஸாம் ப்ரதிஷ்டாயத்ரஶாஶ்வதீ । தமாத்யந்தமஶேஷஸ்ய ஜகதஃபரமம் ப்ரபும் ) இதிப்ரதமேம்ஶேசதுர்த்தஶே. வேததாத்பர்யமென்றது-தாத்பர்யபூதனு

ன சர்வேஸ்வரனென்றபடி. உயிர்ப்பு-ப்ராணநம். "தமர், வேதம்வல்லார்" என்கிற விரண்டுபதங்களையும்பற்ற (அவனையித்யாதி வாக்யத்வயமும்) சகலசப்தங்களு மேகார்த்த வாசகங்களாகையாலே, அவனையொழிந்ததொரு தேவதைக்குத்தனிந் துயிர்ப்பில்லை யென்றிருக்கு மவர்களென்றபடி.

க்ரமேணாந்வய:......................................................*

## எட்டாம்பாட்டு.

வேதம்வல்லார்களைக்கொண்டுவிண்ணோர்பெருமான்றிருப்
பாதம்பணிந்திவணோயிதுதீர்த்துக்கொள்ளாதுபோ
யேதம்பறைந்தல்லசெய்துகள்ளூடுகலாய்த்தூய்க்
கிதமுழவிட்டுநீரணங்காடுதல்கீழ்மையே.

### ஆறாயிரப்படி.

(வேதம்) ஸ்ரீவைஷ்ணவர்களை யாஸ்ரயித்தல், ஸ்ரீவைஷ்ணவர்களை புருஷகாரமாகக்கொண்டு எம்பெருமானை யாஸ்ரயித்தல்செய்து இவள்நோயிது தீர்த்துக்கொள்ளாதுபோய், அவாச்யங்களைச்சொல்லி அக்ருத்யங்களைச்செய்து கள்ளூடுகலாய்த் தூய்க்கிதமுழவிட்டு நீரணங்காடும் அது சாலத்தண்ணிய தென்கிறாள்..........................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், பாகவதபுருஷகார பூர்வகமாக ஸூரிசேவ்யன் திருவடிகளை யாஸ்ரயித்து இவள்நோயை பரிஹரியாதே, இதரதேவதா ப்ரீணநமான வணங்காடலுங்களுக்குக் கீழ்மையென்கிறாள்.

வேதம்வல்லார்களை - சகலவேததாத்பர்ய நிர்வாஹக்ஷமரானபாகவதரை. கொண்டு-புருஷகாரமாகக்கொண்டு. விண்ணோர்பெருமான்-நித்யஸூரிசேவ்யனான சர்வேஸ்வரனுடைய. திரு-நிரதிசயபோக்யமான. பாதம்-திருவடிகளை. பணிந்து-ஆஸ்ரயித்து. இவள்-அத்யந்தவிலக்ஷணையானவிவளுடைய. இது-லோகவ்யாவ்ருத்தமான. நோய்-இந்நோயை. தீர்த்துக்கொள்ளாது-சமிப்பித்துக்கொள்ளாதே. போய்-இதரதேவதாபரராய்க்கொண்டுகைகழியப்போய். ஏதம்-ஸ்வரூபஹாநிகரமான இதரதேவதாபரசப்தங்களை. பறைந்து-சொல்லி. அல்ல-அகர்த்தவ்யங்களானதத்வ்ருத்திகளை. செய்து-பண்ணி. ஊடு-நடுவேநடுவே. ஆராதநோபகரணங்களோடே, கள்-சுரையை. கலாய்-கலசி. தூய்-தூவி. கிதம்-தரியமானகீதங்களுக்கீடாக. முழ விட்டு-வாத்யகோஷத்தைப்பண்ணி. நீர்-இவளோடநுபந்தமுடையநீங்கள். அணங்கு - தைவாவிஷ்டைகளாய். ஆடுதல்-ஆடுகிறது. கீழ்மையே - இக்குடிக்கு இழுக்கேயாம்.............................................*

## ஈடு - எட்டாம்பாட்டு.

ஸ்ரீவைஷ்ணவர்களை புருஷகாரமாகக்கொண்டு சர்வேஸ்வரன்திருவடிகளிலே சரணம்புக்கு இவளுடைய நோயைத்தீர்த்துக்கொள்ளுகைதவிர்ந்து, க்ஷுத்ரதேவதா சமாஸ்ரயணமுங்களுக்குக் கீழ்மையைவிளைக்குமென்கிறாள்.

( வேதம்வல்லார்களைக்கொண்டு ) “ சர்வேஸ்வரனே ப்ராப்யமும் ப்ராபகமும் ” என்கிற வேததாத்பர்யம் கைப்பட்டவர்களைக்கொண்டு. “ வேறாகவேத்திருப்பாரை வெல்லுமே மற்றவரைச்சாத்தி யிருப்பார் தவம் ” என்கிறபடியே, அவர்கள்காலிலேவிழப்பெறில் ஆஸந்நமாக நோவுபரிஹ்ருதமாம். அதுகூடாதிறே, ஸஜாதீய ப்ரதிபத்திபண்ணி யிருக்கையாலே ருசிவிஸ்வாசங்க ளவர்கள்பக்கல் கனக்கப்பிறவாதிறே ; ஆனபின்பு, அவர்களை புருஷகாரமாகக்கொண்டு அவனையாஸ்ரயிக்கப்பாருங்கோள். இங்கிருக்கும்நாளைக்கு புருஷகாரமாக முமுக்ஷுக்களுண்டு, அங்குத்தானே நித்யஸூரிகளுண்டிறே. “ ஸஹநாநுஜ்ஞாதஹமயதி ” ( ஸஹநாம்ப்ரஹ்மகமயதி ) என்று-அவர்கள்கோடு புக்கிருத்தவிறே அவ்வோலக்கத்திலிருப்பது. வேததாத்பர்யம் கைப்பட்டிருக்கு மவர்களைக்கொண்டு. ( விண்ணோர்பெருமான் திருப்பாதம்பணிந்து ) * அயர்வறுமமரர்க ளதிபதி திருவடிகளிலேபணிந்து. ( இவள்நோயிது தீர்த்துக்கொள்ளாது ) நோய்கொள்ளுகிறாளிவள், நோய்தானிது ; இதுக்கீடான பரிஹாரத்தைப்பண்ணாதே. ( போய் ) நம்முடையநிலைக் கதிதூரமாய் அப்ராப்தமானதிலே கைகழியப்போய். ( ஏதம்பறைந்து ) உங்களுக்குக் குற்றமானவற்றை நீங்கள்சொல்லி. ( அல்லசெய்து ) செய்யக்கடவதல்லாதத்தைச்செய்து. ( கள்ளூடுகலாய்த்தூய் ) நிஷித்தத்ரவ்யங்களைக்கொண்டு க்ருஹமெங்கும் கலந்துதூஷித்து. நிஷித்தத்ரவ்யத்தை ஸ்பர்ஸித்தவோபாதியாயிற்று தேவதாந்தரஸ்பர்ஸமும். விண்ணோர்பெருமான் திருப்பாதம்பணிந்திவள் நோயிதுதீர்த்துக்கொள்ளாது என்கையாலே-அவனைக்கொண்டு பெறப்பாராதே, அவனுக்குப்புறம்புமா யஹங்காரமமகாரகர்ப்பமானக்ரியாகலாபங்களாலேபெறப்பார்க்கையு மத்தோபாதியாயிற்று. அறமேலாயிருக்கும்மருந்திறே இவள்சொல்லிற்று, அத்தையிறே யிவர்களுதாசித்துநிற்கிறது. ( சிதமித்யாதி ) நிஷித்தமான சிதந்தோடேகூடின வாத்யங்களை ப்ரவர்த்திப்பித்து. ( சீரித்யாதி ) பகவத்குணாநுபவத்தாலே, “ உண்டுகளித்தேற்கும்பரென்குறை ” என்னக்கடவநீங்கள் தைவாவிஷ்டராய்க்கொண்டாடுவது. ( கீழ்மையே ) சாலத்தண்ணிது. உங்களளவில் போமதல்ல, உங்கள் சந்தாநத்துக்கும் கொத்தை. ஊடு-உள்ளே. கலாய்-கலந்து. தூய்-தூவி.................................................*

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு. (வேதம்வல்லார்களையித்யாதி) "வேதம்வல்லார்களை" என்றுதொடங்கி, "தீர்த்துக்கொள்ளாது, நீரணங்காடுதல்கீழ்மை" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை (ஸ்ரீவைஷ்ணவர்களையித்யாதி) கீழ்மையை-நீசதையை.

கீழே, "வேதம்வல்லாரை-வணங்கீர்கள்" என்றுவைத்து, இங்கே-அவர்களை புருஷகாரமாகக் கொண்டென்கிறதென்னென்ன (வேருகவித்யாதி) இந்தநிஷ்டையையுண்டானல் சீக்ரமேபலிக்கும், இதுகூடாதே புருஷகாரமாகவானுலும் பற்றுங்கோளென்று பாவம். (வேருகவித்யாதி) ஸ்ரீநரசிம்ஹத்தை வ்யாவ்ருத்தமாக வேத்தியிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களை ஜயிக்குமே, அந்தஸ்ரீவைஷ்ணவர்களைத் தங்களுக்கபாஶ்ரயமாகப்பற்றி யங்கே ந்யஸ்தபரராயிருக்கும் சரமாதிகாரிகளுடைய விவ்வபிமாநநிஷ்டைக்கடியான பகவத்விஷயீகாரமாகிற தபஸ்ஸென்று பாசுரார்த்தம். வேருக-அநந்யப்ரயோஜநமாக. ஆஸந்நமாக-சீக்ரமாக. அது-வைஷ்ணவஸமாஶ்ரயணம். விவரணம் (ஸஜாதீயேத்யாதி) வேதம்வல்லார்களைக்கொண்டு ஸர்வேஶ்வரன் திருப்பாதமென்னுதே, "விண்ணோர்பெருமான்" என்று-நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகனென்கிறுரிறே, அவர்களும் புருஷகாரபூதரென்னுமிடந்தோற்ற; இவர்களிருவரும் புருஷீகரிப்பது முமுக்ஷுத்வாவஸ்த்தையிலும் முக்தாவஸ்த்தையிலுமென்கிருர் (இங்கிருக்குமித்யாதி வாக்யத்வயத்தாலே) அப்படியவர்கள்தான் புருஷீகரிப்பர்களோவென்ன (ஸஏநாநித்யாதி) இதுக்கர்த்தம் (அவர்களித்யாதி) ஸ8-அமாநவ꞉. அமாநவனைச்சொன்னது-நித்யஸூரிகளுக்கு முபலக்ஷணமென்றுகருத்து. "முடியுடைவானவர் முறைமுறையெதிர்கொள்ள" என்னக்கடவதிறே. கொடுபுக்கிருத்த-கொடுபோய்வைக்க. சப்தார்த்தம் (வேதேத்யாதி)

உங்களுக்குக் குற்றமானவற்றை நீங்கள்சொல்லியென்றது-ஸ்வரூபஹாநிகரமான இதரதேவதா பரசப்தங்களைச் சொல்லியென்றபடி. தூய்-தூவி. தெளித்து. ஆழ்வார்சமீபத்திலே நிஷித்தத்ரவ்யாகமந ப்ரஸக்தியேதென்ன (நிஷித்தத்ரவ்யத்தையித்யாதி) "அல்லசெய்து" என்றதுக்கு முந்தினவர்த்தம்-தேவதாந்தராநுவர்த்தநம்; இரண்டாமர்த்தம்-கர்மகலாபபரம். தேவதாந்தரஸ்பர்ஶம் த்யாஜ்யமென்ற ப்ரஸங்கத்திலே-உபாயாந்தர ஸ்பர்ஶமும் த்யாஜ்யமென்று விவக்ஷித்து, சப்தநிர்வாஹங்காட்டுகிருர் (விண்ணோரித்யாதி) இத்தால்-தேவதாந்தரங்களுடைய த்யாஜ்யதையும், ததாராதநத்தினுடைய த்யாஜ்யதையும்சொல்லி; "இத்தைவிட்டு, ஶ்ரேஷ்ட்டமாயிருப்பதொன்றைப் பற்றுங்கோள்" என்னுமிடத்தில், காம்யகர்மமாதல் தேவதாந்தர்யாமித்வமாதல் உத்தேஶ்யமாகச் சொல்லுகையன்றிக்கே, "விண்ணோர்பெருமான் றிருப்பாதம்பணிந்து" என்று-அசாதாரணவிக்ரஹ விசிஷ்டனுன சர்வேஶ்வரனையே யுபாயோபேயமாக ஸ்வீகரியுங்கோளென்கையாலே; நிஷ்க்ருஷ்டவேஷத்தையுடைய வதிகாரிகளுக்கு ஸித்தோபாயவ்யதிரிக்தங்களான வுபாயாந்தரதேவதாந்தர்யாமித்வங்களெல்லாம். கீழ்ச்சொன்னக்ஷுத்ரதேவதைகளும் தத்சமாராதநமும்போலே யத்யந்தஹேயங்களாய் த்யாஜ்யங்களென்னுமிடம் ஸூசிதம். "விண்ணோர்பெருமான்" என்றதுக்குபாவம் (அறமேலாயித்யாதி) "நீதம்" என்றது-வாத்யத்துக்கு முபலக்ஷணம். அவதாரணுர்த்தம் (சாலத்தண்ணிதென்று) அதுக்குவிவரணம் (உங்களித்யாதி) "நிஷித்தத்ரவ்யங்களை" இத்யாதிவாக்யத்திலே சங்க்ருஹீதங்களான சப்தங்களுக்கர்த்தத்தை யருளி

ச்செய்கிறார் (ஊடித்யாதி) ஊடு-ஆராதநோபகரணங்களோடே, கள்கலாய்-கள் ளைக்கலந்து, தூய்-தூவி, தெளித்தென்று சப்தார்த்தம்.

க்ரமேணூர்வய:.......................................................*

# ஒன்பதாம்பாட்டு.

கீழ்மையினலங்கோர்கீழ்மகனிட்டமுழவின்கீழ்
நாழ்மைபலசொல்லிநீரணங்காடும்பொய்காண்கிலே
னேழ்மைப்பிறப்புக்கும்சேமமிந்நோய்க்குமீதேமருந்
தூழ்மையிற்கண்ணபிரான்கழல்வாழ்த்துமினுன்னித்தே.

## ஆருயிரப்படி.

(கீழ்மையினல்) கீழ்மையினலங்கோர் கீழ்மகனிட்டமுழவின்கீழ் நாழ்மைபலசொல்லி நீரணங்காடு மிந்த வ்யர்த்தப்ரவ்ருத்திகளா லொரு ப்ரயோஜநமுங்காண்கிறிலேன். இனிமெய்யாகப்பார்க்கில், எற்றைக்குமி வளுக்குரக்ஷை, இந்நோய்க்கு மிதுவேமருந்து, இத்தை நீங்கள் நிரூபித் துச்செய்யுங்கோள். அதேதென்னில்; கண்ணபிரான்கழல் வாழ்த்துமி னென்கிறாள்.......................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், நீங்கள் ஸ்வதந்த்ரமாகப்பண்ணுகிற நிஷ்ப்ரயோஜந ப்ரவ்ருத் திகள் காணமாட்டுகிறிலேன்; இவள்நோய்சமிக்கைக்கு, சுலபனான க்ருஷ்ணன்றி ருவடிகளிலே மங்களாசாசநம்பண்ணுங்கோளென்கிறாள்.

கீழ்மையினல்-அநிரூபணமடியாகவந்த நிகர்ஷத்தாலே. அங்கோர்-"இன்ன விடத்திலான், இன்னான்" என்று சொல்லவொண்ணாத. கீழ்மகன் - நீசன். இட்ட- ப்ரவர்த்திப்பித்த. முழவின்கீழ்-வாத்யாநுவ்ருத்தியைப்பண்ணி. நாழ்மை-தேவதா ந்தரோத்கர்ஷங்களைமேனாணித்து. பல-பல்படியாக. சொல்லி-சொல்லி. நீர்-நீங்க ள். அணங்கு-தைவாவிஷ்டைகளாய். ஆடும்-ஆடுகிற. பொய்-நிரர்த்தகப்ரவ்ருத்தி. காண்கிலேன்-காணமாட்டுகிறிலேன். ஏழ்மை - "ஸத்வைஸத்வஸத்வ" (ஸப்த ஸப்தஸப்த) என்று ஏழுவகையால் வரக்கடவ. பிறப்புக்கும் - சகலஜந்மங்க ளுக்கும். சேமம்-க்ஷேமரூபமாயிருந்துள்ள. ஈதே-இதுவே. இந்நோய்க்கும் - இந் நோய்க்கும். மருந்து-மருந்து. ஊழ்மையில்-ஸ்வரூபப்ராப்தமாய்ப் பழையதாய்ப் போருகிற ப்ரகாரத்தைத்தப்பாதபடி. கண்ணபிரான்-சௌலப்யத்தாலே யுபகார கனான க்ருஷ்ணனுடைய. கழல்-திருவடிகளை. உன்னித்து-அநுசந்தித்து. வாழ்த்து மின்-மங்களாசாசநம்பண்ணுங்கோள்.

நாழ்மை-தகுதியில்லாத மேனாணிப்பு. ஊழ்மை-பழமை. உன்னித்து-நினைத்து.*

ஈடு - ஒன்பதாம்பாட்டு.

நீங்கள்பண்ணுகிற நிஷ்பலப்ரவ்ருத்தி நான்காணமாட்டேன், க்ருஷ்ணன் திருவடிகளை நினைத்துவாழ்த்துங்கோ ளிவள்பிழைக்கவேண்டியிருந்திகோளாகிலென்கிறாள்.

(கீழ்மையினால்) உங்கள்தண்மையினாலே. இவர்களுக்குத்தண்மையாவது-ரஜஸ்தமஸ்ஸுக்களாலே அபிபூதராகை. ஆகையாலேயிறே யிக்காரியம்செய்கிறது. (அங்கோரித்யாதி) "இன்னவிடத்திலான், இன்னான்" என்னுசொல்லவொண்ணாத ஒருசண்டாளன் ப்ரவர்த்திப்பிக்கிற வாத்யத்தின்மேலேபுக்கிருந்து. (நாழ்மைபலசொல்லி) நாழ்மை - குற்றம் அவற்றுக்கில்லாதவேற்றங்களைப் பலவும்சொல்லி. "உண்டுமுமிழ்ந்தும் கடந்துமிடந்தும்" என்று - சர்வேஸ்வரனைச் சொல்லுமாபோலே, இவனின்னதுசெய்தான், இன்னதுசெய்தான்" என்றுசொல்லாநிற்பார்களிறே. நாழென்று - குற்றத்துக்கும், இல்லாததுசொல்லுகைக்கும், "நான்" என்றபிமானித்திருக்கைக்கும்பேர். (நீரித்யாதி) நீங்கள் தைவாவிஷ்டைகளாயாடுகிறவிப்பொய் என்கண்ணுக்கொரு வஸ்துவாய்த்தோற்றுகிறதில்லை. "...." (நேஹநாநாஸ்திகிஞ்சந) என்று, "அவனையொழிந்ததொரு தேவதைக்கு வஸ்துத்வமுண்டு" என்றிருக்கிறிறே யவர்கள்செய்கிறது "மெய்" என்றுதோற்றுவது.

நாங்கள்செய்கிறவை பொய்யாகில், நீசொல்லுகிறதுமெய்யாயெவ்வளவுபலிக்குமென்ன (ஏழ்மைப்பிறப்புக்கும்சேமம்) ஏழ்மை-ஒருநன்மையுண்டானால் அத்தையேழேழாகச்சொல்லக்கடவதிறே. எல்லாஜந்மங்களிலும்ரக்ஷையாம். ஏழ்மை - தண்மை. தண்ணிதானஜந்மமென்னவுமாம். நாங்கள் ஜந்மங்களில் ரக்ஷையாமதுவோதேடுகிறது, இவள்நோய்க்கு பரிஹாரமன்றோ; அத்தைச்சொல்லாதே மற்றொன்றைச்சொல்லுகிறதென்னென்ன; ஆகில், சம்பறுத்தார்கைக்குப்போகவேணுமோ. (இந்நோய்க்குமீதேமருந்து) அடிபற்றினமருந்தன்றோ. ஊழ்மையில் - முறையிலே. ஊழென்பது-முறை. நீங்கள்செய்கிறவைபோலன்றிக்கே முறையிலேசெய்ததாகவுமாம். (கண்ணபிரானித்யாதி) உபகாரகனான க்ருஷ்ணன்திருவடிகளை வாழ்த்தப்பாருங்கோள். அடிக்கழஞ்சுபெறும்மருந்திறே. அதுசெய்யுமிடத்தில் (உன்னித்து) "...." (ஸம்ருதோயச்சதிஸோபகம்) எல்லாருமொக்கவநுசந்தித்து வாழ்த்தப்பாருங்கோள். இப்படிசெய்யவே, எல்லாஜந்மங்களிலும் ரக்ஷகமாய் இவள்நோய்க்கும் பரிஹாரமாம்; ப்ராப்தம் செய்ததுமாகலாம்,..................*

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு (கீழ்மையினலித்யாதி) "பொய்" என்கிறத்தைப்பற்ற (நிஷ்பலப்ரவ்ருத்தியென்றது) "கண்ணபிரான்" இத்யாதியைக்கடாக்ஷித்து (க்ருஷ்ணன்றிருவடிகளையித்யாதி)

ஆகையாலே - ரஜஸ்தமோபிபூதராகையாலே. "ஓர்" என்றதுக்கு (இன்னவிடத்திலான் இன்னான் என்றுசொல்லவொண்ணாத) என்றுபாவம். "நாழ்மை" என்றதுக்கு - பொய்யென்றர்த்தாந்தரம் (அவற்றுக்கித்யாதி) முந்தினவர்த்தம், "நாழ்மை" என்று குற்றமாய், ஸ்வரூபவிருத்தங்களைச்சொல்லியென்றபடி. அதேதென்ன (உண்டுமுமிழ்ந்துமித்யாதி) இப்பதமிரண்டையுஞ்சொல்லுமோவென்ன (நாழென்றித்யாதி)

"பொய்" என்றதுக்கு - "நிஷ்பலப்ரவ்ருத்தி" என்றவதாரிகையிலே யருளிச்செய்தவர்த்தமொழிய இங்கே யர்த்தாந்தரங்கண்டுகொள்வது. தோற்றமைக்கு ஹேதுவேதென்ன (நேஹநாநாஸ்தீத்யாதி) "நேஹ நாநாஸ்தி கிஞ்சந" (நேஹநாநாஸ்திகிஞ்சந) இதிகடவல்லியாம். வஸ்துத்வம்-ஸ்வதந்த்ரவஸ்துத்வம்.

"ஏழ்மைப்பிறப்புக்கும்" என்றது - சர்வஜந்மங்களையுஞ் சொல்லுகிறதென்றுவிவக்ஷித்து, அதுகாட்டும்படி யெங்ஙனேயென்ன (ஒருநன்மையித்யாதி) ஆகையாலே (எல்லாஜந்மங்களிலும் ரக்ஷயாம்) என்றபடி.

அடிபற்றினமருந்தென்றது-திருவடிகளைப்பற்றின மருந்தென்று ஸ்வபாவார்த்தம், சாரமானமருந்தென்றுசாடு. ரூடமூலமென்றுமாம். அடிபற்றினமருந்தென்றது - "கழல்வாழ்த்துமின்" என்றத்தைப்பற்ற.

கீழ்ச்சொன்னவிரண்டோடே சமுச்சயம் (நீங்கள்செய்கிறவையித்யாதி) ஊழ்மையில் - ப்ராப்தியிலே.

இன்னமுமொருரசோக்தி (அடிக்கழஞ்சித்யாதி) அடிக்கழஞ்சென்றது - சித்தமாய், அவிளம்ப்யபலப்ரதமாய், ஸ்வரூபாநுரூபமாகையாலே ஶ்லாக்யமென்றபடி. ஸ்மரணம்போருமோவென்ன (ஸ்ம்ருதோயச்சதீத்யாதி) "ஆபந்நஸ்ய ஸ்மரணே கோஸ்யந்ம்ருதோ யச்சதி ஶோபநம்। பாபக்ஷயஶ்ச பவதி ஸ்மரதாந்தமஹர்நிஶம்" (ஆபாஸஸ்ஸ்மரணேகோஸ்யந்ம்ருதோயச்சதிஶோபநம் । பாபக்ஷயஶ்சபவதிஸ்மரதாந்தமஹர்நிஶம்) இதிப்ரதமேம்ஶே ஸப்ததஶே அஸுரபுத்ராந்ப்ரதிப்ரஹ்லாதஃ. "வாழ்த்துமின்" என்றபஹுவசநார்த்தம் (எல்லாருமித்யாதி) இப்படிசெய்யவே - உன்னித்துவாழ்த்தவே.

கீழ்மகன்-நீசன். முழவு-வாத்யம். அங்கோர் கீழ்மகனிட்ட - "இன்னவிடத்திலான், இன்னான்" என்றுசொல்லவொண்ணாத நீசன் ப்ரவர்த்திப்பித்தவென்றபடி. கீழ்மையினலித்யாரப்ய, காண்கிலேன், கண்ணபிரான்கழல்-உன்னித்து-வாழ்த்துமின், ஏழ்மைப்பிறப்புக்குஞ்சேமம், இந்நோய்க்குமீதேமருந்து, ஊழ்மையில் இத்யந்வய:.......................................................................*

# பத்தாம்பாட்டு.

உன்னித்துமற்றொருதெய்வந்தொழாளவனையல்லா
னும்மிச்சைசொல்லிநுந்தோள்குலைக்கப்படுமன்னைமீர்
மன்னப்படுமறைவாணனை வண்டுவராபதி
மன்னனையேத்துமினேத்துதலுந்தொழுதாடுமே.

## ஆறாயிரப்படி.

(உன்னித்து) இவளுக்கவனையல்லது மற்றொருதைவத்தைத்தொழுகை யசம்பாவிதமானாப்போலே, மற்றொருதைவத்தை ஸ்வப்நத்திலுங்கூட நினைக்கை அசம்பாவிதம். இப்படி தேவதாந்தரசம்பந்த கந்தமின்றியேயிருந்த விவளுடையநோய்தீர்க்கைக்கு, வேதபாஹ்யமான க்ஷுத்ரதைவத்தை, வ்யர்த்தமாய் விரோதியுமாயிருந்த வேதபஹிர்ப்பூதமார்க்கத்தாலே தொழுது துஃகப்படாதே, சாங்கசகலவேதவேத்யனா யாஶ்ரிதவாத்ஸல்யாத்யநவதிககல்யாணகுணகண மஹோததியாயிருந்த வண்டுவராபதி மன்னனையேத்துங்கோள்; ஏத்தவே யுஜ்ஜீவிக்குமென்கிறாள்.......*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், நித்யவேதப்ரதிபாத்யனான க்ருஷ்ணன்பக்கலிலே பாரமைகாந்த்யத்தை யுடையவிவள், நீங்களவனை ஸ்துதித்தபோதே யாஶ்வஸ்தையாமென்கிறாள்.

அவனையல்லால்-அவனையொழிய. இவள், மற்று-வேறு. ஒரு-ஒரு. தெய்வம்-தேவதையை. உன்னித்து-நினைத்து. தொழாள்-தொழும்படியல்லள். இப்படியிருக்க, அன்னைமீர்-பெற்றவர்களானநீங்களிவளளவிற்பரிவாலேகலங்கி. நும்-உங்கள். இச்சை-அபிமதங்களை. சொல்லி-சொல்லி. நும்-பகவத்பரிசர்யோபகரணங்களானஉங்கள். தோள்-தோள்கள். குலைக்க-தேவதாந்தரவிஷயமாகவ்யாபரிக்க. படும்-படாநின்றன. அத்தைத்தவிர்த்து, மன்ன-நித்யதயா. படும்-நெஞ்சிலேபடுவதான. மறை-வேதத்துக்கு. வாணனை-ப்ரதானதயாப்ரதிபாத்யனாய். ஆஶ்ரிதர்க்கு முகங்கொடுக்கைக்காக, வண்டுவராபதி-ஸ்ரீமத்வாரகைக்கு. மன்னனை-அதிபதியானக்ருஷ்ணனை. ஏத்துமின்-ஸ்தோத்ரம்பண்ணுங்கோள். ஏத்துதலும்-அந்தஸ்துதிசமகாலத்திலேப்ரபுத்தையாய். தொழுது-அவனைத்தொழுது. ஆடும்-ஸஸம்ப்ரமந்ருத்தம் பண்ணாநிற்கும் ......................................................*

## ஈடு-பத்தாம்பாட்டு.

இவளுக்குக்ருஷ்ணன் திருவடிகளிலுண்டான ஐகாந்த்யத்தை யநுசந்தித்து அவனையேத்துங்கோள், இவளுஜ்ஜீவிக்குமென்கிறாள்.

(உன்னித்துமற்றொருதெய்வந்தொழாளவனையல்லால்) இன்னார்க்கின்ன பரிஹாரமென்றில்லையோ, அதறிந்து பரிஹரிக்கவேண்டாவோ. முழங்கால்தகர, மூக்கிலே யிரச்சினை கட்டுமாபோலே யன்றோ நீங்கள் பண்ணுகிறபரிஹாரம். "தேவதாந்தர ஸ்பர்ஸமிவளுக்குப்பொறாது" என்றறியவேண்டாவோ. தன்னெஞ்சாலேமதித்து வேறொருதெய்வத்தைத் தொழுதறியாளிவள். "[Grantha]" (பால்யாத்ப்ரப்ருதிஸுஸ்நிக்த:) என்கிறபடியே, பிறைதொழும் பருவத்திலும் பிறைதொழுதறியாள். "மூலையோமுழுமுற்றும்போந்தில-பெருமான்மலையோ திருவேங்கடமென்று கற்கின்றவாசகம்-இவள்பரமே" என்று நீங்களாஸ்சர்யப் படும்படியன்றோ வப்பருவத்திலும்; இனியிப்போது பர்வதத்தைவிட்டுப் பதர்க்கூட்டைப்பற்றுமோ. [அநந்யதைவத்வம்] "வேறேயொரு ஆஸ்ரயதேவதையுண்டு, அதுரக்ஷிக்கிறது" என்றுநினைக்க விரகில்லைகிடீரெனக்கு. "[Grantha]" (ஸஹபத்ந்யா) என்று-பெரியபெருமாள்திருவடிகளிலிவர்புகும்போது மிவர்க்கெடுத்துக்கைநீட்டப்புகுமத்தனைபோக்கி, பெரியபெருமாள் தாமுத்தேஸ்யமாகப் புக்கறியேன். [Grantha] (இயம்க்ஷமாச) ராவணனுடையஜல்பங்களையும் ராக்ஷசிகளுடைய தர்ஜநபர்த்ஸநங்களையும் பொறுத்திருந்ததும் "அவரதொரு இன்சொல்கேட்கலாம்" என்றுகிடீர். [Grantha] (பூமௌசய்யா) இத்தரைக்கிடைகிடந்ததும் "[Grantha]" (தவாங்கேஸமுபாவிஸம்) என்கிறபடியே "அவர்மடியிலிருப்பொருகால்சித்திக்குமோ" என்னுமத்தாலேகிடீர். [Grantha] (நியமஸ்ச தர்மே) "ரக்ஷகத்வதர்மமவர்தலையிலே" என்னுமத்தாலேகிடீர் நானிருந்தது; "[Grantha]" (நத்வாகுர்மிதஸக்ரீவ பஸ்மபஸ்மார்ஹதேஜஸா) என்றதுமவரைப்பார்த்து. [Grantha] (பதிவ்ரதாத்வம்) "[Grantha]" (ஏதத்வ்ரதம் மம) என்றவருடைய வ்ரதமொழிய, "எனக்கு" என்னவொருசங்கல்பத்தையுண்டாக்கி இவற்றையழிக்க நினைத்திலேன்கிடீர். [Grantha] (விபலம்மமேதம்) தப்பாதவையும் தப்பிற்றின. ஆர்க்குப்போலேயென்னில் [Grantha] (மாநுஷாணாம்-க்ருதக்நேஷு-க்ருதமிவ) "[Grantha]" (ஆத்மாநம்மாநுஷம்மந்யே) என்றவர்க்குமுண்டிறேமனிச்சு; அவரையொழிந்தார்திறத்துச்செய்த வற்றோபாதியாய்விழுந்தது. தப்பாததுதப்பிற்று, அதுக்கடியென்னென்னில் [மமேதம்] அவர்பக்கல் குறையில்லை; அதுக்கிலக்கு நானாகையாலே. (நும்மிச்சைசொல்லி) உங்களுக்கிஷ்டமான வற்றைச்சொல்லி. அர்த்ததத்வத்தைப்பார்த்தாலு மிவளைப்பார்த்தாலும்

தேவதாந்தரஸ்பர்ஶம் பொறுதாயிருந்ததிறே, இனியுள்ளதுங்களுக்கு ப்ரதிபக்ஷங்களைச்சொல்லுகையாயிற்றிறே. ( நுந்தோள்குலைக்க ) இவற்றுக்கு விக்ருதராமவர்களேநீங்கள். துர்வ்ருத்தர்செய்வதை வ்ருத்தவான்கள் செய்வர்களோ. "தோளவனையல்லால்தொழா" என்றன்றோ நீங்கள் சொல்லுவது.

ஆனால்செய்யவடுப்பதென்னென்ன ( மன்னவித்யாதி ) வேதைக சமதிகம்யனானவனைப் பற்றப்பாருங்கோள். ஆகமாதிகளில் சொன்னவற்றைக்கொண்டோ பரிஹரிக்கப்பார்ப்பது. மன்னுகையாவது-அப்யாசமாய், அத்யயநவிதி ப்ராப்தமானத்தையாதல் ; அன்றிக்கே, நித்யத்வமாய், புருஷபுத்தி ப்ரபவமல்லாமையாலே விப்ரலம்பாதிதோஷ சம்பாவனையன்றிக்கே, பூர்வபூர்வோச்சாரணக்ரமத்திலே உத்தரோத்தரோச்சார்யமாணத்வத்தைப் பற்றச்சொல்லிற்றுதல். நித்யமான வேதப்ரதிபாத்யனாகையாலே வந்தவேற்றத்தை யுடையவனை. ( வண்டுவராபதிமன்னனை ) கேட்டார்வாய்க்கேட்டுப்போகாமே கண்ணாலேகண்டநுபவிக்கலாம்படிவந்தவதரித்தவனை. நீரிலேபுக்கழுந்தினாரை மூகத்திலேநீரைத்தெளித்து பரிஹரிக்குமாபோலே, * தேர்ப்பாகனார்க்கு மோஹித்தவிவளை, வண்டுவராபதி மன்னன்திருநாமத்தைச்சொல்லி யாஸ்வசிப்பிக்கப் பாருங்கோள். ( ஏத்துமின் ) வாய்படைத்த ப்ரயோஜநம் பெறவேத்துங்கோள். "சீர்பரவா துண்ணவாய்தானுறுமோவொன்று" என்றன்றோ நீங்கள் சொல்லுவது.

( ஏத்துதலும் ) நீங்கள்க்ருதார்த்தைகளாமளவேயன்று, "அயஹோஸயம்மதொஹவதி" ( அதஸோபயங்கதோபவதி ) என்கிறபடியே, ஏத்தினசமநந்தரத்திலே ப்ரபுத்தையாய். ( தொழுதாடுமே ) உணர்த்தியுண்டானல் செய்வது அதுபோலேகாணும். தரித்து வ்யாபாரக்ஷமையுமாம்.......................................................................................*

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு ( உன்னித்தித்யாதி ) "உன்னித்துமற்றொரு தெய்வம்தொழாளவனையல்லால், வண்டுவராபதிமன்னனை யேத்துமினேத்துதலும் தொழுதாடுமே" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை ( இவளுக்கித்யாதி ) ஐகாந்த்யமாவது-தான்பற்றின விஷயத்தையொழிய வேறொன்றறியாதிருக்கை.

"உன்னித்து" - ( தன்னெஞ்சாலேமதித்து ) அதாவது-ஒருவஸ்துவாக நினைத்தென்றபடி. "அவனையல்லால்-உன்னித்துமற்றொரு தெய்வந்தொழாள்" என்கிறவளுடைய ஹார்த்தபாவம் ( இன்னார்க்கித்யாதி ) இன்னார்க்கின்ன பரிஹாரமென்றில்லையோவென்றது-அவரவர் ப்ரக்ருத்யநுகுணமாகவன்றோ பரிஹாரமிருப்பதென்றபடி. ப்ரக்ருத்யநுகுணமான பரிஹாரம்பண்ணாதே வேறேபரிஹாரம்பண்ணுகிற தசங்கதமென்னுமதுக் கொருத்ருஷ்டாந்தம் ( முழங்காலித்யாதி ) தகர-

சிதைய. இவள்ப்ரக்ருதிதானேதென்ன ( தேவதாந்தரேத்யாதி ) சப்தார்த்தம் ( தன்னெஞ்சாலேயித்யாதி ) (தொழுதறியாள்) பால்யாத்ப்ரப்ருதி தொழுதறியாள். ப்ரஸக்தஸ்யஹிப்ரதிஷேதஃ, பால்யத்தில்தொழ ப்ரஸக்தியுண்டோவென்ன (பால்யாதித்யாதி ) பூர்வமேவலிகிதம். பால்யாத்ப்ரப்ருதி பகவத்விஷயமல்ல தறியாமைக்கு ப்ரமாணம் ( முலையோவித்யாதி ) யௌவநசூசகமான முலையானவை மிகவும் முழுக்கத்தோற்றினவில்லை, ஸ்வாமியானவனுடையமலையோ திருவேங்கடமென்றப்யசிக்கிற பாசுரமிவளுக்கு பரமோவென்றபடி, திருவிருத்தம் அறுபதாம் பாட்டு. " மலையோதிருவேங்கடம் ) என்றத்தைக்கடாக்ஷித்து ரசேர்க்தி ( இனியிப்போதித்யாதி )

" மற்றொருதெய்வந்தொழாள் " என்றதுக்குப்ரமாணம் ( அநந்யதைவத்வமித்யாதி ) " 𑌅𑌨𑌨𑍍𑌯𑌦𑍈𑌵𑌤𑍍𑌵𑌮𑌿𑌯𑌂𑌕𑍍𑌷𑌮𑌾𑌚𑌭𑍂𑌮𑍌𑌚𑌶𑌯𑍍𑌯𑌾𑌨𑌿𑌯𑌮𑌶𑍍𑌚𑌧𑌰𑍍𑌮𑍇। 𑌪𑌤𑌿𑌵𑍍𑌰𑌤𑌾𑌤𑍍𑌵𑌂𑌵𑌿𑌫𑌲𑌂𑌮𑌮𑍇𑌦𑌂𑌕𑍃𑌤𑌂𑌕𑍃𑌤𑌘𑍍𑌨𑍇𑌷𑍍𑌵𑌿𑌵𑌮𑌾𑌨𑍁𑌷𑌾𑌣𑌾𑌮𑍍 " ( அநந்யதைவத்வமியம்க்ஷமாச பூமௌசஶய்யா நியமஶ்சதர்மே। பதிவ்ரதாத்வம் விபலம்மமேதம் க்ருதம்க்ருதக்நேஷ்விவமாநுஷாணாம் ) இதிசுந்தரகாண்டே அஷ்டாவிம்ஶேஸீதா. விஶ்லேஷவேளையிலே " நான்தேவதாந்தரப்ரவணையல்லேன் " என்றுசொல்லுகிறவளுடைய ஹார்த்தபாவம் ( வேறேயித்யாதி ) பெரியபெருமாளை யாஶ்ரயிக்க வில்லையோவென்ன ( ஸஹபத்ந்யேத்யாதி ) " 𑌸𑌹𑌪𑌤𑍍𑌨𑍍𑌯𑌾𑌵𑌿𑌶𑌾𑌲𑌾𑌕𑍍𑌷𑍍𑌯𑌾𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌮𑍁𑌪𑌾𑌗𑌮𑌤𑍍 " ( ஸஹபத்ந்யாவிஶாலாக்ஷ்யா நாராயணமுபாகமத் ) இத்யயோத்யாகாண்டே. எடுத்துக்கைநீட்டுகையாவது-பரிசர்யை பண்ணுகை. " 𑌇𑌯𑌂𑌕𑍍𑌷𑌮𑌾𑌚 " ( இயம்க்ஷமாச ) என்றதுக்கு ஹார்த்தபாவம் ( ராவணனுடையவித்யாதி ) " 𑌭𑍂𑌮𑍌𑌚𑌶𑌯𑍍𑌯𑌾 " ( பூமௌசஶய்யா ) என்றதுக்கு ஹார்த்தபாவம் ( இத்தறைக்கிடையித்யாதி ) " 𑌤𑌸𑍍𑌯𑍋𑌪𑌵𑌨𑌷𑌣𑍍𑌡𑍇𑌷𑍁𑌨𑌾𑌨𑌾𑌪𑍁𑌷𑍍𑌪𑌸𑍁𑌗𑌨𑍍𑌧𑌿𑌷𑍁। 𑌵𑌿𑌹𑍃𑌤𑍍𑌯𑌸𑌲𑌿𑌲𑌕𑍍𑌲𑌿𑌨𑍍𑌨𑌾𑌤𑌵𑌾𑌙𑍍𑌕𑍇𑌸𑌮𑍁𑌪𑌾𑌵𑌿𑌶𑌮𑍍 " ( தஸ்யோபவநஷண்டேஷுநாநாபுஷ்பஸுகந்திஷு। விஹ்ருத்யஸலிலக்லிந்நாதவாங்கேஸமுபாவிஶம் ) இதிசுந்தரகாண்டே ஹநூமந்தம் ப்ரதிஸீதா. இவற்றை-உக்தங்களை. " இதம் " என்று-உக்தங்களை பராமர்ஶிக்கிறது. " மமேதம் " என்கையாலே, ( ஆர்க்குப்போலேயென்கிறது ) பகவத்வ்யதிரிக்தரெல்லாரும் க்ருதக்நரன்றோ, மாநுஷேஷு என்னவமையாதோ, " 𑌕𑍃𑌤𑌘𑍍𑌨𑍇𑌷𑍁 " ( க்ருதக்நேஷு ) என்றுவிசேஷிக்கிறதென்னென்ன ( ஆத்மாநமித்யாதி ) அதாவது - " 𑌮𑌾𑌨𑍁𑌷𑌾𑌣𑌾𑌮𑍍 " ( மாநுஷாணாம் ) என்றசப்தம்-சாமாந்யமாகையாலே, " 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂𑌮𑌾𑌨𑍁𑌷𑌂𑌮𑌨𑍍𑌯𑍇 " ( ஆத்மாநம்மாநுஷம்மந்யே ) என்றபெருமாளுக்கும் மநுஷ்யத்வமுண்டானாலும், " 𑌖𑍍𑌯𑌾𑌤𑌃𑌪𑍍𑌰𑌾𑌜𑍍𑌞𑌃𑌕𑍃𑌤𑌜𑍍𑌞𑌶𑍍𑌚 " ( க்யாதஃப்ராஜ்ஞஃக்ருதஜ்ஞஶ்ச ) என்று-இவர்க்ருதஜ்ஞராகையாலே, " 𑌮𑌾𑌨𑍁𑌷𑌾𑌣𑌾𑌂𑌮𑌧𑍍𑌯𑍇-𑌕𑍃𑌤𑌘𑍍𑌨𑍇𑌷𑍁 " ( மாநுஷாணும்மத்யே-க்ருதக்நேஷு ) என்றிவரைவிசேஷித்து-இவரையொழிந்தார் திறத்துப்பண்ணின வுபகாரம்போலேயென்றபடி. " தப்பாதவையும் " இத்யாதிவாக்யவிவரணம் ( தப்பாததென்று தொடங்கி. நானுகையாலேயித்யந்தம் ) க்ருதஜ்ஞேராமே க்ருதமபிஸர்வம் க்ருதக்நேஷு க்ருதமிவமத்தோஷவஶாத விததமபவதிதிபாவஃ, அதுக்கடியென்னென்னில்-பலியாமைக்கு ஹேதுவென்னென்னில்.

அர்த்தஸ்த்திதி இப்படியன்றேவென்ன (அர்த்ததத்த்வத்தையித்யாதி) அர்த்ததத்த்வம்-யாதார்த்யம். நீங்கள்-ததேகசேஷத்வ ஸ்வரூபரானநீங்கள். தூர்வ்ருத்தரென்கிறவாக்யத்துக்கு-பகவத்ஸம்பந்தமில்லாதார்செய்வதை பகவத்ஸம்பந்தமுடையவர்கள் செய்வார்களோவென்று தாத்பர்யம். தூர்வ்ருத்தர்-சக்ராதிலாஞ்சநமில்லாதார். வருத்தவான்களென்கிறது-சாடு; சத்வ்ருத்தரென்றும், சக்ரவான்களென்றும். வ்ருத்தவான்கள் செய்வதேதென்ன (தோளித்யாதி) என்னுடைய தோள்களானவை யந்தசர்வேஸ்வரனையல்லது தொழுகிறனவில்லையித்யர்த்த8. முதற்றிருவந்தாதி அறுபத்துமூன்றாம்பாட்டு.

அடுப்பது-ப்ராப்தம். தாத்பர்யம் (வேதைகேத்யாதி) "[illegible]" (வேதைகஸமதிகம்யந்) என்றதுக்கு ப்ரதிகோடித்வேநவருளிச்செய்கிறார் (ஆகமாதிகளிலித்யாதி) ஆகமாதிகளில்-சைவாகமாதிகளில். மன்னப்படுகை-அத்யயநம்பண்ணப்படுகையாதல், நித்யத்வமாதல். இரண்டையுமடைவேயருளிச்செய்கிறார் (மன்னுகையித்யாதி)(நித்யத்வமாயித்யாதி) நித்யத்வாதபௌருஷேயத்வம், அபௌருஷேயத்வாத் தோஷராஹித்யம். சப்தரூபஸ்யவேதஸ்ய த்ரிக்ஷணவஸ்த்தாயித்வாத்கதம்நித்யத்வமித்யாசங்க்ய, ஆநுபூர்வீநித்யத்வமித்யாஹ (பூர்வபூர்வேத்யாதி) சப்தார்த்தம் (நித்யமானவித்யாதி) இந்தபக்ஷத்தில், "மன்னப்படும்" என்கிற கர்மணி ப்ரயோகத்துக்கு-ஔசித்யமில்லை; "நித்யதயாநெஞ்சிலே படுவதான வேதத்துக்கு ப்ரதிபாத்யதயா ப்ரதாநனானவனை" என்றுரையில் சப்தார்த்தம்.

"வண்டுவராபதிமன்னனை" என்றதுக்குபாவம் (கேட்டாரித்யாதி) "வண்டுவராபதிமன்னனை ஏத்துமின்" என்கிறவளுடைய ஹார்த்தபாவம் (நீரிலேபுக்கித்யாதி) துவராபதி-த்வாரவதி. "[illegible]" (ஈஸ்வராயநிவேதிதம்) என்றத்தைப்பற்ற (வாய்படைத்தவித்யாதி) "வாய்படைத்தப்ரயோஜநமேத்துகை" என்றதுக்குப்ரமாணம் (சீர்பரவாதித்யாதி) அவனுடைய குணங்களை யக்ரமமாகப்பேசாதே வாகிந்த்ரியமானது வேறொன்றையுண்ண வாசைப்படுமோவென்றபடி. பெரியதிருவந்தாதி ஐம்பத்திரண்டாம்பாட்டு, "மாண்பாவித்து" இத்யாதி.

ஏத்துதலும்-ஏத்தினவுடனே. "ஏத்துதலும்" என்கையாலே-ஏத்துகையே ப்ரயோஜநமென்றபடி. "தொழுது" என்றால் - (ப்ரபுத்தை) என்னுமத்தைக் காட்டுமோவென்ன (உணர்த்தியுண்டானாலித்யாதி) அது-தொழுதாடுகை. பலிதம் (தரித்தித்யாதி)

"அவனைத்தொழுது ஸஸம்ப்ரமந்ருத்தம்பண்ணுகிற்கும்" என்றுரையில் சப்தார்த்தம். க்ரமேணாந்வய8..............................................*

# பதினொன்றாம்பாட்டு.

தொழுதாடித்தூமணிவண்ணனுக்காட்செய்துநோய்தீர்ந்த
வழுவாததொல்புகழ்வண்குருகூர்ச்சடகோபன்சொல்
வழுவாதவாயிரத்துள்ளிவைபத்துவெறிகளுந்
தொழுதாடிப்பாடவல்லார்துக்கசீலமிலர்களே.

## ஆறாயிரப்படி.

(தொழுதாடி) "வண்டுவராபதிமன்னன்" என்கிறவிந்த ம்ருதசஞ்சீவநமான திருநாமத்தைக்கொண்டு ஜீவித்து நோய்தீர்ந்து தொழுதாடிப்பாடித் தூமணிவண்ணனுக்காட்செய்த வழுவாததொல்புகழ் வண்குருகூர்ச்சடகோபன்சொல் வழுவாதவாயிரத்துள் தேவதாந்தரபஜநநிவ்ருத்திபரமான விவைபத்தும் தொழுதாடிப்பாடவல்லார் துக்கசீலமிலர்களென்கிறார்.........................................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழியை ப்ரேமத்தாலே விக்ருதராயநுசந்திப்பார் பகவத்விஶ்லேஷாதி து:கரஹிதராவர்களென்று பலத்தையருளிச்செய்கிறார்.

தொழுது - சேஷத்வாநுரூபமான அஞ்சலியைப்பண்ணி. ஆடி -அந்தப்ரீதியாலேஸஸம்ப்ரமந்ருத்தம்பண்ணி. தூ-உஜ்ஜ்வலமான. மணி-நீலரத்நம்போலேயிருக்கிற. வண்ணனுக்கு-நிறத்தையுடையக்ருஷ்ணனுக்கு. ஆள் - இதுதானேகைங்கர்யமாக. செய்து-செய்து. நோய்-ரத்விஶ்லேஷது:கரூபவ்யாதி. தீர்ந்த-சமிக்கும்படியாய். வழுவாத-சர்வப்ரகாரத்தாலும் தேவதாந்தர ஸம்ஸர்க்கமாகிற வழுவுதலின்றியே. தொல்-ஸ்வாபாவிகமான. புகழ்-பகவதேகசேஷத்வப்ரதையையுடையராய். வண்-விலக்ஷணமான. குருகூர்-திருநகரிக்குநிர்வாஹகரான. சடகோபன்-ஆழ்வார். சொல்-அருளிச்செய்ததாய். வழுவாத-பகவத்ஸ்வரூபாதிகளிலொன்றும் நழுவாதபடி ப்ரதிபாதிக்குமதான. ஆயிரத்துள்-ஆயிரந்திருவாய்மொழிக்குள்ளே. வெறிகள்-வெறியாட்டுவிஷயமாக விலக்கியுரைத்த. இவை-இவை. பத்தும்-பத்தையும். தொழுது-இதில் அர்த்தாநுசந்தாநவித்தராய்க்கொண்டுதொழுது. ஆடி-ஆடி. பாட-ப்ரேமபாரவஶ்யத்தாலேபாட. வல்லார்-வல்லவர்கள். துக்கம் - பகவத்விஶ்லேஷஜநிதது:கமும் தத்பரிஹாரார்த்ததேவதாந்தராநுவ்ருத்தி து:கமுமுண்டாகும். சீலம்-ஸ்வபாவம். இலர்கள்-இல்லாதவர்களாவர்கள்.

இது - கலித்துறை .........................................................................*

## ஈடு - பதினொன்றாம்பாட்டு.

நிகமத்தில்-இத்திருவாய்மொழியை ஸஹ்ருதயமாக அப்யசிக்கவல்லார், தாம்பிரிந்துபட்ட வ்யஸநம் படாதேபலத்திலே யந்வயிப்பரென்கிறார்.

(தொழுதாடித்தூமணிவண்ணனுக்காட்செய்துநோய்தீர்ந்த) என்றதுக் கம்மங்கியம்மாள் பணிக்கும்படி - " மோஹித்தவளல்பமாஶ்வஸித்தவாறே, 'மோர்க்குழம்புகுடித்தாள், தரித்தாள், கண்விழித்தாள், வார்த்தைசொன்னாள்' என்பர்களிறே; அதுபோலேகாணும் " என்று. முன்புபிறந்த அவசாதாதிசயத்தாலே, பிறந்த உணர்த்தியைக் குவாலாகச் சொல்லுகிறது; மேல் * சீலமில்லாச்சிறியனுகையாலே, உணர்ந்துகூப்பிடவேண்டுமளவேயிறேபிறந்தது. (தொழுதித்யாதி) இத்தோழிதானுமறி

ந்திலள்காணும் பகவத்ப்ரபாவம்; அவர்களை "ஏத்துங்கோள்" என்று ளே; அதெல்லாம்வேண்டாதே, தான் "ஏத்துங்கோள்" என்றவிதுதானேயமைந்த திவனுணருகைக்கு. பகவத்ப்ரபாவம் புறம்புள்ளார்க்கறியவொண்ணாதவோபாதி, உட்புகுந்தாரா யறிந்தரர்களா யுள்ளவர்களுக்கும் "இவ்வளவு" என்றறியவொண்ணாதாய்க்காணுமிருப்பது. வழுவாத தொல்புகழாகிறது - அஜ்ஞாநதசையிலும் தேவதாந்தரஸ்பர்ஶமும் ததீயஸ்பர்ஶமும் சத்தயாவிநாஶஹேதுவாய், அவ்வளவிலும் பகவந்நாமமும் ததீயஸ்பர்ஶமும் சத்தயா தாரகமுமாம்படியான ஸ்ரீவைஷ்ணவஸ்ரீயிலே நிலைநின்றபுகழ். ஒருவன் வைஷ்ணவனாகையாவது - இது; "சர்வேஶ்வரன் ரக்ஷகன்" என்றொருவன்பக்கலிலேயொருவார்த்தைகேட்டுவிட்டு, தேவதாந்தரஸ்பர்ஶமு மபாகவதஸ்பர்ஶமுமுண்டாயிருக்க, வைஷ்ணவனாகவிரகில்லையிறே. பூர்வார்த்தத்தையநுஸந்தித்தால்- இத்தலையாலொரு துரும்புநறுக்கவும் ப்ராப்தியில்லாதபடியாயிருக்கும்; உத்தரார்த்தத்தையநுஸந்தித்தால்-இளையபெருமாளைப்போலே கண்ணுறங்கவும் விரகில்லையாயிருக்கும். "கழிவதோர்காதலுற்றார்க்குமுண்டோகண்கள் துஞ்சுதல்" என்றிறேயிருப்பது. "ஸ்வரூபமிது" என்றறிந்தால் ஸ்வரூபாநுரூபமான வ்ருத்தமும் அதுக்குவிரோதியானவற்றைக் காற்கடைக்கொள்ளுமதுவு மில்லையாகில் ஜ்ஞாநம்பிறந்ததில்லையா மித்தனையிறே. இதில்லையாகில் ஆழ்வார்கள்போனவழியி லந்வயித்திலனுமித்தனையிறே; "திருவடிதன்னாமம்மறந்தும் புறந்தொழாமாந்தரை" என்றும், "திருவில்லாத்தேவரைத்தேறேன்மின்தேவு" என்றும், "எண்ணாதமானிடத்தையெண்ணாதபோதெல்லாமினியவாறு" என்றும், "பேராளன்பேரோதும் பெரியோரையொருகாலும் பிரிகிலேன்" என்றுமிறேயிவர்கள்படி. அநாதிகாலமிவன்சூழ்த்துக்கொண்டபாபங்கள்போகையும், நித்யகைங்கர்யம் பெறுகையுமாகிற விப்பேற்றுக்கிவ்வளவாகிலும் செய்யாதிருக்க விரகுண்டோ. (வழுவாதவித்யாதி) இவ்வாத்மாவுக்கு ஜ்ஞாதவ்யமான வர்த்தங்களிலொன்றும் தப்பாதபடிசொன்ன வெறிவிஷயமான விப்பத்தும். "வெறிவிலக்கு" என்றொருதுறையுண்டு தமிழரது - விரஹஜ்வரத்தாலே நோவுபடுகிறவளுக்கு ஆட்டுப்பது கள்ளுகுப்பது பலியிடுவதாய் பரிஹரிக்கப்புக, தோழியானவள் "இதொருவிஷயத்தில் பாவபந்தமடியாகவந்தநோயாயிற்று, மற்றொன்றுலன்று" என்று அவர்கள் செய்கிறவற்றைவிலக்குகை. (தொழுதாடிப்பாடவல்லார்) பெண்பிள்ளையினுடையமோஹம் தீர்ந்தால் பந்துக்களுக்குள்ளப்ரியம் "இதுகற்றார்க்குமுண்டு" என்றிருக்கிறாராயிற்றிவர். (துக்கசீலமிலர்களே) மோஹித்தவிடத்து தேவதாந்தரஸ்பர்ஶமுண்டாகையும், பாகவதஸ்பர்ஶமின்றிக்கே யொழிகையுமாயிற்று-துஃகமாகிறது. அதில்லாமையே ஸ்வபாவமாக வுடையராவர். சீலமென்று-ஸ்வபாவம்..............................................*

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் (தொழுதித்யாதி) "இவைபத்து" இத்யாரப்ய, மேலெல்லாம் கடாக்ஷித்தவதாரிகை (நிகமத்திலித்யாதி) "தொழுதாடிப்பாடவல்லார்" என்கையாலே (சஹ்ருதயமென்றது) அஹ்ருதயமானபோதிவை யெல்லாங்கூடாதிறே.

தெளிந்துதொழுதாடும்படி சம்ஶ்லேஷித்தாளோவென்ன (தொழுதாடியித்யாதி) அதாவது-மோஹம் நிவ்ருத்தமானபடியைப் போரப்பொலியச்சொல்லுகிறதென்றபடி. பலிதம் (முன்புபிறந்தவித்யாதி) "தொழுதாடித் தூமணிவண்ணனுக் காட்செய்துநோய்தீர்ந்த" என்று-சாப்தமாக, தேறினளென்றிருக்க; "அல்பாஶ்வாசத்தைக்குவாலாகச்சொல்லுகிறது" என்று அம்மாள்நிர்வஹிக்கைக்கடியேதென்ன (மேலித்யாதி) "ஏத்துமின்" என்றவநந்தரம் அவர்களேத்தாதிருக்க, "தொழுதாடி" என்கையாலேபலிதம் (இத்தோழிதானுமித்யாதி) (ப்ரபாவம்) என்றுபாடமானால்-ஈஶ்வரனுடைய ப்ரபாவத்தையென்றபடி. அதுதானேதென்ன (அவர்களையித்யாதி) உட்புகுந்த தோழிக்கறியவொண்ணாதோவென்ன (பகவத்ப்ரபாவமித்யாதி) சேஷத்வாநுரூபமாகத்தொழுது, அந்தப்ரீதியாலே ஸஸம்ப்ரமந்ருத்தம்பண்ணி; உஜ்ஜ்வலமான நீலரத்நம்போன்ற திருநிறத்தையுடைய க்ருஷ்ணனுக்கடிமைசெய்து தத்விஶ்லேஷ து:கரூப வ்யாதிதீர்ந்தவென்று சப்தார்த்தம்.

வழுவாததொல்புகழ்-நழுவாதஸ்வாபாவிகமானபுகழ். (ஒருவன்வைஷ்ணவனுகையாவது) இதுவென்று-உக்தத்தைபராமர்ஶிக்கிறது. "இது" என்கிறநிர்ப்பந்தமேதென்ன; வ்யதிரேகத்தாலேயிவ்வர்த்தத்தைசாதிக்கிறார் (சர்வேஶ்வரனித்யாதி) ஒருவன்பக்கலிலே-ஆசார்யன்பக்கலிலே. ஒருவார்த்தை-த்வயார்த்தமாதல், சரமஶ்லோகார்த்தமாதல். ப்ரபந்நனுக்கு தேவதாந்தரஸ்பர்ஶமு மபாகவதஸ்பர்ஶமும் பரிஹரியாதவன் றுவைஷ்ணவத்வமில்லையென்றார்; இனி ப்ரபந்நனுக்கு தேவதாந்தரஸ்பர்ஶம்பரிஹரணீயமானுப்போலே உபாயாந்தரஸ்பர்ஶமும் பரிஹரிக்கவேணுமென்று திருவுள்ளம்பற்றி, இப்படியானால் சர்வகர்மங்களுக்கும் யோக்யதாபாதகமான நித்யநைமித்திகங்களும் தேசவாசாதிகளும் த்யாஜ்யமாகாதோவென்ன (பூர்வார்த்தத்தையித்யாதி) ப்ராப்யபுத்த்யாசெய்கையாகையாலே த்யாஜ்யமாகாதென்றபடி. பூர்வார்த்தம், உத்தரார்த்தமென்றது-பூர்வோத்தரவாக்யங்களென்றுப், "சரணௌ" என்றத்விவசநத்தாலே - உபாயாந்தரங்களினுடைய சாங்கஸவாஸநத்யாக மார்த்தமாகக்கண்டுகொள்வது. அன்றிக்கே, சரமஶ்லோகத்தில் பூர்வோத்தரார்த்தங்களைச்சொல்லவுமாம். அரும்புநறுக்கவும் ப்ராப்தியில்லையென்றது-பூர்வகண்டமும்பூர்வார்த்தமும் ததேகோபாயதாப்ரதிபாதகமாகையாலே. உக்தார்த்தத்துக்குப்ரமாணம் (கழிவதோரித்யாதி) சர்வேஶ்வரனைக் கண்கள்நிறையும்படி யநுபவித்துக்காலங்கழியும்படி யத்விதீயமானவாசையிலே நின்றவர்களுக்கும். அவன்பக்கல்வைத்தகண் செம்பளிக்க விரகுண்டோ வித்யர்த்தம். திருவிருத்தம் தொண்ணூற்றேழாம்பாட்டு, "எழுவதும்" இத்யாதி. ஆக, பூர்வார்த்தத்தை யநுசந்தித்தாலித்யாதிவாக்யத்தால் - உபாயபுத்த்யாஎல்லாம்விடவேணும்,

உபேயபுத்த்யா எல்லாம்செய்யவேணுமென்றதாயிற்று. "வைஷ்ணவனுசவிரக்கல்லையிறே" என்றுகீழே,தேவதாந்தரததீயஸ்பர்ஶாஹித்யஞ்சொன்னது - ஆநுகூல்ய ஸங்கல்பாதிகளுக்குமுபலக்ஷணமென்றுவிவக்ஷித்து, இவையெல்லாம்வேணுமோ, சக்ருத்கர்த்தவ்யமான ஸ்வீகாரமாத்ரமே போராதோவென்ன (ஸ்வரூபமித்யாதி) இதுவென்று - கீழ்ச்சொன்ன ததேகரக்ஷ்யத்வத்தை பராமர்ஶிக்கிறது. "அவனேயுபாயம், மற்றொன்றுபாயமன்று, அவன் திருவடிகளிற்பண்ணும் கைங்கர்யமேயுபேயம், மற்றொன்றுபேயமன்று" என்று ஸ்வரூபஜ்ஞானம்பிறந்தால்; தேவதாந்தரமு முபாயோபேய பஹிர்ப்பூதமாகையாலே தத்விரோதித்யாகமாவஶ்யகமிறேயென்றுகருத்து. (ஜ்ஞானம்பிறந்ததில்லையாம்) கார்யகரமல்லாமையாலே, பிறந்தஜ்ஞானமஜ்ஞானகல்பமென்றபடி. ஜ்ஞானம்பிறந்ததில்லையா மித்யாதியென்கையாலே - இவைப்ரபத்த்யங்கத்வேநவநுஷ்டேயங்களன்று, அவகாதஸ்வேதம்போலே சம்பாவிதஸ்வபாவங்களென்று தோற்றுகிறது. இதில், ப்ரஸ்துதமான தேவதாந்தரஸ்பர்ஶமு மபாகவதஸ்பர்ஶமு மாகாதென்னுமதுக்கு ப்ரமாணங்காட்டுவதாக வதிஷ்டிகையிடுகிறார் (இதில்லை பாகிலித்யாதி) "அநந்யார்ஹசேஷத்வமே ஸ்வரூபம்" என்றறிந்து த்யாஜ்யத்தைவிட்டு உபாதேயத்தைச்செய்யாதபோது ஜ்ஞானம்பிறந்ததில்லை, ஆழ்வார்கள் போனவழியிலே வர்த்தித்திலனுமித்தனையென்றபடி. ஆழ்வார்கள் போனவழியேதென்ன (திருவடியித்யாதி) ஆபிமுக்க்யமாத்ரம்பண்ணலாமொழிய, ஸ்வரூபாநுரூபமானவ்ருத்தமும் தத்விரோதித்யாகமும் வேண்டிறு இதரசாதநங்களோபாதி ப்ரபத்தியும் துஷ்கரமாயிராதோ; இது ஸுகரமானபடி யெப்படியென்ன (அகாதீத்யாதி) இவ்வளவாகிலும் - விரோதித்யாகத்தையாகிலும்.

"வெறிவிஷயமான" என்றத்தைவிவரிக்கிறார் (வெறிவிலக்கித்யாதி) அத்துறைதானேதென்ன (விரஹேத்யாதி) உகுப்பது-தெளிப்பது.

"தொழுதாடி" என்றும், "தொழுதாடிப்பாடவல்லார்" என்றும் இரண்டுக்கும்சப்தமொத்திருந்தது; பெண்பிள்ளையுடையவாகார மிவர்களுக்குப் பிறக்கக்கூடுமோவென்ன (பெண்பிள்ளையினுடையவித்யாதி) "துக்கம் - இல் - சீலர்கள்" என்றந்வயித்தர்த்தம் (மோஹித்தவித்யாதி)

வழுவாதவாயிரத்துள்-ஜ்ஞாதவ்யார்த்தங்களிலொன்றும் தப்பாதபடிசொன்ன வாயிரத்துக்குள்ளே. இவைபத்துவெறிகளும்-வெறியாட்டுவிஷயமாக விலக்கியுரைத்த விப்பத்தையும். (திருவடியித்யாதி) சர்வேஶ்வரனுடைய திருநாமத்தை யொருகால்கற்றுப் பின்னைமறந்தார்களாகிலும் தத்வ்யதிரிக்த க்ஷுத்ரதேவதைகளைத்தொழாத மஹான்களையித்யர்த்தஃ. (திருவில்லாவித்யாதி) ஸ்ரீசம்பந்தமில்லாத க்ஷுத்ரதேவதைகளை சமாஶ்ரயணீய தேவதைகளாக விஶ்வசியாதேயென்றுங்கோளித்யர்த்தஃ. (என்றுகவித்யாதி) திருக்கண்ணமங்கைக்கு நிர்வாஹகனானவனை ஹ்ருதயத்திலே யென்றுதமநுஷ்யனை என்றுதபோதெல்லாமினியகாயிருக்குமித்யர்த்தஃ. (போராளனித்யாதி) சர்வாதிகனானவனுடைய திருநாமங்களை யநுசந்திக்கும் மஹாபாகவதர்களை யொருக்ஷணகாலமும்பிரிய க்ஷமனல்லேனித்யர்த்தஃ. க்ரமேணார்வாட8......................................................*

# த்ராவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

(தீர்ப்பாரையாமினி.)

இச்சாஸாரத்யயோகாத் ப்ரஹரணநவநாத் ஸ்ரீதுளஸ்யாட்யமௌளே:
ஸ்துத்யாங்க்ர்யோ: பாததூள்யா ஸ்வஜநபஜநதத்பாததூளீநமோபி:
தந்மூலஸ்வாங்க்ரிநுத்யா ததிதரபஜநத்யாகபூர்வோபஸத்த்யா தே-
வாந்தராதிவ்யுதாஸாத் ப்ரணயிஷு விரஹஜம் மோஹமுஜ்ஜஹாருஷ:. (சூ௦)

(இச்சாஸாரத்யயோகாத்) மாயப்போர்த் தேர்ப்பாகனார்க்கிவள்சிந்தைதுழாய் - பாரதயுத்தத்திலே பாண்டவர்களுக்குத்தான் ப்ரீதிபூர்வகமாகப்பண்ணின ஸாரத்ய வ்யாபாரத்தாலும்; (ப்ரஹரணநவநாத்) சங்குசக்கரமென்றிவள்கேட்க நீரிசைக்கிற்றிராகில் - தன்னுடைய திவ்யாயுதங்களான திருவாழி திருச்சங்குகளுடைய ஸ்தோத்ரத்தாலும்; (ஸ்ரீதுளஸ்யாட்யமௌளேஸ் ஸ்துத்யாங்க்ர்யோ:) மதுவார்துழாய்முடி மாயப்பிரான்கழல்வாழ்த்தினால் - மதுஸ்யந்தியான திருத்துழாய்மாலையாலே யலங்க்ருதமான திருவபிஷேகத்தையுடையனாய் ஆஸ்சர்யபூதனான தன்திருவடிகளுடைய ஸ்தோத்ரத்தாலும்; இவ்விடத்தில், ஸ்துதிபதம்-மேலிற்பாட்டில் "பெருந்தேவன்பேர்சொல்லகிற்கில்" என்றுசொல்லுகிற திருநாமஸங்கீர்த்தநத்துக்கு முபலக்ஷணமென்றுகருத்து. ஸ்துதியாலும் திருநாமஸங்கீர்த்தநத்தாலுமென்றபடி; (பாததூள்யா) தவளப்பொடிகொண்டு நீரிட்டிடுமின்தணியுமே-ஸ்ரீபாதரேணுவாலும்; (ஸ்வஜநபஜநதத்பாததூளீநமோபி:) இவ்விடத்தில், "மாயன்றமடியீறுகொண்டணியமுயலில்" என்று - ஸ்வஜநபாதரேணுவைச்சொல்லுகையாலே, தத்பஜநமும் ஸித்தமென்று தாத்பர்யம். வணங்கீர்கள் மாயப்பிரான்றமர்வேதம்வல்லாரையே-தன்னடியார்களுடைய ஸ்ரீபாதரேணுவாலும், அவர்கள்திருவடிகளில் வணக்கத்தினாலும்; (தந்மூலஸ்வாங்க்ரிநுத்யா) இது - இரண்டுபாட்டிலர்த்தத்துக்கு ஸங்க்ரஹம். வேதம்வல்லார்களைக்கொண்டு விண்ணோர்பெருமான்றிருப்பாதம்பணிந்து, ஊழ்மையில் கண்ணபிரான்கழல்வாழ்த்துமினுன்னித்தே-அவர்கள் புருஷகாரமாகத் தன்னுடையதிருவடிகளைத்தொழுகையினாலும்; (ததிதரபஜநத்யாகபூர்வோபஸத்த்யா) உன்னித்து மற்றொருதெய்வந்தொழா ளித்யாதி-தேவதாந்தரஸம்பந்த த்யாகபூர்வகமாகத் தன்னையேத்துகையினாலும்; ஏவம்பூதங்களித்தௌஷதங்களாலே * வண்டுவராபதி மன்னன்றனை நீதாஞ்ஞைவத்யனைக்கொண்டு, ஸ்வவிஷயத்தில் ப்ரணயிகளானவர்களுக்கு விரஹசமயத்திலுண்டான மோஹாதிவ்யாதிகளையெல்லாம் நிவர்த்திப்பிக்குமென்று "தீர்ப்பாரையாமினி" என்கிறதஸகத்திலே வகுளமாலாவிபூஷணரான ஆழ்வார் வெளியிட்டருளினாரென்கிறார்.......................................................................(சூ௦)

# திருவாய்மொழி நூற்றந்தாதி.

தீர்ப்பாரிலாதமயறீரக்கலந்தமா
லோர்ப்பாதுமின்றியுடன்பிரிய - நேர்க்க
வறிவழிந்துற்றருமறக்கலங்கப்பேர்கேட்
டறிவுபெற்றான்மாறன்சீலம். (௬௪)

(தீர்ப்பாரிலாத) இதில்-ப்ரணயித்வகுண விசிஷ்டவஸ்துவை ப்ரத்யக்ஷமாகவநுபவிக்கப்பெறுமல் ப்ராக்ருதிவிக்ருதியாய் மோஹித்துக்கிடக்க; ப்ரேமபரவசர் ப்ரதிக்ரியைபண்ணத்தேட, அத்தை ப்ரபுத்தஸௌஹ்ருத்துக்கள் “நிதாநநுரூபம்” என்றறிந்து, அநுரூபமான நிதாநத்தையும் தத்பரிஹாரத்தையும் விதிக்கிறபாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிறுர். அதெங்ஙனேயென்னில்; கீழுண்டானவநுபவம் மாநசாநுபவமாத்ரமாய் பாஹ்யகரணயோக்யமல்லாமையாலே தந்தசையைத்தாமறியாதபடி மோஹித்துக்கிடக்க, பரிசரவர்த்திகளான பரிவரத்தைக்கண்டுகலங்கி * ஸர்வாந்தேவாந்நமஸ்யந்தியிற்படியே பரிவின்கனத்தாலே பரிஹரிக்கவொருப்பட, இவர் ப்ரக்ருதியறிந்த ஸ்ரீமதுரகவி ப்ரப்ருதிகளான ப்ரபுத்த ஸௌஹ்ருத்துக்களத்தைவிலக்கி உசிதபரிஹாரத்தை விதித்துச்சொல்லுகிறபடியை; கலந்துபிரிந்ததலைமகளறிவழிவுகண்டுகலங்கி பரிவின்கனத்தாலே, தேவதாந்தரபரையாய்ப்ரதிபந்ந பாஷிணியான கட்டுவிச்சிபாசுரங்கொண்டு வெறியாட்டாலே பரிஹரிக்கத்தேடுகிற தாய்மாரைநோக்கி, இவள் ப்ரக்ருதியறியுமுயிர்த்தோழியானவள் நோயின் நிதாநத்தை நிருபணமுகத்தாலே யறிந்தாளாகக்கொண்டு “க்ருஷ்ணனடியாகவந்தநோவுக்கு, அவனைக்கொண்டே பரிஹரிக்குமதொழிய நீங்கள்செய்கிறவை பரிஹாரமல்ல, தேவதாந்தர ஸ்பர்சத்துக்கும் தத்ஸம்பந்திஸ்பர்சத்துக்கும் * தேர்ப்பாகனூர் * வண்டுவராபதி மன்னனையாச்ரயித்து * மாயன்றமரடிநீறுகொண்டணியுங்கோள்” என்றுவெறிவிலக்கின பாசுரத்தாலே யருளிச்செய்கிற * தீர்ப்பாரையாமினியில் தாத்பர்யத்தை “தீர்ப்பாரிலாத மயல்தீரக்கலந்தமால்” என்றுதொடங்கி யருளிச்செய்கிறுரென்கை.

(தீர்ப்பாரிலாதமயல்தீரக்கலந்தமால்) * மண்ணையிருந்துதுழாவியில் * மயற்பெருங்காதலானதுதீர, * வீற்றிருந்தேழுலகிற்கலந்த சர்வேஸ்வரன். (ஓர்ப்பாதுமின்றி யுடன்பிரிய) பிரிகைக்குஹேது நிருபணமத்யல்பமுமாராயாமல், பெருக்காறுவற்றி யடிசுடுமாபோலவும், அபிஷேகமஹோத்ஸவம் குலைந்தரண்யப்ரவேசமானாப்போலவும், உடனேபிரிய. “பேதைநின்னைப்பிரியேனினி” என்னுதல், “பொருட்கோபிரிவென” என்னுதல் செய்யாமல், கலந்தகலவி கனவென்னலாம்படி அசங்கிதமாகவகல. (நேர்க்கவறிவழிந்து) “ஸத்ய: ப்ராணாந் ஜஹாதி” (ஸத்ருக்நோநந்தரஸ்த்ரிய:) என்னும்படி பாதாழ்வான்நின்றுப்போலேநில்லா மோஹித்தாப்போலேமோஹித்து. நேர்க்கவறிவழிகையாவது - * மண்ணையிருந்துதுழாவியிற்காட்டிலு மறிவுகலங்கி. அங்கு - காணவும் கேட்கவும் பேசவும் பின்செல்லவும் க்ஷமையாயிருந்தாள், இங்கு - * குவளைத்தடங்கண்ணும் கோவைச்செவ்வாயும் பயந்து * மதியெல்லாமுள்கலங்கி மயங்கியிறேகிடக்கிறது. (உற்றுருமறக்கலங்க) “யேதுராமஸ்ய ஸுஹ்ருதஸ்ஸர்வே தேமூடசேதஸ:” (யேதுராமஸ்ய ஸௌஹ்ருதஸ்ஸர்வேதேமூடசேதஸ:) என்னும்படி, அத்தைக்கண்ட அன்னையரும் தோழியரும் தொடக்கமானாரும் மிகவுமறிவுகலங்கிக்கிடக்க. ஸ்ரீகௌஸல்யையாரைப்போலே மங்களாசாஸநபரையானமாதா, “ஸர்வாந்தேவாந்நமஸ்யந்தி ராமஸ்யார்த்தே யசஸ்விநீ” (ஸர்வாந்தேவாந்நமஸ்யந்திராமஸ்யார்த்தே யசஸ்விநீ) என்னும்படியே எத்தையாகிலும்செய்து இவளைப்பிழைப்பிக்கத்தேட, அவ்வளவிலே [illegible]

தாந்தரபரையாயிருப்பாளொரு கட்டுவிச்சி யதுக்குபரிஹாரமாகச்சொல்லுகிற * கள்ளுமிறைச்சியும் * சருஞ்சோறும் செஞ்சோறுமாகிற நிந்த்யத்ரவ்யங்களாலே * இளந்தெய்வத்துக் கிழைத்தாடுகிற படிகளைக்கண்டு இவள் ப்ரக்ருதியறியுமுயிர்த்தோழியானவளத்தை நிஷேதித்து "தேர்ப்பாகனார்க்கிவள் சிந்தைதுழாய்த்திசைக்கின்றது" என்று-நோய்க்கு நிதாநத்தையும், அதுக்குபரிஹாரமாக * சங்குசக்கர மென்றிசைச்சும்படியையும், * மாயப்பிரான் கழல்வாழ்த்துதலையும், * பெருந்தேவன்பேர் சொல்லும்படியையும், "களிறட்டபிரான் திருநாமத்தால் தவளப்பொடிகொண்டு நீரிட்டிடுமின்" என்றும், "மாயன்றமரடி நீறுகொண்டணியமுயலில்" என்றும், "வணங்கீர்கள்மாயப்பிரான்றமர்வேதம்வல்லாரை" என்றும், "வேதம்வல்லார்களைக்கொண்டு" என்றும், "ஊழ்மையில்கண்ணபிரான்கழல்வாழ்த்துமின்" என்றும், "வண்டுவராபதிமன்னனையேத்துமின்" என்றும்சொன்னபடியைக்கேட்டு, * தொழுதாடித் தூமணிவண்ணனுக் காட்செய்து நோய்தீர்ந்தப்ரகாரத்தை-பேர்கேட்டறிவு பெற்றுளென்கிறது. (மாறன்சீலம்) ஆழ்வார்ஸ்வபாவமிதுவாயிற்று. * செவிக்கினிதகீர்த்தியைக்கேட்கை சத்தயாபாதகமாகவும், "செவிக்கின்பமாவதுவும் செங்கண்மால்நாமம்" என்கிற * கேசவன்கீர்த்தியைக்கேட்டு சத்தைபெறவுமாயிறே யிருப்பது............................(௩௬)

நாலாம்பத்தில்-ஆறுந்திருவாய்மொழி முற்றிற்று.

---

ஆ௪-திருவாய்மொழி-௩௬—பாட்டு-௩௧௮.

ஸ்ரீ

# திருவாய்மொழி.

## நான்காம்பத்து.

## ஏழாந்திருவாய்மொழி.

### சீலமில்லா - ப்ரவேஶங்கள்.

### ஆறாயிரப்படி.

( சீலமில்லா ) பரமபுருஷவிஶ்லேஷ ஜநிதகிரவநிகவ்யஸநத்தாலே மோஹதஶாபந்நரானவாழ்வார், அம்ருதகல்பமான ததீயதிவ்யநாமங்களினுடைய ஶ்ரவணத்தாலே லப்தஸம்ஜ்ஞரராய், அந்தவிஶ்லேஷவ்யஸநமஸஹமாநராய் "சாணவாராய்" என்றெம்பெருமானைக் கூப்பிட்டழைக்கிறார் ........................................................*

### பன்னீராயிரப்படி.

ஏழாந்திருவாய்மொழியில், கீழ் "ஏத்தாதலும்தொழுதாடும்" என்று-பகவந்நாமஶ்ரவணத்தாற்பிறந்த வாஶ்வாஸம் அவனைக்கிட்டி யநுபவிக்கைக்குடலன்றியே அலாபத்தாலே ஆர்த்தராகைக்குடலாகையாலே அபிநிவேசாதிசயத்தையுமுடையவிவ்வாழ்வார், தமக்கநுபாவ்யனான ஸர்வேஶ்வரனுடைய, அகிலவஸ்துஸத்தையுமழியாமல் நோக்குமஸாதாரணசம்பந்தத்தையும், அநந்யார்ஹமாக்கியநுபவிப்பிக்கு மௌதார்யத்தையும், அநந்யார்ஹமாஶ்ரிதர்பக்கலத்யந்தபவ்யதையையும், அவர்களுக்காஶாஜநகமான ஆபிரூப்யாதிஶயத்தையும், அருந்தொழில் செய்துமாஶ்ரிதர்க்கபேக்ஷிதங்கொடுக்கும்படியையும், ஆசைக்குதீபகமான ஆந்தரஸ்திதியையும் அந்தவஸ்தாநத்தினுடைய வதிசயிதபோக்யதையையும், போக்யதாநிபந்தநமான வபிநிவேசாதிசயஜநகத்வத்தையும், அபிநிவிஷ்டர்க்கநுபாவ்யமான வஸாதாரணசிஹ்நவத்தையையும், அகிலவேதவேத்யத்வத்தையுமநுசந்தித்து, ஏவம்விஶிஷ்டனான போக்யபூதன்பக்கலநுபவாபிநிவேஶத்தாற்பிறந்த வார்த்யதிசயத்தை யருளிச்செய்கிறார்........................................................*

### ஈடு.

[வஷேணவீஜம்ப்ரதிஸஞ்ஜஹர்ஷ] [வர்ஷேணபீஜம்ப்ரதிஸஞ்ஜஹர்ஷ] என்று வர்ஷம்விழுந்தால் தன்னுணர்த்தியாலன்றிறேபீஜம் பருவம்செய்கிறது; அப்படியேதிருநாமப்ரஸங்கத்திலேயுணர்ந்தாரே. "வண்டுவராபதிமன்னனையேத்துமின்" என்றமூர்தசஞ்சீவநியானதிருநாமப்ரஸங்கமேஶிஶிரோபசாரமாக வுணர்த்தியுண்டாயிற்று, அத்தால்பெற்ற பலம் - முன்புத்தைமோஹத்தையு மிழக்கைக்குறுப்பானவித்தனை. மோ

ஹதசையிலநுஸந்தாநத்தாலே க்லேஶமில்லை. பிறந்தவுணர்த்திபேற்றுக் குடலல்லாமையாலேக்லேஶத்தைவிளைக்க, அத்தாலேகூப்பிடுகிறார். உறக்கத்தில் பசிபொறுக்கலாம்; உணர்ந்தாலுண்டன்றிநிற்கவொண்ணாதிறே. உணர்ந்தவநந்தரம்பொறுக்கவொண்ணாதபடிதமக்குப்பிறந்தவலாபக்லேஶத்தையநுஸந்தித்து; அவனுபத்துக்குதவும் ஸ்வபாவனாயிருக்கிறபடியையும்; ஆபத்துக்கு நிதாநமறிந்து பரிஹரிக்கவல்லனென்றும்; ஆபத்துக்குதவுகைக்கீடானப்ராப்தியையுடையனாவது, பிரிந்தால்பொறுக்கவொண்ணாதபடியானவடிவழகையுடையனாவது, ஆபத்துக்களிலேவிரோதியைப் போக்கி யுதவுகைக்கிடானசக்தியையுடையனாவது, அதுக்கிடானபரிகரமுடையனாவது, வரையாதேயெல்லாரையுமொக்க ரக்ஷிக்கவல்லனாவது இப்படியிருக்கத் தம்மாற்றாமைக்குதவக்காணாமையாலே, பரமபதத்திலேயிருந்தானாகிலுமவ்விருப்பு நிலைகுலைந்துவந்து முகங்காட்டும்படி ஆர்த்தியாலே, நிரம்பிற்றொருடல்கையெடுத்துக்கூப்பிட்டாப்போலே, கேட்டாரடையநிராம்படிகூப்பிடுகிறார், "ஹாராமஹாலக்ஷ்மணஹாஸுமித்ரே" (ஹாராமஹாலக்ஷ்மணஹாஸுமித்ரே) என்றாப்போலே; [தயாவிஹீநே] (ததாபிஸ்ருதேநேத்யாதி) ஸ்ரீகௌஸல்யையார் பெருமாளைப்பிரிந்தவாற்றாமையாலேகூப்பிட, ஸ்ரீசுமந்த்ரன் "அவனைப்பிரிந்தோம் என்றுகூப்பிடவேண்டாகாணும் தாமேவந்துபுகுருவர்காணும்" என்று ஆஶ்வாசவசநம்பண்ணினான். [ஸூதேந] சொன்னவார்த்தை "ஆப்தம்" என்று, கைக்கொள்ளவேண்டும்படி அந்தரங்கனாவது. சாரதிகள் சொல்லுமதெல்லாமாப்தமிறே. [ஸுயுக்தவாதிநா] அதில்லையேயாகிலும்வார்த்தையைக்கேட்டால் "இது அப்படியே" என்று விஶ்வஸித்துஶோகநிவர்த்தியும்படிவார்த்தைசொல்லவல்லனாவது. [நிவார்யமாணா] இவனாலே "இதுவேண்டா" என்றுதடுக்கப்படாநிற்கச்செய்தேயும். [ஸுதஶோககர்ஶிதா] இப்படியிவனிவனைப்போரப்பொலியச்சொல்லுங்காட்டில் நிவ்ருத்தமாகாதிறே இவள் பிரிந்தவிஷயத்திலாற்றாமை. நெடுநாள்கூடிப்பெற்றபிள்ளையைப்பிரிந்தால் தரிக்கப்போகாதிறே [நசைவதேவீவிரராமகூஜிதாத்] பிறர்கண்ணீரையுமாற்றி, இதுக்குமுன்பு சோகம்புதியதுண்ணாதேபோந்தவள், கூப்பிடுகிறகூப்பீட்டில் நின்றுமோவிற்றிலள்; கூப்பிடுகிறபோதுதான் கேட்டார்க்கடைய இரக்கம் பிறக்கும்படிகுயில்கூவினாப்போலே காணும் கூப்பிடுவது. கூப்பிட்டபாசுரம் [ப்ரியேதிபுத்ரேதிசராகவேதிச] பிரிந்தால் தரிக்கவொண்ணாதபடி யெனக்கினியவரே!, உம்மைப்பிரிந்தாருடைய வாற்றாமைக்கு நிவர்த்தகரானவரே!, சர்வரக்ஷகர்குடியிலேபிறந்துபெற்றதாயைநலியலாமோ!. என்று அவள் கூப்பிட்டாப்போலேயிவரும்கூப்பிடுகிறார்.................................*

## ஜீயர் அருப்பதம்.

சீலமில்லாப்ரவேஶே. கீழ்-மோஹமாயிருக்க இங்கேயுணர்த்திவருகைக்கு ஹேதுவேதென்ன (வர்ஷேணேத்யாதி) "வர்ஷேணதிக்தேநவஶ்ரு

ஸம்ஹ்ருஷ்டஸர்வாங்கோயிதாஸ்ருர்விலாபஸமீபே॥ வாதாதபக்லாந்தமிவப்ரணஷ்டம்வர்ஷேண பீஜம்ப்ரதிஸஞ்ஜஹர்ஷ” (ஏதைர்நிமித்தைரயமர்ஶஸம்ப்ருக்ஸம்போதிராப்ராகமிஸாதுலித்வாத்। வாதாதபக்லாந்தமிவப்ரணஷ்டம்வர்ஷேணபீஜம்ப்ரதிஸஞ்ஜஹர்ஷ) இதிஸுந்தரகாண்டே ஏகோநத்ரிம்ஶே. பீஜமென்றது தத்கார்யமானஸஸ்யம் சொல்லப்படுகிறது. “வாதாதபக்லாந்தமிவப்ரணஷ்டம்” (வாதாதபக்லாந்தமிவப்ரணஷ்டம்) என்கிற த்ருஷ்டாந்தவிசேஷணமே-“ஸஸ்யம்” என்னுமதுக்கு நியாமகம். இங்கேதிருநாமப்ரஸங்கமுண்டோவென்ன (வண்டுவராபதியித்யாதி) பசிபனுண்ணுமாபோலே உணர்ந்தால் அநுபவிக்குமத்தனையன்றோவென்ன; அதுகிடையாமையாலே வ்யஸநமேயதிசயித்து முன்புத்தை மோஹத்தை நல்லதாக்கிற்றென்கிறார் (அத்தால்பெற்றவித்யாதி) ஆறுணர்த்தியைப் பற்றமோஹம்நல்லதோவென்ன (மோஹதசையிலித்யாதி) மோஹதசையநுகூலமென்றதுக்குத்ருஷ்டாந்தம் (உறக்கத்திலித்யாதி)

“அத்தாலேகூப்பிடுகிறார்” என்றத்தை விஸ்தரிப்பிக்கிறார் (உணர்ந்தவநந்தரமித்யாதி) “ஞாலமுண்டாய்” என்றத்தைப்பற்ற (ஆபத்துக்குதவும் ஸ்வபாவனென்றது) “ஞானமூர்த்தி” என்றத்தைப்பற்ற (நிதானமிதித்தென்றது) “நாராயணா” என்றத்தைப்பற்ற (ப்ராப்தியென்றது) “கோலம்” என்றத்தைப்பற்ற (வடிவழகென்றது) “ஆழ்கடலைக்கடைந்ததப்பனே” என்றத்தைப்பற்ற (சக்தியையுடையனாவதென்றது) “அடலாழியானே” என்றத்தைப்பற்ற (பரிகரமுடையனாவதென்றது) “வையங்கொண்டவாமனா” என்றத்தைப்பற்ற (வரையாதேயித்யாதி) “வள்ளலேயோ!, வாமனனேவோ!” என்றத்தைப்பற்ற (கூப்பிடுகிறாரென்றது)

இவ்விஷயத்தைப்பிரிந்தார்முறைமையாலே கூப்பிட்டதுக்கு த்ருஷ்டாந்தத்வயம் (ஹாராமேத்யாதி) முந்தினது - பர்த்ருவிஶ்லேஷத்தில் பிராட்டிகூப்பிட்டது; இரண்டாவது - புத்ரவிஶ்லேஷத்தில் ஸ்ரீகௌஸல்யையார்கூப்பிட்டது. “ஹாராமஹாலக்ஷ்மணஹாஸுமித்ரே ஹாராமமாதஸ்ஸஹமேஜநந்யா। ஏஷாவிபத்யாம்யஹமல்பபாக்யா மஹார்ணவேநௌரிவமூடவாதா” (ஹாராமஹாலக்ஷ்மணஹாஸுமித்ரே ஹாராமமாதஸ்ஸஹமேஜநந்யா। ஏஷாவிபத்யாம்யஹமல்பபாக்யா மஹார்ணவேநௌரிவமூடவாதா) இதிஸுந்தரகாண்டே ஷட்விம்ஶஸர்க்கே. “ததாபிஸஜ்ஜிதேநஸம்யுக்தவாஜிநா நிவார்யமாணாஸுதஶோககர்ஶிதா। நசைவதேவீவிரராமகூஜிதாத் ப்ரியேதிபுத்ரேதிசராகவேதிச” (ததாபிஸஜ்ஜிதேநஸம்யுக்தவாஜிநாநிவார்யமாணாஸுதஶோககர்ஶிதா। நசைவதேவீவிரராமகூஜிதாத்ப்ரியேதிபுத்ரேதிசராகவேதிச) இத்யயோத்யாகாண்டே. “ததாபிஸஜ்ஜிதேந” இத்யாதிக்கு வ்யாக்யாநம் (ஸ்ரீகௌஸல்யையாரித்யாதி) நிவார்யமாணாபி, ததாபியென்றபடி. “ஸஜ்ஜிதேன்” என்றால் - ஆப்தனைத்தான்றுமோவென்ன (சாரதிகளித்யாதி) (இவனைப்போரப்பொலியச்சொல்லுங்காட்டில்) “ஸஜ்ஜிதேந” என்றும், “ஸம்யுக்தவாஜிநா” என்றும், சுமந்த்ரனைப்போரப்பொலியச்சொல்லுங்காட்டிலென்றபடி. போரப்பொலிய - மிகவும்பூர்ணமாக. “மஹாதபஸா” என்றத்தைப்பற்ற (கொடிதாகித்யாதி) “தேவீ” என்றதுக்குபாவம் (பிறரித்யாதி) புதியது - ஸாதரமானது. ஸ்வல்பமென்

ருமாம். ப்ரலாபாத் என்னுதே, "கூஜிதாத்" என்றதுக்குபாவம் ( கூப்பிடுகிறபோதித்யாதி )" "கோகிலாநாம்துகூஜிதம்" என்னக்கடவதிறே. இரக்கம் - ஆர்த்ரதை. "ப்ரிய" இத்யாதிக்குபாவம் (பிரிந்தாலித்யாதி) பெருமாளைப்பெற்றவனுக்கு நரகமில்லையாகையாலே, விஸ்லேஷதுஃகநிவர்த்தகத்வத்தை - * புத்ரசப்தார்த்தமாக வருளிச்செய்கிறுர் (உம்மையித்யாதி) ........................................*

---

## ஏழாந் திருவாய்மொழி.

## முதற்பாட்டு.

---

சீலமில்லாச்சிறியனேலுஞ்செய்வினையோபெரிதால்
ஞாலமுண்டாய்ஞானமூர்த்திநாராயணவென்றென்று
காலந்தோறும்யானிருந்துகைதலைபூசலிட்டாற்
கோலமேனிகாணவாராய்கூவியுங்கொள்ளாயே.

### ஆறுயிரப்படி.

ஆர்த்தருடையவார்த்தியைப் போக்காதாயல்லே, ஆர்த்தியையறியாதாயல்லே, ஆர்த்தியைப் போக்கமாட்டாதாயல்லே யென்றென்றுகாலந்தோறும் நாளிருந்துன்னைத் தொழுதிரந்தால் கோலமேனிகாணவருகிறிலே, உன்பாடேயென்னைக் கூவியுங்கொள்ளுகிறிலே; இப்படியுன்க்ருபைக்கு விஷயமல்லாதபடி யென்னையகற்றின விந்தமஹாபாபத்துக்கெல்லாம் கீடாதிகளிலு மதிக்ஷுத்ரனை நாஹுஸ்ரயமானபடி யெங்ஙனேயோ வென்கிறுர்........................................................*

### பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், அகிலசத்தையையும்நோக்கு மசாதாரணசம்பந்தத்தையுடைய நீயென்னை யங்கீகரியாதொழிகைக்கு நான்பண்ணினபாபாதிசயமிருந்தபடி யென்னென்கிறுர்.

அபேக்ஷாநிரபேக்ஷமாக ப்ரளயாபத்திலே, ஞாலம்-அகிலபதார்த்தத்தையும். உண்டாய்-அமுதுசெய்துசத்தையைநோக்கினவனே. ஞானம்-ஏவம்விதமானரக்ஷணத்துக்கு விரகறிகைக்கீடானவிலக்ஷணஜ்ஞாநத்தை. மூர்த்தீ-வடிவாகவுடையவனே. நாராயணு-இப்படிவிரகறிந்து ரக்ஷிக்கைக்கீடான அப்ருதக்ஸித்தசம்பந்தத்தையுடையனனவனே. என்றென்று - என்றென்றுபலபடியு முன்ஸ்வபாவத்தைச்சொல்லி. காலந்தோறும்-ஒருகாலமொழியாமலெல்லாக்காலத்திலும். யான்-வ்யதிரேகத்திலழியும்படியானஸ்வரூபத்தையுடையநான். இருந்து- "உன்னைக்காணவேணும்" என்கிறஆசாபந்தமடியாகவருந்தியிருந்து. கை-கை. தலை-தலையிலேயாம்படி. பூசலிட்டால்-மஹாத்வநியாகக்கூப்பிட்டால். கோலம்-தர்ஶநீயாகாரமான.

மேனி-உன்வடிவை. காண-நான்கண்டநுபவிக்கும்படி. வாராய்-வருகிறிலை-அதுவுந்தூரத்துக்குப்போராதாகில், கூவியுங்கொள்ளாய்-என்னையங்கேயழைத்தும்கொள்ளுகிறிலை. ஆதலால்நான், சீலம்-நன்றான சரிதம். இல்லா-இன்றியே. சிறியனேனும்-அறிவிலியான க்ஷுத்ரனாயிருந்தேனேயாகிலும். செய் - நிஜசத்ஸ்ருஷ்டி பண்ணுமோபாதி சங்கல்பமாத்ரத்தாலன்றியே காயிகபர்யந்தமாகவநுஷ்டித்த. வினை-பாபம். பெரிதால்-அதிமஹத்தாயிருந்ததிறே.

ஓ என்னுமசை - வெறுப்பின் மிகுதியைக்காட்டுகிறது. சீலம் - சரியான சரிதம்.......................................................................................................*

## ஈடு - முதற்பாட்டு.

நெடுங்காலம் கூப்பிடச்செய்தேயும் விஷயீகரியாதபடியாக நான் பண்ணினபாபத்தின் மிகுதியிருக்கிறபடி யென்னென்கிறார்.

( சீலமில்லா ) சீலமாவது-நன்மை. அதாவது-வ்ருத்தம். வ்ருத்தத்தை - சீலமென்னக்கடவதிறே. இப்போது நன்மையில்லாவிட்டால், மேலொருநன்மை யுண்டாக்கிக்கொள்ளுகைக்கோ ராஶ்ரயமுமில்லைகிடீரென்கிறார் ( சிறியனேனும் ) ஆத்மா அணுவாய், ஜ்ஞாநம்விபுவாயிறேயிருப்பது, ஆற்றாமையாலே ஜ்ஞாநப்ரபையடங்கி, ஆத்மசத்பாவமாத்ரமே யாயிற்றுக்காணும். இப்போதுமொருநன்மையின்றிக்கே, மேலுமொரு நன்மையார்ஜித்துக்கொள்ளுகைக் காஶ்ரயமில்லாதபடி சிறியனாயிருந்தேனேயாகிலும். ( செய்வினையோபெரிதால் ) பண்ணினபாபத்தைப் பார்த்தவாறே, சிதசிதீஶ்வர தத்த்வத்ரயத்தையும் விளாக்குலைகொள்ளும்படி பெருத்திருந்தது. சம்சாரிகளுடைய குற்றங்களைப்பொறுக்குமீஶ்வரனுடைய குணங்களிலும், அவன்தந்தபக்தி ரூபாபந்நஜ்ஞாநத்திலுங்காட்டில் பெரிதாயாயிற்றிருக்கிறது ; அந்தஜ்ஞாநமுமகிஞ்சித்கரமாய், அக்குணங்களும் நடையாடாநிற்கச்செய்தேயிறே பாபமநுவர்த்திக்கிறது. லோகத்தில் பெரியது தத்த்வத்ரயமாயிற்று, அதிலும் பெரியதாயிற்றிவருடையஜ்ஞாநம், இத்தையும் விளாக்குலைகொள்ளும்படிகாணும் பாபத்தின்பெருமை. ( செய்வினை ) இதுதானீஶ்வரனைப்போலே சங்கல்பித்துவந்ததன்றே, இதனையச்செய்தற்றதிறே. ( ஓ ) இதென்னவாஶ்சர்யம். அன்றிக்கே விஷாதசூசகமாதல். திருநாமப்ரசங்கத்திலே யுணரும்படியானாராகில் இவர்க்குப் பாபமாவதென்னென்னில் ; அப்படிசத்தாதாரகமானவஸ்துவை யிப்போது யதாமநோரத மநுபவிக்கப்பெறாமையாலே யிழக்கைக்கடி பாபமேயிறே. [ மமைவ துஷ்க்ருதங்கிஞ்சித் ] ( மமைவ துஷ்க்ருதம்கிஞ்சித் ) என்றாளிறே பிராட்டியும். விரோதிவர்க்கத்தைக் கிழங்கெடுத்து என்னை ரக்ஷிக்கைக்கீடான சக்தியையுடையராவது, இதுக்கு முன்பெல்லாம்ப்ரதிபக்ஷம் மண்ணுண்ணவளர்ந்து போந்தவர்களாவது, நான்றான் தங்களை யழியமாறியும் ரக்ஷிக்கவேண்டும்படி யவசந்நையாயிரு

ப்பது, இப்படியிருக்க அவர்களென்னைக் கடாக்ஷியாதிருந்தார்கள்; இது க்கடி, அவர்கள்பக்கலிலேயாதல் என்பக்கலிலேயாதலாகவேணுமிறே; அவர்கள்பக்கலொரு கண்ணழிவுசொல்லலா யிருந்ததில்லை, இனியென்னுடைய பாபமேயாமித்தனையிறே. [ கிஞ்சித் ] நாந்தாம் சர்வஜ்ஞருகளல்லோமிறே யெல்லாமறிகைக்கு; அறியாதிருப்பதேதேனு மொன்றுண்டாகவேணுமிறே, கார்யகல்ப்யமிறே.

( ஞாலமுண்டாய் ) பாபப்ராசுர்யத்தை யநுசந்தித்தால் ப்ராயஶ்சித்தம்பண்ண விழியுமத்தனையிறே "தந்தாமுடையயத்நத்தாலேபேறு" என்றிருப்பார்; இவர் "அவன்கையிலேயிருக்குபரிஹாரம்" என்றிறே யறுதியிட்டிருப்பது; "எப்போதும் கைகழலாநேமியான்நம்மேல்வினை கடிவான்" என்றிறேசொல்லுவது; இதுதான் சுதர்ஶநமாயிருக்குமிறே, "பகவதோபலேந" என்கிறபடியே; ஆகையாலே அவன்படியை யநுசந்திக்கிறார். "ஐஜம்வாவீக்ஷ்ய" ( கஜம்வாவீக்ஷ்ய ) இத்யாதி. ( ஞாலமுண்டாய் ) "இனிபரிஹாரமில்லை" என்னும்படியான ஆபத்துக்களிலேவந் துதவுமவனன்றே. பூமியாகப்ரளயங்கொள்ளிலோ ரக்ஷிக்கையாவது, எல்லார்க்குமுண்டான ஆபத்தொருவனுக்கே யுண்டானாலுதவலாகாதோ. தந்தாமுடைய வாபத்தறிந்து கூப்பிடாதார்க்கோ வுதவலாவது, "ஆபத்தறிந்துகூப்பிடுவார்க்குதவோம்" என்னும்நிர்ப்பந்தமுண்டோ. ப்ரளயங்கொண்டபூமி, தன்னைத்தானேயெடுக்க யத்நம்பண்ணுமன்றிறே தந்தாம்கர்மங்களுக்குத் தாந்தாம்பரிஹரித்துக்கொள்ள ப்ராப்தியுள்ளது, சம்பந்தமு மாபந்நராகையுமன்றோ உனக்குரக்ஷிக்கைக்குவேண்டுவது. நாமுதவும் ஸ்வபாவராலும், பேறித்தலையாலே யானபின்பு, பேற்றுக்கிடான ஜ்ஞாநம்வேணுங்காணு முதவும்போதென்ன ( ஞானமூர்த்தி ) என்னை நித்யசம்சாரியாக்கிக் கொள்ளுகைக்கிடான வறிவன்றோவென்கையிலுள்ளது. இத்தைக்கழித்தென்னையும் நல்வழிபோக்குமறிவுள்ள துன்கையிலேயன்றோ. "ஆமாறொன்றறியேன்நான்," "ஆமாறறியும்பிரானே" [ கைவகிஞ்சித்பரோக்ஷந்தே இத்யாதி ] நானறிவதொன்றுமில்லை, நீயறியாததொன்றுமில்லை; நான்செய்யவல்லதொன்றுமில்லை, நீசெய்யமாட்டாததொன்றுமில்லையானல், ஆர்காரியமார்க்குப்பரம். ஒருவனுக்குக்கண் தோற்றுதேகாலும் நடைதாராதேயிருந்தது, ஒருவனுக்குக்கண்ணும்தோற்றிக்காலும் நடைதருவதுமா யிருந்ததானல், ஆர்க்கார்வழி காட்டிக்கொடுபோவார். நிதாநமறிந்து பரிஹரிக்கைக்கிடான அறிவையேஸ்வரூபமாகவுடையவனே. ஆபத்துக்குதவுமவனுமாய்அறிந்து பரிஹரிக்கைக்கிடான ஜ்ஞாநமுமுண்டானலும்,ப்ராப்தியுள்ள விஷயங்களிலேயன்றோ வுதவுவதென்ன (நாராயணா)இப்படிரக்ஷிக்க ப்ராப்தனானவனே.இதுதான் சரீரதயாசேஷமென்றிறே.இத்தால்சொல்லுகிறது.ஆனல்கேவலம் சரீரமோ சரீரியோபெறுகைக்கு யத்நிப்பது; உடையவனன்றோ உடைமைபெறுகைக்கு வ்யாபரிப்பான்.(என்றென்று)இவ்விரட்டிப்புக்குக்கருத்து;நாராயணா

சப்தத்துக்கு-உபாயத்வோபயோகியானவாத்ஸல்யாதிகளும் ப்ராப்யத்வோபயோகியான சேஷித்வாதிகுணங்களுமர்த்தமாகையாலே, அவ்விரண்டையும்பற்ற-இவ்விரட்டிப்பு. இனிஇவர்தாமொரு ப்ரயோஜநத்துக்காக வொருகால்சொல்லி, "அதுகைப்புகுந்தது" என்றாறியிருக்குமவரல்லரே; நம்முபாயத்தில் வர்த்தமாநம்போலே யிதுதான் ப்ரயோஜநமா யிருக்குமேயிவர்க்கும். * நமோநாரணாவென்றோவாதுரைக்குமுரையிறே யிதுதான். (காலந்தோறும்) ஒருகாலத்திலே யீத்தையுஞ்சொல்லி, வேறொருகாலத்திலே "வேறொருவஸ்துவுபாஸ்யம்" என்றதிலேகால் வாங்குகிறேனோ. (யானிருந்து) படுவதெல்லாம்பட்டும் நூறேபிராயமாக விருக்கவேணுமோ. குணாதிகவிஷயத்தைப்பிரிந்தால் முடியவொட்டாது "இன்னமும்காணலாமோ" என்னும்நசை. (கைதலைபூசலிட்டால்) தலையிலே கைவைத்தால் மெய்காட்டவேண்டாவோ. தலையில்கைவைத்துக்கூப்பிட்டாலென்னுதல், கையும்தலையுமான பூசல்மாறாதே யொருபடியேயிருந்தாலுமென்னுதல். (கோலமேனி) ஆசைப்பட்டார்க்கன்றாகில் அவ்வடிவார்க்கு; * பக்தாநாமென்றோ. சேர்ந்துகுளிர்ந்த தண்ணீரைவிடாயர்க்கெட்டாமல்வைப்பாரைப்போலே, வேட்டார்க்குதவாததண்ணீராவதே * மரதகமணித்தடமிறே. (காண) கருமுகைமாலைதேடுவார், சூடவன்றிக்கே சும்மாட்டைக்கொள்ளத் தேடுவர்களோ. கிட்டினாலும் * சதாபஸ்யந்தியிறே; * காரார்திருமேனி காணுமளவுமிறேயிங்கும்; * அழைப்பன் திருவேங்கடத்தானைக்காணவித்தனையிறே, [illegible] (தத்யாஃபஸ்யந்திமேநாதம்) நாடாகக்கொள்ளை கொள்ளாநின்றது கிடீரென்சரக்கையென்றாளிறே. (வாராய்) அவ்வடிவைக்காணும்போதென்று மத்தலையாலே வரப்பெறவிருக்கைபோலேகாணும்முறை. காணவென்று-ப்ராப்யம்சொல்லிற்று; வாராயென்று-ப்ராபகம்சொல்லுகிறது. வருகிறிலை. வாராயென்றால் வளைக்கவொண்ணாதிறே.

நீமுறைசெய்யப் பார்த்திலையேயாகிலும்என்க்லேஶம் நீருமத்தனையே யெனக்குவேண்டுவது (கூவியும்கொள்ளாயே) முறைகெடவழைத்தாகிலும் கொள்ளுகிறிலை.

காலந்தோறும் யானிருந்துகைதலைபூசலிட்டால் கோலமேனிகாணவருகிறிலை, கூவியும்கொள்ளுகிறிலை; அதுக்கடி, சீலமில்லாச்சிறியனேலும்செய்வினையோபெரிதால். நாராயணனென்கையாலே-ப்ராப்யம்சொல்லிற்று, சிறியனென்கையாலே-ப்ரத்யகாத்மஸ்வரூபம்சொல்லிற்று,. வாராயென்கையாலே-உபாயம்சொல்லிற்று, காணவென்கையாலே - பலம் சொல்லிற்று,செய்வினையோபெரிதென்கையாலே-விரோதிசொல்லிற்று; ஆகவர்த்தபஞ்சகமு மிதிலேசொல்லிற்று.......... ....................*

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு (சீலமில்லாவித்யாதி) "காலந்தோறும்" இத்யாரப்ய, "கூவியுங்கொள்ளாய், செய்வினையோபெரிதால்" என்றத்தை விவக்ஷித்தவதாரிகை (நெடுங்காலமித்யாதி)

"சீலம்" என்றால் - வ்ருத்தத்தைச்சொல்லுமோவென்ன (வ்ருத்தத்தையித்யாதி) ஆக, இத்தால் - "ஶீலம் ஸ்வபாவே ஸத்வ்ருத்தே" (ஶீலம்ஸ்வபாவே ஸத்வ்ருத்தே) என்கிறபடியே இவ்விடத்தில், சீலமென்று - சத்வ்ருத்தத்தைச் சொல்லுகிறது. மேலுக்கு யோக்யதையில்லையென்கிறது - "சிறியன்" என்றுஜ்ஞாநசூந்யதையைச் சொல்லுகையாலே. (ஆஶ்ரயமுமில்லையென்றது) ஜ்ஞாநமுண்டானபோதன்றோ சத்தையுள்ளது, அந்தஜ்ஞாநமில்லாமையாலே ஆஶ்ரயமுமில்லையென்கிறார். எல்லார்க்குமாத்மாக்கள் அணுவென்கிறதொவ்வாதோ, உமக்குவாசியேதென்ன ; இங்குச்சொல்லுகிறது - அணுத்வமன்று, ஜ்ஞாநசூக்ஷ்மதையை யென்கிறார் (ஆத்மாவணுவாயித்யாதி) அல்லாதார்க்கும் ஸ்வரூபமணுவாகிலும் ஜ்ஞாநவைபவமாகிலுமுண்டே, அதுவுமெனக்கில்லையென்றபடி. இத்தால் - ஸ்வரூப ஸங்கோசம் சொல்லுகிறதன்று, ஜ்ஞாநசங்கோசத்தைப்பற்ற - "சிறியன்" என்கிறதென்றபடி. "சீலமில்லா-சிறியனேலும்" என்றுகூட்டிபாவம். (இப்போதுமித்யாதி) சீலமில்லாச் சிறியனேலும்-சத்வ்ருத்தமின்றியே யறிவிலியான க்ஷுத்ரனுமிருந்தேனேயாகிலும்.

இன்னத்தைப்பற்றப் பெரியதென்னுமையாலே யருளிச்செய்கிறார் (பண்ணினவித்யாதி) இது - பாபத்தினுடையவைபுல்யபரம். "பெரிது" என்றதுக்கு தாத்பர்யாந்தரம் (சம்சாரிகளித்யாதி) இது - ப்ரகாராந்தரேண வைபுல்யபரம். இங்கே - "ஶ்ரீரங்கேஶ ஸ்வத்குணாநாமிவாஸ்மத்தோஷாணாம் சாபாரத்ருஶ்வாயதோஹம்" (ஶ்ரீரங்கேஶத்வத்குணாநாமிவாஸ்மத்தோஷாணாம்சாபாரத்ருஶ்வாயதோஹம்) இத்யாத்யநுசந்தேயம். "பெரிது" என்றறிந்தபடி யெப்படியென்ன (அந்தஜ்ஞாநமுமித்யாதி) "குணங்களிலும்பெரிது" என்றால்போராதோ, பக்திரூபாபந்ந ஜ்ஞாநத்திலுங்காட்டில் பெரிதென்றால்-பாபாதிக்யம் தோற்றும்படி யெப்படியென்ன (லோகத்திலித்யாதி) இவ்விடத்திலே முதலிகள், "இவர்தானே 'சிறியன்' என்கையாலே-ஜ்ஞாநப்ரபை யடங்கிற்றென்று ஜ்ஞாநசங்கோசம் சொல்லிற்றிறே ; ஆயிருக்க, பக்திரூபாபந்ந ஜ்ஞாநத்திலுங்காட்டிலென்று-ஜ்ஞாநமுண்டானதாக வருளிச்செய்கிற விது சேருமோ" என்றுகேட்க ; "'கேவலமொன்றுமில்லை' என்கிறதன்று ; அவனைப்பெறுகைக் குறுப்பாயிருப்பதொரு சாதநாநுஷ்டாநம் பண்ணுகைக்கீடான ஜ்ஞாநமில்லை, அவன்தந்த * மயர்வறமதிநலமாகிற பக்திரூபாபந்நஜ்ஞாநமுண்டு" என்றருளிச்செய்வர். இல்லையாகில் கூப்பிடக்கூடாதிறே. செய்வினை-செய்தவினை. "செய்" என்றதின்பாவம் (இதுதானித்யாதி) "செய்வினையோ" என்றதுக்குபாவம் (என்பாபத்தையித்யாதி) தடஸ்த சங்கையை யநுவதித்து பரிஹரிக்கிறார் (திருநாமேத்யாதி)

யதாமநோரத மநுபவிப்பியாமை யவன்குற்றமாயிருக்க, இப்படிதன் குற்றமாக நினைத்தபேருண்டோவென்ன (மமைவேத்யாதி) "மமைவ துஷ்க்ருதம் கிஞ்சிந் மஹதஸ்தி ந ஸம்ஶய: ஸமர்தாவபி தௌ யந்நாவேக்ஷேதே பரந்தபௌ

வௌ" (மமைவதுஷ்க்ருதம்கிஞ்சிந்மஹதஸ்தி ஸம்ஸட: । ஸமர்த்தாவபிதௌ யந்மாந்நாவேக்ஷேதே பாந்தவௌ) இதிஸுந்தரகாண்டேஷ்டத்ரிம்சேஸர்கா. பதோபாதாநம்பண்ணாதே ப்லோகத்துக்கெல்லாமர்த்தம் (விரோதீத்யாதி) "ஸமர்த்தௌ" (ஸமர்த்தௌ) என்றதினர்த்த க்ரியாகாரித்வம் சொல்லுகிறது - "பாந்தவௌ" (பாந்தவௌ) என்று. "ஸமர்த்தௌ, பாந்தவௌ" (ஸமர்த்தௌ, பாந்தவௌ) என்கிறபதங்களுக்கர்த்தம் (விரோதித்யாதிவாக்யத்வயம்) "மாம்" என்றதுக்கு பாவம் (நான்றானித்யாதி) * ஏவகாரத்துக்கர்த்தம்-நிஸ்சயமாய், நிஸ்சயம் சம்சயபூர்வகமாகையாலே சம்சயத்தையருளிச்செய்துகொண்டு ஏவகாரார்த்தத்தை யருளிச்செய்கிறார் (இதுக்கடியித்யாதி) "கிஞ்சித்" என்றதுக்கு-ஒன்றென்றர்த்தமாக விவக்ஷித்து, "ஒன்று" என்கிறதென்னென்கிற சங்கையிலே யருளிச்செய்கிறார் (நாந்தாமித்யாதி) "ஒன்றுண்டு" என்றநிந்தபடி யெப்படியென்ன (கார்யகல்ப்யமிறேயென்று) ஒன்றுகிலும், அல்பமாகிலத்தை பரிஹரித்துக்கொள்ள லாகாதோவென்ன (மஹத்) அவனுடைய க்ருபையையும் தப்புவிக்கத்தக்கதாயிருப்பதொன்றுண்டு. என்றுபிராட்டி யருளிச்செய்தாப்போலே (இழக்கைக்கடி பாபமேயிறே) என்கிறதொன்று கீழேகூட்டுவது.

பாபமதிகமானல் ப்ராயஸ்சித்தம் பண்ணினாலோவென்ன (பாபப்ராசுர்யத்தையித்யாதி)* அதாவது-இவர்ப்ரபந்நராகையாலே யவனைகைபார்த்திருக்குமவராகையாலே ப்ராயஸ்சித்தம் பண்ணமாட்டாரென்றபடி. "அவன்கையிலேபரிஹாரம்" என்றதைதிட்டிருப்ப தொன்றுமதுக்குப்ரமாணம் (எப்போதுமித்யாதி) சர்வகாலத்திலும் நம்பக்கலுண்டான பாபத்தைப்போக்குகைக்காக, கைவிட்டுநீங்காத திருவாழியையுடையவனிதிபாசுரார்த்த:. பெரியதிருவந்தாதி எண்பத்தேழாம்பாட்டு, "எப்போதும்" இத்யாதி: சாடு (இதுதானித்யாதி) இதுதான்-இந்த வறுதியிடுகைதான். சுதர்ஸநமாயிருக்கும்-சோபநமான மதமாயிருக்கும், "ஈஸ்வரனோ ரக்ஷகன்" என்கிறது நல்லஜ்ஞாநமாயிருக்குமிறேயென்னுமாமென்று ஸ்வபாவார்த்தம்; திருவாழியாழ்வானென்றுந்தோற்றுகைச-சாடு. "அவன்கையிலே பரிஹாரம்" என்றதுக்குப்ரமாணாந்தரம் (பகவதோபலேநேத்யாதி) "ஸஹவதா வெள நஸஹவதாவீரெ ணஸஹவ் தேஜஸா ஸஹவத: கநீணாஸஹ வ ஷ ீகஸ்ஹீஷுரி" (பகவதோபலேநபகவதோவீர்யேணபகவதஸ்தேஜஸா பகவத:கர்மணாபகவத:கர்மகரிஷ்யாமி) இதிபாஞ்சராத்ரசம்ஹிதா. அவன்படியை-அவன்சக்தியோகத்தை. அப்படியவன்படியை யநுசந்தித்திருப்பராயிருந்த பேருண்டோவென்ன (கஜம்வேத்யாதி) "ஜஜாவாஷீக்ஷூவிஹஸவாவ்ரா வ்ரூாவாவநீரா ஸ்ரீதா। நாஹாாய திவஷ்ருாஸமோஹ ஞரநாஸவஸுாஸ்ரீதா" (கஜம்வாயிகூடஸிம்ஹம்வாவ்யாக்ரம்வாஸநமாஸ்ரிதா । நாஹாரயதிஸந்த்ராஸம்பாஹூராமஸ்யஸம்ஸ்ரிதா) இத்யயோத்யாகாண்டே த்ரயஸ்ரம்ஸர்கா, ராமமநுகம்ய ப்ரத்யாகதஸ்ஸுமந்த்ர:. ஒரோவகைக்கோரான்றெடுக்கையாலே-ஜாத்யேகவசநமாய்; ஆனைத்திரள், சிம்ஹத்திரள், புலித்திரளென்று விவக்ஷிதம். இப்படிகனத்த பாபத்தைப்பண்ணினீராகில் நம்மால்ரக்ஷிக்கப்போமோவென்ன: புநஸ்ச ஒருதாத்பர்யம் (இனியித்யாதி) * பஹூநாமநுக்ரஹோந்யாய்ய: அன்றோ, உமக்குதவவேண்டுவானென்னென்ன (பூமியாகவித்யாதி) "ஞாலம்" என்றவசேதந சமாதிக்குபாவம் (தந்தாமுடையவித்யாதி) "நாராயணு" என்றபதத்திலே நோக்கர்கபாவாந்தரம் (ப்ரளயமித்யாதி) ஆக, "ஞாலம்" என்றதுக்கு

மூன்றுபாவம். நூந்தினது-லோகமெல்லாமென்று ; இரண்டாவது-அஜ்ஞமென்று; மூன்றாவது-ஸ்வரக்ஷணத்திலே சக்தியில்லாதவென்று.

இத்தலையாலே-நம்மாலே. “ஞானமூர்த்தி ) என்றதுக்கு ப்ரதிகோடியாக பாவம் ( என்னையித்யாதி ) உக்தார்த்தத்துக்கு ப்ரமாணம் ( ஆமாறித்யாதி ) ஆம் ப்ரகாரமொன்று மறியேனித்யர்த்தஃ. ( ஆமாறறியும்பிரானே ) மேல்விளைவதறியு முபகாரகனானவனே யித்யர்த்தஃ. ஆனிரையில் எட்டாம்பாட்டு, “ சீமாலிகன் ” இத்யாதி. “ அறிவுள்ளானன்மையிலே ) என்றதுக்கும், தமக்கறிவில்லாமைக்கும் ப்ரமாணாந்தரம் ( நைவேத்யாதி ) “ 𑌨𑍈𑌵𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌤𑍍 𑌪𑌰𑍋𑌕𑍍𑌷𑌂 𑌤𑍇 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑍋𑌽𑌸𑌿 𑌨 𑌕𑌸𑍍𑌯𑌚𑌿𑌤𑍍। 𑌨𑍈𑌵𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌦𑌸𑌿𑌦𑍍𑌧𑌂 𑌤𑍇 𑌨 𑌚 𑌸𑌿𑌦𑍍𑌧𑍋𑌽𑌸𑌿 𑌕𑌸𑍍𑌯𑌚𑌿𑌤𑍍 ’ ( நைவகிஞ்சித்பரோக்ஷந்தே ப்ரத்யக்ஷோஸி நகஸ்யசித்। நைவகிஞ்சிதஸித்தந்தே நச ஸித்தோஸிகஸ்யசித் ) இதிஜிதந்தாயாம். பாதசதுஷ்டயத்துக்கும் வ்யுத்க்ரமேணார்த்தம் ( நானறிவதித்யாதி வாக்யசதுஷ்டயத்தாலே ) “ 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑍋𑌽𑌸𑌿 𑌨 𑌕𑌸𑍍𑌯𑌚𑌿𑌤𑍍 ” ( ப்ரத்யக்ஷோஸிநகஸ்யசித் ) என்கிறபதத்திலே - நீயொருவர்க்கும் ப்ரத்யக்ஷமாகாயென்கையாலே, உன்னைசாக்ஷாத்கரிக்க வல்லாரொருவருமில்லை என்னுமிடம்பலித்ததிறே ; அத்தையருளிச்செய்கிறார் ( நானறிவதொன்றுமில்லை யென்று ) “ 𑌨 𑌸𑌿𑌦𑍍𑌧𑍋𑌽𑌸𑌿 𑌕𑌸𑍍𑌯𑌚𑌿𑌤𑍍” ( நசஸித்தோஸிகஸ்யசித் ) என்கிறவிடத்திலே - நீயொருவர்க்கும் சித்தனாகாயென்கையாலே, உன்னைசாதிக்கவல்லாரொருவருமில்லையென்னுமிடம் பலித்ததிறே ; அத்தையருளிச்செய்கிறார் ( நான் செய்யவல்லதொன்றுமில்லையென்று ) ஜ்ஞாநமுண்டானவன் ஜ்ஞாநஹீநனுக்குக் கார்யம் செய்யவேணுமோவென்ன ( ஒருவனுக்கித்யாதி ) தயாவானுக்குச் செய்யாதிருக்க வொண்ணாதென்றபடி. “ ஞானமூர்த்தி.” என்றதுக்குசப்தார்த்தம் ( நிதாநமித்யாதி )

நாராயணன் என்றால் - ப்ராப்தியைச்சொல்லுமோவென்ன ( இதுதானித்யாதி ) இத்தால் - நாராயணசப்தத்தால். இத்தால் பலித்ததேதெனன் ( ஆனாலித்யாதி ) இது - பஹுவ்ரீஹியைப்பற்ற. தத்புருஷனிலர்த்தம் ( உடையவனித்யாதி ) ஆக, நாராயணசப்தத்துக்கிரண்டர்த்தம் - ஶரீரஶரீரிபாவஸம்பந்தமும், ஸ்வஸ்வாமிபாவசம்பந்தமும். “என்றென்று” என்கிறவிரட்டிப்புக்கிரண்டுபாவம். முந்தினது (இவ்விரட்டிப்புக்குக்கருத்தித்யாதி) இரண்டாவது ( இனியிவர்தாமித்யாதி ) இதில்போக்யதையைப்பற்ற இரட்டிப்பென்றபடி. (ஆறியிருக்குமவரல்லரோ) ஆகையாலே போக்யதையாலே பலகாலும் சொல்லுகிறாரென்றபடி. ஆறியிராமைக்கு ஹேதுவேதென்ன (நம்முபாயத்திலித்யாதி) அதாவது - நம்முபாயவாசகமானத்வயத்தில் “ப்ரபத்யே” என்கிறவர்த்தமாநம்போலேயிதுதான் ப்ரயோஜநமாயிருக்குமே யிவர்க்கென்றபடி. வர்த்தமானத்துக்கு - அநேகார்த்தமுண்டானாலும் இவ்விடத்தில், போக்யதையேவிவக்ஷிதம். போக்யமென்றதுக்குப்ரமாணம் ( நமோநாராணவித்யாதி ) முதற்றிருவந்தாதி தொண்ணூற்றைந்தாம்பாட்டு, “ நாவாயிலுண்டே” இத்யாதி. “ஓவாதுரைக்கும்” என்றதுக்கிரண்டுதாத்பர்யம். அதாவது-ஸஹஸ்ராக்ஷரீமந்த்ரஜபம்போலன்றிக்கே மூச்சுவிடாமல் சுலபமாகவநுசந்திக்கலாயிருக்குமென்னுதல்; போக்யதையாலே நித்யமாக வநுசந்திக்கப்படுமென்னுதல்; இதுவே இங்குத்தைக்குவேண்டுவது.

கீழே, வீப்ஸைக்கு-போக்யதையாலேவிடமாட்டாமையைச்சொல்லி, “காலந்தோறும்” என்று - சாதநத்வேந விடமாட்டாமையைச்சொல்லுகிறார் (ஒருகால

த்திலேயித்யாதி) காணவ்யுத்பத்தியாலே, நாராயணசப்தத்துக்கு - உபாயத்வமு மர்த்தமிறே. நூற்றேயிராயமாக - நூறுவர்ஷமுமென்றபடி. இருந்துபடுகிறதென், முடிந்துபிழைக்கவொண்ணாதோவென்ன (துணிகேத்யாதி) "கைதலைபூசலிட்டால்" என்றதுக்கு மூன்றர்த்தம். பூசலென்று - பொருந்துதலாய், தலையிலேகைபொருந்தினால்; அதாவது - அஞ்சலிபண்ணினாலென்னுதல், இத்தையருளிச்செய்கிறார் (தலையிலேயித்யாதி) மெய்காட்டவென்றது - சாடு; * கோலமேனியிலேதாத்பர்யம். அன்றிக்கே, தலையிலேகைவைத்துக்கூப்பிட்டாலென்னுதல்; பூசலிடல்-கூப்பிடுதல்; அன்றிக்கே, பூசலென்று-பொருந்துதலாய், தலையிலேகைவைத்து; அதாவது-அஞ்சலிகாலந்தோறு மிருந்திட்டாலென்னுதல். இத்தலையிலஞ்சலிமாறாதேயொருபடியிருந்தாலென்றபடி. அன்றிக்கே, அர்த்தத்வயமாய், "தலையிலே கைவைத்தால்" என்றமுந்தினவர்த்தவிவரணம் (கையுந்தலையுமானவித்யாதி) என்னவுமாம்.

"கைதலைபூசலிட்டால் - கோலமேனிகாணவாராய்" என்றுகூட்டிபாவம் (ஆசைப்பட்டார்க்கித்யாதி) "வாராய்" என்கிறவார்த்யதிசயத்தாலே பலித்ததாத்பர்யம் (சேர்ந்தித்யாதி) வேட்டார்க்கு-ஆசைப்பட்டார்க்கு. வேட்கை - ஆசை. அவ்வளவு-தண்ணீரென்னலாமோவென்ன (மரதகேத்யாதி) "கோலமேனி - காண" என்றுகூட்டிபாவம் (கருமுகையித்யாதி) சும்மாட்டை - சுமையின்கீழ்த்தலையில்சும்மாட்டை. காண்கையே ப்ரயோஜநமோவென்ன (கிட்டினாலுமித்யாதி) தேசவிசேஷத்திலே * சதாபஶ்யந்தியானாலும், இங்கே வேறேயுஞ்சிலவில்லையோவென்ன் (காராரித்யாதி) கருமைமிக்கவழகியதிருமேனியென்றபடி. பாசுரத்துக்குஸ்பஷ்டோர்த்தஃ. "தம்வை பத்மதளபத்ராக்ஷம் ஸிம்ஹவிக்ராந்தகாமிநம் । தந்யாஃ பஶ்யந்தி மே நாதம் க்ருதஜ்ஞம் ப்ரியவாதிநம்" (தம்பத்மதளபத்ராக்ஷம் ஸிம்ஹவிக்ராந்தகாமிநம் । தந்யாஃபஶ்யந்திமேநாதம்க்ருதஜ்ஞம்ப்ரியவாதிநம்) இதி ஸுந்தரகாண்டே ஸீதா: "தந்யாஃ" (தந்யாஃ) என்றுவிசேஷித்திருக்க, (நாட்டாகக்கொள்ளைகொள்ளாநின்றது) என்றருளிச்செய்கிறதுக்குக்கருத்தென்னென்னில்; "மே நாதம் யே பஶ்யந்தி, தே தந்யாஃ" (மேநாதம்யேபஶ்யந்தி, தேதந்யாஃ) என்று விவக்ஷையாலே-நாடாகவித்யாதி யருளிச்செய்ததென்றபடி. பத்மதளபத்ராக்ஷம்-தாமரைப்பூவிதழ்போலேயும், தாமரையிலைபோலேயுமிருக்கிற திருக்கண்களையும் திருமேனியையுமுடையவனென்றபடி; "அக்ஷ்ணோரிந்த்ரியகாயயோஃ" (அக்ஷமிந்த்ரியகாயயோஃ) இத்யமரஃ. "வருகிறிலை" என்கிறதென், தாமேசொல்லவொண்ணாதோவென்ன (அவ்வடிவையித்யாதி) இப்படிசொல்லுவானென்னென்ன (காணவென்றித்யாதி) (வருகிறிலையென்று) சப்தார்த்தம். இப்படிசொல்லுவானென், நிர்ப்பந்தமானாலோவென்ன (வாராயென்றாலித்யாதி) என்றால் - என்றித்யர்த்தஃ.

மேலுக்கவதாரிகை (நீமுறையித்யாதி) அன்றிக்கே, மேலிற்பதத்துக்கவதாரிகை (வாராயென்றாலித்யாதிவாச்யத்வயமும்) என்னுதல். வாராயென்றால் - வாராதேயிருந்தால். முறை - அவன்றானேவந்துமுகங்காட்டுகை. கூவியும்கொள்ளாயே-அழைத்தாகிலும்கொள்ளுகிறிலை. முறைகெடவென்றது - "கூவியும்" என்ற சமப்ததாத்பர்யம்.

(காலந்தோறுமிதி) ஞாலமுண்டாயித்யாரப்ய, கூவியுங்கொள்ளாய், சிலமில்லாச்சிறியனேலும் செய்வினையோபெரிதாலென்றந்வயதிலேதாத்பர்யம்.

ப்ராஸங்கிகம் (நாராயணனித்யாதி) "இங்கே- த்வயார்த்தமும்விவக்ஷிதம்" என்றருளிச்செய்வர். அதாவது - "ஞாலமுண்டாய், ஞானமூர்த்தி" என்று-நாராயணசப்தார்த்தமான ஜ்ஞாநஶக்த்யாதிகளும்; "நாராயணா" என்று - ஆஶ்ரயணசௌகர்யாபாதகமான வாத்ஸல்யாதிகளும்; "ஞாலமுண்டாய்" என்று-ரக்ஷணம் சொல்லுகையால், நாராயணபதசாமர்த்யத்தாலேயாதல் ஸ்ரீமத்பதார்த்தமும்; "கோலமேனி" என்று - சரணசப்தார்த்தமும்; "வாராய்" என்று - ஶரணசப்தார்த்தமும்; "கைதலைபூசலிட்டால்" என்று-க்ரியாபதார்த்தமும்; "காலந்தோறும்" என்று-உபஸர்க்கார்த்தமானமஹாவிஶ்வாஸமும்; "யான்" என்று - உத்தமனாலே யாக்ஷிப்தனானவதிகாரியும்; "என்றென்று" என்கிறவீப்ஸையாலே- பூர்வோத்தரவாக்யஸ்த்த நாராயணசப்தங்களும், க்ரியாபதத்தினுடைய வர்த்தமாநார்த்தமும், ஸ்ரீமத்பதார்த்தமும்; "காண" என்கையாலே - சதுர்த்யர்த்தமானப்ராப்யமும்; "செய்வினையோபெரிதால்" என்று - நமஶ்ஶப்தத்தாலே நிஷேத்யதயா சொல்லப்பட்டவவித்யாதிகளும் சொல்லப்படுகிறது. நமஶ்ஶப்தார்த்தமாக வவித்யாதிகளும் கழியுண்ணக்கடவதிறே..........................................*

## இரண்டாம்பாட்டு.

கொள்ளமாளாவின்பவெள்ளங்கோதிலதந்திடுமென்
வள்ளலேயோவையங்கொண்டவாமனாவோவென்றென்று
நள்ளிராவுநன்பகலுநானிருந்தோலமிட்டாற்
கள்ளமாயாவுன்னையென்கண்காணவந்தியாயே.

### ஆறுயிரப்படி.

(கொள்ளமாளா) இதரவிஷயவைராக்யபூர்வகமாக சகலேதரவைத்ருஷ்ண்யாவஹமான த்வத்குணாநுபவஜநிதநிரவதிகாநந்த மஹௌகத்தை யெனக்குத்தந்தருளின வென்னுடைய பரமோதாரனே, உன்னுடைய தாத்ருத்வலக்ஷணஸ்வரூபத்தை யந்யதாகரித்துக்கொண்டு மாஶ்ரிதருடைய வபேக்ஷிதத்தைச்செய்தருளாநிற்கு மாஶ்ரிதவத்ஸலனேயோ! என்றென்று, த்வத்ஸம்ஶ்லேஷத்தாலே போக்கக்கடவ வழகியகாலமெல்லாம் நானிருந்தோலமிட்டால் என்கண்களுக்குன்னைக்காட்டாதொழிகிறவனே, ஈண்டெனவந்தென்கண்களுக்குன்னைக்காட்டித்தந்தருளாயென்கிறார் ..........................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், என்னை அநந்யார்ஹமாக்கி யநுபவிப்பித்த வௌதார்யத்தைச் சொல்லிக்கூப்பிட்டால்,என்கண் காண வந்துன்னைனக்குத்தருகிறிலையென்கிறார்.

வையம் - அந்யாபிமாநவிஷயையான பூமியை. கொண்ட - அர்த்தியாய்ப் பெற்றுக்கொண்ட வர்த்தித்வத்தையுடைய. வாமனா-வாமனனே. அந்த வுபகாரகத்வத்தை யென்னையநுபவிப்பித்து, கொள்ள-அநுபவிக்கவநுபவிக்க. மாளா-எல்லைகாணவொண்ணாத. இன்பவெள்ளம்-ஆநந்தசமுத்ரத்தை, கோத- அநுபவதசையில் த்ருப்தியாதல், அந்யாகாங்க்ஷையாதலாகிற கோது. இல-இல்லாதபடி. தந்திடும்-ஆந்தரமாகவுபகரிக்கும். என்-என்னுடைய. வள்ளலே-மஹோதாரனே. ஒ ஒ வென்றென்று - என்றென்று விஷண்ணனாய்ச்சொல்லி. நள்ளிராவும் - மத்யராத்ரத்திலும். நன்-பதார்த்தப்ரகாசகமான. பகலும்-பகலிலும். நான் -உன்னையொழியச்செல்லாமையையுடையநான. இருந்து-அந்யவ்யாபாரசூந்யனாய்த் தரியேயிருந்து. ஓலமிட்டால்-கூப்பிட்டால். கள்ளம்-கண்ணுக்குத்தோற்றாதே க்ருத்ரிமனைப்போலே நெஞ்சுக்குள்ளேயிருக்கிற. மாயா-ஆஸ்சர்யபூதனே. உன்னை-கண்டல்லது தரிக்கவொண்ணாதவுன்னை. என்-ஆசைப்பட்டவென். கண்-கண்கள். காண-காணும்படி. வந்து-வந்து. ஈயாய்-தருகிறிலை, தரவேணுமென்றுமாம்.

இங்கு, ஓ என்கிற அசைகள்-விஷாதத்தைக்காட்டுகிறது .....................*

## ஈடு - இரண்டாம்பாட்டு.

பண்டுபண்ணின வுபகாரங்களைச்சொல்லி; அப்படியுபகரித்துன் சுவட்டையறிவித்து, இப்போது நான் கூப்பிட, முகங்காட்டாதேயொழவாங்கியிருக்கை போருமோவென்கிறார்.

( கொள்ளமாளாவின்பவெள்ளம் ) அநுபவிக்க வநுபவிக்கக் குறைபிறவாதபடியான வாநந்தசாகரம். “ வீவிலின்பமிகவெல்லைநிகழ்ந்தனன் ” என்றத்தைச்சொல்லுகிறார். ( கோதிலதந்திடும் ) ஆநந்தத்துக்குக் கோதாகிறது-அநுபவித்தால் “ அமையும் ” என்றிருத்தல், விஷயாந்தரத்திலே யபேக்ஷையைப் பிறப்பித்தல்செய்கை ; இதங்ஙனன்றிக்கே, அநுபவிக்க வநுபவிக்கத் தன்பக்கலிலே யபேக்ஷையைப்பிறப்பித்து, இதரவிஷய வைராக்யத்தையும் பிறப்பிப்பதான வாநந்தத்தை, ஆக, கோதிலவாய், கொள்ளக்கொள்ள மாளாதபடியான ஆநந்தவெள்ளத்தைத்தந்த. ( என்வள்ளலேயோ ) தருகிறபோது தன்பேறாகவுபகரித்து, இப்போதென்னதுபேறாக்கி, நான் கூப்பிட விருக்கிறாயே. தன்பேறாக வுபகரிக்கையிறே - வள்ளற்றனமாகிறது. “ ஆநந்தமய: ” [ ஆநந்தமய: ] “ ஆநந்தோ ப்ரஹ்ம ” ( ஆநந்தோப்ரஹ்ம ) என்கிறதன்னை யுபகரித்தபடியிறே. இப்படியிப்போது கூப்பிடப்பண்ண நினைத்திருந்தால், * வீற்றிருந்தேழுலகிலே யப்படியென்னை யநுபவிப்பிக்கவேணுமோ. சிறியதுக்கினிய திட்டுக்கெடுத்தான்காணும். “ சிறியன் ” என்றாரே. ( வையங்கொண்டவாமனாவோ ) இரந்தார்க்குக் கொடுக்கைக்காக நீயிரக்குமவனன்றோ. “ த்ரைலோக்யத்தையுமிழந்தேன் ” என்று காலிலேவிழுந்த விந்த்ரனைக் கண்ணநீரை மாற்றுகைக்காக, ஸ்ரிய:பதியானதன்னை யிரப்பாளனாக்கினான்றே. நீயிரந்துதருகையொழிய நானிரந்து கூப்பிடவிருப்பதே

யிப்போது. (என்றென்று) இந்த்ரனைப்போலே ராஜ்யம்பெற்றுப்போகிறானென்று, மஹாபலியைப்போலே ஔதார்யங்கொண்டாடிப் போகிறானென்று, எப்போதுமித்தையேசொல்லி. வையங்கொண்டபின்பும் வாமநவேஷமாயிற்றிவர் திருவுள்ளத்திலூற்றிருந்தது. (நள்ளிராவும்நன்பகலும்) நள்ளென்று-நடுவாதல், செறிவாதல்; ராத்ரியிலல்லாத பதார்த்தங்களினுடைய வொலிமாறினால் வருவதோரொலியுண்டு, அதினுடைய வநுகாரமாதல். எல்லாவற்றாலும்-மத்யராத்ரமென்றபடி. "ய ஏஷ ஸுப்தேஷு" (யஏஷஸுப்தேஷு) என்று-நீயுணர்ந்துநோக்குங்காலத்திலே, நானுணர்ந்து கூப்பிடும்படிபண்ணுவதே. (நன்பகல்) தீர்ப்பாரையாமினிப்போடு*வீற்றிருந்தேழுலகோடுவாசியறபகவத்ஸ்பர்ஶம்மாறுதேபோருகையாலே-நன்பகலென்கிறார். புறம்பொருவிஷயத்தை யநுபவித்தால் காணாதபோதுமறந்து வேறொன்றிலேயும் நெஞ்சைவைக்கலாம்படியிருக்குமிறே. அன்றிக்கே, நன்பகலென்று-செவ்வாய்க்கிழமையை "மங்களவாரம்" என்னுமாபோலே, அவனைக்காணப்பெறாமையாலே சூந்யமானகாலமென்னவுமாம். (நானிருந்து) கூப்பிடுகைக்கு க்ஷமனல்லாதபடி துர்ப்பலனானநானிருந்து. (நானிருந்து) *வீவிலின்பமிகவெல்லை நிகழ்ந்தநானிருந்து. (ஓலமிட்டால்) கூப்பிட்டால். (கள்ளமாயா) கண்ணுக்கவிஷயமாக்கி, நெஞ்சில்மறக்கவொண்ணாதபடி பண்ணுகிற வாஶ்சர்யபூதனே. (உன்னை) கண்டல்லது தரிக்கவொண்ணாதபடி வைலக்ஷண்யத்தையுடையவுன்னை. * கோலமேனியிறே. (என்கண்காண) * விரும்புமென்கண்கள் காணும்படி. (வந்தியாய்) நடையழகுகண்டு வாழும்படி முன்னேநடந்துவந்துதரவேணும். வந்துதோற்றும்போதுதான் "நஜீவேயம்" (நஜீவேயம்) "ஹ்ரீரேஷாஹி" (ஹ்ரீரேஷாஹி) என்னும்படியிருக்கையாலே, "இவன்பக்கலொருகுறையில்லையாகாதே" என்றுதோற்றும்படியாயிற்றுவருவது. உன்னை நீயேகொண்டுவந்து ஈயவேணும். ஈகை - கொடுக்கை. தந்தோமே - அல்லாதாரிப்படிகூப்பிடாதிருக்க, உம்மைநம்மையே சொல்லிக்கூப்பிடப்பண்ணினோமேயென்ன; அத்தால்போராது (கண்காணவந்தியாய்) மாநஸாநுபவத்தாலே போராது, கண்ணுக்கிலக்காம்படி வரவேணும். ஈகிறிலையென்னவுமாம்; "செய்வினையோபெரிதால்" என்றத்தோடே யந்வயமப்போது. அன்றிக்கே, ஈயவேணுமென்னவுமாம்..*

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு (கொள்ளமாளாவித்யாதி) "கொள்ளமாளாவின்பவெள்ளம் கோதிலதந்திடும்" என்றத்தைக்கடாக்ஷித்து (பண்ணினவுபகாரங்களைச்சொல்லியென்றது) சுவட்டை-ரசத்தை. போக்யதையையென்றபடி. "ஈயாய்" என்றத்தைக்கடாக்ஷித்தருளிச்செய்கிறார் (எழவாங்கியித்யாதி) எழவாங்கி - தூரப்போய்.

சப்தார்த்தம் ( அநுபவிக்கவித்யாதி ) வெள்ளம்-சாகரம். அவன்ருனிவர்க்கானந்தத்தைக்கொடுத்தானோவென்ன ( வீவிலின்பமித்யாதி ) ஆநந்தத்துக்குக்கோதாகிறது என்கிறவிடத்திலே - "யத்ர நாந்யத் பஶ்யதி நாந்யச் ச்ருணோதி நாந்யத் விஜாநாதி ஸ பூமா - யத்ர நாந்யத் பஶ்யதி நாந்யச் ச்ருணோதி நாந்யத் விஜாநாதி ஸ பூமா" ( யத்ராந்யத்பஶ்பத்யந்யச்ச்ருணோத்யந்ய த்விஜாநாதிததல்பம் - யத்ராநாந்யத்பஶ்யதிநாந்யச்ச்ருணோதிநாந்யத்விஜாநாதிஸபூமா ) இத்யாத்யுஸந்தேயம். உக்தத்தையந்வயித்துக்காட்டுகிருர் (ஆகவித்யாதி) "என்வள்ளலே" என்று - ஸம்போதித்து, "ஓ" என்றதுக்குபாவம் (தருகிறபோதித்யாதி) "வள்ளலே" என்ருல்-தன்பேருகவுபகரித்தானென்று காட்டுமோவென்ன ( தன்பேருகவித்யாதி ) தன்பேருக வுபகரித்ததெத்தையென்ன; "இன்பவெள்ளம்" என்றத்தைக்கடாக்ஷித்தருளிச்செய்கிருர். (ஆநந்தமயஇத்யாதி) இத்தால்பலித்தஹார்த்தபாவம் (இப்படியித்யாதி) கீழே "சிறியன்" என்றத்தைக்கடாக்ஷித்துரசோக்தி ( சிறியதுக்கித்யாதி ) இவர்தாம் சிறியரோவென்ன (சிறியனென்ருரோயென்று)

தானிருந்தானோவென்ன (த்ரைலோக்யத்தையுமித்யாதி) "ஓ" என்கிறபதத்துக்கு பாவமாதல், பலிதமாதல் (நீயிரந்தித்யாதி) வீப்ஸைக்குபாவம் (இந்த்ரனையித்யாதி) இத்தையே-வாமனுவதாரத்தையே. வையங்கொண்ட த்ரிவிக்ரமனென்னுதே, "வாமனு" என்பானென்னென்ன (வையங்கொண்டபின்புமித்யாதி)

செறிவு-அந்தகாரத்தினுடைய நைபிட்யம். இத்தால் - காடாந்தகாரமென்றபடி. "பகல்" என்னவமையாதோ, "நள்ளிரா" என்றதுக்குக்கருத்தென்னென்ன (யஏஷவித்யாதி) "யஏஷோऽந்தரேऽக்ஷிணி புருஷோ த்ருஶ்யதே ... " (யஏஷாऽஸாப்தேஷாऽஜாகர்த்திகாமம்காமம்புருஷோநிர்மிமாண:) இதிகடவல்ல்யாம். பிரிந்துநோவுபடாநிற்க "நன்பகல்" என்பானென்னென்ன (தீர்ப்பாரையித்யாதி) விஶ்லேஷதசையிலும் பகவத்ஸ்பர்ஶம் மாருதேயிருக்குமோவென்ன ( புறம்பொருவித்யாதி ) ( இருக்குமிறே ) அங்ஙனன்றிக்கேயிருந்தவிஷயம் விஶ்லேஷத்திலும்மறக்கப்போகாதென்றபடி. அர்த்தாந்தரம் (வீவிலின்பமித்யாதி)

அப்படிவிலக்ஷணமோவென்ன (கோலமேனியிறேயென்று) "என் கண்காணை" என்றதுக்கிரண்டர்த்தம். முந்தினது (விரும்புமித்யாதி) உன்னைக்கண்காணவீயாயென்னுதே, "வந்தீயாய்" என்றதுக்கு ப்ரயோஜநத்வயம் ( நடையழகித்யாதிவாக்யத்வயத்தாலே) இரண்டாவது-தன்குணம்தோற்றும்படி வரவேணுமென்று. குணமாவது-வ்யாமோஹம். "நஜீவேயம் க்ஷணமபி விநா தாமஸிதேக்ஷணாம்" ( நஜீவேயம்க்ஷணமபிவிநா:மஸிதேக்ஷணும் ) இதிராம:. "ப்ரஸீதந்து பவந்தோ மே ஹ்ரீரேஷா ஹி மமாதுலா। யதீத்ருஶோऽஹம் விப்ரேந்த்ரா உபஸ்தேயா உபஸ்தித:" ( ப்ரஸீதந்துபவந்தோமே ஹ்ரீரேஷாஹிமமாதுலா । யதீத்ருஶோऽஹம்விப்ரேந்த்ரருபஸ்த்தேயைருபஸ்த்தித: ) இத்யாரண்யகாண்டே ஸீதாம்ப்ரதிராம:. "ஈயாய்" என்றதுக்குபாவம் ( உன்னைநீயேயித்யாதி ) "கண்காண" என்றதுக்கிரண்டாமர்த்தம் (தந்தோமேயித்யாதி, கண்ணுக்கிலக்காம்படி வரவேணுமென்னுமளவும் ) (ஈகிறிலே) என்கிறவர்த்த மவதாரிகைக்குச்சேரும். இந்தபக்ஷத்தில், கீழ்ப்பாட்டோடேயந்வயம். ஈயவேணுமென்றபோது, யதாஸ்த்திதம். இங்கு, "ஓ" என்கிற அசைகள் - விஷாதாதிசய ஸூசகங்கள்...............*

# மூன்றாம்பாட்டு.

ஈவிலாததீவினைகளெத்தனைசெய்தனன்கொல்
தாவிவையங்கொண்டவெந்தாய்தாமோதராவென்றென்று
கூவிக்கூவிநெஞ்சுருகிக்கண்பனிசோரநின்றாற்
பாவிநீயென்றொன்றுசொல்லாய்பாவியேன்காணவந்தே.

## ஆறாயிரப்படி.

(ஈவிலாத) மநுஷ்யாதிருபேணுபர்யந்த திவ்யாவதாரங்களைப்பண்ணி யாஶ்ரிதபரித்ராணம் பண்ணுமவனே யென்றென்று கூவிக்கூவி நெஞ்சுருகிக் கண்பனிசோரநின்றால், உன்னைக்காண்கைக்கு பாக்யம்பண்ணிற்றிலேனாகில், நான்நிராசனா யிருக்கும்படியாக, என்கண்ணெதிரேவந்து, நீயென்னைக்காண்கைக்கு பாக்யம்பண்ணிற்றிலைகாணென்று சொல்லாய். பிரானேயென்றுசொல்லி, பின்னையு மெம்பெருமானென்றுஞ் சொல்லாமையாலே ; இப்படியெம்பெருமானென்னை யுபேக்ஷிக்கைக்கு, ஓரொன்றேகாலதத்வமெல்லா மநுபவித்தாலும் மாளாதபாபங்களெத்தனையாயிரம் செய்தேனோவென்கிறார்.......................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அநந்யார்ஹவிஷயத்தி லத்யந்தபவ்யனானவுன்னை யழைத்துக் கூப்பிட்டால், “பாபத்தைப்பண்ணின நீகூப்பிடுகிறதென்” என்று என்முன்னே வந்தொரு வார்த்தைசொல்லுகிறிலை யென்கிறார்.

“ [illegible] ” (யத்ப்ரஹ்மகல்பநியுதாநுபவேப்யநாஶ்யம்) என்று அநந்தகல்பமநுபவியாநின்றாலும், ஈவு-விநாசம். இலாத-இன்றியே. தீ-பரிதாபஹேதுவாம்படிக்ரூரமான. வினைகள்-பாபங்களை. எத்தனை-அசங்க்யாதமாம்படியெத்தனை. செய்தனன்கொல் - அநுஷ்டித்தேனோ. அதுவென்னென்னில், தாவி-திருவடிகளாலேயளந்து. வையம்-ஜகத்தை. கொண்ட-அநந்யார்ஹமாக்கிக்கொண்ட. எந்தாய் - என்னுடையஸ்வாமியே. தாமோதரா- “அநந்யாநார்க்கத்யந்தபவ்யன்” என்றதோன்றும்படி, யசோதைகட்டினதாம்பின்தழும்பை யுதரத்திலேயுடையவனே. என்றென்று-என்றென்று. கூவிக்கூவி-இடைவிடாதேபலகாலுமழைத்து. நெஞ்சு-நெஞ்சு. உருகி-நீராயுருகி. கண்பனி-அநுகண்ணீராய். சோர-சோரும்படி. நின்றால்-ஆர்த்தியோடேமுழுக்கநின்றால். பாவியேன்-உன்னைக்காணப்பெறாதபாபத்தையுடையநான். காண-காணும்படி. வந்து-முன்னேவந்து. நீ-நீ. பாவி-பாபிகாண். என்று-என்று. ஒன்று-ஒருவார்த்தை. சொல்லாய்-சொல்லுகிறிலை.

காணவந்துசொல்லப்பெறில் அதுவுமமையுமென்று கருத்து. ஈவு-வ்யயம்.*

ஈடு - மூன்றும்பாட்டு.

எனக்குன்னைக்காட்டாதொழிந்தால், " நீயென்னைக்காண்கைக்கு பாக்யம்பண்ணிற்றிலை" என்றாகிலும் என்கண்முகப்பேவந்தொன்றுசொல்லுகிறிலை யென்கிறார்.

(ஈவிலாததீவினைகள்) நான்றான் பெரியபாபத்தைப் பண்ணுகிறேன், அநுபவித்தாலும் மாளாதபடியான பாபத்தைப்பண்ணவேணுமோ. " நாபுக்தம்க்ஷீயதேகர்ம " (நாபுக்தம்க்ஷீயதேகர்ம) என்கிறவசநமும் என்னளவிலேபொய்யோ, புஜித்தாலும் குறையாதிருக்கவேணுமோ. புஜித்ததோவென்னில்; எல்லாம்புஜித்தாரிறே அனாக்ஷணம் முகம்மாறவைத்தபோதே. (தீவினைகளெத்தனைசெய்தனன்கொல்) " செய்வினை " என்று-ஒன்றாயிருந்ததோ, எத்தனைகோடிபாபத்தைப் பண்ணினேனோ.

(தாவியித்யாதி) அரியசெயல்களை வருத்தமறச்செய்ய வல்லவனன்றோ. அதுசெய்யுமிடத்தில் வரையாதேயெல்லாரையும் ரக்ஷிக்குமவனன்றோ. அவனிவற்றைரக்ஷிக்கவடியிட்டான், அச்செயலிலே யிவருமநந்யார்ஹராய்-எந்தாய் என்கிறார். (தாமோதரா) " நீயெங்களுக்குப்பிள்ளையாய்வந்து பிறக்கவேணும் " என்றுசிலரிரக்க, அவர்களுக்குக்கட்டவு மடிக்கவுமாம்படி யுன்னைவிதேயமாக்கினவனன்றோ. உன்வயிறு வாழாமலன்றோ இப்படிகளவுகண்டு கட்டுண்டடியுண்டது. (என்றென்று) இத்தையொருகால்சொல்லி, பின்புவேறொன்றைச்சொல்லுமவரன்றே. (கூவிக்கூவி) இவ்வபதாநங்களைச்சொல்லிக் கூப்பிட்டுக்கூப்பிட்டு. (நெஞ்சுருகி) முந்தறக்கூவுகிறவிது பிற்படக்கூவுமதுக்கு வர்த்தகமாம்படிகூவுகிற தம்மிடற்றோசை செவிவழியேபுக்கு, நெஞ்சானது த்ரவத்ரவ்யமா யுருகுமாயிற்று. (கண்பனிசோரநின்றால்) உருகினநெஞ்சுக்குப் போக்குக்கண்டு விடுமாபோலே கண்ணீர் ப்ரவஹிக்கும்படி நின்றால். (பாவியித்யாதி) நான்கிராசனைப் தரிக்கும்படியாக; " இந்த்ரனுக்குதவினேம், யசோதாதிகளுக் குதவினேமென்றத்தைநினைத்து நசைபண்ணுகிறதென்; அவன்சத்வநிஷ்டன், அவள்தாய், நீபாவி " என்றொருவார்த்தைசொன்னாலாகாதோ. தேவாசுரவிபாகத்தைப்பண்ணினவாறே அவனையும்- " ஸத்வநிஷ்டன் " என்னலாயிறே. (ஒன்றுசொல்லாய்) " நீபாக்யவான் " என்னவுமாம் (பாவிஎன்னவுமாம்) அதிலர்த்தங்கொண்டு கார்யமில்லை, உன்மிடற்றோசைகேட்குமித்தனையேயெனக்கு வேண்டுவது. நிர்ப்பந்தமுள்ளதொன்றுண்டு, சொல்லுமிடத்தில் (பாவியேன்காணவந்து) என்கண்ணுக்கிலக்காம்படிவந்து சொல்லவேணும். நெஞ்சிலேமறைந்திருந்து சொல்லிலுமாமிறே, அத்தால்போராது. (பாவியேன்) நாடடையவுண்டுடுத்துத்திரியாநிற்க, இப்படிகேளாவிடில் ஜீவி

யாதபடியான ப்ரபத்தைப்பண்ணினான். (காணவந்து) இவருடைய சப்தாதிவிஷய ப்ராவண்யமிருக்கிறபடி - "சொல்லாய்" என்பது, "காண" என்பதாகிறர். சொல்லாயென்றது-சொல்லவேணு மென்னவுமாம்; சொல்லுகிறிலை, "ஈவிலாத தீவினைகளெத்தனை செய்தனன் கொல்" என்றந்வயிக்கவுமாம்.................................................*

## ஜீயர் அரும்பதம்

மூன்றும்பாட்டு. (ஈவிலாதவித்யாதி) "பாவியேன்காணவந்து, பாவிநீ யென்றொன்று சொல்லாய்" என்றதிலேநோக்காக வவதாரிகை (எனக்குன் னையித்யாதி) இதுக்குக்கருத்து-நித்யாநுபவம்பண்ணுவிக்கத் திருவுள்ளமாகாவிட்டாலும், ஒருநாள்வந்தாலும் போருமென்று.

ஈகை-கொடுக்கையும், நாசமும். இங்குநாசத்தைச்சொல்லுகிறது. "செய்வினையோபெரிதால்" என்றத்தைப்பற்ற (நான்றுன்பெரியவித்யாதி) அநுபவித்தால் மாளுமோவென்ன (நாபுக்தமித்யாதி) இதுக்குக்கருத்து-அபுக்தமானகர்மமானது க்ஷயியாதென்றபோதே - புஜித்தால் க்ஷயிக்கு மென்றதாயிற்றிறே; ஆகையால், புஜித்தால் க்ஷயிக்குமென்கிறதுவு மெண்ணளவிற் பொய்யோவென்றபடி. பொய்யானப்ரகாரத்தைக் காட்டுகிறர் (புஜித்தாலுமித்யாதி) (எல்லாம்புஜித்தாரிறே) என்றவிடத்திலே- "ஸதாஸஹஸ்ரகோடி..." (ஸததாஸஹஸ்ரகோடி ப்ராமமதுஸூதந। யதாப்தகோடிப்ரஹ்மக்ஷணஸ்தேநவிநாபவத்) என்கிறஶ்லோக மநுசந்தேயம். பஹுவசநார்த்தம் (செய்வினையித்யாதி)

வினைகள் பெருத்திருந்தால் நம்மைச்செய்யச்சொல்லுகிற தென்னென்ன (தாவியித்யாதி) "தாவி" என்றதுக்குபாவம் (அரியசெயல்களைவருத்தமறவித்யாதி) "வையம்" என்றதுக்குபாவம் (அதுசெய்யுமிடத்திலித்யாதி) கீழோடேகூட்டி ரசோக்தியாக "எந்தாய்" என்றதுக்குபாவம் (அவனிவற்றையித்யாதி) சப்தஸ்வாரஸ்யத்தாலே யருளிச்செய்கிறர் (நீயித்யாதி) உன்வயிறு வாழாமலன்றேவென்றது-ஸ்வரத்திலே; உனக்காகவோசெய்தாய், பரார்த்தமாகவன்றே வென்றுகருத்து. அதாவது-வாழாமலன்றேவென்றது-அன்றேயென்றாய், பின்னையெதுக்காகவென்னில், ஆஶ்ரிதார்த்தமாக்கிறே களவுகண்டு கட்டுண்டதென்றபடி. வீப்ஸைக்குபாவம் (இத்தையித்யாதி)

இவ்வபதாநங்களை-த்ரிவிக்ரம தாமோதராதிகதைகளை. "நெஞ்சுருகி" என்றதுக்கதிஷ்டிகை (முந்தறவித்யாதி) பௌர்வாபர்யத்துக்குபாவம் (உருகினவித்யாதி)

"நீ-பாவி-என்று-சொல்லாய்" என்றதுக்குபாவம் (நான்கிராசனுமித்யாதி) (தரிக்கும்படியாக) என்றதுக்கு - (ஒருவார்த்தைசொன்னலாகாதோ) என்றத்தோடேயந்வயம். அஹங்காரியானவிந்த்ரனை - "சத்த்வநிஷ்டன்" என்னலாமோவென்ன (தேவாசுரேத்யாதி) "ஒன்று" என்றதுக்குபாவம் (நீபாக்யவானித்யாதி) "சொல்லாய்" என்றதின்கருத்து (உன்மிடற்றோசையித்யாதி)

நிர்ப்பந்தமாவது-சொல்லும்போது கண்முன்னேவந்துசொல்லுகை. சொல்லும்போது கண்முன்னே நின்றன்றோசொல்லுவது, "காணவந்து" என்றுவிசேஷிக்கிறதென்னென்ன (நெஞ்சிலேயித்யாதி) இப்படிகேளாவிடிலென்றது-"பாவிநீ" என்கிறசொற்கேளாத பேரதென்றபடி. ரசோக்தி (இவருடையவித்யாதி) "சொல்லாய்" என்கையாலே-சப்தம், "காணவந்து" என்கையாலே-ரூபம்; இப்படி இந்த்ரியத்வய விஷயம்சொன்னது-இந்த்ரியாந்தர விஷயங்களுக்கு முபலக்ஷணம். (சொல்லவேணும்) என்கிறபக்ஷத்தில், இதுவேக்ரியை; (சொல்லுகிறிலை) என்கிறபக்ஷத்தில், "ஈவிலாததீவினைகளெத்தனைசெய்தனன்கொல்" என்றுக்ரியை. முந்தினபக்ஷத்திலே, "ஈவிலாததீவினைகளெத்தனைசெய்தனன்கொல்" என்று-தம்மிலேதாம் வெறுத்தருளிச் செய்கிறாரென்றபடி.

இந்தயோஜனைக்கு, க்ரமத்திலேயந்வயம்; இரண்டாம்பக்ஷத்தில், 'தாவி'வையந்தொடங்கி, சோரநின்றால்-பாவியேன்காணவந்து - பாவிநீயென்றொன்று சொல்லுகிறிலை, ஈவிலாததீவினைகளெத்தனை செய்தனன்கொல் என்றந்வயம். "𑌅𑌵𑌶𑍍𑌯𑌮𑌨𑍁𑌭𑍋𑌕𑍍𑌤𑌵𑍍𑌯𑌂 𑌕𑍃𑌤𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌶𑍁𑌭𑌾𑌶𑍁𑌭𑌮𑍍। 𑌨𑌾𑌭𑍁𑌕𑍍𑌤𑌂 𑌕𑍍𑌷𑍀𑌯𑌤𑍇 𑌕𑌰𑍍𑌮 𑌕𑌲𑍍𑌪𑌕𑍋𑌟𑌿𑌶𑌤𑍈𑌰𑌪𑌿" (அவஶ்யமநுபோக்தவ்யம் க்ருதம்கர்மஶுபாஶுபம் । நாபுக்தம்க்ஷீயதேகர்ம கல்பகோடிஶதைரபி.) ......................*

---

## நான்காம்பாட்டு.

காணவந்தென்கண்முகப்பேதாமரைக்கண்பிறழ
வாணிசெம்பொன்மேனியெந்தாய்நின்றருளாயென்றென்று
நாணமில்லாச்சிறுதகையேனாநிங்கலற்றுவதென்
பேணிவானோர்காணமாட்டாப்பீடுடையப்பனையே.

### ஆறாயிரப்படி.

(காணவந்து) ப்ரஹ்மாதிகளுங்கூட வாசைப்பட்டுக்காணமாட்டாதிருக்கிற பீடுடையப்பனை, ஆணிசெம்பொன்மேனியெந்தாய் காணவந்தென் கண்முகப்பே தாமரைக்கண்திகழநின்றருளாயென்றென்று, அதிக்ஷுத்ரனான நானிங்கேகிடந்தலற்றுகிறதென்; என்னநிர்லஜ்ஜனோவென்கிறார்......................................................*

### பன்னீராயிரப்படி.

அனந்தரம், ப்ரஹ்மாதிதேவதைகளும் காணமாட்டாதபெரியவனை, ஸ்ப்ருஹணீயமான வடிவழகோடே என்முன்னேவந்து நிற்கவேணுமென்று நிர்லஜ்ஜனாய்க்கூப்பிடுகிறவிதற்கென்னப்ரயோஜநமுண்டென்கிறார்.

வானோர்-ப்ரஹ்மாதிகளானதேவர்கள். பேணி-தங்கள்ஜ்ஞாநப்ரேமாநுரூபமாகவாதரித்து. காண-தாங்கள்காண்கைக்கும். மாட்டா-சக்தரன்றியே யொழியு

ம்படி. பீடு-பெருமையை. உடை-உடையனான, அப்பனை - ஸ்வாமியை. ஆணிசெம்பொன்-ஓட்டற்றவாணிச்செம்பொன்போலே ஸ்ப்ருஹணீயமான. மேனி-வடிவையுடைய. எந்தாய்-என்னுயனே. தாமரை-நிரதிசயபோக்யமான,தாமரைபோன்ற. கண்-கண்ணானவை. பிறழ-விளங்கும்படியென்னைப்பார்த்துக்கொண்டு. காண-ஆரம்பமேதொடங்கிநான் காணும்படியாக. வந்து-வந்து. என்கண்முகப்பே-என்கண்முகப்பே, நின்றருளாய்-நின்றருளவேணும். என்றென்று- என்றுபலகாலும்சொல்லி. நாணமில்லா-நிர்லஜ்ஜனாய்க்கொண்டு. சிறுதகையேன்-க்ஷுத்ரஸ்வபாவனான. நான்-நான். இங்கு-பசவத்விஷபத்தையசற்றும்தேசத்திலேயிருந்து. அலற்றுவது-அலற்றுவதற்கு. என்-என்னப்ரயோஜநமுண்டு.

* பிறழ்தல் — விளங்குதல்.................................................................*

## ஈடு - நான்காம்பாட்டு.

தாம்காணும்படியாக வரவேணுமென்றார்; அஸ்ப்ருஷ்டசம்சாரகந்தரான நித்யஸூரிகளநுபவிக்கும்வடிவை, ப்ரஹ்மேந்த்ராதிகளும் காணமாட்டாதத்தை "நான்காணவேணும்" என்றாசைப்படுகிற வித்தாலென்ன ப்ரயோஜநமுண்டு; இதுக்கடி-என்னுடைய லஜ்ஜாசூந்யதையுமளவில்லாமையுமிறேயென்கிறார்.

(காணவந்து) மாநசாநுபவமாத்ரமன்றிக்கே, கண்ணாலேகாணும்படிக்கீடாக வந்தென்னுதல்; ப்ரதமபரிஸ்பந்தமேதொடங்கி நான்கண்டநுபவிக்கும்படிக்கீடாகவந்தென்னுதல். "ஆணிசெம்பொன்மேனியெந்தாய் - என்கண்முகப்பே-நின்றருளாய்" என்பாராயிற்று. "மற்றொப்பாரையில்லா வாணிப்பொன்னே" என்கிறவிவ்வாணியையிட்டுப்பார்த்தவாறே, "சுட்டுரைத்தநன்பொன் னுன்றிருமேனியொளியொவ்வாது" என்றதுவும் மழுங்கிக்காட்டிற்று. நாவாகிறவுரை கல்லிலேயுரைத்து, நெஞ்சாகிறமெழுகிலேயிட்டுப்பார்த்தா லதுதள்ளுண்ணுமே. (செம்பொன்மேனியெந்தாய்) "பொன்னையை" என்கிறதன்னைக்காட்டிக்காணுமிவரையெழுதிக்கொண்டது. எப்போது மேகரூபமாயிருக்கு மவன்வடிவிலே ஆழ்வாரைக்கண்டால் பிறக்கும்விகாரம் சொல்லுகிறது, இவர்தாம் கண்ணுணியாகவிறேகாண்பது (தாமரைக்கண்பிறழ) கடல்கலங்கினாப்போலே, இவரைக்கண்டகாட்சியிலே திருக்கண்கள் மிளிரவென்னுதல்; அன்றிக்கே, விளங்கவென்னுதல். மாற்றற்றபொன்போலேயிருக்கும் திருமேனியிலழகைக்காட்டி யென்னை யகங்யார்ஹமாக்கினவனே, நின்றருளாய்-என்கண்வட்டத்திலே நிற்கவேணும்: (என்றென்று) அவன்கண்வட்டத்திலேவந்தால், இவன்போவதுக்குமுன்பே ப்ரயோஜநத்துக்குமடியேற்போமன்று. "தெஹிமெதஹாமிதெ" (தேஹிமேததாமிதே) என்னுமவர்களிறே யொருகால்சொல்லுவார். (நாணமில்லா) ஆர்சொல்லும் வார்த்தை யார்சொல்லுகிறார். என்னுடையபூர்வவ்ருத்தத்தை ஸ்மரிக்கமாட்டாத லஜ்ஜாசூந்யனானநான். (சிறுதகையேன்) அதிக்ஷுத்ரனானநா

ன். தகை-அளவு. சிறுதகை-அளவிலியென்றபடி. (நானிங்கலற்றுவதெ
ன்) அவனுக்கடியிடவொண்ணாத நிலத்திலேயிருந்து கூப்பிடுகிறவிதுக்
கென்ன ப்ரயோஜநமுண்டு. (பேணியித்யாதி) பூமியில் காலிடாதவர்க
ளாலேதான் காணப்போமோ. ‘‘𑌤𑌦𑍁𑌪𑌰𑍍𑌯𑌪𑌿𑌬𑌾𑌦𑌰𑌾𑌯𑌣𑌸𑍍𑌸𑌂𑌭𑌵𑌾𑌤𑍍’’
(ததுபர்யபிபாதராயணஸ்ஸம்பவாத்) என்று-ப்ரஹ்மாதிகளு முபாசிப்ப
ர்களென்று சொல்லாநின்றதிறே. பேணுகை-ஆசைப்படுகை. அத்தாலே-
உபாசநத்தைச்சொல்லுகிறது. பேணிவானோர்காணமாட்டாப்பீடுண்டு-
பெருமை, அத்தையுடைய சர்வேஸ்வரனே - நாணமில்லாச்சிறுதகையே
ன் நானிங்கலற்றுவதென், ப்ரஹ்மாதிகளும் நித்யசூரிகளுடைய கோடி
யிலே யாம்படியாகவிறே யிவர்தம்மைச்சிறுக நினைத்திருக்கும்படி........*

## ஜீயர் அரும்பதம்.

நாலாம்பாட்டு (காணவந்தித்யாதி) வ்ருத்தாநுவாதபூர்வகமாக, ‘‘பேணி
வானோர் காணமாட்டாப்பீடுடையப்பனே, நாணமில்லாச்சிறுதகையேன் நானிங்க
லற்றுவதென்’’ என்கிறபதங்களைக்கடாக்ஷித்தவதாரிகை (தாங்காணும்படியித்யா
தி) ‘‘ஆணிசெம்பொன்மேனி’’ என்கையாலே (நித்யசூரிகளநுபவிக்கும்) என்ற
துஸித்தம். அளவு-ஜ்ஞாநம். அதில்லாமை-அஜ்ஞாநம்.

(கண்ணாலேகாணும்படிக்கீடாக) காட்சிசாத்யம். (ப்ரதமபரிஸ்பந்தமித்யா
தி) காட்சிப்ரகாரம். கதிக்குவிசேஷணமென்றபடி. ‘‘நின்றருளாய்’’ என்கிறது
வ்யவஹிதமாகையாலே, ‘‘என்கண்முகப்பே - நின்றருளாய்’’ என்றந்வயமென்
கிறார் (ஆணிசெம்பொனித்யாதி) ஆணிப்பொன்மேனியென்றாலே, ‘‘செம்பொன்
மேனி’’ என்றுவிசேஷிக்கிறதுக்குக் கருத்தென்னென்னில்; கேவலம் பொன்னிலும்
திருமேனிக்குண்டான வாதிக்யத்தைவிவக்ஷித்து ‘‘ஆணிசெம்பொன்மேனி’’ என்று
விசேஷிக்கிறாரென்கிறார் (மற்றொப்பாரையித்யாதி) இவ்வாக்யத்துக்கு நிர்வஹிக்கு
ம்படி - லௌகிகமானவாணியையும், ‘‘மற்றொப்பாரையில்லாவாணி’’ என்றுசொ
ல்லுகிற சர்வேஸ்வரனாகிற விவ்வாணியையு மிட்டுரைத்துப்பார்த்தவாறே, ‘‘சுட்
டுரைத்த நன்பொன்னுன்திருமேனி யொளியொவ்வாது’’ என்னுமாபோலே யந்த
லௌகிகமான வாணியும் மழுங்கிக்காட்டிற்று; ஆகையாலே - ‘‘செம்பொன்’’
என்று விசேஷிக்கிறாரென்று. என்றதுவும் - இப்படிசிக்ஷித்தநற்பொன்னும். மழுங்
கி-மாலிந்யமடைந்து. (மற்றொப்பாரையில்லாவாணிப்பொன்னே) வேறுஉபமாந
மில்லாத மாற்றற்றபொன்போலேயிருக்கிறவனே யித்யர்த்தம். இத்தால் - ஸ்வேத
ரஸமஸ்தவிலக்ஷணமான ஸ்வரூபௌஜ்ஜ்வல்யத்தையுடையவனென்றபடி. ஆணிப்
பொன்-அதிகமாற்றுடையபொன். திருவிருத்தம் எண்பத்தஞ்சாம்பாட்டு, ‘‘மாணி
க்கங்கொண்டு’’ இத்யாதி. ஆணிப்பொன்னாகிறுரைக்கிறதெதிலேயென்ன (நாவா
கிறவித்யாதி) ‘‘என்னாவகம்பால் மாற்றின்றியுரைத்துக்கொண்டேன்’’ என்றதநு
சந்தேயம். (நெஞ்சாகிறமெழுகிலே) என்றதுக்கு - இரக்கமனத்தோடெரியணையர
க்குமெழுகுமொக்குமிவள்’’ என்று - நெஞ்சைமெழுகோடே ஸத்ருஶமாகச்சொல்
லிற்றிறேயென்றுகருத்து. அது-நல்லபொன்.

ஏகரூபமாய்-நிர்விகாரமாய். விகாரமாவது- நேத்ரசாஞ்சல்ய ப்ரகாசாதிக
ம். ஒருமெழுகு முரைகல்லும்வேணுமோ, சமர்த்தனானவன் கண்ணாலேபார்த்து

"இத்தனை" என்றுசொல்லிவிடானே; அப்படியேயிவரும் * மயர்வறமதிநலமருளப்பெற்றவராகையாலே, பகவத்ப்ரசாதலப்தமான ஜ்ஞாநமே யாணியாக " இதுபமாநமல்ல " என்றுகண்டுவிட்டாரேயென்கிறார் (இவர்தாமித்யாதி) நாவிலேயுளைத்துக்காணவேணுமோ, இவர்தாம் கண்ணுணியாகவிறேகாண்பதென்றபடி. கண்ணுணியென்று-கருவிழிக்குப்பேர். கருவிழியாலேயிறே காண்பதென்றபடி; கண்ணே ஆணியாகவென்றும். ஆணி-அதிகமாற்றுனபொன். ( இவர்தாம் ) இத்யாதிவாக்யத்தை - (நாவாகிற) இத்யாதி வாக்யாநந்தரமநுசந்திப்பது; (செம்பொன்மேனியெந்தாய்) இத்யாத்யநந்தரம் ( மாற்றற்ற ) இத்யாதிவாக்யமநுசந்தித்து, அநந்தரம் (பொன்னுனாய்) என்கிறவாக்யத்தையநுசந்தித்து, "தாமரைக்கண்பிறழ" என்கிறதுக்கு அவதாரிகையாக (எப்போதுமேகரூபமாய்) இத்யாதிவாக்யத்தை யநுசந்தித்து, அநந்தரம் (கடல்கலங்கினுப்போலே) இத்யாதிவாக்யமநுசந்திப்பது. ( கடல்கலங்கினுப்போலே இதி ) ஆழ்வார்க்கவனைக்காண்கையாலே ஹர்ஷம்பிறந்தால், அந்தஹர்ஷ மவனுடைய வவயவங்களிலே ப்ரகாசிக்கிறது உசிதமிறேயென்றுகருத்து. (பொன்னுனாய்) பொன்போலே ஸ்ப்ருஹணீயனாய் ப்ராப்யனானவனே யித்யர்த்தஃ. திருநெடுந்தாண்டகம் பத்தாம்பாட்டு. மிளிர-சலிக்க. " ஆணிசெம்பொன் மேனியெந்தாய் " என்றதுக்கு "நின்றருளாய்" என்றத்தோடே யந்வயம்சொன்னதுக்கர்த்தம் (மாற்றற்றவித்யாதி, நிற்கவேணுமித்யந்தம்) மாற்றற்ற-உரையற்ற. வீப்ஸைக்கர்த்தம் (அவனித்யாதி) மடியேற்போம்-யாசிப்போம். "நின்றருளாய்" என்றுசொல்லி வேறொன்றையபேக்ஷியாதே, இத்தையே பலகாலும்சொல்லுகையாலே-தர்ஶநமே ப்ராப்யமென்றபடி.

"வானோர்காணமாட்டா" என்றத்தைக்கடாக்ஷித்தருளிச்செய்கிறார் ( ஆர்சொல்லுமித்யாதி ) சப்தார்த்தம் ( என்னுடையவித்யாதி ) அளவிலி-அல்பஜ்ஞன். (அடியிடவொண்ணுதநிலத்திலேயென்றது) " இங்கு " என்கையாலே - அதிஹேயமான தேசத்திலேயென்றபடி.

" பேணி " என்று-ஆசைப்படுகையாய், உபாசித்தென்றபடி. " வானோர்" என்கிறதுக்குபாவம் ( பூமியிலித்யாதி ) " வானோர் " என்று-ப்ரஹ்மாதிகளைச்சொல்லுகிறது. ப்ரஹ்மாதிகளுக் குபாசநமுண்டோவென்ன ( ததுபர்யபீத்யாதி ) தத்-ப்ரஹ்மோபாசநம், உபர்யபி-தேவாதிஷ்வபி சம்பவதீதி பகவாந்பாதராயணோ மந்யதே ; குதஃ, சம்பவாத்-தேஷாமப்யர்த்தித்வ சாமர்த்யயோஸ்ஸம்பவாத். அர்த்தித்வந்நாம-ஆத்யாத்மிகாதி துஃகதப்ததயா நிரதிசயசுகரூப ப்ரஹ்மப்ராப்த்யபேக்ஷா. சாமர்த்யந்நாம-படுதரதேஹேந்த்ரியாதிமத்த்வம். ஆக, அர்த்தித்வசாமர்த்யங்களாகிற விவையுண்டாகையாலே தேவாதிகளுபாசிப்பரென்று பாதராயணராலே சொல்லப்படாநின்றதிறேயென்றபடி. ப்ரதமாத்யாயே த்ருதீயபாதே இதம்ஸூத்ரம். * மயர்வறமதிநல் மருளப்பெற்றவிவர், ஹேயரான ப்ரஹ்மாதிகளும் காணமாட்டாதவனை நானலற்றுவதென்னென்று - அவர்களிலும் தம்மைத்தாழச்சொல்லலாமோவென்ன ( ப்ரஹ்மாதிகளுமித்யாதி )

ஆணிசெம்பொன்மேனியெந்தாய்-என்கண்முகப்பே-காணவந்து-தாமரைக்கண்பிறழ-நின்றருளாயென்றென்று-பேணியென்றுதொடங்கி, அப்பனை-நானிங்கலற்றுவதென்; நாணமில்லாச்சிறுதகையே னித்யந்வயஃ. செம்பொன் - சிவந்த பொன்..........................................................................................*

# ஐந்தாம்பாட்டு.

அப்பனேயடலாழியானேயாழ்கடலைக்கடைந்த
துப்பனேயுன்றோள்களான்குங்கண்டிடக்கூடுங்கொலென்
றெப்பொழுதுங்கண்ணநீர்கொண்டாவிதுவர்ந்துலர்ந்
திப்பொழுதேவந்திடாயென்றேழையேனோக்குவனே.

## ஆறாயிரப்படி.

(அப்பனே) இப்படி ப்ரஹ்மாதிகளுக்குங்கூட துர்த்தர்சனாயிருக்கச்செய்தே உன்னையே; அப்பனே, ஆஸ்ரிதவிரோதி நிரசநசமர்த்தமான திருவாழியையுடையவனே, ஆஸ்ரிதசமீஹித நிர்வர்த்தநசீலனே, உன் தோள்கள்நான்கும் கண்டிடக்கூடுங்கொல் என்று, எப்பொழுதுங் கண்ணநீர்கொண்டு ஆவி துவர்ந்துலர்ந்து, இப்பொழுதே வந்திடாயென்றபேக்ஷித்து உன்வரவு பார்த்திருப்பன்; என்னசபலனோவென்கிறார்.....*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், தேவர்களுக்கும் துர்லபனாயிருக்கச்செய்தேயும் ஆஸ்ரிதரானவர்களுக் கருந்தொழில்செய்து மபேக்ஷிதங்கொடுத்தவனென்று நினைத்து, காண்கைக்கு மிகவும்த்வரியாநின்றே னென்கிறார்.

அப்பனே - ஆஸ்ரிதவிஷயத்தில்சத்தைப்பெதொடங்கி யுபகரிக்கும்ஸ்வபாவனே. அடல் - அவர்களுக்குவிரோதியைநிரசிக்கும்ஸ்வபாவத்தையுடைய. ஆழியானே-திருவாழியையுடையவனே. ஆழ்-அகாதமான. கடலை-கடலை.கடைந்த-கடைந்து அவர்களுக்கபேக்ஷிதங்கொடுக்கும். துப்பனே-பெருமிடுக்கனே.அக்காலத்திலவர்களுக்கநுபாவ்யமான, உன்-உன். தோள்கள்-தோள்கள். நான்கும்-நாலையும். கண்டிட-கண்டதாய்விட. கூடுங்கொல்-கூடுமோ. என்று - என்றுநினைத்து. எப்பொழுதும்-சர்வகாலமும். கண்ணநீர்கொண்டு-கண்ணும்கண்ணீருமாய். ஆவி-ப்ராணனானது. துவர்ந்துலர்ந்து - உலர்த்திமேலுலர்த்தியாகசோஷித்து. இப்பொழுதே-சத்தையழிவதற்குமுன்னே இக்ஷணத்திலே. வந்திடாய்-வரவேணும்.என்று-என்று த்வரித்து அபேக்ஷித்து. ஏழையேன்-சபலனானநான். நோக்குவன் - "இவ்வவஸ்த்தையில் வரக்கூடும்" என்றுநினைத்து சம்பாவனையுள்ள ப்ரதேசத்தைப்பாராநின்றேன்.

துவர்ச்சி-உலர்ச்சி.........................................................................*

## ஈடு - ஐந்தாம்பாட்டு.

ப்ரஹ்மாதிகளுக்கும் காணமுடியாதிருக்கிற வுன்னுடையவடிவழகைக் காணவேணும் என்றாசைப்படாநின்றேன், என்சாபலமிருந்தபடியென்னென்கிறார்.

(அப்பனே) நீமுகங்காட்டாதபோதும் நானுன்னையேசொல்லிக் கூப்பிடும்படி யெனக்கிவ்வளவான மஹோபகாரத்தைப் பண்ணினவனே. (அடலித்யாதி) அடல்-மிடுக்கு. எப்போதுமொக்க யுத்தோந்முகமாய், விரோதிநிரசநசீலமாய், என்ப்ரதிபந்தகத்தைப் போக்குகைக்குப் பரிகரமான திருவாழியையுடையவனே. (ஆழ்கடலித்யாதி) உன்னையுகவாதே "ப்ரயோஜநாந்தரமேயமையும்" என்னுமவர்களுக்கும், "𑌅𑌪𑍍𑌰𑌮𑍇𑌯𑍋𑌮𑌹𑍋𑌦𑌧𑌿𑌃" (அப்ரமேயோமஹோததி:) என்று-ஒருவராலளவிட வொண்ணாதபடியான கடலைக்கடைந்துகொடுத்த சாமர்த்யத்தையுடையவனே. (உன்னித்யாதி) அவர்களைப்போலே யுப்புச்சாறுகொண்டு போமவரல்லரேயிவர். அக்கடலைக்கடைகிறபோது வ்யாபரித்ததோள்களைக்காணக் காணுமிவராசைப்படுகிறது. * மதுரக்கொழுஞ்சாறுகொண்ட சுந்தரத்தோளிறே. உன்தோள்கள் நாலையுங்கண்டேனய்விடக் கூடுமோவென்று. (எப்பொழுதும்) கிடைக்கைக்கு சம்பாவனையுள்ள நிலம்போலே கண்ணநீர் பாயாநிற்பராயிற்று. ஆவி-என்ப்ராணனானது, துவர்ந்துதுவர்ந்து-பசையறவுலர்ந்து; இங்ஙனேயுலர்ந்து முடிந்துபோகவும்பெறுதே, குணாதிகவிஷயமாகையாலே "காணலாம்" என்னும் நசைமுடியவு மொட்டாமையாலே, தரிப்பதுதிரிய உலருவதான நிலையுருவச்செல்லுமாயிற்று. "சென்றற்றது, சென்றற்றது" என்னும்நிலையுருவச்செல்லுமாயிற்று. (இப்பொழுதேவந்திடாயென்று) தம்மார்த்தியே செப்பேடாக அரைக்ஷணம் தாழாதேவரவேணுமென்று. (நோக்குவனே) வரசம்பாவனையுள்ள திக்கைப்பாராநிற்பன். வருகைக்கவன் பக்கலிலு மேதேனும்நினைவுண்டாயோ இவரிப்படிசெய்கிறதென்னில் (ஏழையேன்) அதொன்றில்லை, என்சாபலமேயிறேயுள்ளது. ஆழ்வான் பணித்த வரதராஜஸ்தவத்திலே யொருஶ்லோகத்தைக்கேட்டு எம்பெருமானார் "இப்பாசுரங்கேட்டால் பெருமாளிரங்காமையில்லை; ஆழ்வான், உன்முகத்தைக்காட்டிக்காணாய்" என்றுபார்த்தருளினார்..........*

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு (அப்பனேயித்யாதி) "வானோர்காணமாட்டா" என்று கீழேநோக்காக, "உன்றோள்கள்நான்குங்கண்டிடக்கூடுங்கொல், ஏழையேன்" இத்யாதியைக்கடாக்ஷித்தவதாரிகை (ப்ரஹ்மாதிகளுக்குமித்யாதி)

பிரிந்துநோவுபடாநிற்க, "அப்பனே" என்கிறதென்னென்ன (நீமுகமித்யாதி.) "அடல்" என்றதுக்கர்த்தாந்தரம் (எப்போதுமொக்க யுத்தோந்முகமாயென்று) அடல்-மிடுக்கும், யுத்தோந்முகத்வமும். பலிதார்த்தம் (விரோதிநிரசநசீலமாயென்று) மிடுக்கைச்சொன்னதுக்குபாவம் (என்ப்ரதிபந்தகத்தையித்யாதி) கிழிற்பதத்தோடே யிதுக்குசங்கதி யருளிச்செய்யாநின்றுகொண்டு சப்தார்த்தம் (உன்னையுகவாதேயித்யாதி). "[illegible]

ஞ்ஸஹுதி।வராமிதஸ்ஸமஶ்ரேணாயஹ்யஶெயொஹோஜமயிம் " ( ஸமுத்ர ம்ராகவோராஜா ஶரணம்கந்துமர்ஹதி । காநிதஸ்ஸகரேணுப் மப்ரமேயோமஹோததிः ) இதிவிபீஷணம். உன்னை - * அடலாழியானுனவுன்னை. அளவிட-பரிச்சேதிக்க. துப்பன்-சமர்த்தன்.

" ஆழ்கடலை " இத்யாதியைக்கூட்டிபாவம் (அவர்களைப்போலேயித்யாதி) பின்னையெப்படிப்பட்டவரிவரென்ன ( அக்கடலையித்யாதி ) அப்படிதோள்களாகர்ஷகமாயிருக்குமோவென்ன ( மதுரக்கொழுமித்யாதி ) நாய்ச்சியார்திருமொழி ஒன்பதாந்திருமொழி முதற்பாட்டு. " சிந்துரச்செம்பொடி " இத்யாதி. ( மந்தரம்நாட்டியன்று மதுரக்கொழுஞ்சாறித்யாதி ) மந்தரபர்வதத்தைக் கடலில்நடுவே நட்டு, இந்த்ரன் துர்வாஸஶ்ஶாபோபஹதனானவன்று, மதுரமாய்-போக்யமான வழகிய வம்ருதமாகிறசாராம்சத்தைக்கொண்ட சுந்தரமானதோள்களையுடையவனென்றபடி. கொழுமை-அழகும், பெருமையும், செவ்வியும். சப்தார்த்தம் ( உன்தோள்களித்யாதி )

" துவர்ந்துதுவர்ந்து " என்கிறவீப்ஸைக் கிரண்டர்த்தம். முந்தினது-மீமிசையாய், ( பசையறவுலர்ந்தென்று ) அதாவது-மிகவுமுலர்ந்தென்றபடி. பசையறவுலர்ந்தால், மேல் " இப்பொழுதேவந்திடாய் " இத்யாதிசொல்லக்கூடுமோவென்கிற சங்கையிலே, வீப்ஸைக்கர்த்தாந்தரம் (இங்ஙனேயித்யாதி ) உருவச்செல்லும்-முடியச்செல்லும். விவரணம் (சென்றற்றதித்யாதி) செப்பேடு-தாம்ரசாஸநம். அது - நினைவு.

இடையாததிலும் சாபலம் நடந்துபார்க்கிறதுக்கு ஸம்வாதம் (ஆழ்வானித்யாதி) பணித்த-அருளிச்செய்த. ஒருஶ்லோகத்தை - " நீலமேகநிபம் " இத்யாதி ஶ்லோகத்தை.

"அப்பனே" என்றுதொடங்கி, நோக்குவன், ஏழையே னித்யர்வட8 ......*

## ஆறும்பாட்டு.

நோக்கிநோக்கியுன்னைக்காண்பான்யானெனதாவியுள்ளே
நாக்குநீள்வன்ஞானமில்லைநாடோறுமென்னுடைய
வாக்கையுள்ளுமாவியுள்ளுமல்லபுறத்தினுள்ளு
நீக்கமின்றியெங்குநின்றாய்நின்னையறிந்தறிந்தே.

### ஆறாயிரப்படி.

( நோக்கி ) என்னுடையவாக்கை யுள்ளுமாவியுள்ளு மல்லபுறத்திநுள்ளும் நீக்கமின்றியெங்கும் சந்நிஹிதனாய் நின்றுவைத்து உன்னையெனக்குக் காட்டாதொழிகிறது உன்னைக்காட்ட நினையாமையென்னுமிடமறிந்துவைத்து, பின்னையும்நோக்கிநோக்கி யுன்னைக்காண்பான் நானென்னுள்ளே யாசைப்படாநிற்பன் ; என்னவஞ்சனோ வென்கிறார்..........*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், என் பக்கலிலே சர்வதாசந்நிஹிதனாய்க் கொண்டென்னுள்ளே நிற்கும்படியறிந்திருக்க, "கண்ணாலேகாணவேணும்" என்றாசைப்படுகிற தென்னறிவுகேடிறே யென்கிறார்.

நாடோறும்-ஒருநாளொழியாமல். என்னுடைய-என்னுடைய. ஆக்கையுள்ளும்-சரீரத்துக்குள்ளானஹ்ருதயத்திலும். ஆவியுள்ளும்-அதுக்கபிமாநியான ஆத்மஸ்வரூபத்தினுள்ளும். அல்ல-அதுக்குக்கரணங்களாயிவையிரண்டுமன்றியே. புறத்தினுள்ளும் - ஸ்வரூபபஹிர்ப்பூதமானவிந்த்ரியாதிகளிலும். நீக்கமின்றி-ஒன்றையும் விடாதே. எங்கும்-எல்லாஸ்த்தலத்திலும். நின்றாய்-அந்தராத்மாவாய்நின்றவனே. இப்படிசதாசந்நிஹிதனாக. நின்னை-உன்னை. அறிந்தறிந்து-எப்போதுமறிந்துவைத்து. உன்னை-போக்யமானவடிவையுடையவுன்னை. காண்பான்-கண்ணாலேகாண்கைக்காக. நோக்கிநோக்கி - பலகாலும்பார்த்து. யான்-சபலனானநான். எனது-என்னுடைய. ஆவியுள்ளே-நெஞ்சுக்குள்ளே. நாக்குநீள்வன்-ஆசைப்படாநின்றேன். ஞானம்-"அந்தராத்மாவானவனதீந்த்ரியன்" என்கிறவறிவு. இல்லை-இல்லாமையாலே.

நாக்குநீளுகையாவது-ஆசைப்பாட்டுக்கு சூசகம்.............................*

## ஈடு - ஆறும்பாட்டு.

"என் பக்கலிலே சதாசந்நிஹிதனாயிருந்தே யுன்னைக்காட்டாதொழிகிறது நீயினையாமை" என்றறிந்துவைத்தே, காணவாசைப்படாநின்றேன்; அதுக்கடியென்னறிவுகேடென்கிறார்.

(நோக்கிநோக்கி) அடுத்தடுத்து அவன்வரும்திக்கையே பார்ப்பராயிற்று. இப்படிபார்க்கிறதென்ன ப்ரயோஜநத்துக்கென்னில் (உன்னைக்காண்பான்) உன்னைக்காணவேணுமென்னும் நசையாலே. (யானித்யாதி) ஒருவிஷயத்திலே சபலரானாரை, "இவன் இவ்விஷயத்திலே நாக்குநீட்டாநின்றான்" என்பர்களிறே; அப்படியே என் ஹ்ருதயத்திலே ஆசைப்படாநின்றேன், வாய்விட்டுச்சொல்லமாட்டாதே.

அதுக்கடியென்னென்னில் (ஞானமில்லை) இதிருந்தபடியால் என்றனையறிவுகேடரில்லை.

"இவ்விஷயத்தைக்காணவேணும்" என்றாசைப்படுகிறவிது அறிவுகேடாகவேண்டுகிற தென்னென்னில் (நாடோறுமித்யாதி) எல்லாக்காலத்திலு முன்னைப்பெறுகைக்கு ப்ரதிபந்தகமான வென் ஸரீரத்திலும், பெறவிருக்கிற வாத்மாவிலும், இவையொழிந்த ப்ரதிபந்தகமான கரணங்களிலும், விடாதேயெங்கும்புக்குநின்றாய். கிழிச்சீரையிலே தநங்கிடக்கப் புறங்கால்வீங்குவாரைப்போலே காணுமிவர்படி. (நின்னையறிந்தறிந்து) "இவன்ரக்ஷணத்துக்கு ப்ராப்தனாவது, நிதாநமறிந்து பரிஹரிக்கைக்கு சர்வஜ்ஞனாவது, தொடங்கினது தலைக்கட்டவல்ல சர்வசக்தியாவது, 'ஐயோ' என்றிரங்குகைக்கு நீர்மையுடையனாவது, சதாசந்நிதியுண்டாவது; இப்படியிருக்க இவன்முகங்காட்டாதொழிகிறது, செய்யவினை

யாமையிறே" என்றிருக்கமாட்டாதொழிகிறது என்னறிவுகேடாமித்தனையிறே. நான் ப்ராப்தனாய் நீயப்ராப்தனாயிருக்கிறாயல்லை, நான் சர்வஜ்ஞனாய் நீயஜ்ஞனாயிருக்கிறாயல்லை, நான் சர்வசக்தியாய் நீயசக்தனாயிருக்கிறாயல்லை, நான் விபுவாய் நீயணுவாயிருக்கிறாயல்லை, இத்தலைநோவுபடவிட்டு நிர்க்ருணனாயிருக்கிறாயல்லை, "உடையவனாய்வைத்து, உடைமை நோவுபடவிட்டிருக்கிறது செய்யநினையாமையிறே" என்றாறியிருக்கமாட்டாதொழிகிறது என்னறிவுகேடாமித்தனையிறே... ...................*

## ஜீயர் அரும்பதம்.

ஆறாம்பாட்டு (நோக்கியித்யாதி) "நின்னையறிந்தறிந்தே, நாக்குநீள்வன் ஞானமில்லை" என்றதிலே நோக்காக வவதாரிகை (என்பக்கலிலேயித்யாதி)

அடுத்தடுத்த-புநப்புந:. காண்பான்-காண்கைக்காக. "நாக்குநீள்வன்" என்றதுக்கு-சாபலம்பண்ணுவனென்றர்த்தம் விவக்ஷிதது, அதுக்குலௌகிகசம்மதியைக்காட்டுகிறார் (ஒருவிஷயத்திலேயித்யாதி) "எனதாவியுள்ளே" என்றதுக்குபாவம் (வாய்விட்டித்யாதி)

அதுக்கடி-சாபலம்பண்ணுகைக்கடி. அபரயாவியாக வர்த்தாந்தரம் (இதிருந்தபடியாலித்யாதி)

சரீரம் புண்யபாபகர்மமூலமாகையாலே (உன்னைப்பெறுகைக்கு) இத்யாதியருளிச்செய்கிறார். "ஆக்கையுள்ளும்" என்று தொடங்கி, "நீக்கமின்றியெங்கும்நின்றாய் - உன்னைக்காண்பான் - நாக்குநீள்வன்" என்றதுக்கு வ்யாக்யாதாஸ்வாபிப்ராயமாக வருளிச்செய்கிறார். (கிழிச்சீரையித்யாதி) கிழிச்சீரை-சாளிகை.

"நாராயணா" என்றத்தைப்பற்ற (ப்ராப்தனாவதென்றது) "ஞானமூர்த்தி" என்றத்தைப்பற்ற (சர்வஜ்ஞனென்றது) "அப்பனே" என்றத்தைப்பற்ற (சர்வசக்தியென்றது) "ஞாலமுண்டாய்" என்றத்தைப்பற்ற (ஐயோவென்றித்யாதி) "நீக்கமின்றியெங்கும்நின்றாய்" என்றத்தைப்பற்ற (சதாசந்நிதியுண்டாவதென்றது) (இப்படியிருக்க) இத்யாதிக்குபாவம் - "செய்யநினையாமையிறே" என்றறிந்தாறியிருக்கமாட்டாதே "காணவேணும்" என்று ஆசைப்படுகிறது என்னறிவுகேடாமித்தனையென்று. மேலுக்தத்தை முகபேதேந விவரிக்கிறார் (நான்ப்ராப்தனாயித்யாதி) "நீக்கமின்றியெங்கும்நின்றாய்" என்றத்தைப்பற்ற (நான்விபுவாயித்யாதி) நின்னையறிந்தறிந்து-இப்படி சதாசந்நிஹிதனான வுன்னையெப்போது மறிந்தென்றபடி.

"[illegible]" ([illegible]) இத்யாத்யநுசந்தேயம். நாடோறுமென்று தொடங்கி, நின்னையறிந்தறிந்தே, நோக்கிநோக்கியென்று தொடங்கி நாக்குநீள்வன் ஞானமில்லை இத்யந்வய:.................................*

---

## ஏழாம்பாட்டு.

அறிந்தறிந்துதேறித்தேறியானெனதாவியுள்ளே
நிறைந்தஞானமூர்த்தியாயைநின்மலமாகவைத்துப்
பிறந்தும்செத்தும்நின்றிடறும்பேதைமைதீர்ந்தொழிந்தே
னறுந்துழாயின்கண்ணியம்மானானுன்னைக்கண்டுகொண்டே.

## ஆறாயிரப்படி.

( அறிந்தறிந்து ) ஜந்மஜராமரணாதி சாம்சாரிக து:கமநுபவிக்கிறதென்னும் பயத்தாலே கூப்பிடுகிறீரோ ; என்றாநிப்படி யார்த்தராய்க் கிடந்து நீர்கூப்பிடுகிறதென்னில் ; * ஜ்ஞாநசக்தி பலைஸ்வர்யாதி குணங்களாலும் * சௌந்தர்ய சௌகந்த்ய சௌகுமார்யாதி கல்யாணகுணங்களாலும் பரிபூர்ணனான வுன்றிறத்திலுள்ள விசதவிசததர விசததமப்ரத்யக்ஷதாபந்ந நிரதிசயபக்தி ரூபஜ்ஞாநத்தாலே, என்னுடைய அந்தசாம்சாரிக து:கமெல்லாம் நிரஸ்தமாயிற்றிறே ; அதுக்கன்று நானிப்போது படுகிறதென்கிறார்.........................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், என்னெஞ்சுக்குள்ளே நிற்கச்செய்தே ப்ரகாசிப்பித்த வுன்வடிவழகை யநுசந்தித்து சாம்சாரிகமான வறிவுகேடு தீர்ந்தேனித்தனை ; அந்தபோக்யமான வடிவைக்கண்ணாலே காணவேணுமென்றன்றோ விப்போதாசைப்படுகிறதென்கிறார்.

நறு-பரிமளப்ரசுரமான. துழாய்-திருத்துழாயையுடைத்தான. கண்ணி-திருமாலையையுடைய. அம்மா-சர்வாதிகனே. நான்-உன்போக்யதையிலேசபலனான நான். உன்னை-நிரதிசயபோக்யனாய்ப்ராப்தனானவுன்னை. கண்டுகொண்டு-நீப்ரகாசிப்பிக்கவென்னெஞ்சாலே யபரோக்ஷித்துக்கண்டுகொண்டு. அறிந்தறிந்து-இப்படிதந்த * மயர்வறமதிநலத்தாலே யுன்னுடையப்ராப்யபாவத்தையும் ப்ராபகபாவத்தையுமறிந்தறிந்து. தேறித்தேறி-தத்தத்விஷயமான வ்யவசாயபர்யந்தமானதெளிவுகளையுடையேனாய். யான்-இப்படிலப்தஜ்ஞாநவ்யவசாயனானநான். எனது-என். ஆவியுள்ளே-ப்ராணாஸ்ரயமானநெஞ்சுக்குள்ளே. நிறைந்தஞானமூர்த்தியாயை-பரிபூர்ணஜ்ஞாநஸ்வரூபனானவுன்னை. நின்மலமாக-சம்சயவிபர்யயமாகிறமலமறும்படி. வைத்து-ப்ரதிஷ்டிதமாகவைத்து. பிறந்தும்செத்தும்-பிறப்பதுசாவதாய். நின்று-நின்று. இடரும்-அலமருகிற. பேதைமை-அறிவுகேடு. தீர்ந்தொழிந்தேன். தீர்ந்துவிட்டேனித்தனை.

மார்வும் மாலையுமான வடிவழகைக் கண்ணிட்டுக் காணப்பெற்றிலேனென்ற வாக்யசேஷம்.........................................................*

## ஈடு - ஏழாம்பாட்டு.

நீர்நம்மைப்போரவின்னாதாகாநின்றீர், உமக்கொன்று முதவிற்றிலோமோ, நாமொன்று முபகரித்திலோமென்றேயோ நீர்நினைத்திருக்கிறதென்ன; சிறிதுசெய்தமையுண்டு; இவ்வம்சம்பெற்றேன், எனக்கித்தால் போராதென்கிறார்.

( அறிந்தறிந்துதேறித்தேறி ) முதற்றிருவாய்மொழியிலே-பரத்வத்தை யநுசந்தித்தார், அதுவிஷயமானவாறே பிறப்பதொருதெளிவுண்

டிறே ; அநந்தரம்-பஜநீயனென் றநுசந்தித்தத்தாலே பிறப்பதொருதெ ளிவும், அநந்தரம்-சுலபனென் றநுசந்தித்தத்தாலே பிறப்பதொருதெளி வும், பின்பு-அபராதசஹனென் றநுசந்தித்தத்தாலே பிறப்பதொருதெ ளிவும்; இப்படிக்ரமத்திலேயிறே-திருவாய்மொழி முடியநடந்தது, இதெ ல்லாம் மாநசாநுபவமிறே. அன்றிக்கே, ( அறிந்தறிந்துதேறித்தேறி ) நீ * மயர்வறமதிநல மருளுகையாலே ; பரஸ்வரூபம் - "மனனுணர்வள விலன், பொறியுணர்வவையிலன், எதிர்நிகழ் கழிவினுமினனிலன், மிகு நரையிலன், உணர்முழுநலம், இனன்" எனவறிந்து, அந்தபரஸ்வரூபத் தினுடைய யாதாத்ம்யம் - "அதுநமதுவிதிவகையே" "நெஞ்சினால்நி னைப்பான் யவனவனாகும் நீள்கடல்வண்ணன்" என்கிறபடியே "அர்ச் சாவதாரபர்யந்தமான ஆஸ்ரிதபாரதந்த்ர்யம்" என்றறிந்து, அத்தாலே பிறப்பதொருதெளிவும் ; ஸ்வஸ்வரூபம் - " * சென்றுசென்று பரம்ப ரமாயாது மின்றித்தேய்ந்தற்றுநன்று தீதென்றறிவரிதாய்நன்றாய்ஞானம் கடந்திருக்கும்" என்றறிந்து, அதினுடையயாதாத்ம்யம் - "சிறுமாம னிசராயென்னை யாண்டாரிங்கேதிரிய-நறுமாவிரைநாண்மலரடிக் கீழ்ப்பு குதல்-உறுமோ" என்றும், "தம்மடியாரடியோங்களே" என்றும், "ததீயசேஷத்வபர்யந்தமாயிருக்கும்" என்றறிந்து, அத்தாலே பிறப்ப தொருதெளிவும் ; உபாயஸ்வரூபம் - "நாகணைமிசைநம்பிரான்சரணே சரண்நமக்கு" என்றறிந்து, அதினுடைய யாதாத்ம்யம் - "சைதந்யக் ருத்யமாய் அதிகாரிவிசேஷணமான ஸ்வீகாரத்தையும்பொறாத சஹகாரி நைரபேக்ஷ்யம்" என்றறிந்து, அத்தால் பிறப்பதொருதெளிவும் ; பல ஸ்வரூபம் - * ஒழிவில்காலமெல்லாமுடனாய்மன்னி வழுவிலாவடிமை செய்கை" என்றறிந்து, அதினுடைய யாதாத்ம்யம் - "உன்றன்திருவு ள்ள மிடர்கெடுந்தோறும் நாங்கள்வியக்கவின்புறுதும்" என்றறிந்து, அத்தாலேபிறப்பதொருதெளிவும் ; விரோதிஸ்வரூபம் - * யானேயென் றனதேஎன்றிருக்கை" என்றறிந்து, அதினுடையயாதாத்ம்யம் - "கைங்க ர்யத்திலஹங்காரகர்ப்பமானமமகாரம்" என்றறிந்து, அத்தாலேபிறப்ப தொருதெளிவும். ( யான் ) இப்படிநீயறிவிக்கவறிந்தயான். ( எனதாவி யுள்ளே ) என்னுடையஹ்ருதயத்தினுள்ளே. ( நிறைந்தஞானமூர்த்தியா யை ) பரிபூர்ணஜ்ஞாநஸ்வரூபனானவுன்னை. பெற்றவம்மத்தால் த்ருப்த னாகவொண்ணாதபடியான வைலக்ஷண்யத்தையுடையவுன்னை. ( நின்மல மாகவைத்து ) விசததமமாகவநுசந்தித்து. ( பிறந்துமித்யாதி ) அறிவு பிறந்தவநந்தரம், "இங்கினிறநீர்மையினியாமுறாமை" என்றபேக்ஷித்த வதுபெற்றேன். சாவதுபிறப்பதாய்க்கொண்டு தடுமாறுகிறவறிவுகேடு தவிரப்பெற்றேன். ( நறுந்துழாயித்யாதி ) இவ்வறிவுபிறக்கைக்கு அவ னிட்டபச்சையிருக்கிறபடி. வைத்தவளயத்தைக்காட்டி அவ்வடிவிலே கு ருகுலவாசத்தைப்பண்ணுவித்து அறிவுபிறப்பித்தாயிற்று தனக்காக்கி

கொண்டது. (பரிமளப்ரசுரமான திருத்துழாயையுடைத்தான திருமாலையையுடைய சர்வாதிகனே) (நானுன்னைக்கண்டுகொண்டு) உன் போக்யதையை யறிந்தநான், நிரவதிகபோக்யபூதனான வுன்னைக்கண்டு கொண்டு.

நறுந்துழாயின் கண்ணியம்மாநானுன்னைக் கண்டுகொண்டு-அறிந் தறிந்து தேறித்தேறி யானெனதாவியுள்ளே நிறைந்தஞானமூர்த்தியா யை நின்மலமாகவைத்து, பிறந்தும்செத்தும் நின்றிடரும்பேதைமை தீர்ந்தொழிந்தேன்; இதுநான்பெற்ற வம்ஸமென்கிறார்.....................*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு. (அறிந்தறிந்தித்யாதி) இத்திருவாய்மொழியிலே-கீழும்மேலும் விஶ்லேஷமாயிருக்க, இப்பாட்டு-ப்ரீதியாய்ச் சொல்லுமது ப்ராகரணவிருத்தமாகையாலே, ப்ரகரணத்துக்குச்சேர வநவாப்தியாகவவதாரிகை (கீரித்யாதி) போர-மிகவும். இன்றுதாகாநின்றீர் - வெறுத்திராய்நின்றீர். இவ்வம்சம் பெற்றேனென்றது - * மயர்வறமதிநலமருள, அத்தாலே, சாவதுபிறப்பதான வறிவுகேடு தவிரப்பேற்றேனென்றபடி,

வீப்ஸாத்வயத்துக்கர்த்தம் (முதலித்யாதி) பஜநீயனென்றது - * வீடுமின் முற்றத்திலே. சுலபனென்றது - * பத்துடையடியவரிலே. அபராதசஹனென்றது- * அஞ்சிறையிலே. "அறிந்து-தேறி, அறிந்து-தேறி" என்றநவயிப்பது. இப்படி திருவாய்மொழிதோறு மறிவும் தெளிவுமாய்ச்சென்று லநுபவமுண்டே; கூப்பிடுகிறதென்னென்ன (இதெல்லாமித்யாதி)

அர்த்தபஞ்சகபரமாக்கி வீப்ஸைக்கு தாத்பர்யாந்தரம் (அன்றிக்கேயறிந்தறிந்தித்யாதி) அதாவது-பரஸ்வரூபத்தையறிந்துதேறி, அந்தபரஸ்வரூபத்தினுடைய யாதாத்ம்யத்தையறிந்து தேறியென்றபடி. இப்படியே மற்றநாலுக்கும் கண்டுகொள்வது. பரஸ்வரூபத்துக்கு சிதசித்வைலக்ஷண்யம் தொடக்கமானவை - அசாதாரணதர்மங்கள். ஜ்ஞாநாநந்தங்கள் தொடக்கமானவை-ஆத்மாவுக்கசாதாரணதர்மங்கள். பரஸ்வரூபத்துக்கும்,ஸ்வஸ்வரூபத்துக்கும் யாதாத்ம்யம்-ஆஶ்ரிதபாரதந்த்ர்யமும், ததியசேஷத்வமும். ஸ்வீகாரமென்கிறது-ப்ரபத்தியை. உபாயத்தில் ஸ்வரூபஜ்ஞாநம் - "அவனுபாயம்" என்றறிகை. அவதாரணார்த்தம் - யாதாத்ம்யஜ்ஞாநம். "சரணே" என்கிறவவதாரணத்துக்கு தாத்பர்யம் (கைதர்யக்ருத்யமாயித்யாதி) பலத்தில், "கைங்கர்யம்புருஷார்த்தம்" என்றது-ஸ்வரூபஜ்ஞாநம்; யாதாத்ம்யம் - தனக்குமவனுக்கும் பொதுவன்றிக்கே யவனுக்காகவே செய்கை. "அஹங்காரமமகாரங்கள்விரோதி" என்றறிகை - விரோதிஜ்ஞாநம்; "கைங்கர்யத்திலஹங்காரமமகாரங்கள்விரோதி" என்றறிகை-விரோதியாதாத்ம்யஜ்ஞாநம். யாதாத்ம்யம்-அதினுடைய சரமகாஷ்டை.

கீழேநோக்காகபாவம் (இப்படியித்யாதி) ஆவி-ஹ்ருதயம். சப்தார்த்தம் (பரிபூர்ணேத்யாதி) மூர்த்தி-ஸ்வரூபம். "நறுந்துழாயின்கண்ணியம்மா" என்றத்தைக் கடாக்ஷித்து "நிறைந்த" இத்யாதிக்குபலிதம் (பெற்றவம்சத்தாலித்யாதி)

"பேதைமைதீர்ந்தொழிந்தேன்" என்றதற்குபாவம் ( அறிவித்யாதி ) ( அபேக்ஷித்தவதுபெற்றேன் ) தேஹநிவ்ருத்தியுண்டாகப்பெற்றேன். சப்தார்த்தம் ( சாவதித்யாதி ) பேதைமை-அறிவுகேடு.

ரஸோக்தி ( இவ்வறிவித்யாதி ) பச்சை-உபஹாரம். ஸ்யாமளதை-வாஸ்தவார்த்தம். உக்தார்த்தோபபாதநம் ( வைத்தவித்யாதி ) "நறுந்துழாயின்கண்ணியம்மா" என்றத்தைக்கடாக்ஷித்து ( நிரவதிகபோக்யபூதனானவுன்னையென்றது ) இப்பாட்டுவாக்யசேஷமாய்க் கிடக்கிறது. அதாவது - பேதைமைதீர்ந்தொழிந்தேனித்தனை, மார்வும்மாலையுமான வடிவழகைக்கண்ணிட்டுக் காணப்பெற்றிலேனென்று வாக்யசேஷம்.

அந்வயப்ரகாரம் ( நறுந்துழாயித்யாதி )................................*

## எட்டாம்பாட்டு.

கண்டுகொண்டென்கைகளாரநின்திருப்பாதங்கண்மே
லெண்டிசையுமுள்ளபூக்கொண்டேத்தியுகந்துகந்து
தொண்டரோங்கள்பாடியாடச்சூழ்கடன்ஞாலத்துள்ளே
வண்டுழாயின்கண்ணிவேந்தேவந்திடகில்லாயே.

### ஆறாயிரப்படி.

( கண்டுகொண்டு ) உம்முடைய சாம்சாரிக துஃகமெல்லாம்போயிற்றாகில், மற்றெதுக்காகக் கூப்பிடுகிறதென்னில் ; உன்னை என்கண்களாலே கண்டுகொண்டு என்கைகளார நின்திருப்பாதங்கள்மேல் எண்டிசையுமுள்ள பூக்கொண்டேத்தி யுகந்துகந்து ஸ்ரீவைஷ்ணவர்களோடேகூடநின்று பாடியாடவேணு மென்றாசைப்பட்டிறே கூப்பிடுகிறது ; வண்டுழாயின்கண்ணிவேந்தே, நானிப்படிபடாநிற்கச்செய்தே வந்தருளுகிறிலை யென்றெம்பெருமானை யின்னாதாகிறார்......... .................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், உத்தமானபோக்யதையி லபிநிவேசத்தாலே கண்டநுபவித்தடிமைசெய்ய வாசைப்படுகிறார்.

கண்டுகொண்டு - "நானுன்னைக்கண்டுகொண்டு" என்கிறநெஞ்சிற்காட்சியளவன்றியே கண்ணாலேபரிபூர்ணமாகக்கண்டநுபவித்து. என்கைகள் - * தூயவனேயென்றுதடவுமென்கைகள். ஆர-பூர்ணமநோரதமாம்படி. நின்-ப்ராப்தனானவுன்னுடைய. திருப்பாதங்கள்மேல்-திருவடிகளின்மேலே. ஆதராநுரூபமாக, எண்டிசையும்-சகலதிக்குக்களிலும். உள்ள-உண்டான. பூ-புஷ்பங்களை. கொண்டு-சம்பாதித்து. ஏத்தி-ஸ்தோத்ரபூர்வகமாகப்பரிமாறி. உகந்துகந்து-தத்தத்ப்ரவ்ருத்திகள்தோறும் ப்ரீதிபரவசராய். தொண்டரோங்கள்-உன்பக்கலிலே யத்யந்தாபிநிவே

ஹருபபக்தியையுடையோங்கள். பாடியாட-ப்ரீதிக்குப்போக்குவீடாகப்பாடுவதாடுவதாம்படி. கடல்-கடல். சூழ்-சூழ்ந்த. ஞாலத்துள்ளே-பூமியான சம்ஸாரத்துக்குள்ளே. முன்பெனக்குநெஞ்சில்ப்ரகாசிப்பித்த, வண்-விலக்ஷணமான. தழாய்க்கண்ணி-திருத்துழாய்மாலையையுடைய. வேந்தே-நாயகனே. வந்திடகில்லாய்-வந்திலை.......................................................................*

## ஈடு - எட்டாம்பாட்டு.

பெற்றவம்சம்சொன்னாராய், பெறுதவம்ச மிதுவென்கிறார் - இதில்.

(கண்டுகொண்டு) "காணவிரும்புமென்கண்கள்" என்றுகாணப்பெறாதே பட்டினிவிட்டகண் பட்டினிதீரும்படிகண்டுகொண்டு. "அரவிந்தம்போன்று நீண்டகண்ணனைக்கண்ணாரக்கண்டுகொண்டு" என்கிறபடியே, இக்கண்களின் வயிறாரக்கண்டுகொண்டு. (என்கைகளார) "தாயவனேயென்றுதடவுமென்கைகள்" என்கிறகைகளினுடைவுதல் தீரும்படியாக. கலியர் "வயிறாரவுண்ண" என்னுமாபோலே. (நின்திருப்பாதங்கள்மேல்) உனக்குதாரகமுமாய் போக்யமுமான திருவடிகளிலே. * பிடித்துச்சுவைத்துண்ணும் பாதக்கமலமிறே, சாரகம்தானேயாய்நின்றதிறே. அன்றிக்கே, எனக்குப்ராப்தமுமாய் போக்யமுமான வுன்திருவடிகளிலே. * உன்தேனேமலரும் திருப்பாதத்திலே. முன்புமநுவர்த்தித்துப்போருமதுண்டிறே விஷயங்களிலே; அங்ஙனன்றிக்கே, ப்ராப்தனானவுன்திருவடிகளிலே. "கூ஡ாஉவ௰கஜவஷி஗்ரஹய நூஜ஻ஹூஹ-ஷியாஸூ" (த்வத்பாதபங்கஜபரிக்ரஹதங்யஜந்மாப்யாஸம்) என்கிறதுக்கு ஆளவந்தார் "வார்த்தையழகிது, வகுத்தவிஷயத்திலே யாகப்பெற்றிலோம்" என்றருளிச்செய்தார். (எண்டிசையுமித்யாதி) விஷயாநுரூபமாகவு மென்னுடைய வபிநிவேசாநுரூபமாகவும். தம்முடையவாசாநுரூபமாக "ஆசையிலுள்ளவையெல்லாம்வேணும்" என்கிறார். அவ்வாசைதான் திக்குப்பட்டிறேயிருப்பது. அங்ஙனேயிறே கைங்கர்யருசியுடையார் வார்த்தையிருப்பது, கலியர் "கலவரிசிச்சோறுண்ணவேணும்" என்னுமாபோலே. "சுஹ௰ஸவவ-ஃ௰கூஷிஷ்யாமி" (அஹம்ஸர்வம்கரிஷ்யாமி) என்றிறேயிருப்பது. (உகந்துகந்து) ப்ரீதிமாறாதே செல்லும்படியாக. (தொண்டரோங்கள்) இக்கைங்கர்யத்திலேசுவடறிந்தநாங்கள். * கேசவன்றமர்க்குப்பின்பு தனியரல்லரிறே. (பாடியாட) ப்ரீதிப்ரேரிதராய்ப் பாடுவதாடுவதாம்படி. இதுவாகில்முன்பே நாம்செய்வதாக விருந்ததொன்றன்றோ, இஸ்ஸரீரசம்பந்த மற்றுவொருதேசவிசேஷத்திலேகொண்டுபோய், "ஷஊதசுஸாமகாயஞாஸ்தெ" (ஏதத்ஸாமகாயந்நாஸ்தே) என்னும்படிபண்ணுகிறோமென்ன; அதுவோநானபேக்ஷிக்கிறது (சூழ்கடல்ஞாலத்துள்ளே) எங்கேனும்விடாய்த்தாரா யெங்கேனும்

விடாய்தீர்க்கவோ. சூழ்கடல்ஞாலத்துள்ளே நான்காணவரவேணும். (வண்டுறாயின்கண்ணிவேந்தே) சம்சாரத்துக்குள்ளேகாட்டுமிடத்தில், அங்குள்ளார்க்குக் காட்சிகொடுக்குமாபோலே காட்டவும்வேணும் - நித்யசூரிகளுக்குக்காட்சிகொடுக்கு மொப்பனேயோடே காட்டவும்வேணும். (வந்திடகில்லாயே) "கூவியுங்கொள்ளாய்" என்றதுபற்றுதென்கிறார். வந்திடுகிறிலே. இது நான்பெறுதவம்ஸம்.

இதுதானிருந்தபடியென்; ப்ரக்ருதிசம்பந்தமற்றமையுமில்லை, கைங்கர்யம் பெற்றமையுமில்லை, இங்ஙனேயிருக்க "இவ்வம்ஸம்பெற்றேன், இவ்வம்ஸம்பெற்றிலேன்" என்கிறபடியென்னென்னில்; ஒன்றுத்தேஸ்யமாய், மற்றையது அதுக்குறுப்பாகவருமதிறே. "நாமும் முதலிலே 'இன்னின்றநீர்மை யினியாமுறாமை' என்றோமாகில், அவனும் ஸக்தனுயிருந்தானுகில் இதுகழிந்ததேயன்றோ" என்று அத்தைப்பெற்றாராக நினைத்திருந்தார், கைங்கர்யமவஸ்யம் பெற்றல்லது நிற்கவொண்ணுமையாலே, அதுகைப்புகுராமையைப்பற்ற-பெற்றிலோமென்கிறார்.................*

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு. (கண்டுகொண்டித்யாதி) "வந்திடகில்லாயே" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (பெற்றவம்சமித்யாதி)

கண்டென்றுதே, "கண்டுகொண்டு" என்றதுக்குபாவம் (காணவிரும்புமித்யாதி) "கண்டுகொண்டு" என்றால் "வயிறுநிறையும்படி" என்கிறவர்த்தம்காட்டுமோவென்ன (அரவிந்தமித்யாதி) அரவிந்தம்போலே நீண்டகண்ணையுடையவனைக் கண்ணிறையக்கண்டுகொண்டே னித்யர்த்த8. திருமொழியிரண்டாம்பத்து அஞ்சாந்திருமொழி எட்டாம்பாட்டு, "பெண்ணாகி" இத்யாதி.

"கைகளார" என்றதுக்குத்ருஷ்டாந்தம் (கலியரித்யாதி) கலியர்-பசியர். "திரு" என்று-போக்யதையும், "பாதம்" என்று-தாரகத்வமும் விவக்ஷித்துதாத்பர்யம் (உனக்கித்யாதி) அவனுக்குதாரகமாய் போக்யமுமாயிருக்குமோவன்திருவடிகளென்ன (பிடித்தித்யாதி) திருக்கையாலேபிடித்துத் திருப்பவளத்திலேவைத்து ஆஸ்வாதித்துபுஜிக்கும் திருவடிகளென்றபடி. பெரியாழ்வார் திருமொழி மூன்றாந்திருமொழி முதற்பாட்டு, "சீதக்கடல்"இத்யாதி.தாரகமென்றது-"உண்ணும்" என்றதின்தாத்பர்யம். இங்கே - "வடதளமதிசய்யரங்கதாமன்" இத்யாத்யநுசந்தேயம். (ப்ராப்தமுமாய்போக்யமுமானவிதி) ப்ராப்ததையும், போக்யதையும்-"நின்" என்றதிலேவிவக்ஷிதம். இவர்க்கு போக்யமாயிருக்குமோவென்ன (உன்தேனேயித்யாதி) போக்யமானவென்றால்போராதோ, "ப்ராப்தமுமாய்" என்றதுக்குக்கருத்தென்னென்ன (முன்புமித்யாதி) போக்யதையுண்டானாலும் அப்ராப்தமா யிருக்குமாகிலது த்யாஜ்யமென்னுமதுக்குப்ரமாணம் (த்வத்பாதேத்யாதி) "[illegible]

ண)-ந்வீரமாமாஹீதாநிதவாமதொநூரி " ( த்வத்பாதபங்கஜபரிக்ரஹநந்யஜந் மாபூயாஸமிந்யபிகிவேஸநதர்த்யமாநூ। ப்ராம்யந்ருமாம்ஸபணாயபரோதபூமா வாகர்ண்யபீருருதிதாநிதவாகதோஸ்மி ) இதிமாலதீமாதவநாடகே. ஒருதிக்கென்றுதே, " எண்டிசையும் " என்று-அஸக்யமாகச்சொல்லக் கூடுமோவென்ன ( விஷயாநுருபமித்யாதி ) ரஸோக்தி ( தம்முடையவித்யாதி ) ஆசை-திக்ரும். திக்குப்பட்டென்றது- " எண்டிசையும்" என்றத்தைப்பற்ற. இதுக்குபலிதம் (அங்ஙனேயிறேயித்யாதி ) இப்படியஸக்யத்தைச்சொன்ன பேருண்டோவென்ன ( கலியரித்யாதி ) " கைங்கர்யருசியுடையார்வார்த்தை " என்றதுக்குப்ரமாணம் ( அஹம்ஸர்வமித்யாதி )

" உகந்துகந்து " என்கிறவிது-விசிஷ்டவிதி. அதாவது-உகக்கைக்காகவும், பாடியாடுகைக்காகவுமென்றபடி. சீழேரோக்கிபாவம் (இக்கைங்கர்யத்திலேயித்யாதி ) " தொண்டரோங்கள் " என்று-பஹுவசநமாகச்சொல்லுவானென்னென்ன ( கேசவன்றமரித்யாதி )

" சூழ்கடல் " இத்யாதிக்கவதாரிகை ( இதுவாகிலித்யாதி ) முன்பே - "இந்நின்றநீர்மையினியாமுறாமை " என்றபோதே. "வந்திடகில்லாய்" என்றதுக்குபலிதம் (காணவரவேணுமென்றது) வேந்தே-ஸ்வாமிந். விவரணம் (நித்யஸூரிகளுக்கித்யாதி) வண்டுழாயின்கண்ணிவேந்தே-அழகிய திருத்துழாய்மாலையையுடைய நாயகனே யிதிசப்தார்த்தஃ. வந்திடகில்லாயே-வருகிறிலை. இதுக்குபாவம் (கூவியுமித்யாதி) பற்றுது-போராது.

தடஸ்த்தசங்கை (இதுதானித்யாதி) இரண்டுமேவிசிஷ்டமாயிருக்க; " பிறந்தும்செத்தும் " இத்யாதியாலே-ப்ரக்ருதிசம்பந்த நிவ்ருத்திரூபமான வம்ஸம்பெற்றேன், இதுபெறுதவம்ஸமென்று சொல்லுகிறபடி யென்னென்று சங்காதாத்பர்யம். பரிஹாரம் (ஒன்றித்யாதி) ஒன்று-கைங்கர்யம். மற்றையது- ப்ரக்ருதிசம்பந்தநிவ்ருத்தி. அதுக்குறுப்பாய்-கைங்கர்யத்துக்குசேஷமாய். விவரணம் ( நாமுமித்யாதி ) ஆகையாலே (நாமும்) என்று கூட்டுவது.

க்ரமேணுர்வயஃ.......................................................... ..........*

# ஒன்பதாம்பாட்டு.

இடகிலேனென்றட்டகில்லேனைம்புலன்வெல்லகில்லேன்
கடவனுகிக்காலந்தோறும்பூப்பறித்தேத்தகில்லேன்
மடவனெஞ்சங்காதல்கூரவல்வினையேனயர்ப்பாய்த்
தடவுகின்றேனெங்குக்காண்பன்சக்கரத்தண்ணலையே.

## ஆருயிரப்படி.

(இடகிலேன்) எம்பெருமானைக்காண்கைக்குபாயத்வேநபரிக்லுப்தமான கர்மயோகஜ்ஞாநயோக பக்தியோகங்களொன்றுமெனக்கின்றியேயிருக்கச்செய்தே, பகவத்குணங்களிலேவிழும் ஸ்வபாவமாய்விருந்தா லெம்பெருமான்றன்னுலுமெடுக்கவொண்ணுதவன்மையை யுடைத்

நாயிருந்த வென்னெஞ்சம் காதல்கூர, அதினாலே யறிவழிந்துநட்வாநி ன்றேன்; எங்ஙனேகாணும்படி யென்கிறார்............ ..................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அநுபாவ்யமான திருவாழியையுடைய வென்னுயனை அகிஞ்ச நனுய்வைத் தாசைப்பட்ட நானெங்கேகாண்பேனென்கிறார்.

ஒன்றிடகிலேனென்றட்டகில்லேன் - பசியும்தாஹமுமுடையார்க்கு ஒருபி டிசோற்றை யிடுதல், ஒருமிடறுதண்ணீர்வார்த்தல் செய்யமாட்டுகிறிலேன். இப்ப டிதாநருபமான கர்மயோகமில்லாமையாலே, ஜ்ஞாநயோகத்துக்குறுப்பாக, ஐம்பு லன்-இந்த்ரியங்களைந்தையும். வெல்ல-விஷயங்களிற்போகாமல் நியமிக்க. கில்லே ன்-மாட்டுகிறிலேன். கடவனுகி - அதடியானபக்தியோகசரீரத்தி லங்வயிக்கும்படி நியதனுய்க்கொண்டு. காலந்தோறும்-ஆராதநாநுரூபமானகாலந்தோறும். பூ-புஷ் பங்களை. பறித்து-சம்பாதித்து. ஏத்த-ஆராதித்துஸ்துதிக்க. கில்லேன் - மாட்டுகிறி லேன். இப்படியகிஞ்சநனுயிருக்கச்செய்தே, மடம் -)பற்றினவிஷயத்திலே ப்ரவ ணமாய். வல் - ஒருவராலும்விடுக்கவொண்ணுத சிக்கனவையுடைத்தான. நெஞ்ச ம்-நெஞ்சானது. காதல்-அபிநிவேசம். கூர-விஞ்சிவர. வல்வினையேன் - ததநுரூப மான வநுபவத்தைப்பண்ணப்பெருத ப்ரபலபாபத்தையுடையநான். அயர்ப்பாய்- அறிவுகேட்டையுடையேனுய்க்கொண்டு. சக்கரம் - போக்யமான திருவாழியையு டைய. அண்ணலை-நாதனை. தடவுகின்றேன் - “காணலாம்” என்று தேடாநின்றே ன். எங்கு-எங்கே. காண்பன்-காணக்கடவேன்.........................................*

## ஈடு - ஒன்பதாம்பாட்டு.

எம்பெருமானைக் காண்கைக்கீடான கர்மயோகாத்யுபாயங்களொ ன்றுமின்றிக்கே யிருக்கிற நான் “காணவேணும்” என்றுசைப்பட்டால், காண்கைக்குபாயமுண்டோவென்கிறார்.

(இடகிலேன்) ஆர்த்தவிஷயத்தைக்கண்டால் “ஐயோ!” என்றிர ங்கிச்சிலவிடில், அதுசர்வேஶ்வரன் திருவுள்ளத்துக்குச்சாலவுகப்பிறே; அங்ஙனொன்றும் செய்யப்பெற்றிலேன்.

(ஒன்றட்டகில்லேன்) கையில் த்ரவ்யத்தை யவிழ்த்திடாவிட்டா ல், உடம்புநோவத் தண்ணீர்சுமந்து வார்க்கலாமிறே; அதுவும்செய்தி லேன்.

(ஐம்புலன்வெல்லகில்லேன்) “பிறர்க்கொன்றுவேணும்” என்றி ராவிட்டால், “எனக்கு” என்னுமதுதான் தவிரப்பெற்றேனே; ஶ்ரோ த்ராதிகள்விஷயங்களிலே பட்டிப்போகாதபடி பரிஹரித்திலேன்.

(கடவனுகி) சாஸ்த்ரங்களிற்சொல்லுகிறபடியே, அடைத்தகால ங்களிலே புஷ்பாத்யுபகரணங்களைக்கொண்டு தேவர்திருவடிகளிலே ச மாராதநம்பண்ணிற்றிலேன். இவர் சமாராதநம்பண்ணி யறியாரோவெ

ன்னில்; நூல்பிடித்தாற்போலே சாஸ்த்ரங்களில் சாதநரூபமாகச்சொல்லுகிற சமாராதநத்தி லிவர்க்கந்வயமில்லை, தேஹயாத்ரைக்குடலாகச் செய்யுமதுண்டு. இவையுண்டாகிற்றாகில் பக்திசரீரத்திலே நிவேசிப்பிக்கலாம், அதுவுமில்லையென்கிறார். இவற்றினுடைய ஸ்வரூபநிஷேதம்பண்ணுகிறதன்று, உபாயத்வத்தை நிஷேதிக்கிறது.

(மடவன்னெஞ்சம்) மடப்பத்தால் மென்மையை நினைக்கிறது அதாவது - "பகவத்விஷயம்" என்றால் கடுகவிழுந்துகொண்டுநிற்கை. வன்மையாவது - விழுந்தால் பின்னை அங்குநின்றும் மீட்கவரிதாயிருக்கை. (காதல்கூர) இப்படிப்பட்ட நெஞ்சானது ஸ்நேஹம்மிக. (வல்வினையேன்) ஸ்நேஹாநுகூலமாகக்காணப்பெறாத பாபத்தைப்பண்ணினேன். காதலுக்கு விஷயம்பெற்றேனல்லேன், இத்தை யகஞ்சுரிப்படுத்தினேனல்லேன், ஆசாலேசமுடையார்க்கு முகங்கொடாதவனாய் இழந்தேனல்லேன்; என்பாபமிருந்தபடியென். (அயர்ப்பாய்) அறிவுகேட்டையுடையேனாய். (தடவுகின்றேன்) முன்னேவந்துநின்றாலும் காணமாட்டாதபடி தடவாநின்றேன். "நத்வாபஶ்யாமி கௌஸல்யே" (நத்வாபஸ்யாமி கௌஸல்யே) என்கிறபடியே.

(எங்குக்காண்பன்) ஒருகைம்முதலின்றிக்கே யிருக்கக்கூப்பிடுகிற நானெங்கேகாணக்கூப்பிடுகிறேன். (சக்கரத்தண்ணலையே) கையிலே திருவாழியையுடைய சர்வேஸ்வரனை, எங்கேகாணக்கடவேன். யசோதைப்பிராட்டிகையும் வெண்ணெயுமாகப் பிடித்துக்கொண்டாப்போலே; * கையும் நெய்யாராழியுமாகப் பிடித்துக்கொள்ளவாயிற் றிவராசைப்படுகிறது ............................................................*

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு (இடகிலேனித்யாதி) பூர்வார்த்தத்தையும், "எங்குக்காண்பன்" என்றபதங்களையும் கடாக்ஷித்தவதாரிகை (எம்பெருமானையித்யாதி) "இடகிலேன்" இத்யாதியாலே-கர்மயோகாபாவமும், "ஐம்புலன்வெல்லகில்லேன்" என்று - ஜ்ஞாநயோகாபாவமும், "கடவனாகி" இத்யாதியாலே - தத்கார்யமான பக்தியோகாபாவமும் சொல்லுகிறது.

இடுகையும் பகவத்ப்ரசாதஹேதுவோவென்ன (ஆர்த்தவிஷயத்தையித்யாதி) இடகிலேன்-இடமாட்டுகிறிலேன்.

அட்டகில்லேன்-வார்க்கமாட்டுகிறிலேன்.

தாத்பர்யம் (பிறர்க்கித்யாதி) சப்தார்த்தம் (ஶ்ரோத்ராதிகளித்யாதி)பட்டிபயிர்மேய்கை.

கடவனாகி - கர்த்தவ்யபுத்தியையுடையனாய். சாஸ்த்ரவஶ்யனாயென்றபடி. கடவன்-யோக்யன். அமைத்த-ப்ராப்தமான. கீழ "எண்டிசையுமுள்ளபூக்கொண்டேத்தி" என்றத்தைக்கடாக்ஷித்து (இவர்சமாராதநம்பண்ணி யறியாரோவெ

ன்றது ) நூல்பிடித்தாற்போலேயென்றது - சாடு. நூல் - சாஸ்த்ரமும், தந்துவும்-க்ரமம் தப்பாமேயென்றபடி. தேஹயாத்ரைக்கு - கைங்கர்யத்துக்கு. அதாவது-செய்யாதபோது தரிக்கமாட்டாமையாலே செய்துகொண்டிருப்பர். இந்தால் - ப்ராப்யபுத்தியாலே செய்யுமதுண்டென்றபடி. இவையுண்டாகிற்றாகில்-பூப்பறித்தேத்துகிற விவையுண்டாயிற்றாகில். பக்திசரீரத்திலே நிவேசிப்பிக்கலாம்-பக்திஸ்வருபத்திலே யன்வயிப்பிக்கலாம். ஆனால், கர்மயோகாதிகளுடைய ஸ்வருபத்யாகம் சொல்லுகிறதோவென்ன (இவற்றினுடையவித்யாதி)

கூர்தல்-மிகுதி. "வல்வினையேன், எங்குக்காண்பன்" என்றத்தைக்கடாக்ஷித்தருளிச்செய்கிறார் (ஸ்நேஹாநுகூலமானவித்யாதி) இதுதன்னைவிவரிக்கிறார் (காதலுக்கித்யாதி) "கூர" என்றத்தைப்பற்றவருளிச்செய்கிறார் ( இத்தையகஞ்சுரியித்யாதி ) அகஞ்சுரிப்படுத்தினேனல்லேன் - குறைக்கவல்லேனல்லேன். கூரவென்று-மிகுதியைச்சொல்லுகையாலே, அல்பமாக்கவல்லேனல்லேனென்றபடி. " வல்வினையேன் " என்றத்தைக்கடாக்ஷித்தருளிச்செய்கிறார் (ஆசாலேசமித்யாதி) ஆசாலேசமுடையார்க்கென்றது-அவன் ஆபத்துக்களிலேயுதவும் ஸ்வபாவனுகையாலே அர்த்தாத்ஸித்தம். அயர்ப்பாய்-கலங்கி. காணமாட்டாதபடியான வ்யஸநாதிசயத்தாலேயென்றபடி. (தடவாநின்றேன்) "இத்தசையில்வாராதிரான்" என்றுயிற்றுதடவுகிறது. முன்னேநின்றாயும் காணமாட்டாமைக்கு த்ருஷ்டாந்தம் (நத்வேத்யாதி) " [Grantha verse, illegible] " ( ராமம்மேநுகதாத்ருஷ்டிரத்யாபி நநிவர்த்ததே।நத்வாபஸ்யாமிகௌஸல்யே ஸாதுமாபாணிநாஸ்ப்ருஸ)இதிதசரத꞉.

"இடகிலேன்" இத்யாதியைக்கடாக்ஷித்துபாவம் (ஒருகைம்முதலித்யாதி) சப்தார்த்தம் (கையிலேயித்யாதி) "அண்ணலே-எங்குக்காண்பன்" என்றுதே, "சக்கரத்தண்ணலே" என்று விசேஷிக்கையாலே-ஒருரசமருளிச்செய்கிறார் ( யசோதையித்யாதி ) நெய்யென்று-கூர்மையும், நெய்யும். நெய்யாராழி-கூர்மைமிக்கதிருவாழி. ஆர்தல்-மிகுதி. "தடவுகின்றேன்" என்றவநந்தரம் " எங்குக்காண்பன் " என்கையாலே, " காண்பன் " என்றதுக்கு - ஸ்பார்ஶநப்ரத்யக்ஷத்தை விவக்ஷித்தருளிச்செய்கிறார் (பிடித்துகொள்ளவாயிற்றென்று) யசோதைப்பிராட்டி யித்யாதிக்கு - " ஆனுயர்தாயவனேயென்று தடவுமென்கைகளே " என்றதிலேநோக்கு.

க்ரமேணாந்வய꞉ ........................................................................*

# பத்தாம்பாட்டு.

சக்கரத்தண்ணலேயென்றுதாழ்ந்துகண்ணீர்ததும்பப்
பக்கநோக்கிநின்றலந்தேன்பாவியேன்காண்கின்றிலேன்
மிக்கஞானமூர்த்தியாயவேதவிளக்கினையென்
றக்கஞானக்கண்களாலேகண்டுதொழுவனே.

## ஆறாயிரப்படி.

(சக்கரத்தண்ணல்) சக்கரத்தண்ணலேயென்றுதாழ்ந்து கண்ணீர் ததும்பப் பக்கம்நோக்கிநின்று சாலத்தளர்ந்தேன், பாவியேன்காணப்

பெறுகிறிலேன்; ஸர்வஜ்ஞனாய் சகலவேதவேத்யனாயிருந்த வெம்பெருமானை, எனக்குத்தக்க சிலஞானக்கண்களாலே கண்டுதழுவுவன், நானெங்ஙனே தரிக்கும்படியென்கிறார் ................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், வேதவேத்யனானவனைக் கையும்திருவாழியுமாகக்காண வாசைப்பட்டுக்கிடையாதொழிந்தால், மறந்துபிழைக்கவொண்ணாதபடி மாநஸஜ்ஞாநத்துக்கு விஷயமாய் ப்ரகாசிக்கவேணுமோவென்கிறார்.

சக்கரம் - கையும்திருவாழியுமானவடிவைக்காட்டி. அண்ணலே - அடிமைகொண்டஸ்வாமியே. என்று-என்றுசொல்லி. தாழ்ந்து - அவனையநுபவிக்கப்பெறுமையாலே தறைப்பட்டுவிழுந்து. கண்-கண்கள். நீர்-நீர். ததும்ப-மிகைக்கும்படி. பக்கம்-சுற்றும். நோக்கி-பார்த்து. நின்று-நின்று. அலந்தேன்-க்லேசித்தேன். பாவியேன் - காண்கைக்கு ப்ரதிபந்தகமான பாபத்தைப்பண்ணினநான். காண்கின்றிலேன்-காணப்பெறுகிறிலேன். இவ்வளவில் மறந்துவிடவொண்ணாதபடி, மிக்கஞானமூர்த்தியாய-அபரிச்சிந்நஜ்ஞாநஸ்வரூபனான. வேதம்-வேதமாகிற. விளக்கினை-தீபத்தாலேகாணப்படுமவனை. என்-கண்ணிட்டுக்காணவாசைப்பட்டு க்லேசிக்கிறவெனக்கு. தக்க-தகுதியான. ஞானம்-ஞாநமாகிற. கண்களாலே-கண்ணாலே. கண்டு-கண்டு. தழுவுவன்-சம்ஶ்லேஷியாநிற்பன்.

காணப்பெறுமையாலே ப்ரேமம் து:கஹேதுவானவோபாதி, ஆந்தரப்ரகாசத்தாலே ஜ்ஞாநமும் து:கஹேதுவாயிற்றென்று கருத்து ......................*

## ஈடு - பத்தாம்பாட்டு.

காணப்பெறுவிட்டால் மறந்துபிழைக்கவொண்ணாதபடி யெனக்குத்தக்கவொரு ஜ்ஞாநத்ருஷ்டி யெங்ஙனேயுண்டாயிற்றென்கிறார்.

(சக்கரத்தண்ணலேயென்றுதாழ்ந்து) திருவாழியைக்காட்டி யென்னையெழுதிக்கொண்டவனேயென்று இவ்வுக்தியோடே தறைப்பட்டு. (கண்ணீர்ததும்ப) கண்கள்நீர்மிகைக்கும்படி. இவருடைய வ்யவசாதத்தினுடைய வெல்லைகாண்பது கண்ணநீரிலே. ( பக்கம்நோக்கிநின்றலந்தேன் ) வருகைக்கு சம்பாவனையுள்ள திக்கைப்பார்த்துநின்றுவெறுத்தேன். "வாஶாவஶாவஶு:" (பரமாபதமாபந்ந:) என்னுமளவிறே.

( பாவியேன்காண்கின்றிலேன் ) ஆபத்ஸகனாயிருக்க, மஹாபாபியாகையாலே நான்காணப்பெறுகிறிலேன்.

காணப்பெறுதொழிந்தால் மறந்துபிழைக்கலாம்படி நெஞ்சில் ப்ரகாசியாதொழியத்தான்பெற்றேனோ. (மிக்கஞானமூர்த்தியாய) பரிபூர்ணமான ஜ்ஞாநத்தையே ஸ்வரூபமாகவுடையனான. ( வேதவிளக்கினை ) வேதமானவிளக்காலே காணப்படுமவனை. வேதப்ரகாசகனானவனையென்றுமாம். (என்தக்கவித்யாதி) எனக்குத்தக்காப்போலே யொருஜ்ஞாநத்ருஷ்டியுண்டாய், அத்தாலேகண்டநுபவிப்பன். காணப்பெறுமையாலே ப்ரேமம் க்லேஶஹேதுவாகிறுப்போலே, நெஞ்சில் ப்ரகாஶமும் க்லேஶஹேதுவாகாநின்றது. "மயர்வறமதிநலமருளினன்" என்கிற ஜ்ஞாநபக்தி

களிரண்டும் கழுத்துக்கட்டியாய்விட்டது. மறந்துபிழைக்கவொண்ணுதபடி யெனக்குத்தக்காப்போலே யொருஜ்ஞாநமும்வேணுமோவென்கிறுர்.

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு (சக்கரத்தண்ணலேயித்யாதி) "கண்டுதழுவுவன்" என்கையாலே-ப்ரீதிதோற்றினாலும், ப்ரகரணோசிதமாக வின்னுப்பாகவவதாரிகை (காணப்பெருவிட்டாலித்யாதி) எனக்குத்தக்கதொரு-ப்ரேமாகுலனுணவெனக்கு யோக்யமானதொரு.

ததும்ப-வ்யாபிக்க. கீழ்ப்பதத்தையும் கூட்டிபாவம் (இவருடையவித்யாதி) வெறுத்தேன்-தகைத்தேன். வெறுக்கிறதென், க்ஷணம்தரிக்கவொண்ணுதோவென்ன (பரமாபதமித்யாதி)

"அலந்தேன்" என்று-ஆபத்தின் மிகுதிசொல்லுகையாலே, அர்த்தாத் அவனுபத்ஸகத்வத்தை யருளிச்செய்கிறுர் (அவனுபத்ஸகனுயித்யாதி)

மேலுக்கெல்லாமவதாரிகை (காணப்பெருதொழிந்தாலித்யாதி) வேதத்னுதத்தனக்கு விளக்காசவுடையவனேயென்று-மூந்தினவர்த்தம். வேதப்ரதிபாத்யனென்றபடி. இரண்டாவது - வேதத்துக்குவிளக்கு. "வேதாம்ஸ்ச ப்ரஹிணோதி" (வேதாம்ஸ்சப்ரஹிணோதி) என்று, உபதேசமுகத்தாலேவேதப்ரகாசகனென்றபடி.

தழுவுகை-அநுபவிக்கை. ஞானக்கண்களாலேகாண்கை நல்லதன்றோவென்ன (காணப்பெருமையாலேயித்யாதி) கீழே "காதல்கூரவல்வினையேன்" என்று-ப்ரேமம் க்லேஸஹேதுவாகிறுப்போலே யென்றபடி. ஏதத்விவரணம் (மயர்வறவித்யாதி) "காதல்கூர," "தக்கஞானக்கண்கள் என்கையாலே" (ஜ்ஞாநபக்திகளிரண்டுமென்றது) கழுத்துக்கட்டி-கழுத்தைக்கட்டுமது. பாதகமென்றபடி. அதாவது-கண்டநுபவிக்கவுமொட்டாது, மறந்து பிழைக்கவுமொட்டாதென்றபடி. உத்தரார்த்தத்துக்குபாவம் (மறந்தித்யாதி)

க்ரமேணுந்வயஃ........................................................................*

## பதினொன்றாம்பாட்டு.

தழுவிநின்றகாதறன்னுற்றுமனைக்கண்ணன்றன்னைக்
குழுவுமாடத்தென்குருகூர்மாறன்சடகோபன்சொல்
வழுவிலாதவொண்டமிழ்களாயிரத்துளிப்பத்துந்
தழுவப்பாடியாடவல்லார்வைகுந்தமேறுவரே.

### ஆறுயிரப்படி.

(தழுவிநின்ற) "முடிவேன்" என்றுலும் முடியவொட்டாதிருந்த காதலாலே சொன்னவித்திருவாய்மொழியை இப்பாவயுக்தமாகப்பாடியாடவல்லார் வைகுந்தமேறுவரென்கிறுர்..................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழியை யநுசந்தித்து ப்ரேமபரவசராமவர்கள் பரமபதத்திலேயேறப்பெறுவர்களென்று பலத்தையருளிச்செய்கிறுர்.

தழுவி-ஸ்வரூபத்தோடு அவிநாபூதமாய். நின்ற - ஸ்த்திரமான. காதல்தன்னால்-பகவதநுபவாபிநிவேசத்தாலே. தாமரை-அவ்வபிநிவேசத்துக்கு நிதானமாய், நிரதிசயபோக்யமானதாமரைபோன்ற. கண்ணன்றன்னை- திருக்கண்களையுடையவனைப்பற்ற. குழுவும்-திரண்ட. மாடம்-மாடங்களையுடைத்தான. தென்குருகூர்-திருநகரிக்குநிர்வாஹகரான. மாறன்-குடிப்பிறப்பையுடைய. சடகோபன்-ஆழ்வாருடையதாய். வழுவிலாத-பகவத்குணங்களிலொன்றும் வழுவாதபடியான. ஒண்-போதகத்வவைலக்ஷண்யத்தையுடைத்தாய். தமிழ்கள்-சர்வாதிகாரமான த்ராமிடரூபமான. ஆயிரத்துள்-ஆயிரந்திருவாய்மொழியில். இப்பத்தும் - இப்பத்தையும். தழுவ-பாவவ்ருத்தியோடு நெஞ்சுபொருந்தும்படி. பாடி-பாடி. ஆட-ப்ரேமபாரவஶ்யத்தாலே விக்ருதராயாட. வல்லார்-வல்லவர்கள். வைகுந்தம் - அசங்குசிதாநுபவஸ்த்தலமான பரமபதத்திலே. ஏறுவர்-ஏறப்பெறுவர்கள்.

இது - அறுசீராசிரியவிருத்தம்.........................................................*

## ஈடு - பதினொன்றாம்பாட்டு.

நிகமத்தில்-இத்திருவாய்மொழிகற்றாரெம்பெருமானோடே நித்யசம்ஶ்லேஷம்பண்ணலாந் திருநாட்டிலே செல்லப்பெறுவரென்கிறார்.

( தழுவிநின்றகாதல்தன்னால் ) நான் ‘‘விடுவேன்’’ என்றாலும் விடவொண்ணாதபடியாய், உடன்வந்தியான வதிமாத்ரமான காதலாலே. ( தாமரைக்கண்ணன்றன்னை ) இக்காதலுக்கு க்ருஷிபண்ணின நேத்ரபூதனைச்சொல்லுகிறார். ( குழுவுமாடத்தென்குருகூர் ) ‘‘ ஸர்வஞ்சகுஶலம்க்ருஹே ’’ ( ஸர்வஞ்சகுஶலம்க்ருஹே ) என்னுமாபோலே, ‘‘ஆழ்வார்க்கார்த்திமிக சர்வேஶ்வரன்வரவுதப்பாது’’ என்று திருநகரிகுடி நெருங்கிக்குளிர்ந்து தேறினபடி. (( மாறன் ) சம்சாரத்தைமாற்றினவர். ( சடகோபன் ) பகவத்விமுகருக்குசத்ரு. ) (சொல்வழுவிலாத) பகவத்விஶ்லேஷத்தாலே கூப்பிடுகிறவிந்நன்மையிலொன்றுந்தப்பாதபடி ( யாய், சுபோதமுமாய், சர்வாதிகாரமுமாம்படி ) சொன்ன ஆயிரத்துளிப்பத்தும். (தழுவப்பாடியாடவல்லார்) ஆழ்வார்பாவவ்ருத்தியொருவர்க்கும்பிறக்கமாட்டாதிறே; அதிலே சிறிதணையநின்றாகிலு மித்தையப்யஸிக்கவல்லவர் (களாய், பாரவஶ்யத்தாலே விக்ருதராயாடவல்லார்) கள். (வைகுந்தமேறுவரே) காணவாசைப்பட்டுக்கூப்பிடுகிற சம்சாரத்தைக்கழித்து, நித்யாநுபவம்பண்ணலாம் நித்யவிபூதியிலே புகப்பெறுவர். குழுவுமாடம்-நெருங்கினமாடம். தென்குருகூர் - அதளவவழகியதிருநகரி.........*

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் (தழுவிநின்றவித்யாதி) ‘‘வைகுந்தமேறுவர்’’ என்றபதத்தைப்பற்ற-அவதாரிகை.

கீழ்வாக்யவிவரணம் (உடன்வந்தியானவென்றது) உடன்வந்தி - உத்பத்திசிஷ்டம். ‘‘தன்னால்’’ என்றதுக்கர்த்தம் (அதிமாத்ரமானவென்று)

நேத்ரபூதனையென்றது-சாடு; அந்தரங்கனை, நேத்ரமானவனையென்றும்.

இவராற்றாமையாலே சிந்நராயிருக்க, திருநகரிக்குக்குளிர்த்தி யெங்ஙனே யென்ன (ஸர்வஞ்சேத்யாதி) ஸ்ரீபரதாழ்வான் பங்கதிக்ரஹணபடியைக்கண்டு பெருமாள் வரவைநிச்சயித்து தரித்தபடியாலேயிறே-“குஸலம்” என்றது. “தென்” என்று-அழகாய், அத்தால்-குளிர்த்தியைச்சொல்லுகிறது. அன்றிக்கே, “குழுவுமாடம்” என்றவிடத்திலே-குளிர்த்திசித்தமென்னுதல். குழுவு-சமூஹம். “ஸர்வஞ்சேத்யயோத்யாயாம் ஸாந்த்வாம் பரதம் தத: | பரிகல்பிததேவாங்க: ஸர்வம் குஸலம் கதம்” (பங்கதிர்தஸ்தஜடிலோ பரதஸ்த்வாம்ப்ரதீக்ஷதே | பாதுகேதேபுரஸ்க்ருத்யஸர்வஞ்சகுஸலம்க்ருஹே) இதி யுத்தகாண்டேராமம்ப்ரதி பரத்வாஜ:. (குடிநெருங்கினபடியென்றது) “தழுவு” என்று-சமூஹமாய், அத்தால்நினைப்பது-நெருக்கத்தையாய், (நெருங்கினவென்று) மாடங்களினுடையசெறிவைச்சொல்லுகிறதென்றபடி.

கீழேநோக்காசஸப்தார்த்தம் (பகவதித்யாதி)

“தழுவப்பாடி” என்று - நஞ்ஞானபாவவ்ருத்தியோடேபாடியென்கிறதோவென்ன (ஆழ்வாரித்யாதி) “தழுவிநின்றகாதல்” என்றாப்போலே தழுவிநின்றுபாடவல்லாரென்னுதொழிவானென்னென்ன (ஆழ்வாரித்யாதி) என்னுதல். தழுவுதல்-ஸ்பர்ஸித்தலாய், ஆழ்வாருடையபாவவ்ருத்தியிலே பல்பாங்வயத்தையுடையராய்க்கொண்டென்றபடி.

ஒண்-போதகத்வ வைலக்ஷண்யத்தையுடைய. க்ரமேணாந்வய: ..........*

---

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

(சீலமில்லா.)

ஆபத்பந்துத்வதீப்தம் நிரவதிகமஹாநந்ததம் க்ராந்தலோகம் துர்த்தர்ஶம் தேவதாநாம்விதரமநுபதிம்ஸர்வபூதாந்தரஸ்த்தம் | பூர்ணஜ்ஞாநைகமூர்த்திம் ப்ரஸ்துதஸஹஜஸம்பந்தநாதம் ஸ்ருஷ்டீநாம் விஶ்ராந்திஸ்தாநமீஶம் விஶதகுணகணம் ப்ராஹ விஶ்லேஷபீரு:. (௪௧)

ஆஶ்ரிதாநாம் ஸ்வரக்ஷாநிரவதிகாஸ்திதோ வீதமோஹோ விமோஹை: வைராக்யாந்நோ ஸ்ருஜ்யதவிப்யயஸ்யாநஸ்: | ஸம்ஜ்ஞாநாஸ்யோநிரவதிவிஹிதாஞ்ஜநப்ரஷ்டிம் விநிந்து வைராக்ய வைஶ்வஸமோஹா பூதிமாணவிஸ்ருஷ்டைக்ஷாம்சவகே. (௪௨)

(ஆபத்பந்துத்வதீப்தம்) ஞாலமுண்டாய்ஞானமூர்த்தி - ப்ரளயாபத்திலேயெல்லாரையும் திருவயிற்றிலேவைத்து ரக்ஷித்தருளி, அத்தாலே நிரதிசயதேஜஸ்ஸையுடையனாய்; (நிரவதிகமஹாநந்ததம்) கொள்ளமாளாவின்பவெள்ளமித்யாதி-நிரவதிகமான ஸ்வாநுபவமஹாநந்தத்தைக்கொடுக்குமவனாய்; (க்ராந்தலோகம்) தாவிவையங்கொண்டவெந்தாய்-சகலலோகங்களையும் திருவடிகளாலேயளந்தவனுமாய்; (துர்த்தர்ஸம்தேவதாநாம்) பேணிவானோர்காணமாட்டாப்பீடுடை-ப்ரஹ்மாதிகளாலும் வருந்திக்காணப்படாதவனாய்; (பிதரமநுபதிம்) அப்பனேயடலாழியானே-எல்லார்க்கும் நிருபாதிகபிதாவுமாய்; (ஸர்வபூதாந்தரஸ்த்தம்) ஆக்கையுள்ளுமாவியுள்ளுமித்யாதி-சரீரம்முதலான சர்வபூதங்களிலுமுள்ளேநிற்குமவனாய்; (பூர்ணஜ்ஞாநைகமூர்த்திம்) நிறைந்தஞானமூர்த்தியாயை- பரிபூர்ணஜ்ஞாநஸ்வரூபனு

மாய்; (த்ருதஸ்ரூபகுளஸிம்)வண்டுழாயின்கண்ணிவேந்தே-மஹநீயதுளசீதாமசோபிதனுமாய்; (சக்ரநாதம்) சக்கரத்தண்ணலேயே-திருக்கையிலே திருவாழியையுடையனுமாய்; (ஶ்ருதிராம்விஶ்ராந்திஸ்த்தாநம்) வேதவிளக்கினை-சர்வவேதப்ரதிபாத்யனுமாயிருக்கிற வெம்பெருமானைக்கண் டநுபவிக்கப்பெறுமையாலே ஆழ்வார் * சீலமில்லாச்சிறியனிலே அதிநிந்தராய்க்கொண்டு, தம்முடைய திருவுள்ளத்திலே சர்வேஶ்வரன் விஶதமாக ப்ரகாசிக்கிற வநேககல்யாணகுணங்களை யுடையனாகவருளிச்செய்தாரென்கிறார்............................................................................ (சக)

இத்தஶகத்திலேயாழ்வார்கேதப்பட்டபடியை இன்னபடியென்கிறரு ஶ்லோகத்தாலேகாட்டியருளுகிறார்.

(துஶ்ஶீலஃ) சீலமில்லாச்சிறியன் - நல்லசீலமில்லாதவனென்றும்; (மாம்ஸசக்ஷுஃ) என்கண்காணவந்து - அதுக்குமேலே, காண்கைக்கு யோக்யமல்லாத மாம்ஸசக்ஷுஸ்ஸையுடையனென்றும்; (நிரவதிதுரிதஃ) ஈவிலாததீவினைகளைத்தனைசெய்தனன்கொல் - அதுக்குமேலே, ப்ரதிபந்தகங்களான வநேகபாபங்களை யுடையனென்றும்; (வீதலஜ்ஜஃ) நாணமில்லாச்சிறுதகையேன்-இப்படியிருக்கிற பூர்வவ்ருத்தத்தைத நினைக்கமாட்டாதலஜ்ஜாஶூந்யனென்றும்; (விலோலஃ) ஏழையேன் நோக்குவனே-அம்மாத்ரமன்றிக்கே, ப்ரஹ்மாதிகளுக்குங்காணவொண்ணாத வெம்பெருமான்வடிவழகை "காணவேணும்" என்று சாபல்யத்தை யுடையனென்றும்; (ப்ரோக்ஷாஹீநஃ) நாக்குநீள்வன் ஞானமில்லை - "எங்கும்ஸந்நிஹிதனானவெம்பெருமான் முகங்காட்டாதொழிகிறது நினையாமை" என்றுறியிராதே, திரியவுங்காணவாசைப்படுகைக்கறிவுகேட்டையுடையனென்றும்;(அந்யஸங்காத்க்ருதமபிலகயன்) அறிந்தறிந்தித்யாதி -"பூர்வமவனுபகரித்தமாநசாநுபவமாத்ரம் பர்யாப்தமன்று" என்றும்; (சீலமந்தர்த்ததாநஃ) கண்டுகொண்டென்கைகளாரவித்யாதி -"இஸ்ஸம்சாரத்திலேதானே யெம்பெருமானைக்கண் டெல்லாவடிமையும் செய்யவேணும்" என்றும்; (கர்மஜ்ஞாநாதிஶூந்யஃ) இடகிலேனென்றட்டகில்லேனித்யாதி -அதுக்கிடான சர்மஜ்ஞாநபக்திகளில்லையென்றும்; (நிருபதிவிஹிதாம்ஜ்ஞாநத்ருஷ்டிம்விநிந்தந்) என் தக்கஞானக்கண்களாலேகண்டு- "மறந்துபிழைக்கவுமொண்ணாதபடி மாநஸஜ்ஞாநமாகிற சக்ஷுஸ்ஸு எனக்கெங்கேயுண்டாயிற்று" என்று மிப்படி * சீலமில்லாச்சிறியனிலே ஆழ்வார் ஸ்வதோஷங்களை க்யாபநம்பண்ணிக்கொண்டு எம்பெருமானுடைய திருக்கல்யாணகுணங்களிலே யநுரக்தராய் தத்தர்ஶநசாபேக்ஷருமானாரென்கிறார்......................................................................(சஉ)

---

# திருவாய்மொழிநூற்றந்தாதி.

சீலமிகுகண்ணன்றிருநாமத்தாலுணர்ந்து
மேலவன்றன்மேனிகண்டுமேவுதற்குச்-சால
வருந்தியிரவும்பகலுமாறுமற்கூப்பிட்
டிருந்தனனேதென்குருகூரேறு. (௩௭)

(சீலமிகுகண்ணன்) இதில்-திருநாமத்தாலுணர்ந்தவர் நாமியான நாராயணனை யநுபவிக்கப்பெறுமையாலே யதிப்ரலாபமாய் ப்ரலாபிக்கிறபாசுரத்தை யநுவதித் தருளிச்செய்கிறார், அதெங்ஙனேயென்னில் ; சீழ் " வறுணஸீஜம்

ப்ரதிஸஞ்ஜஹர்ஷ" (வர்ஷேணபீஜம்ப்ரதிஸஞ்ஜஹர்ஷ) என்னுமாபோலே, தோழிசொன்ன ம்ருதசஞ்சீவிநியான திருநாமப்ரசங்கமே சிசிரோபசாரமாக வாஸ்வஸ்தராயுணர்ந்தவநந்தரம், பிறந்தவுணர்த்தி பேற்றுக்குடலன்றிக்கே க்லேசாநுசந்தாநத்துக்குடலாய் அத்தாலேநோவுபட்டு; ஆபத்ஸகனாய், தந்நிதாநபரிஹாரங்களை யுள்ளபடியறியும் சர்வஜ்ஞனாய், கார்யம்செய்கைக் குறுப்பான வறவையு முடையனாயிருக்கிறவன் ரக்ஷியாதொழிகையாலே ஆர்த்திமிரம்பினகடல் கையெடுத்துக்கூப்பிடுமாபோலே, "அவனைக்காணவேணும்" என்று, கேட்டாருடைய நீர்ப்பண்டமாம்படி கூப்பிடுகிற * சீலமில்லாச்சிறியனி லர்த்தத்தையருளிச்செய்கிறார் "சீலமிகுகண்ணன் றிருநாமத்தாலுணர்ந்து" இத்யாதியாலே யென்கை.

(சீலமிகுகண்ணன்திருநாமத்தாலுணர்ந்து) ப்ரணயிநிகளோடே கலந்த சீலாதிக்யத்தையுடைய க்ருஷ்ணன்திருநாமத்தை "வண்டுவராபதிமன்னன்" என்றுதோழிசொல்லக்கேட்டு மோஹந்தெளிந்து. (மேலவன்றன்மேனிகண்டுமேவுதற்கு) உணர்ந்தவநந்தரம் அவன்விக்ரஹத்தைக்கண்டு கிட்டியநுபவிக்கைக்கு. அதாவது - "கோலமேனிகாண" என்றும், "என்கண்காண" என்றும், "பாவியேன்காண" என்றும், "காணவந்து" என்றும், "உன்றாள்கள்நான்குங்கண்டிட" என்றும், "உன்னைக்காண்பான்" என்றும், "நானுன்னைக்கண்டுகொண்டே" என்றும், "கண்டுகொண்டு" என்றும், "எங்ஙனக்காண்பன்" என்றும், "தக்கஞானக்கண்களாலேகண்டுதழுவுவனே" என்றுமிப்படிபத்தும் பத்தாகவபேக்ஷித்து. (சாலவருந்தி) மிகவும்வருந்தி. அதாவது - "நாராயணா" என்றும், "கூவிக்கூவி" என்றும், "வையங்கொண்டவாமனாவோ" என்றும், "தாமோதரா" என்றும், "ஆணிசெம்பொன்மேனியெந்தாய்" என்றும், "அப்பனேயடலாழியானே" என்றும், "நீக்கமின்றியெங்கும்நின்றாய்" என்றும், "நறுந்துழாயின்கண்ணியம்மா" என்றும், "வண்டுழாயின்கண்ணிவேந்தே" என்றும் "சக்கரத்தண்ணலே" என்றுமிப்படி பஹுப்ரகாரமாக ப்ரயாசப்பட்டு. "ஹா ராம ஹா ல‌க்ஷ்மண" (ஹாராமஹாலக்ஷ்மண) "நசைவதேவீவிராராமகூஜிதாத்" (நசைவதேவீவிரராமகூஜிதாத்) என்னுமாபோலே (இரவும்பகலும் மாறாமல் கூப்பிட்டிருந்தனனேதென்குருகூரேறு) "காலந்தோறும்" என்றும், "நள்ளிராவும்நன்பகலும் நானிருந்தோலமிட்டால்" என்றும், "கூவிக்கூவிநெஞ்சுருகி" என்றும், "சக்கரத்தண்ணலேயென்றுதாழ்ந்து" என்றுமிப்படி திவாராத்ரவிபாகமற சர்வகாலத்திலுங்கூப்பீடோவாமலிருந்தாராழ்வார்; இதென்னாகப்புகுகிறதோவென்று இவர்நெஞ்சுருகி நோவுபட்டருளுகிறார். (தென்குருகூரேறு- இருந்தனனே) "இனித்திருநகரியிலாழ்வார் ப்ராதாந்யமெங்ஙனேநடக்கக்கடவதோ" என்றுசங்கிக்கும்படியாயிருக்கிறது.......................................(௩௭)

நாலாம்பத்தில் - ஏழாந்திருவாய்மொழி முற்றிற்று.

---

ஆக - திருவாய்மொழி - ௩௭—பாட்டு - ௪0௧.

ஸ்ரீ

# திருவாய்மொழி.

## நான்காம்பத்து.

## எட்டாந்திருவாய்மொழி.

### ஏருளும் - ப்ரவேஶங்கள்.

### ஆறாயிரப்படி.

(ஏருளும்) இப்படியெம்பெருமானை விஶ்லேஷித்து அத்யந்த மவஸந்நராய்க்கிடந்து தாம்கூப்பிடாநிற்கச்செய்தேயு மவனெழுந்தருளாமையாலே தம்மையுபேக்ஷித்தானாக நிஶ்சயித்து, "இனியவனாலுபேக்ஷிதமான வாத்மாத்மீயங்களாலொரு ப்ரயோஜநமில்லை, இவைமுடிந்துபோகவமையும்" என்றுகொண்டு அந்யாபதேசத்தாலே யருளிச்செய்கிறார்..........................................................................*

### பன்னீராயிரப்படி.

எட்டாந்திருவாய்மொழியில், கீழ் இவராசைப்பட்டுக் கூப்பிட்டபடியிலே வந்து முகங்காட்டக்காணாமையாலே அவனநாதரித்தானாகநினைத்து; ஆஶ்ரிதாநாஶ்ரிதவிஷயங்களில் அதிகம்யத்வா ப்ரத்ருஷ்யத்வத்தாலுண்டான வுபாயபாவத்தையும், கைங்கர்ய ப்ரதிசம்பந்தித்வத்தால்வந்த உபேயத்வபூர்த்தியையும், உபாயகார்யமான அநுகூலசத்ருநிரசநத்தையும், அபிமதவிரோதி மர்த்தநத்தையும், அஸஹ்யவிரோதிநிரசநத்தையும், அர்த்தோபதேசத்தாலுமநந்யார்ஹமாக்குமறிவுடைமையையும், உத்துங்கவிரோதி விதாரணத்தையும், விரோதிசத விநாசகத்வத்தையும், விரோதிசரீர விஹஸ்ததாகரணத்தையும், அஶேஷவிரோதி கண்டநத்தையு மநுசந்தித்து, "இப்படி ஆஶ்ரிதோபகாரகனநாதரித்த ஆத்மாத்மீயங்களாலே யெனக்கொருகார்யமில்லை" என்றுதமக்குப்பிறந்த அநாதரவிஶேஷத்தை; நாயகனான வீஶ்வரனாதரியாத ஆத்மாத்மீயங்களை யநாதரிக்கிற நாயகிவார்த்தையாலே யருளிச்செய்கிறார்..........................................................................*

### ஈடு.

கீழ்த்திருவாய்மொழியிலே - கேட்டாரடைய நீராம்படிகூப்பிட்டார்; "இப்படிகூப்பிடச்செய்தேயும் சர்வேஶ்வரன் நமக்குமுகந்தாராதிருந்தது நம்பக்கலுபேக்ஷையாலே யாகவடுக்கும்" என்றுபார்த்து, "ப்ராப்தனுமாய் சுசீலனுமாய் விரோதிநிரசந சீலனுமாயிருக்கிறவன் 'இதுவேண்டா' என்றிருக்குமாகில் எனக்கோதானிதுவேண்டுவது" எ

ன்றுவிட்டப்பார்த்து, "அவனுக்குவேண்டாத நானுமென்னுடைமையும் வேண்டாவெனக்கு" என்று ஆத்மாத்மீயங்களில் நசையற்றபடியை யந்யாபதேசத்தாலே யருளிச்செய்கிறார். அவன்விரும்பினவழியாலேகாணு மாத்மவஸ்துவைவிரும்ப ப்ராப்தியுள்ளது, இங்ஙன்விரும்பாதவன்று பழையதேஹாத்மாபி மாநத்தோபாதியாமிறே; [ நதேஹம் ] (நதேஹம்) இத்தனைசாந்து நாற்றத்துக்காக நிலைநின்றவத்ருஷ்டத்தையுங்கூட வழியமாறும்படியிறே தேஹத்தில்பண்ணியிருக்குமபிமாநம், அப்படிப்பட்ட தேஹம்வேண்டா. [ நப்ராணாந் ] ( நப்ராணந் ) தேஹந்தன்னை யாதரிக்கிறது ப்ராணனுக்காக, அப்ப்ராணங்களும்வேண்டா. [ நஸுகம் ] ( நசஸுகம்) ப்ராணங்களைவிரும்புகிறது சுகத்துக்காக, அந்தசுகமும்வேண்டா. இதுக்குறுப்பாக வருமல்லாதவையு மெனக்குவேண்டா. இவையெல்லாம் புருஷார்த்தமாவது ஆத்மாவுக்கிறே, அவ்வாத்மாதானும்வேண்டா. இங்ஙன்பிரித்துச்சொல்லுகிறதென் ; உன்றிருவடிகளில் சேஷத்வசாம்ராஜ்யத்துக்குப் புறம்பானவையானவைசில, அவையொன்று மெனக்குவேண்டா. [நாத] உடையவனுக்குப் புறம்பாயிருக்கு மவற்றைவிரும்ப ப்ராப்தியுண்டோ. அங்ஙனேயாமாகில் க்ரமத்தாலேகழித்துத் தருகிறேமென்ன ; ஒருக்ஷணமும் பொறுக்கமாட்டேன். இவைதன்னைத் தவிர்த்துக்கட்க்கவைக்கவொண்ணாது, நசித்துப்போம்படி பண்ணவேணும். இதுகண்டாதூர்த்வமான வார்த்தையன்றோவென்ன [ தத்ஸத்யம் ] ( தத்ஸத்யம் ) மெய். [ மதுமதந ] ( மதுமதந ) இங்ஙனன்றாகில் தேவர்முன்பு பொய்யரானார் பட்டதுபடுகிறேன். [ நஹிமே ஜீவிதே நார்த்தோ நைவார்த்தைர்நசபூஷணை: । வஸந்த்யா ராக்ஷஸீமத்யே விநா ராமம்மஹாரதம் ] ( நஹிமேஜீவிதேநார்த்தோநைவார்த்தைர்நசபூஷணை:। வஸந்த்யாராக்ஷஸீமத்யே விநாராமம்மஹாரதம் ) ப்ராணாதிகளால் கார்யமின்றிக்கே யொழிகிறதென்னென்னில் ; இருக்கிறது ராக்ஷஸிகள்நடுவே, பிரிகிறதுபெருமாளை ; இவற்றாலென்ன ப்ரயோஜநமுண்டு... .....*

## ஜீயர் அரும்பதம்.

ஏறாளுமிறையோன் ப்ரவேஶே, சங்க்ரஹசங்கதி (கீழ்த்திருவாய்மொழியிலேயித்யாதி) ப்ராப்தனுமாயென்றது - "அடியேனைப்பணிகொண்ட" என்றத்தைப்பற்ற. சுசீலனுமாயென்றது - "கூறாளுந்தனியுடம்பன்" என்றத்தைப்பற்ற. விரோதிநிரசநசீலனுமாயென்றது - "அசுரர்களை நீறாகும்படியாக" என்றத்தைப்பற்ற. "உயிரினால்குறைவிலம்" "உடம்பினால்குறைவிலம்" என்றத்தைப்பற்ற (ஆத்மாத்மீயங்களில் நசையற்றவென்றது) ( அந்யாபதேசம் ) என்றதுக்கு ஸூசகம் "வரிவளையால்குறைவிலம்" என்றது.

" அஹம் ஸர்வீஹவெபழ், ஓ:ஃவீரோஹ-ஸ்வழ்" ( அஹம் ஸர்வபவேயம், ஹ்ருதீமாபூவம் ) என்றிருக்கவேண்டாவோ, அவனுபேக்ஷித்தானென்றால் அஅ

க்காகத்தன்னை யுபேக்ஷிக்கக்கூடுமோவென்ன (அவன்விரும்பினவித்யாதி) அன்றிக்கே, அல்பாஸ்த்திரங்களான வாத்மீயங்களைவிட்டாலும், நித்யமானவாத்மவஸ்துவை விடலாமோவென்ன (அவன்விரும்பினவித்யாதி) என்னுதல். ஆத்மாஸ்வதோ போச்யனுமிருக்க, அவன்விரும்பினவழியாலே விரும்புகிறதென்னென்ன (இங்ஙனித்யாதி) அவனுக்குறுப்பல்லாத வாத்மாத்மீயங்களில் இப்படிநசையற்றாருண்டோவென்ன; ஆளவந்தாரும் பிராட்டியுமென்கிறார் ( நதேஹமித்யாதி ) இதுதன்னைநாயக நாயகிசமாதியிலும், " காதலர்நயந்தது யாமுடைநயப்பே, காதலர்வேண்டினயாம்வேண்டினமே, காதலரெம்மைவேண்டாவெனில்யாமும் - வேண்டிலமினியே " என்று சங்கத்தாரும் சொன்னாரிறே. " நதேஹம் " இத்யாதிக்குவிசேஷணமிட்டு வ்யாக்யாநம்பண்ணினது-த்யாகத்தினருமை தோற்றுகைக்காக. " அஶேஷாபிலஷிதம் " (அஶேஷாபிலஷிதம்) என்று - சுகசாதநதர்மங்களைச் சொல்லுகிறது. இதுக்கு-சுகத்துக்கு. உறுப்பாக - சாதநமாக. " அந்யத் " என்று- " விதரம்மாதரந்தாரான் " (பிதரம்மாதரந்தாரான்) இத்யாதிப்படியேசொல்லுகிறப்ராப்யாந்தரங்களைச்சொல்லுகிறது. "ஶேஷத்வவிபவாத்பஹிர்பூதம்" (ஶேஷத்வவிபவாத்பஹிர்ப்பூதம்) என்று - ஹேதுகர்ப்பவிசேஷணம். உன்னுடையகைங்கர்யத்துக்குபகரணமல்லாதபோது என்னையுமென்னுடையசம்பந்திகளையும் வேண்டேனென்றபடி. ஆனால் கடக்கவைக்கிறோமென்ன (இவைதன்னையித்யாதி)

" நஹிமேஜீவிதேநார்த்தோ நைவார்த்தைர்நசபூஷணை: । வஸந்த்யா ராக்ஷஸீமத்யே விநா ராமம் மஹாரதம் " ( நஹிமேஜீவிதேநார்த்தோ நைவார்த்தைர்நசபூஷணை: । வஸந்த்யாராக்ஷஸீமத்யேவிநாராமம்மஹாரதம் ) இதிசுந்தரகாண்டே. (நஹிமேஇத்யாதி) பிரிவுக்கநுபயுக்தமாகையாலே பூஷணாதிகளால் ப்ரயோஜநமில்லையென்னலாம்; அப்படியல்லவிறே ஜீவநம், " ஜீவந்பத்ராணி பஶ்யதி " (ஜீவந்பத்ராணிபஶ்யதி) என்கிறபடியே ப்ராணன்கிடந்தால சிலநாளைக்காகிலு மவனுக்குபயோகிக்கலாமிறேயென்ன; அப்படியே தரித்திருக்கலாயிற்றிறே அநுகூலசஹவாஸமுண்டாகில், அதில்லையிறேயென்கிறாள் (ராக்ஷஸீமத்யேவஸந்த்யா: என்று ) அர்த்தஶப்தம் - ப்ரயோஜநபரம்.........................*

---

## எட்டாந் திருவாய்மொழி.

## முதற்பாட்டு.

எறாளுமிறையோனுந்திசைமுகனுந்திருமகளுங்
கூறாளுந்தனியுடம்பன்குலங்குலமாவசுரர்களை
நீறாகும்படியாகநிருமித்துப்படைதொட்ட
மாறாளன்கவராதமணிமாமைகுறைவிலமே.

### ஆறாயிரப்படி.

நிரவதிகசௌசீல்யாஶ்ரித விரோதிநிரசந சாமர்த்த்யாதிகல்யாண குண மஹோததியாயிருந்த எம்பெருமான்விரும்பாத வென்னுடைய ம

ணிமாமையா லெனக்கோரபேக்ஷையுமில்லை, இதுமுடிந்துபோக வமையுமென்கிருள்.............................................................*

## பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், ஆஸ்ரிதர்க் கபாஸ்ரயமான சீலவத்தையையும், அநாஸ்ரிதர்க்கு விநாசகமான வாண்பிள்ளைத் தனத்தையுமுடைய வுபாயபூதனுதரியாத வழகியநிறத்தா லெனக்கொரு காரியமில்லையென்கிருள்,

ஏறு-ருஷபவாஹநத்தை. ஆளும்-உடையனாய். இறையோனும் - " 𑌈𑌶𑍋𑌽𑌹𑌂 𑌸𑌰𑍍𑌵𑌦𑍇𑌹𑌿𑌨𑌾𑌮𑍍 " (ஈசோஹம்ஸர்வதேஹிநாம்) என்றுநாட்டுக்கு ஈஸ்வரனுகத்தன்னை யபிமாநித்திருக்கும்ருத்ரனும். திசைமுகனும் - பஹுமுகமாக ஸ்ருஷ்டியைப்பண்ணுகைக்கு யோக்யனான சதுர்முகனும். ஈஸ்வராபிமானிகளான விவர்களோடொக்க,திருமகளும்-தனக்குநித்யாநபாயிநியான சம்பத்தாயுள்ளலக்ஷ்மியும். கூறு-ப்ரதிநியதமாம்படி. ஆளும்-அநுபவித்துத்தங்களுக்கிருப்பிடமாக வபிமாநித்துக்கொண்டுபோருமதாய். தனி-அத்விதீயமாம்படி அப்ராக்ருதவைலக்ஷண்யத்தையுடைத்தான. உடம்பன் - திருமேனியையுடையனாய். ஆஸ்ரிதவிஷயத்தில் " அபிமாநதுங்கர் " என்றும், " அநபாயிநி " என்றும்வாசிவையாத சீலத்துக்குமேலேயவர்கள் விரோதியைப்போக்குமிடத்தில். குலங்குலமா-திரள்திரளாக. அசுரர்களை-அசுரர்களை. நீறாகும்படியாக-தூளிசேஷமாய்ப்போம்படி. நிருமித்து-திருவுள்ளத்தாலேயறுதியிட்டு. படைதொட்ட-ஆயுதமெடுத்துவ்யாபரித்த. மாறாளன்-சாத்ரவநிர்வாஹகனானவன். கவராத-விரும்பாத. மணி-ஒளியையுடைய. மாமை-நிறத்தால். குறைவிலம்-நமக்கொருகாரியமில்லை.

நிருமித்தல்-நிரூபித்தல். மாறாளன்-எதிர்த்தலையுடையவன். கவர்தல்-விரும்புதல். மணியென்று-ஒளியைக்காட்டுகிறது. மாமை-நிறம். குறைவிலமென்றது-இத்தால்கொள்ளுவதொரு ப்ரயோஜநமுண்டாய் அக்குறைகிடப்பதில்லையென்றபடி; இது-எல்லாப்பாட்டிலுமொக்கும்.....................................................*

## ஈடு - முதற்பாட்டு.

அத்யந்தகுணவானுமாய் விரோதிநிரசந சமர்த்தனுமாயிருக்கிறவெம்பெருமான்விரும்பாத ஸ்லாக்யமான நிறங்கொண்டெனக்கொரு கார்யமில்லையென்கிருள்.

( ஏறாளுமித்யாதி ) " நான், நான் " என்பாருக்கு மணையலாம்படியான வுடம்பைக்கிடீர் நானிழந்திருக்கிற தென்கிருள். கண்டகாபாலிகந்தர் பெற்றுப்போகிறதுகிடீ ரெனக்கரிதாகிறதென்கிருள். ( ஏறாளும் ) சர்வேஸ்வரன் * வேதாத்மாவான பெரியதிருவடியை வாஹநமாகவுடையனாயிருக்குமாகில், தானும்கைக்கொள்ளாண்டிகளைப்போலே "ஒரு எருத்தையுடையேன் " என்றபிமாநித்திருக்கும். ( ஆளும் ) இவனுடைய வுபயவிபூதியிருக்கிறபடி. ( இறையோனும் ) அவனுபயவிபூதிக்

கும் கட்வனுய் சர்வேஸ்வரனுபிருக்கும் ; கள்ளியை - "மஹாவ்ருக்ஷம்" என்கிறவோபாதி, தானும் "ஈஸ்வரன்" என்றிருக்கும். தர்மதர்மிகளு க்கைக்யமுண் டித்தனைபோக்கி, தர்மித்வயத்துக் கைக்யமில்லை. (திசை முகனும்) ஸ்ருஷ்டிக்குறுப்பாக நாலுவேதங்களையு முச்சரிக்கைக்கிடா ன நாலுமுகத்தை யுடையனுய், "நான்ஸ்ரஷ்டா" என்றபிமாநித்திருக் கிற சதுர்முகனும். (திருமகளும்) "அநந்யாராவவெணாஹம்" (அ நந்யாராகவேணுஹம்) என்றுசொல்லுகிறபடியேயிருக்கிற பெரியபிரா ட்டியாரும். (கூறுளுமித்யாதி) இவர்கள் கூறிட்டாளும்படி அத்விதீய மான வுடம்புபடைத்தவன். "நாங்கள் அதிகாரிபுருஷர்களுடையவர்க ள்" என்றுபிராட்டி பரிசாத்திலேபுக்குச் சிலரழிவுசெய்தல், "நாங்கள் படுக்கைப்பற்றிலுள்ளோம்" என்றுசில ரவர்களெல்லையிலேபுக் கழிவு செய்தல் செய்யவொண்ணுதபடி யாளுமாயிற்று. திவ்யாத்மஸ்வரூபத்தி லும் வீறுடைய துதிருமேனியிறே. சர்வபாஸ்ரயமாயிறே திருமேனிதா னிருப்பது. இப்படிசீலவானுயிருக்கிறவனைக்கிடீர் நானிழந்திருக்கிறது. (குலங்குலமா) அணைக்கைக்குப்ரதிபந்தகமுண்டாய்த்தானிழக்கிறேனே. "கொநூஸ்மிநுஸாம்ப்ரதம்லொகெகுணவாநு" (கோந்வஸ்மிந்ஸாம் ப்ரதம்லோகேகுணவாந்) என்றாற்போலேகிழ் ; "வீர்யவாநு" (வீர் யவாந்) என்றாற்போலேஇது. குலங்குலமாக அசுரவர்க்கத்தை. (நீரு கும்படியாகநிருமித்து) "நிஹதாஃபூவ்வமெவ" (நிஹதாஃபூர்வ மேவ) என்கிறபடியே, "உறவுவேண்டோம்" என்றபோதே பஸ்மமா ய்ப்போம்படி சங்கல்பித்து. (படைதொட்ட) ஜகத்ஸ்ருஷ்டியில்வந்தால் சங்கல்பமேகொண்டு நிர்வஹிக்குமவன், ஆஸ்ரிதவிரோதிகளை யழியச் செய்யுமிடத்தில் சாயுதனுய்க்கொண்டு மேல்விழும். ஸ்ருஷ்ட்யாதிகளில் சத்யசங்கல்பனுயிருக்கும், ஆஸ்ரிதவிரோதிகளளவில் அசத்யசங்கல்பனு யிருக்கும். (நீருகும்படியாக) "ஸிஙஂஹிஙஂஸொரூஹ்" (சிங்கம் சிங்கம்ஸோர்தக்தம்) என்கிறபடியே, தூளியாம்படியாக சங்கல்பித் தாயுதமெடுக்குமவன். "யஜ்ஞவிக்நகரம்ஹந்யாம்பாண்டவாநாஞ்சதுர்ஹ்ருதம்" (யஜ்ஞவிக்நகரம்ஹந்யாம்பாண்டவாநாஞ்சதுர்ஹ்ருதம்) தன்னை மிடற்றைப்பிடித்தாரையும், உயிர்நிலையிலே நலிவாரையும் நலியுமவன். (மாறுளன்) மிடுக்கனென்னுதல், எதிரியென்னுதல். துர்யோதநன் "அமுதுசெய்யவேணும்" என்ன, "த்விஷதந்நம்நபோக்தவ்யம்த்விஷந்தம்நைவபோஜயேத்" (த்விஷதந்நம்நபோக்தவ்யம் த்விஷந்தம்நைவபோஜ யேத்) என்று-ஆஸ்ரிதவிரோதிகளைத்தனக்கு விரோதிகளாகக்கொண்டு வழக்குப்பேசுமவன். (கவாரத) விரோதிகளை யழியச்செய்து விடாய் த்து "தண்ணீர்தண்ணீர்" என்று அவன்வந்தணையாத நல்லநிறத்தா லொரு அபேக்ஷையுடையோமல்லோம். நிறத்திலே யவனுதரிக்குமன் றன்றே இத்தால் கார்யமுள்ளது, அல்லது நிறக்கேடாமித்தனையிறே...*

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு (ஏறாளுமித்யாதி) அத்யந்தகுணவானுமாயென்றது - * ஏறா ளுந்தொடங்கி, "தனியுடம்பன்" என்னுமளவுங்கடாக்ஷித்து. குணமாவது - சௌ ஸீல்யம். "குலங்குலமா" என்றுதொடங்கி, "படைதொட்ட" என்னுமளவையும் பற்ற (விரோதிநிரசநேத்யாதி) "மாறாளன்" இத்யாதியைப்பற்ற (எம்பெருமா னித்யாதிமேலெல்லாம்)

ருத்ரன், ப்ரஹ்மாவென்னாதே, "ஏறாளும், திசைமுகனும்" என்றதுக்குக்க ருத்து (நானித்யாதி) இவ்விசேஷணங்களைச்சொன்னதுக்குஹேது-அவர்களுடைய உத்கர்ஷத்தைச்சொல்லுகையன்றிக்கே, அஹங்காரிகளான வந்ஹேயருக்கும் ஸுல பமானதெனக்கு துர்லபமாயிற்றென்கைக்காகவென்றபடி. உக்தத்தையசோக்தியா லேவிவரிக்கிறார் (கண்டவித்யாதி) காபாலி-கபாலத்தையுடையவன், கந்தன்-கந்தை யையுடையவனென்று, இரண்டும்-ருத்ரனைச்சொல்லுதல்; அன்றிக்கே, கந்தனென் று-ஜகத்துக்கெல்லாம்கந்தமான திருநாபிகமலத்திலேபிறந்த ப்ரஹ்மாவைச்சொல் லுதல். "ஏறு" என்றதுக்குபாவம் (சர்வேஶ்வரனித்யாதி) உடையவனென்னாதே, "ஆளும்" என்றதுக்குபாவம் (இவனுடையவித்யாதி) இறையோனென்னாதே, "இ றையோனும்" என்றூன்றிச்சொல்லுகிறதுக்குபாவம் (அவனித்யாதி) யத்வா, "ப திம்விஶ்வஸ்ய" (பதிம்விஶ்வஸ்ய) என்று ஈஶ்வரனிருக்க, இவனை - "இறையோன்" என்கிறதென்னென்ன (அவனுபயேத்யாதி) "இறையோன்" என்கிறதும்-வாஸ்த வமானவாகாரமல்ல, அவனபிமாநித்திருக்கு மாகாரத்தையிட்டுச்சொல்லுகிறதெ ன்றபடி. (கள்ளியைமஹாவ்ருக்ஷமென்கிறவோபாதி) "மஹாவ்ருக்ஷஸமாக்யேவ பலவந்மாநபாதிதா। மஹேஶ்வரமஹேந்த்ராதிஸமாக்யாப்யத்ரநிஷ்பலா" (மஹாவ்ருக்ஷஸமாக்யேவபலவந்மாநபாதிதா। மஹேஶ்வரமஹேந்த்ராதிஸ மாக்யாப்யத்ரநிஷ்பலா) என்னக்கடவதிறே. "ஸப்ரஹ்மாஸஶிவஃ" (ஸப்ரஹ் மாஸஶிவஃ) "சிவனாயயனாய்" என்று - ஐக்யம்சொல்லாநிற்க, "இறையோன், திசைமுகன்" என்று-பேதமாகச்சொல்லுவானென்னென்ன (தர்மதர்மிகளுக்கித் யாதி) அதாவது - "தேவன்" என்றால்-தேவசரீரத்துக்கும் சரீரியான வாத்மாவு க்கு மைக்யம்சொல்லுகிறப்போலே, இவர்கள் சரீரமாயுமவன் சரீரியாயுமிருக்கை யாலே ஐக்யம்சொன்னதித்தனைபோக்கி, ஸ்வரூபைக்யம் சொல்லவில்லையென்றப டி. தர்மதர்மிகளுக்கென்றது-தர்மதர்மிபாவேநவென்றபடியென்னுதல். (ஸ்ருஷ் டிக்குறுப்பாகவிதி) "நாமரூபஞ்சபூதாநாம்" (நாமரூபஞ்சபூதாநாம்) இத்யாதிவிவக்ஷிதம்.

உக்தப்ரதிகோடியாகபாவம் (அநந்யேத்யாதி) "ஶக்யாலோபயிதம்நாஹமைஶ்வர்யேண தநேநவா। அநந்யாராகவேணாஹம்பாஸ்கரேணப்ரபாயதா" (ஶக்யாலோபயிதம்நாஹமைஶ்வர்யேணதநேநவா। அநந்யாரா கவேணாஹம் பாஸ்கரேணப்ரபாயதா) இதிராவணம்ப்ரதிஸீதா. சப்தார்த்தம் (இ வர்கள்கூறிட்டித்யாதி) "ஆளும்" என்னாதே, "கூறாளும்" என்றதுக்குபாவம் (நாங்களித்யாதி) அழிவு-பீடை. படுக்கைப்பற்றிலுள்ளோம் - அந்தஃபுரசம்பந்திக ளாயிருந்தோம். "நதத்ஸமஶ்ச" (நதத்ஸமஶ்ச) என்று - ஸ்வரூபமன்றோ அத்வி தீயமாயிருப்பது, திருமேனியை - "தனியுடம்பு" என்னலாமோவென்ன (திவ்யா

த்மேத்யாதி) அநந்யையான பிராட்டிக்கொழிய, அஹங்காரிகளான விவர்களுக்கு ருப்பிடமென்னலாமோவென்ன (சர்வேத்யாதி) "ஸமெஸ்ரகாஜஸ" (பஶ்யை காதம) இத்யாத்யநுசந்தேயம். இப்போது "கூருளுந்தனியுடம்பன்" என்றதுக்குபாவம் (இப்படியித்யாதி)

விரோதிநிரஸநசீலதையைச்சொல்லுகிறவருடைய ஹார்த்தபாவம் (அணைக்கைக்கித்யாதி) சௌசீல்யகதநாநந்தரம் வீர்யம்சொன்னதுக்கு த்ருஷ்டாந்தம் (கோந்வஸ்மிந்நித்யாதி) "கொநுஸ்மிநுஸாம்ப்ரதம்லொகெகுணவாநகஸ்சவீர்யவாநு" (கோந்வஸ்மிந்ஸாம்ப்ரதம்லோகேகுணவாந்கஶ்சவீர்யவாந்) இதிஸங்க்ஷேபே. ப்ரத்யேககுணப்ரகரணமாகையாலும், குண்யதஇதி - குண: என்கிற வ்யுத்பத்தியாலும், "குணவாந்" என்று-சீலகுணத்தைச்சொல்லுகிறது. குண்யதஇதிகுண: என்றது-எல்லாராலும்கொண்டாடப்படுமென்றபடி. சப்தார்த்தம் (குலங்குலமாகவித்யாதி) நிருமித்து-சங்கல்பித்து. சங்கல்பித்தபோதே நீருகும்படி சங்கல்பித்ததுக்குப்ரமாணம் (நிஹதாஇத்யாதி) "தஸ்மாத்வமுத்திஷ்டயஶோலபஸ்வஜித்வாஶத்ரூந்புங்க்ஷ்வராஜ்யம்ஸம்ருத்தம்। மயைவைதேநிஹதா:பூர்வமேவநிமித்தமாத்ரம்பவஸவ்யஸாசிந்" (தஸ்மாத்த்வமுத்திஷ்டயஶோலபஸ்வஜித்வா ஶத்ருந்புங்க்ஷ்வராஜ்யம்ஸம்ருத்தம் । மயைவைதேநிஹதா:பூர்வமேவநிமித்தமாத்ரம் பவஸவ்யஸாசிந்) இதிகீதாஸ்வேகாதஶே. சங்கல்பமாத்ரமே போராதோ, ஆயுதமெடுப்பானென்னென்ன (ஜகத்ஸ்ருஷ்டியிலித்யாதி) ஆஶ்ரிதவ்யாமோஹத்தாலென்றபடி. பாரதஸமரவிவக்ஷயா "படைதொட்ட" என்றதுக்கு பாவம் (ஸ்ருஷ்ட்யாதிகளிலித்யாதி) அசத்யஸங்கல்பனுயென்றது - "ஆயுதமெடேன்" என்று ப்ரதிஜ்ஞைபண்ணிவைத்து ஆயுதமெடுத்தத்தைப்பற்ற. யத்வா, பூர்வோக்தவிவரணம் (ஸ்ருஷ்ட்யாதிகளிலித்யாதி) என்னுதல். இந்தபக்ஷ, சங்கல்பமாத்ரமன்றியே அதுக்குமேலேயும் கார்யம்செய்யுமென்றபடி. "நீருகும்" இத்யாதிக்குசப்தார்த்தம் (சிந்நமித்யாதி) "சிநம்பிநம்ஶரைர்தக்தம்ப்ரபக்நம்ஶஸ்த்ரபீடிதம்। பலம்ராமேணதத்ருஶுர்நராமம்ஶீக்ரகாரிணம்" (சிந்நம் பிந்நம்ஶரைர்தக்தம் ப்ரபக்நம்ஶஸ்த்ரபீடிதம் । பலம்ராமேணதத்ருஶுர்நராமம் ஶீக்ரகாரிணம்) இதியுத்தகாண்டேசதுர்ணவதிதமே. சங்கல்பத்தாலன்றிக்கேதானே யழியச்செய்யுமென்றதுக்கு ப்ரமாணம் (யஜ்ஞவிக்நகரமித்யாதி) அதுக்கர்த்தம் (தன்னையித்யாதி) இந்தப்ரமாணத்துக்கு உத்தரார்த்தமு மாகரமுங்காணும். "அஹம்ஹிஸர்வயஜ்ஞாநாம்போக்தா" (அஹம்ஹிஸர்வயஜ்ஞாநாம் போக்தா) என்றத்தைப்பற்ற "யஜ்ஞவிக்நகரம்" (யஜ்ஞவிக்நகரம்) என்றதுக்கு (தன்னையிடற்றைப்பிடித்தாரையும்) என்றர்த்தமருளிச்செய்தது. "மமப்ராணாஹிபாண்டவா:" (மமப்ராணாஹிபாண்டவா:) என்கையாலே "பாண்டவாநாஞ்சதர்ஹ்ருதம்" (பாண்டவாநாஞ்சதர்ஹ்ருதம்) என்றதுக்கு (உயிர்நிலையிலேநலிந்தாரையும) என்றர்த்தமருளிச்செய்தது. இப்படிபஸ்மமாம்படி சங்கல்பித்துப்படைதொட்டு நலியவேண்டுகிறதென்னென்ன (மாருளனித்யாதி) சர்வபூதஸுஹ்ருத்தான தனக்கெதிராகைக்கு சத்ருக்களுண்டோவென்ன (துர்யோதநனித்யாதி) ஆஶ்ரிதவிரோதிகள் தனக்குவிரோதிகளென்றபடி. "த்விஷதந்நம்நபோக்தவ்யம்த்விஷந்தம்நைவபோஜயேத். பாண்டவாந்த்விஷஸேராஜந்மமப்ராணாஹிபாண்டவா:" (த்விஷதந்ந

ந்போக்தவ்யம் த்விஷந்தம்நைவபோஜயேத் । பாண்டவாந்த்விஷஸேராஜந்மம ப்ராணாஹிபாண்டவா:) இதிபாரதே. வழக்கு - ந்யாயம்.

"தந்ருஷ்டா" (தந்த்ருஷ்ட்வா) என்கிறஶ்லோகத்தை யுட்கொண்டருளிச் செய்கிருர் (விரோதிகளையித்யாதி) அழகியநிறமாகில் "வேண்டா" என்கிறதென் னென்ன (நிறத்திலேயித்யாதி) இது-சாடு. அதாவது - (நிறத்திலே) முறையிலே யென்றபடி. நிறக்கேடாம்-காந்திஹீநமாமென்று ஸ்வபாவார்த்தம், சாடுவுக்கு, முறையிலேசெய்ததன்றிக்கே யொழியுமத்தனையென்றபடி.

ஆத்மாத்மீயங்களை விடும்போது, முன்னே ஆத்மீயங்களைவிடுகைக்கு ஹேது வேதென்ன; அவன்விரும்பினவடைவிலே விடுகிருள், முற்படவாத்மீயங்களைவிரும்புகையாலே. குறைவிலமென்றது - இத்தால்கொள்ளுவதொரு ப்ரயோஜநமுண்டாய்க் குறைகிடப்பதில்லையென்றபடி. இப்படி - எல்லாப்பாட்டுக்குமொக்கும்.

க்ரமேணார்வய: ......................................................................*

# இரண்டாம்பாட்டு.

மணிமாமைகுறைவில்லாமலர்மாதருறைமார்ப
னணிமானத்தடவரைத்தோளடலாழித்தடக்கையன்
பணிமானம்பிழையாமேயடியேனைப்பணிகொண்ட
மணிமாயன்கவராதமடநெஞ்சாற்குறைவிலமே.

## ஆறாயிரப்படி.

( மணிமாமை ) நிரதிசய சௌந்தர்யநிதியான திருத்தோள்களை யுடையனாய் சங்கசக்ராதி திவ்யாயுத பூஷிதனாயிருந்த வெம்பெருமான் பெரியபிராட்டியாரோடு கலந்தருளுமாபோலே யென்னோடு பண்டுகலந்தருளினான் ; அப்படியேயெனக்கு சுலபனாயிருந்தவன் கவராதமடநெஞ்சால் குறைவிலமென்கிருள்.......................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், பிராட்டியோடுகூடின விக்ரஹவைலக்ஷண்யத்தைக்காட்டி யடியிலே யென்னையடிமைகொண்ட வுபேயபூத னுதரியாத நெஞ்சாலொரு கார்யமில்லையென்கிருள்.

மணி-நித்யசம்ஶ்லேஷத்தாலேநிரதிசயௌஜ்ஜ்வல்யமான. மாமை - நிறத்துக்கு. குறைவில்லா-குறையற்றிருப்பாளாய். இந்தஆபிருப்யத்துக்குமேலே, மலர்-பூவிற்பிறந்த ஆபிஜாத்யத்தால்வந்த சௌகுமார்யாதிகுணவிசிஷ்டையான போக்யதையையுடைய. மாதர்-* நாரீணாமுத்தமையானவள். உறை-நிரந்தரவாசத்தைப் பண்ணுகிற. மார்பன்-திருமார்பையுடையனாய், மணி-ஆபரணசோபிதமாய், மான

ம் - * ஆயதமாய். தடம் - * சற்றுத்தமாய். வரை-மலையைக்கணையமாகவகுத்தா ற்போலேசிச்சென்ற. தோள்-தோள்களையுடையனும். அடல்-விரோதிநிரசநசீலமா ன. ஆழி-திருவாழியையுடைத்தான. தடம்-பெரிய. கையன்-கையையுடையனும்- பணி-கைங்கர்யவ்ருத்திகளில். மானம்-ஓரளவும். பிழையாமே - தப்பாதபடி. அடி யேனை-அடியேனானஸ்வரூபத்தையுடையவென்னை. பணிகொண்ட - அதுக்கீடாகவ டிமைகொண்ட. மணி-நீலரத்நம்போல். மாயன் - கறுத்தநிறத்தையுடையனானவ ன். கவராத-விரும்பாத. மடம்-விதேயமான. நெஞ்சால்-நெஞ்சால். குறைவிலம்- ஒருகார்யமுடையோமல்லோம்.

அணி-ஆபரணம். மானம்-அளவுடைமை. தடம்-சுற்றுடைமை. மாயன்- கரியவன்..........................................................................................*

## ஈடு-இரண்டாம்பாட்டு.

இஸ்ஸ்ரீலத்துக்குமடியான பிராட்டியோடேகூட வடிவழகைக்கா ட்டியடிமைகொண்டவன் விரும்பாதபவ்யமான நெஞ்சாலென்னகார்ய முண்டென்கிறாள்.

(மணிமாமைகுறைவில்லா) "மணிமாமைகுறைவிலமே" என்ன வேண்டாதவள். அவளுடைய நித்யஸந்நிதியாலே யென்னையடிமைகொ ண்டவன். "நகஶ்சிந்நாபராத்யதி" (நகஸ்சிந்நாபராத்யதி) என்கிறவ ளும் கூடவிருக்கச்செய்தே யென்னையுபேக்ஷித்திருக்குமாகில், என்னு டைமையாலெனக்குத்தான் ப்ரயோஜநமென். (மலர்மாதர்) நிறமேயன் றிக்கே பிரியத்தகாத சௌகுமார்யத்தையுடையவள். புஷ்பத்தில் பரிம ளத்தை வடிவாகவகுத்தாற்போலேயிருக்கை. (உறைமார்பன்) அவள்நி த்யவாசம்பண்ணுகிற திருமார்வையுடையவன். பூவில்பிறப்பேயாய், நித் யவாசம்பண்ணுவது மார்விலேயாயிருக்கை. தான்பிறந்தபூநெருஞ்சிற்கா டாம்படியான மார்வுபடைத்தவன். "அனிச்சமுமன்னத்தின் தூவியும்மா தரடிக்கு நெருஞ்சிற்பழம்" என்றுனிறே. முக்தன் சம்சாரயாத்ரையை ஸ்மரியாதாப்போலே பூவைநினையாதேவர்த்திக்கும் மார்வுபடைத்தவன். பிராட்டி பெருமாளைக்கைப்பிடித்தபின்பு ஸ்ரீமிதிலையைநினைக்கிலாயிற்று இவள்பூவைநினைப்பது. அவள் "அகலகில்லேன்" என்கிறவடிவைநானி ழப்பதே. (அணிமானத்தடவரைத்தோள்) அணியென்று - ஆபரணம். மானமென்று - அளவு. "ஸர்வபூஷணபூஷார்ஹா:" (ஸர்வபூஷ ணபூஷார்ஹா:) என்கிறபடியே ஆபரணத்துக்காபரணமானதோள்" எ ன்றுஜீயரருளிச்செய்வர். "அணியென்று-அழகாய், மானமென்று - பெ ருமையாய், அணிபெருகியதோள்" என்றொருதமிழன். அத்தாலும் - "ஆபரணஸ்யாபரணம்" (ஆபரணஸ்யாபரணம்) என்கிறபடியாயிரு க்கை. "ஆயதாஶ்சஸுவ்ருத்தாஶ்ச" (ஆயதாஸ்சஸுவ்ருத்தாஸ்ச) என்கிற படியே, அளவுடைத்தாய்ச் சுற்றுடைத்தாயொருவரால் சலிப்பிக்கவொ

ண்ணுதோள்படைத்தவன். (அடலாழித்தடக்கையன்) பிராட்டியும் தானுமானசேர்த்திக்கு அஸ்தாநேபயசங்கைபண்ணி யெப்போதுமொக்க யுத்தோந்முகமாய் ப்ரதிபக்ஷத்தையடர்க்கும் ஸ்வபாவமானதிருவாழியை பூர்ணமானகையிலேயுடையவன். இவனுடையவ்ருத்தம் கைமேலே காணலாயிருக்கிறபடி. (பணிமானம்பிழையாமே) பணியென்று-கைங்கர்யம். மானமென்று-அளவு. அதிலோரளவும் குறையாமே. “ஆஹம்ஸர்வம்கரிஷ்யாமி” (அஹம்ஸர்வம்கரிஷ்யாமி) என்கிறபடியே. (அடியேனைப்பணிகொண்ட) இளையபெருமாளையடிமைகொண்டாற்போலே, இருவருங்கூடவிருந்துகாணுமிவரை யடிமைகொண்டது. (அடியேனை) குமரிருந்துபோகாமே. பரதந்த்ரஜந்மமாயிருக்க வகுத்தவனுக்குறுப்பன்றிக்கேபோகாமே. இங்கேயருளிச்செய்யும்வார்த்தை- எழுந்தருளியிருக்கிறமடத்திலே ஸ்ரீவைஷ்ணவர்களமுதுசெய்யாநிற்க, ஆச்சான் தண்ணீரமுதுபரிமாறுகிறவர், ஓரருகே சாயநின்று பரிமாறினார்; அத்தையுடையவர்கண்டு ஓரடிவந்து முதுகிலேமோதி, “நேரேநின்றன்றோவுடோபரிமாறுவது” என்றார்; என்ன, ஆச்சான் “பணிமானம்பிழையாமேயடியேனைப்பணிகொண்ட” என்றுபணித்தான். (பணிகொண்டமணிமாயன்) “தஹ, பச” என்றல்ல அடிமைகொண்டது, பீதாத்தைவிழவிட்டு வடிவைக்காட்டி. நீலரத்நம்போன்ற கறுத்தநிறத்தையுடையவன். (கவராத) வடிவில்சுவட்டையறிவித்து என்னை யநுபவிப்பியாநாகில், பவ்யமான நெஞ்சா லெனக்கென்னகார்யமுண்டு. ஜீயரிவ்விடத்திலே யருளிச்செய்வதொருவார்த்தையுண்டு - “‘பூசும்சாந்தென்னெஞ்சமே’ என்கிறபடியே அன்றப்படியேயித்தை விரும்பினவனின்றிப்படியே யுபேக்ஷிக்கையாலே, ‘நாயகன்வரவுதாழ்த்தான்’ என்று அவன்முன்னே சாந்தைப்பரணியோடே யுடைப்பாளைப்போலே, ‘என்னெஞ்செனக்குவேண்டா’ என்கிறாள்” என்று.

பிராட்டியவனோடே சேரவிருந்திலளாகில் நானறியேனோ,தோளழகை யெனக்குக்காட்டிற்றிலனாகில் நானறியேனோ, கையும்திருவாழியுமான வழகைக்காட்டிற்றிலனாகில் “அப்ராப்தவிஷயம்” என்றறியேனோ, வடிவழகாலன்றி குணத்தாலேயென்னை விஷயீகரித்தானாகில் நானறியேனோவென்கிறாள் .............................................. *

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு (மணிமாமையித்யாதி) பாட்டெல்லாம்கடாக்ஷித் நவதாரிகை (இஸ்ஸீலத்துக்குமித்யாதி) கீழ்ப்பாட்டைக்கடாக்ஷித்து (இஸ்ஸீலத்துக்குமென்றது) இஸ்ஸீலத்துக்குமடியானவென்றது - “அப்ரமேயம்ஹிதத்தேஜோ யஸ்யஸாஜநகாத்மஜா” (அப்ரமேயம்ஹிதத்தேஜோ யஸ்யஸாஜநகாத்மஜா) என்றத்தைப்பற்ற. தத்தேஜஃ - தஸ்யதேஜஃ.

"மலர்மாதர்" என்னவமைந்திருக்க, "மணிமாமைகுறைவில்லா" என்றுவி சேஷிக்கிறதென்னென்ன (மணிமாமைகுறைவிலமே யித்யாதிவாக்யத்தாலே) ஆக, இவ்வாக்யத்வயத்தாலும்பலித்தது - ப்ராப்யதசையிலும் புருஷகாரபூதையென்ற படி. அவளுடையவித்யாதிக்கு - "மலர்மாதருறைமார்பன் - அடியேனைப்பணிகொண்ட" என்றங்வயத்திலே தாத்பர்யம். ஆக, பிராட்டிசம்பந்தம்சொன்னதுக்கு மூன்றுபாவம். "மாதர்" என்றதுக்குபாவம் (நிறமேயித்யாதி) மாது-சௌகுமார்யம். சௌகுமார்யத்தையுடையவளென்றது - மார்த்தவத்தையுடையவளென்றபடி. "மலர்மாதர்" என்றதுக்கர்த்தம் (புஷ்பத்திலித்யாதி) "உறை" என்றவர்த்தமா நார்த்தம் (பூவிலித்யாதி) பூவில்சம்பந்தமாத்ரமேசொல்லி, அவ்விடம்போலே மாதர்மார்பனென்னுமல், "உறைமார்பன்" என்றதிறே. "மலர்மாதர்" என்றதிலே நோக்காக உக்தத்தைவிவரிக்கிறார் (தான்பிறந்தவித்யாதி) அன்றிக்கே, பூவைவிட்டு த்திருமார்விலேயிருக்கைக்கு ஹேதுவேதென்ன (தான்பிறந்தவித்யாதி) என்னுதல். பூநெருஞ்சிற்காடாயிருக்குமோவென்ன (அனிச்சமுமித்யாதி) அனிச்சமாவது - அனிச்சப்பூவென்றொரு புஷ்பவிசேஷம். அதுநோக்கக்குழையும். அன்னத்தின்தூவி. அன்னத்தின்சிறகு. தூவி-சிறகு. அது அதிம்ருதுவாயிருக்கும். இவளையும்- "மாதர்" என்றதிறே. "அனித்தம்" என்றொருபாடமுண்டு. அனித்தமாவது-நாகமல்லிகை- "தான்பிறந்தபூநெருஞ்சிற்காடு" என்றத்தால்பலிதத்தை சநிதர்ஶநமாகவருளிச்செய்கிறார் (முக்தனித்யாதி) நினையாமைக்கு த்ருஷ்டாந்தாந்தரோணத்ருடீகரணம் (பிராட்டியித்யாதி) வர்த்தமாநநிர்த்தேசத்துக்கு ஹார்த்தபாவம் (அவளகலகில்லேனித்யாதி) அன்றிக்கே, ஸ்ரீயஃபதித்வகதநத்துக்கு நாலாம்தாத்பர்யமாதல்.

அளவென்று - தைர்க்யம். இன்னதுக்கணியென்று விசேஷியாமையாலே- ஆபரணத்துக்காபரணமென்று விவக்ஷித்து, இத்தைப்ரமாணகதநபூர்வகமாக வருளிச்செய்கிறார் (சர்வபூஷணேத்யாதி) சர்வபூஷணோர்பூஷிதுமர்ஹா: என்றன்றிக்கே, சர்வபூஷணாநிபூஷயிதுமர்ஹா: என்று இங்குவிவக்ஷிதம். தமிழன்நிர்வாஹத்திலே-அழகின்மிகுதியைச்சொல்லி, ஆபரணத்தை விஞ்சியிருக்குமென்றபடி. இந்தபக்ஷத்துக்கும் ஜீயர்ருளிச்செய்ததே ஸித்திக்குமென்கிறார் (அத்தாலுமித்யாதி) ஜீயர்நிர்வாஹத்திலேசப்தார்த்தம் (ஆயதாஶ்சேத்யாதி) "ஆயதாஶ்ச ஸுவ்ருத்தாஶ்ச பாஹவ: பரிகோபமா: । ஸர்வபூஷணபூஷார்ஹா: கிமர்த்தம் ந விபூஷிதா:" (ஆயதாஶ்சஸுவ்ருத்தாஶ்சபாஹவ:பரிகோபமா: [ ஸர்வபூஷணபூஷார்ஹா:கிமர்த்தம்நவிபூஷிதா:) இதிகிஷ்கிந்தாகாண்டே ஹநுமாந். "ஆபரணஸ்யாபரணம் ப்ரஸாதநவிதே: ப்ரஸாதநவிஶேஷ: । உபமாநஸ்யாபி ஸகே ப்ரத்யுபமாநம் வபுஸ்தஸ்யா:" (ஆபரணஸ்யாபரணம்ப்ரஸாதநவிதே:ப்ரஸாதநவிஶேஷ:|உபமாநஸ்யாபிஸகேப்ரத்யுபமாநம்வபுஸ்தஸ்யா:) இதிவிக்ரமோர்வஶீயநாடகே. அளவுடைத்தாய் - தீர்க்கமாய். ஜீயர்நிர்வாஹத்திலே, அணியென்று-ஆபரணமாயிருப்பதாய்; "ஆயதாஶ்ச ஸுவ்ருத்தாஶ்ச" (ஆயதாஶ்சஸுவ்ருத்தாஶ்ச) என்கிறபடியே, மானமென்று-அளவுடைத்தாய், தடமென்று-சுற்றுடைத்தாய், வரையென்று - ஒருவரால்சலிப்பிக்கவொண்ணாததோள் ப

டைத்தவனென்றுசப்தார்த்தம். ஆக, "அணிமானம்" என்றதுக்கர்த்தத்வயம் "அணிமானத்தடவரைத்தோள்" என்றதும், "ஆயதாஸ்ச" இத்யாதியும்-ஏகார்த்தம். அதாவது, அணியென்று-ஸர்வபூஷணபூஷார்ஹா: என்கிறத்தைநினைக்கிறது; மானமென்று - அளவாய், அத்தாலே - ஆயதாஸ்ச என்றத்தையும்; தடமென்று-ஸுவ்ருத்தா: என்றத்தையும்; வரையென்று-பரிகோபமா: என்றத்தையும் நினைக்கிறதென்றபடி.

"மலர்மாதருறைமார்பன்" என்றதுக்கநுகுணமாக "அடலாழி" என்றதுக்கு ப்ரயோஜநத்தை யருளிச்செய்யாநின்றுகொண்டு, சப்தார்த்தம் (பிராட்டியுமித்யாதி) ரசோக்தி (இவனுடையவித்யாதி) வ்ருத்தம் - ஆசாரமும், திருவாழியும். கைமேலே-ப்ரத்யக்ஷமாகவென்றும்.

"பணிமானம்" என்றவிடத்திலே, மானமென்று - அளவாய், அத்யல்பதையைச்சொல்லுகிறது. ஓரளவும்குறையாமே - அத்யல்பமும் குறையாமே. இத்தால்பலிதம் (அஹமித்யாதி) "மலர்மாதருறைமார்பன் - அடியேனைப்பணிகொண்ட" என்றுகூட்டி, "ஹவாம்ஸ்ஸஹவைதேஹ்யா" (பவாம்ஸ்துஸஹவைதேஹ்யா) என்கிறவசநத்தையுட்கொண்டுபோவம் (இனையவித்யாதி) "மலர்மாதருறைமார்பன் - அடியேனைப்பணிகொண்ட" என்கிறவாக்யதாத்பர்யத்தை யருளிச்செய்து, "அடியேனை" என்கிறபததாத்பர்யத்தை யருளிச்செய்கிறார் (அடியேனையித்யாதி) (குமரிருந்துபோகாமே) "அடியேனை" என்கிறசேஷத்வம் வ்யர்த்தமேபோகாதே. இத்தைவிவரிக்கிறார் (பரதந்த்ரேத்யாதி) உக்தார்த்தத்தை ஆப்தஸம்வாதத்தாலே த்ருடீகரிக்கிறார் (எழுந்தருளியிருக்கிறவித்யாதி) உடையவரெழுந்தருளியிருக்கிறவென்றபடி. பிடாத்தை-பச்சைவடத்தை. சப்தார்த்தம் (நீலரத்நமித்யாதி) மாவென்று-கறுப்பாய், அத்தையுடையவன் - மாயனென்றபடி. மாயன்-கரியவன்.

"மடநெஞ்சால்குறைவிலம்" என்றுப்ரயோகிக்கிறவனுடைய ஹார்த்தபாவத்தை ஆப்தஸம்வாதத்தாலே தர்சிப்பிக்கிறார் (ஜீயரித்யாதி) "பூசும்சாந்தென்னெஞ்சமே" என்றவிடத்திலே நெஞ்சின்கார்யமான ஸ்ம்ருதியைச்சாந்தாகச்சொன்னத்தைப்பற்ற-நெஞ்சைச்சாந்துப்பரணியாக விவக்ஷித்து (சாந்தப்பரணியோடேயுடைப்பாரைப்போலே) என்று த்ருஷ்டாந்த மருளிச்செய்கிறார். நெஞ்சுபரணியாகவும், அதிலுண்டான ஸ்ம்ருதிசாந்தாகவும் விவக்ஷிதம். இவ்வாக்யம் - ரசோக்தி.

"மலர்மாதருறைமார்பன்" இத்யாதிவிசேஷணங்களுக்கு வ்யங்க்யார்த்தங்கள் (பிராட்டியித்யாதி)

க்ரமேணாந்வய: ........................................................................*

# மூன்றாம்பாட்டு.

மடநெஞ்சாற்குறைவில்லாமகடாய்செய்தொருபேய்ச்சி
விடநஞ்சமுலேசுவைத்தமிகுஞானச்சிறுகுழவி
படநாகத்தணைக்கிடந்தபருவரைத்தோட்பரம்புருடன்
நெடுமாயன்கவராதநிறைவினாற்குறைவிலமே.

## ஆறாயிரப்படி.

(மடநெஞ்சால்) நாகபர்யங்கசாயியாய், தத்ஸம்ஸ்பர்ஸநிரவதிகசுகத்தாலே வளர்ந்ததிருத்தோள்களையுடையனாய், புருஷோத்தமனாய், திருத்தாயாரான யசோதைப்பிராட்டிநெஞ்சும் வடிவும்போலே தன்னுடையநெஞ்சையும் வடிவையு மநுகூலமாகப்பண்ணிக்கொண்டுவந்த பேய்ச்சிமுடியும்படி நஞ்சமுலேசுவைத்த மிகுஞானச்சிறுகுழவியாயிருந்த நெடுமாயன் கவராதநிறைவினால் குறைவிலமென்கிறாள்........................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், உபாயகார்யமான அநிஷ்டநிவ்ருத்த்யாதிகளை மேல்முழுக்க ப்ரதிபாதிப்பதாக, முதலிலே, அநுகூலசத்ருவான பூதநாநிரசநத்தைச்சொல்லி, ஆஸ்ரிதார்த்தமாக நாகபர்யங்கத்தில்நின்றும்வந்த க்ருஷ்ணன்விரும்பாத வடக்கத்தாலொரு காரியமில்லையென்கிறாள்.

மடம்-முலையுண்கிறபிள்ளைபக்கலிலே ப்ரவணமான. நெஞ்சால்-நெஞ்சால். குறைவில்லா-குறைவற்றிருக்கிற. தாய்மகள்-யசோதையாகிறதாய்மகளாக. செய்து-தன்னைப்பண்ணிவந்தவளாய். ஒரு-எதிர்த்தலையைநலிகைக்கத்விதீயையாயிருக்கிற. பேய்ச்சி-பேய்ச்சியுடைய. விடநஞ்சம் - நாட்டில்விஷங்கள் அம்ருதமென்னலாம்படிமிக்கவிஷத்தையுடைத்தான. முலை -* நச்சுமுலையை. சுவைத்த-பசையறச்சுவைத்த. மிகு-மிக்க. ஞானம்-ரஸஜ்ஞாநத்தையுடைய. சிறுகுழவி - முக்தசிசுவாய். இப்படிவந்தவிரோதியை நிரஸிக்கைக்காகவேலக்கோலி, படம் - ஸ்வஸ்பர்ஸத்தாலே விரிந்தபணத்தையுடைய. நாகத்தணை - நாகபர்யங்கத்திலே. கிடந்த-கண்வளர்ந்தவனாய். பரு-பெரிய. வரை-மலைபோலேவளர்ந்த. தோள்-தோளையுடையவனாய். பரம்புருடன் - " உத்தமஃபுருஷஃ " ( உத்தமஃபுருஷஃ ) என்னும்பரமபுருஷனாய். நெடு-நிரவதிகமான. மாயன்- ஆஸ்சர்யகுணசேஷ்டிதங்களையுடையக்ருஷ்ணன். கவராத-விரும்பாத. நிறைவினால் - ஸ்த்ரீத்வபூர்த்தியாலே. குறைவிலம்-என்னகாரியமுண்டு.

நிறைவாவது-நெஞ்சுபிறரறியாமலடக்கும் நிரப்பம். விடநஞ்சமென்றது-மீமிசை. " பேய்ச்சிவிடவென்று - அவள்நசிக்க" என்றும் சொல்லுவர்...........*

## ஈடு - மூன்றாம்பாட்டு.

விரோதிநிரசநசமர்த்தனாய் அத்யந்தவிலக்ஷணனாய், முன்பென்பக்க லத்யபிநிவிஷ்டனானவன் விரும்பாதவடக்க மெனக்குவேண்டாவென்கிறாள்.

(மடநெஞ்சால்குறைவில்லா) மடப்பமாவது-மென்மை. அதாவது-நெஞ்சில்நெகிழ்ச்சி. அதாவது-முலையுண்ணும்போது யசோதைப்பிராட்டிக்குப்பிறக்கும் பரிவையு மேறிட்டுக்கொண்டுவந்தபடி. அகவாயிலுள்ளது த்வேஷமாயிருக்கச்செய்தே, அத்தைமறைத்துக்கொண்டு ஆநுகூல்யம் தோற்றவந்தாளாயிற்று. (மகள்தாய்செய்து) தாய்-மகள்செய்து. மக்களென்று - மநுஷ்யர்க்குப்பேர். பேயானதான் மநுஷ்யவேஷத்தைக்கொண்டு, அதுதன்னிலும் "பெற்றதாய்போல்" என்கிறபடியேதாய்வடிவைக்கொண்டு. (ஒருபேய்ச்சி) இதென்னநிக்ருதிதான். நிக்ருதிக்கு அத்விதீயையென்கை. "நலியவந்தாள்" என்னும் சிவிட்காலே அநாதரோக்தியாகவுமாம். (விடநஞ்சம்) விடமென்றும், நஞ்சமென்றும் - மீமிசையாய், நாட்டில்விஷங்களெல்லா மம்ருதகல்பமாம்படியான விஷமென்னுதல். (பேய்ச்சிவிட) பேயானவளுயிரைவிடும்படி. (நஞ்சமுலைசுவைத்த) நச்சுமுலையையமுதுசெய்த. அம்முலைவழியே "உயிரைவற்றவாங்கியுண்டவாயான்" என்கிறபடியே, பாலுமுயிருமொக்க வற்றிவரும்படிசுவைத்த. "ப்ராணஸஹிதம்பபௌ" என்கிறபடியே, பசையறும்படியாக. (மிகுஞானச்சிறுகுழவி) மௌக்த்யத்தில் கண்ணழிவற்றிருக்கச்செய்தேயும், ரஸஜ்ஞாநத்தாலே "இதுதாய்முலையல்ல, வேற்றுமுலை" என்று அமுதுசெய்தான். அவள்தாயாய்வந்தாலும், இவன் "தாய்" என்றேமுலையுண்டாலும், வஸ்துஸ்வபாவத்தாலே வருமதுதப்பாதிறே, அத்தாலேதப்பிற்றித்தனை. (படநாகத்தணைக்கிடந்த) உணவுக்கிடாகக்காணும்கிடந்தபடியும். நஞ்சையுண்டுநச்சரவிலேயிறே கிடக்கிறது, (நஞ்சுக்குநஞ்சுமாற்றிறே) விரோதியையழியச்செய்துபோய்ப்படுக்கையிலேசாய்ந்தபடியாதல். அன்றிக்கே, "நாமவய-ஐஉ-த-ஜ" (நாகபர்யங்கமுத்ஸ்ருஜ்ய) என்கிறபடுக்கையைவிட்டுப்போந்து விரோதியைப்போக்கினபடியாதல்; ஆஸ்ரிதரார்த்தநாதங்கேட்டால் போகத்திலே நெஞ்சுபொருந்தாதிறே. சர்வேஸ்வரன்திருமேனியிலே சாய்கையாலுண்டானஹர்ஷத்தாலே விகஸிதமானபணங்களையுடையனுயிருக்கும். அசுரவர்க்கம்கிட்டினல் "வாய்ந்தமதுகைடபரும் வயிறுருகிமாண்டார்" என்று முடியுமாபோலே யாயிற்று அநுகூலவர்க்கம்கிட்டினல் வாழும்படி. (பருவரைத்தோள்) திருவநந்தாழ்வானோட்டை ஸ்பர்ஶத்தாலே, ஏகரூபமான விக்ரஹத்துக்குப்பிறக்கும் விகாரத்தைச்சொல்லுகிறது. கர்மநிபந்தமான விகாராதிகளில்லையென்ற வித்தனைபோக்கி, ஆஸ்ரிதஸம்ஸ்லேஷத்தில் விகாரமில்லையென்னில் அவ்வஸ்துவையணையவாசைப்படவேண்டாவே. (பரம்புருடன்) தகட்டிலழுத்தினமாணிக்கம் நிறம்பெறுமாபோலே, திருவநந்தாழ்வான்மேலே சாய்ந்தபின்பாயிற்று "சர்வாதிகன்" என்றுதோற்றிற்று. (நெடுமாயன்) என்மடியிற்சுவடறிந்தபின்பு படுக்கையிற்பொருந்தியறியாதவன், (பெரியமலைபோலேவளர்ந்த தோளுடையவன்,

"உத்தம:புருஷ:" என்னும்பரமபுருஷனாய், நிரவதிகமான வாத்ஸல்ய குணசேஷ்டிதங்களையுடையக்ருஷ்ணன்.) (கவராத) அப்படியாதரித்தவனிப்படியுபேக்ஷித்தபின்பு, எனக்கு என்னுடைய ஸ்த்ரீத்வத்தாலென்ன கார்யமுண்டு. (நிறைவு) அடக்கம். அதாவது- தன்னகவாயிலோடுகிறது பிறர்க்குத்தெரியாதபடியிருக்கும் ஸ்த்ரீத்வம்..............................*

## ஜீயர் அரும்பதம்.

மூன்றாம்பாட்டு (மடநெஞ்சாலித்யாதி) "பேய்ச்சிவிடநஞ்சமுலைசுவைத்த, பரம்புருடன்நெடுமாயன்" இத்யாதியைக்கடாக்ஷித்தவதாரிகை (விரோதீத்யாதி) விலக்ஷண னென்றது - "பரம்புருடன்" என்றத்தைப்பற்ற. அத்யபிநிவிஷ்டனென்றது - "நெடுமாயன்" என்றத்தைப்பற்ற.

பூதனைக்குநெஞ்சுநெகிழ்ச்சியுண்டோவென்ன (முலையுண்ணும்போதித்யாதி) ஏறிட்டுக்கொண்டுவந்தபடியை யுபபாதிக்கிறார் (அகவாயி லித்யாதி) (தாய்மகள்செய்து) பேயானதான் தாய்போலே மநுஷ்யவேஷத்தைக்கொண்டுவந்தென்றபடி. (பெற்றதாய்போல்வந்தபேய்ச்சியிதி) ஸ்பஷ்டோர்த்த:. திருமொழிமூன்றாந்திருமொழி முதற்பாட்டு, "முற்றமூத்து" இத்யாதி. "மடநெஞ்சால்" இத்யாதியைக்கடாக்ஷித்து வ்யாக்யாதாவினீடுபாடாதல், "ஒரு" என்றதுக்குபாவமாதல் (இதென்னவித்யாதி) நிக்ருதி - காபட்யம். சிவிட்கு - கோபம். உயிரைவிடும்படிசுவைத்ததுக்குப்ரமாணத்வயம் (அம்முலைவழியேயித்யாதி) (பெற்றதாய்போல்வந்தபேய்ச்சி பெருமுலையூடுயிரைவற்றவாங்கியுண்டவாயான்) பெற்றதாய்போல்வந்த பூதனையுடைய பெரியமுலைவழியே ப்ராணனும் பாலோடொக்கவற்றும்படியாக முலையைவாங்கிபுஜித்த வாயையுடையவனித்யர்த்த:. "க்ருஷ்ணஸ்தந்யம் ஸ்தநம் காடம் ஸராப்யாமபிபீடிதம் । க்ருஹீத்வா ப்ராணஸஹிதம் பபௌ கோபஸமந்வித:" (க்ருஷ்ணஸ்துதத்ஸ்தநம்காடங்கராப்யாமபிபீடிதம் । க்ருஹீத்வாப்ராணஸஹிதம்பபௌகோபஸமந்வித:) இதிபஞ்சமேம்ஸே. "சிறுகுழவி" என்னாநிற்கச்செய்தே, "மிகுஞானம்" என்கிறதென்னென்ன (மௌக்த்யத்திலித்யாதி) இத்தால், "மிகுஞானம்" என்று - சர்வஜ்ஞத்வமன்று, ரஸஜ்ஞாநமாத்ரத்தைச்சொல்லுகிறது; அதினாலே "வேற்றுமுலை" என்றறிந்து ப்ராணஸஹிதமாகவுண்டானென்றபடி. "மிகுஞானம்" என்று-பேய்பக்கலிலும் "தாய்" என்றேநினைத்து முலையுண்டவறிவைச் சொல்லுகிறதென்று அர்த்தாந்தரத்தைவிவக்ஷித்து, இப்படியானால் அவள்முடியவும் இவன் பிழைக்கவுங்கூடுமோவென்ன (அவள்தாயித்யாதி) அத்தாலே-வஸ்துஸ்வபாவத்தாலே.

நஞ்சமுலையுண்டவநந்தரம் நச்சரவிலேகிடந்தது - "ஸ்த்தாவரமானவிஷத்துக்கு ஜங்கமமானவிஷம் பரிஹாரமாம்" என்னும்நினைவாலே என்றுவிவக்ஷித்தருளிச்செய்கிறார் (உணவுக்கிட்டாகவித்யாதி வாக்யத்வயத்தாலே) உணவுக்கு-போஜநத்துக்கு. "முலைசுவைத்த-படநாகத்தணைக்கிடந்த" என்றுகூட்டிபாவம் (விரோதியையித்யாதி) "படநாகத்தணைக்கிடந்த-பரம்புருடன்-முலைசுவைத்த" என்றுகூட்டியருளிச்செய்கிறார் (அன்றிக்கேயித்யாதி) "ஏஷ நாராயண: ஸ்ரீமான் க்ஷீரார்ணவநிகேதந: । நாகபர்யங்கமுத்ஸ்ருஜ்ய ஹ்யாகதோ மதுராம் புரீம்" (ஏஷநாராயணஸ்ரீமாந்க்ஷீரார்ணவநிகேதந: । நாகபர்யங்கமுத்ஸ்ருஜ்ய

ஷ்யாகதோமதுராம்புரீம் ) இதிஹரிவம்ஶே. படுக்கையைவிட்டுவரக்கூடுமோவென்ன (ஆஶ்ரிதரித்யாதி) போகத்திலேயென்றது-சாடு. போகத்திலே-திருவநந்தாழ்வானுடம்பிலேயென்றும். நாகம்படமின்றிக்கேயிருக்குமோ, விசேஷிக்கிறதென்னென்ன (சர்வேஶ்வரனித்யாதி) சர்வேஶ்வரனைக்கிட்டினார்க்கெல்லாம் ஹர்ஷமுண்டாகக்கூடுமோவென்ன; சநிதர்ஶநமாகவருளிச்செய்கிறார் (அசுரவர்க்கமித்யாதி) ( வாய்ந்தவித்யாதி ) வந்துகிட்டினமதுகைடபர்களும் குடலழுகிமுடிந்துவிட்டார்களித்யர்த்தஃ. மூன்றாந்திருவந்தாதி அறுபத்தாறும்பாட்டு, “ காய்ந்திருளை ” இத்யாதி. இப்பாட்டிலே-திருவநந்தாழ்வான் நிஶ்வாசாக்நியாலே அவர்கள் முடிந்தார்களென்றிருக்க, ஈஶ்வரனைக்கிட்டி முடிந்தார்களென்றது - “ராஜ்ஞோஹிபக்ஷிணோவாஹ:” ( ராமஸ்யதக்ஷிணோபாஹுஃ ) என்னும் ந்யாயத்தாலே சேஷபூதன்செய்தது சேஷிசெய்ததாமென்னு மத்தைப்பற்ற.

“படநாகத்தணைக்கிடந்த” என்றவநந்தரம் “ பருவரைத்தோள் ” என்றதுக்குபாவம் (திருவநந்தாழ்வானோட்டையித்யாதி) (ஏகரூபமானவிக்ரஹத்துக்கு-திருவநந்தாழ்வானோட்டை ஸ்பர்ஶத்தாலே-பிறக்கும்விகாரத்தை) என்றந்வயிப்பது. ஆனால், “ அவிகாராய ” என்றதுக்குக்கருத்தென்னென்ன ( கர்மநிபந்தநேத்யாதி )

“பரம்புருடன்” என்றதுக்கிரண்டர்த்தம். முந்தினது- அழகால்வந்தபரத்வம். இத்தை யருளிச்செய்கிறார் (தகட்டிலழுத்தினவித்யாதி) இப்போது-“பரம்” என்றசப்தம் - பரபாகத்தாலேவந்த ஶ்ரைஷ்ட்யத்தைச்சொல்லுகிறது. இரண்டாவது-அநந்தசாயித்வத்தால்வந்த சர்வாதிகத்வம். இத்தையருளிச்செய்கிறார் (திருவநந்தாழ்வான்மேலேயித்யாதி)

“ நெடுமாயன் ” என்றதுக்கு - என்பக்கலிலேமிக்கவ்யாமோஹத்தையுடையவனென்று விவக்ஷித்து, மிக்கவ்யாமோஹத்தையுடைய னாகையாவதேதென்ன (என்மடியிலித்யாதி) “படநாகத்தணைக்கிடந்த-நெடுமாயன்” என்கிறசமபிவ்யாஹாரத்தாலே-படுக்கையைவிட்டுத் தன்மடியிலேபொருந்தினமைதோற்றுகிறது. என்மடியில் சுவடறிந்தபின்பென்றவிடத்திலே - “கண்ணனென்னெஞ்சகலையான்” என்றதநுசந்தேயம்.

பருவரைத்தோள் - பெரியமலைபோலேவளர்ந்த தோளையுடையவனித்யர்த்தஃ. க்ரமேணாந்வயஃ..........................................................................*

---

## நாலாம்பாட்டு.

நிறைவினாற்குறைவில்லாநெடும்பணைத்தோண்மடப்பின்னைப்
பொறையினான்முலையணைவான்பொருவிடையேழடர்த்துகந்த
கறையினார்துவருடுக்கைக்கடையாவின்கழிகோற்கைச்
சறையினார்கவராததளிர்நிறத்தாற்குறைவிலமே.

## ஆறாயிரப்படி.

( நிறைவினல் ) ஆத்மகுணங்களாலும் ரூபகுணங்களாலும் பூர்ணையாய் கோபவம்ஸோத்பவையாயிருந்த நப்பின்னைப்பிராட்டியோடே சம்ஸ்லேஷிக்கைக்காக அந்தகோபகுலோசிதமான வேஷத்தாலே பூஷிதனாய், தத்ஸம்ஸ்லேஷோபாயமான வ்ருஷபசப்தகநிரசநத்துக்கநுகுணசாமர்த்யத்தையுடையனாய் அவற்றைநிரசித்து ப்ரஹ்ருஷ்டனானவன் கவராத தளிர்நிறத்தால் குறையிலமென்கிறாள்.................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அபிமதையான நப்பின்னைப்பிராட்டியை புஜிக்கைக்காக, ஆசுரமான வெருதேழடர்த்தவன் விரும்பாதநிறத்திற்செவ்வியாலொரு ப்ரயோஜநமில்லையென்கிறாள்.

நிறைவினல்-ஸ்த்ரீத்வபூர்த்தியால். குறைவில்லா- குறைவற்றிருப்பாளாய். நெடு-நீண்டு. பணை-பணைத்த. தோள்-தோளையுடையளாய். மடம் - ப்ரணயவிஷயத்தில் பவ்யையான. பின்னை-நப்பின்னைப்பிராட்டி. முலை-முலையை. அணைவான்-அணைக்கைக்காக. பொறையினல்-தன்னுடையவ்யஸநஸஹமானமிடுக்காலே. பொருயுத்தோந்முகமான. விடை-ருஷபங்கள். ஏழு-ஏழையும். அடர்த்து-அடர்த்து. உகந்த - "அபிமதம்பெற்றோம்" என்றுகந்தவராய். இவளைப்பெறுகைக்கீடான ஜாத்யுசிதவ்ருத்தியாலே, கறை-காட்டில்பழம்பறித்திட்டகறை. ஆர்-நிரம்ப. துவர்-துவரூட்டின. உடுக்கை-உடைத்தோலையும். கடையா-பசுக்கறக்கைக்குசாதநமானகடையாவையும். கழிகோல்-கழிகோலையும். கை-கையிலேகொண்டு. சறையினர்- அரையிற்கட்டினசறைமணியையுடையரானவர். கவராத-விரும்பாத. தளிர்-தளிர்போலேசெவ்விய. நிறத்தால்-நிறத்தால். குறையிலம்-நமக்கொருப்ரயோஜநமில்லை.

நெடும்பணையென்று - நீண்டமூங்கிலென்றுமாம். துவருடுக்கை-துவரூட்டினவுடைத்தோல். கடையா-கறக்கும்மூங்கிற்குழாய். கழிகோல்-பசுக்கள்பாயாமல்வீசுங்கோல். சறைமணி-பசுக்கள்த்வநிகேட்டுவருகைக்குத் தன்னரையிற்கட்டினமணி. சறையனென்று-உடம்பைப்பேணாதவனென்றுமாம். தளிரொன்று-தளிர்போன்ற செவ்வியைநினைக்கிறது ..............................................*

## ஈடு - நான்காம்பாட்டு.

தன்னைப்பேணாதே, பெண்பிறந்தாரைப்பேணும் க்ருஷ்ணன்விரும்பாத நிறமெனக்கு வேண்டாவென்கிறாள்.

( நிறைவினல்குறைவில்லா ) க்ருஷ்ணன் தன்னைப்பெறுகைக்கு எருதுகளின்மேலே விழுகிறவ்யாபாரங்களில் தானவிக்ருதையாயிருக்கிற ஸ்த்ரீத்வத்தால் குறைவற்றிருக்கை. விகாரஹேதுவுண்டாயிருக்கத்தானவிக்ருதையாயிருந்தபடி. ( நெடும்பணைத்தோள் ) கீழ்-ஆத்மகுணம்சொல்லிற்று ; இங்கு - ரூபகுணம்சொல்லுகிறது. ( நெடும்பணையித்யாதி ) நெடியதாய்ப் பணைத்ததோளென்னுதல், நெடியவேய்போலே யிருந்த

தோளென்னுதல். அரியனசெய்தும் பெறவேண்டும்படிகாணும் வடிவழகு. (மடப்பின்னை) ம்ருதுஸ்வபாவை. (மூலையணைவான்) சம்ஶ்லேஷிக்கைக்காக. (பொறையினால்) வ்யசநசஹனாய். எருதுகளின் கொம்பாலும் குளம்பாலும் நெருக்குண்டவித்தை, அவள்மூலையாலே பிறந்த விமர்தமாக நினைத்திருந்தான். (பொருவிடை) கேவலம்வ்ருஷபமல்லகிடீர், அசுராவேசத்தாலே யுத்தோந்முகங்களாய்வந்தவை. ஒன்றிரண்டல்ல. ஏழையுமொருகாலேயூட்டியாகநெரிக்கை. (உகந்த) "இனிநாமிவளைலபித்தோமே" என்றுகந்தான். நப்பின்னைப்பிராட்டியை, விடைகொண்டுவந்து காணும்கைப்பிடித்தது. நிறைவினால் குறைவில்லா நெடும்பணைத்தோள் மடப்பின்னை-மூலையணைவான்-பொறையினால்-பொருவிடையேழடர்த்துகந்த. (கறையினார்துவருடுக்கை) கறைமிக்குத்துவருட்டின சிவந்ததோலாயிற்றுடுக்கை. இடையர் காட்டுக்குப்போம்போது முள்கிழியாமைக் குடுக்குமுடைத் தோலைச்சொல்லுகிறது. "துவர்" என்னுமிற்க, கறையினொன்கிறது - காட்டில் பழங்களைப் பறித்திடுகையாலே கறைமிக்கிருக்கும்; அத்தாலேகறைமிக்க துவராயிற்றுடுக்கை. * அரையில்பீதக வண்ணவாடைவேண்டாளாயிற்றிவள், கோரக்ஷணம்பண்ணின வடிவோடே யணையக்கணிசிக்கிறாள். (கடையா) ப்ராப்தகாலங்களிலே கறக்கைக்குக்கையிலே கடையாவுங்கொண்டாயிற்றுத்திரிவது. கடையா-மூங்கிற்குழாய். (கழிகோற்கை) கழிகோலாவது-வீசுகோல். கடையாவையும் வீசுகோலையும் கையிலேயுடையவர். (கடையாவின்கழிகோற்கை) கொடுவைப்பசுக்களை நியமித்துக்கறக்கைக்காக வீசுகோலைக்கையிலேகொண்டு திரியுமவனென்றுமாம். (கழிகோல்) முன்னணைக்கன்று பசுக்களோடேபோனால் மூலையுண்ணுமைக்கு, கொறுக்கோலென்று அதின்மூஞ்சியிலே கட்டிவிடுவர்கள்; அதைச்சொல்லுதல். சந்யாசிகள் தந்தாமுக்கென்ன ஓரிருப்பிட மில்லாமையாலே மாத்ரைதொடக்கமானவற்றைக் கையிலேகூடக்கொண்டுதிரிவர்களாயிற்று, அதுபோலேபசுக்களுக்குப்புல்லும் நீருமுள்ளவிடத்திலே தங்குமித்தனையிறே யிவர்களும். (சறையினார்) சறைகைமணியென்று-ஒருமணியுண்டாயிற்று, இடையராயிலே கோத்துக்கட்டி முன்னேபோகாநின்றால் அந்தத்வநிவழியே பசுக்களெல்லா மோடிவரும்படியா யிருப்பதொன்று; அத்தையுடையவனொன்னுதல். அன்றிக்கே, சறையென்று-தாழ்வாய், ப்ரதாநவர்ணங்களிலொக்க வெண்ணவொண்ணுததாழ்ந்தவிடைக்குலத்தே பிறந்தவனென்னுதல். சறையென்று-சரும்புகையாய்; அல்லாதவிடையர் விஷ்வயநசங்க்ரமணங்ளுக் குடம்பிருக்கத்தலைகுளித்தல், உடம்பிலே நீரிரோறிட்டுக்கொள்ளுதல் செய்வர்களாகில், அதுக்கு மவசரமற்றிருக்குமாயிற்றுப்பசுக்களின்பின்னே திரிகையாலே. ரக்ஷ்யவர்க்கத்தினுடைய ரக்ஷணத்துக்காகத் தன்னைப்பேணுதவவ்வடிவை யணைக்கைக்காயிற்றிவ

ளாசைப்படுகிறது. "தீக்ஷிதம் வ்ரதஸம்பந்நம் வராஜிநதரம் ஸுசிம் । குரங்கஶ்ருங்கபாணிஞ்ச பஶ்யந்தீத்வா பஜாம்யஹம்" ( தீக்ஷிதம்வ்ரதஸம்பந்நம்வராஜிநதரம்ஸுசிம் । குரங்கஶ்ருங்கபாணிஞ்சபஶ்யந்தீத்வாபஜாம்யஹம் ) ( கவராததளிர்நிறத்தால்குறைவிலம் ) அவன்விரும்பாத ப்ரஹ்மசாரி நிறத்தாலென்னகார்யமுண்டு. ராவணவதாநந்தரம் பிராட்டிதிருமஞ்சநம்பண்ணி யெழுந்தருளினபோதை நிறம்போலேயவனுக் குபேக்ஷாவிஷயமானநிறம் நமக்கென்செய்ய. இவளைப்போலேயிப்படிநிறத்திற்சொன்னாரில்லையே மற்றைப்பிராட்டிமாரில். முதற்பாட்டிலே "மணிமாமைகுறைவிலம்" என்றது, இங்கே "தளிர்நிறத்தால் குறைவிலம்" என்றது, இவற்றுக்கு வாசியென்னென்னில் ; அங்கு, மணிமாமையென்று-அழகையும் மென்மையையும் சொல்லிற்றாய், இங்கு-நிறத்தைச்சொல்லிற்றாகவுமாம் ; அங்கு-நிறத்தைச்சொல்லிற்றாகில், இங்கு-ஸ்நிக்தமான நிறத்தைச்சொல்லுகிறது.

[ தீக்ஷிதமித்யாதி ] பிராட்டியாசார ப்ரதாநமான ஜநககுலத்தில் பிறப்பாலே யவ்வடிவைவிரும்பினாள், ஆசாரநிர்ப்பந்தமில்லாத விடைக்குலத்திலே பிறந்தவளாகையாலே யிவ்வடிவைவிரும்பினா ளாயிற்றிவள். [தீக்ஷிதம்] [தீக்ஷிதம்] உறுப்புத்தோலும் வெண்ணெய்பூசின வுடம்புமான யஜமாநவேஷத்தோடே நின்றநிலையைக்காணவாசைப்படாநின்றேனென்கிறாள். [வ்ரதஸம்பந்நம்] [வ்ரதஸம்பந்நம்] ருஷிஒருபட்டினிவிடச்சொன்னாகில், "இவன்நம்முடையசௌகுமார்யத்துக்கு 'பொறாது' என்று சொன்னானித்தனை" என்று, நாலுபட்டினிவிட வொருப்படுவராயிற்று தர்மஶ்ரத்தையாலே. [வராஜிநதரம்] (வராஜிநதரம்) கூறையுடையையும் காற்கடைக்கொள்ள வேண்டும்படியாயிருக்கை. [ஸுசிம்] [சுசிம்] "ஒருஸ்திரீகளையும் தீண்டலாகாது,தர்மபத்நியாகையாலே பிராட்டியைத்தீண்டினால் வருவதொருசேதமில்லையிறே, ஆனபின்பு அதொழியபரிஹரிப்பது" என்றால், அதுதன்னிலு மதிசங்கைபண்ணி,பிராட்டியுடைய திருப்பரிவட்டம் தாக்கினாலும் முழுகத்தேடாநிற்பர். [ குரங்கஶ்ருங்கபாணிஞ்ச ] ( குரங்கஶ்ருங்கபாணிஞ்ச ) "ஏகவஸ்த்ரதரோதந்வீ" ( ஏகவஸ்த்ரதரோதந்வீ ) என்னுமதிற்காட்டிலும், கையுங்கலைக்கொம்புமாயிருக்குமதுதானே போக்திருக்கை. [ பஶ்யந்தீத்வா பஜாம்யஹம் ] ( பஶ்யந்தீத்வாபஜாம்யஹம் ) "மேல்வரும்பலத்தை யபேக்ஷிக்கவே, நடுவுள்ளது ஆநுஷங்கிகமாய்வருமிறே" என்னுமத்தைப் பற்றச்சொல்லுகிறாள். [ பஶ்யந்தீத்வா பஜாம்யஹம் ] ( பஶ்யந்தீத்வாபஜாம்யஹம் ) பகவத்பஜநம்பண்ணுவார் பண்ணுவதெல்லாம் த்ருஷ்டத்துக்கிறே, ஆகையாலே த்ருஷ்டார்த்துககாக பஜிக்கிறாள்காணும். * ஸதாபஶ்யந்தியிறே யங்கும்.

“ வழிப்போக்கில்கண்ணெச்சில் வாராதொழியவேணும் ” என்றிறே மங்களாசாஸநம்பண்ணுகிறது, அதுதன்னடையேவருமிறே மேல்வரும் பலத்தை யபேக்ஷிக்கவே. சாவித்ரி தன்பர்த்தாவைக்காட்டி, “ இவனுக்கு நானநேகம் பிள்ளைகளைப்பெறவேணும் ” என்று வேண்டிக்கொண்டாளிறே.........................................................*

## ஜீயர்அரும்பதம்.

நாலாம்பாட்டு ( நிறைவினுவித்யாதி ) “ பின்னை-முலையணைவான் பொருவிடையேழடர்த்துகந்த, சுறையினர்கவராத தளிர்நிறத்தால் ” இத்யாதியைக்கடாக்ஷித்தவதாரிகை (தன்னைப்பேணுதேயித்யாதி)

நிறைவினுல்-அடக்கத்தால். அடக்கத்துக்குலக்ஷணம்-விகாரஹேதுவுண்டானுலு மவிக்ருதையாயிருக்கை. நப்பின்னைக்குநிறைவேதென்ன (க்ருஷ்ணனித்யாதி) நிறைவுக்குலக்ஷணம் (விகாரஹேதுவித்யாதி) பணைத்த - சஞ்சாதசாகமான. விஸ்த்ருதமானவென்றபடி. த்விதியார்த்தத்தில், பணை-மூங்கில். “ பொருவிடையேழடர்த்து ” என்கிறத்தையுங்கூட்டிபாவம் (அரியனவித்யாதி) மடப்பம்-மென்மை. பொறை-க்ஷமை. சப்தார்த்தம் (வ்யஸநஸஹனுயென்றது) தாத்பர்யார்த்தம் ( எருதுகளினித்யாதி ) விடையென்னுதே, “ பொருவிடை ” என்றதுக்குபாவம் ( கேவலமித்யாதி) (ஊட்டியாகநெரிக்கை) ஊட்டி-கழுத்து. ஏழெருதினுடையகழுத்தையுங்கூட்டி யொருகாலேஹிம்ஸிக்கையென்றபடி. விடைகொண்டென்றது-சாடு. வ்ருஷபங்களைக்கொன்றென்று ஸ்வபாவார்த்தம், சேஷத்வந்தோன்றவென்று சாடு. அந்வயப்ரகாரம் (நிறைவினுவித்யாதி)

துவரூட்டின-சாயமேற்றின. “துவருடுக்கை” என்றதிலே-தோலர்த்தாத்ஸிந்தம். துவருடுக்கை - துவரூட்டினசிவந்ததோலென்றபடி. புடவையில்லையோவுடுக்கைக்கு, சிவந்ததோலெ துக்கென்ன ( இடையரித்யாதி ) உடைத்தோல் - உடுக்கும்சர்மம். பௌநருக்த்யத்தைபரிஹரிக்கிருர் ( துவரித்யாதி ) துவராயிற்று - சிவந்ததோலாயிற்று. உடுக்கை-உடுக்கும்வஸ்த்ரம். திருப்பீதாம்பரத்தைச்சொல்லாதே, தோலைச்சொல்லுவானென்னென்ன (அரையிலித்யாதி) ( அரையில்பீதகவண்ணவாடை) திருவரையில்சாத்துகிற திருப்பீதாம்பரம். பீதகவண்ணவாடை—பொன்னிறமானவஸ்த்ரம். நாய்ச்சியார்திருமொழி பதின்மூன்ருந்திருமொழி முதற்பாட்டு, “ கண்ணனென்னும் ” இத்யாதி. “சுறையினர்” என்றத்தைக்கடாக்ஷித்து பாவம் (கோரக்ஷணமித்யாதி) கடையாவைக்கொண்டுதிரிகைக்கு ப்ரசங்கமருளிச்செய்கிருர் (ப்ராப்தேத்யாதி) “இன்”-சாரியைச்சொல்லு. நிரர்த்தகாவ்யயமென்றபடி. கடையான ஆஎன்ருய், ( கொடுவைப்பசு ) என்றபடி. கடை - கொடுவை. பொல்லாதபசுக்களையென்றபடி. “ கழிகோல் ” என்றதுக்கர்த்தாந்தரம் ( முன்னணயித்யாதி ) கொறுக்கோல்-முட்குத்தினகோல். ஆக, “கடையா” என்றதுக்கர்த்தத்வயம்-மூங்கில்குழாயும், துஷ்டபசுவும்; “கழிகோல்” என்றதுக்கர்த்தத்வயம்-வீசுகோலும், கன்றுகளின்வாயிலே கட்டுகிறகொறுக்கோலும். இவற்ருேடேகூடத்திரிவானென்னென்ன (சந்யாஸிகளித்யாதி) மாத்ரை - பிக்ஷாபாத்ரமானசிக்கம்முதலானவை. சுறைகைமணி-மரமணி. மூன்ருமர்த்தம் (சுறையென்று சுரும்புகையித்யாதி) சுரும்புகை-பேணுமை. ஆக, “சுறையினர்” என்றதுக்கர்த்தத்ரயம்- சுறை

கைமணியுடையவனென்னுதல், நிஹீநஜாதீயனென்னுதல், சமும்புகையை-பேணுமை யை-அழுக்கூறுகையையுடையவனென்னுதல். அழுக்கடைந்த வுடம்புடையவனென்றபடி. அழுக்கடைந்தவுடம்பை யெதுக்காகவிச்சிக்கிறுளென்ன (ரக்ஷயவர்க்கேத்யாதி) இவள் — நப்பின்னைப்பிராட்டி. இதுக்கு நியாமகம் - "ஆசாரநிர்ப்பந்தமில்லாதவிடைக்குலத்திலேபிறந்தவளாகையாலே" என்றவாக்யம். இவளாசைப்பட்டது பிராட்டியாசைப்பட்டாப்போலே யிருக்கிறதென்றுவிவக்ஷித்து, ததுக்தியைக்காட்டுகிறுர் (தீக்ஷிதமித்யாதி) "தீக்ஷி_தம்வ்ரு_தஸம்வஸம்வராஜி_நயா௱ம்ஸா, விழ। குரங்ஜஸ்ருங்கபாணிஞ்சபஶ்யந்தீஜாஹ்ஹூ" (தீக்ஷிதம்வ்ரதஸம்பந்நம்வராஜிநதரம்ஶுசிம்। குரங்கஶ்ருங்கபாணிஞ்சபஶ்யந்தீத்வாபஜாம்யஹம்) இத்யயோத்யாகாண்டே அபிஷேகார்த்தம் ப்ரயாநதம்ராமம்ப்ரதிஸீதா.

"தளிர்நிறம்" என்றது - தளிர்போன்றநிறமென்றுய், ஸ்நிக்தமான நிறத்தைச்சொல்லுகிறது. "அவன்விரும்பாதநிறம்" என்றதுக்குத்ருஷ்டாந்தம் (ராவணவதேத்யாதி) இவளைப்போலே இப்படிநிறத்தில் சொன்னுரில்லையேயென்றது-சாடு. இவளையென்றது-ஆழ்வாரானபிராட்டியை. நிறமென்று-முறையும், ரூபமும். முறையிலேயென்றுத்வர்யர்த்தம். (மற்றைப்பிராட்டிமாரென்றது) "நஹி மேஜீவிதே_நார்த்தஃ" (நஹிமேஜீவிதேநார்த்தஃ) இத்யாதியாலும் - நிறம்வேண்டாவென்னுத ஜநகராஜன்றிருமகள்தொடக்கமான பிராட்டிமாரென்றபடி. இப்பாட்டிலே யிவ்வர்த்தமருளிச்செய்தது-சாடுவுக்காக. "மாமை" என்று-மென்மையுமோரர்த்தமாகவருளிச்செய்கிறுர் (அங்குமணிமாமையித்யாதி) "மணி" என்று-அழகு. "மாமை" என்று-மார்த்தவம்.

கீழெடுத்தஶ்லோகத்துக்கு வ்யாக்யாநம்பண்ணுவதாக ப்ரதிகோபாதாநம் (தீக்ஷிதமித்யாதி) பிராட்டியைப்போலே "இவ்வடிவைக்காணவேணும்" என்றிவளாசைப்படாமைக்கு ஹேதுவேதென்ன (பிராட்டியித்யாதி) உறுப்புத்தோல்-க்ருஷ்ணாஜிநம். "வ்ரதத்தால்பூர்ணர்" என்றதுக்குபாவம் (ருஷியித்யர்தி) "வராஜி_நயா௱ம்" (வராஜிநதரம்) என்று-அஜிநத்துக்கு ஶ்ரைஷ்ட்யமேதென்ன (கூறையுடையையுமித்யாதி) கூறை-திருப்பீதாம்பரம். காற்கடைக்கொள்ள- உபேக்ஷிக்க. "ஶுசிம்" என்றதுக்குவாஸநை (ஒருஸ்த்ரீகளையுமித்யாதி) (ஏகவஸ்த்ரேதி) "ரம்யாணாம்விக்ரு_திரவிஶ்ரியம்_தநோதி" (ரம்யாணும்விக்ருதிரபிஶ்ரியந்தநோதி) என்கிறந்யாயத்தாலே "ஏகவஸ்த்ரு_தரோதந்வீ" (ஏகவஸ்த்ரதரோதந்வீ) என்றிருக்குமிருப்பிலுங்காட்டில் கையும் கலைக்கொம்புமாயிருக்கிறவிருப்பு போக்யமாயிருக்கை. குரங்கஶ்ருங்கம் - (கலைக்கொம்பு) வழிப்போக்கில் கண்ணெச்சில்வாராமல் மங்களாஶாஸநம்பண்ணுகிற ப்ரகரணத்திலே, திருவபிஷேகத்துக்கங்கமானவற்றை யாசைப்படுவானென்னென்ன (மேல்வருமித்யாதி) அநுபவிப்பேனென்னுதே, "பஶ்யந்தீ" என்றதுக்குவாஸநையை ரசோக்தியாகவருளிச்செய்கிறுர் (பகவத்பஜநமித்யாதி) த்ருஷ்டத்துக்கிறேயென்றது - சாடு. வாஸ்த்வார்த்தம் தர்ஶநம். ரஸம் த்ருஷ்டப்ரயோஜநம். தர்ஶநார்த்தமோ பகவத்பஜநமென்ன (சதேத்யாதி) "மேல்வரும்பலத்தை" இத்யாதிவாக்யத்தை, நடுவுள்ளதின்னதென்றுகாட்டாநின்றுகொண்டுவிவரிக்கிறுர் (வழிப்போக்கிலித்யாதி) 'ஆந்தராளிகபலார்த்தமாக மேல்வரும்பலத்தை ப்ரார்த்தித்தபேருண்டோவென்ன (சாவித்ரியித்

யாதி) அதாவது-சாவித்ரியென்பாளொரு பெண்பிள்ளையை மாதாபிதாக்களொருவனுக்கு "கொடுக்க" என்றுத்யோகிக்கிறவளவிலே, நாரதர்வந்து, "இவனுக்கு ஆயுஸ்ஸுக்குறைந்திருக்கும்" என்றுசொல்ல, அவர்களு மத்தைக்கேட்டிருக்க, அந்தசாவித்ரியானவள் "எனக்கவனேயாகவேணும், அவனுக்கென்னைக்கொடுங்கோள், அவனுயுஸ்ஸுக்கு நான்கடவேன்" என்றுசொல்ல, அத்தைக்கேட்டு அவர்களும் அவனுக்கவளை நிர்வார்த்துக்கொடுக்க, சிலநாள்சென்றவாறே இவனைக்கொண்டுபோக யமபடர்வந்து கொண்டுபோகிறவளவிலே, அவளுங்கூடப்போய் யமனுலகத்திலேசெல்ல, யமனும் தூதர்களைப்பார்த்து "இவளையேன்கூட்டிக்கொண்டுவந்திகோள்" என்றுவெறுத்து, அந்தசாவித்ரியைப்பார்த்து "உனக்கென்னவேணும்" என்ன, "பர்த்தாவேணும்" என்ன, "அவனை யொழிந்தத்தைக்கேள்" என்ன, "ஆகிலவனுக்கு நானநேகம்பிள்ளைகளைப் பெறவேணும்" என்று வேண்டிக்கொள்ள, அவனுமப்படியே அவளபிமதத்தைத் தலைக்கட்டினான்.

க்ரமேணுந்வய:............................................................*

## ஐந்தாம்பாட்டு.

தளிர்நிறத்தாற்குறைவில்லாத்தனிச்சிறையில்விளப்புற்ற
கிளிமொழியாள்காரணமாக்கிளரரக்கனகரெரித்த
களிமலர்த்துழாயலங்கற்கமழ்முடியன்கடன்ஞாலத்
தளியிக்கான்கவராதவறிவினுற்குறைவிலமே.

### ஆருயிரப்படி.

(தளிர்நிறத்தால்) அபரிமிதசௌந்தர்ய மஹோததியாய் கலபாஷிணியாயிருந்தபிராட்டி அசோகவநிகையிலே யெழுந்தருளியிருந்தமை திருவடிவிண்ணப்பம் செய்யக்கேட்டருளி, அப்போதே சம்ஶ்லேஷவிரோதியானராவணனை சபுத்ரஜநபாந்தவநகரமாக சராக்நியாலே தக்தமாக்கிப் பிராட்டியோடேகூட வெழுந்தருளியிருந்து லோகத்தைரக்ஷித்து, பின்னைத் திருமஞ்சநமாடியருளி நிரதிசயசுகந்த திவ்யமால்யாநுலேபநாலங்க்ருதனுய் திவ்யபூஷணபூஷிதனுயிருந்தவன் கவராதவறிவினுல்குறைவிலமென்கிருள்.............................................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஸ்ரீஜநகராஜன் திருமகளுக்காக, அஸஹ்யாபராதியான ராவணனை யழியச்செய்த சக்ரவர்த்திதிருமகன் விரும்பாதவறிவாலென்னகாரியமுண்டென்கிருள்.

தளிர்-தளிர்போலேதர்ஶநீயமாய்சுகுமாரமான. நிறத்தால்-நிறத்தால். குறைவில்லா-பரிபூர்ணையாய். தனி-ப்ரபாப்ரபாவான்களைப்பிரிக்குமாபோலே பிரிக்கப்பட்டுத்தனியே. சிறையில்-ராக்ஷஸீமத்யத்திலேநிருத்தையாய். விளப்புற்ற-லோகமடைய "ஒருத்திசிறையிருந்துரக்ஷிக்கும்படியே" என்றுகொண்டாடும்படி ப்ர

த்தையாய். "மது⁴ரமது⁴ராலாபா" (மதுராமதுராலாபா) என்னும்படி, கிளி-கிளிபோலேயினிய. மொழியாள்-மொழியையுடையளானபிராட்டி. காரணமா-காரணமாக. கிளர்-அநீதியாலேபெரியகிளர்த்தியையுடையனான. அரக்கன்-ராவணனுடைய. கிளர்-சம்ருத்தமான. நகர்-நகரத்தை. எரித்த-நெருப்புக்கிரையாக்கினவனாய். மீண்டுவந்துமுடிசூடி, களி-தேனையுடைத்தாய். மலர்-மலர்ந்த. துழாயலங்கல்-திருத்துழாய்மாலையாலே. கமழ்-பரிமளோத்தரமான. முடியன்-அபிஷேகத்தையுடையனாய். கடல்-கடல்சூழ்ந்த. ஞாலத்து-பூமியிலே. அளி-தண்ணளி. மிக்கான்-விஞ்சும்படியெழுந்தருளியிருந்தவன். கவராத-விரும்பாத. அறிவினால்-அறிவால். குறைவிலம்-ஒருகாரியமுடையோமல்லோம்.

களி-தேன். அலங்கல்-மாலை. அளி-தண்ணளி. உபகாரமாகவுமாம்........*

## ௬ - ஐந்தாம்பாட்டு.

பரமப்ரணயியாய் சர்வரக்ஷகனான தசரதாத்மஜன் விரும்பாதவறிவினாலென்ன ப்ரயோஜநமுண்டெனக் கென்கிறாள்.

(தளிர்நிறத்தால்குறைவில்லா) [ குர்வந்தீம்ப்ரப⁴யா தே³வீம் ஸர்வா விதிமிரா தி³ஶ: ] (குர்வந்தீம்ப்ரபயாதேவீம் ஸர்வாவிதிமிராதிஶ:) பிராட்டி பத்துமாசம் திருமஞ்சநம்பண்ணாமையாலேதிருமேனியில்புகர் கஞ்சுரிப்பட்டபடி, பத்துத்திக்கிலுமுண்டான வந்தகாரத்தைப்போக்குமளவாயிற்று. "சோகதமோபஹம்" (தனிச்சிறையில்) ப்ரபையையும் ப்ரபாவானையும்பிரித்துவைத்தாற்போலே யிருப்பதொன்றிறே ராக்ஷஸீமத்யத்தில் நிருத்தையாயிருந்தபடி. (விளப்புற்ற) "க்ருஶாமநஶநேந ச" (க்ருஶாமநஶநேநச) என்றாற்போலே, "தன்னைப்பேணாதேயிருந்தாள்" என்றுதிருவடியாலே பெருமாளுக்குவிண்ணப்பம் செய்யப்பட்டவளென்னுதல்; அன்றிக்கே, தேவஸ்த்ரீகள்காலில் விலங்கைவெட்டி விடுகைக்காக, தன்னைப்பேணாதே யங்கேபுக்குத் தன்காலிலே விலங்கைக்கோத்துக்கொண்டவளென்று நாட்டிலேப்ரசித்தையானவ ளென்னுதல். (கிளிமொழியாள்காரணமா) திருவடிவாயிலே ஒன்றுதங்கிய அவள்வார்த்தையைக்கேட்டு, அவ்வழியாலே "மது⁴ரமது⁴ராலாபா" (மதுராமதுராலாபா) என்றாரிறே அத்தைஸ்மரித்து; அப்படிப்பட்ட வார்த்தையை யுடையவள்ஹேதுவாக. (கிளரரக்கன்) தாயும் தமப்பனும் சேரவிருக்கப் பொருதபடியான கிளர்த்தியிறே, "உதீ³ர்ணஸ்ய ராவணஸ்ய" (உதீர்ணஸ்யராவணஸ்ய) என்கிறபடியே. (நகரெரித்த) பையல்குடியிருப்பையழித்து மூலையடியேவழிநடத்தின. ராவணனுடைய சம்ருத்தமான நகரத்தைதக்தமாக்கின. (களிமலரித்யாதி) களி - தேன். தேனையுடைத்தான மலரோடுகூடின திருத்துழாய்மாலைகமழாநின்றுள்ளதிருவபிஷேகத்தையுடையவன், அவன்றானிதரஸஜாதீயனாய்க்கொண்டவதரித்தால், அப்ராக்ருதமான பதார்த்தங்களு மதுக்கீடானவடிவைக் கொண்டுவந்து தோற்றுமித்தனையிறே; ஆகையாலே, அவன்கலம்பகம்

கொண்டுவளையம்வைத்தாலும் இவர்கள்சொல்லுவது திருத்துழாயையி ட்டிறே. அசாதாரணமானவற்றையிட்டிறே கவிபாடுவது; பாண்டியர்கள் மற்றையார்கருமுகைமாலையைக்கொண்டு வளையம்வைத்தாலும், அவர்க ளுக்கஸாதாரணமானவேம்பு மற்றையவற்றையிட்டிறே கவிபாடுவது. (க டல்ஞாலத்தளிமிக்கான்) சம்சாரத்திலே தண்ணளிமிக்கவஞ்யிற்று. சம் சாரிகள் படுகிறக்லேசத்தையநுசந்தித்து, "இத்தைப்போக்கவேணும்" என்று திருவுள்ளமிங்கேவேருன்றினபடி; பிராட்டியைப்பிரிப்பது, இளை யபெருமாளைய்கற்றுவதாய், அநந்தரம் "அவதாரத்துக்குக் காலமாயிற் று" என்று தேவகார்யத்திலே யொருப்படுவித்துக் கிளப்பவேண்டும்ப டியிறே. (கவராதவித்யாதி) அப்படிப்பட்டவன்விரும்பாதவழியினல்கா ர்யமுடையோமல்லோம். பிராட்டியுடைய இரண்டாம்பிரிவுக் கடியான வநவாஸஜ்ஞாநம்போலேயிருக்கிற விவ்வறிவாலென்ன ப்ரயோஜநமுண் டு. பிரிவோடேசந்திக்கும்படியாயிறே ஷதிருப்பது. .......... .........*

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு (தளிர்நிறத்தாலித்யாதி) "கிளிமொழியாள் காரணமா- நகொரித்த" என்றத்தைப்பற்ற (பரமப்ரணயியாயென்றது) "கடல்ஞாலத்தளி மிக்கான்" என்றத்தைப்பற்ற (சர்வரக்ஷகனனவென்றது)

விஶ்லேஷதசையிலே "தளிர்நிறம்" என்கிறதென்னென்ன (குர்வந்திமித் யாதி) "ப-ூணு௨வநூாந நாம்ஸ-ஹு-ூம்வாா-வ்யூத்தவயொயாாழ் । க-வ-ுத்தீம்வ-ு ஹயாெஜவீம்ஸ்வ-ாவிதிமிாாழிஶஃ" (பூர்ணசந்த்ராநநாம்ஸு ப்ரூம்சாருவ்ருத்தபயோதராம் । குர்வந்திம்ப்ரபயாதேவீம் ஸர்வாவிதிமிராதிஶஃ) இதி சுந்தரகாண்டே பஞ்சதஶே ஹநுமாந். இதுக்கர்த்தம் (பிராட்டியித்யாதி) அ கஞ்சுரிப்பட்டபடி - குறைவுபட்டபடி. அந்தகாரத்தைப்போக்குமென்றதுக்கு ப்ர மாணம் (சோகதமோபஹமென்றது) இங்கு "தமோபஹம்" என்கிறமாத்ரமே அ பேக்ஷிதம். "நவொாவவெஹெவ-ுவெ-ுஷாஉூணநிெஉ-ாக்ஷஸாயநம் । ஸ-தாஹியாநம்ஸஜெ்ாதிஸ்ஶஊ்ஶ்லாகதெ௦ாவஹழ்" (நசோபலேபே பூர்வேஷாம்ருணநிர்மோக்ஷஸாதநம் । ஸுதாபிதாநம்ஸஜ்யோதிஸ்ஸத்யஶ்ஶோக தமோபஹம்) இதி ரகுவம்ஶே தஶமேத்விதீயஶ்லோகஃ. ராக்ஷஸிகள் நடுவேயிரு க்கச்செய்தே தனியாவதென்னென்ன (ப்ரபையையுமித்யாதி) இவளுக்கவனோட் டைப்பிரிவொழிய வேறுதனியில்லையென்றபடி. முந்தினவர்த்தத்துக்கு, விளப்புற் ற-சொல்லப்பட்ட. விளப்பு-சொல்லுகை. த்விதியார்த்தத்துக்கு, விளப்புற்ற - ப்ர ஸித்தியையடைந்த. ப்ரசித்தையென்றபடி. இந்தவர்த்தத்துக்கு - "ஸுநூரீா வ-நாயஸ்" (ஸுந்தரீரகுநாதஸ்ய) இத்யாதியிலேநோக்கு. "அஶ்ரூ-பூ- ண-௨ஃ-வீம்தீநாம்க்ருஶாஉநஶெநநவ । ஶாகயுாநவாாம்தீநாம்நிதூ ஜஃவிவவாாயணாம்" (அஶ்ருபூர்ணமுகீந்தீநாம்க்ருஶாமநஶநேநச । ஶோகத் யாநபராம்தீநாம்நித்யதுஃகபராயணம்) இதிசுந்தரகாண்டே. கிளிமொழியாள்-கி ளிபோலே யினியபேச்சையுடையவள். வார்த்தை மதுரமாயிருக்குமோவென்ன

(திருவடிவாயிலேயித்யாதி) "ஏயஹாஏயஹாவாகிஸாஹஸஹோசிநீ। ஜிஹ்வி நாவராரோஹாஹ நஐஜ நுயயஜ" (மதுராமதுராலாபாகிமாஹமம பாமிநீ|மத்விஹீநாவராரோஹாஹநூமங்கதயஸ்வமே) இதிசூடாமணி ப்ரதாநாநந்தரோராம:. "கூஜாந்" (க்ரூஜாம்) இத்யாதிவாக்யத்தில், என்ருற்போலேயென்ற பதம்-ஆதிஶப்தஸமாநார்த்தகம். ஒன்றுதங்கிவரும்போதும் "ஏயஹாஏயஹா வாவா" (மதுராமதுராலாபா) என்றிருக்க, சாக்ஷாத்சொல்லும்போது போக்ய தைசொல்லவேண்டாவிறே; ஆகையாலே "கிளிமொழியாள்" என்றருளிச்செய்கிருரென்றபடி. அத்தைஸ்மரித்து - பிராட்டிபேச்சினினிமையைஸ்மரித்து. திருவடிவாயிலே யித்யாதிவாக்யம் - "விளப்புற்றகிளிமொழியாள்" என்கிறஸமபிவ்யாஹாரதாத்பர்யம்.

"கிளர்" என்றத்தை * அரக்கனுக்குவிசேஷணமாக்கியர்த்தம் (தாயுமித்யாதி) தாயும்தமப்பனுமென்றது - "ஜுஂமாதாஸவலோகாநாஂதேவதேவோஹரி:பிதா" (த்வம்மாதாஸர்வலோகாநாம்தேவதேவோஹரி:பிதா) என்றத்தைப்பற்ற. அப்படி உதீர்ணனுயிருக்குமோவென்ன (உதீர்ணஸ்யேத்யாதி) "ஸஹிெதவெரீணஸுராவணஸுவயாயி॥ஹி:।காஜிதாஜநஷெஜொகெஜஜெவிஷஹநாதந:" (ஸஹிதேவைருதீர்ணஸ்யராவணஸ்ய வதார்த்தி:। அர்த்திதோமாநுஷேலோகேஜஜ்ஞேவிஷ்ணுஸ்ஸநாதந:) இத்யயோத்யாகாண்டே ஆதௌ. பையல்-க்ஷுத்ரன். மூலையடியேவழிநடத்துகையாவது-ஊர்பாழ்போனல் தடையில்லாதே மூலைக்குமூலையாகச் சரிப்போனபடிநடக்கலாம்படிபண்ணுகை. "கிளர்" என்றத்தை * நகருக்குவிசேஷணமாக்கியர்த்தம் (ராவணனுடையவித்யாதி) "கிளர்" என்றது - ராவணவிசேஷணமானபோது, கர்வபரம்; நகரவிசேஷணமானபோது, ஸம்ருத்திபரம்.

சக்ரவர்த்திதிருமகனுக்குத் திருத்துழாய்மாலையுண்டோவென்ன (அவன்ருனித்யாதி) கலம்பகம் - நாநாஜாதீயபுஷ்பசமூஹம். பரிஹாராந்தரம் (அசாதாரணமானவித்யாதி) த்ருஷ்டாந்தமுகேந விவரணம் (பாண்டியர்களித்யாதி) மற்றையாரென்றது-சேரன்சோழன் முதலானுரை. மற்றையவற்றை யிட்டிறேயென்றது-பனைத்தார், ஆத்தித்தார் முதலானவற்றை நினைத்து.

தண்ணளிமிக்கதினுரப்பை யருளிச்செய்கிருர் (சம்சாரிகளித்யாதி) அளிமிக்கான்-க்ருபைமிக்கிருக்கிறவன். அளிக்கைக்கவதி பரமபதமென்றுகருத்து. திருவுள்ளமிங்கே வேருன்றினபடியென்றது - க்ருபாதிசயத்தாலே திருவுள்ளமிங்கேயூற்றிருந்த ப்ரகாரமென்றபடி. அந்தவூற்றத்தை யருளிச்செய்கிருர் (பிராட்டியையித்யாதி) அதாவது-தேவாதிகள் இவரங்கே யெழுந்தருளுகைக்காக (பிராட்டியைப்பிரிப்பது, இளையபெருமாளையகற்றுவதாம்) என்றுகூட்டிக்கொள்வது (கிளப்பவேண்டும்படியிறே-வேருன்றினபடி) என்றந்வயம்.

விரும்புகை - ஆதரித்துமேல்விழுகை. ஜ்ஞாநமுத்தேஶ்ய மன்ருேவென்ன (பிராட்டியுடையவித்யாதி) ப்ரயோஜநமில்லையோவென்ன (பிரிவோடேயித்யாதி)

தளிர்போலே தர்ஶநீயமாய் சுகுமாரமானநிறத்தால் பரிபூர்ணையா யென்றபடி. க்ரமேணுர்வய:..........................................................*

# ஆறாம் பாட்டு.

அறிவினாற்குறைவில்லாவகன்ஞாலத்தவரறிய
நெறியெல்லாமெடுத்துரைத்தநிறைஞானத்தொருமூர்த்தி
குறியமாணுருவாகிக்கொடுங்கோளானிலங்கொண்ட
கிறியம்மான்கவராதகிளரொளியாற்குறைவிலமே.

## ஆறாயிரப்படி.

(அறிவினால்) ஸ்வவிஷயஜிஜ்ஞாஸையுங்கூட்டில்லாத வாத்மாக்களெல்லாரு மறியும்படி ஸ்வப்ராப்த்யுபாயங்க ளெல்லாவற்றையும் தத்ததிகாரானுகுணமாக வெடுத்துரைத்த நிறைஞானத்தொருமூர்த்தியாய், இப்படியுபாயாநுஷ்டாநத்தாலேவரும் விளம்பம்பொறுக்கமாட்டாமை ப்ரதிகூலாநுகூலவிபாகமன்றியே சர்வாத்மாக்களுக்கும் "காண்மின்களுலகீர்" என்று தன்னைக்காட்டிக்கொடுத்தருளினவன் கவராதகிளரொளியால் குறைவிலமென்கிறாள் ..................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், உபதேசத்தாலும் அர்த்தித்வத்தாலும் தனக்கேயாக வென்னைக்கொள்ளும் சர்வஜ்ஞன் விரும்பாதவொளியாலொரு காரியமில்லையென்கிறாள்.

அறிவினால்-ஜ்ஞாநத்திலபேக்ஷையில்லாமையாலே. குறைவில்லா - குறைவுபட்டிராத. அகல்-விஸ்தீர்ணமான. ஞாலத்தவர்-பூமியிலுள்ளார். அறிய-அறியும்படி. சர்வலோகமுந்திரண்டபடைக்குநடுவே, நெறியெல்லாம்-கர்மயோகம்முதலாகப்ரபத்திபர்யந்தமான சகலோபாயங்களையும். எடுத்து - வ்யக்தமாம்படிதானேயெடுத்து. உரைத்த-அருளிச்செய்த. நிறைஞானம்-பரிபூர்ணஜ்ஞாநவானை. ஒருமூர்த்தி-அத்விதீயஸ்வபாவனானவனாய். குறிய-மஹாமேருவைமஞ்சாடியாக்கினாற்போலே வாமநத்வத்தாலே ஆகர்ஷகமாய். மாணுருவாகி - அர்த்தித்வமே நிரூபகமென்னலாம்படி ப்ரஹ்மசாரிவேஷத்தையுடையனாய். கொடு - அழகைக்காட்டிமாறாதபடிபண்ணி, சிற்றடியைக்காட்டி யிசைவித்து, இப்படிகொடிதாகவஞ்சித்த. கோளால்-பரிக்ரஹத்தாலே. நிலம்-பூமியை. கொண்ட - தன்னதாக்கிக்கொண்ட. கிறி-நல்விரகையுடைய. அம்மான்-சர்வேஶ்வரன். கவராத-விரும்பாத. கிளர்-கிளர்ந்த. ஒளியால்-ஒளியால். குறைவிலம்-என்னப்ரயோஜநமுண்டு.

ஒளி-லாவண்யகுணமான ஸமுதாயசோபை ..................................*

## ஈடு - ஆறாம்பாட்டு.

அறிவில்லாதார்க்கு ஸ்வப்ராப்த்யுபாயங்களை யுபதேசித்து, அறிவுபிறக்கைக்கு யோக்யதையில்லாதாரை வடிவழகாலே தனக்காக்கிக்கொள்ளுமவன்விரும்பாத லாவண்யத்தாலென்ன கார்யமுண்டென்கிறாள்.

(அறிவினால்குறைவில்லா) நாட்டார் அந்நபாநாதிகளெல்லாவற்றாலும் கார்யமுடையராயிருப்பார்களிறே; அறிவொன்றிலுமாயிற்றுக்குறைவுபடவறியாதது. அறிவினால்குறைவுபடவறியாத. அறிவால் கார்ய

மின்றிக்கே யிருப்பாராயிற்று. (அகல்ஞாலத்தவர்) பரப்பையுடைத்தான பூமியில், அறிவில் குறைவுபடவறிவாரொருவருமில்லையாயிற்று. (அவரறிய) கல்லைத்தொளைத்து நீரைநிறுத்தினாற்போலே யிவர்கள்நெஞ்சிலேபடும்படி. (நெறியெல்லாமெடுத்துரைத்த) சேதநபேதத்தோபாதிபோருமிறே உபாயபேதமும். கர்மயோகம்முதலாக ப்ரபத்திபர்யந்தமாக சகலோபாயங்களையும் வ்யக்தமாகவுபதேசித்தபடி. கர்மஜ்ஞாநபக்திகள், அவதாரரஹஸ்யஜ்ஞாநம், புருஷோத்தமவித்யை, ஸ்வஸ்வரூபயாதாத்ம்யம், விரோதிநிவ்ருத்திக்குப்ரபத்தி, ஆத்மப்ராப்திக்குப்ரபத்தி, பகவல்லாபத்துக்குப்ரபத்தி, இவற்றையடங்க விஶததமமாக வருளிச்செய்தவன். கர்மயோகத்தையுபதேசிக்க, அவன் "இந்த்ரியஜயம்பண்ணுகையரிது" என்ன, "ஆகிலென்பக்கலிலேநெஞ்சைவை" என்று கர்மத்தை யநுஷ்டித்தானை ப்ரசம்ஸியா, அந்தப்ரசங்கத்தாலே யவதாரரஹஸ்யத்தையுபதேசியா, அநந்தரம் ஜ்ஞாநயோகத்தையுபதேசித்து, "ஜ்ஞாநவைஶத்யத்துக்குறுப்பாக வென்பக்கலிலேநெஞ்சைவை" என்று, அநந்தரம்பக்தியோகத்தையுபதேசித்து, அங்கு "விரோதிபாபக்ஷயத்துக்கும் பக்திவிவ்ருத்திக்குமாகவென்பக்கலிலேநெஞ்சைவை" என்று, அநந்தரம் "𑌯𑌤𑌃𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌃𑌪𑍍𑌰𑌸𑍃𑌤𑌾𑌪𑍁𑌰𑌾𑌣𑍀" (யதஃப்ரவ்ருத்திஃப்ரஸ்ருதாபுராணீ) "𑌤𑌮𑍇𑌵𑌶𑌰𑌣𑌂𑌗𑌚𑍍𑌛" (தமேவஶரணம்கச்ச) "𑌮𑌾𑌮𑍇𑌵𑌯𑍇𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑍇" (மாமேவயேப்ரபத்யந்தே) என்றும்-அவற்றுக்குறுப்பாக ப்ரபத்தியைவிதியா, அவ்வழியாலே ஸ்வரூபஜ்ஞாநத்தைப்பிறப்பித்து, "𑌭𑍂𑌮𑌿𑌰𑌾𑌪𑍋𑌨𑌲𑍋𑌵𑌾𑌯𑍁𑌃" (பூமிராபோநலோவாயுஃ) என்றுதொடங்கி "𑌜𑍀𑌵𑌭𑍂𑌤𑌾𑌮𑍍" (ஜீவபூதாம்) என்கிற-சேதநாசேதநங்களெனக்குசரீரமென்று, அவ்வழியாலே, தன்பேற்றுக்குத் தனக்குசாதநாநுஷ்டாநம்பண்ணுகையில் யோக்யதையின்றிக்கே யிருக்கிறபடியைக்காட்டி, "இவைதான்செய்து தலைக்கட்டப்போகாது" என்றுசொல்லும்படி இதினருமையை யவன்நெஞ்சிற்படுத்தி, அவன்தானறிந்து கேட்டவற்றுக்கு பரிஹாரம்பண்ணி, அவனறியாதே கேட்கமாட்டாதவற்றையும் தானேயறிவித்து, ப்ரபத்திபர்யந்தமாக வுபதேசித்தபடியைச் சொல்லுகிறது. (நிறைஞானத்தொருமூர்த்தி) "ஒருவன்சொன்னான்" என்னுங்காட்டிலது ப்ரமாணமோ, ஆப்தமாக வேண்டாவோவென்னில்; இத்தலையிலஜ்ஞாநமும்கிஞ்சித்கரமாம்படியான ஜ்ஞாநபூர்த்தியை யுடையவனாவது, ப்ரமாணமாய் எல்லார்க்கும் வெளிச்சிறப்பைப் பண்ணிக்கொடுப்பதான வேதத்தினுடைய நித்யத்வாபௌருஷேயத்வங்கள் ஸ்வாதீநமாம்படி யவற்றைஸ்மரித்துச் சொல்லுமவனாயிற்று வேதார்த்தத்தை விசதீகரித்தானாயிற்று. பரிபூர்ணஜ்ஞாநத்தை யுடைத்தானவத்விதீயமான ஸ்வரூபத்தையுடையவன். (குறியவித்யாதி) அறிவிக்கக்கேளாதாரைவடுக விடுநகமிட்டு வடிவழகாலே தனக்காக்கிக் கொள்ளுமவனாயிற்று. (குறிய) கோடியைக் காணியாக்கிக்

கொண்டாற்போலே, வளர்ந்தபோதையிற்காட்டிலு மாகர்ஷகமாயிருந்தபடி. (மாணுருவாகி) பிறந்தபோதே யிரப்பிலேயதிகரித்து, அதுவே வாசிதமாயிருந்தபடியாலே, "பிறப்பதற்கு முன்புமெல்லா மிதுவேயோ யாத்ரை" என்னும்படிக்கிடாகவாயிற்று, "உண்டு" என்றிட்டபோதோடு, "இல்லை" என்றுசொல்லிக் கதவடைத்தபோதோடுவாசியற முகமலர்ந்துபோம்படிக்கிடாக வாயிற்றிரப்பிலே தகணேறினபடி. (கொடுங்கோளால்) வெட்டியகோளாலேயென்றபடி அதாவது-வடிவழகைக்காட்டியவனை வாய்மாளப்பண்ணினபடி, அன்றிக்கே, கோடு என்றத்தைக்குறுக்கி, அத்தை "கொடு" என்றதாய், அதாவது-விலங்குகையாய், செவ்வைக்கேட்டைநினைத்து; மூன்றடியையபேக்ஷித்து இரண்டடியாலேயளப்பது, சிறுகாலைக்காட்டிப் பெரியகாலாலே யளப்பதாகக்கொண்டு அவனை வஞ்சித்தபடியைச் சொல்லிற்றுதல். துஷ்டசாதநப்ரயோகம் பண்ணினவர்களுக்கு அதுக்கிடாக வுத்தரம்சொல்லுவரைப்போலே, அவன் செவ்வைக்கேட்டுக் கிடாகத்தானும் செவ்வைக்கேடனாய்க்கொண்டபடி. (கிறியம்மான்) அவன்தரும் விரகறிந்துவாங்கவல்ல பெருவிரகனான சர்வேஶ்வரன். "பெருங்கிறியான்" என்னக்கடவதிறே. (கவராதவித்யாதி) செவ்வைகெடுவாகிலும் தன்னுடைமையைத் தனக்காக்கிக் கொள்ளுமவன், முன்பேயிசைந்துதன்னை "பெறவேணும்" என்றிருக்கிற வெனக்குவந்து முகங்காட்டித் தனக்காக்கிக்கொள்ளாதபின்பு எனக்கித்தால் கார்யமுண்டோ. கிளரொளி-மிக்கவொளி. சமுதாயசோபை.*

## ஜீயர் அரும்பதம்.

ஆரும்பாட்டு (அறிவினலித்யாதி) பாட்டெல்லாம்கடாக்ஷித்து, கீதோபநிஷதாசார்யனையும் வாமநனையும் சொல்லுகிறதுக்கு ப்ரயோஜநம் சொல்லுகிறவழியாலே யவதாரிகை யருளிச்செய்கிறார் (அறிவில்லாதார்க்கித்யாதி) வடிவழகாலே யென்றதுக்கு - * குறியமாணுருவிலே தாத்பர்யம்.

"அகல்ஞாலத்தவரறிய" என்றதுக்குச்சேர, அறிவினல் ப்ரயோஜநமில்லாதவென்று அஜ்ஞாநபரமாக வருளிச்செய்கிறார் (நாட்டாரித்யாதி) அந்நபாநாதிகளெல்லாவற்றாலும் கார்யமுடையரா யிருக்கையாவது-அத்தால் ப்ரயோஜநமுடையரா யிருப்பரென்றபடி. இவ்வாக்யாநந்தரம் - (அறிவால்கார்யமின்றிக்கே யிருப்பாராயிற்று) என்றவாக்யமநுசந்திப்பது. ஆக, "அறிவினல்குறைவில்லா" என்கிறதுக்குச் சொல்லிற்றாயிற்ற வர்த்தமேதென்ன; "பகவத்விஷயஜ்ஞாநம் நமக்கின்றிக்கேபோயிற்றே" என்றுகுறைவுபட வறியார்களென்கிறவர்த்தம் சொல்லிற்றாயிற்றென்கிறார் (அறிவொன்றிலு மித்யாதிவாக்யத்வயத்தாலே) "அகல்ஞாலத்தவர்" என்றதுக்குவாசநை (பரப்பையித்யாதி) அவர்கள் மூடராகையாலே அறிகைதுஶ்ஶகம், ஆகையாலே அதுக்குபயுக்தமாகபாவம் (கல்லேயித்யாதி)

பக்திப்ரபத்திகளிரண்டன்றோ வேதாந்தசித்தமான வுபாயங்கள், "நெறியெல்லாம்" என்கிறதென்னென்ன (சேதநேத்யாதி) அதாவது-ஆத்மாக்களை

நேகாரகையாலே அந்தந்தசேதநர்க்கு கர்மாநுகுணமாக ருசிபேதங்களுமுண்டி றே, அந்தருச்யநுகுணமாகவென்றபடி. "எடுத்து" என்கையாலே - "நிதியெ டுத்து" என்னுமாபோலே, வேதாந்தகுஹ்யத்தை ப்ரகாசிப்பித்தானென்று தோ ற்றுகிறது. "நெறியெல்லாம்" என்றவாக்யத்துக்கு (கர்மயோகம்முதலாகவெ ன்றுதொடங்கி, வ்யக்தமாக வுபதேசித்தபடி யென்னுமளவும்) சங்க்ரஹம். (கர் மஜ்ஞாநபக்திகளென்றுதொடங்கி, விசததமமாக வருளிச்செய்தவ னென்னுமளவு ம்) அத்தைப்பற்றவிஸ்தரம். (கர்மயோகத்தை புபதேசிக்கவென்றுதொடங்கி) மிகவும்விஸ்தரம். "யொமஸ்த்மகுருகஃமாணி ஸஂமஙு்க்குாயயநஜய" (யோகஸ்த்தகுருகர்மாணிஸங்கந்த்யக்த்வாதநஞ்ஜய) இத்யாதியாலே-கர்மயோ கத்தையும், "ஸவ்வஂகஃமாவிலஂவாய ஜாநெவஷிஸமாவுலூதெ" (ஸர்வம்கர்மாகிலம்பார்த்தஜ்ஞாநேபரிஸமாப்யதே) இத்யாதியாலே-ஜ்ஞாநயோ கத்தையம், "ஹக்த்ாக்கநநுயாலஸ்க்வஃ" (பக்த்யாத்வநந்யயாலப்ய:) இத் யாதியாலே-பக்தியோகத்தையும், "ஜநுகஃமவெமஷிவூழ" (ஜந்மகர்மசமே திவ்யம்) இத்யாதியாலே-அவதார ரஹஸ்யத்தையும், "ஹாவிமௌவுஷௌ லொகெ" (த்வாவிமௌபுருஷௌலோகே) என்றுதொடங்கி, "வுயிதஃ வுஷொத்தமஃ" (ப்ரதித:புருஷோத்தம:) என்னுமளவாக-புருஷோத்தம வித்யையையும், "ஹூமிராவொநலொவாயுஃ" (பூமிராபோநலோவாயு:) இத்யாதியாலே-ஸ்வஸ்வரூப யாதாத்ம்யத்தையும், "தெஹவீஹெஷாமுண மயீ" (தைவீஹ்யேஷாகுணமயீ) இத்யாதியாலே-விரோதிநிவ்ருத்திக்கு ப்ரபத் தியையும், "ஜராமரணமொக்ஷாய" (ஜராமரணமோக்ஷாய) இத்யாதியாலே- ஆத்மப்ராப்திக்கு ப்ரபத்தியையும், சரமஶ்லோகத்தாலே - பகவல்லாபத்துக்கு ப்ரபத்தியையு முபதேசித்தானென்றபடி. விரோதிநிவ்ருத்திக்கென்றது-உபாயோ த்பத்திவிரோதிநிவ்ருத்திக்கென்றபடி. கர்மயோகத்தையுபதேசிக்கவென்றது-"தஸ்மாதஸக்தஸ்ஸததஂகாயஂகஃஸமாசர" (தஸ்மாதஸக்தஸ்ஸததம்கார்யம்கர் மஸமாசர) இத்யாதியைப்பற்ற. இந்த்ரியஜயம்பண்ணுகை யரிதென்னவென்றது- "சஞ்சலஂஹிமநஃ" (சஞ்சலம்ஹிமந:) இத்யாதியைப்பற்ற. என்பக்கலிலே நெஞ்சைவையென்றது - "தாநிஸவ்வாணிஸஂயம்யயுக்தஆஸீதமத்பரஃ। வஶெஹியஸ்யெந்த்ரியாணிதஸ்யப்ரஜ்ஞாப்ரதிஷ்டிதா" (தாநிஸர்வாணிஸம் யம்யயுக்தஆஸீதமத்பர:। வஶேஹியஸ்யேந்த்ரியாணிதஸ்ய ப்ராஜ்ஞாப்ரதிஷ்டி தா) என்றத்தைப்பற்ற. கர்மத்தையநுஷ்டித்தாரை ப்ரசங்கியாவென்றது - "கஃமணைவஹிஸஂஸிஜிமாஸ்திதாஜநகாதயஃ" (கர்மணைவஹிஸம்ஸித்தி மாஸ்த்திதாஜநகாதய:) இத்யாதியைப்பற்ற. ப்ரசங்கியா-ப்ரசங்கித்து. அந்தப்ர சங்கத்தாலேயென்றது - கர்மயோகப்ரசங்கா நந்தரமென்றபடி. அதாவது - "இமஂவிவஸ்வதெயொமஂ ப்ரொக்தவாநஹமவ்யயஂ। விவஸ்வாநநவெ ப்ராஹ மநுரிக்ஷ்வாகவெ஬்ரவீத்॥ஏவஂவரஂவராப்ராப்தமிமஂராஜஷயொவிதுஃ। ஸகாலெநெஹமஹதா யொமொநஷ்டஃவரந்தவ॥ஸஎவாயஂமயாதெ{ஜ}ஹ்ய யொமஃவ்ரொக்தஃவுராதநஃ। ஹக்தொஸிமெஸவாசெதி ரஹஸ்யஂஹ்யெதமுத்தமஂ॥" (இமம்விவஸ்வதேயோகம் ப்ரோக்தவாநஹ மவ்யயம்। விவஸ்வாமநவேப்ராஹ மநுரிக்ஷ்வாகவேப்ரவீத்॥ஏவம்பரம்பராப்ராப் தமிமம்ராஜர்ஷயோவிது:।ஸகாலேநேஹமஹதா யோகோநஷ்ட:பரந்தப॥அர்ஜு

நஉவாச॥ அவரம்பவதோஜந்ம பரம்ஜந்மவிவஸ்வத: । கதமேதத்விஜாநீயாம் த்வமாதௌப்ரோக்தவாநிதி ) என்றுகேட்க, “ [illegible] ” (பஹூநிமேவ்யதீதாநி ஜந்மாநிதவசார்ஜுந । தாந்யஹம்வேதஸர்வாணி நத்வம்வேத்தபரந்தப ) இத்யாதியாலே-இப்படிப்ராசங்கிகமாக வவதாரரஹஸ்யத்தை யுபதேசித்தானென்றபடி. ஜ்ஞாநயோகத்தை யுபதேசித்தென்றது - “ [illegible] ” ( ஸர்வம்கர்மாகிலம்பார்த்தஜ்ஞாநே பரிஸமாப்யதே ) இத்யாதியைப்பற்ற. ஜ்ஞாநவைசத்யத்துக் குறுப்பாக வென்பக்கலிலே நெஞ்சைவையென்றது - “ [illegible] ” ( மய்யேவமநஆதத்ஸ்வமயிபுத்திம்நிவேஶய । நிவஸிஷ்யஸிமய்யேவ அதஊர்த்வம்நஸம்ஶய ) என்றத்தைப்பற்ற. அநந்தரம் பக்தியோகத்தையென்றது - “ [illegible] ” ( பக்த்யாத்வநந்யயாஶக்ய: ) இத்யாதியைப்பற்ற. அந்தவிரோதி பாபக்ஷயத்துக்கும் பக்திவிவ்ருத்திக்குமாக வென்பக்கலிலே நெஞ்சைவையென்றது - “ [illegible] ” ( மச்சித்தஸ்ஸததம்பவ । மச்சித்தஸ்ஸர்வதுர்க்காணிமத்ப்ரஸாதாத்தரிஷ்யஸி ) என்றத்தைப்பற்ற. அங்கப்ரபத்திக்கடைவே ப்ரமாணத்ரயம் ( யத:ப்ரவ்ருத்திரித்யாதி ) ப்ரவ்ருத்தி:-ஸ்ருஷ்டி:. அவற்றுக்குறுப்பாக-அந்தவுபாயாந்தரங்களுக்கங்கமாக. விதியா-விதித்து. அவ்வழியாலே ஸ்வரூபஜ்ஞாநத்தைப்பிறப்பித்தென்றது - “ [illegible] ” ( பூமிராபோநலோவாயு: ) இத்யாதியைப்பற்ற. இந்த ஶ்லோகத்தில், மந: என்றது-ப்ராக்ருதி, புத்தியென்றது-மஹாந். செய்துதலைக்கட்டப்போகாதென்றது - “ [illegible] ” ( ஜ்யாயஸீசேத்கர்மணஸ்தேமதாபுத்திர்ஜநார்த்தந । தத்கிம்கர்மணிகோரேமாம்நியோஜயஸிகேஶவ ) என்றத்தைப்பற்ற. தானறிந்துகேட்ட வற்றுக்கென்றது - “ [illegible] ” (கச்சிந்நோபயவிப்ரஷ்டஶ்சிந்நாப்ரமிவநஶ்யதி) இத்யாதியைப்பற்ற. பரிஹாரம்பண்ணியென்றது- “ [illegible] ” ( நஹிகல்யாணக்ருத்கஶ்சித்துர்க்கதிம்தாதகச்சதி-ஶுசீநாம்ஸ்ரீமதாம்கேஹே யோகப்ரஷ்டோபிஜாயதே । அதவாயோகிநாமேவ குலேமஹதிதீமதாம் ) என்றத்தைப்பற்ற. அவனறியாதே கேட்கமாட்டாதவற்றையும் தானேயறிவித்தென்றது - “ [illegible] ” ( ஸர்வகுஹ்யதமம்பூயஶ்ஶ்ருணுமேபரமம்வச: । இஷ்டோஸிமேத்ருடமதி ஸ்ததோவக்ஷ்யாமிதேஹிதம் ) என்றத்தைப்பற்ற. உபாயாந்தரங்களை யுபதேசிக்கிறவிடத்திலே ஸ்வஸ்வரூபயாதாத்ம்யத்தை யுபதேசிக்கிறது - “ பாதந்த்ரனுனவெனக்குப் பிரியநின்று சாதநாநுஷ்ட்டாநம்பண்ண ப்ராப்தியில்லை ” என்று அவற்றிலே யிவனுக்குசோகம்பிறக்கைக் குறுப்பாகவென்றுகருத்து.

அஜ்ஞாநமுமகிஞ்சித்கரமாம்படிஎன்றது - இவனுடைய வஜ்ஞாநத்தாலே நாசம்வாராதபடியென்றபடி. நித்யமா யபௌருஷேயமானவேதமூலமானலன்ரே ப்ரமாணமாவது, ஜ்ஞாநபூர்த்திமாத்ரம்போருமோவென்ன ( ப்ரமாணமாயித்யாதி ) வெளிச்சிறப்பு - வைஶத்யம். இதையும்வேதார்த்தமென்கிருர் ( வேதார்த்தத்தையித்யாதி ) “ எடுத்துரைத்த ” என்றதுக்குபாவமாதல். ஶப்தார்த்தம் ( பரிபூர்ணேத்யாதி )

கீழ்ப்பதத்தோடேகூட்டி யிதுக்குசங்கதி ( அறிவிக்கவித்யாதி ) வடுகவிடுநகம் - வடுகன்கட்டும்கிட்டிக்கோல். நிலங்கொண்டநெடியவுருவைச்சொல்லவேண்டியிருக்க, இந்தவுருவைச்சொன்னதுக்கு ஹேது ( கோடியையித்யாதி ) (போலே) என்றவநந்தரம், இருக்கிறதென்றுகூட்டுவது. வளர்ந்தபோதையிற்காட்டிலுமாகர்ஷகமென்றது - பெரியதிருவடிவி லநுபாவ்யமான ஸௌந்தர்யங்களையெல்லாம் சிறியவடிவிலே யநுபவிக்கலாயிருக்கையாலே ஆகர்ஷகமாயிருக்குமென்றபடி. “ ஆகி ” என்றதுக்குபாவம் (பிறந்தபோதேயித்யாதி ) இதுவே - இரப்பே. யாத்ரை - ஜீவநஸாதநம். ( ஈடாகவாயிற்று ) என்றதுக்கு - ( தகணேறினபடி ) என்றத்தோடேயந்வயம். தகண் - தழும்பு.

“கொடுங்கோளால்” என்றதுக்கர்த்தத்வயம். கொடுவென்று - வெட்டிமையாய், கோளென்று - ஸ்வீகரிக்கையாய் பலாத்காரத்தாலேக்ரஹிக்கையென்று முந்தினவர்த்தம். இத்தையருளிச்செய்கிருர் (வெட்டியவித்யாதி) இரண்டாமர்த்தம் ( அன்றிக்கேகோடித்யாதி ) அதாவது - கோடு என்றத்தைக்குறுக்கி, “கொடு” என்றதாய், அதாவது - விலங்குகையாய், அது - செவ்வைக்கேடாய், அதாவது - வஞ்சநமாய்; கோளென்று - கொள்கை, அதாவது - ஸ்வீகரிக்கையாய், வஞ்சநப்ரதிக்ரஹத்தாலே யென்றபடி. இரண்டடியாலேயளந்தது மூன்ருமடிக்கவனைச்சிறையிலேவைக்கநினைத்தாகையாலே அதுவும்செவ்வைக்கேடிறே என்று அந்தவஞ்சநத்தைவிவரிக்கிருர் (மூன்றடியித்யாதி ) வஞ்சநத்துக்கு ஹேது ( துஷ்டேத்யாதி ) “ ப்ரவஞ்சோமித்யா, த்ருஶ்யத்வாத் ” ( ப்ரபஞ்சோமித்யா, த்ருஶ்யத்வாத் ) என்று - துஷ்டஸாதநப்ரயோகம். “ ப்ரபஞ்சோமித்யா, அவித்யாவதுபக்ஞநஜ்ஞாந விஷயத்வாத் ” ( ப்ரபஞ்சோமித்யா, அவித்யாவதஉத்பந்நஜ்ஞாநவிஷயத்வாத் ) என்று-அதுக்கீடாகவுத்தரம். “துஷ்டம்” என்றதிந்தேபரமோஹார்த்தம்ப்ரயோகிக்கை- கௌடில்யமிறே; கௌடில்யம்பண்ணினர்க்கு கௌடில்யம்பண்ணுகை யுசிதமிறேயென்றுகருத்து (அவன்செவ்வைக்கேட்டுக்கு) தான்பண்ணினமர்யாதையைக்குலைக்கையாலே அவன்செய்தது செவ்வைக்கேடிறே. அவனுக்குச்செவ்வைக்கேடாவது - தைவப்ரக்ருதியானவிந்த்ரனுடைய ராஜ்யத்தையபஹரிக்கை. விரகு. உபாயம். பெருவிரகன் - மஹாசமர்த்தன். கிறி - சாமர்த்யம். “ கிறி ” என்ருல் பெருவிரகென்றுகாட்டுமோவென்ன ( பெருங்கிறியானித்யாதி) பெருவிரகனித்யர்த்தஃ திருவிருத்தம் தொண்ணூற்ருராம்பாட்டு, “ சுருங்குறி வெண்ணெய் ” இத்யாதி.

மஹாபலியிலிவளுக்குண்டான வ்யாவ்ருத்தியை யருளிச்செய்யா நின்றுகொண்டு ஏவம்பூதையானதன்னை விரும்பாமையாலேதன்னுடையலாவண்யத்தையுபேக்ஷிக்கிருளென்கிருர் ( செவ்வைகெடவாகிலுமித்யாதி )

“ யதஃப்ரவ்ருத்திஃப்ரஸ்ருதாபுராணீ ” ( யதஃப்ரவ்ருத்திஃ ப்ரஸ்ருதாபுராணீ) இதிகீதாஸுபஞ்சதஶே; “ ததஃபதம்தத்பரிமார்கிதவ்யம் ” ( ததஃபதம்சத்பரிமார்க்கிதவ்யம் ) இத்யாதி. க்ரமேணுந்வயஃ.............................*

# ஏழாம்பாட்டு.

கிளரொளியாற்குறைவில்லாவரியுருவாய்க்கிளர்ந்தெழுந்து
கிளரொளியவிரணியனதகன்மார்பங்கிழித்துகந்த
வளரொளியகனலாழிவலம்புரியன்மணிநீல
வளரொளியான்கவராதவரிவளையாற்குறைவிலமே.

## ஆருயிரப்படி.

(கிளர்) ஹிரண்யவிஷய நிரவதிகரோஷத்தாலே அத்யந்தமநபிபவநீயமாய் அதிதுஸ்ஸஹமாய் யுகபதுதிததிநகரஶதஸஹஸ்ரதேஜஸ்ஸத்ருஶமாயிருந்த தேஜஸ்ஸையுடைய தொருவரியுருவாய்க்கிளர்ந்தெழுந்து, அதிபலபராக்ரமனான ஹிரண்யனைத் தன்திருவுகிராலேபிளந்தருளி ப்ரஹ்ருஷ்டனாய், நிஹதஹிரண்யனாகையாலே ப்ரசாந்தாசேஷரோஷனாய், அதினாலே யதிசீதள சர்வாநுகூலநிரவதிக தேஜோவிசிஷ்டனாய், திருவுகிர்களாலே மூந்தறவே ஹிரண்யவக்ஷஸ்த்தலம் விதாரிதமாகையாலே ததர்த்தமானஸ்வோத்யோகம் நிர்விஷயமாதலா லதிப்ரவ்ருத்த ரோஷாந்வித சங்கசக்ராதிதிவ்யாயுதோபேதனாயிருந்தவன் கவராதவரிவளையால் குறைவிலமென்கிறாள் ..................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், உத்துங்கவிரோதியான ஹிரண்யனைப்பிளந்த நரஸிம்ஹன் விரும்பாதவளையாலென்ன காரியமுண்டென்கிறாள்.

மணி-ஶ்லாக்யமான. நீலம் - நீலரத்நத்தினொளிபோலே அத்யுஜ்ஜ்வலமாய். வளர்-அசாதாரணமான. ஒளியான்-விக்ரஹதேஜஸ்ஸையுடையனாய். ஆஶ்ரிதார்த்தமாக அவ்வடிவழகையழியமாறி, கிளர் - “ஜ்வலந்தம்” (ஜ்வலந்தம்) என்னும்படி அபிவ்ருத்தமான. ஒளியால்-ஔஜ்ஜ்வல்யத்தால். குறைவில்லா-பரிபூர்ணமான. அரியுருவாய்-ஸிம்ஹரூபமாய்க்கொண்டு. கிளர்ந்து-சத்ருநிரசநத்திலேயுத்யோகித்து. எழுந்து-ஆவிர்ப்பவித்து. கிளர்-மிக்க. ஒளிய - தேஜஸ்ஸையுடையனான. இரணியனது-ஹிரண்யனுடைய. அகல்-விஸ்தீர்ணமான. மார்பம்-மார்பை. கிழித்து-அநாயாசேநகிழித்து. உகந்த-ஆஶ்ரிதவிரோதிபோனபடியாலே யுகந்தவனாய். இளைபெருதபாம்புபோலேசீறுகையாலே, வளர்-வளருகிற. ஒளிய - ஜ்வாலையையுடைய. கனல்-அக்நிபோலேயிருக்கிற. ஆழி-திருவாழியையும். வலம்புரியன்-ஸ்ரீபாஞ்சஜந்யத்தையுமுடையனானவன். கவராத-ஆதரியாத. வரி-வரியையுடைய. வளையால்-வளையாலே. குறைவிலம்-என்னப்ரயோஜநமுண்டு.........................................*

## ஈடு - ஏழாம்பாட்டு.

பெற்றதமப்பன்பகையாக பாலனானவனுக்குதவினவன், தானுதவாமை நோவுபடுகிற வெனக்குதவானாகில், நானாபரணம் பூண்டொப்பித்திருக்கிற விவ்வொப்பனை யார்க்கென்கிறாள்.

(கிளரொளியித்யாதி) “𑌜𑍍𑌵𑌲𑌨𑍍𑌤𑌂” (ஜ்வலந்தம்) என்கிறமந்த்ரலிங்கந்தோற்றச்சொல்லுகிறதாயிற்று. கிளர்ந்தவொளியால் குறைவின்றிக்கேயிருக்கிற நரசிம்ஹமாய். (கிளர்ந்தெழுந்து) சீறிக்கொண்டுதோற்றி. “பிறையெயிற்றன்றடலரியாய்ப்பெருகினானை” என்கிறபடியே, சிறுக்கன்மேலே யவன்முடுகினவாறே கிளர்ந்தபடி. (கிளரொளியவிரணியன்) மிக்கதேஜஸ்ஸையுடையஹிரண்யன். ஆசுரமானதேஜஸ்ஸு. நரசிம்ஹமும் பிற்காலித்துவாங்கும்படியாயிற்று பையல்கிளர்த்தியிருந்தபடி. (அகல்மார்பம்) தேவதைகளினுடையவரத்தை யூட்டியாக இட்டுத் திருவுகிருக்கிரைபோரும்படியாகவளர்ந்த அகன்றமார்வு. (கிழித்து) நரசிம்ஹத்தினுடைய மொறுந்தமுகத்தையும், நாமடிக்கொண்டவுதட்டையும், குத்தமுறுக்கினகையையும், அதிர்ந்தவட்டஹாசத்தையும் கண்டவாறே, பொசுக்கினபன்றிபோலே யுருகினானாயிற்று; பின்னை அநாயாஸேந கிழித்துப்பொகட்டான். நெற்றியது கண்ணும் உச்சியது புருவமுமாய்க் கொண்டுதோற்றினபோது, கோடரகதமான அக்நிபோலே பயாக்நியுள்ளே நின்றெரியப்புக்கவாறே பதஞ்செய்யுமிறே. (உகந்த) “சிறுக்கனுடைய விரோதிபோகப்பெற்றோமே” என்றுகந்தபடி. “‘𑌮𑌤𑍍𑌪𑌿𑌤𑍁𑌸𑍍𑌤𑌤𑍍𑌕𑍃𑌤𑌂 𑌪𑌾𑌪𑌂 𑌦𑍇𑌵𑌤𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌣𑌶𑍍𑌯𑌤𑍁’ (மத்பிதுஸ்தத்க்ருதம்பாபம்தேவதஸ்யப்ரணஸ்யது) என்றிவன்றான் காற்கட்டியாணையிடாதே, இவன்றானே ‘கொல்லவேணும்’ என்றிசையப்பெற்றோமிறே” என்றுகந்தானாயிற்று. (வளரொளியகனலாழிவலம்புரியன்) காவற்காட்டில் துஷ்டம்ருகங்களைக் கூட்டியிட்டு வளர்க்குமாபோலே, தேவதைகளுடைய வரங்களையூட்டியாக இட்டுவளர்த்த பையலுடைய அகலமெல்லாம் திருவுகிருக்கிரை வயிறாம்படியாயிற்றிறே; ஒருவன்கைபார்த்திருப்பாரநேகருண்டானால்; அவர்களிலே சிலவரிவனோடே கைசெய்து, அவனுக்குள்ளவுடலையும் தாங்கள்கண்டபடியழித்து, நீக்கி யுள்ளவுடலையும் கூறிட்டுத்தாங்களே கொண்டுவிட்டால்; மற்றுள்ளார் கதகதென்னச்சொல்லவேண்டாவிறே. இவர்கள் தாம்நுணியாடிகளிறே. “இப்படி இவர்கள் தாமேயாவதென் நாமிருக்க” என்று திவ்யாயுதங்கள் கிளர்ந்தனவாயிற்று. (மணிநீலவளரொளியான்) நீலமணிபோலே வளர்ந்நின்றுள்ள வொளியையுடையவன். கைமேலே யிலக்கைபெறாதார்க்கு அன்றுடுபடிவிடவேணுமிறே, படிவிடாதபோது அரைக்ஷணம் நில்லார்களிறேயவர்கள். இவர்கள் வ்ருத்தவான்களாகையிறே கைமேலேயிப்படிபெற்று ஜீவிக்கிறது; “படிகண்டறிதியே” என்கிறபடியே. இப்படிகண்டு ஜீவிக்குமதிறே.* ஸதாபஸ்யந்தியிறே. “மணிநீலவளரொளி” என்பானென், அப்போது திருமேனிவெளுத்தன்றோ விருப்பதென்னில்; “சிறுக்கனார்த்திதீரப்பெற்றோமே” என்று திருமேனிகுளிர்ந்தபடியைச்சொல்லுகிறது. (கவராதவித்யாதி) அவ்

வடிவையுடையவன்தானே வந்து மேல்விழுந்து விரும்பி வாங்கியிட்டுக் கொள்ளாத இவ்வளையாலெனக்கென்ன கார்யமுண்டென்கிறாள்.........*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு. ( இளரொளியித்யாதி ) " இளரொளியாற்குறைவில்லா வரியுருவாய் " இத்யாதியையும், " கவராதவரிவளையால்குறைவிலம் " என்கிறபதத்தையும் கடாக்ஷித்தவதாரிகை ( பெற்றதமப்பனித்யாதி )

அவ்வவதாரத்திலொளியுண்டோவென்ன ( ஜ்வலந்தமித்யாதி ) மந்த்ரலிங்கம்-மந்த்ரார்த்தம். " 𑌉𑌗𑍍𑌰𑌂 𑌵𑍀𑌰𑌂 𑌮𑌹𑌾𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌂 𑌜𑍍𑌵𑌲𑌨𑍍𑌤𑌂 𑌸𑌰𑍍𑌵𑌤𑍋𑌮𑍁𑌖𑌮𑍍 । 𑌨𑍃𑌸𑌿𑌂𑌹𑌂 𑌭𑍀𑌷𑌣𑌂 𑌭𑌦𑍍𑌰𑌂 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌂 𑌨𑌮𑌾𑌮𑍍𑌯𑌹𑌮𑍍 " ( உக்ரம்வீரம்மஹாவிஷ்ணும்ஜ்வலந்தம்ஸர்வதோமுகம் । ந்ருஸிம்ஹம்பீஷணம்பத்ரம்ம்ருத்யும்ருத்யும்நமாம்யஹம் ) இதிமந்த்ரஃ. சப்தார்த்தம் ( கிளர்ந்தவித்யாதி ) உக்தார்த்தத்துக்கு சம்வாதம் ( பிறையெயிற்றித்யாதி ) ஹிரண்யனாலே சிறுக்கன் நோவுபடுகிறவன்று பிறைபோலேயிருக்கிற வெயிற்றையுடைய யுத்தோந்முகமான நரசிம்ஹமாய்க்கொண்டு பெருகினவனை யித்யர்த்தஃ. திருமொழி இரண்டாம்பத்து அஞ்சாந்திருமொழி எட்டாம்பாட்டு, " பெண்ணாகி " இத்யாதி. முடுகினவாறே - துணிந்தவாறே. கிளர்ந்தபடி - சீறினபடி.

" கிளரொளியாற் குறைவில்லா வரியுருவாய் " என்ற வநந்தரம் " கிளரொளிய விரணியன் " என்றதுக்குபாவம் ( நரசிம்ஹமுமித்யாதி ) ஊட்டியாக - போஜநமாக. இரை - லக்ஷ்யம். பொன்னுருவைக் கிழிக்கப்போமோவென்ன (நரசிம்ஹத்தினுடைய வித்யாதி) மொறாந்த - திறந்த. நாமடிக்கொண்ட - நாக்குமடித்த. குத்த - குத்துகைக்கு. அதிர்ந்த - மஹாத்வநிசெய்கிற. பொசுக்கின - நெருப்பிலே வாட்டின. உருக்குகைக் கக்நியெங்கேயென்ன ( நெற்றியித்யாதி ) பங்க்யந்தரேணோபபாதநமாதல். பயாக்நியாலே பதம்செய்ததென்று கருத்து. அக்நிபோலே-அக்நியுள்ளேநின்று தஹிக்குமாபோலே. உகப்புக்குஹேத்வந்தரம் (மத்பிதுரித்யாதி) "𑌮𑌯𑌿 𑌦𑍍𑌵𑍇𑌷𑌾𑌨𑍁𑌬𑌨𑍍𑌧𑍋𑌽𑌭𑍂𑌤𑍍 𑌸𑌂𑌸𑍍𑌤𑍁𑌤𑌾𑌵𑍁𑌦𑍍𑌯𑌤𑍇 𑌤𑌵 । 𑌮𑌤𑍍𑌪𑌿𑌤𑍁𑌸𑍍𑌤𑌤𑍍𑌕𑍃𑌤𑌂 𑌪𑌾𑌪𑌂 𑌦𑍇𑌵 𑌤𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌣𑌶𑍍𑌯𑌤𑍁" ( மயித்வேஷாநுபந்தோபூத்ஸம்ஸ்துதாவுத்யதேதவ । மத்பிதுஸ்தத்க்ருதம்பாபம்தேவதஸ்யப்ரணஶ்யது ) இதி ப்ரதமேம்ஶேவிம்ஶேப்ரஹ்லாதஃ. இவன்றான் - ப்ரஹ்லாதன்றான். காற்கட்டி - ப்ரதிபந்தித்து.

" வளரொளிய " என்றது - * ஆழிக்கும், * வலம்புரிக்கும் விசேஷணம். " கனல்" என்கிற விசேஷணத்துக்குபாவம் (காவற்காட்டிலித்யாதி) காவற்காடு - ரக்ஷகருண்டானதோட்டம். ஊட்டி- ஆஹாரம். அகலம்-மார்வு. சாடு (ஒருவனித்யாதி) கைபார்த்திருப்பார் - ஒருவனுக்கு பரதந்த்ரராயிருப்பாரொன்றும், கையிலே யிருப்பாரொன்றும். கைசெய்தென்றது - ஸஹாயம் செய்தென்றும், கையிலேயிருந்தென்றும். உடல் - தநமும், சரீரமும். கண்டபடி -கண்டப்ரகாரம். "கிழித்து " என்கையாலே - அழிக்கையும், இரண்டு கூறாகையும் ஸித்தமிறே. நீக்கியுள்ள - வ்யதிரிக்தமாயுள்ள. கூறிட்டு - கண்டித்து, பாகித்தென்றும். தாங்களே- நகங்களே. மற்றுள்ளார் - திருவாழியாழ்வான் றொடக்கமானார். கதகதென்ன-கோ

பிக்கவென்றும், ஜ்வலிக்கவென்று மர்த்தத்வயம். இவர்கள் சிறிக்கொள்ளவேண்டுவானென்னென்ன (இவர்களித்யாதி) அணியாடிகள் - ஹஸ்தாக்ரவர்த்திகளென்றும், ஸோாக்ரவர்த்திகளென்று மர்த்தத்வயம். "வளர்" என்றதுக்கு பாவம் (இப்படியித்யாதி) தாமேயாவதென்- தாமே கூறிட்டுக்கொள்ளுகிறபடி யெப்படி. திவ்யாயுதங்கள் - திருவாழி தொடக்கமானவை.

கைமேலே - ஸத்யஃ. இலக்கை - மாஸஜீவிதமான பணமும், லக்ஷ்யமுமர்த்தத்வயம். அன்றுடு - அன்றைக்கன்று. படி - அரிசிப்படி. கைமேலேயிருந்து வைத்து லக்ஷ்யம் பெறுதார்க்கு உகப்பிக்கைக்காகத் திருமேனி கொடுக்கவேணுமிறே யென்றபடி. (ஆகையிறே) இவர்கள் கைமேலேயிருந்து பரிகையாலே இத்திருமேனிபெற்று ஜீவிக்கிறதென்றபடி. படியென்று - திருமேனியைச் சொல்லுமோவென்ன (படியித்யாதி) படிகண்டறிதியே-திருமேனியை ஸாக்ஷாத்கரித்தபடி யறியாயோ வித்யர்த்தஃ. இந்தப்பாட்டு முன்பே எழுதிற்று. மற்றைப்படி பாகம்பண்ணி ஜீவிக்குமதிறே, இந்தப்படிகண்டு ஜீவிக்குமது. இதுகண்டு ஜீவிக்குமதா யிருக்குமோவென்ன (ஸதாபஶ்யந்தீத்யாதி) தடஸ்த்தஶங்கையை யநுவதித்து பரிஹரிக்கிறுர் (மணி நீலேத்யாதி) நீலரூப்தம்-குளிர்த்தியை லக்ஷிக்கிறது.

வளரொளிய கனலாழி - வளர்கிற ஜ்வாலையையுடைய வக்நிபோலே யிருக்கிற திருவாழியென்றபடி. க்ரமேணுந்வயஃ.........................................*

---

# எட்டாம்பாட்டு.

வரிவளையாற்குறைவில்லாப்பெருமுழக்காலடங்காரை
பெரியழலம்புகவூதியிருநிலமுன்றுயர்தவிர்த்த
தெரிவரியசிவன்பிரமனமரர்கோன்பணிந்தேத்தும்
விரிபுகழான்கவராதமேகலையாற்குறைவிலமே.

## ஆறுயிரப்படி.

(வரிவளையால்) துர்யோதனாதிகளுடைய ஹ்ருதயத்திலே காலாக்நிபுகும்படியாக வதிகம்பீரநாதமான ஸ்ரீபாஞ்சஜந்யத்தை மடுத்தூதி இருநிலமுன்றுயர்தவிர்த்து, ப்ரஹ்மேஶாநாதி ஸர்வ தேவைஸ்ஸம் ஸ்துயமாந விஜய ஸ்ரீகனுய்க்கொண்டு நின்றவன் கவராத மேகலையால் குறைவில மென்கிறுள்........................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், பூபாரநிர்ஹரணார்த்தமாக துர்யோதநாதி விரோதி சதத்தையும் பிரஸித்த நித்யஶ்யகீர்த்தியை யுடையவன் விரும்பாத மேகலையாலென்ன காரியமுண்டென்கிறுள்.

வரி - முகத்தில் வரியையுடைய. வளையால் - ஸ்ரீபாஞ்சஜந்யத்தாலுண்டான. குறைவில்லாப் பெருமுழக்கால் - மஹாகோஷத்தாலே. அடங்காரை - அடங்

யரான ஶத்ருக்களை, எரி - கிளர்ந்தெரிகிற. அழல் - பயாக்நியானது. புக-உள்ளே ப்ரவேசிக்கும்படியாக. ஊதி- ஊதி. முன் - முற்காலத்திலே. இருநிலம்-மஹாப்ருதிவியினுடைய. துயர்-பாரக்லேசத்தை. தவிர்த்த-தவிர்த்தவனாய். இவ்வுபகாரத்தாலே, தெரிவரிய - தன்னோடொக்க நினைத்து ப்ரமித்து விவேகிக்க வரியப்ராதாந்யத்தையுடைய. சிவன்-ருத்ரன். பிரமன்-ப்ரஹ்மா. அமரர்கோன் - தேவநிர்வாஹகனான விந்த்ரன். பணிந்து - க்ருதஜ்ஞதாபரவஶராய்க்கொண்டு வணங்கி. ஏத்தும்-ஸ்தோத்ரம் பண்ணும்படி. விரி-விஸ்தீர்ணமான. புகழான் - புகழையுடையவன். கவராத - ஆதரியாத. மேகலையால் - காஞ்சீகுணத்தால். குறைவிலம் - என்ன ப்ரயோஜநமுண்டு.

மேகலை - பரிவட்டத்தின்மேற் கட்டும் காஞ்சி. பரிவட்டமாகவுமாம்......*

## ஈடு - எட்டாம்பாட்டு.

ஜகத்துக்காக வுபகரிக்குமவன் தனக்கஸாதாரணையான வென்னை யுபேக்ஷிக்குமாகில் என்னுடைய மேகலையாலென்ன ப்ரயோஜந முண்டென்கிறாள்.

(வரிவளையால்) வளையென்று - சங்கு. (முகத்திலே வரியையுடைய) ஸ்ரீபாஞ்சஜந்யத்தாலே. (குறைவில்லாப்பெருமுழக்கால்) சத்ருக்களளவல்லாத மஹாத்வநியாலே. “𑌸 𑌘𑍋𑌷𑍋 𑌧𑌾𑌰𑍍𑌤𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰𑌾𑌣𑌾𑌂 𑌹𑍃𑌦𑌯𑌾𑌨𑌿 𑌵𑍍𑌯𑌦𑌾𑌰𑌯𑌤𑍍” (ஸகோஷோதார்த்தராஷ்ட்ராணாம்ஹ்ருதயாநிவ்யதாரயத்) என்கிறபடியே, “𑌜𑌗𑌤𑍍𑌸𑌪𑌾𑌤𑌾𑌲𑌵𑌿𑌯𑌦𑍍𑌦𑌿𑌗𑍀𑌶𑍍𑌵𑌰𑌂 𑌪𑍍𑌰𑌕𑌮𑍍𑌪𑌯𑌾𑌮𑌾𑌸” (ஜகத்ஸபாதாளவியத்திகிஸ்வரம்ப்ரகம்பயாமாஸ) என்கிறபடியே. (வரிவளையால், பெருமுழக்கால்) “𑌹𑌸𑍍𑌤𑍇𑌨 𑌰𑌾𑌮𑍇𑌣” (ஹஸ்தேநராமேண) என்னுமாபோலே. (அடங்காரை) அடங்காருண்டு-சத்ருக்கள், அவர்களை. (எரியழலம்புகவூதி) எரியாநின்றுள்ள அக்நியானது அவர்கள் ஹ்ருதயத்திலே ப்ரவேசிக்கும்படியூதி. பயாக்நி கொளுந்தும்படி பண்ணி. ஆஶ்ரிதவிரோதிகளைக் கழியவூதிற்றிவளையிட்டிறே. (இருநிலமுன் துயர்தவிர்த்த) பரப்பையுடைத்தான பூமியில் முன்பே யுண்டான துக்கத்தைப்போக்கின. முன்பே பிடித்து துக்கநிவர்த்தகனாய்ப் போருமவனின்றித் தலையை நோவுபடவிட்டிருக்குமாகில், பின்னை யெனக் கென்னுடைமைகொண்டு கார்யமென். ஸ்ரீபாஞ்சஜந்யகோஷமாகிற விதுதான் அநுகூலர்கேட்க வாசைப்பட்டிருப்பதுமாய், ப்ரதிகூலர்முடிகைக்கு ஹேதுவுமாயிருப்ப தொன்றிறே; “𑌦𑍇𑌵𑌾𑌨𑌾𑌂 𑌵𑌰𑍍𑌧𑌯𑍇𑌤𑍍𑌤𑍇𑌜𑌃 𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌶𑍍𑌚𑍈𑌵 𑌯𑍋𑌗𑌿𑌨𑌾𑌂” (தேவாநாம்வல்ருதேதேஜஃப்ரஸாதஶ்சைவயோகிநாம்) “𑌸 𑌘𑍋𑌷𑍋 𑌧𑌾𑌰𑍍𑌤𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰𑌾𑌣𑌾𑌂 𑌹𑍃𑌦𑌯𑌾𑌨𑌿 𑌵𑍍𑌯𑌦𑌾𑌰𑌯𑌤𑍍” (ஸகோஷோதார்த்த ராஷ்ட்ராணாம்ஹ்ருதயாநிவ்யதாரயத்) இத்யாதிவத். பெரியாழ்வார் திருமகளுக்கும் விசேஷித்து ஜீவநமாயிருப்பதொன்றிறே யிது, [பூங்கொளித்யாதி]

ஸ்ரீஜநகராஜன் திருமகளுக்கும் ருக்மிணிப்பிராட்டிக்கு முண்டான விடாய் தனக்கொருத்திக்கு முண்டாகையாலே, அவர்களிருவரும்பெற்ற பேற்றை நானொருத்தியு மொருகாலே பெறவேணுமென்கிறாள், " இது பட்டாருளிச்செய்ய நான் கேட்டேன் " என்று பிள்ளை யருளிச்செய்வர். சிசுபாலன் ஸ்வயம்வரத்திலே ப்ரவ்ருத்தனானபோது ருக்மிணிப்பிராட்டி, " இவ்வளவிலே க்ருஷ்ணன்வந்து முகங்காட்டிற்றிலனாகில் நான் பிழையேன் " என்ன, அவள் கலங்கின சமயத்திலே புறச்சோலையிலே நின்று ஸ்ரீபாஞ்சஜந்யத்தை முழக்க, அதுவாராச் செவிப்பட்டது; ராவணன் மாயாசிரஸ்ஸைக் காட்டினபோது பிராட்டி தடுமாற, அவ்வளவிலே ஜ்யாகோஷம்வாராச் செவிப்பட்டது ; அவ்விருவர் விடாயும் தனக்கொருத்திக்கு முண்டாகையாலே, இரண்டு மொருகாலே பெறவேணுமென்றாசைப்படுகிறாளாயிற்றிவள். ( தெரிவரியவித்யாதி ) பாரத சமரத்தை முடியநடத்தினபடியைக் காண்கையாலே; தங்களை துர்ஜ்ஞேயராக நினைத்திருப்பாருமாய், பூமியில் கால்பாவாமையால் வந்த துரபிமானத்தை யுடையருமானருத்ரன் தொடக்கமானார் பக்நாபிமாநராய்க்கொண்டுவந்து விழுந்தேத்தும்படியான பரந்த புகழையுடையவன். ஒருகொசுகுத்திரளிருந்ததென்று, திருப்பாற்கடலை லொருமூலைசுவறுதிறே; அப்படியே, இவர்களேத்தாநின்றால் ஏத்தினவிட மளவுபட்டு ஏத்தாதவிடம் மிஞ்சும்படியான புகழையுடையவன்.

( கவராதவித்யாதி ) அவன்விரும்பாதே நானேயுடுத்துமுசியும்படியான மேகலையெனக்கென்செய்ய. உடைமாறுத பரிவட்டங்கொண்டு கார்யமென். ரக்ஷகனாய்த்தான்வந்து புகழ்படைத்துப் போருகிறவன், " இத்தலையைரக்ஷித்து வரும்புகழ்வேண்டா, அதுதவிர்ந்தால் வருமவத்யம் வரவமையும்" என்றிருந்தானாகில், நானெனக்கவத்யமாம்படி பரிவட்டம் பேணியிருக்கவோ.

( வரிவளையால் ) வாயாடி, வாய்க்கரைப்பற்றை யடுத்தூனுக வுடையவன். எதிரிகள்முடுகினால், இவன்றன் வாய்க்கரையிலேயிருந்து பண்ணு மார்ப்பரவத்தைக்கேட்டு எதிரிகள் முழுக்காயாக வலியும்படியாயிருக்கும். அந்தஃபுரத்திலுள்ளார் " எங்கள்வாய்ப்புகு சோற்றைப்பறித்து ஜீவியாநின்றான் '' என்றுமுறைபட்டால், அவன்வாய் விடாச்சாதியென்னலாம்படியிறே யிருப்பது. ஓசையுமொளியு முடையனாய் எதிரிகளை யூதப்பறக்கும்படி பண்ணியிறேயிருப்பது. அல்லாதவாழ்வார்கள் கூரியரோயாகிலும் தடியர்கழுந்தரென்னலாய், இவனைப்போலே ஸாக்ஷியுடையாரில்லையிறே. * மரங்கள்போல் வலியநெஞ்சராகையாலே யெரியழலம்புக வூதிக்கொளுத்தினபடி. இப்படியாஸ்ரிதரக்ஷணம் பண்ணினவன் விரும்பாதமேகலையா லெனக்கென்ன ப்ரயோஜநமுண்டு..........*

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு. (வரிவளையாலித்யாதி) ஜகத்துக்காக உபகரிக்குமவனென்றது - "இருநிலமுன்றுயர்தவிர்த்த" என்றத்தைப்பற்ற. மேகலையால்-நல்லபரிவட்டத்தால். அல்லது, சாமாந்யேந "மேகலையாலென்ன ப்ரயோஜநம்" என்றுசொல்லக்கூடாதிறே.

"வரி" என்று-சௌந்தர்யமென்று திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறுர் (ஸ்ரீபாஞ்சஜந்யத்தாலேயென்று) ஸ்ரீசப்தம்-சௌந்தர்யவாசி. "குறைவில்லா" எனறுவைத்து, "பெருமுழக்கால்" என்றதுக்குபாவம் (சத்ருக்களித்யாதி) உக்தத்துக்கு ப்ரமாணத்வயம் (ஸகோஷஇத்யாதி) பாண்டவாதிகள் சங்கத்வநிபண்ணின வநந்தரம் "ஸகோஷ:" என்றிருந்தாலும்-ஸ்ரீபாஞ்சஜந்ய த்வநியென்றே இவர்க்குவிவக்ஷிதம். இது-வந்தவிடமெங்கும் கண்டுகொள்வது. "ஸகோஷோ தார்த்தராஷ்ட்ராணாம் ஹ்ருதயாநி வ்யதாரயத் । நபஶ்ச ப்ருதிவீஞ்சைவ துமுலோ வ்யநுநாதயந்" (ஸகோஷோதார்த்தராஷ்ட்ராணும்ஹ்ருதயாநிவ்யதாரயத்।நபஶ்சப்ருதிவீம்சைவதுமுலோவ்யநுநாதயந்" இதிகீதாஸூப்ரதமே' "பாஞ்சஜந்யோச்யுதவக்த்ரவாயுநா ப்ரபூரிதோ ஸ்வரநிஸ்ஸ்ருதத்வநி: । ஜகத்ஸபாதாளவியத்திகீஶ்வரம் ப்ரகம்பயாமாஸ யுகாத்யயே யதா" (ஸபாஞ்சஜந்யோச்யுதவக்த்ரவாயுநாப்ருஶம்ஸூபூர்ணேதரநிஸ்ஸ்ருதத்வநி:। ஜகத்ஸபாதாளவியத்திகீஶ்வரம்ப்ரகம்பயாமாஸயுகாத்யயேயதா) இதித்ரோணபர்வணி. வளையினுடைய பெருமுழக்காலென்றுதே, த்ருதீயாத்வய கதநத்துக்கு த்ருஷ்டாந்தம் (ஹஸ்தேநேத்யாதி) "அழலம்" என்றவிடத்தில், அம்மென்றது-சாரியைச்சொல்லு. தாத்பர்யம் (பயாக்நியித்யாதி) இவளையிட்டென்றது-சாடு. த்வந்யர்த்தம், இவளையிட்டென்று; ஸ்ரீபாஞ்சஜந்யமென்று ஸ்வபாவார்த்தம். இவ்வளையென்று வவ்வொற்றுக்குவது. வளை-சங்கம். இருமை-பெருமை. தாத்பர்யம் (முன்பேயித்யாதி) அநுபாவ்யமான ஸ்ரீபாஞ்சஜந்யத்தை, இவள் "ஶிரோதிஶிராஸகம்" என்பானென்னென்ன (ஸ்ரீபாஞ்சஜந்யகோஷமித்யாதி) உக்தத்துக்குப்ரமாணம் (தேவாநாமித்யாதி) "யஸ்ய நாதேந தைத்யாநாம் பலஹாநிரஜாயத । தேவாநாம் வவ்ருதே தேஜ: ப்ரஸாதஶ்சைவ யோகிநாம்" (யஸ்யநாதேநதைத்யாநாம் பலஹாநிரஜாயத । தேவாநாம்வவ்ருதே தேஜ:ப்ரஸாதஶ்சைவயோகிநாம்) இதிபஞ்சமேம்ஶே. இப்படி "ஸ்ரீபாஞ்சஜந்யத்வநிதாரகம்" (ஸ்ரீபாஞ்சஜந்யத்வநிதாரகம்) என்றுசைப்பட்ட பேருண்டோவென்ன (பெரியாழ்வாரித்யாதி) (பூங்கொளித்யாதி) நாய்ச்சியார் திருமொழி ஒன்பதாம்திருமொழி ஒன்பதாம்பாட்டு, "கோங்கலரும்" இத்யாதி. பூங்கொள்-அழகுடைய, திருமுகத்து மடுத்தூதிய-திருப்பவளத்திலே வைத்தூதின, சங்கொலியும்-ஸ்ரீபாஞ்சஜந்யத்வநியும், சார்ங்கவில் நாணொலியும்-ஸ்ரீசார்ங்கவில் நாணோசையும், தலைப்பெய்வதெஞ்ஞான்றுகொலோ-வந்துகிட்டுவதென்றோ வித்யர்த்த:. அவர்களொன்றையபேக்ஷிக்க, ஆண்டாளிரண்டையு மபேக்ஷிக்கிறபடியென்னென்ன (ஸ்ரீஜநகேத்யாதி) இது-இவ்வர்த்தம். இவர்களாசைப்பட்டதெப்போதென்ன (சிசுபாலனித்யாதி) முழக்க-த்வநிப்பிக்க. வாரா-வந்து. தமொற-

க்லேசப்பட. உக்தத்தை ப்ராக்ருதத்திலே சேர்க்கிறார் (அவ்விருவரித்யாதி) இவள்-ஆண்டாள்.

(பாரதசமரத்தைமுடிய நடத்தினபடியைக்காண்கையாலே) என்றதுக்கு-(பக்ஷாபிமாநராய்) என்றத்தோடேயந்வயம். "தெரிவரிய" என்றதுக்கு-ப்ராதிகார்த்த மநுபபந்நமாகையாலே, தாத்பர்யார்த்தம் (தங்களையித்யாதி) தாபிமாநத்தை - "நாங்கள்தேவர்களன்றோ" என்கிற தாபிமாநத்தை. பணிந்து-ஸேவித்து. "விரி" என்றதுக்கு ஸத்ருஷ்டாந்தமாகபாவம் (ஒருகொசுகித்யாதி) கொசுகுத்திரளென்று - கொசுசமூஹத்தைச் சொல்லுகிறது, "அமரர்" என்று-திரளை விவக்ஷித்து. அளவுபட்டு-குறைவுபட்டு.

அர்த்தாந்தரம் (உடைமாருதவித்யாதி) உடைமாருத-மாருடியுடாத. த்ருதீயபாவம் (ரக்ஷகனாயித்யாதி) அதாவது - நல்லபுடவையு முடுத்திருக்கவோ வென்றபடி.

சாடுகதநார்த்தம் புநஸ்சபதோபாதாநம். வாயாடி-வாசாலனும், வாயிலே வர்த்திக்கிறவனும். வாய்க்கரைப்பற்று-அதரமும், கடிசீமையும். அடுத்தாணாகவுடையவன்-இலக்கைக்குவிட்ட சீமையாக வுடையவனென்று சாடு. இலக்கை-மாசசம்பளம். அதரத்தை ஆஸந்நஜீவநமாக வுடையவனென்று ஸ்வபாவார்த்தம். முடுகினால்-சந்நிக்ருஷ்டனானால். முழுக்காயாக-மெத்திட்டகாயாக. வாய்விடாச்சாதி-வார்த்தைசொல்லமாட்டாதவனென்றும், வாயைவிடாதவனென்றும். "வரி" என்றத்தையும், "பெருமுழக்கால்" என்றத்தையும் கடாக்ஷித்து (ஓசையுமொளியுமென்றது) வார்த்தைசொல்லவல்லவனென்றும், தேஜஸ்வியென்றும் கண்டுகொள்வது. இத்தால்-லோகத்திலேயொருவன் வார்த்தைசொல்லவல்லவனானால் தேஜஸ்ஸின்றிக்கே யிருக்கும், தேஜஸ்ஸுண்டாய் வார்த்தைசொல்லக்கூடாதிருக்கும், அப்படியன்றிக்கே ஓசையையும் ஒளியையு முடையவனாயென்றபடி. ஊதப்பறக்கும்படி-ஊதினால் பறந்துபோம்படி. அல்லாதவாழ்வார்களைப்பற்ற விவனுக்காதிக்யமேதென்ன (அல்லாதவித்யாதி) கூரியர்-ஸூக்ஷ்மபுத்திகளும், தீக்ஷ்ணர்களும். தடியர்-கதையும், முஷ்கரரும். கழுந்தர்-வில்கழுத்தும்; சாடுவுக்கு, சப்பரைகளும். ஸாக்ஷியென்று-ஜ்ஞாநமும், தொளையும். லஜ்ஜையுமாம். ஊதிக்கொளுத்துகிறபோதுமரத்திலேயாக வேண்டாவோவென்ன (மரங்கள்போலித்யாதி) மரங்கள்போலே கடினமான நெஞ்சனென்றபடி. திருமாலை இருபத்தேழாம்பாட்டு, "குரங்குகள்" இத்யாதி.

க்ரமேணார்ந்வய:..........................................................................*

## ஒன்பதாம்பாட்டு.

மேகலையாற்குறைவில்லாமெலிவுற்றவகலல்குற்
போகமகட்புகழ்த்தந்தைவிறல்வாணன்புயந்துணித்து
நாகமிசைத்துயில்வான்போலுலகெல்லாநன்கொடுங்க
யோகணைவான்கவராதவுடம்பினாற்குறைவிலமே.

## ஆறுயிரப்படி.

மேகலையால் ) ஸ்வாஸ்ரித சமீஹிதபஞ்ஜகனான பாணனுடைய தோள்களைத்துணித்துப்பின்னை நிர்ப்பயனாய், சர்வலோகமுந்தன்னுடைய சங்கல்பத்தினுள்ளேசெல்லும்படி செலுத்திக்கொண்டு நாகபர்யங்கத்திலே ஸ்வாத்மாநுபவரூபயோக நித்ராபண்ணுகிறவன் கவராதவுடம்பினால் குறைவிலமென்கிறாள்........................................ ..........*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஸ்ரிதவிரோதியான பாணனை விஹஸ்தனாக்கினக்ருஷ்ணன்விரும்பாத சரீரத்தாலென்ன ப்ரயோஜநமுண்டென்கிறாள்.

மேகலையால்-உடையழகால். குறைவு-குறை. இல்லா-இன்றியிலே. மெலிவு-அநிருத்தசம்ஸ்லேஷத்தால்வந்தவட்சியை. உற்ற-உடைத்தாய். அகல் - விஸ்தீர்ணமான. அல்குல்-நிதம்பவைலக்ஷண்யத்தையுடையளாய். போகம்-போகாநுகூலமான. மகள்-ஸ்த்ரீத்வத்தையுடையளானஉஷைக்கு. தந்தை-பிதாவென்கிற. புகழ்-ப்ரதையையுடையனாய். விறல் - சௌர்யவீர்யாதிகளால்குறைவற்ற. வாணன்-பாணனுடைய. புயம் - “ ஸஹஸ்ராஸ்ரம் ” ( பாராயமமகிம்புஜை ) என்றுயுக்தகண்டூதியையுடைத்தாகச்சொல்லப்பட்டதோள்களை. துணித்து-தின்றவிடம்சொறிந்தாற்போலேதுணித்து. அவதாரகார்யாநந்தரம், நாகமிசை-பழையநாகபர்யங்கத்திலேசாய்ந்து. துயில்வான்போல் - உறங்குவான்போலே. உலகெல்லாம்-சர்வலோகமும். நன்கு-ஸ்வப்ராப்தியாகிறநன்மையிலே. ஒடுங்க-ஒதுங்கும்படி. யோகு-உபாயசிந்தையை. அணைவான்-பண்ணுமவன். கவராத-விரும்பாத. உடம்பினால்-உடம்பால். குறைவிலம்-என்னப்ரயோஜநமுண்டு.

யோகு-உபாயம்.......................................................................*

## ஈடு - ஒன்பதாம்பாட்டு.

ஆஸ்ரிதவிரோதியான வாணனையழியச்செய்து, சர்வருமுஜ்ஜீவிக்கும் வழியெண்ணுமவன் விரும்பாத வுடம்புகொண்டு கார்யமென்னென்கிறாள்.

(மேகலையால்குறைவில்லா) “ உஷைக்குக்கூறையுடையழகியதாயிருக்கும்போலேகாண் ” என்னுமாம் வங்கிபுரத்துநம்பி. ( மெலிவுற்ற) ம்ருதுஸ்வபாவையாயுள்ளாள். பிறந்து தனியிருக்கப் பொறாதவள். ( அகலல்குல் ) அகன்றநிதம்ப ப்ரதேசத்தையுடையளாயிருக்கை. ( போகமகள் ) போகயோக்யையான பெண்பிள்ளை. ( புகழ்த்தந்தை ) உஷைக்கு பிதாவானவார்த்தைப் பாட்டாலுள்ள புகழையுடையவ னென்னுதல், சௌர்யவீர்யாதிகளாலுள்ள ப்ரதையையுடையவனென்னுதல். ( விறல்

வர்ணன்) மிடுக்கையுடையவாணன். ஒருதேவதை சந்நிதியிலேயிருந்தால் சத்வமுத்ரிக்தமாயிருக்கக் கடவதாயிருக்குமிறே எல்லார்க்கும், அவ்வளவிலும் யுத்தகண்டூதிவர்த்தித்து "எனக்கெதிரியா யிருப்பானொருவனைக் காட்டவேணும்" என்று வேண்டிக்கொள்ளும்படியான பெருமிடுக்கனானவன். (புயந்துணித்து) "இவனறக்கைவிஞ்சினன்" என்று கரத்தைக்கழித்துவிட்டான். தலையையறுத்துவைக்கவேண்டுங் குறையுண்டாயிருக்கச்செய்தேயும், "உஷைபித்ருஹீநையாகவொண்ணாது" என்று உயிரைநிறுத்திவைத்துக் கழித்தானாயிற்று. (நாகமித்யாதி) பாணனுடைய புஜவநத்தைத்துணித்த பின்பாயிற்று போகத்தில்பொருந்திற்று. "துயில்வான்போல்" என்பானென், அங்ஙனன்றேவென்னில் (உலகெல்லாம்நன்கொடுங்கயோகணைவான்) "இன்னமும்பாணன்போல்வா ரெதிரிட்டாருண்டாகி லவர்களையும்நிரசித்து, லௌகிகர் நம்மையே பற்றிக் கரைமரம்சேரும் விரகேதோ" என்று இத்தையே சிந்தித்துக் கொண்டு யோகநித்ரைபண்ணுநிற்கும். (கவராத) இப்படியெல்லார்பக்கலிலும்பண்ணும்பரிவை அவனென்பக்கலிலே பண்ணுதேயிருக்க, நானென்னுடம்பைக் கட்டிக்கொண்டுகிடக்கவோ. அவனுக்காகக்கண்ட வுடம்பாயிற்றிவளது. அவனுக்குடலாகவிறே யிவள்தா னித்தைவிரும்புவது. அவன்றான் தன்னுடம்பு "பக்தாநாம்" என்றிருக்குமாபோலே, சேஷிக்காகக் கண்டவுடம்பாயிற்றிது.......................................*

## ஜீயர்அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு. (மேகலையாலித்யாதி) "விறல்வாணன்புயந்துணித்து, யோகணைவான்கவராத" என்கிறபதங்களைக் கடாக்ஷித்தவதாரிகை (ஆஶ்ரிதேத்யாதி)

அல்லாதார்ரக்ஷைகளோ, இவளை - "மேகலையால்குறைவில்லா" என்கிறதென்னென்ன (உஷைக்கித்யாதி) "மெலிவுற்ற" என்றதுக்கு சப்தார்த்தம் (ம்ருதுஸ்வபாவையாயித்யாதி) தாத்பர்யார்த்தம் (பிரிந்தித்யாதி) ஆக, பதத்ரயத்தாலும் - ஒப்பனையழகாலும், ஆத்மகுணத்தாலும், பருவத்தாலும் குறைவற்றவளென்கை.

வார்த்தைப்பாட்டால்-லௌகிகருடைய வசநத்தால். மிடுக்கின் காஷ்ட்டாபூமி (ஒருதேவதையித்யாதி) ரஸோக்தி (இவனித்யாதி) அற-அத்யந்தம். கைவிஞ்சுகை - கைகளை பஹுவாக வுடையனுகையும், உத்ததனுகையும். ஸம்ஹரியாமல் புயந்துணிப்பானென்னென்ன (தலையையித்யாதி)

"புயந்துணித்து-நாகமிசை" என்றபதச்சேர்த்திக்குபாவம் (பாணனுடையவித்யாதி) துணித்த-கண்டித்த. போகத்திலித்யாதி வாக்யம்-சாடு. போகம்-சர்ப்பத்தினுடலும், போகமும். அங்ஙனன்றேவென்றது - நித்ரைபண்ண வில்லையோவென்றபடி. நன்கொடுங்க-நன்றாக வாஶ்ரயிக்கும்படி. கரைமரம்சேரும்-கரையிலேமரம்சேரும். மரம்-மரக்கலம். ஓடமென்றபடி. இத்தால் - "உஜ்ஜீவிக்கும்விரகேதோ" என்றுகருத்து.

"யோகணைவான்" என்றத்தோடே "கவராதவுடம்பினால்" என்றதுக்கு சங்கதி (இப்படியித்யாதி) பரிவு-ஸ்நேஹம். கட்டிக்கொண்டு-பேணிக்கொண்டு. தன்னுடம்புதனக்குப் பேணவேண்டாவோ வென்ன (அவனுக்காகவித்யாதி) "விசித்ராதேஹஸம்பத்தி:" (விசித்ராதேஹஸம்பத்தி:) இத்யாதிப்படியே-எல்லாருடையவுடம்பும் ததர்த்தமாக ஸ்ருஷ்டமாயிருக்கச்செய்தேயும் அவர்கள் தரித்திருந்தவோபாதி இவளுக்கும் தரித்திருக்கவொண்ணாதோவென்ன (அவனுக்குடலாகவித்யாதி) இவள்தானென்றது-அல்லாதாரைப்போலே யறியாதிருக்கையன்றிக்கே. "ததர்த்தமாகஸ்ருஷ்டம்" என்றறியுமிவள் தானென்றபடி. (அவனுக்குடலாக) ததர்த்ததயா, தச்சரீரதயாச வென்றபடி. "அவனுக்குசரீரதயாசேஷம்" என்றறிகைஸ்வபாவார்த்தம். தன்னுடம்பை "அவனது" என்றிருக்குமென்னுமத்தை த்ருஷ்டாந்தத்தாலே காட்டுகிறார் (அவன்ருனித்யாதி)

க்ரமேணாந்வய:.........................................................................*

# பத்தாம்பாட்டு.

உடம்பினாற்குறைவில்லாவுயிர்பிரிந்தமலைத்துண்டங்
கிடந்தனபோற்றுணிபலவாவசுரர்குழாந்துணித்துகந்த
தடம்புனலசடைமுடியன்றனியொருகூறமர்ந்துறையு
முடம்புடையான்கவராதவுயிரினாற்குறைவிலமே.

## ஆறாயிரப்படி.

(உடம்பினால்) சுதர்ஶநஶகலீக்ருதகால நேமிப்ரப்ருத்ய சுரநிகரனாய், ஆஶ்ரிதகதமான வுத்கர்ஷநிகர்ஷம்பாராதே யெல்லாரோடுமொக்க சம்ஶ்லேஷிக்கும் ஸ்வபாவனாயிருந்த வெம்பெருமானுடைய சௌந்தர்யசௌசீல்யாதி குணங்களாலும், அதிதைவாதிமாநுஷமான திவ்யசேஷ்டிதங்களாலு மென்னோடேகலந்த கலவியாலு மூபஸ்க்ருதமாகாதவென்னுடைய வாத்மாவும்வேண்டா, இதுமுடிந்து போகவமையு மென்கிறாள்.........................................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அசேஷவிரோதி நிவர்த்தகனான சர்வேஶ்வரன் விரும்பாத ஆத்மாவாலென்ன ப்ரயோஜநமுண்டென்கிறாள்.

உடம்பினால்குறைவில்லா-சரீரபோஷணத்தாலேமஹாகாயரான. அசுரர்குழாம்-அசுரசமூஹங்களை. உயிர்பிரிந்த - இந்த்ரச்சிந்நமாய்நிஷ்ப்ராணமான. மலைத்துண்டம் - பர்வதகண்டங்கள். கிடந்தனபோல்-கிடந்தாற்போலே. பலதுணியா - நாநாகண்டமாம்படி. துணித்து-துணித்து. உகந்த - அத்தாலே "ஜகத்விரோதிகழிந்தது" என்றுகக்குமவனாய். தடம்புனல-அதிவிஸ்தீர்ணஜலையானகங்கையை தரிக்கிற. சடைமுடியன்-ஜடாமகுடத்தையுடையவனாகையாலே அதிசயிதசக்திகனாக அபிமாநித்திருக்கிறருத்ரன், தனியமர்ந்து-தனக்கபாஶ்ரயமாகப்பற்றி. ஒருகூ

அ-ஒருபார்ஶ்வத்திலே. உறையும்-நித்யவாசம்பண்ணும்படியான. உடம்பு-திருமேனியை. உடையான்-உடையவன். கவராத-விரும்பாத. உயிரினால்-ஆத்மாவால். குறைவிலம்- ஒருப்ரயோஜநமுடையோமல்லோம்.

“ நவாத்மாநம் ” ( நசாத்மாநம் ) என்கிறகணக்கிலே அவன்விரும்பாத ஆத்மீயங்களோபாதி ஆத்மாவையும் வேண்டேனென்றபடி.........................*

## ஈடு - பத்தாம்பாட்டு.

முதற்பாட்டிற்சொன்ன சீலகுணத்தையும் விரோதிநிரசநத்தையும்சொல்லி, அவன்விரும்பாத சத்தையாலென்ன கார்யமுண்டென்றுபக்ரமத்தோடேசேர வுபசம்ஹரிக்கிறார். ( உடம்பினாற்குறைவில்லா வுயிர்பிரிந்த மலைத்துண்டங்கிடந்தனபோல் துணிபலவாவசுரர் குழாந்துணித்து ) என்றத்தால் - “ நீறுகும்படியாக நிருமித்துப்படைதொட்ட ” என்றத்தைச்சொல்லுகிறது. (தடம்புனலசடைமுடியன் தனியொருகூறமர்ந்துறையு முடம்புடையான் ) என்றத்தால் - “ கூறாளும் தனியுடம்பன் ” என்றத்தைச்சொல்லுகிறது.

உடம்பினால்குறைவில்லா-அசுரர்குழாமாயிற்று. உயிரிலேயாயிற்று குறையுண்டாகிலுள்ளது. உயிரைத்தேய்த்துடம்பை வளர்த்திருந்தவர்கள் நித்யசம்சாரிகளாய்ப் போமித்தனையிறே. ( உயிரித்யாதி ) சப்ராணனாய்க்கொண்டு சஞ்சரிக்கிறபர்வதங்க ளிந்த்ரன்கையில் வஜ்ராயுதத்தாலே பலகூறும்படி துணியுண்டுகிடந்தாற்போலே யசுரவர்க்கத்தைப் பலகூறும்படி துணித்துகந்தானாயிற்று. உயிர்பிரிந்த மலைத்துண்டங் கிடந்தனபோல்-உடம்பினால்குறைவில்லா-அசுரர்குழாம் - துணிபலவா-துணித்துகந்த. “ தேவாநாம்தாநவாநாம்ச ஸாமாந்யம் ” ( தேவாநாம் தாநவாநாஞ்சஸாமாந்யம் ) என்கிறப்ராப்தியெல்லார் பக்கலிலுமுண்டாயிருக்க, “ இவர்களாஶ்ரிதவிரோதிகள் ” என்னுமாகாரத்தாலே யிவர்களைநிரசித்து, “ ஆஶ்ரிதவிரோதிகளை யறப்பெற்றோமிறே ” என்றத்தாலே யுகந்தானாயிற்று. ( தடம்புனலவித்யாதி ) திருமேனியிலே யிடங்கொடுக்கச்செய்தே, இதுதன்னைக்குணமாக வுபபாதிக்கும்படியாயிற்று அவர்களுடைய துர்மாநம். அபிமாநசூன்யரானயக்கவ்வுடம்பிலேயாயிற்று அபிமாநிகளுக்கு மிடங்கொடுக்கிறது. மிக்கநீர்வெள்ளத்தை யுடைத்தானகங்கையைத் தன்ஜடையி லேகதேசத்திலே தரிக்கையால்வந்த வபிமாநத்தையுடைய ருத்ரனானவன், பிராட்டிதிருமார்வைப்பற்றி “ இவ்விடமென்னிருப்பிடம் ” என்றபிமாநித் திருக்குமாபோலே, ஒருபார்ஶ்வத்தைப்பற்றி “ இவ்விடமென்னிருப்பிடம் ” என்றபிமாநிக்கும்படி அவனுக்கிடங்கொடுத்துக் கொண்டிருக்கிற திருமேனியையுடையவன். ( கவராதவித்யாதி ) இப்படிபொதுவான வுடம்புபடைத்தவன் ஆசைப்பட்டவெனக்குதவானாகில், இவ்வாத்மவஸ்துவைக்கொண்டென்ன

கார்யமுண்டென்கிறாள். இதுக்குமுன்பெல்லாம்-தேஹத்தையும் தேஹாநுபந்தி பதார்த்தங்களையுமிறே "வேண்டா" என்றது, அவைதான நித்யமாயிருக்கையாலே தன்னடையேகழியுமத்தை "வேண்டா" என்றதாயிருக்குமிறே; அதுக்காக நித்யமான வாத்மவஸ்துவையும் "வேண்டா" என்கிறாள். இத்தை "வேண்டா" என்கிறதுக்கடியென்னென்னில்; இதுகிடக்குமாகில், இன்னமுமொரு ஜந்மமுண்டாய்ப் பழையவையுமெல்லாம் வந்துதோற்றி முலையெழுந்து நோவுபடுகைக் குடலாயிருக்குமிறே. இனித்தானவனுடைய நித்யேச்சையாலேயிறே யிதினுடைய நித்யத்வமும், அவனுக்கிச்சை யில்லாதபோதுபின்னை யிதுதான்கொண்டு கார்யமில்லையிறே..............................................*

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு. (உடம்பினுலித்யாதி) முதற்பாட்டில்சொன்ன ஶீலத்தையும் விரோதிநிரசநத்தையும் இங்கேவ்யுத்க்ரமமாகக் காட்டுகிறார் (உடம்பினுலித்யாதி)

இவ்விசேஷணமெத்தோடே யந்வயிக்கிறதென்ன (உடம்பினுலித்யாதி) தேஹபோஷணத்திலே யொருசங்கோசமின்றிக்கே யிருக்கிறவஸுர ஸமூஹமென்றபடி. "உடம்பினுல்குறைவில்லா" என்றதுக்கு வ்யதிரேகத்திலேதாத்பர்யம் (உயிரிலேயித்யாதி) உபபாதகம் (உயிரையித்யாதி) உயிராத்தேய்த்து - "யொநஷ்யா ஸஞ்ஜ" (யோர்யதாஸந்தம்) "ஆஸந்நேவஸஹவதி" (அஸந்நேவஸபவதி) இத்யாதிப்படியே அசத்ப்ராயமாக்கி யென்றபடி. சப்தார்த்தம் (சப்ராணனுயிந்யாதி) துணி-துண்டம். அர்த்தாநுகுணமாக வந்வயிக்கிறார் (உயிரித்யாதி) ஹிம்ஸித்துககக்கலாமோவென்ன (தேவாநாமித்யாதி)

சர்வாபாஶ்ரயமான திருமேனியிலே ருத்ரனுக்கிடங்கொடுத்தாலிது ஶீலமாகவேணுமோவென்ன (திருமேனியிலேயித்யாதி) "இதுதன்னைக்குணமாகவுபபாதிக்கும்படியாயிற்று அவர்கள்தர்மாநம்" என்கிறதினுபபாதகம் (அபிமாநஶூந்யரித்யாதி) சப்தார்த்தம் (மிக்கவித்யாதி) "ஒருகூறு-தனி-அமர்ந்துறையு முடம்புடையான்" என்றந்வயித்து இதுக்குபாவம் (பிராட்டியித்யாதி)

கீழ்விட்டவற்றைப்பற்ற ஆத்மவஸ்துவுக்கேற்றமேதென்ன (இதுக்குமுன்பித்யாதி) ஆத்மவஸ்துவை "வேண்டா" என்றால்-அவன்விரும்பாதது வேண்டாவென்கிற வுறைப்புத்தோற்று மென்னுமளவேயல்ல, தனக்குவிரஹதாபம் வாராமைக் குறுப்பாயிருக்கு மென்னுமத்தை சங்காபரிஹாரமுகே வருளிச்செய்கிறார் (இத்தைவேண்டாவித்யாதி) பழையவையும்-பகவத்ஸ்வரூப ரூபகுணாத்யநுபவங்கள். முலையெழுந்தென்றதுக்கு - பக்தியுண்டாயென்று ஸ்வாபதேசம். நித்யமான வாத்மவஸ்து "வேண்டா" என்றால் போமோவென்ன (இனித்தானித்யாதி) தான் "இதுவேண்டேன்" என்னவே அவனுமப்படியே சங்கல்பிக்குமென்று கருத்து.

க்ரமேணார்வய:..............................................*

# பதினொன்றாம்பாட்டு.

---

உயிரினாற்குறைவில்லாவுலகேழ்தன்னுள்ளொடுக்கித்
தயிர்வெண்ணெயுண்டானைத்தடங்குருகூர்ச்சடகோபன்
செயிரில்சொல்லிசைமாலையாயிரத்துளிப்பத்தால்
வயிரஞ்சேர்பிறப்பறுத்துவைகுந்தநண்ணுவரே.

## ஆறாயிரப்படி.

(உயிரினால்) தேவாதிஸ்தாவராந்த சகலபூதஜாத பரிபூர்ண ஸர்வலோகபாலகனாயிருந்துவைத்து மநுஷ்யாதி ரூபேணாவதீர்ணனாய்க் கொண்டு ஆஶ்ரிதசுலபனாயிருந்தவெம்பெருமானைச்சொன்ன நிரவத்யமான வித்திருவாய்மொழிவல்லார், நிரஸ்தசமஸ்த ப்ரதிபந்தகராய்வைகுந்தம் நண்ணுவரென்கிறார்..........................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழிக்கு பலமாக, பகவச்சேஷத்வ பூர்வகமான பரமபதப்ராப்தியை யருளிச்செய்கிறார்.

உயிரினால்-ஆத்மாக்களால். குறைவில்லா-குறைவில்லாத. ஏழுலகு-சமஸ்த லோகங்களையும். தன்னுள்ளொடுக்கி - சங்கல்பாந்தர்ப்பூதமாம்படி ரக்ஷிக்கும்பரத்வத்தையுடையனாய். ரக்ஷ்யைகதேசத்திலே அவதீர்ணனாய், ஆஶ்ரிதருகந்த, தயிர்-தயிரையும். வெண்ணெய்-வெண்ணெயையும். உண்டானை-அமுதுசெய்த சௌலப்யத்தையுடையவனைப்பற்ற. தடம்-மஹாவகாசமான. குருகூர்-திருநகரிக்குநிர்வாஹகரான. சடகோபன்-ஆழ்வாருடைய. செயிர்-சப்தார்த்தங்களில்குற்றம். இல்-அற்ற. சொல்-சொல்லாயிருக்கிற. இசை-இசையோடுகூடின. மாலை-சந்தர்ப்பமாயிருக்கிற. ஆயிரத்துள்-ஆயிரந்திருவாய்மொழிக்குள்ளும். இப்பத்தால்-இப்பத்தாலே. வயிரம்சேர்-காழ்ப்பேறும்படி அநாதிஸித்தமான. பிறப்பு-சம்சாரசம்பந்தத்தை. அறுத்து-அறுத்து. வைகுந்தம்-பரமபதத்தை. நண்ணுவர்-கிட்டப்பெறுவர்கள்.

இது-கலிவிருத்தம். நாலடித்தாழிசையுமாம்.................................*

## ஈடு - பதினொன்றாம்பாட்டு.

நிகமத்தில்-இத்திருவாய்மொழியை யப்யஸித்தவர்கள், காழ்ப்பேறின சம்சாரதுரித மற்றுப்பரமபதத்திலே புகப்பெறுவர்களென்கிறார்.

(உயிரினாலித்யாதி) அசங்க்யேயரான ஆத்மாக்களால் பூர்ணமாயிருந்துள்ள வேழுலகத்தையும். (தன்னுள்ளொடுக்கித் தயிர்வெண்ணெயுண்டானை) தயிரும்வெண்ணெயும் களவுகாணப்புகுகிறபோது, "செருப்புவைத்துத் திருவடிதொழுவாரைப்போலே யந்யபரதைக் குடலாகவொண்ணாது" என்று, எல்லாலோகங்களுக்கும்வேண்டும் சம்வி

தாநம் தன்சங்கல்பத்தாலேசெய்து, பின்னையாயிற்று வெண்ணெயமுது செய்தது. ( உலகேழ்தன்னுள்ளொடுக்கித் தயிர்வெண்ணெயுண்டானை ) கர்ப்பிணிகள் வயிற்றில் பிள்ளைக்கிடாக போஜநாதிகள் பண்ணுமாபோலே, உள்விழுங்கின லோகங்களுக்கு ஜீவநமாகத் தயிர்வெண்ணெயுண்டான். சர்வேஶ்வரனாயிருந்துவைத்து, ஆஶ்ரிதஸ்பர்ஶமுள்ள த்ரவ்யத்தாலல்லது செல்லாதபடி யிருக்குமவனாயிற்று ; “ ஸவஸ்யஜகதஃபாலெளவத்ஸபாலெள பபூவதுஃ ” (ஸர்வஸ்யஜகதஃபாலெளவத்ஸபாலெள பபூவதுஃ ) என்னுமாபோலே. ( தடங்குருகூர்ச்சடகோபன் ) “ வ்ருந்தம்வ்ருந்தமயோத்யாயாம் ” ( வ்ருந்தம்வ்ருந்தமயோத்யாயாம் ) என்கிறபடியே - “ பெருமாளுடைய திருவபிஷேகமங்கள மஹோத்ஸவத்தைக் காணவேணும் ” என்றுநாடடையத் திரண்டுகிடந்தாற்போலே, இவர் “ ஆத்மாத்மீயங்கள்வேண்டா ” என்றுகழித்திருக்கிற விருப்பைக்காண்கைக்காகத்திரண்ட ஸ்ரீவைஷ்ணவ ஜநத்துக்கடைய விடம்போரும்படியான பரப்பையுடைத்தான திருநகரிக்கு நிர்வாஹகரானவாழ்வார். ( செயிரில்சொல்லிசைமாலை ) செயிரென்று-குற்றம். இல்லென்று-இல்லாமை. குற்றமின்றிக்கேயிருக்கை. அதாவது - “ ஆத்மாத்மீயங்கள்வேண்டா ” என்றவார்த்தையில் புரையற்றிருக்கை. ( வயிரஞ்சேர்பிறப்பறுத்து ) இவர் “ வேண்டா ” என்றுகழித்தாலும் விடாதபடி காழ்ப்பேறிக்கிடக்கிற சம்சாரத்தைக்கழித்து. ( வைகுந்தம்நண்ணுவரே ) ஒருடம்பாம், “இதுதானும்வேண்டா ” என்று கழிக்கும்படியான இவ்வுடம்பை விட்டு, “ ஸஏகதாபவதித்ரிதாபவதி ” (ஸஏகதாபவதித்ரிதாபவதி ” என்கிறபடியே-அவனுடைய சங்கல்பாதீநமாகவும் அதடியானதன் சங்கல்பாதீநமாகவு மநேகசரீர பரிக்ரஹம்பண்ணி யடிமைசெய்யலாம் தேசத்திலே போய்ப் புகப்பெறுவர். பலபடியாலு மடிமைசெய்யப்பெறுவர். “அவன் விரும்பினபடியிது ” என்றறியாதேயிறே யிவர்தாம் “ வேண்டா ” என்கிறது.........................................................................*

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் ( உயிரினலித்யாதி ) நாலாம்பாதத்தைக் கடாக்ஷித்தவதாரிகை. காழ்ப்பு-வயிரம்.

“ உயிர் ” என்கிறவேகவசநம் - ஜாத்யபிப்ராயமென்கிறார் ( அசங்க்யேயானவித்யாதி ) தன்னுள்-தன்சங்கல்பத்திலே. பெளர்வாபர்யத்துக்குபாவம் ( தயிருமித்யாதி ) “ தன்னுள் ” என்றதுக்கு-தன்சங்கல்பத்தி லென்றர்த்தமருளிச்செய்து, தன்திருவயிற்றிலே யென்றர்த்தாந்தரம் ( கர்ப்பிணிகளித்யாதி ) த்ருதீயதாத்பர்யம் ( சர்வேஶ்வரனாயித்யாதி ) யத்வா, அர்த்தத்வய பலிதமாதல். இத்தால்-பரத்வசெளலப்யங்களி ரண்டும்சொல்லிற்று. பரனாய்வைத்து ஸுலபனானதுக்கு ப்ரமாணம் ( சர்வஸ்யேத்யாதி ) “ ஸாெவைநமஹூதாதளதஃஸவ்வ

ஜகௌகாலே ஸர்வஸ்ய ஜகத: பாலௌவத்ஸபாலௌவபூவது: ”
( காலேநகச்சதாதெளஜாஸப்தவர்ஷௌமஹாவ்ரஜே । ஸர்வஸ்யஜகத: பாலௌவத்ஸபாலௌபபூவது: ” இதிபஞ்சமேம்ஶே.

பத்துப்பாட்டர்த்தத்துக்கு மறுகுணமாக “ தடம் ” என்றதுக்குபாவம் ( ப்ருந்தம்ப்ருந்தமித்யாதி ) “ ப்ருந்தம்ப்ருந்தமயோத்யாயாம்ராஜமார்க்காஸ்ஸமந்தத: । பஹுவ்ரபிஸம்பாதா: த்ருஷ்டுகாமா ஜநைர்வ்ருதா: ” ( ப்ருந்தம்ப்ருந்தமயோத்யாயாம்ராஜமார்க்காஸ்ஸமந்தத: । பஹுவ்ரபிஸம்பாதா: த்ருஷ்டுகாமா ஜநைர்வ்ருதா: ) இத்யயோத்யாகாண்டே.

குற்றமேதென்ன ( அதாவதித்யாதி ) புரை-மித்யை.

“ வயிரம்சேர் ” என்றதுக்குவாஸனை ( இவர்வேண்டாவென்றித்யாதி ) “ பிறப்பு ” என்றதுக்கு-சம்சாரமென்று கீழேயருளிச்செய்தது, (உடம்பைவிட்டு) என்றர்த்தாந்தரம். சாடு ( பலபடியாலித்யாதி ) படி-சரீரமும், ப்ரகாரமும். இவர் திருமேனியை நித்யமுக்தர் திருமேனியைப்போலே அவன்விரும்பாநிற்க, இவர் “ வேண்டா ” என்பானென்னென்ன ( அவன்விரும்பினபடியித்யாதி ) க்ரமேணாந்வய:..................................................*

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

(ஏருளுமிறையோனும்.)

ஸௌந்தர்யாதௌஸ்வகீயே ஹ்ருதிசகநிகரே பூர்ணதாயாஞ்ச காந்தௌ ஸம்யக்ஜ்ஞாநே ப்ரகாஶே பலயஶஸோர்வர்ஷ்மணி ஸ்வஸ்வரூபே । ப்ரஹ்மேஶாநப்ரதிஷ்டாஸ்பதவபுஷி ஹரௌ தூயமாநேயதீயம் பாதீத்யாஹந்துசக்ஷணமிதமகிலம் தேஹதோஷைர்வயந்ஹ்ருத் தாஜஹௌ. (௪௬)

(ஸௌந்தர்யாதௌஸ்வகீயே) மாருளன்கவராதமணிமாமைகுறைவிலமே- ஸௌந்தர்யஸௌகுமார்யங்களிலும் ; ( ஹ்ருதிசகநிகரே ) மணிமாயன் கவராதமடநெஞ்சால்குறைவிலமே- மநஸ்ஸுமுதலானகரணங்களிலும் ; (பூர்ணதாயாஞ்ச) நெடுமாயன்கவராதநிறைவினால்குறைவிலமே - அடக்கத்திலும் ; (காந்தௌ) சுறையினார்கவராததளிர்நிறத்தால்குறைவிலமே- தேஹகாந்தியிலும் ; (ஸம்யக்ஜ்ஞாநே) அளிமிக்கான்கவராதவறிவினால் குறைவிலமே - நல்லஜ்ஞாநத்திலும் ; (ப்ரகாஶே) கிறியம்மான் கவராத கிளரொளியால் குறைவிலமே - ஸமுதாயஶோபையிலும்; (பலயஶஸோ:) வளரொளியான் கவராத வரிவளையால்குறைவிலமே, விரிபுகழான் கவராதமேகலையால் குறைவிலமே - வளைகளிலும், ரஶநையிலும் ; ( வர்ஷ்மணி) யோகணைவான்கவராத வுடம்பினால் குறைவிலமே-சரீரத்திலும் ; ( ஸ்வஸ்வரூபே ) உடம்புடையான் கவராதவுயிரினால் குறைவிலமே - ஆத்மஸ்வருபத்திலும் ; இவைகளிலே, ப்ரஹ்ம ருத்ரர்களுக்குங்கூடத் தன் திருமேனியிலே யிடங்கொடுத்த குணவானான வெம்பெருமானுக்குபேக்ஷயுண்டாயவன்விரும்பானுகிலித்தனையும், “ நதேஹந்நப்ராணாந் ” (நதேஹந்நப்ராணாந்) இதிந்யாயேந பகவத்பக்தர்களாலே பரித்யாஜ்யமென்று * ஏருளுமிறையோனிலே யாழ்வாரருளிச்செய்தாரென்கிறார். (௪௬)

# திருவாய்மொழி நூற்றந்தாதி.

ஏறுதிருவுடையவீசனுகப்புக்கு
வேறுபடிலென்னுடைமைமிக்கவுயிர் - தேறுங்கால்
என்றனக்கும்வேண்டாவெனுமாறன்றாளைநெஞ்சே
நந்தமக்குப்பேறுகாண்ணு. (௩அ)

(ஏறுதிருவுடையவீசன்) இதில்-இவ்வாற்றாமைக் குதவாமையாலே யவனுக்குறுப்பல்லாத வாத்மாத்மீயங்களில் தாம்நசையற்ற படியைப்பேசின பாசுரத்தை யருளிச்செய்கிறார். அதெங்ஙனேயென்னில்; கீழ் * சீலமில்லாச்சிறியனில் * ஓலமிட்டழைத்த விடத்திலும்வந்து முகங்காட்டக்காணாமையாலே, "ப்ராப்தனுய் சீலவானுய் விரோதிநிரசந சமர்த்தனுமிருக்கிற சர்வேஸ்வரனித்தசையில் முகங்காட்டாமைக்கடி யித்தலையைவேண்டாதொழிகையிறே, அவனுக்குவேண்டாதவென்னுத்மாத்மீயங்களா லெனக்கொருகார்யமில்லை" என்று அவற்றில் நஸையற்றபடியை அந்யாபதேசத்தாலே யருளிச் செய்கிற * ஏருளுமிறையோனிலர்த்தத்தை "ஏறுதிருவுடைய வீசனுகப்புக்கு" என்றுதொடங்கி யருளிச்செய்கிறாரென்கை.

(ஏறுதிருவுடையவீசன்) பிராட்டி ஏகாயனையாகையாலே "நஹி3ஜீவிதே ந" (நஹிமேஜீவிதேந) இத்யாதியாலே-அத்தலைக் குறுப்பல்லாத வாத்மாத்மீயங்களில் நசையற்றபடிசொன்னாள்; இவர்மிதுநாயகராகையாலே "திருமகளும் கூறாளுந்தனியுடம்பன்" என்றும், "மலர்மாதருறைமார்பன்" என்றும், "படநாகத்தணைக்கிடந்த பருவரைத்தோள் பரம்புருடன்" என்றும்-இப்படி ஸ்ரீயஃபதியாயிருக்கிற சர்வேஸ்வரனுடைய வுகப்புக்குப் புறத்தியான மாமைமுதலான வுடைமையோடுயிரோடு வாசியறவேண்டாவென்கிறாள்.ஏறுதிருவுடையவீசனென்று - ஸ்ரீயஃபதித்வத்தால்வந்த சர்வேஸ்வரத்வம்சொல்லுகிறது. (ஏறுதிரு) "யயளவக்ஷஸ்ஸ்த2லம் ஹரே:" (யயௌவக்ஷஸ்ஸ்த்தலம்ஹரே:) என்று-அருடஸ்ரீகனிறே. ஏவம்விதனானவனுடைய. (உகப்புக்குவேறுபடில்) அதாவது-சந்தநகுசும தாம்பூலாதிகளைப்போலே யவனுக்கிஷ்ட விநியோகார்ஹமா யிருக்கையன்றிக்கே ஸ்வார்த்தத்துக் குறுப்பாயிருக்குமாகில். அத்தையாயிற்று - "தவஶேஷத்வவிபவாத்பஹிர்பூதம்" (தவஶேஷத்வவிபவாத்பஹிர்ப்பூதம்) என்றது. (என்னுடைமை) அதாவது - "மணிமாமை, மடநெஞ்சால், நிறைவினால், தளிர்நிறத்தால், அறிவினால், கைளரொளியால், வரிவளையால், மேகலையால், உடம்பினால்" என்று-ஆத்மீயங்களாயுள்ளவை. (மிக்கவுயிர்) இவற்றில் விலக்ஷணமாய் ஜ்ஞாநாநந்தஸ்வரூபமாய் பகவச்சேஷமாய், ஸ்ரீஸ்தநம் ஸ்ரீகௌஸ்துபம்போலே யெம்பெருமானுக்கு போக்யமாயிருப்பதொன்று. (தேறுங்கால்) பரப்ரீதிவிஷயமாயிருக்கிறவாகாரத்தை நன்றாகத்தெளியுங்கால். "நாரணன்றன்வாடாத மலரடிக்கீழ்வைக்கவே வகுக்கின்று" என்றும், "தனக்கேயாகவெனைக்கொள்ளுமீதே" என்றும், "உன்றன்றிருவுள்ளமிடர்கெடுந்தோறும்" என்றுமிப்படிதெளிய வாராய்ந்தாலத்தலைக் குறுப்பாயேயிருக்கவேணும்; இப்படியன்றிக்கே வேறுபட்டதாகில்-ஸ்வார்த்ததைக் குறுப்பாகில். (என்றனக்கும்வேண்டா) பரதந்த்ரனானவெனக்குத்தானும்வேண்டா. (எனுமாறன்றாளைநெஞ்சேநந்தமக்குப்பேறுகாண்ணு) என்றிப்படியருளிச்செய்யு மாழ்வார்திருவடிகளை, நெஞ்சே, நமக்கு ப்ராப்யமாம்படியடை. நமக்கிந்நிர்ப்பந்தங்களொன்றும்வேண்டா, ஆழ்வார் திருவடிகளே ப்ராப்யமென்று ப்ராபி........................................................................(௩அ)

நாலாம்பத்தில்-எட்டாந்திருவாய்மொழி முற்றிற்று.
ஆக - திருவாய்மொழி - ௩அ—பாட்டு - ௬௨௦.

ஸ்ரீ

# திருவாய்மொழி.

## நான்காம்பத்து.

## ஒன்பதாந்திருவாய்மொழி.

### நண்ணாதார் - ப்ரவேஶங்கள்.

### ஆறாயிரப்படி.

(நண்ணாதார்) இப்படி பரமபுருஷவிஶ்லேஷ ஜநிதஶோகாக்நியாலே தஹ்யமாநராயிருக்கச்செய்தே, அதின்மேலே, பகவத்ஸம்ஶ்லேஷ விஶ்லேஷைக சுகதுஃகத்வரஹிதராய் சேதநாசேதநாத்மகஸமஸ்தவஸ்துநேத்ரு பகவச்சேஷதைகரதித்வஜ்ஞாநரஹிதராய் பகவத்வ்யதிரிக்த ப்ராக்ருதவிஷயலாபாலாபைக சுகதுஃகராயிருந்த அவைஷ்ணவர்களோடுள்ள ஸஹவாஸமாகிற மஹாக்நியாலே தஹ்யமாநரான ஆழ்வார், இந்த அவைஷ்ணவஸஹவாஸத்தைக்காட்டிலும் முடிகையேநன்று, ஆனபின்படியேனை முடித்தருளவேணுமென்றெம்பெருமானையபேக்ஷிக்கிறார்..., ......*

### பன்னீராயிரப்படி.

ஒன்பதாந்திருவாய்மொழியில், இப்படியவன்விரும்பாத ஆத்மாத்மீயங்களிலுமநாதரம்பிறந்தவளவிலுமநுபவம் சித்தியாமையாலே யத்யந்தமார்த்தரான தமக்கு உசாத்துணையாகைக்கு யோக்யரல்லாதபடி சம்சாரத்திலுள்ளாருமதிசயித்தது:கமக்கராய்க்கொண்டு க்லேஶிக்கிறபடியைக்கண்டு, சகலக்லேசநிவர்த்தகனாய் நிரதிசயபோக்யனான சர்வேஶ்வரனுடைய; அர்த்திதார்த்தகரணத்தையும், சாதாரணபந்தத்தையும், அபரிச்சிந்நஸௌந்தர்யத்தையும், அவ்வழகையநுபவிப்பிக்கு மௌதார்யத்தையும், அநுபவிப்பார்க்குக் கைக்கடங்கும்படியான ஸௌலப்யத்தையும், போக்யதாதிசயத்தையும், சர்வாத்மபாவத்தையும், சகலஜகத்காரணத்வத்தையும், ஆஶ்ரிதஸம்ஶ்லேஷஸ்வபாவத்தையும், லக்ஷ்மீஸகத்வத்தால்வந்த பரமப்ராப்யத்வத்தையுமநுஸந்தித்து "ஏவம்விசிஷ்டனான நீ அத்யந்தாஸஹ்யமாம்படி க்லேஶோத்தரமான சம்ஸாரத்திலேயிருத்தி யென்னை க்லேஶிப்பியாதே, உன்திருவடிகளிலே சேர்த்துக்கொள்ளவேணும்" என்று கூப்பிட்டு, இவரபேக்ஷாநுரூபமாக அவனும் பரமபதத்திலே "𑌶𑍍𑌰𑌿𑌯𑌾 𑌸𑌾𑌰𑍍𑌧𑌂 𑌜𑌗𑌤𑍍𑌪𑌤𑌿𑌃" (ஶ்ரியாஸார்த்தம்ஜகத்பதி:) என்றிருக்கிற விருப்பைக்காட்ட, மாநஸஜ்ஞாநத்தாலேகண்டு, ஐஶ்வர்யகைவல்யங்களினுடைய ஹேயதாப்ரதிபத்தி பூர்வகமாக அவன்திருவடிகளையே பரமப்ராப்யமாகப் பற்றினபடியை யருளிச்செய்கிறார்........ ..............*

ஈடு.

“ உடம்புவேண்டா, உயிர்வேண்டா ” என்று இவற்றையுபேக்ஷி த்துப்பார்த்தார், தாம் “ வேண்டா ” என்றவாறே தவிருமாகக்கொண் டு ; அவைதவிர்ந்தனவில்லை ; ஒன்றைப்பெறுகைக்கேயன்றிக்கே முடி கைக்குமுன்தரவுவேணுமாகில் அத்தைத்தந்தருளவேணுமென்கிறார். இ வ்வமங்களஸப்ததத்தைத் திருமுன்பே விண்ணப்பம்செய்யவேண்டும்படி யாகக்காணுமிவர் சம்ஸாரத்தைவெறுத்தபடி. எம்பார், “ உன்னைப்பிரி ந்திருந்துபடுகிற க்லேசத்தினளவல்ல உன்னையொழியப்புறம்பே பேறு மிழவுமாயிருக்கிற சம்ஸாரிகள் நடுவேயிருக்கிற விருப்பால் படுகிற க்லே சம், இத்தைத் தவிர்த்தருள வேணுமென்கிறார் ” என்றருளிச்செய்வர். [ உத்பாதகதாபாணிஃ ] ( உத்பபாதகதாபாணிঃ ) ராவணனோடே பொ ருந்தாமை பிறந்தபின்பு, நெருப்புப்பட்டதரையில் கால்பாவாதாப்போ லே யவ்விடமடிகொதித்துப் போந்தானாயிற்று [ கதா ] ( கதா ) அங்கு ள்ளாரில் “ நநமேயம் ” ( நகமேயம் ) என்னதது தடியொன்றுமேயாயி ற்று. [ சதுர்ப்பிঃ ] ( சதுர்ப்பிঃ ) அதுவுமெடுத்துத் தோளிலேவைக்க வேணுமே. அதுவும்வேண்டாதார் நால்வருமேயாயிற்று. இத்தால் ஒருவ ன் “ பகவத்விரோதத்திலே நிலைநின்றான் ” என்றறிந்தால் தன்னைக்கொ ண்டகலவிடேயடுப்பது. ஆழ்வானங்ஙனன்றிக்கே, “ *ஏருருமிறையோ னில் தம்முடையவாற்றாமைக்குக் கூட்டாவாருண்டோ, என்றுலோகவ்ரு த்தாந்தத்தை யன்வேஷித்து சம்ஸாரிகளைப்பார்த்தார் ; அவர்கள், தாமி வ்விஷயத்தில் ப்ரவணராயிருக்கிறாப்போலே சப்தாதிவிஷயங்களிலே ப் ரவணராய், அவற்றினுடைய பேறிழவுகளே லாபாலாபமாம்படியிருந்தா ர்கள்; வாளேறுகாணத்தேளேறுமாய்ந்து, அத்தைக்கண்டவாறே தம்மிழ வைமறந்தார், இவர்களுடைய விழவே நெஞ்சிலேபட்டது ; சர்வேஶ்வர னைப்பார்த்தார், அவன் சர்வஜ்ஞனாய் சர்வசக்தியாய் பரமோதாரனாய் எ ல்லாருடைய ரக்ஷணத்திலே தீக்ஷித்திருக்குமவனாய் சர்வாபராதஸஹனா ய் சர்வநியந்தாவாயிருந்தான் ; அவன்படியிதுவாயிருக்க, இவையிப்படி நோவுபடுகைக்கிவ்விடம் தன்னரசுநாடோ, என்றுபார்த்து, நீ சர்வேஶ் வரனாய் பரமக்ருபாவானாய் ப்ராப்தனுமாயிவற்றின் க்லேசமறிந்து பரிஹ ரிக்கைக்கிடான ஜ்ஞாநசக்தியை யுடையையுமாயிருக்க, இவை யிங்ங னேகிடந்து நோவுபடுகைபோருமோ, இவற்றைக் கரைமரஞ்சேர்க்க வேணும், என்று அவன்திருவடிகளைப்பிடிக்க, ‘ நம்மால் செய்யலாவது ண்டோ, இவைசேதநரானபின்பு இவை தனக்கேருசியுண்டாகவேணுமே’ நாம்கொடுக்கிற விதுபுருஷார்த்தமாகவேணுமே, புருஷனர்த்திக்கக்கொ டுக்குமதிறே புருஷார்த்தமாவது ; அசித்தாய் நாம் நினைத்தபடி. கார்யங் கொள்ளுகிறோமல்லோமே, இவற்றுக்கு நம்பக்கலிலே ருசிபிறக்கைக்கு நாம்பார்த்துவைத்த வழிகளையடையத் தப்பினபின்பு நம்மால்செய்யலா

யதில்லைசானாலும், நீரித்தைவிடும், என்று சமாதாநம்பண்ண, நீ பண்ணின விதுபரிஹாரமாய் நான்ஸமாஹிதனாவது ‘இவைதங்கார்யத்துக்குத் தாம்கடவவராய்நோவுபடுகிறன’ என்றுன்னல் சொல்லலாமன்றன்றோ’ என்ன, இவைசேதநராகையாலே ‘இவற்றின் வாசியறியவேணும்’ என்று நம்மையொருதட்டும் சப்தாதிகளை யொருதட்டுமாகவைத்து ‘உங்களுக்கு வேண்டிற்றொன்றைக்கொள்ளுங்கோள்’ என்ன, சப்தாதிகளிருந்த தட்டுத்தாழ்ந்திருக்கையாலே அத்தட்டை ‘அமையும்’ என்றுபற்றிற்றின, நாமுமாங்தனையும்பார்த்து முடியாமைகாணும் கைவாங்கிற்று, இனி நம்மால் செய்யலாவதில்லை ; இனி நீருமித்தைவிடும்’ என்ன, ‘ஆகில், உன்னைபொழியப்புறம்பே பேறுமிழவுமாயிருக்கிறவிவர்கள் நடுவில்நின்றுமென்னைமுன்னம்வாங்கவேணும்’என்ன,‘முன்பேயும்மைவாங்கினோமே; சம்ஸாரிகளோடு பொருந்தாதபடி பண்ணினோமாகில், சம்ஸாராநுஸந்தாநத்தாலேவந்த க்லேசமெல்லாம்போம்படி ‘உம்முடையவிருப்பிது காணும்’ என்று பரமபதத்தில் * அயர்வறுமமரர்க ளடிமைசெய்யப் பெரியபிராட்டியாரும் நாமுமாக வ்யாவ்ருத்தமாகவிருக்கிற விருப்பைக்காட்டித்தந்து அங்கேயும்முடைய நெஞ்சு ப்ரவணமாம்படி பண்ணினோமாகில், இனி யுமக்குப் பேற்றுக்குக்குவாலுண்டோ, நாம்செய்யவேண்டுவதென்’ என்ன, இவையிரண்டையு மநுசந்தித்து தரித்து க்ருதார்த்தராய்த் தலைக்கட்டுகிறார்” என்று பணிக்கும், (“மையகண்ணாள் மலர்மேலுறைமார்பினன் செய்யகோலத்தடங்கண்ணன் விண்ணோர்பெருமான்’றன்னை” என்று கண்டநுபவித்தாரிறே.) ஆழ்வான்ருணேரிடத்தேவழி போகாநிற்க, ஒருசர்ப்பம் தப்பளையைப்பிடித்துக் கூப்பிடாநிற்க, “இதாரறியக்கூப்பிடுகிறது” என்றுமோஹித்தாநும் ; இவ்வாழ்வான் ப்ரக்ருதிக்குச்சேருமே யவர்நிர்வாஹமும்..............................*

## ஜீயர் அரும்பதம்.

நண்ணாதார் ப்ரவேசம். இத்திருவாய்மொழிக்கு மூன்றுவிதமாகசங்கதி, அதில்முந்தினது (உடம்புவேண்டாவித்யாதி) இதுக்கு-“சாமாறே-பணிகண்டாய்” என்றதிலேநோக்கு. மங்களாசாசநபரரான விவர் “ நாஶ்லீலங்கீர்த்தயேத் ” (நாஸ்லீலம்கிர்த்தயேத்) என்றிருக்க திருமுன்பே “சாமாறே-பணிகண்டாய்” என்னலாமோவென்ன (இவ்வமங்களோத்யாதி) தவிருமாகக்கொண்டு - நிவர்த்திக்குமென்றநுஸந்தித்துக்கொண்டு. ஒன்றைப்பெறுகைக்கேயன்றிக்கே- ஒருபுருஷார்த்தத்தைப் பெறுகைக்குன்னுடையசங்கல்பம் வேண்டினவளவேயன்றிக்கே. தரவு-கிட்டு.

லோகயாத்ரையையநுசர்த்தித்து“இவைகண்டிராதபடியென்னையங்கீகரிக்கவேணும்”என்கிறவிதுபகவத்விஶ்லேஷத்தாலே நோவுபடுகிறப்ரகரணத்தோடு பொருந்தாதி! யென்கிறசங்கையிலே;இதுக்கிரண்டுபடியாக வாசார்யர்கள் நிர்வஹிப்பரென்கிறார்(எம்பாரித்யாதிவாக்யத்தாலும் ஆழ்வானித்யாதிவாக்யத்தாலும்) ஆகமூன்றுவிதமாகசங்கதி,எம்பார்நிர்வாஹமாவது-“நண்ணாதார்முறுவலிப்ப” என்றுதொ

டங்கி "இவையென்னவுலகியற்கை" என்று-இவர்களோட்டை சஹவாசம் துஸ்ஸஹமென்கிறத்தையநுசந்தித்து, "கண்ணாளா கடல்கடைந்தாய்" இனியிவர்கள் நடுவிலிருக்கக்கூடாதாகையாலே, உனகழற்கே வரும்பரிசு தண்ணவாதடியேனை- சாமாறு- "பணிகண்டாய்" என்றுயதாஸ்திதம். இவர்நிர்வாஹத்துக்குஸ்வரக்ஷணத்துக்குடலாக-குணாநுசந்தாநம். ஆழ்வான் நிர்வாஹமாவது-"கண்ணாளா கடல் கடைந்தாய், நண்ணாதார்முறுவலிப்ப" என்றுதொடங்கி "இவையென்னவுலகியற்கை" என்று-அவன் குணங்களையும்சொல்லி சம்சாரிகளுடைய விழவையு மநுசந்தித்து, "நீயிப்படிகுணாதிகனாயிருக்க இவர்கள் யாத்ரையிருந்தபடியென்" என்றுவிண்ணப்பம்செய்ய, அவனும் "இத்தைவிட்டு உம்முடைய பலத்தைநீர்கண்டுகொள்ளும்" என்றருளிச்செய்ய, "ஆனாலிவர்களோட்டைசஹவாசம்துஸ்ஸஹம், இவர்கள் நடுவிலிராதபடி திருவடிகளிலே சேர்த்துக்கொண்டருளவேணும் என்று ப்ரார்த்திக்கிறானென்று, இவர்நிர்வாஹத்துக்கு பராக்ஷணார்த்தமாக - குணாநுசந்தாநம். ஆழ்வான்நிர்வாஹத்துக்கு பாட்டுக்கள்தோறும்-குணவாசகசப்தங்கள் முன்னேவைத்துநிர்வஹிப்பது; எம்பார்நிர்வாஹத்துக்கு, அடைவேயோஜநை.

"க்லேசத்தினளவல்ல வென்றவிடத்திலே-பிராட்டிக்கிரண்டிடத்திலேயும் பிரிவொத்திருக்க, லங்கையில் பிரிவுராக்ஷசிகள் சஹவாசத்தாலே துஸ்ஸஹமாயிருந்ததிறே என்றருளிச்செய்வர். பகவத்விமுகரோட்டை சஹவாசம் துஸ்ஸஹமென்னுமதுக்குதாஹரணம் (உத்பபாதேத்யாதி) "உத்பபாத கதாபாணி: சதுர்பிஸ்ஸசிவைஸ்ஸஹ" (இத்யுக்த்வா பருஷம்வாக்யம் ந்யாயவாதீவிபீஷண:। உத்பபாதகதாபாணி ஶ்சதுர்பிஸ்ஸசிவைஸ்ஸஹ) இதியுத்தகாண்டே ஷோடஶ. "உத்" என்கிறஉபஸர்க்கார்த்தம் (ராவணனோடித்யாதி) அங்குள்ளாரில்-லங்கையிலுள்ளாரில் "நகமேயம்" (நகமேயம்) என்னுமை-அசேதநமாகையாலே. ராவணனையாந்தனையும் ஹிதம்சொல்லி, "த்வாம் துதிக்" (த்வாம்துதிக்) என்றபின்புவிட்டுப்போருகையாலே பலிதமானதோரர்த்தவிஶேஷத்தை யருளிச்செய்கிறார் (இத்தாலித்யாதி) இங்கே- "வரம்ஹுதவஹஜ்வாலா" (வரம்ஹுதவஹஜ்வாலா) "ப்ரியம்ஜநமபஶ்யந்தீம்" (ப்ரியம்ஜநமபஶ்யந்தீம்) இத்யாத்யநுசந்தேயம்.

ஆழ்வானென்றதுக்கு - மேலே (பணிக்கும்) என்றத்தோடே யந்வயம். ஆழ்வான்நிர்வாஹத்துக்கு முன்றும்பாட்டு போரச்சேர்ந்திருக்கும். வாளேறு - கட்கப்ரஹாரம். தேளேறு - தேள் விஷமேறுகை, மாய்ந்து - நசித்து. அவர்களுக்கு ஹிதமருளிச்செய்ய வொண்ணாதோவென்ன (ஸர்வேஶ்வரனையித்யாதி) அவன் சர்வஜ்ஞனென்றது - "ஆமாறொன்றறியேன்" என்றதுக்கு ப்ரதிகோடித்வேநவிவக்ஷிதம், சர்வசக்தியாயென்றது - "கடல்கடைந்தாய்" என்றத்தைப்பற்ற. பரமோதாரனென்றது - "வள்ளலே" என்றத்தைப்பற்ற. எல்லாருடைய ரக்ஷணத்திலே தீக்ஷித்திருக்குமவனென்றது - "அரவணையாய்" என்றத்தைப்பற்ற. சர்வாபராதசஹனென்றது - "வினையேனை யுனக்கடிமை யறக்கொண்டாய்" என்றத்தைப்பற்ற. ஸர்வ நியந்தாவாயென்றது - "கண்ணாளா" என்றத்தைப்பற்ற. தன்னரசுநாடு - அராஜகமாய் ஸ்வதந்த்ரமாயிருக்கிறதேஶம். "அம்மானே" என்றத்தைப்பற்ற (நீசர்வேஶ்வரனென்றது) "கண்ணாளா" என்றத்தைப்பற்ற (பரமக்ருபாவானென்றது) இதுக்கு - க்ருபாவானென்றுமொருயோஜநையுண்டிறே. ப்ராப்தனுமாயென்றதும் - "அம்மானே" என்றத்தைப்பற்ற. போருமோ-

கூடுமோ. வழிகளையடையத்தப்பினவென்றது-ஸ்ருஷ்டியும், அவதாரமும்சொல்லுகையாலே."ஆயேயிவ்வுலகத்து" இத்யாதியைப்பற்ற (இவைதங்கார்யத்துக்கித்யாதி) விபவார்ச்சாதிகளில்தான் ஸௌந்தர்யாதி விசிஷ்டனாய் இவற்றின்கண்முன்னேநிற்குமத்தைநினைத்து (நம்மையொருதட்டுமென்கிறார்) (நம்மையொருதட்டும் சப்தாதிகளையொருதட்டும்) என்றதுக்குஸூசகம் - "அறப்பொருளையறிந்தோரார்" என்றது. (சப்தாதிகளிருந்த தட்டுத்தாழ்ந்திருக்கையாலே) என்றதில் தாழ்ந்திருக்கையென்றதுக்குத்வந்யர்த்தம்- சப்பளையானவிடமென்று. ஸ்வபாவார்த்தம் - தராசிலே யிரண்டுதட்டிலும் படிக்கல்லைவைத்தால் தாழ்ந்தவிடம் ஶ்லாக்யமென்று. ஆனாலும்விஷயங்களைஶ்லாக்யமென்கிறது - ஸம்சாரிகள்நினைவாலே; ரத்நத்தோடே பெரியகல்லைநிறுத்தால் தாழ்ந்திருந்தாலும் ஹேயமாமாப்போலே ஶப்தாதிவிஷயங்களும் ஹேயமென்றுகருத்து. ஆந்தனையும் - சக்யமானவளவும். முடியாமை-முகியாமை. என்னைமுன்னம் வாங்கவேணுமென்றது - "அங்கு-வாங்கு" என்றத்தைப்பற்ற. இதுக்குக்கருத்து-இவர்களநர்த்தம் நான்காணமாட்டேனென்று. "வேட்கையெல்லாம்விடுத்து" என்றத்தைப்பற்ற (சம்சாரிகளோடு பொருந்தாதபடியித்யாதி) இருப்பிடுகாணுமென்றது - "ஒண்டொடியாள்திருமகளும்" இத்யாதியைப்பற்ற. குவால்-அதிகம். இவையிரண்டையுமென்றது-சம்சாரிகளோடு பொருந்தாமையையும், பிராட்டியும் தானுமான விருப்பைக்காட்டித் தந்தத்தையும்.

"இனியென்னாரமுதே" என்றிருக்கையாலே - அவன்ப்ரத்யுத்தரம்சொல்ல, தம்மையழைத்துக் கொள்ளவேணுமென்றது ஸ்ப்புடம். இவற்றைக்களாமரம் சேர்க்கவேணுமென்றித்யாதியாலே-த்விவாரமுக்தி ப்ரத்யுக்தியாக வருளிச்செய்தவிதுக்கு சப்தமேதென்னில்; பலபாட்டுக்களிலும் "இவையென்னவுலகியற்கை என்றுசொல்லுகையாலே. ஆழ்வான்நிர்வாஹத்துக்கு-இவற்றையும்திருத்தி நல்வழிபோக்காயென்றுகருத்து. எம்பார்நிர்வாஹத்துக்கு - "கொடுவுலகம்காட்டேல்" என்றதிலேநோக்கு. ஆழ்வான்நிர்வாஹத்துக்கு - "இனி" என்றதிலேநோக்கு. ஆழ்வாருடைய தயாளுதாப்ரதிபாதகமான விந்நிர்வாஹம் பரமதயாளுவானவாழ்வான் ப்ரக்ருதிக்குச்சேருமென்கைக்காகவைதிஹ்யம் (ஆழ்வான்றனித்யாதி) ஆழ்வான், திருக்காவேரியிலே குடமெடுத்து விடுவாரின்றியிலே க்லேசிக்கிறவொரு ஸ்த்ரீக்குத்தண்ணீர்க் குடமெடுத்துவிட்ட கதையையுமருளிச்செய்வர். இவ்விடத்திலே - "ஆழ்வாருக்கு மூன்றுவிதமாகவார்த்தியுண்டு" என்றருளிச்செய்வர். அதாவது-ப்ரக்ருதிசம்பந்த நிபந்தநமானவார்த்தி - * முந்நீர்ஞாலத்திலே. பகவத்விஶ்லேஷ ப்ரயுக்தமானவார்த்தி - * சிலமில்லாச்சிறியனிலே, சம்சாரிகளிழவைக்கண்டு வருமார்த்தி - இத்திருவாய்மொழியிலே.............................................*

---

## ஒன்பதாந்திருவாய்மொழி.

## முதற்பாட்டு.

நண்ணாதார்முறுவலிப்பநல்லுற்றார்கரைந்தேங்க
வெண்ணாராத்துயர்விளைக்குமிவையென்னவுலகியற்கை
கண்ணாளாகடல்கடைந்தாயுனகழற்கேவரும்பரிசு
தண்ணாவாதடியேனைப்பணிகண்டாய்சாமாறே.

## ஆருயிரப்படி.

ச்ருஹக்ஷேத்ர தநாதிவிஷய ஸ்ப்ருஹையாலே ததபஹாரணத்யநிஷ்டங்களைப்பண்ண ப்ரதிகூலருகக்கவும், அநுகூலரின்னுகாகவும், பிறர்க்கு துக்கங்களையேவிளைத் தங்யபரமாய், எம்பெருமான் றிறத்துப்படக்கடவதன்றியேயிருந்த விந்தலோகப்ரஸ்த்தாரமிருந்தபடியென். இந்தலோகத்தோ டெனக்கிருப்பரிது ; ஆனபின்பு, ஆஸ்ரிதசமீஹித நிர்வர்த்தநைக ஸ்வபாவமாய் அபரிமிதகாருண்ய பரிபூர்ணமாய் அதிசீதளமான வுன்னுடைய திருக்கண்களாலே யென்னைக்குளிரப்பார்த்தருளி, இவர்கள்நடுவில்நின்று முன்றிருவடிகளிலே யென்னைவாங்கியருளுதல், அன்றியே யிண்டெனவென்னை முடித்தருளுதல் செய்யவேணுமென்றபேக்ஷிக்கிருர்.

## பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், சம்சாரிகள் படுகிற துக்கமசஹ்யமாயிராநின்றது; ஆனபின்பு ஆஶ்ரிதர்க்கருந்தொழில் செய்துமபேக்ஷிதங்கொடுக்கும்நீ இத்துக்கங்காணுதபடி யென்னை சரீரவிஶ்லேஷம்பிறப்பிக்கவேணுமென்கிருர்.

நண்ணுதார் - சாத்ரவத்தாலே பிவனையணுகிராதவர்கள். முறுவலிப்ப-இவனநர்த்தத்துக்குப்ரீதராய்ஸ்மிதம்பண்ணும்படியாகவும். நல் - ஸ்நேஹத்தாலே கிட்டியிருக்கிற. உற்ருர் - பந்துக்கள். கரைந்து - இவனநர்த்தத்துக்குசிதிலராய். ஏங்க - "என்னுகிறதோ" என்று ஏங்கிக்லேசிக்கவும். எண்- எண்ணுதலில். ஆரா- அடங்காத. துயர் - துக்கங்களை. விளைக்கும் - தன்னில்தான் விளைத்துக்கொண்டு போருகிற. இவை - இந்த. உலகியற்கை - லோகயாத்ரைகள். என்ன - என்னுயிருக்கிறன. கண்ணுளா - நிருபாதிகநிர்வாஹகனுகையாலேகாருணிகனுய் ப்ரயோஜநாந்தரங்களை வேண்டிலும். கடல் - கடலை. கடைந்தாய் - கடைந்துகொடுக்கும் ஸ்வபாவத்தையுடையவனே. இந்தலோகக்லேசங்காணுதே, உன-ப்ராப்தனுனவுன். கழற்கே-திருவடிகளுக்கேயுறுப்பாய். வரும்பரிசு-நான்வரும்படி. தண்ணுவாறு-விளம்பியாதே. அடியேனை-உனக்கேசேஷபூதனுனவென்னை. சாமாறு-சரீரவிஶ்லேஷம்பிறக்கும்படி. பணிகண்டாய்- "மோக்ஷயிஷ்யாமி" (மோக்ஷயிஷ்யாமி) என்கிறகணக்கிலே யொருவார்த்தை யருளிச்செய்யவேணும்.

* சர்வபாபசப்தத்திலே சரீரமுமந்தர்ப்பூத மென்றகருத்து. கண்ணாளன் - கண்ணையுடைய ஆளனென்ற. க்ருபையையுடைய நிர்வாஹகனென்றபடி.........*

## ஈடு - முதற்பாட்டு.

உன்னையொழியப்புறம்பே யேறுமிழவுமாயிருக்கிற விவர்கள்நடுவில்நின்றும் நானுன்றிருவடிகளிலேவந்து கிட்டும்படி யெனக்கிஶ்சரீரவிஶ்லேஷத்தைப்பண்ணித் தந்தருளவேணுமென்கிருர்.

(நண்ணாதார்முறுவலிப்ப) பிறரநர்த்தங்கண்டு சிலருகக்கும்படி யாவதே, இதென்னவிஸ்மயந்தான். [𑌸𑍁𑌹𑍃𑌦𑌂 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌮𑍍] (ஸுஹ்ருதம்ஸர்வபூதாநாம்) அர்ஜுநன் "என்பரகுபரகு கெடுவதென்று" என்ன, நான் "𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌸𑍁𑌹𑍃𑌤𑍍" (ஸர்வபூதஸுஹ்ருத்)என்றறிந்தவாறே நீயுமென்னைபாதியென் விபூதிக்குப் பரியத்தேடுவுதிகாண் என்றானிறே.நண்ணாதாரென்று-சத்ருக்களுக் குப்பேர்.ஒருவனுக்கோரநர்த்தம் வந்தவாறே; அற்றைக்குமுன்பு வெற்றிலைதின்றறியார்களே யாகிலுமன்றாக வொருவெற்றிலைதேடித்தின்பது, ஒருடுப்புவாங்கி யுடுப்பது, சிரிப்பதாகா நிற்பர்களாயிற்று.(நல்லூற்றார்) சர்வேஶ்வரனே நிருபாதிகபந்துவாய்,அவனைப்பற்றினவர்களையே "*அவன்றமரெவ்வினையராகிலு மெங்கோனவன்றமரே" என்று,"அவர்களை *ஒருகாலும்பிரிகிலேன்"என்றிருக்க ப்ராப்தமாயிருக்க; சரீரசம்பந்தநிபந்தநமாக வருகிறவர்களை நிருபாதிகபந்துக்களாகநினைத்து; அவர்களுக்கொன்றுவந்தவாறே, "நினைதொறும் சொல்லுந்தொறும் நெஞ்சிடிந்துகும்" என்று இவர் பகவத்விஷயத்தை நினைத்தல்சொல்லுதல் செய்யப்புக்கால் படுவதெல்லாம் படாநிற்பர்களாயிற்று. "𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌤𑍍𑌮𑌕𑍇" (ஸர்வபூதாத்மகே) "கரைந்தேங்க, முறுவலிப்ப" என்றவிரண்டையுமிறே- "𑌮𑌿𑌤𑍍𑌰𑌾𑌮𑌿𑌤𑍍𑌰𑌗𑌤𑌾𑌗𑌤𑌃" (மித்ராமித்ரகதாகதः) என்றது. ராகத்வேஷங்களைப்பற்றி வருகையாலே, மைத்ரியோடு சாத்ரவத்தோடு வாசியில்லையிறே. [𑌦𑍍𑌵𑌨𑍍𑌦𑍍𑌵𑍈𑌰𑍍𑌵𑌿𑌮𑍁𑌕𑍍𑌤𑌾𑌃 𑌸𑍁𑌖𑌦𑍁𑌃𑌖𑌸𑌂𑌜𑍍𑌞𑍈𑌃] (த்வந்த்வைர்விமுக்தாஸ்ஸுகதுःகஸம்ஜ்ஞைः) என்று "ஸுகதுःகங்கள்" என்றுசிலபேர் மாத்ரமேயிறேயுள்ளது, இரண்டும் துःகமாயிறேயிருப்பது. இரண்டாய் வரும் துःகங்களையடைய நினைக்கிறது. [𑌰𑌾𑌮𑌮𑍇𑌵] (ராமமேவ) திருவயோத்யையிலுள்ளார், ஒருவரையொருவர் வேறோடேவாங்கிப் போகடவேண்டும்படியான சாத்ரவமநுவர்த்தியா நிற்கச்செய்தேயும் எல்லாருமொருமிடறாக வர்த்தித்தார்கள்; அதுக்கடியென்னென்னில்; சாத்ரவம் நெஞ்சிலேபட்டு அவர்களை நலியநினைத்தபோதாகப் பெருமாளைநினைப்பர்கள், "அவர்முகஞ்சுளியும்" என்னுமத்தாலே யதின்கார்யம் பிறக்கப்பெற்றதில்லை. [𑌪𑍁𑌷𑍍𑌪𑌾𑌙𑍍𑌗𑌰𑌾𑌗𑍈𑌸𑍍𑌸𑌮𑌮𑍍] (புஷ்பாங்கராகைஸ்ஸமம்) என்றிறே யிவ்விஷயத்தில் கைவைத்தாரிருப்பது. சர்வேஶ்வரன் பெரியபிராட்டியாரோடு பரிமாறும்போது மற்றுள்ளபிராட்டியார், ஸ்ரக்சந்தநாதிகளோபாதி போகோபகரணகோடியிலேயந்வயித்துநிற்பர்கள்; அவர்களோடிவன் கலந்தால்பிராட்டிதான் தன்னிடையிலும் முலையிலும் கலந்தாற்போலேயிருக்கும். [திருமகளும் மண்மகளுமாய்மகளும் சேர்ந்தால் திருமகட்கே தீர்ந்தவாறென்கொல்] அவர்களோடே யிவன்கலந்தால் பிராட்டிக்கே யற்றாளுயிருக்கும்; அதுக்கடி அத்தால்பிறக்கும் மு

கலிகாச மவள்பக்கலிலே காண்கையாலே. அல்பம்குறைந்திக்பமுள்ளவிடத்தேயும் [ யதாயதாஹிகௌஸல்யா ] (யதாயதாஹிகௌஸல்யா) என்கிறதிறே; ஸாபத்ந்யந்தோற்றுதபடி பரிமாறிப்போந்தாளிறே சக்ரவர்த்திக்கு. [ யதாயதாஹி ] (யதாயதாஹி) காலந்தோறும் காலந்தோறும என் நினைவுக்கீடாகப் பரிமாறிப்போந்தாளாயிற்று தனக்கென்ன வேறாகாரமின்றிக்கே. ஶேஷம்பூர்வவத். (எண்ணாரத்துயர்விளைக்கும்) முறுவலிக்கிறதும், கனாந்தேங்குகிறதும், இரண்டும் துயராய்த்தோற்றுகிறதாயிற்றிவர்க்கு. * அந்தமில் பேரின்பத்துக்கெல்லைகாணிலும் துஃகத்துக்கெல்லைகாணவொண்ணாதபடி யாயிற்றிருப்பது. அங்குநிஷ்க்ருஷ்டசுகமேயாயிருக்குமாற்போலேயிதுவும் நிரவதிகதுஃகமேயா யிருக்குமாயிற்று. [ ராஜ்யாத்ப்ரம்ஶ இத்யாதி ) இவர்கள்படுகிற க்லேசத்தைக்கண்டு தன் க்ருபையாலே யவனெடுக்கக் கைநீட்டினவிடத்திலே படுகிறபாடிறேயிது. திருவபிஷேகம்பண்ணநாளிட்டவாறே. "ராஜ்யமெனக்குவேணும்" என்றார்கள்சிலர். அத்தையிழந்தால் படைவீட்டிலேயிருக்கப் பெற்றதாகிலுமாமிறே. "என்மகன்ராஜ்யம்பண்ணவேண்டா, பிக்ஷைபுக்காகிலுமென்கண்வட்டத்திலே யிருக்கவமையும்" என்றாளிறேஶ்ரீகௌஸல்யையார். [ ஸீதாநஷ்டா ] (ஸீதாநஷ்டா) "பிராட்டியும்தாமுமாய் ஏகாந்தமாகபுஜிக்கலாம்" என்றுபோர, இருவரு மிரண்டிடத்திலேயாம்படியாய்விழுந்தது. பிராட்டிக்குத் தனியிடத்திலே யுதவப்புக்கபெரியவுடையாரையு மிழந்தது. "ராஜ்யநாஶோவகர்ஷதி" (ராஜ்யநாஶோபகர்ஷதி) என்றும், "வநவாஸோமஹோதய:" (வநவாஸோமஹோதய:) என்றும்சொல்லிப்போந்தவற்றை யிப்போது அநர்த்தமாகச்சொல்லுகிறதென்னென்னில்; "ஆஶ்ரிதசம்ஶ்லேஷத்துக்கும், ருஷிகளையெடுக்கைக்கும்" என்றிறேபோந்தது, அத்தோடேவிரோதிக்கையாலே சொல்லுகிறார். பிராட்டியைப்பிரிகையாலும், பெரியவுடையாரிழவு பலிக்கையாலும், இவற்றுக்கடியானவையு மிப்போதநர்த்தமாய்த் தோற்றுகையாலே சொல்லுகிறார். இவ்விரண்டாலும் வரும்துஃகங்களையடைய நினைக்கிறது. [ நிர்த்தஹேதவிபாவகம் ] (நிர்த்தஹேதபிபாவகம்) பிரியாத விளையபெருமாளையும் பிரிக்கவும்வற்றாயிறே யிருக்கிறது. (இவையென்னவுலகியற்கை) உன்னையொழியப்புறம்பேயு மிந்தலோகம் பேறிழவாம்படி இதொரு லோகயாத்ரையை நீபண்ணிவைத்தபடி யென்பிரானே.

"நான்பண்ணுகையாவதென், இவர்கள்தாங்கள் பண்ணினகர்மத்தினுடைய பலமநுவர்த்திக்கிற வித்தனையன்றோ, நம்மால்வந்ததன்று காணும்" என்றுபகவதபிப்ராயமாக, மேல்சொல்லுகிறார் (கண்ணாளா) இவைபண்ணினகர்மம் தனக்கேயநுபவிக்க வேணுமாயிற்றதாகில், உன் க்ருபைக்குப் புறம்புவிஷயமெங்கே. க்ருபாவானே - "கண்ணுடையவன்"

என்னக்கடவதிறே. அன்றிக்கே, கண்ணென்று-இடமாய், அத்தால்-அகலிடமென்றபடியாய்; இதேதேனும் தன்னரசுநாடோ, நீநிர்வாஹகனாயிருக்கவிவை ஸ்வரூபவிரோதங்களிலே ப்ரவர்த்திக்கிறதென். கண்ணென்று-நிர்வாஹகனுக்கும்பேர். தாந்தாம்சூழ்த்துக்கொண்டகர்மம்தாந்தாமநுபவிக்கவேண்டாதபடி நாமுதவவெங்கேகண்டீரென்ன; "ஒருவெள்ளமன்றோ" என்றுதாஹரணங்காட்டுகிறார் (கடல்கடைந்தாய்) துர்வாஸஸ்ஸாபத்தால்வந்த அநர்த்தத்தைத்தப்புகைக்கு, ப்ரயோஜநாந்தரபரர்க்கு மரியனசெய்துதவுமவனன்றோ. அவர்களுக்கு இச்சையுண்டு, அநிச்சுக்களுக்கு நம்மால்செய்யலாவதுண்டோவென்ன; ஆகிலிவர்கள் நடுவிராதபடி யென்னையுன் றிருவடிகளிலே வரும்படிபண்ணவேணும் (உனகழற்கேவரும்பரிசு) விலக்கடிகளில்போகாமே, ப்ராப்தமுமாய் போக்யமுமான வுன்திருவடிகளிலேவந்து கிட்டுவதொருப்ரகாரம். இவர்க்குக் காற்கூறு இச்சையுண்டாயிருந்தபடியாலே, "அப்படிசெய்கிறோம்" என்றானீச்வரன் (தண்ணாவாது) தண்ணுக்கையாவது-தாழ்க்கை. தாழாது. "செய்கிறோம்" என்றாறியிருக்கவொண்ணாது, செய்துகொண்டு நிற்கவேணும். இப்படிபதறிச்செய்ய வேண்டுகிறதென் நமக்கென்ன (அடியேனை) ஸ்வரூபஜ்ஞாநத்தாலே சம்சாரிகளோடு பொருந்தாதவென்னை. (பணிகண்டாய்சாமாறே) பணிக்கையாவது-சொல்லுகை; சொலவுநினைவோடே கூடியிறேயிருப்பது. சாமாறுபணிக்கவேணும். உனக்கொருசொலவு, அடியேன் பெறுகிறதுசத்தை. (சாமாறே-பணி) சரீரவிஸ்லேஷத்தைப் பெறும்படி பார்த்தருளவேணும், கேவலரைப்போலேயிவ்வளவையபேக்ஷிக்கிறதென்னென்னில்; "வரம்ஹுதவஹஜ்வாலாபஞ்ஜராந்தர்வ்யவஸ்திதி: । நசௌரிசிந்தாவிமுகஜநஸம்வாஸவைஶஸம்" (வரம்ஹுதவஹஜ்வாலாபஞ்சராந்தர்வ்யவஸ்த்திதி: । நசௌரிசிந்தாவிமுகஜநஸம்வாஸவைசஸம்) என்கிறபடியே, இவர்கள் நடுவிருக்கிற விருப்புத் தவிருகைதானே யிப்போது தேட்டமாகையாலே. காட்டுத்தீயிலகப்பட்டவனுக்கு நீரும்நிழலுமிறே முற்படத்தேட்டமாவது, பின்பிறே போக்யாதிகளில் நெஞ்சுசெல்லுவது; அப்படியே யிப்போது இவர்கள் நடுவிருக்கைக்கடியான சரீரவிஸ்லேஷத்தைப்பிறப்பிக்கவேணுமென்கிறார்..........................................*

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு. (நண்ணாதாரித்யாதி) "இவையென்னவுலகியற்கை, உனகழற்கே வரும்பரிசு, சாமாறு-பணி" என்றத்தைக்கடாக்ஷித்து, எம்பார் நிர்வாஹத்திலே யவதாரிகை (உன்னையொழியவித்யாதி) பேறுமிழவும்-லாபாலாபங்கள். இவர்கள்-சம்சாரிகள்.

"முறுவலிப்ப-இவையென்ன வுலகியற்கை" என்றுவிஷண்ணராகிறவருடைய ஹார்த்தபாவம் (பிறரநர்த்தமித்யாதி) பிறரநர்த்தம்கண்டால் பரிஹரிக்க வேண்டியிருக்க, உகக்குமது பகவதீயத்வ ஜ்ஞாநாபாவத்தாலேயிறே யென்றுகருத்து. பிறரநர்த்தம்கண்டால் பின்னையெப்படி யிருக்கவேணுமென்ன (ஸுஹ்ருதமித்யாதி) "[illegible] [illegible]" (போக்தாரம்யஜ்ஞதபஸாம் ஸர்வலோகமஹேஶ்வரம் । ஸுஹ்ருதம்ஸர்வபூதாநாம்ஜ்ஞாத்வாமாம்ஶாந்திம்ருச்சதி) இதிகீதாஸுபஞ்சமே. "[illegible]" (ஜ்ஞாத்வாமாம் ஶாந்திம்ருச்சதி) என்கிறதுக்கு ப்ரசங்கமருளிச்செய்யா நின்றுகொண்டு, அதுக்கர்த்தம் (அர்ஜுநனித்யாதி) பரகுபரகு-ராகத்வேஷங்களாலே தடுமாறித்திரிகை. கெடுவது-போகக்கடவது. "ராகத்வேஷஶாந்தியையுடையவன்" என்கையாலே பலிதம் (என்னுபாதியித்யாதி) முறுவலிக்கைக்கு ஹேதுவைக்காட்டுகிறார் (ஒருவனுக்கித்யாதி) உடுப்பு-வஸ்த்ரம்,

* நம்மையாவது - நிருபாதிகத்வமென்று விவக்ஷித்து, அதுக்குப்ரதிகோடியாகபாவம் (சர்வேஶ்வரனேயித்யாதி) (அவன்றமரித்யாதி) அவனடியார் அக்ருத்யகரணநிரூபமான வெவ்வகைப்பட்ட வினையையுடையராகிலும் நம்முடையஸ்வாமியானவனுடைய வடியாரித்யர்த்தஃ முதற்றிருவந்தாதி ஐம்பத்தஞ்சாம்பாட்டு (ஒருகாலும்பிரிகிலேன்) ஒருகாலும் பிரியக்ஷமனல்லேன். சாத்ரவமாகாதொழிய, இரங்குகிறது நல்லதன்றோவென்ன; இரண்டும்த்யாஜ்யமென்கைக்கு ப்ரமாணம் (சர்வபூதாத்மகஇத்யாதி) "[illegible]" (ஸர்வபூதாத்மகேதாதஜகந்நாதேஜகந்மயே । பரமாத்மநிகோவிந்தேமித்ராமித்ரகதாகுதஃ । இதிப்ரதமாம்ஶேஹிரண்யம்ப்ரதிப்ரஹ்லாதஃ. இரண்டும்த்யாஜ்யமென்கைக்கு ஹேதுவேதென்ன (ராகத்வேஷங்களையித்யாதி) "வாசியில்லை" என்னலாமோ, மைத்ரியுத்தேஶ்யமன்றோவென்ன" சுகமநுகூலமாயிருக்க, துஃகத்தோபாதித்யாஜ்யமென்றதிறேயென்று அதுக்குப்ரமாணம்காட்டுகிறார் (த்வந்த்வைரித்யாதி) "[illegible]" (நிர்மாநமோஹாஜிதஸங்கதோஷா அத்யாத்மநித்யாவிநிவ்ருத்தகாமாஃ । த்வந்த்வைர்விமுக்தாஸ்ஸுகதுஃகஸம்ஜ்ஞைர்க்கச்சந்த்யமூடாஃபதமவ்யயம்தத்) இதிகீதாஸுபஞ்சதஶே. அப்படியே ராகத்வேஷங்களும் த்யாஜ்யமென்றுகூட்டுவது. அவனை '[illegible]' (ஸர்வபூதஸுஹ்ருத்து) என்றறிந்து த்வேஷத்தைவிட்டபேருண்டோவென்ன (ராமமேவேத்யாதி) "[illegible]" (ராமமேவாநுபஶ்யந்தோநாப்யஹிம்ஸந்பரஸ்பரம் । ஆஸந்வர்ஷஸஹஸ்ராணிததாபுத்ரஸஹஸ்ரிணஃ) இதியுத்தகாண்டே அயோத்யாம்ப்ரத்யாகதே ஸதிராமேபௌராஃ. பூர்வார்த்தத்துக்கர்த்தம் (திருவயோத்யையி லித்யாதிவாக்யத்ரயமும்) இவ்வர்த்தமிவ்விபூதியில்மாத்ரமன்றிக்கே, நித்யவிபூதியிலு முண்டென்கிறார் (புஷ்பாங்கரா

கைரித்யாதி) "போக்யா வாமபி நாந்தரீயகதயா புஷ்பாங்கராகைஸ் ஸமம் நிர்வ்ருத்தப்ரணயாதிவாஹநவிதௌ நீதா: பரீவாஹதாம் । தேவி த்வாமநுநீளயா ஸஹ மஹீ தேவ்ய: ஸஹஸ்ரம் ததா யாபி: ஸ்வம் ஸ்தநபாஹுத்ருஷ்டிபிரிவ ஸ்வாபி: ப்ரியம் ஸ்லாகஸே" (போக்யாவாமபிநாந்தரீயகதயாபுஷ்பாங்கராகைஸ்ஸமம்நிர்வ்ருத்தப்ரணயாதிவாஹநவிதௌநீதாஃபரீவாஹதாம் । தேவி த்வாமநுநீளயாஸஹமஹீதேவ்யஸ்ஸஹஸ்ரம்ததாயாபிஸ்த்வம்ஸ்தநபாஹுத்ருஷ்டிபிரிவஸ்வாபிஃப்ரியம்ஸ்லாகஸே) இதி ஸ்ரீகுணரத்நகோஸே. ஹேதேவி-வாரீர் ஸ்ரீரங்கநாயகியாரே, யாபிஃ-யாவர்சிலரீளாதி தேவியாராலே, ஸ்வாபிஸ்ஸ்தநபாஹுத்ருஷ்டிபிரிவ ப்ரியம்ஸ்லாகஸே-உம்முடையவைகளா யிருக்கிறஸ்தநபாஹுத்ருஷ்டிகளாலே கலந்தாற்போலே நாயகனை உகப்பியாநின்றீர், த்வாமநுநீளயாஸஹமஹீ, ததாஸஹஸ்ரம்தேவ்யஃ-உமக்கநந்தரம் நீளையோடேகூட ஸ்ரீபூமிப்பிராட்டியும் அப்படியே அஸங்க்யாதரான தேவியாரும், வாம்-உங்களிருவருக்கும், நாந்தரீயகதயா புஷ்பாங்கராகை ஸ்ஸமம்போக்யாஃ-விட்டிராமையாலே ஸ்ரக்சந்தநாதிகளோபாதி போகோபகரணங்களா யிருப்பர்கள்; நிர்வ்ருத்தப்ரணயாதிவாஹநவிதௌ-உங்களுடைய ஸம்ஶ்லேஷத்தாலுண்டான ப்ரணயத்தினுடைய வதிசயவிதியில், அதாவது-உம்மஸ்தகரஸமான வளவிலேயென்றபடி, பரீவாஹதாம்நீதாஃச-இந்த்ரஸம் சாத்மிக்கைக்காகக்கடைப்பாய்ச்சலாகையை யடைவிப்பிக்கப்பட்டார்களென்றபடி. இத்தால்-நீளைதொடக்கமான தேவிமாரோடே ஈஶ்வரன் ஸம்ஶ்லேஷித்தபோது பெரியபிராட்டியார் தம்முடையதிருமுலையிலும் கண்ணிலும் கைகளிலும் கலந்தாற்போலேயிருப்பர்; மற்றைத்தேவியாரும் பெரியபிராட்டியாரோடே கலக்கும்போது ஸ்ரக்சந்தநாதிகளோபாதி போகோபகரணங்களா யிருப்பர்கள்; ஆகையாலே பரஸ்பரஸாபத்ந்யமின்றிக்கே யிருப்பர்களென்றதாயிற்று. "வாம் நாந்தரீயகதயா" (வாம்நாந்தரீயகதயா) இத்யாதிக்கர்த்தம் (சர்வேஶ்வரனித்யாதி) "புஷ்பாங்கராகைஸ்ஸமம் போக்யா:" (புஷ்பாங்கராகைஸ்ஸமம்போக்யாஃ) என்றதுக்குபாவம் (ஸ்ரக்சந்தநேத்யாதி) "யாபிஃ" என்றதுக்கர்த்தம் (யாவர்சிலவித்யாதி) "யாபிஃ" என்றதுக்குபாவம் (அவர்களோடிவனித்யாதி "ஸ்வாபிஸ்ஸ்தநபாஹுத்ருஷ்டிபிரிவ" (ஸ்வாபிஸ்ஸ்தநபாஹுத்ருஷ்டிபிரிவ) என்றதுக்குபாவம் (தன்னிடையிலுமித்யாதி) அவர்களோடேகலந்தால் பிராட்டிக்கு ப்ரியம்செய்ததா யிருக்குமென்னுமதுக்கு ப்ரமாணம் (திருமகளுமித்யாதி) பெரியபிராட்டியாரும் ஸ்ரீபூமிப்பிராட்டியாரும் நப்பின்னைப்பிராட்டியாரும் சாதரமாக ஸம்ஶ்லேஷித்தால்; பிராட்டியோடு கலக்குமிடத்திலும் மற்றைப்பிராட்டிமார் சாபத்ந்யகர்தமற புஷ்பாங்கராகாதிகளோபாதி போகோபகரணகோடியிலே நிற்கையாலும், அவர்களோடே கலக்குமிடத்தில் தன்முலையிலு மிடையிலும் கலந்தாற்போலே பிராட்டி நினைத்திருக்கையாலும், பெரியபிராட்டியாருக்கேயற்றுத் தீர்ந்ததாயிருக்கிறபடி யெங்ஙனேதான் சர்வேஶ்வரனுடைய திருவுள்ளமென்று பாசுரார்த்தம். முதற்றிருவந்தாதி நாற்பத்திரண்டாம்பாட்டு. எடுத்தபாசுரத்துக்குபாவம் (அவர்களோடேயித்யாதி) "திருமகள்-சேர்ந்தால்" என்றது-த்ருஷ்டாந்தார்த்தம். அதாவது-ஈஶ்வரன் பிராட்டியோடேகலந்தால் அவளுக்கே யற்றுயிருக்குமாபோலே, அல்லாதாரோடு கலந்தாலும் பிராட்டிக்கே யற்றுயிருக்குமென்றபடி. அல்லாதார்க்கொழிய, இப்படி மஹிஷிகளுக்கு சாபத்ந்யமின்றிக்கே

யிருக்கக்கூடுமோவென்ன (அல்பமித்யாதி) குணுதிக்யமுள்ளவிடம்- கௌஸல்யை,
" ய஥ாய஥ாஹிகௌஸல்யா஥ாஸீவச்ஸஸீவச। பார்யாவத் ஭கிநீவச்சமா஥ாச
வச்சோபதிஷ்டதி" (யதாயதாஹிகௌஸல்யாதாஸீவச்சஸகீவச। பார்யாவத்
பகிநீவச்சமாத்ருவச்சோபதிஷ்ட்டதி) இத்யயோத்யாகாண்டே. "ஸகீவ" என்ற
துக்குபாவம் (சாபத்ந்யமித்யாதி) (சேஷம்பூர்வவத்என்றது) "ஸகீவ" என்
றதுக்குப்போலே யல்லாதபதங்களுக்கு மிப்படியே யர்த்தம்கண்டுகொள்வதென்
னுதல்; "போ஗்யாவாமபி" (போக்யாவாமபி) என்கிறஸ்லோகத்தில் பிரா
ட்டிக்குச்சொன்னகுணங்களை யிஸ்ஸ்லோகத்திலே ஸ்ரீகௌஸல்யை பார்க்கும் யோ
ஜித்துக்கொள்வதென்னுதல். மாத்ராதி துல்யதைசொன்னபோதே - சாபத்ந்யம்
தோற்றுமைசித்தமிறே.

களைந்தேங்குகிறதொழிய, முறுவலிக்கிறதும் துயரோவென்ன (முறுவலி
லிக்கிறதுமித்யாதி) "நண்ணுதார்முறுவலிப்பநல்லுற்றார்களைந்தேங்க-இப்படி,எ
ண்ணுராத்துயர்விளைக்கும்" என்றுயோஜனை. "எண்ணுரா" என்றதுக்கர்த்தம்
(அந்தமிலித்யாதி) முறுவலும் தமக்கத்யந்தா ஸஹ்யமாய்த்தோற்றுகையாலே ய
த்தையும் "எண்ணுரா" என்றுவிசேஷிக்கலாமிறே. * துயரின்தாத்பர்யம் (அங்
கித்யாதி) நிஷ்க்ருஷ்டசுகம்-துஃகம் கலசாதசுகம். இன்னார்க்குத் துயர்விளைக்கு
மென்றுவிசேஷியாமையாலே-அகர்மவஸ்யனவதரித்தாலுமவனுக்கும்துஃகஜநகமெ
ன்று விவக்ஷித்தருளிச் செய்கிறுர் (ராஜ்யாத்ப்ரம்ஸமித்யாதி) "ராஜ்யாத்
ப்ரம்ஸோவநேவாஸஸ்ஸீதாநஷ்டாஹதோத்விஜ:। ஈத்ருஸீயம்மமாலக்ஷ்மீர்நிர்தஹேதபி
பாவகம்" (ராஜ்யாத்ப்ரம்ஸோவநேவாஸஸ்ஸீதாநஷ்டாஹதோத்வி
ஜ:। ஈத்ருஸீயம்மமாலக்ஷ்மீர்நிர்தஹேதபிபாவகம்) இத்யாரண்யகாண்டே ஸப்த
ஷஷ்டிதமே.தன்னிச்சையாலே யிவர்களநுக்ரஹார்த்தமாகப்பிறந்தவன் படும்துஃக
த்தை யநுசந்தித்து வ்யாக்யாதாவினீடுபாடு (இவர்கள்படுகிறவித்யாதி) "ரா
ஜ்யாத்ப்ரம்ஸ:, வநேவாஸ:" (ராஜயாத்ப்ரம்ஸ:, வநேவாஸ:) என்றபதத்வய
த்துக்கும்வாசனை (திருவபிஷேகமித்யாதி வாக்யத்வயத்தாலே) ராஜ்யப்ரஷ்ட
னுனவனுக்குப் படைவீட்டிலிருக்குமது சுகமென்னுமதுக் குதாஹரணம் (என்மக
னித்யாதி) "வநேவாஸ:" (வநேவாஸ:) என்றத்தோடே "ஸீதாநஷ்டா"
(ஸீதாநஷ்டா) என்றபதத்துக்குவாசனை (பிராட்டியுமித்யாதி) "ஸீதாநஷ்டா"
(ஸீதாநஷ்டா) என்றது - "ணஸ அதர்ஸநே" (ணஸ அதர்ஸநே) என்கிற
தாதுவினுலே-அத்ருஷ்டையானு ளென்றபடி. "ஹதோத்விஜ:" (ஹதோத்விஜ:)
என்றதுக்குவாசனை (பிராட்டிக்கித்யாதி) பெரியவுடையார்-ஸ்ரீஜடாயுமஹாரா
ஜர். தடஸ்த்தசங்கையை யநுவதித்து பரிஹரிக்கிறுர் (ராஜ்யநாஸ இத்யாதி)
"நசாஸ்யமஹதீம்லக்ஷ்மீம்ராஜ்யநாஸோபகர்ஷதி। லோககாந்தஸ்யகா
ந்தத்வம்ஸீதரஸ்மேரிவக்ஷபா," (நசாஸ்யமஹதீம்லக்ஷ்மீம்ராஜ்யநாஸோபகர்ஷ
தி।லோககாந்தஸ்யகாந்தத்வம்ஸீதரஸ்மேரிவக்ஷபா) "மாசலக்ஷ்மணஸந்தாபம்கா
ர்ஷீர்லக்ஷ்ம்யாவிபர்யயே। ராஜ்யம்வாவநவாஸோவாவநவாஸோமஹோ
தய:" (மாசலக்ஷ்மணஸந்தாபம்கார்ஷீர்லக்ஷ்ம்யாவிபர்யயே। ராஜ்யம்வாவநவா
ஸோவாவநவாஸோமஹோதய:) இத்யயோத்யாகாண்டே. "ந-அபகர்ஷதி" இத்யந்
வய:. ராஜ்யப்ரம்ஸமும்வநவாஸமும்அன்றுசுகமாகைக்கும் இன்றுதுஃகமாகைக்கும்

ஹேதுவருளிச்செய்கிறார் ( ஆஶ்ரிதேத்யாதிவாக்யத்வயத்தாலே ) ஆஶ்ரிதசம்ஶ்லேஷத்துக்கு - பிராட்டிசம்ஶ்லேஷத்துக்கு. "ஸம்ஶ்லிஷ்டஸ்ரீயம்ரமாவக்ஷஸீ" ( ஈக்ருஶ்ரீயம்மமாலக்ஷ்மீ: ) என்றதுக்கர்த்தம் ( இவ்விரண்டாலித்யாதி ) "ராஜ்யாத்ப்ரம்ஶ:, வநேவாஸ:" ( ராஜ்யாத்ப்ரம்ஶ:, வநேவாஸ: ) என்கிறவிரண்டாலும் வரும்து:கங்களையென்றபடி. ( நிர்தஹேதபிபாவகம் ) பாவகமபிநிர்த்தஹேத்-அக்நியையும் தஹிக்குமென்றதிலே, அசம்பாவிதத்தையும் சம்பவிப்பிக்குமென்று பலிப்பித்து, அதின்னுதெஞ்கிறார் ( பிரியாதவித்யாதி ) அதாவது-தாஹகமான வக்நியைச்சுடுமாபோலே, விஶ்லேஷிப்பிக்கப்போகாத விளையபெருமாளையும் விஶ்லேஷிப்பிக்குமென்றபடி. "இவையென்னவுலகியற்கை" என்றுவிஷண்ணராகிறவருடைய ஹார்த்தபாவம் ( உன்னையொழியவித்யாதி ) பேறு-த்ருஷ்டாந்தார்த்தம்; இங்கிழவேயிறே முறுவலிக்கைக்கும் கணாந்தேங்குகைக்கும் ஹேதுவாகச் சொல்லுகிறது.

"கண்ணாளா" என்றதுக்கு மூன்றர்த்தம்; கண் என்று-க்ருபையும், பூமியும், நிர்வாஹகத்வமுமென்று. பூவாசகமானபோது, "ஆளா" என்று - நிர்வாஹகனென்றபடி. மற்றையிரண்டர்த்தத்திலும், "ஆளா" என்று-உடையவனென்றபடி. "கண்" என்று-க்ருபையைச் சொல்லுமோவென்ன ( க்ருபாவானேயித்யாதி) ( அன்றிக்கேயித்யாதி ) ( அகலிடம் ) என்றுபாடமானபோது, அகலிடம்-பூமி. இப்ப்ரகரணத்திலே "நிர்வாஹகன்" என்றுசொல்லுகிறவருடையபாவத்தை யருளிச்செய்கிறார் ( இதேதேனுமித்யாதி ) தன்னரசுநாடு-அராஜகமானதேசம். அவயவசக்தியாலே, நிர்வாஹகனென்னுமத்தை தர்ஶிப்பித்தவநந்தரம், ரூடியாலும் நிர்வாஹகத்வத்தைச் சொல்லுகிறதென்றர்த்தாந்தரம் ( கண்ணென்றித்யாதி ) "கடல்கடைந்தாய்" என்றத்தைக்கடாக்ஷித்து ரசோக்தியாகவும் தாத்த்விகமாகவுமுத்தரம் ( ஒருவெள்ளமித்யாதி வாக்யத்வயத்தாலே ) வெள்ளம்-சமுத்ரம்.

"உனகழற்கே" இத்யாதிக்கவதாரிகை ( அவர்களுக்கெத்யாதி ) ஏவகாரார்த்தம் ( விலக்கடிகளித்யாதி ) விலக்கடிகள் - ஐஶ்வர்யாதிகள், பரிசு - ப்ரகாரம். காற்கூறு-நாலத்தொன்றும், திருவடிகளாகிறவம்ஶமும். "தண்ணுவது" என்கையாலே-ஈஶ்வரன் "செய்கிறேம்" என்றதுசித்தம். தண்ணுவாது - ( தாழாது ) விளம்பியாதே. தாழாததினொல்லையை யருளிச்செய்கிறார் ( செய்கிறேமென்றித்யாதி ) பதறி-த்வரித்து. ( ஸ்வரூபஜ்ஞாநத்தாலே ) தாஸ்யம் சர்வசாதாரணமாயிருக்க, அடிமையை ஹேதுவாகவிவக்ஷிக்கையாலே - இந்தவர்த்தம்சித்தமிறே. "பணிகண்டாய்" என்றதுக்கர்த்தத்வயம்; பணியென்று-சொலவாய், சொலவுகளோடே கூடியிருக்கையாலே, சொலவுக்கடியான சங்கல்பத்தைச்சொல்லுதல்; இத்தையருளிச்செய்கிறார் (பணிக்கையாவதித்யாதி வாக்யத்வயத்தாலே ) கேவலம் வார்த்தையாக வர்த்தாந்தரம் ( சாமாபணிக்கவேணுமித்யாதிவாக்யத்தாலே) பணிக்கை-சொல்லுகை. பார்த்தருளவேணுமென்ற விடத்திலும்-சங்கல்பமாகிறது. (அடியேன்பெறுகிறது சத்தையென்றது) சமபிவ்யாஹாரசித்தார்த்தம். செத்து உனகழற்கே வரும்பரிசுபணியென்று - திருவடிகளில் ப்ராப்தியைவிதேயமாக்காதே. "சாமாறே-பணி" என்று-இத்தையேப்ரதாநமாக நிர்த்தரிக்கையைப்பற்ற ( கேவலரைப்போலேயித்யாதிசங்கை ) இவ்வளவை-ப்ரக்ருதிவிமோகத்தை. வைஶஸம்சாரிவாள், த்ருஷ்டாந்தமுகேந விவரணம் ( காட்டுத்தீயித்யாதி )

நண்ணாதார்முறுவலிப்ப-பிறரநர்த்தம்கண்டால் சத்ருக்களானவர்கள் ஸ்மிதம்பண்ணும்படியாகவும், நல்லுற்றார்கனாந்தேங்க-இவனுக்கு ஸ்நேஹிகளான பந்துக்கள் சிதிலராய் க்லேஶிக்கும்படியாகவும், எண்ணாத்துயர்விளைக்கும்-இப்படியெண்ணுதலிலடங்காத து:கங்களைத்தன்னில் தான்விளைத்துக்கொண்டுபோருகிற, இவையென்னவுலகியற்கை - இந்தலோகயாத்ரை யென்னுயிருக்கிறன. எண்ணாத்துயர் விளைக்குமிவையென்ன வுலகியற்கை-இப்படியெண்ணிமுடியாத து:கங்களை விளைத்துக் கொண்டுபோரும்படி யிதொரு லோகயாத்ரையை நீபண்ணிவைத்தபடி யென்னென்னுதல், என்றுசப்தார்த்தம்.

க்ரமேணாந்வய:..........................................................*

---

# இரண்டாம்பாட்டு.

சாமாறுங்கெடுமாறுந்தமருற்றார்தலைத்தலைப்பெய்
தேமாறிக்கிடந்தலற்றுமிவையென்னவுலகியற்கை
யாமாறொன்றறியேனுனரவணையாயம்மானே
கூமாறேவிரைகண்டாயடியேனைக்குறிக்கொண்டே.

## ஆறாயிரப்படி.

(சாமாறும்) "உன்னைக்காணப்பெறுகிறிலோம்" என்றலற்றாதே, புத்ராதிமரணவிநாஶங்கள் காரணமாகத்தமருற்றார் தலைத்தலைப்பெய்து ஏங்கிக்கிடந்தலற்று மிவையென்ன வுலகியற்கை; நானுமிங்கே லௌகிகரைப்போலே யாகில்செய்வதென். ஆஶ்ரிதஸம்ஶ்லேஷைகபோகனே, பிரானே "நம்மடியானிவன்" என்றடியேனை யுன்றிருவுள்ளத்திலே கொண்டுண்டென வென்னைத் திருவடிகளிலேவாங்கி யருளவேணுமென்கிறார்..........................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், லௌகிகக்லேசமென்னாய் முடியப்புகுகிறதென் றறிகிறிலேன், நிருபாதிகசேஷியான நீயென்னை யழைக்கும்படிவிரையவேணுமென்கிறார்.

சாமாறும்-சிரகாலம் ஜீவிக்கவிருக்க மத்யேசாகிறப்ரகாரமும். கெடுமாறும் - ஐஶ்வர்யத்தைப்பாரிக்க அதுநசிக்கிறப்ரகாரமும். இதடியாக, தமர்-தமரான ஞ்ஜாதிகளும். உற்றார்-உற்றாரானசம்பந்திகளும். தலைத்தலைப்பெய்து-ஒருவர்க்கொருவர் மேல்விழுந்து. ஏமாறி - ஏங்குதலற்று. கிடந்து - கிடந்து. அலற்றும் - கூப்பிடுகிறகூப்பீடுமாகிற. இவை - இவை. என்ன - என்ன. உலகியற்கை - லோகயாத்ரைகளிருக்கிறனதான். நான்-நான். ஆம்-இதென்னளவிலேயாய்முடியப்புகுகிற. ஆறு - ப்ரகாரம். ஒன்று - ஒன்றும். அறியேன் - அறிகிறிலேன். அரவணையாய்-சேஷபூதனான அநந்தனை சேஷவ்ருத்தி கொள்ளுமவனாய். அம்மானே - அதுபோலேயெல்லாரோடுமுறவொத்தஸ்வாமியானவனே. அடியேனை-சேஷபூதனானவென்னை: குறிக்கொண்டு-"து:கசஹனல்லன்" என்றுகுறிக்கொண்டு. கூமாறு-அழைக்கும்படி. விரைகண்டாய் - விரையவேணும்.

ஏமாற்றம் - க்லேசமாகவுமாம். தலைத்தலைப்பெய்தல் - தலையோடு தலைசேர்த்தலாகவுமாம்.......................................................................................*

ஈடு - இரண்டாம்பாட்டு.

"எண்ணாராத்துயர்" என்று திரளைச்சொன்னார்-முதற்பாட்டிலே; அவற்றிலேசிலவகைகளைச் சொல்லிவிஷண்ணராய், இவர்கள் துஃகத்தைப்போக்காயாகிலென்னை யுன்றிருவடிகளிலே யழைத்தருளவேணுமென்கிறார்,

(சாமாறும்கெடுமாறும்) சாம்படியும் கெடும்படியும். இதுக்குமேற்பட விவற்றிலே சிலப்ரகாரங்களுமுண்டோ வென்னில்; ஒருவனொருபடிப்படஜீவிக்கக்கடவனாகவும், தன்னோடொக்க ஜீவிப்பாரையழியச்செய்யக்கடவனாகவும் கோலிக்கொண்டுபோராநிற்க, நினைவறமுடிந்துகொடுநிற்கும் படியும்; நாலுசின்னம்கைப்பட்டவாறே "நமக்கினியுள்ளதனையும் ஜீவிக்கைக்கொருகுறையில்லை" என்றுநினைத்திருக்கச்செய்தே, அத்தையிழந்து க்லேசப்பட்டுக் கூப்பிடும்படியும். இவை. இவர்களிப்படிநோவுபடுகைக்கு வேறேசிலவுண்டாயிற்று; "நின்னலாலிலேன்காண்" என்றும், பலநீகாட்டிப்படுப்பாயோ "இன்னம்கெடுப்பாயோ" என்றும் பகவதலாபம் விநாசஹேதுவென்றும், இதரவிஷயதர்ஸநமநர்த்தஹேதுவென்று மாயிற்றிவ்விருப்பது. இவர்களிவை யொழிய விநாசமுமநர்த்தமுமெங்கேதேடிக் கொண்டார்கள். "என்னொருவர் தீக்கதிக்கட்செல்லும்திறம்" என்னுமவர்களிறேயிவர்கள். "குருஷ்வ" என்றும் "யஸ்த்வயாஸஹஸஸ்வர்க்கஃ" (யஸ்த்வயாஸஹஸஸ்வர்க்கஃ) என்றும், இவை விநாசமுமநர்த்தமுமாக விறேயிவர்கள்நினைத்திருப்பது. (கெடுமாறும்) தன்விநாசத்தையுமிசையும் கையிலகப்பட்ட த்ரவ்யம்தப்பினால்; அத்தையேயிறே யிவன்தஞ்சமாகநினைத்திருப்பது. ஒருத்தனை "ராஜத்ரோஹி" என்று கையையும்காலையும் தெறிக்க, இவனைவினவப்புகுந்தவர்கள், "இப்படிப்பட்டதாகாதே" என்ன ஆயிரம், ஐந்நூறென்று சிலகாசுதாவென்னாதே யிவ்வளவோடேபோயிற்று, உங்களநுக்ரஹமிறே என்றானும். (தமருற்றார்) இதொழியவேவேறே "தமர்கள் தமர்கள் தமர்கள்" என்றொருஉறவுமுறையுண்டாயிற்றிவர்க்கு; அங்ஙனன்றிக்கே சரீரசம்பந்தநிபந்தநமாக வந்தவர்களாய் "ஜ்ஞாதிகள்" என்றும், "சம்பந்திகள்" என்றும் சிலரையுறவாகநினைத்து நிற்பாராயிருப்பர்களாயிற்று, (தலைத்தலைப்பெய்து) மேல்விழுந்து மேல்விழுந்து. (ஏமாறிக்கிடந்தலற்றும்) ஏவென்று-ஏக்கமாய்; மாறுகை-தவிருகையாய், ஏங்காதேகூப்பிட்டென்னுதல்; அன்றியே, "ஏமாற்றம்" என்று-ஒருசொல்லாய், அதாவது-துஃகமாய், துஃகித்துக்கிடந்து கூப்பிட்டென்னவுமாம். "ஏவென்று-தெளிவு; ஏமாறுகை-தெளிவழிகை" (என்று "கலங்கிக்கூப்பிடாநிற்பர்க

ன் ”) என்றுபிள்ளையமுதனார்பணிப்பர். “ஏமாற்றமென்னைத்தவிர்த்தாய்” என்னக்கடவதிறே. (இவையென்னவுலகியற்கை) இதொருலோகயாத்ரை யிருக்கும்படியென். ஜீவிக்க மநோரதியா நிற்கமுடிவது; நாலு காசு கையிலேயுண்டானவாறே “இதுநமக்குண்டு” என்றிருக்க, அது நசித்துப்போவது; சரீரசம்பந்த நிபந்தநமாய்வருகிறவர்களையேதனக்கு சர்வவிதபந்துவுமாகநினைத்து, இவற்றுக்கொன்று வந்தவாறே “பட்டேன், கெட்டேன்” என்றுகூப்பிட்டலற்றுகிற விதுவுமொருலோகயாத்ரையே பிரானேயென்கிறார்.

அவர்களென்படில் நல்லதுமக்கு, நீர்நம்மையே சொல்லிக்கூப்பிடும்படி பண்ணினோமே, * சீலமில்லாச்சிறியனில் கூப்பிடன்றோவும்மதென்ன (ஆமாறென்றறியேன்நான்) அவர்கள் தான்கூப்பிடுகிற துன்னோடு சம்பந்தமில்லையாயோ; ப்ரக்ருதியோடே யிருக்கையாலேயன்றோ, அதென்னைத்தவிர்த்தாயோ. இவ்வுடம்பு கிடக்கையாலே, “இன்னதுக்கு நான்கூப்பிடப்புகுகிறேன்” என்றறியாநின்றேனோ. அன்றிக்கே, “சம்சாரிகளுடைய இந்தது:கநிவ்ருத்திக்குவிரகேதோ” என்றறிகிறிலேனென்னுதல். “நீயெனக்குப்பண்ணித்தந்த வாசிநானிவர்களுக்குப் பண்ணிக்கொடுக்கும்விரகேதோ” என்றறிகிறிலேன்.

(அரவணையாயம்மானே) இவற்றினுடைய ரக்ஷணார்த்தமாகத் திருவநந்தாழ்வான்மேலே திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளி, இவற்றினுடையரக்ஷணமும் பேரும்படியான குடற்றுடக்கையுடையவனே. மெய்யானகுடல் துடக்கிறே யிவற்றுக்கிவனோடு. இவனுடையபொய்யோடு மெய்யோடுவாசியற விவனுக்கிரண்டுமுடலாயிருக்கும் ரக்ஷிக்கைக்கு. (கூமாறேவிரை) சுலபனாயிவற்றினுடைய ரக்ஷணார்த்தமாகத் திருப்பாற்கடலிலே கூக்குரல்கேட்கைக்காகக் கிட்டிவந்துகிடக்கிறநீ, நானுன்திருவடிகளை வந்துகிட்டும்படி யென்னையழைத்துக்கொள் கையிலேவிரையவேணும். இப்படிவிரைய வேண்டுகிறதென்னென்னில் (கண்டாய்) என்னைக்கண்டவுனக்கு விரையாதே யிருக்கலாயிருந்ததோ, பாராயென்று தம்வடிவைக்காட்டுகிறார். “வஹிவஸ்ரீஸீராணி” (எஹி பஸ்யஸரீராணி) என்னுமாபோலே. ஆனாலுமநாதிகாலம் நீர்பிரியில் தரியாதேபோந்தவுடம்பு முற்றுருமன்றோவென்ன (அடியேனைக்குறிக்கொண்டே) இந்தலோகயாத்ரையால் செல்லாதபடியாயிருக்கிறவென் வாசியைத்திருவுள்ளம்பற்றி யருளவேணும். உன்திருவடிகளில் சம்பந்தமறிந்தவன்றுதொடங்கியுன்னோபாதி பராநர்த்தம்பொறுக்கமாட்டாதபடியான வென்வாசியைத் திருவுள்ளம்பற்றி யருளவேணுமென்னுதல். “கூமாறேவிரைகண்டாய்” என்னுங்காட்டில்-பராநர்த்தம்பொறுக்கமாட்டாரொன்னு மிடந்தோற்றுமோவென்னில்; இவையென்னவுலகியற்

கையென்று-இந்தலோகயாத்ரையை யநுசந்தித்துவெறுத்து, என்னையங்கே யழைக்கவேணுமென்கையாலே-தோற்றுமிறே........................*

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு (சாமாறுமித்யாதி) அடியேதொடங்கி, "கூமாறேவிரைகண்டாய்" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை (எண்ணாராத்துயரித்யாதி) திரள-சமுதாயேந.

இதுக்குமேற்பட-சாவுக்கும் கெடுகைக்கும்மேற்பட. அதாவது - சாவதும் கெடுவதுமென்றால் போராதோ, "ஆறு" என்று-ப்ரகாரமென்கிறதுக்குக் கருத்தேதென்னிலென்றபடி. உருவ-அநேககாலம். ஒருபடிப்பட-துஃகமிஶ்ரமன்றிக்கே சுகமேயாம்படி. சின்னம்-காசு. உள்ளதனையும்-மேலுள்ளகாலமெல்லாம். (இவை) ப்ரகாரங்கள். இவர்களை க்ஷேபிக்கைக்குத் தம்படியேதென்ன (இவர்களித்யாதி) இவர்கள்-ஆழ்வார்கள். "இவர்கள்" என்னும்படியான வேற்றமேதென்ன (நின்னலாலித்யாதி) "சாமாறும்கெடுமாறும்" என்றவருடைய ஹார்த்தபாவம் (இவர்களிவையொழியவித்யாதி) தாங்கள்போகிறதே மார்க்கமாய், "அல்லாததமார்க்கம்" என்றிருப்பர்களோவென்ன (என்னெருவரித்யாதி) ஒருவர்துர்மார்க்கங்களிலேசென்று விழுகிறப்ரகார மென்னுயிருக்கிறதோ விதிபாசுரார்த்தஃ. முதற்றிருவந்தாதி தொண்ணூற்றைந்தாம்பாட்டு, "நாவாயிலுண்டே" இத்யாதி. பகவதலாபம்விநாஶம், இதரவிஷயதர்ஶந மநர்த்தமென்றதுக்கு ப்ரமாணங்கள் (குருஷ்வேத்யாதி) "வெயஸ்ரஃமொஹவிஷஃதெ" (வைதர்ம்யம்ரேஹவித்யதே) என்றதேயிங்குவேண்டுவது. "யஸ்யாவஹ ஹஸ்ஹெஹ நிரயொயஸ்யாவிநா ஜதிஜாந நுரரஃஷ்திஃமஹுரராஃஉயாஸஹ" (யஸத்வயாஸஹஸஸ்வர்க்கோநிரயோயஸ்த்வயாவிநா । இதிஜாநந்பராம்ப்ரீதிம்கச்சராமமயாஸஹ) இத்யயோத்யாகாண்டே ராமம்ப்ரதிசீதா. (குருஷ்வேத்யாதி) லக்ஷ்மணவாக்யம். யஸ்த்வயா ஸஹஸஸ்வர்க்கஃ என்றதுக்கு- "நிரயொயஸ்யாவிநா" (நிரயோயஸ்த்வயாவிநா) என்கிறதிலேநோக்கு. வைதர்ம்யம்-உம்மைப்பிரிந்து தரிக்கையாகிறபாபம். கெடுமாறும் சாமாறும் என்றதே, சாவுக்கநந்தரம் கேட்டைச்சொல்லுவானென்னென்ன (தன்விநாசத்தையுமித்யாதி) சாவிலும்தநநாசமே துஃகமாயிருக்குமென்றுகருத்து. அதுக்குஹேது (அத்தையேபிறேயித்யாதி) "தஞ்சமாகநினைத்திருப்பது" என்றதுக்கு சம்வாதம் (ஒருத்தனையித்யாதி) தெறிக்க - சேதிக்க. வினவ-பராமர்ஶிக்க.

இதொழிய-இத்தமர்களையு மூற்றார்களையுமொழிய. உறவுமுறை-பந்துத்வப்ராப்தி. தமர்-சம்பந்திகள். உற்றார்-ஜ்ஞாதிகள். "ஏமாறி" என்றதுக்கர்த்தத்ரயம்-ஏங்காதேயென்னுதல், துஃகித்தென்னுதல், கலங்கியென்னுதலென்று. மூன்றினது (ஏவென்றித்யாதி) மூன்றுமர்த்தம் (ஏவென்றதெளிவித்யாதி) த்விதியார்த்தத்துக்கு ப்ரமாணம் (ஏமாற்றமித்யாதி) என்துஃகத்தைப் போக்கினுயித்யர்த்தஃ. பெரியாழ்வார் திருமொழி. "இவை" என்றபஹுவசநார்த்தம் (ஜீவிக்கவித்யாதி)

கூப்பிடும்படிபண்ணினதுக்கு நியாமகம் (சிலமித்யாதி) "ஆம்ப்ரகாரமொன்றுமறியேன்" என்றவருடையஹார்த்தபாவம் (அவர்கள்தானித்யாதி) ஆழ்வான்நிர்வாஹத்திலே யருளிச்செய்கிறார் (அன்றிக்கேயித்யாதி) கீழ்வாக்யவிவரணம் (நீயெனக்கித்யாதி)

குடற்றுடக்கு-சரீரசம்பந்தம். ரசோக்தி (மெய்யானவித்யாதிவாக்யத்வயம்) சத்யமானவென்றுசாடு, சரீரமானவென்றுப்ரக்ருதார்த்தம். குடற்றுடக்கு-சரீரசரீரிபாவசம்பந்தம். (இவனுடையவித்யாதி) "மெய்யான" என்றத்தோடே ப்ராஸங்கிகமாகச்சேர்ந்தது. க்ருஷ்ணாவதாரத்தில் - பொய். அதாவது - "ஆயுதமெடேன்" என்று ஆயுதமெடுக்கை. மெய் - ராமாவதாரத்தில் மெய். அதாவது- அபயப்ரதாநவ்ருத்தாந்தம். மெய், பொய்யென்று-சேதநாசேதநங்களைச்சொல்லி, அவை ரக்ஷணத்துக்கு விஷயமென்று சொல்லுதல்; அசேதநத்துக்கு ரக்ஷணமாவது - ஸ்திதி; ஸத்யாந்ருதங்களென்று சாடு; பொய்யோடு மெய்யோடென்றது - "𑌸𑌤𑍍𑌯𑌂𑌚𑌾𑌨𑍃𑌤𑌂𑌚" (ஸத்யஞ்சாந்ருதஞ்ச) என்றத்தைப்பற்ற. பொய்யோடு - நாஸ்திசப்தவாச்யமான வசித்தோடு. மெய்யோடு - அஸ்திசப்தவாச்யமான வாத்மவஸ்துவோடு. உடலாயிருக்கும் - சரீரமாயிருக்கு மென்றும், ஹேதுவாயிருக்குமென்று மர்த்தத்வயம் கண்டுகொள்வது. "அரவணையாய் - கூமாறே விளை" என்றதுக்குபாவம் (சுலபனுமித்யாதி) "கண்டாய்" என்றதுக்குஸம்வாதம் (ஏஹீத்யாதி) "𑌏𑌹𑌿𑌪𑌶𑍍𑌯𑌶𑌰𑍀𑌰𑌾𑌣𑌿𑌮𑍁𑌨𑍀𑌨𑌾𑌂𑌭𑌾𑌵𑌿𑌤𑌾𑌤𑍍𑌮𑌨𑌾𑌂 । 𑌹𑌤𑌾𑌨𑌾𑌂𑌰𑌾𑌕𑍍𑌷𑌸𑍈𑌰𑍍𑌘𑍋𑌰𑍈𑌰𑍍𑌬𑌹𑍂𑌨𑌾𑌂𑌬𑌹𑍁𑌧𑌾𑌵𑌨𑍇" (ஏஹிபஶ்யஶரீராணிமுநீநாம்பாவிதாத்மநாம் । ஹதாநாம்ராக்ஷஸைர்கோரைர்ப் பஹூநாம்பஹுதாவநே" இத்யாரண்யகாண்டே ராமம்ப்ரதிதண்டகாரண்யவாஸிநோ முநய:. வாசியாவது - * மயர்வற மதிநலம்பெறுகை. ஆழ்வான்நிர்வாஹத்திலேயருளிச்செய்கிறார் (உன்றிருவடிகளித்யாதி) ஜிஜ்ஞாசுப்ரஶ்நத்தை யுபக்ஷேபித்து பரிஹரிக்கிறார் (கூமாறேவிளையித்யாதி) கூமாறே-அழைக்கும்படி. குறிக்கொண்டு-து:கசஹனல்லேனென்று திருவுள்ளம்பற்றி.

அரவணையாயம்மானே, சாமாறுமென்றுதொடங்கி, ஆமாறொன்றறியேன் நான்; அடியேனைக்குறிக்கொண்டு-கூமாறேவிளைகண்டா யித்யந்வய:............*

# மூன்றாம் பாட்டு.

கொண்டாட்டுங்குலம்புனைவுந்தமருற்றார்விழுநிதியும்
வண்டார்பூங்குழலாளுமனைவொழியவுயிர்மாய்தற்
கண்டாற்றேனுலகியற்கைகடல்வண்ணாவடியேனைப்
பண்டேபோற்கருதாதுன்னடிக்கேகூவிப்பணிகொள்ளே.

## ஆறாயிரப்படி.

(கொண்டாட்டும்) மரணதசையிலும் "சம்பாவநாபிஜநஜ்ஞாதிபந்துதகளத்ரபவநாதிகளை யிழந்தோம்" என்று விஷண்ணராய், உன்றிறத்துப்படாதேயிருக்கிற விந்த லோகத்தாருடைய ப்ரக்ருதியைக்கண்டு நான்படுகிற வ்யஸநம், உன்னைப்பிரிந்து நான் பண்டுபட்ட வியஸநம்போலன்று; அதிதுஸ்ஸஹங்கிடாய். அபரிச்சேத்ய மாஹாத்ம்யனானவனே, இந்த வ்யஸநத்தில்நின்றுமீண்ட வுன்றிருவடிகளிலே கூவிப்பணிகொண்டருளவேணுமென்கிறார்...............................*

## பன்னீராயிரப்படி.

*அநந்தரம், தாங்கள் நன்மையாக நினைத்திருக்கிறவை யொழிந்தபோகத் தாங்கள் நசிக்கும்படிகண்டு பொறுக்கமாட்டுகிறிலேன், அபரிச்சிந்ந சௌந்தர்யனான வுன் திருவடிகளிலே யழைத்தடிமைகொள்ளவேணுமென்கிறார்.*

*கொண்டாட்டும் - சம்பத்தடியாக நாட்டாராரோபித்துச்சொல்லும் கொண்டாட்டமும். குலம்புனைவும் - இல்லாதகுலத்தை யேறிட்டுக்கொண்ட ஆபிஜாத்யாபிமாநமும். ஐஸ்வர்யம் கண்டுவந்த, தமர் - ஜ்ஞாதிகளும். உற்றார் - சம்பந்திகளும். இதுக்கடியான, விழு - சீரிய. நிதியும் - அர்த்தசஞ்சயமும். அதடியாக ஸ்வீகரித்த, வண்டு - வண்டு. ஆர் - நிறைந்த. பூ - பூமாறாத. குழலாளும் - குழலையுடையளாகையாலே போக்யபூதையான ஸ்த்ரீயும். மனை - போகஸ்தாநமாம்படி விலக்ஷணமாகவெடுத்த மனையும். ஒழிய - தன்னைவிட்டுக் குறியழியாமலிருக்க. உயிர்மாய்தல் - ப்ராணவிநாசம் பிறக்கையாகிற - உலகியற்கை - இந்த லோகயாத்ரை. கண்டு - கண்டு. ஆற்றேன் - பொறுக்கமாட்டுகிறிலேன். கடல் - கடல்போலே அளவிறந்த. வண்ணா - வடிவழகையுடையவனே. அடியேனை - உன்வடிவழகுக்குத் தோற்றடிமைபுகுந்தவென்னை. பண்டேபோல் - உன்னைப்பிரிந்து கூப்பிட்ட பண்டுபோலே. கருதாது - நினைந்திராதே. உன் - உன். அடிக்கே - திருவடிகளுக்கேயாம்படி. கூவி - அழைத்து. பணிகொள் - அடிமைகொண்டருளவேணும்...**

## ஈடு - மூன்றாம்பாட்டு.

ஆபிஜாத்யாதிகளெல்லாங்கிடக்க இவை முடிகிறபடியைக்கண்டு பொறுக்கமாட்டுகிறிலேன், துஃககந்தமில்லாத வுன் திருவடிகளிலே யடிமைகொள்ளவேணுமென்கிறார்.

(கொண்டாட்டும்) முன்பு "இன்னான்" என்றறியவொண்ணாதபடி யவஸ்துவாய்ப் போந்தானொருவனல்பம் ஜீவிக்கப்புக்கவாறே "முதலியார்" என்றாப்போலே சொல்லுவர்கள். "பயிலுந்திருவுடையார்" என்றிறே தாங்கள் கொண்டாடும் விஷயம். (குலம்புனைவும்) ஜீவிக்கப்புக்கவன்று தொடங்கி யிவனுக்கொருகுலமுண்டாகத் தொடுத்துச் சொல்லுவர்கள். (தமர்) "அவன்தமர்" என்று இவர்களுக்குத் தமர்புறம் பேயிறே. முன்பு "இவனோடு நமக்கோருறவுண்டாகச் சொல்லுமது நமக்குச் சாலத்தண்ணிது" என்று போனவர்கள், இவன் ஜீவித்தவாறே உறவுசொல்லிக் கொடுவந்து கிட்டுவர்கள். (உற்றார்) முன்பு "இவனோடு சம்பந்திக்கை தரமன்று, நிறங்கேடாம்" என்று போனவர்களிப்போது "இவனோடே யொரு சம்பந்தம்பண்ணினோமாக வல்லோமே" என்று ஆதரித்து மேல்விழாநிற்பர்கள். (விழுநிதியும்) நினைவின்றிக்கேயிருக்கச்செய்தே சருகிலை திரளுமாபோலே சீரிய நிதிவாராக்கைப்புகுருமே, அதுக்குப் போக்கடிகாணாமையாலே செய்வதறியாமை அத்தையிட்டு ஒரு ஸ்த்ரீயை ஸ்வீகரிக்கும். அவள்தான் - வண்டார் பூங்குழலாளாயிற்று. இவள் செவ்வி வண்டே புஜித்துப்போமித்தனை போக்கித்தா

ன் புஜிக்கமாட்டான். போகயோக்யதை யில்லாத பருவத்திலேயாயிற்று ஸ்வீகரிப்பது. * சேலேய் கண்ணியரும் பெருஞ்செல்வமும் நன்மக்களும் மேலர்த் தாய்தந்தையு மிவையெல்லா மேகவிஷயமிறே தமக்கு. (மனையொழிய) அவளுக்கும் தனக்கு மேகாந்தமாக வநுபவிக்கைக்கு, தன்னியற்றியெல்லாங்கொண்டு பலநிலமாக வகத்தையெடுக்கும். (உயிர்மாய்தல்) இவை குடியழியாதிருக்க, இவளைக்கூட்டோடேகொடுத்து, இப்படி பாரித்ததான் முடிந்துகொடுநிற்கும். (கண்டாற்றேனுலகியற்கை) இப்படிப்பட்ட லோகயாத்ரை யென்னால் பொறுக்கலாயிருக்கிறதில்லை.

(கடல்வண்ணா) இந்த லோகயாத்ராயின்படி யன்றிக்கே அநுபவிக்கலாவது மொருபடியுண்டே. இவர்கள் து:கா நுஸந்தாநத்தால்வந்த க்லேஶந்திர ஶ்ரமஹரமான வுன்வடிவைக் காட்டியருளாய். (அடியேனைப் பண்டேபோல்கருதாது) * பொய்ந்நின்ற ஞானத்தில் “ இந்நின்றநீர்மை யினியாமுறாமை” என்றவளவாக வென்னைத்திருவுள்ளம்பற்ற வொண்ணாது. இதர விஷயங்களினுடைய தோஷதர்ஶநம்பண்ணிச் சொல்லுகிற வளவன்றிறே பகவத்விஷயத்தி லவகாஹித்துச் சொல்லுகிறது. சிற்றுள்கொண்டார், “ இவர்க்காகிலிது சேர்க்கைப் பல்லிபோலே பணியன்றோ, என்றிருக்கவொண்ணாது ” என்றாராம். அன்றிக்கே, கீழ் உன்னைப்பிரிந்து நான் கூப்பிட்ட வவ்வளவாக நினைக்கவொண்ணாது பராநர்த்தங்கண்டு கூப்பிடுகிறவித்தை (உன்னித்யாதி) உன்திருவடிகளிலே அழைத்தென்னை யடிமைகொண்டருளவேணும். உன்திருவடிகளிலே அழைத்தாலும், அடிமைச்சுவடறியிலிறே நான் மீளாதொழிவது; ஆனபின்பென்னை நித்ய கைங்கர்யங்கொண்டருளவேணும். (கூவிப்பணிகொள்ளே) “ சோற்றையிட்டுப் பணிகொள் ” என்னுமாபோலே..............*

## ஜீயர் அரும்பதம்.

மூன்றாம்பாட்டு (கொண்டாட்டமித்யாதி) பாட்டெல்லாம் கடாக்ஷித்தவதாரிகை (ஆபிஜாத்யாதிகளெல்லாமித்யாதி) “ விஶேஷ: ” இத்யாதிநையப்பற்ற “ உன் ” என்றதுக்குபாவம் (து:ககந்தமில்லாதவென்று)

இன்னான் - ஏவம்வித:. என், இது கொண்டாட்டமன்றோவென்ன (பயிலுந்திருவுடையாரித்யாதி) அதாவது - “ சர்வேஶ்வரனடியார்கள் ” என்று அவர்களைக் கொண்டாடவேண்டியிருக்க, இவர்களொரு கொண்டாட்டத்தை யுண்டாக்கிக்கொள்வதேயென்று கருத்து. குலம்புனைவும் - குலம் தொடுக்கையும். வித்தையாலுண்டான வம்ஶமிறே யிவர்க்கு வம்ஶம். தமர் - ஜ்ஞாதிகள். ப்ரதிகோடியாகபாவம் (அவன்றமரித்யாதி) பதப்ரயோகத்துக்குபாவம் (முன்பித்யாதி) முன்பு-தாரித்ர்யகாலத்திலே. உறவு - ஜ்ஞாதித்வேநசம்பந்தம். தண்ணிது - தாழ்வு. உற்றார் - பந்துக்கள். தரம் - அதிசயம். “விழுநிதி” (சீரியநிதி) சீரிய - ஶ்ரேஷ்டமான. வாரா - வந்து. செய்வதறியாமையாவது - “ நாமோ வ்ருத்தனாயிருக்கி

ரும், நமக்கொரு ஸ்த்ரீயை ஸ்வீகரித்தால் போகயோக்யதையில்லை; அதிலொரு தர்மத்தைப்பண்ணி யுஜ்ஜீவிப்போம்" என்கையன்றிக்கே, இத்தையிட்டொரு ஸ்த்ரீயை ஸ்வீகரிக்குமென்றபடி, "வண்டார்பூங்குழலாள்" என்று விசேஷிக்கிறதுக்கு தாத்பர்யம் (இவள் செவ்வியித்யாதி) தான் புஜிக்கமாட்டாமைக்கு ஹேதுவேதென்ன (போகயோக்யதையித்யாதி) அதாவது-வ்ருத்தனானல் யோக்யதையில்லையிறே. கீழுக்கத்துக்கெல்லாம் ப்ரதிகோடி (சேலேய்கண்ணியருமித்யாதி) இயற்றி - சக்தி. பலநிலமாக - உப்பரிகைமே லுப்பரிகையாக. (வலநிலமாக) என்று பாடாந்தரமானபோது - தளத்தின்மேல் தளமாகவென்றபடி. அர்த்தமொன்றே. இவை குறியழியாதிருக்கவென்றது - "கொண்டாட்டும்" இத்யாதிகளை. கூண்டோடே - அவனுடைய சரீரத்தோடே. (கூட்டோடே) என்று பாடமானாலும் அர்த்தமிதுவே. கண்டாற்றேன் - கண்டு பொறுக்கமாட்டுகிறிலேன்.

"கடல்வண்ணா" என்றதுக்கு; எம்பாராழ்வான் நிர்வாஹங்களைப்பற்ற பாவத்வயம் (இந்த லோகயாத்ரையித்யாதி வாக்யத்வயமும்) படி - ப்ரகாரமும், திருமேனியுமென்று சாடு. "கடல்வண்ணா" என்றத்தைக் கடாக்ஷித்துபாவம் (பொய்ந்நின்றவித்யாதி வாக்யத்வயம்) வாசி தன்னைக்காட்டுகிறார் (இதரவிஷயங்களினித்யாதி) உக்தத்துக்காப்த சம்வாதம் (சிற்றூர்கொண்டாரித்யாதி) சேர்க்கைப்பல்லி - நிலைப்பல்லி. சேர்க்கைப்பல்லியான தொருவிடத்திலே பலகாலும் சொல்லிக்கொண்டிருக்கும், அந்தப்பல்லிபோலே யிதுபணியன்றேவென்றிருக்க வொண்ணாதென்றொன்றபடி. ஆழ்வான் நிர்வாஹத்துக்கநுகுணமாக வருளிச்செய்கிறார் (அன்றிக்கேயித்யாதி) உன்னடிக்கே கூவாயென்னாதே, "பணிகொள்" என்றதுக்குக் கருத்தேதென்ன (உன்திருவடிகளிலே யழைத்தாலுமித்யாதி) "கூவிப்பணிகொள்" என்றதுக்கு பாவாந்தரம் (சோற்றையிட்டித்யாதி) பரமபதத்திலே யழைத்து கைங்கர்யம்கொள்ளவேணுமென்று - முந்தினது; இரண்டாவது, கூவுதல் - ஏவுதலாய், ஏவிப்பணிகொள்ளவேணுமென்று. அதாவது - வார்த்தை தாரகமென்றபடி.

தமர் - தமரும், உற்றார் - உற்றாரும், மனை - மனையும், ஒழிய - தன்னைவிட்டுக் குறியழியாமலிருக்க. பண்டேபோல் கருதாது - உன்னைப்பிரிந்த பண்டுபோலே நினைத்திராதே. க்ரமேணாந்வய:.........................................................*

---

## நான்காம்பாட்டு.

---

கொள்ளென்றுகிளர்ந்தெழுந்தபெருஞ்செல்வநெருப்பாகக்
கொள்ளென்றுதமமூடுமிவையென்னவுலகியற்கை
வள்ளலேமணிவண்ணாவுனகழற்கேவரும்பரிசு
வள்ளல்செய்தடியேனையுனதருளால்வாங்காயே.

### ஆறாயிரப்படி.

(கொள்ளென்று) உன்னை யாசைப்படாதே, அதி க்ஷூத்ரமாய நர்த்தகரமாயிருந்த ஐஸ்வர்யத்தை ஸ்வாஜ்ஞதையாலே யாசைப்படுகிற

இந்த லௌகிகரோடெனக்குள்ள சஹவாசத்தைத் தவிர்த்து; பரமோதாரனே, பரமகாருண்யத்தாலே ஆஸ்ரிதசுலபனானவனே, உன்னுடைய பரமௌதார்யத்தாலும் பரமகாருண்யத்தாலு மடியேனை யுனகழற்கே வரும்பரிசு வாங்கியருளவேணுமென்கிறார் ..............................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், நஶ்வரமான வைஶ்வர்யத்தை யாதரிக்கிற லோகயாத்ரையைக் காணாதபடி, உன்வடிவை யெனக்குபகரித்த மஹோதாரனான நீ என்னை யங்கே ஸ்வீகரிக்கிற வௌதார்யத்தையும் பண்ணவேணுமென்கிறார்.

கொள்-என்னைக்கொள்-என்னைக்கொள். என்று-என்று. கிளர்ந்து-மேன்மேலனஅபிவ்ருத்தமாய். எழுந்த-தோற்றுகிற. பெரும்-பெரிய. செல்வம்-ஐஶ்வர்யம். நெருப்பாக - விநாசாதிகளாலும் ப்ரதிபக்ஷங்களபிபவிக்கைக்கு ஹேதுவாகையாலும் பரிதாபகரமாய்க்கொண்டக்நிகல்பமாகச்செய்தே. வாசனையாலும் சாபல்யத்தாலும், கொள் - பின்னையு மித்தையே ஸ்வீகரி. என்று - என்று. தமம் - அஜ்ஞாநதமஸ்ஸானது. மூடும் - அபிபவியாநிற்கிற. இவை - இவை. என்ன - என்ன. உலகியற்கை - லோகயாத்ரைகள். வள்ளலே - நிரதிசயௌதார்யத்தை யுடையையாய். மணி - நீலரத்நம்போலே தர்ஶநீயமான. வண்ணா - வடிவையுடையவனே. உன - ஏவம்பூதனானவுன். கழற்கே - திருவடிகளிலே. வரும்பரிசு - வரும்படி. வள்ளல் - இதுக்கெண்ணவுமோரௌதார்யவிசேஷத்தை. செய்து - பண்ணி. அடியேனை - உனக்கே யநந்யார்ஹனானவென்னை. உனது - உன். அருளால் - க்ருபையாலே. வாங்காய் - கைக்கொண்டருளவேணும்..............................*

## ஈடு - நான்காம்பாட்டு.

சேதநர், ஐஶ்வர்யத்தை விரும்பினால் அது விநாசஹேதுவாகக் காணாநிற்கச்செய்தே, திரியவுமந்த வைஶ்வர்யத்தை விரும்புகையே ஸ்வபாவமாம்படி யிருக்கிற விதுக்கு ஹேதுவேதோ; நானிதுகண்டு பொறுக்கமாட்டுகிறிலேன், என்னை முன்ன மிவர்கள் நடுவில்நின்றும் வாங்கவேணுமென்கிறார்.

(கொள்ளென்றித்யாதி) இவன்தானர்த்திபாதிருக்கச்செய்தேயும், "கொள்கொள்" என்றுமொண்டெழுபானைபோலே கிளர்ந்துவருகிற நிரவதிகசம்பத்தானது, நெருப்பாக-நிஶ்ஶேஷமாக நசிக்கவென்னுதல்; தனக்குவிநாஶஹேதுவாகவென்னுதல், ஐஶ்வர்யம் விநாஶஹேதுவாகையாவதென்னென்னில; "இவன்ஜீவிக்கிறான்" என்கிறவிதுகேட்டுப் பொறுக்கமாட்டாமையிறே பிறரிவனை யழியச்செய்வது. இப்படி யைஶ்வர்யம் விநாஶஹேதுவாகக் காணச்செய்தேயும், பிறரிவனை "கொள்கொள்" என்றுப்ரேரிக்க, தமோபிபூதனாய் துராசையாலே, முன்புவிநாஶஹேதுவானவத்தை ஸ்வீகரியாநிற்கும். திரியவுமத்தை ஸ்வீகரிக்கிறது தமோகுணாபிபூதராயிறே. அன்றிக்கே, கொள்ளென்றுப்ரேரிக்கிறது-மனஸ்ஸாகவுமாம், அன்றிக்கே, "இதுவிநாஶஹேதுவாம்" என்றறியச்

செய்தேயும், தன்னுடைய ஹ்ருதயமானது தமோகுணபிபூதமாய், அத்தைக்கொள்ளென்று ப்ரேரித்து இவனை ஸ்வீகரிப்பிக்கு மிதினுடையபலம். [ ஹதெஷீஷெஹதெஜராணெஹதெகணெ-உஹாாடுெ ஆஶாபலவதீராஜஸூஶல்யோஜேஷ்ட திவாண்டவாந ] ( ஹதேபீஷ்மேஹதேத்ரோணேஹதேகர்ணேமஹாரதே । ஆஶாபலவதீராஜந்ஸல்யோஜேஷ்ய திபாண்டவாந் ) அதிரதமஹாரதரடையப் பட்டுப்போகாநிற்கச்செய தேயும், பின்னையும் சல்யனைக்கொண்டே பாண்டவர்களை ஜயிக்கப்பார்த்தானிறே துர்யோதநன். ( இவைபென்னவுலகியற்கை ) இவைசிலலோகயாத்ரை யிருக்கிறபடியே.

( வள்ளலே ) "ஐஸ்வர்யம்விநாஶஹேது" என்னுமிடத்தை யென்னெஞ்சிலேபடுத்தி யெனக்கௌதார்யத்தைப் பண்ணினவனே. (மணிவண்ணா) மாணிக்கப்பண்டாரத்தையிறே ஔதார்யம்பண்ணிற்று. சாதநாநுஷ்டாநம், மற்றொன்றைப்பண்ணவன்றாயிற்று. அன்றிக்கே, ஐஸ்வர்யாதிகளில் ருசியைப்பிறப்பித்தது, பிடாத்தைவிழவிட்டு வடிவழகைக்காட்டியாயிற்று. ( உனகழலித்யாதி ) ஜ்ஞாநலாபமாத்ரத்தால் போருமோ, ப்ராப்தியைப்பண்ணித் தரவேண்டாவோ. * மயர்வறமதிநலமருளினவோபாதி துயரறு சுடரடிதொழுதெழப் பண்ணவேண்டாவோ. பசியைவிளைத்தால் சோறிடவேண்டாவோ. ( வள்ளல்செய்து ) உன்திருவடிகளிலே நான்வந்துகிட்டும்படியாகஔதார்யத்தைப்பண்ணி. "இவனிப்பேற்றைப்பெறுவான்" என்றுவிஷயீகரித்து. ( அடியேனை ) "பிறருடைமையையோநான்நோக்கச்சொல்லுகிறது" "உன்னுடைமை நசியாமல்நோக்கவேணும்" என்று ப்ரார்த்திக்கிறவென்னை. ( உனதருளால் ) * மயர்வறமதிநல மருளினவோபாதி, ப்ராப்திக்கீடாயிருப்பதுமோ ரருளைப்பண்ணவேணும் ( வாங்காயே ) வாங்காய் என்று-அசித்ஸமாதியாலே சொல்லுகிறார். அதுக்கடி-இத்தலையிலேபரமபக்திபர்யந்தமாகப் பிறந்தாலும், பெறுகிறபேற்றின் கனத்தைப்பார்க்க, அத்தலையில் க்ருபையாலேபெற்றதாம்படி யிருக்கையாலே.......................*

## ஜீயர்அருப்பதம்.

நாலாம்பாட்டு ( கொள்ளென்றித்யாதி ) பூர்வார்த்தத்தால் பலிதத்தை யருளிச்செய்யாநின்றுகொண்டு, "வாங்காய்" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை ( சேதநரித்யாதி ) "நெருப்பாக" என்றத்தைப்பற்ற ( அதவிநாசேத்யாதி ) "கொள்ளென்றுதமமூடும்" இத்யாதியைப்பற்ற ( திரியவுமித்யாதி )

மொண்டெழுபானை-ஏற்றப்பானை. நெருப்பாக-நெருப்புப்போலேயாகக் கண்டிருக்கச்செய்தே. நெருப்பவிந்தால் நிஸ்ஸேஷமாக வவியுமாபோலே, இதவும் நிஸ்ஸேஷமாக நசிக்கவென்றபடி. நெருப்பாஸ்ரயாஶி யாகையாலே, அப்படியே தனக்காஸ்ரயமான சேதநனை நசிப்பிக்குமென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார்

( தனக்கித்யாதி ) பிறரிவனை யழியச்செய்வதென்றவிடத்திலே - " ஆரோக்யமிந்த்ரியௌல்பண்யமைஶ்வர்யம் ஶத்ருஶாலிதா। வியோகோ பாந்தவைராயு: கஸ்யஸ்யாஜ்ஞாநதோத்ருதி: " ( ஆரோக்யமிந்த்ரியௌல்பண்யவைஶ்வர்யம்ஶத்ருஶாலிதா । வியோகோபாந்தவைராயு: கஸ்யஸ்யாஜ்ஜாநதோத்ருதி: ) என்றதநுசந்தேயம்.

" கொள்ளென்றுதமமூடும் " என்றவிடத்திலே, கொள்ளென்றதுக்கு மூன்றுபாவம். அதாவது-பிறரிவனை " கொள்கொள் " என்றுப்ரேரிக்க, தமோகுணாபிபூதனாய் ஸ்வீகரிக்குமென்னுதல்; இத்தைக்காட்டுகிறார் ( இப்படியைஶ்வர்யமித்யாதி ) சேதநருடைய தமோகுணாபிபவ மிவரறிந்தபடி யெங்ஙனேயென்ன ( திரியவுமித்யாதி ) அன்றிக்கே, மநஸ்ஸானது தமோகுணாபிபூதமாய் ப்ரேரிக்க, அத்தை ஸ்வீகரிக்குமென்னுதல்; இத்தையருளிச்செய்கிறார் ( அன்றிக்கேயித்யாதி ) அன்றிக்கே ஐஶ்வர்யமான திவனுடைய ஹ்ருதயத்தை தமோகுணாபிபூதமாக்கி " கொள்கொள் " என்றுப்ரேரிக்க, அத்தைஸ்வீகரிக்குமென்னுதல்; இத்தையருளிச்செய்கிறார் ( அன்றிக்கேயிதுவிநாசேத்யாதி ) இதினுடையபலம்-ஐஶ்வர்யத்தினுடையபலம். விநாஶஹேதுவானத்தை ஸ்வீகரிக்கைக்கடியேதென்ன; ஆசையென்றுவிவக்ஷித்து, அதுக்குப்ரமாணம் ( ஹதேபீஷ்மஇத்யாதி ) " ஹதே பீஷ்மே ஹதே த்ரோணே ஹதே கர்ணே மஹாரதே। ஆஶா பலவதீ ராஜந் ஶல்யோ ஜேஷ்யதி பாண்டவாந் " ( ஹதேபீஷ்மேஹதேத்ரோணே ஹதேகர்ணேமஹாரதே । ஆஶாபலவதிராஜந் ஶல்யோஜேஷ்யதிபாண்டவாந் " இதிபாரதே. இதுக்கர்த்தம் ( அதிரதேத்யாதி )

" இவையென்னவுலகியற்கை " என்றத்தைக்கடாக்ஷித்து பாவம் ( ஐஶ்வர்யம்விநாசேத்யாதி ) " மணிவண்ணா-வள்ளலே " என்றுகூட்டிதாத்பர்யாந்தரம் ( மாணிக்கமித்யாதி ) ஆக, " வள்ளலே " என்றதுக்கிரண்டுபாவம். ஐஶ்வர்யம் விநாசஹேதுவென்று காட்டினவௌதார்யம்-முந்தினது; அன்றிக்கே, விக்ரஹௌதார்யம் பண்ணினதென்று - இரண்டாவது. " மாணிக்கப்பண்டாரத்தை " என்றுகீழருளிச்செய்த வாக்யவிவரணம் ( சாதநாநுஷ்டாநமித்யாதி ) மற்றொன்றை-ஆசார்யோபதேசாதிகளை. பிடாத்தை-போர்த்தபச்சைவடத்தை.

" வள்ளலே " என்றதின்முந்தினவர்த்தத்துக்குச்சேரபாவம் ( ஜ்ஞாநலாபமித்யாதி ) ஜ்ஞாநலாபம்பண்ணினால் ப்ராப்தியைப்பண்ணித் தரவேணுமோவென்ன ( மயர்வறவித்யாதி ) இதுக்குத்ருஷ்டாந்தம் ( பசியையித்யாதி ) தாத்பர்யம் ( இவனிப்பேற்றையித்யாதி ) " அடியேனை " என்றதுக்கு ஆழ்வான் நிர்வாஹத்திலே யருளிச்செய்கிறார் (பிறருடைமையித்யாதி) பிறருடைமை-உன்னுடைமை. அருளினபின்பும். " அருளால் " என்கிறதென்னென்ன !( மயர்வறவித்யாதி ) அழையாயென்னாதே, " வாங்காய் " என்றதுக்குபாவம் ( வாங்காயென்றித்யாதி ) அதுக்கடி-அசித்ஸமாதியாலே சொல்லுகைக்கடி. பெறுகிறபேறு-அத்வேஷம்தொடங்கி கைங்கர்யபர்யந்தமாக வருகிறபலம். அத்தலையில்-ஈஶ்வரனிடத்தில்.

கிளர்ந்தெழுந்த - மேன்மேலன அபிவ்ருத்தமாய்த் தோற்றுகிற.

க்ரமேணாந்வய:.... ..................................................................*

# ஐந்தாம்பாட்டு.

வாங்குநீர்மலருலகினிற்பனவுந்திரிவனவு
மாங்குயிர்கள்பிறப்பிறப்புப்பிணிமூப்பாற்றகர்ப்புண்ணு
மீங்கிதன்மேல்வெந்நரகமிவையென்னவுலகியற்கை
வாங்கெனைநீமணிவண்ணாவடியேனைமறுக்கேலே.

## ஆறாயிரப்படி.

( வாங்கும் ) த்வத்விஶ்லேஷ து:கரன்றியே, ஜந்மஜராமரணாதி வ்யாத்யாதிது:கரான விவ்வாத்மாக்கள் வர்த்திக்கிற விந்தலோகத்தில்நின்று மடியேனை மறுகப்பண்ணாதே, ஈண்டவென்னை வாங்கியருளவேணுமென்கிறார்.........................................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஜந்மஜராமரணாதிக்லேசங்கள்நடையாடுகிற தேசத்திலிராதபடி, ஆஶ்ரிதசுலபமான வடிவையுடைய நீயங்கீகரிக்கவேணுமென்கிறார்.

வாங்கும்-திரைக்குளகப்பட்டபதார்த்தங்களையுள்ளேவாங்கும். நீர்-சமுத்ரஜலத்தையுடைய. மலருலகில்-விஸ்தீர்ணபூமியில். நிற்பனவும்-நிற்பனவும். திரிவனவும்-திரிவனவுமான. ஆங்கு - அந்தஸ்த்தலங்களிலேவர்த்திக்கிற. உயிர்கள்-ப்ராணாஶ்ரயமானவாத்மாக்கள். ஈங்கு-இவ்விடத்தில். பிறப்பிறப்புப்பிணிமூப்பால்-ஜந்மமரணவ்யாதிஜரைகளாலே. தகர்ப்புண்ணும்-நெருக்குண்ணாநிற்கும். இதன்மேல்-இதற்குமேல். வெம்-க்ரூரமான. நரகம்-ரௌரவாதிநரகங்களாயிருக்கும். இவை-இவை. என்ன-என்ன. உலகியற்கை. லோகயாத்ரைகள். மணி-ஆஶ்ரிதர்க்குமுடிந்தாளலாம்படி நீலரத்நம்போலே தர்ஶநீயமாய்சுலபமான. வண்ணா-வடிவையுடையவனே. நீ-நீ. எனை-இந்த து:கம்பொறுக்கமாட்டாதவென்னை. வாங்கு-அங்கீகரித்தருளவேணும். அடியேனை - உன்னடியேனானவென்னை. மறுக்கேல் - மறுகப்பண்ணாதேகொள்.

மறுக்குதல் - கலக்குதல்.........................................................................*

## ஈடு - ஐந்தாம்பாட்டு.

ஜந்மஜராமரணாதிகளாலேநோவுபடுகிறசம்சாரிகள் நடுவில்நின்றும், இதுநடையாடாததேசத்திலே யழைத்துக்கொண்டருளவேணுமென்கிறார்,

( வாங்குநீர்மலருலகில் ) கார்யங்களுக்கெல்லாம் காரணத்திலே லயமாகக்கடவதிறே ; இவ்வருகுண்டான கார்யவர்க்கத்தையடையத் தன்பக்கலிலே வாங்காநின்றுள்ளநீரிலே விஸ்த்ருதமாகாநின்றுள்ள லோகத்திலேயென்னுதல்; அப்யயபூர்விகையாயிறே ஸ்ருஷ்டியிருப்பது. அன்றிக்கே, வாங்குதல்-வளைதலாய், நீராலேசூழப்பட்டுத் திருநாபிகமலத்

திலே பிறந்தலோகமென்றுமாம். ( நிற்பனவும்திரிவனவும் ) ஸ்த்தாவரங்களும் ஜங்கமங்களும். ( ஆங்குயிர்கள் ) அவ்வவசரீரஸ்த்தமான வாத்மாக்கள். அன்றிக்கே, ஆங்கு என்கிறவிது-மற்றோரிடத்திலே யங்வயிப்பதாக விட்டுவைத்து, நிற்பனவும் திரிவனவுமான-உயிர்களென்றாய், ஸ்த்தாவரஜங்கமாத்மகமான வாத்மாககள். ( பிறப்பித்யாதி ) ஜந்மஜராமரணாதிகளாலே நெருக்குண்ணாநிற்பர்கள் சம்சாரத்தில் வர்த்திக்கும் நாளித்தனையும்.

( இதன்மேல்வெந்நரகம் ) இதுக்குமேல்போனால், கொடிதான நரகம். இங்கிருந்தநாள் மூலையடியே சுகாநுபவம்பண்ணித்திரிந்தார்களாம்படியன்றிறே அங்குப்போனால் படும்துஃகம். சுகப்ராந்தியாகிலும் மண்டிந்த, அங்குநிஷ்க்ருஷ்ட துஃகமேயாயிற்றுள்ளது. உயிர்க்கழுவிலிருக்குமவன், பிபாஸையும்வர்த்தித்துத் தண்ணீரும்குடித்து த்ருப்தனுமோபாதியிறே இங்குள்ளவை ; அதுவுமில்லையங்கு.

இதொருலோகயாத்ரையைப் பண்ணிவைக்கும்படியே.

ஆனாலுமக்குச்செய்ய வேண்டுவதென்னென்ன (ஆங்கு-வாங்கேனே ) “ ஶ்ரியாஸார்த்தம்ஜகத்பதிர்ஆஸ்தேவிஷ்ணுரசிந்த்யாத்மா பக்தைர்பாகவதைஸ்ஸஹ ” ( ஶ்ரியாஸார்த்தம்ஜகத்பதிஃ । ஆஸ்தேவிஷ்ணுரசிந்த்யாத்மாபக்தைர்பாகவதைஸ்ஸஹ ) என்கிறபடியே, ✻ ஏழுலகும் தனிக்கோல்செல்ல நீவிற்றிருக்கிறவிடத்திலே யென்னைவாங்கவேணும். ( மணிவண்ணா ) சப்தாதிவிஷயங்களிலே ப்ரவணனாயவற்றின்வடிவிலே துவக்குண்டிருக்கிறவென்னை, “ அவ்வடிவைநாய்க்கிடாய் ” என்னும்படியான வுன்வடிவைக்காட்டி, கொண்டுபோகவேணும். “ மனைப்பால்-பிறந்தார்பிறந்தெய்தும் பேரின்பமெல்லாம்-துறந்தார்தொழுதாரத்தோள் ” என்கிறபடியே, இவன்படியைக் கண்டால்வேறொன்றும் பிடியாதிறே. ( அடியேனை ) உன்படியறிந்தவென்னை - நீயுமவ்வோலக்கமுமா யிருக்கிறவிருப்பில் சுவடறிந்தவென்னை. ( மறுக்கேலே ) ஜந்மஜராமரணாதிகளாலே நெருக்குண்கிறவிவர்கள் நடுவேயிருந்து என்னெஞ்சுமறுகாதபடி பண்ணவேணும், என்னைக்கலங்கப்பண்ணாதேகொள். ✻ தெளிவிசும்பிலே வாங்கியருளவேணும். ( அடியேனைமறுக்கேலே ) அசாதாரணராய் சேஷபூதரா யிருப்பாரையுங்கொண்டு லீலாரஸமநுபவிக்கக் கடவதோ.......................................................................✻

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு ( வாங்குநீரித்யாதி ) “ பிறப்பு ” இத்யாதியைப்பற்ற (ஜந்மேத்யாதி ) “ வாங்கெனே ” என்கையாலே ( இதாடையாடாதவித்யாதி )

வாங்குகை-க்ரசிக்கையாய், க்ரசிக்கிறநீரொன்று விவக்ஷித்து, நீரோவெல்லாவற்றையும் வாங்குகிறதென்ன ( கார்யங்களுக்கித்யாதி ) சப்தார்த்தம் ( இவ்வ

ருகுண்டானவித்யாதி ) ஸ்ருஷ்டியைச்சொல்லி, பின்பு ஸம்ஹாரத்தைச்சொல்ல வேண்டாவோவென்ன ( அப்யயேத்யாதி ) "மலர்" என்று-புஷ்பமாய், அத்தாலே திருநாபிகமல மென்றிரண்டாமர்த்தம். ஆங்கு-கீழுக்தமானஸ்த்தாவரஜங்கமாத்மக சரீரங்களிலே யுண்டானவென்றபடி. பிறப்பு-ஜந்மம். இறப்பு-நாசம். பிணி-வ்யாதி. மூப்பு - ஜரை. ஈங்கு - இவ்விடத்திலே ; இத்தையருளிச்செய்கிறார் (ஸம்ஸாரத்திலித்யாதி )

"வெந்நரகம்" என்றதுக்குவாசனை ( இங்கிருந்தநாளித்யாதி ) மூலையடியே-யதேச்சம். இந்த துஃகமேயன்றேவுள்ளது, இத்தைப்பற்ற அங்கதிசயமேதென்ன ( சுகப்ராந்தியித்யாதி ) இங்குசுகப்ராந்தியாவானென், சுகாநுபவம் காணுகின்றோமேயென்ன ( உயிர்க்கழுவிலித்யாதி )

"ஆங்கு" என்றதுக்கு - "வாங்கு" என்றத்தோடேயந்வயம் காட்டுகிறார் ( ஆங்குவாங்கெனையென்று ) "ஆங்கு" என்றது-ப்ரமாணப்ரஸித்தியாலே, பரமபதத்தைச்சொல்லுகிறது. ப்ரமாணங்களைக்காட்டுகிறார் ( ஸ்ரீயாஸார்த்தமித்யாதி ) "வைகுண்டே து பரே லோகே ஸ்ரியா ஸார்த்தம் ஜகத்பதி:" ( வைகுண்டேதுபரேலோகேஸ்ரியாஸார்த்தம்ஜகத்பதி: ) இத்யாதி. "எனை மணிவண்ணா-வாங்கு" என்றந்வயித்தர்த்தம் ( சப்தாதீத்யாதி ) அவன்வடிவழகைக்கண்டவாறே யிதரவிஷயங்களை த்யஜிக்கலாயிருக்குமோவென்ன ( மனைப்பவித்யாதி ) அந்தத்தோளைத் தொழுதவர்கள், மனையிடத்துப்பிறந்தவர்கள்பிறந்து ப்ராபிக்கும் நிரதிசயசுகமெல்லாவற்றையும் பரித்யஜித்தவர்களாவர்கிடீர் ; தோளழகுதானே மற்றுள்ளவின்பங்களைத் துறக்கும்படி பண்ணுமென்கை இதிபாசுரார்த்த:. இரண்டாந்திருவந்தாதி நாற்பத்திரண்டாம்பாட்டு, "நினைப்பன்" இத்யாதி. சாடு ( இவன்படியையித்யாதி )

"மணிவண்ணா" என்றத்தைக்கடாக்ஷித்துபாவம் ( உன்படியித்யாதி ) "ஆங்கு" என்றத்தைக்கடாக்ஷித்துபாவம் ( நீயுமித்யாதி ) "அடியேன்" என்றதுக்கு மூன்றர்த்தம். அதாவது-சப்தாதிவிஷய ப்ரவணனாயிருக்கிற வென்னையென்னுதல் ; ( உன்படியறிந்தவென்னை ) அதாவது - ( நீயுமவ்வோலக்கமுமா யிருக்கிறவிருப்பில் சுவடறிந்தவென்னை ) என்னுதல் ; சேஷத்வஜ்ஞாநமுடைய வென்னையென்னுதலென்று. மறுகுதல்-கலங்குகை. ஆழ்வான் நிர்வாஹத்துக்குச்சேர ( ஜந்மஜரேத்யாதி ) எம்பார் நிர்வாஹத்துக்குச்சேரவர்த்தம் ( என்னைக்கலங்கவித்யாதி ) அதாவது-ஸம்ஸாரிகள் வ்யாபாரங்களைக்கண்டு கலங்காதபடி பண்ணவேணுமென்றபடி. "ஆங்கு-வாங்கெனை" என்றத்தைக்கடாக்ஷித்துபாவம் ( தெளிவிசும்பிலேயித்யாதி ) "மறுக்கேல்" என்றால், லீலைக்கு விஷயமெங்கேயென்ன ( அஸாதாரணரித்யாதி )

தகர்ப்புண்கை-நெருக்குண்கை. க்ரமேணாந்வய: ........................................*

## ஆறாம்பாட்டு.

மறுக்கிவல்வலைப்படுத்திக்குமைத்திட்டுக்கொன்றுண்ப
ரறப்பொருளையறிந்தோராரிவையென்னவுலகியற்கை
வெறித்துளவமுடியானேவினையேனையுனக்கடிமை
யறக்கொண்டாயினியென்னாரமுதேகூயருளாயே.

## ஆருயிரப்படி.

(*மறுக்கி) என்னுடைய விஶேஷதோஷாஸ்பதத்வத்தையொன்றும்பாராதே, உன்னுடைய நிரவதிகஸௌந்தர்யா விஷ்காரத்தாலே என்னை * த்வதாஸ்யஸுகைக ஸங்கியாக்கியருளினாய்; இனி, என்னாரமுதே, நிர்க்ருணராய்பரஹிம்ஸைகப்ரவ்ருத்திகராய் த்வதௌந்முக்யலேஶ ரஹிதராயிருந்த விவர்கள்நடுவில்நின்று மீண்டவென்னை வாங்கியருளவேணுமென்கிறார்..........................................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், பரபீடாகரமான ஸம்ஸாரஸ்வபாவத்தைக்காணுதபடி, நிரதிசயபோக்யனான நீயென்னையழைத்துக்கொண் டருளவேணுமென்கிறார்.

மறுக்கி-பயஹேதுக்களானவார்த்தைகளைச்சொல்லி யிவன்நெஞ்சைக்கலக்கி, பயநிவ்ருத்திக்குத்தன்னையேதஞ்சமாகப்பற்றும்படி, தன்வஶமாக, வல்-சிக்கென்ற. வலை-வலையிலே. படுத்தி-அகப்படுத்தி. குமைத்திட்டு-இவன்தன்பதார்த்தங்களைஸ்வயமேவநெகிழும்படிபீடித்து. கொன்று-பின்தொடர்த்தியறும்படிகொன்று. உண்பர்-தங்கள்வயிறுவளர்க்கார்கிற்பர்கள். அறம்-தர்மமாகிற. பொருளை-ப்ரதமபுருஷார்த்தத்தை. அறிந்து-அறிந்து. ஓரார் - "இதுவேநமக்குஜ்ஜீவநஹேது" என்றுநிரூபியார். இவை-இவை. என்ன-என்ன. உலகியற்கை-லோகயாத்ரைகள். வெறி-பரிமளோத்தரமான. துளவம்-திருத்துழாயையுடைத்தான. முடியானே-திருமுடியையுடையவனே. இந்தபோக்யதையைக்காட்டி, வினையேனை - பாபமேநிரூபகமென்னலாம்படியானவென்னை. உனக்கு-உனக்கு. அற-அநந்யார்ஹமாக. அடிமைகொண்டாய்-அடிமைகொண்டவனே. என்-எனக்கு. ஆர்-பரிபூர்ணமாய்நித்யபோக்யமான. அமுதே-அம்ருதமானவனே. இனி-ஸம்ஸாரத்திலே அத்யந்தார்த்திபிறந்தபின்பு. கூயருளாய்-அழைத்துக்கொண்டருளவேணும்.

அறப்பொருளையறிந்தோராரொன்று-மிகவும்பொருளையேயறிந்துவேறொன்றையும் விசாரியாரென்றுமாம்..........................................................................*

## ஈடு - ஆரும்பாட்டு.

ஸம்ஸாரிகளுடைய பகவத்வைமுக்யாதிதோஷங்களை யநுஸந்தித்து ஈஶ்வரனை யின்னாதாகைதவிர்ந்து, ஜீவநார்த்தமாக பரஹிம்ஸைபண்ணுகிற ஸம்ஸாரிகள் நடுவினின்று மென்னையுன்றிருவடிகளிலே யழைத்தருளவேணு மென்கிறார்.

(மறுக்கியித்யாதி) க்ராமணிகள் த்ரவ்யார்ஜநம்பண்ணும்படி. "ஸாது" என்று தோற்றவர்த்திப்பானொருவன், "ஒருதேசத்திலேவர்த்தியாநின்றால் ஓரபாஶ்ரயத்தைப் பற்றியிருக்கவேணும்" என்று ஒரு க்ராமணிபாடேசென்றுசேரும்; "இவன்ஸாது" என்றுதோற்றினவாறே "உன்னையின்னாருமின்னாருமாக வின்னபடிசொன்னார்களீ" என்னும், அவன்பீதனாய், "இவன்நமக்குரக்ஷகன்" என்றுவிஶ்வஸித்தபடி.

யாலே, " அதுக்குபரிஹாரமென் " என்று இவன்றன்னையேகேட்கும்; " உனக்கொன்றுவந்தால் சொல்லலாவதில்லாதபடி யென்னுகத்திலே யுனக்குள்ளவர்த்தத்தையும்பொகட்டு உன்க்ஷேத்ரத்தையு மென்பேரிலே திரியவிட்டுவை " என்னும்; இப்படியிவன் நெஞ்சைமறுகப்பண்ணி. ( வல்வலைப்படுத்தி ) இவனுக்கினி யிவைகொண்டு தப்பவொண்ணாதபடி தன்பக்கலிலேயகப்படுத்தி. ( குமைத்திட்டு ) பின்பிவனிட்டகாசு தன்னையடையத்தன்பேரிலே சிலவெழுதிச் சிகைக்கடிப்பிக்கும். (கொன்று) " இவனிருக்குமாகிலொருநாள்வரையில் சிலரையாஶ்ரயித்துத்தொடரிலோ" என்று, இவனை ஹிம்ஸிக்கும். (உண்பர்) இப்படிசெய்தால்தான் செய்வது வயிறுவளர்க்கையிறே. ( அறப்பொருளையறிந்து ) "தேஹாத்வ்யதிரிக்தமாயிருப்பதொரு ஆத்மவஸ்துவுண்டு, நாமிப்போது செய்கிறவை அதிலேவந்தவாறே தட்டுப்படும் " என்று தர்மதத்வத்தையறிந்து. ( ஓரார் ) அதினுடைய நிரூபணத்திலே முதலிலேயிழியார்கள். அன்றிக்கே, பரஹிம்ஸையில்நின்றும் நீங்காரென்றுமாம். ஓருதல்-ஒருவுதலாய், ஒருவுதல்-நீங்குதலாய், அந்தபரஹிம்ஸையில் நின்றும் நிவ்ருத்தராகார். அன்றிக்கே, அர்த்தபுருஷார்த்த மொன்றையுமேயறவிரும்பி, நன்மை தீமை நிரூபணம்பண்ணுமென்னுதல்.

இதொருலோகயாத்ரை யிருக்கும்படியேபிரானே.

( வெறியித்யாதி ) இஸ்ஸம்ஸாரிகள் நடுவேயிருக்கிறவென்னை யுன்னுடையபோக்யதையைக்காட்டி யடிமைகொண்டாய். பரிமளிதமான திருத்துழாயைமுடியிலே யுடையவனே. ( வினையேனை ) சப்தாதிவிஷயப்ரவணராயிருக்கிற விவர்களிலேயொருவனுய்ப் பிறக்கைக்கடியான பாபத்தையுடையவென்னை. நான்நின்றநிலைக்குச் சேராதபடியான நின்றிருவடிகளிலடிமையை நிர்ஹேதுகமாகவென்னைக் கொண்டருளினாய்.

( இனி ) அடிமைகொண்டபின்பு. ( என்னாரமுதே ) எனக்கு நிரதிசயபோக்யனானவனே, நானிவர்கள் நடுவேயிருக்கிற விருப்பைவிட்டுன் திருவடிகளிலேசேரும்படி யழைத்துக்கொண்டருளவேணும். அன்றிக்கே, ( இனியென் ) அவர்களொருபடியாலு மத்ருஷ்டத்தில் நெஞ்சுவையாராவபின்பு, நானவர்களநர்த்தத்துக்குக் கரைந்ததுக்கு ப்ரயோஜநமென். அத்தைவிடலாகாதோ. என்னைமுதலங்கே யழைத்துக்கொண்டருளவேணும்..........................................................*

## ஜீயர் அரும்பதம்.

ஆறும்பாட்டு. ( மறுக்கியித்யாதி ) இப்பாட்டிலும் " இவையென்னவுலகியற்கை, கூயருளாய் " என்று-இன்னதாகாநிற்க, இன்னதாகை தவிர்ந்தென்றது-" இனி " என்றிருக்கையாலே. " கொன்றுண்பர் " என்றத்தைப்பற்ற ( ஜீவநார்த்தமாகவித்யாதி )

த்ரவ்யார்ஜநம்பண்ணும் ப்ரகாரமெப்படியென்ன (சாதுவென்றித்யாதி) தோற்றினவாறே-க்ராமணிக்குத்தோற்றினவாறே. அவன்-சாது. இவன்-க்ராமணி. திரியவிட்டு-ஏறிட்டெழுதி. அதாவது-தன்னுடையபேரிலேயெழுதினத்தை வேறொருத்தன்பேரிலே யெழுதுகை. மறுகப்பண்ணி-கலங்கப்பண்ணி. வல்வலை-வலிதான வலை. வலையின் ஸ்வபாவத்தைப்பற்றபாவம் (இவனுக்கித்யாதி) சிகைக்கு-வட்டிக்கு. குமைத்திட்டு-நலிவுபடுத்தி. கொன்று-முடித்தென்றபடி. இப்படிசெய்தால் - அர்த்தத்துக்காக ஹிம்சித்தால்.

“அறப்பொருளை யறிந்தோரார்” என்றதுக்கு மூன்றர்த்தம் - தர்மதத்வத்தையறிந்து, ஓரார்-அதினுடைய நிரூபணத்தி லிழியார்களென்னுதல்; அன்றிக்கே, தர்மத்வத்தையறிந்து பரஹிம்சையில்நின்றும் நீங்காரென்னுதல்; அன்றிக்கே, (பொருளை-அற-அறிந்தோரார்) அதாவது-அர்த்தமென்ற புருஷார்த்தமொன்றையுமே மிகவிரும்பி, நன்மைதீமை நிரூபியாரென்று. மூர்த்தினது (தேஹாத்வ்யதிரிக்தமித்யாதி) அதிலேவந்தவாறே-தர்மதத்வத்தை விசாரிக்கிலென்றபடி. தட்டுப்படும்-தர்மமாகாதே அதர்மமாயே பர்யவசிக்குமென்றபடி. இரண்டாமாத்தம் (அன்றிக்கேபரஹிம்சையிலித்யாதி) இஸ்ஸப்தமிவ்வர்த்தத்தைக் காட்டும்படியெங்ஙனேயென்ன (ஓருதலொருவுதலித்யாதி) மூன்றாமர்த்தம் (அன்றிக்கேஅர்த்தபுருஷார்த்தமித்யாதி) ஆக, “அறப்பொருளையறிந்து” என்றதுக்கிரண்டர்த்தம். “ஓரார்” என்றதுக்கிரண்டர்த்தமுமாகக் கண்டுகொள்வது.

“வெறித்துளவம்” இத்யாதிக்குபாவம் (இஸ்ஸம்சாரிகளித்யாதி) சப்தார்த்தம் (பரிமளிதமானவித்யாதி) “அறப்பொருளையறிந்தோரார்” என்றதினிரண்டாமர்த்தத்திலே நோக்காகவருளிச்செய்கிறார் (சப்தாதிவிஷயேத்யாதி) “அற” என்றதுக்கு-ஒருஹேது வறக்கொண்டாயென் றர்த்தமாக்கி யருளிச்செய்கிறார் (நிர்ஹேதுகமாகவித்யாதி)

எம்பார்நிர்வாஹத்திலே (அடிமைகொண்டவித்யாதி) ஆழ்வான்நிர்வாஹத்துக்குச் சேரவர்த்தம் (அவர்களித்யாதி) கனாந்ததுக்கு-க்லேசிக்கைக்கு. (அத்தைவிடலாகாதோ) என்றது-ஸ்வகதம். அங்கே-பரமபதத்திலே.

க்ரமேணார்வய:........................ ........................ ...................*

## ஏழாம்பாட்டு.

ஆயேயிவ்வுலகத்துநிற்பனவுந்திரிவனவு
நீயேமற்றொருபொருளுமின்றிநீநின்றமையா
லேயோமூப்பிறப்பிறப்புப்பிணியேயென்றிவையொழியக்
கூயேகொள்ளடியேனைக்கொடுவுலகங்காட்டேலே.

### ஆறாயிரப்படி.

(ஆயே) த்வதாத்மகமாகையாலே த்வச்சேஷ்தை கரஸமாயிருக்கச்செய்தே, த்வச்சேஷதைகர ஸத்வஜ்ஞாநரஹிதமாய் தத்விஸ்லேஷைகதுஃகத்வரஹிதமுமாய் ஜர்மஜராவ்யாதி மரணாதிதுஃகமுமாயிருந்த விந்தப்

பொல்லாதலோகத்தை யென்கண்ணால் காணமாட்டுகிறிலேன். இங்குநின்றும் ஈண்டவடியேனை வாங்கியருளவேணு மென்கிறார்.................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், சர்வாத்மபூதனானநீ, க்ரூரமான து:கோத்தரஜகத்தைக் காணாதபடி யென்னையழைத்துக்கொண் டருளவேணுமென்கிறார்.

இ-இந்த. உலகத்து-லோகத்தில். நிற்பனவும்-நிற்பனவும். திரிவனவும்-திரிவனவும். நீயே-நீயே. ஆய்-ஆய். மற்று-வேறு. ஒருபொருளும்-ஒருபதார்த்தமும். இன்றி-இன்றி. நீ-நீ. நின்றமையால்-நின்றபடியாலே. ஸ்வஶரீரத்தில்வ்யாத்யாதிகளை சரீரிதானேசமிப்பிக்குமோபாதி, நோயே-நோய். மூப்பே-மூப்பு. பிறப்பே-பிறப்பு. இறப்பே-இறப்பு. பிணியே-பிணி. என்று-என்றுசொல்லப்பட்டு தனித்தனியே து:கத்துக்குநிரபேக்ஷஹேதுவான. இவை-இவை. ஒழிய-போம்படியாக. அடியேனை-உனக்கடியேனானவென்னை. கூயேகொள்-அழைத்துக்கொண்டருளவேணும். இவற்றாலேபீடிபடுகையாலே, கொடு-கொடிதாய்க்லேசோத்தரமான. உலகம்-ஜகத்தை. காட்டேல்-என்கண்ணுக்கிலக்காக்காதொழியவேணும்.

மூப்பு, பிறப்பென்கிறசொற்கள் - சந்திகார்யத்தாலே, புகரம்மறைந்து "மூப்பிறப்பு" என்றுகிடக்கிறது. பிணியென்று-தாரித்ர்யத்துக்கும்பேர்.........*

## ஈடு - ஏழாம்பாட்டு.

அபேக்ஷிதமப்போதே கிட்டாமையாலே, "பேறுதம்மதானபின்பு தாமேயத்னம்பண்ணிவருகிறார்" என்றுநினைத்தானாகக்கொண்டு; சகலபதார்த்தங்களும் த்வததீநமானபின்பு நீயேயுன்னைக்கிட்டும்வழி பார்த்தருளவேணுமென்கிறார்.

( ஆயே ) தாயேயென்றபடியாய், "மாதாபிதா" என்கிறபடியே யெனக்கு சர்வவிதபந்துவர்க்கமுமானவனே. அன்றிக்கே, (இவ்வுலகத்து நிற்பனவும் திரிவனவும்நீயே-ஆயே ) இந்தலோகத்தில் ஸ்தாவரஜங்கமாத்மகமான சர்வபதார்த்தங்களும், "நீ" என்கிறசொல்லுக்குள்ளேயாம்படி ப்ரகாரமாயிற்று, நீயொருவனுமே ப்ரகாரியாய். ( மற்றொருபொருளுமின்றி ) "𑌨𑍇𑌹 𑌨𑌾𑌨𑌾𑌸𑍍𑌤𑌿" ( நேஹநாநாஸ்தி ) "𑌆𑌤𑍍𑌮𑍈𑌵𑌾𑌭𑍂𑌤𑍍𑌤𑌤𑍍𑌕𑍇𑌨𑌕𑌂𑌪𑌶𑍍𑌯𑍇𑌤𑍍" ( ஆத்மைவாபூத்தத்கேநகம்பஶ்யேத் ) என்றும்சொல்லுகிறபடியே, அப்ரஹ்மாத்மகமாய் ஸ்வதந்த்ரமா யிருப்பதொரு பதார்த்தங்களை யாயிற்றில்லையென்கிறது. ( நீநின்றமையால் ) நீயிப்படிநின்றபின்பு. ( நோயித்யாதி ) சரீரத்துக்கு வந்தவற்றுக்கு சரீரியானவாத்மா சுகித்தல் து:கித்தல் செய்யுமோபாதி, எனக்குவந்தவற்றுக்கு சுகித்தல் து:கித்தல் செய்வாய் நீயாம்படி சம்பந்தமுண்டா யிருந்தபின்பு, ஜந்மநிபந்தநமான வ்யஸநங்களைக்கழித்து. நோயும், பிணியுமென்று-ஆதிவ்யாதிகள். ( கூயேகொள் ) "இவன்தானேவருகிறான்" என்றிராதே நீயேயழைத்துக்கொண் டருளவேணும்.

( கொடுவுலகம் ) உன்னைவிட்டு சப்தாதிகளாலே போதுபோக்கி யிருக்கிறலோகம். ( காட்டேலே ) த்ருஷ்டிவிஷம்போலே, காணில்முடிவன். இந்தலோகயாத்ரையென் கண்ணுக்கிலக்காகா தொழியவேணுமென்கையாலே இந்தலோகயாத்ரா யிவர்கண்ணில் பட்டதில்லையாயிருந்தபடி. * மயர்வறமதிநல மருளினவோபாதி சர்வசக்தியானவனித்தைக்காட்டில், காணுமித்தனை. ஆனால், “ இவையென்னவுலகியற்கை ” என்றத்தோடு சேரும்படியென்னென்னில் ; “ பரஹிதம் ” என்கிறபுத்தியாலே முன்பநுசந்தித்தார், இதுதானென்னைவந்து கிட்டாதபடி பண்ணவேணுமென்கிறரிதில்.......................................................*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு. ( ஆயேயித்யாதி ) “ நீயே-கூயேகொள் ” என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை ( அபேக்ஷிதமித்யாதி )

“ ஆயே ” என்று-தாயாய், மற்றபந்துக்களுக்கு முபலக்ஷணமாக்கி யருளிச்செய்கிறார் (தாயேயித்யாதி ) „ மாதாபிதாப்ராதாநிவாஸஶ்ஶரணம்ஸுஹ்ருத்கதிர் நாராயண: ” ( மாதாபிதாப்ராதாநிவாஸஶ்ஶரணம்ஸுஹ்ருத்கதிர் நாராயண: ) இத்யாதி ஸுபாலோபநிஷதி, “ ஆயே ” என்று-சம்புத்தி; நீயே-நீயேயாய்க்கொண்டு. இரண்டாம்பக்ஷத்தில், “ நீயே-ஆயே ” என்றந்வயமாய், ஏகாரம்-ஆசையாய், நிற்பனவும் திரிவனவும் நீயேயாயென்றர்த்தம். சாமாநாதிகரண்யம்-ப்ரகாரப்ரகாரி பாவநிபந்தநம். இதுக்குப்ரமாணம் (ஆத்மைவாபூதித்யாதி) “ மற்றொருபொருளுமின்றி ” என்று - ஸ்வரூபைக்யம் சொல்லுகிறதோவென்ன ( நேஹேத்யாதி ) “ ம்ருத்யோஸ்ஸம்ருத்யுமாப்நோதிய இஹ நாநேவ பஶ்யதி । மநஸைவேதமாப்தவ்யம் நேஹ நாநாஸ்தி கிஞ்சந ” ( ம்ருத்யோஸ் ஸம்ருத்யுமாப்நோதிஇஹநாநேவபஶ்யதி । மநஸைவேதமாப்தவ்யம்நேஹநாநாஸ்திகிஞ்சந ) இதிகடவல்யாம். அஸ்யார்த்த:, ய:, இஹ-ஜகதி, நாநேவபஶ்யதி-அப்ரம்ஹாத்மகதயாபஹுத்வேநபஶ்யதி, ஸ:, ம்ருத்யோர்ம்ருத்யுமாப்நோதி-அத்யந்தாஜ்ஞோபவதீத்யர்த்த:, “ ப்ராமம் வைம்ருத்யுமஹம் ப்ரவீமி ” ;( ப்ரமாதம்வைம்ருத்யுமஹம்ப்ரவீமி) இத்யத்ரம்ருத்யுஶப்தஸ்யா ஜ்ஞாநவாசகதயாவ்யாக்யாதத்வாத் ; உக்தமர்த்தம்த்ருடீகரோதி ( மநஸைவேதமித்யாதிநா ) இஹ-ஜகதி, நாநாஸ்திதிதம்மநஸைவாப்தவ்யமிதி. “ யத்ர த்வஸ்ய ஸர்வமாத்மைவாபூத் தத்கேந கம் பஶ்யேத் ” ( யத்ரத்வஸ்யஸர்வமாத்மைவாபூத்தத்கேநகம்பஶ்யேத்) இதிப்ருஹதாரண்யகே. அஸ்யார்த்த:, யத்ர-யதா, அஸ்ய-சேதநஸ்ய, சர்வம்-ஜகத், ஆத்மைவாபூத்-ப்ரஹ்மாத்மக மிதிபுத்திர்ஜாதா, தத்-ததா, கேந-அப்ரஹ்மாத்மகேந கேநகரணேந, கமப்ரஹ்மாத்மகம் பஶ்யேதித்யர்த்த இதி.

இப்போதுப்ரகார ப்ரகாரிபாவம் சொன்னதுக்குபாவம் ( சரீரத்துக்கித்யாதி ) * நோய்க்கும் * பிணிக்கும்பேதமேதென்ன ( நோயுமித்யாதி ) ஒழிய-ஒழித்து. “ கூயே ” என்ற ஏவகாரார்த்தம் ( இவன்தானேயித்யாதி )

கொடுமையை யுபபாதித்துக்கொண்டு; "காட்டேல்" என்கைக்குகாட்டினால் வந்தவநர்த்தமேதென்ன (த்ருஷ்டிவிஷமித்யாதி) பலிதம் (இந்தவித்யாதி) ஆனாலிப்போது லோகயாத்ரையை யநுசந்திக்கைக்கு ஹேதுவேதென்ன (மயர்வறவித்யாதி) "காட்டேல்" என்கையாலே.ஈஸ்வரன்தானே காட்டுவதற்கு முன்பிவர் காணாமையும், ஈஸ்வரனேகாட்டினனென்கையும்தோற்றுகிறது. அவன் காட்டினால், "காட்டேல்" என்று-துஸ்ஸஹமாகச் சொல்லுவானென்னென்று சங்கித்து பரிஹரிக்கிறார் (ஆனாலித்யாதி)

"மூப்பிறப்பு" என்கிறவிடத்தில், சந்திகார்யத்தாலே புகரம்மறைந்து மூப்பிறப்பென்று கிடக்கிறது. "பிணி" என்று-தாரித்ர்யத்துக்கும்பேர். நின்றவையால்-நின்றபடியால்.

க்ரமேணாந்வயः..................................................................................*

# எட்டாம்பாட்டு.

காட்டிநீகரந்துமிழுநிலநீர்தீவிசும்புகா
லீட்டிநீவைத்தமைத்தவிமையோர்வாழ்தனிமுட்டைக்
கோட்டையினிற்கழித்தென்னையுன்கொழுஞ்சோதியுயரத்துக்
கூட்டரியதிருவடிக்களெஞ்ஞான்றுகூட்டுதியே.

## ஆறாயிரப்படி.

(காட்டி) உன்னுடைய ஸ்ருஷ்ட்யாதிலீலைக் குபகரணபூதமாய் த்வததிஷ்ட்டித ப்ருதிவ்யாதி பஞ்சபூதாரப்தமாய் ப்ராக்ருதவிஷயைகபோக ப்ரஹ்மாதிக்ஷேத்ரஜ்ஞவர்க்க பரிபூர்ணமாயிருந்த வண்டத்தைக்கழித்து, நிரவதிகதேஜோமயமாய் சத்வகுணாத்மகமாய் ப்ரக்ருதேः பரஸ்தாத்வர்த்தமாநமான ஸ்ரீவைகுண்டத்திலேகொண்டுபோய்,ஸ்வயத்நதுர்லபமான வுன்திருவடிகளிலே யென்னையென்று கூட்டுவதென்கிறார்....*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், சகலஜகத்காரண பூதனானநீ, இந்த ஜகதந்தர்ப்பாவத்தைக்கழித்து என்னையு ன்திருவடிகளிலே கூட்டுவதென்றென்கிறார்.

காட்டி - பூர்வஸ்ருஷ்டியிலேப்ரகாசிப்பித்து. நீ-நிரபேக்ஷகாரணபூதனான. நீ-நீ. கரந்து-சம்ஹ்ருத்யவஸ்த்தையிலே "தமः-ஏகீபவதி" (தமஃ-ஏகீபவதி) என்கிறபடியேநாமரூப விபாகரஹிதமாம்படி ஸ்வரூபத்திலேமறைத்து. உமிழும் - ஸ்ருஷ்டி தசையிலே "யதாபூர்வமகல்பயத்" (யதாபூர்வமகல்பயத்) என்கிறபடியே யுண்டதுமிழ்ந்தாப்போலே யுருக்குலையாதபடிஸ்ருஷ்டிக்கும். நிலநீர்தீவிசும்புகால்-ப்ருதிவ்யாதிபூதங்களைந்தையும். ஈட்டி-பஞ்சீகரணப்ரகாரத்தாலே திரட்டி. வைத்து-இவற்றைப்புறவாயிலேயாவரணமாகவும்வைத்து. அகவாயிலே, இமையோர் - ப்ரஹ்மாதிகளான அநிமிஷர்க்கு. வாழ்-வாசஸ்த்தாநமாம்படி. அமைத்

த-சமைத்த. தனி-அத்விதீயமான. முட்டை-அண்டமாகிற. கோட்டையினை-முட்டுக்கோட்டையை. கழித்து-கழித்து. என்னை-இதிலிருப்பு து:கமாயுன்னைப்ராபிக்கையிலே யாசையுடையவென்னை. உன்-உனக்கசாதாரணமாய். கொழுஞ்சோதி-அதிசயிததேஜோரூபமாய். உயரத்து-“விஶ்வத:ப்ருஷ்டேஷு ஸர்வத:ப்ருஷ்டேஷு” (விஶ்வத:ப்ருஷ்ட்டேஷு ஸர்வத:ப்ருஷ்ட்டேஷு) என்கிறபடியே எல்லாவற்றுக்கும்மேலானபரமபதத்திலே, விதிசிவசநகாதிகளுக்குமத்யந்ததூரமாம்படி, கூடு-பெறுதற்கு. அரிய-அரிதான. திருவடிக்கள்-திருவடிகளை. எஞ்ஞான்று-எக்காலம். கூட்டுதி-கூட்டுதி.

காலமறிந்தேனாகில் தரித்திருக்கலாமென்றுகருத்து. “ கரந்துமிழுமென்று-உண்டுமிழ்ந்து ” என்றுஞ்சொல்லுவர்கள்..................................................*

## ஈடு - எட்டாம்பாட்டு.

நாமேசெய்யப்புக, நீர் “ வேண்டா ” என்றவாறே யன்றோதவிர்ந்தது ; இதுக்கு நம்மைக்காற்கட்டவேணுமோவென்ன ; செய்யக்கடவதாகிலதென்று செய்வதென்கிறார். “ எம்மாவீட்டுத் திறமும்செப்பம் ” என்றாரே.*

( காட்டி ) ஐந்த்ரஜாலிகனைப்போலே ; முன்புதானே தானும்படியிவற்றையடையத் தன்பக்கலிலேயுபஸம்ஹரித்து சதவஸ்த்தமான ஜகத்தை, “யதாதாயதாபூர்வமகல்பயத்” (தாதாயதாபூர்வமகல்பயத்) என்கிறபடியே, இத்தையுண்டாக்கிக்காட்டி.(நீகரந்துமிழும்;ஸ்ரஷ்டாவானநீயே ப்ரளயம்வந்தவாறேயுள்ளேவைத்துரக்ஷித்து, அதுகழிந்தவாறேவெளிநாடுகாணவுமிழும். அன்றிக்கே, நீகரந்து-காட்டி, உமிழ்ந்து-காட்டுமென்றுமாம்.இப்படியுண்பதுமிழ்வதான ப்ருதிவ்யாதிகளாலே,ஈட்டி-திரட்டி.த்ரிவ்ருத்கரணத்தைச்சொன்னபடி. [ஸமேத்யாந்யோந்யஸம்யோகம்பரஸ்பரஸமாஶ்ரயா:” (ஸமேத்யாந்யோந்யஸம்யோகம்பரஸ்பரஸமாஶ்ரயா:) இவைதனித்தனியும் காரியத்தைப்பிறப்பிக்கமாட்டா, கூடினாலும்சமப்ரதாநமாய்நிற்கில்காரியம்பிறப்பிக்கமாட்டாது; சேதுகையும்மண்ணையும்நீரையுங்கூட்டி குலாலாதிகள் கடாதிகளைப்பிறப்பிக்குமாபோலே ; பரஸ்பரம்காரண மேகரூபமாய்நிற்கில் கார்யமுமேகரூபமாயிருக்குமிறே; தேவாதிகார்யநாநாவித்யம்பிறக்கும்படி குணப்ரதாநபாவேநநிற்கும். இப்படியிவற்றைத்திரட்டி யிவற்றாலே (நீவைத்தமைத்த) நீசமைத்துவைத்த. (இமையோரித்யாதி) ப்ரஹ்மாதிகள் வன்னியம்செய்கிற அத்விதீயமான அண்டமாகிறகோட்டையினின்றுமென்னைப்புறப்படவிட்டு. கோட்டையாவது-புறம்புள்ளாரால் புகுரவொண்ணாததுமாய், உள்ளுள்ளாரால் புறப்படவுமொண்ணாதே, புக்கவிடமும் புறப்பட்டவிடமும்தெரியாதாயிருக்குமதிறே. “துரத்யயா” (துரத்யயா) என்றானிறேதானும். (என்னை) இக்கோட்டையிலே யகப்பட்டுப்புறப்பட வழியறியாதிருக்கிறவென்னை.

"മാമേവ യേ പ്രപദ്യന്തേ മായാമേതാം തരന്തി തേ" (மாமேவயேப்ரபத்யந்தேமாயாமேதாந்தரந்திதே) என்று நீசொன்னபடியே யுன்னையே பற்றினவென்னை. உம்மையித்தைக் கழித்துக்கொடுபோகச் சொல்லுகிறதென்னனேயென்ன (உன்கொழுஞ்சோதியுயரத்து) அஸ்ப்ருஷ்டசம்சாரகந்தமாய் சுத்தசத்வமயமாய் நிரவதிகதேஜோரூபமான பரமபதத்திலே. (கூட்டரியதிருவடிக்கள்) ஸ்வயத்நத்தால் துஷ்ப்ராபமான திருவடிகளை. (என்ஞான்று) "മാ ശുചഃ" (மாஶுச:) என்றொருவார்த்தைசொல்லிலும் "സ്ഥിതോസ്മി" (ஸ்த்திதோஸ்மி) என்றிருக்கலாயிறேயிருப்பது; அப்படியே "நான்கூட்டக்கடவேன்" என்றொருவார்த்தை யருளிச்செய்யவேணும். "ആരുരോഹ രഥം ഹൃഷ്ടഃ" (ஆருரோஹாதம்ஹ்ருஷ்ட:) என்னலாம்படி, "പൂർണേ ചതുർദശേ വർഷേ" (பூர்ணேசதுர்த்தஶேவர்ஷே) என்கிறவோபாதி வார்த்தையருளிச்செய்தருளவேணும். "இத்தைக்கழிக்கவேணும்" என்றிருக்கிறவென்னை, நீயுகந்தாரைக் கொடுபோய்வைக்கும் தேசத்திலே, சர்வசக்தியான நீயே என்றுகொடுபோய் வைக்கக்கடவை. இக்கோட்டையிட்டவிவன்றானே கழிக்கவேணுமிறே. விரோதியைப்போக்கிலு மிவனைப்பற்றவேணும், தன்னைப்பெறிலும் தன்னாலேபெறவேணும்; "മാമേവ യേ പ്രപദ്യന്തേ" (மாமேவயேப்ரபத்யந்தே) "തമേവ ശരണം ഗച്ഛ" (தமேவஶரணம்கச்ச) பிள்ளைதிருநறையூரரையர், "ஒருகுருவிபிணைத்தபிணையொருவராலவிழ்க்கவொண்கிறதில்லை; ஒருசர்வசக்தி, கர்மாநுகூலமாகப் பிணைத்தபிணையை, அவனைக்காற்கட்டாதே, இவ்வெலியெலும்பனான சம்சாரியாலவிழ்த்துக்கொள்ளப்போமோ" என்றுபணிப்பர்....*

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு. (காட்டிநீயித்யாதி) "என்ஞான்றுகூட்டுதி" என்று - காலாவதிகேட்கும்போது, செய்கைநிஶ்சிதமாக வேண்டுகையாலே, ததநுகுணமாகவவதாரிகை (நாம்செய்யவித்யாதி) அவன்செய்யப்புக, இவர் "வேண்டா" என்றாரோவென்ன (எம்மாவீடித்யாதி)

உண்டாக்கியென்னாதே, "காட்டி" என்கையாலே (ஐந்த்ரஜாலிகனைப்போலே என்றது) இவ்வாக்யத்தால்-அஸத்கார்யவாதத்தை நிரசித்தபடி. (ஐந்த்ரஜாலிகனைப்போல) ஒருவனாயு மறியாமல் சிலபதார்த்தங்களைவிழுங்கி அத்தைப்புறப்படவிடுமாபோலேயென்றபடி. தானேதானும்படியாவது - தானே உபசம்ஹரிக்குமிடத்தில், தானும்படியிவற்றை யடையத் தன்பக்கலிலே யுபசம்ஹரித்தென்றபடி. (தாதாயதாபூர்வமகல்பயத் என்கிறபடியே-ஐந்த்ரஜாலிகனைப்போலே-இத்தையுண்டாக்கிக்காட்டி) என்றந்வயிப்பது. ஐந்த்ரஜாலிகனைப்போலே யென்கையாலே-அநாயாசேந உண்டாக்கினபடியும் சொல்லுகிறது. "காட்டி" என்றதுக்கும், "அமைத்த" என்றதுக்கும் புநருக்திவாராமைக்காக, "அமைத்து-காட்டி" என்றந்வயித்

தர்த்தம் ( உண்டாக்கிக்காட்டியென்று ) ( அன்றிக்கேநீகரந்துகாட்டியுமிழ்ந்துகாட்டுமென்றுமாமென்றது ) "கரந்துகாட்டி, உமிழ்ந்துகாட்டி" என்று-முழுச்சொல்லாய், நிகரணோத்கிரணங்களைச் சொல்லுகிறதென்றபடி. முந்தினயோஜனைக்கு, "காட்டி" என்று-ஜகத்தையுண்டாக்கியென்று, ஸ்ருஷ்டியைச்சொல்லி, அது அப்யய பூர்விகையாகையாலே அத்தையும்சொல்லிற்றாய், "கரந்துமிழும்" என்று-அவாந்தர ப்ரளயத்தைச்சொல்லுகிறது; இந்தயோஜனையில், "நீகரந்துமிழும்" என்று தொடங்கி, "நீயமைத்து-காட்டி-வைத்த" என்றந்வயிப்பது; அமைத்துக்காட்டி வைத்த-உண்டாக்கி ப்ரகாசிப்பித்துவைத்த. இரண்டாம்யோஜனையில், "கரந்துகாட்டி, உமிழ்ந்துகாட்டி" என்கிறவிடத்தில், காட்டியென்கிறதுக்கு-அர்த்தமில்லை. கரந்துகாட்டி-கரந்து. உமிழ்ந்துகாட்டி-உமிழ்ந்தென்றபடி. "செய்துகாட்டும். வந்துகாட்டும்" என்னுமாபோலே. ஆக, இரண்டாம்யோஜனையில், கரந்தென்று-ஸம்ஹாரத்தையும், உமிழுமென்று-ஸ்ருஷ்டியையும் சொல்லுகிறது.

த்ரிவ்ருத்கரணமாவது-தேஜோபந்நங்களைக் கூட்டுகை. அந்நம்-ப்ருதிவி. இது-பஞ்சீகரணத்துக்கு முபலக்ஷணம். "ஏவம் ஜாதேஷு பூதேஷு ப்ரத்யேகமஸ்யாத் விதா ததா। சதுர்த்தா பின்னமேகைகமர்த்தமர்த்தம் ததா ஸ்திதம்। வ்யோம்னோர்த்தபாகாஶ்சத்வாரோ வாயுதேஜ:பயோபுவாம்। அர்த்தானி வாயோஸ்து வ்யோமதேஜ:பயோபுவாம்" (ஏவம்ஜாதேஷுபூதேஷுப்ரத்யேகமஸ்யாத்விதாததா।சதுர்த்தாபின்னமேகைகமர்த்தமர்த்தம்ததாஸ்திதம்।வ்யோம்னோர்த்தபாகாஶ்சத்வாரோவாயுதேஜ:பயோபுவாம்।அர்த்தாநியாநிவாயோஸ்துவ்யோமதேஜ: பயோபுவாம் ) இத்யாதிப்படியே பஞ்சீகரணக்ரமம்கண்டுகொள்வது. பஞ்சீகரணந்தான்வேணுமோவென்ன (சமேத்யேத்யாதி) "நாநாவீர்யா: ப்ருதக்பூதாஸ்ததஸ்தே ஸம்ஹதிம் விநா। நாஶக்நுவன் ப்ரஜா: ஸ்ரஷ்டுமஸமாகம்ய க்ருத்ஸ்நஶ:। ஸமேத்யாந்யோந்யஸம்யோகம் பரஸ்பரஸமாஶ்ரயா:। ஏகஸங்காதலக்ஷ்யாஶ்ச ஸம்ப்ராப்யைக்யமஶேஷத:। புருஷாதிஷ்டிதத்வாச்ச அவ்யக்தாநுக்ரஹேண ச। மஹதாத்யா விஶேஷாந்தா ஹ்யண்டமுத்பாதயந்தி தே" (நாநாவீர்யா:ப்ருதக்பூதாஸ்ததஸ்தேஸம்ஹதிம்விநா । நாஶக்நுவந்ப்ரஜாஸ்ஸ்ரஷ்டுமஸமாகம்யக்ருத்ஸ்நஶ: । ஸமேத்யாந்யோந்யஸம்யோகம்பரஸ்பரஸமாஶ்ரயா: । ஏகஸங்காதலக்ஷாஶ்சஸம்ப்ராப்யைக்யமஶேஷத: । புருஷாதிஷ்டிதத்வாச்சாவ்யக்தஸ்யாநுக்ரஹேண ச। மஹதாத்யாவிஶேஷாந்தாஹ்யண்டமுத்பாதயந்திதே) இதிப்ரதமேம்ஶேத்விதியே. "ப்ருதக்பூதா:" ( ப்ருதக்பூதா: ) என்றதுக்கர்த்தம் ( இவைதனித்தனியுமித்யாதி ) "ஸம்ஹதிம் விநா" ( ஸம்ஹதிம்விநா ) என்றதுக்கர்த்தம் ( கூடினவுமித்யாதி ) "பரஸ்பரஸமாஶ்ரயாஸ்ஸந்த: அந்யோந்யஸம்யோகம் ஸமேத்யாண்டமுத்பாதயந்தி" ( பரஸ்பரஸமாஶ்ரயாஸ்ஸந்த: அந்யோந்யஸம்யோகம் ஸமேத்யாண்டமுத்பாதயந்தி ) என்றதுக்கு சத்ருஷ்டாந்தமாகவர்த்தம் ( சேதுகையுமித்யாதி ) சேதுகு-பதரும், கூளமும். "பரஸ்பரஸமாஶ்ரயா:" ( பரஸ்பரஸமாஶ்ரயா: ) என்றவாஶ்ரயாஶ்ரயிபாவம்-ந்யூநாதிகபாவநிபந்தநமென்றுவிவக்ஷித்து, சமப்ரதாநபாவமானால் வந்ததேதென்ன ( பரஸ்பரம்காரணமித்யாதி ) கார்யமுமேசரூபமாயிருக்கும்-கார்யபேதமின்றிக்கே யிருக்கும். ஆகையாலே ( தே

வாதி) என்றுகூட்டுவது. (கடாதிகளைப்பிறப்பிக்குமாபோலே) என்றதுக்கு - (நாநாவித்யம்பிறக்கும்படி) என்றத்தோடேயந்வயம். குணப்ரதாநபாவேந-அப்ரதாந ப்ரதாநபாவேந. “[illegible]” (குணப்ரதாநேருபாதௌ) இத்யமர:.

“வரம்” என்றதினர்த்தம் (வன்னியம்செய்கிறவென்றது) வன்னியம் - குறும்பு. முட்டை-அண்டம். புறப்படவிடவேணுமோ, தானேபுறப்பட்டாலாகாதோவென்ன (கோட்டையாவதித்யாதி) கோட்டை-ப்ராகாரம். இதுவுமப்படி புறப்படவொண்ணாதோவென்ன (தாத்யயேத்யாதி)

அர்த்தாந்தரம் (மாமேவயஇத்யாதி) “உயரம்” என்றத்தைப்பற்ற (அஸ்ப்ருஷ்டசம்சாரகந்தமாயென்றது) “கொழுஞ்சோதி” என்றபதத்தால் சொன்னதீப்த்யதிசயத்தை ஹேதுபூர்வகமாக வருளிச்செய்கிறார் (சுத்தசத்வேத்யாதி) உன்சொழுஞ்சோதி யுயரத்து-உன்னுடைய, அதிசயித தேஜோருபமாய் எல்லாவற்றுக்கும் மேலானபரமபதத்திலே. திருவடிக்கள் கூட்டவேணுமென்னாதே, “எஞ்ஞான்று” என்றுகேட்கிறதென்னென்ன (மாசுச இத்யாதிவாக்யத்வயம்) “எஞ்ஞான்று” என்கையாலே-காலசங்க்யைபெறில் தரிக்கலாமென்னுமிடம் பலிக்கிறதென்றுவிவக்ஷித்து, அதுக்குப்ராமாணம் (ஆருரோஹேத்யாதி) “[illegible]” (ததஸ்ஸிரஸிக்ருத்வாதுபாதுகேபரதஸ்ததா । ஆருரோஹரதம்ஹ்ருஷ்டஸ்ஸத்ருக்நேநஸமந்வித:) “[illegible]” (சதுர்த்தஸேஹிஸம்பூர்ணேவர்ஷேஹநிரகூத்தம । நத்ரக்ஷ்யாமியதித்வாம்து ப்ரவேக்ஷ்யாமிஹுதாஸநம்) இத்யயோத்யாகாண்டே. “என்னை” என்றுதொடங்கி, “எஞ்ஞான்றுகூட்டுதி” என்னுமளவுக்கும் சப்தார்த்தம் (இத்தைக்கழிக்கவித்யாதி) “கோட்டையினில்கழித்து-திருவடிக்களெஞ்ஞான்றுகூட்டுதி” என்றதுக்குதாத்பர்யம் (இக்கோட்டையித்யாதி) “கோட்டையினில்கழித்தென்னை” என்றுதொடங்கி, “எஞ்ஞான்றுகூட்டுதி” என்கையாலேபலிதம் (விரோதியையித்யாதி) இப்படி இஷ்டாநிஷ்டப்ராப்திபரிஹாரங்களுக்கவனைப் பற்றவேணுமென்னுமதுக்கு ப்ரமாணம் (மாமேவயஇத்யாதி) (தமேவசரணம்கச்ச) என்கிறப்லோகத்தில், “[illegible]” (ஸ்த்தாநம்ப்ராப்ஸ்யஸி) என்கிறபதத்திலேதாத்பர்யம். “[illegible]” (ஸ்த்திதோஸ்மிகதஸந்தேஹ:கரிஷ்யேவசநம்தவ) இதிகீதாயாமஷ்டாதஸே. விரோதியைப்போக்கிலு மவனைவிட்டுப் போக்கவேணுமென்கிறதுக்கு சம்வாதம் (பிள்ளைதிருநறையூரித்யாதி) பிணைத்தபிணை-பந்தித்தபந்தநம். அவிழ்க்க- விடுக்க. எளியெளும்பன்-அல்பசக்திகன்.

நீகரந்துமிழுமென்றுதொடங்கி, ஈட்டிநீ-அமைத்து-காட்டி-வைத்த-கோட்டையினில் என்றுதொடங்கி யந்வயம். த்விதீயார்த்தத்துக்கு, கரந்துகாட்டியென்று-முழுச்சொல்லு ........................................................................*

## ஒன்பதாம்பாட்டு.

கூட்டுதிநின்குரைகழல்களிமையோருந்தொழாவகைசெய்
தாட்டுதிநீயரவணையாயடியேனுமதுவறிவன்
வேட்கையெல்லாம்விடுத்தென்னையுன்றிருவடியேசுமந்துழலக்
கூட்டரியதிருவடிக்கட்கூட்டினைநான்கண்டேனே.

### ஆறாயிரப்படி.

(கூட்டுதி) ப்ரஹ்மாதிகளுக்குங்கூட துர்லபனாயிருந்துவைத்து, எத்தனையேனும் தண்ணியரேயாகிலு மாஶ்ரிதரையுன் திருவடிகளோடே கூட்டுதியென்னுமிட மடியேனுக்கூடவறியும்படி லோகத்திலே ப்ரதிதமாயிருக்குமத்தை, நீயென்பக்கலிலே செய்தருளக்கண்டேன். எங்ஙனேயென்னில்; ப்ராக்ருதவிஷயைக போகலௌகிக ஜநசஹவாஸஜநித நிரவதிக துஃகமெல்லாம்போம்படி, ப்ராக்ருதவிஷய வைராக்யபூர்வகமாக வென்னையுன்றிருவடியே சுமந்துழலக் கூட்டரிய திருவடிகளோடே கூட்டினையென்கிறார். ........................................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், இவருடையவார்த்தி தீரும்படி பரமபதத்திலிருப்பை ப்ரகாசிப்பிக்க, ஆஶ்ரிதசம்ஶ்லேஷ ஸ்வபாவனான நீயென்னை உன்றிருவடிகளைப்ராபிப்பிக்கக் கண்டேனென்று த்ருப்தராகிறார்.

நீ-சர்வசக்தியான நீ. கூட்டுதி-நீ தாரா அளவிலிகளேயாகிலும், குரை-நிரதிசயபோக்யமான. நின்-உன். கழல்கள்-திருவடிகளை. கூட்டுதி-சேர்த்துக்கொள்ளுதி. ஸ்வயத்நத்தாலேகாணநினைக்கில், இமையோரும்-விசதஜ்ஞாநரானதேவர்களும். தொழாவகை-கண்டநுபவியாதபடி. செய்து-பண்ணி. ஆட்டுதி-அல்மருவிப்புதி. அரவு-ஆஶ்ரிதர்க்கக்ரகண்யனை திருவநந்தாழ்வானை. அணையாய்-படுக்கையாகக்கொண்டவனே. அது-ஆஶ்ரிதாநாஶ்ரிதவிஷயத்தில் சௌலப்யதௌர்லப்யருபமானஸ்வபாவத்தை. அடியேனும் - சேஷபூதனானநானும். அறிவன் - அறிவன். எங்ஙனேயென்னில், வேட்கை-இதரவிஷயங்களிலபிநிவேசத்தை. எல்லாம்-எல்லாம்-சவாசநமாக. விடுத்து-கழித்து. என்னை-உன்னையொழியச்செல்லாதவாஸனையையுடையேனானவென்னை. திரு-நிரதிசயபோக்யமான. உன்-உன். அடி-திருவடிகளை. சுமந்து-சிரசாவஹித்து. உழல - "யுநயெநயா தாஹு தி" (யேநயேநதா தாகச்சதி) என்கிறபடியே அநுசஞ்சரணம்பண்ணும்படியாக. கூட்ட-எத்தனையேனுமளவுடையார்க்கும்கூட்டிக்கொள்ள. அரிய-அரிய. திருவடிக்கள் - திருவடிகளிலே. கூட்டினை-கூட்டிக்கொண்டாய். நான்-ப்ராப்தாவானநான். கண்டேன்-இந்த ப்ராப்யத்வதையபரோக்ஷித்தநுபவித்தேன். ஏ-நிஶ்சிதமென்றுகருத்து...............*

### ஈடு - ஒன்பதாம்பாட்டு.

இவருடைய சம்சாராநு சந்தாநத்தாலேவந்த வ்யசநமெல்லாம் தீரும்படி, திருநாட்டிலிருந்த விருப்பைக்காட்டியருள, கண்டநுபவிக்கப் பெற்றேனென்று த்ருப்தராகிறார்

( கூட்டுதிநின்குரைகழல்கள் ) அளவிலிகளாகவுமாம், நீயுகந்தாரை யுன்றிருவடிகளிலே சேர்த்துக்கொள்ளுதி. குரையென்று-பெருமையாதல், ஆபரணத்வநியாதல்.

( இமையோரித்யாதி ) ப்ரஹ்மாதிகளேயாகிலும், நீநினையாதாரை வந்துகிட்டாதபடி பண்ணியலைப்புதி. ( அரவணையாய் ) “ கூட்டுதி ” என்றதுக்குதாஹரணம்.

( அடியேனுமதுவறிவன் ) லோகவேதங்களிலே ப்ரசித்தமானவுன்படியை நானுமறிவன்.

அறிந்தபடிதானென்னென்னில் ; ( வேட்கையெல்லாம்விடுத்து) எனக்குன்னையொழிந்தவை யாமத்தனையன்றே வாசைப்படுகைக்கு, உன் விபூதியில்நான் “ எனக்கு, எனக்கு ” என்னுமதுண்டோ. * யாதானும் பற்றி நீங்கும்விரதத்தை நல்வீடுசெய்திலையோ. ( உன்றிருவடியேசுமந்துழல ) பாஹ்யவிஷயங்களிலுண்டான வாசையெல்லா முன்பக்கலிலேயாய், உன்றிருவடிகளையே நானுதரித்து, அதுவேயாத்ரையாய்ச் செல்லும்படிக்காக. (கூட்டரியவித்யாதி ) யாவர்சிலர்க்குந்தந்தாமால் சேர்த்துக்கொள்ளவரிய திருவடிகளை நான்சேரும்படி யென்னைச்சேர்த்துக்கொண்டாய். இதுநான்கேட்டார் வாய்க்கேட்டுச்சொல்லுகிறேனல்லேன், அநுபவத்தாலே சொல்லுகிறேன்..............................................*

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு. ( கூட்டுதியித்யாதி ) “ வேட்கையெல்லாம்விடுத்து, கூட்டரிய திருவடிக்கள்கூட்டினை ” என்கிறபதங்களைக் கடாக்ஷித்தவதாரிகை ( இவருடையவித்யாதி )

“ இமையோரும் ” என்றசம்பந்தார்த்த ப்ரதிகோடித்வேந ( அளவிலிகளாகவுமாமென்றது) நீயுகந்தாரையென்றது-அத்யாஹார்யம். குரையென்று பெருமையாதலென்றது-போக்யதா ப்ரகர்ஷமென்றபடி.

இமையோரும்-சர்வோத்க்ருஷ்டரான ப்ரஹ்மாதிகளேயாகிலும். ஆட்டுதி-(அலைப்புதி) திருவநந்தாழ்வானை யளவிலியாகச்சொன்னது- திர்யக்சமாதியாலே.

“அடியேனும்” என்றசம்பந்தம்-திருவநந்தாழ்வானை சமுச்சயிக்கிறதாதல், லோகவேதப்ரசித்தியை சமுச்சயிக்கிறதாதல் ; இத்தையருளிச்செய்கிறார் ( லோகவேதங்களிலேயித்யாதி ) லோக்யத இதிலோக இதிவா, லோக்யதே அநேநேதி லோக இதிவா, லோகசப்த:-ஸ்ம்ருதிதிஹாஸபுராணவாசீ. “ அது ” என்கிறதுக்கு ப்ரசித்தியெங்ஙனேயென்ன ( லோகவேதங்களிலேயென்றது )

அறிந்தபடிதானென்னென்னிலென்றது - சாஸ்த்ரமுகத்தாலே கேட்டறிந்தீரோ வென்றபடி. வேட்கை-ஆசை. “ எல்லாம் ” என்றதுக்கர்த்தம் ( எனக்குன்னையித்யாதி ) “ விடுத்து ” என்றதுக்கர்த்தம் ( யாதானுமித்யாதி ) ப்ரக்ருதிப்ராக்ருதங்களிலே யேதேனுமொன்றைப்பற்றி பகவத்விஷயத்தைவிட்டே போம்படியான

சம்சாரிசேதநனுடையசங்கல்பத்தை நன்றாகவிடுவிக்கு மவனித்யர்த்த8. திருவிருத்தம் தொண்ணூற்றைந்தாம்பாட்டு, "யாதானுமோராக்கை" இத்யாதி. விடுத்து-விடுவித்து. சுமக்கை-ஆதரிக்கை.

"நான்கண்டேனே" என்கிறவவதாரண தாத்பர்யம் (இதுநானித்யாதி)

அரவணையாய், வேட்கையெல்லாம் விடுத்தென்றுதொடங்கி, நான்கண்டேன்; ஆகையாலே, நீ-கூட்டுதி நின்குரைகழல்கள்; இமையோரும் தொழாவகை செய்தாட்டுதி, அடியேனு மதுவறிவனித்யந்வய8..................................*

---

# பத்தாம்பாட்டு.

கண்டுகேட்டுற்றுமோந்துண்டுழலுமைங்கருவி
கண்டவின்பந்தெரிவரியவளவில்லாச்சிற்றின்ப
மொண்டொடியாடிருமகளுநீயுமேநிலாநிற்பக்
கண்டசதிர்கண்டொழிந்தேனடைந்தேனுன்றிருவடியே.

## ஆறாயிரப்படி.

(கண்டு) விஷயரசங்களிலும், கைவல்யாநுபவரசத்திலும் வைராக்யம் பிறந்ததெத்தாலேயென்னில்; நித்யநிர்த்தோஷநிரவதிககல்யாணகுணகதாநராய் * தவைவோசிதராயிருந்த லக்ஷ்ம்யாதிதிவ்யமஹிஷீ ஜநங்களும், ஸ்வபாவத ஏவநிரஸ்த சமஸ்தசாம்சாரிக ஸ்வபாவத்வத் பரிசர்யைகபோகரான சேஷசேஷாஸநாத்யஸங்க்யேய திவ்யபரிஜநங்களும், நீயுமேயாயிருந்த விந்தமநோஹரமான விருப்பைக்கண்டு, அந்தவைஸ்வர்யகைவல்யங்களையொழிந்து, ததேகபோகத்வப்ராங்முக ஜநஸஹவாஸஜநிததுஃகமெல்லாம்போம்படி யுன்றிருவடிகளை யடைந்தேனென்கிறார்.*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், உமக்கிதர புருஷார்த்தங்களைக்கழித்து பரமபுருஷார்த்தத்தைக் கூட்டினகணக்கென்னென்ன; ஐஸ்வர்யகைவல்யங்களை நானேவிட்டு, ஸ்ரீய:பதியானவுன்னையே புருஷார்த்தமாக நிஸ்சயித்து ப்ராபிக்கும்படியானேனென்கிறார்.

கண்டு-ரூபகுணத்தைக்கண்டும். கேட்டு-சப்தகுணத்தைக்கேட்டும். உற்று-ஸ்பர்ஸகுணத்தைக்கிட்டியும். மோந்து-கந்தகுணத்தைமோந்தும். உண்டு-ரசகுணத்தைபுஜித்தும். உழலும்-லப்தவிஷயத்தில்பசைபோராமல் சஜாதீயவிஷயந்தேடி அலமாக்கும். ஐங்கருவி-ஐந்திந்த்ரியங்களாலேயும். கண்ட-பரிச்சேதித்தநுபவித்த. இன்பம்-ஐஸ்வர்யசுகமும். தெரிவு-இந்தஇந்த்ரியங்களுக்குக்ரஹித்தநுபவிக்க. அரிய-அரிதாய். அளவில்லா-இவ்வைஸ்வர்யசுகத்திற்காட்டில் நித்யத்வாதிகளாலே அபரிச்சிந்நமாய். சிறு-பகவதநுபவத்தைப்பற்றவத்யல்பமான. இன்பம்-ஆத்மாநுபவசுகமும். ஒண்-விலக்ஷணமான. தொடியாள்-முன்கைச்சரியையுடையளாய். திரு - சர்வசம்பத்ஸமஷ்டிபூதையாகையாலேதிருவென்றுசொல்லப்பட்ட, மகளும்-

* நாரீணாமுத்தமையும். நீயுமே-புருஷோத்தமனானநீயுமே. நிலா-அந்தசம்பத்துமாத்மஸ்வரூபமுமுபயப்ரகாரமுமாம்படியொருபடிப்பட்டு. நிற்ப-நிற்கும்படியாக. கண்ட-நிரூபித்துவைத்த. சதிர்-நல்விரகை. கண்டு-அபரோக்ஷித்துக்கண்டு. ஒழிந்தேன்-கேவலைஶ்வர்யத்தையும்கேவலாத்மாநுபவத்தையுமொழிந்தேன். உன் - சகலபதார்த்தமுமுனக்குள்ளேயாம்படி ஸ்ரீய꞉பதியாய்பரமபுருஷார்த்தபூதனானவுன். திருவடி-திருவடிகளை. அடைந்தேன்-அநுபவமுகத்தாலேப்ராபித்தேன்...............*

## ஈடு - பத்தாம்பாட்டு.

கீழிற்பாட்டில், "விடுத்து" என்றும், "கூட்டினை" என்றும் ப்ரஸ்துதமானபேற்றை, ப்ரீத்யதிசயத்தாலே; விட்டதிது பற்றினதிதுவென்று வ்யக்தமாக வருளிச்செய்கிறார்

(கண்டித்யாதி) காட்சிக்குக்கருவியாயிருக்கும்கண், கேட்கைக்குக்கருவியாயிருக்கும்செவி, ஸ்பர்சித்தறிகைக்குக்கருவியாயிருக்கும்த்வகிந்த்ரியம், கந்தக்ரஹணத்துக்குக் கருவியாயிருக்கும் க்ராணேந்த்ரியம், ரஸனைரஸாநுபவத்துக்குக் கருவியாயிருக்கும். கண்டு, கேட்டு, உற்று, மோந்து, உண்டு, இப்படியிதுவேயாத்ரையாய்ப்போருகைக்கு சாமக்ரியாயிருக்குமிறேசக்ஷுராதிகரணங்கள். (ஐங்கருவிகண்ட வின்பம்) உழக்காலேயளக்குமாபோலே பரிச்சிந்நவஸ்து க்ராஹகமானவிந்த்ரியங்களாலே யநுபவிக்கப்பட்ட ஐஹிகசுகம். ஆத்மாவுக்குநித்யதர்மமாய்ஜ்ஞாநம், அதுதான் சங்குசிதமாயிருக்கக்கடவது;கர்மநிபந்தநமாக சங்குசிதமாய், மநஸ்ஸடியாகப்புறப்பட்டு, பாஹ்யேந்த்ரியத்வாராவிஷயங்களை க்ரஹிக்கக்கடவதாயிறேயிருப்பது.(தெரிவரியவளவில்லாச்சிற்றின்பம்) இவ்வருகிலநுபவத்தைப்பற்றத்தான்தெரிவரியதாய்-துர்ஜ்ஞேயமாய்,அளவிறந்து-அவ்வருகில் பகவதநுபவத்தைப்பற்றத் தானளவிலியாய்,அணுவானவாத்மவஸ்துவைப்பற்ற வருகிறபோகமாகையாலே ஸ்வரூபத꞉பரிச்சிந்நமாயிருக்கிறவாத்மாநுபவசுகம். இவற்றை ( ஒழிந்தேன் ) விட்டேன். (சிற்றின்பம்) * அந்தமில்பேரின்பத்துக்கெதிர்த்தட்டானதிறே.

விட்டதிதுவாகில் பற்றிற்றேதென்னில் ( ஒண்டொடியாளித்யாதி ) பெரியபிராட்டியாரும் நீயுமாய்ச்சேர விருக்கிற வுங்களிருவருடையவுமபிமாநத்திலே யொருவிபூதியாகவடங்கி யிருக்கிற விருப்பைக்கண்டேன். தொடியென்பது - முன்கைவளை. அதுக்கொண்மையாவது - இவளைக்கைகழியாதிருக்கை. நித்யாநபாயிநி யாகையாலே, முன்பொருகால்கழன்று பின்புசாத்மிக்கவேண்டும்படியிருப்பதில்லையிறே. "சங்குதங்கு முன்கை நங்கை" என்னக்கடவதிறே. ( திருமகளும்நீயுமே ) இப்படியிருக்கிறபிராட்டியும், அவள்தானுங்கூட " இறையும் அகலகில்லேன்" என்னும்படியிருக்கிறநீயும். (நீயுமேநிலாநிற்ப) இருவருடையவுமபிமாநத்துக்குள்ளே த்ரிபாத்விபூதியாக வடங்கிக்கிடக்கும். " நாநயோர்வித்ய-)

தேவாஜ" (நாகயோர்வித்யதேபரம்) என்னுநிற்க, வாசல்தோறுமீஸ்வரர்களிறேயிங்கு. (நிலாநிற்பக்கண்ட சதிர்) உங்களிருவருடையவுமபிமாநத்திலேகிடக்குமதுவேயாத்ரையாம்படி நீயோர்த்துவைத்த, சதிருண்டு-நேர்பாடு- "வைகுண்டே" (வைகுண்டே) இத்யாதிப்படியே நீயோர்த்துவைத்தவாய்ப்பு, அத்தைக்கண்டு. (உன்திருவடியே-அடைந்தேன்) "அந்தியசூரிகளோடேயொருகோவையாயுன்திருவடிகளிலேயடிமைசெய்யவேணும்"என்று உன்திருவடிகளைக்கிட்டினேன். இதுநானுற்றது,கீழ்ச்சொன்னவைநான் விட்டது. ஒண்டொடியாள் திருமகளும்நீயுமேயென்னும்காட்டில் - நித்யவிபூதியோகத்தைச்சொல்லிற்றுமோவென்னில்; அடியார்கள்குழாங்களை - உடன்கூடுவதென்றுகொலோ" என்றிவர்சொல்லுகையாலும் "பக்தைர்ப்பாகவதைஸ்ஸஹ" (பக்தைர்ப்பாகவதைஸ்ஸஹ) என்று ப்ரமாணாந்தரங்களுண்டாகையாலும். இனித்தான் "நிற்பனவும் திரிவனவும் நீயே மற்றொருபொருளுமின்றி" என்றுவைத்து சொடுவலகங்காட்டேல் என்றவோபாதி, அவர்களிருவருமே யென்ற விடத்தில் - அவர்களபிமாநத்திலே யடங்கிக் கிடப்பதொரு விபூதியுண்டாகச்சொல்லத் தட்டில்லையிறே. அதுதானிதுவானலோவென்னில்; அசாதாரணவிக்ரஹத்தோடே; "பவாம்ஸ்து ஸஹவைதேஹ்யா" (பவாம்ஸ்து ஸஹவைதேஹ்யா) என்கிறபடியே தானும்பிராட்டியுமாகவிருந்து "க்ரியதாம்" (க்ரியதாம்) என்று சொல்லுகிறபடியே இளையபெருமாளை யடிமைகொண்டாப்போலே, இவனையடிமைகொள்ளுவ தொருதேசவிசேஷத்திலேயாயிருக்குமிறே.........................................................*

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு (கண்டித்யாதி) விட்டதிதுவென்றது - "சிற்றின்பம்" என்னுமளவும்கடாக்ஷித்தது. "ஒண்டொடியாள்"என்றுதொடங்கி, "அடைந்தேனுன்திருவடி" என்றத்தைப்பற்ற (பற்றினதிதுவென்றது)

கருவி - சாதநம். சேதநனுக்குக்கண்டுகேட்டுற்று மோந்துண்டுழலுகைக்கு சாதநமாயிருக்கிறசக்ஷுராதிகரணங்களித்யர்த்தம். "ஐங்கருவிகண்டவின்பம்"என்றத்தாலே - சாம்சாரிகசுகங்களினுடைய பரிச்சிந்நத்வம் சித்திக்கிறதென்னுமத்தை சநிதர்ஶநமாக வருளிச்செய்கிறார் (உழக்காலேயித்யாதி) கண்டவின்பம்-அநுபவிக்கப்பட்டசுகம். இன்பம்-இன்பத்தையும். நித்யமாய்விபுவான தர்மபூதஜ்ஞாநமிருக்க, இந்த்ரியங்களாலே யநுபவிக்கிறதென்னென்ன (ஆத்மாவுச்சித்யாதி) (ஜ்ஞாநம்-ஆத்மாவுக்கு நித்யதர்மமாய்) என்றந்வயிப்பது. இப்படியிருக்கச்செய்தேயும் (கர்மநிபந்தநமாக) என்றுகூட்டிக்கொள்வது.

விவரணம் (தர்ஜ்ஜேயமாயென்றது) விவரணம் (அவ்வருகிலித்யாதி) அளவிலியாய்-ஆதிக்யமில்லாததாய். அளவிலியா யிருப்பானென்னென்ன (அணுவானவித்யாதி) ஸ்வரூபதஃ-ஸ்வரூபத்தினுலே. இவற்றை-வைஷயிகாநந்தத்தையும், ஆத்மாநுபவ ஜநிதாநந்தத்தையும். அந்வயங்காட்டுகிறார் (ஒழிந்தேனென்று) "அளவில்லா" என்றுவைத்து, "சிற்றின்பம்" என்றதுக்குபாவம் (அந்தமிலித்யாதி)

இது-உபயாநந்தங்கள். தாத்பர்யதோர்த்தம் ( பெரியபிராட்டியாருமித்யாதி ) ஒருவிபூதி-நித்யவிபூதி. சப்தார்த்தம் ( தொடியென்பதித்யாதி ) கழலாமைக்கு ஹேதுவேதென்ன ( நித்யாநபாயிநியித்யாதி ) இவள் வளை கழலா திருக்குமோவென்ன ( சங்கித்யாதி ) வளைதங்குகிற முன்கையையுடைய பூர்ணையித்யர்த்தஃ. திருச்சந்தவிருத்தம் ஐம்பத்தேழாம்பாட்டு. இப்படியிருக்கிற - வளைகழலாதிருக்கிற "ஒண்டொடியாள்" என்றுப்போலே யொருவிசேஷணமிடாதே "நீயும்" என்றதுக்குபாவம் ( அவள்தானுமித்யாதி ) இறையும்-க்ஷணகாலமும். "நீயுமே" என்கிற வவதாரணத்தாலே-நித்யமுக்தரில்லை யென்கிறதோவென்ன ( இருவருடையவித்யாதி ) உபயவிபூதியும் சேஷமாயிருக்க, நித்யவிபூதிமாத்ரத்தை யிருவருடையவுமபிமாநத்துக்குள்ளேயடங்கிக் கிடக்குமென்று சொல்லுவானென்னென்ன ( நாநயோரித்யாதி ) அதாவது - "ஈஶ்வரோஹம்" என்றுகொண்டு பாரதந்த்ர்யத்தை யிசையாதேயிருப்பர்களிறே யிவர்கள், அவர்கள் பாரதந்த்ர்யத்தை யிசைந்திருக்கையாலே விசேஷித்துச்சொல்லுகிறானென்றபடி. "தேவதிர்யங்மநுஷ்யேஷு புந்நாமா பகவாந்ஹரிஃ। ஸ்த்ரீநாம்நீ லக்ஷ்மீர்மைத்ரேய நாநயோர்வித்யதே பரம்" ( தேவதிர்யங்மநுஷ்யேஷுபுந்நாமாபகவாந்ஹரிஃ। ஸ்த்ரீநாம்நீலக்ஷ்மீர்மைத்ரேயநாநயோர்வித்யதேபரம்) இதிப்ரதமேம்ஶேஷடமே. இருவருடையவுமபிமாநத்திலே கிடக்கும்" என்னுமதுக்குப்ரமாணம் ( வைகுண்டேஇத்யாதி ) நிலாநிற்ப-வர்த்திக்கத்தக்கதாக. கண்டசதிர்- நீபார்த்துவைத்த சாதுர்யம்.

" கண்டசதிர்கண்டு-உன்றிருவடி-அடைந்தேன் " என்றதுக்குபலிதார்த்தம் ( அந்நித்யசூரிகளித்யாதி )

தடஸ்த்தசங்கையை யநுவதித்து பரிஹரிக்கிறார் ( ஒண்டொடியாளித்யாதி) நித்யவிபூதியோகத்தை-நித்யசூரியோகத்தை. " ஒண்டொடியாள் திருமகளும்நீயுமே " என்றால்-ஸ்வதந்த்ரமாயொரு வஸ்துவில்லை, பாரதந்த்ரமாயுண்டென்று நிஶ்சயித்தபடியென்னென்று சங்காதாத்பர்யம். இவருடைய திவ்யஸூக்தியாலும், சாஸ்த்ரத்தாலும், " நிற்பனவுந்திரிவனவும் " என்றுதொடங்கி யருளிச்செய்த த்ருஷ்டாந்தத்தாலுமுண்டென்று ஸ்த்தாபிக்கிறார் (அடியார்களித்யாதி) யத்வா, ப்ரமாணஸித்தத்தை யுபபத்தியாலும் காட்டுகிறார் ( இனித்தானித்யாதி ) " கொடுவுலகம் " என்கையாலே-லீலாவிபூதியாவதுப்போலே, " ஒண்டொடியாள்திருமகளும் நீயுமே " என்கையாலே-ததபிமாநாந்தர்க்கதமான நித்யவிபூதி யென்னக்குறையில்லையென்றபடி. சங்காந்தரம் ( அதுதானித்யாதி ) அதுதானிதுவானாலோ-பிராட்டியும் நித்யசூரிகளும் தானுமாயிருக்கிறஸ்த்தாந மிவ்விபூதியிலேயானாலோ. இத்தை பரிஹரிக்கிறார் ( அசாதாரணேத்யாதி ) ( அசாதாரணவிக்ரஹத்தோடே ) என்றதுக்கு - (இவனையடிமைகொள்ளுவது) என்றத்தோடேயந்வயம். "ஸதாபஶ்யந்தி" ( ஸதாபஶ்யந்தி ) என்றுசதாதர்ஶநம் பண்ணக்கூடாமையாலும், " தமஸஃபரஸ்தாத், " ( தமஸஃபரஸ்தாத், ) " ரஜஸஃபராகே, " ( ரஜஸஃபராகே, ) "கோட்டையினிற்கழித்து" என்று-ப்ரக்ருதிக்கப்பாலே யொருதேசவிசேஷத்திலேயென்றும் சொல்லுகையாலும்,இதுதான் ஜ்ஞாநாநந்தங்களுக்கு திரோதாயகமாய் விபரீதஜ்ஞாநஜநகமுமாகையாலும்கூடாது;பரமபதத்திலேயாகவேணுமென்றப்டி.

ஒண்டொடியாளென்றுதொடங்கி, கண்டசதிர்கண்டு-கண்டுகேட்டுற்றென்னுதொடங்கி, சிற்றின்பம்-ஒழிந்தேன்; உன்றிருவடி-அடைந்தேனித்யந்வயஃ.......௯

# பதினொன்றாம்பாட்டு.

---

திருவடியைநாரணனைக்கேசவனைப்பரஞ்சுடரைத்
திருவடிசேர்வதுகருதிச்செழுங்குருகூர்ச்சடகோபன்
திருவடிமேலுரைத்ததமிழாயிரத்துளிப்பத்துந்
திருவடியேயடைவிக்குந்திருவடிசேர்ந்தொன்றுமினே.

## ஆறாயிரப்படி.

(திருவடியை) எம்பெருமானைக்கண்ட ப்ரீத்யதிசயத்தாலே யவனை யேத்தின வித்திருவாய்மொழிவல்லாரை, இத்திருவாய்மொழிதானே யெம்பெருமான் றிருவடிகளையடைவிக்கும். திருவடிகளிலேதிவ்யரோகைபோலேபோய்ச் சேருங்களென்கிறார்.........................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழி, அப்யசித்தவர்களை யவன்றிருவடிகளை யடைவிக்குமென்று பலத்தையருளிச் செய்கிறார்.

திருவடியை-சர்வசேஷியாய். நாரணனை-சேஷித்வநிர்வாஹகமான அந்தராத்மத்வத்தையுடையனாய். கேசவனை-சேஷபூதருடையவிரோதிகளை கேசிநிரசநம்பண்ணினாப்போலேபோக்குமவனாய். பரஞ்சுடரை-சம்பந்தத்தாலும் வாத்ஸல்யத்தாலும் விரோதிநிரசநத்தாலும்சித்தமான நிரதிசயௌஜ்ஜ்வல்யத்தையுடைய க்ருஷ்ணனையுத்தேசித்து. திருவடி-அவன்றிருவடிகளை. சேர்வது-பற்றவேணுமென்கிற. கருதி-அபிசந்தியையுடையராய்க்கொண்டு. செழும்-நிரதிசயபோக்யமான. குருகூர்-திருநகரிக்குநிர்வாஹகரான. சடகோபன்-ஆழ்வார். திருவடிமேல் - "பரனடிமேல்" என்றுப்ராப்யமான அவன்றிருவடிகளின்மேலே. உரைத்த-அருளிச்செய்த. தமிழ், ஆயிரத்துள்-ஆயிரத்துள். இப்பத்தும்-இப்பத்தும். திருவடியே-அந்தத்திருவடிகளைத்தானே. அடைவிக்கும்-ப்ராபிப்பிக்கும். இத்திருவாய்மொழியிலந்வயமுடையநீங்கள், திருவடி-அத்திருவடிகளை. சேர்ந்து-ப்ராபித்து. ஒன்றுமின்-ப்ருதக்ஸ்த்திதியில்லாதபடி யடிமைசெய்யப்பாருங்கோள். இது - நாலடித்தாழிசை, கலிவிருத்தமுமாம்.............................................*

## ஈடு - பதினொன்றும்பாட்டு.

நிகமத்தில்-இத்திருவாய்மொழி யப்யசித்தாரை யிதுதானே யவன்றிருவடிகளிலே சேர்க்குமென்கிறார்.

புறம்புண்டான ருசியைப்போக்கித் தன்பக்கலிலேருசியைப்பிறப்பித்த வுபகாரத்தை யநுசந்தித்தேத்துகிறார். (திருவடியை) சர்வஸ்வாமியாயுள்ளவனை. (நாரணனை) கேவலம்ஸ்வாமித்வமேயன்றிக்கே, இவை

"அல்லோம்" என்றவன்றும் தான்விடமாட்டாதபடி வத்ஸலனையுள்ளவனை. (கேசவனை) வத்ஸலனைக்கடக்க விருக்கையன்றிக்கே யிவற்றோடு சஜாதீயனைய் வந்தவதரித்து அவர்கள் விரோதிகளைப்போக்குமவனை. (பரஞ்சுடரை) இப்படியவதரித்து நின்றவிடத்திலே யுண்டானமநுஷ்யத்வே பரத்வத்தைச்சொன்னபடி. (திருவடிசேர்வதுகருதி) அவன்றிருவடிகளைக் கிட்டினேமாகவேணுமென்னும் மநோரதத்தை யுடையராய். அடியேபிடித்து மநோரதமிதுவேயிறே "துயரறுசுடரடிதொழுதெழு", என்று. (செழுங்குருகூர்ச்சடகோபன்) அவ்வூரில் பிறப்பாயிற்றிவர்க்கிந்த ப்ராவண்யத்துக்கடி; திருவயோத்யையில மண்பாடுதானே ராமபக்தியைப் பிறப்பிக்குமாபோலே. (திருவடிமேலுரைத்தவித்யாதி) அவன்றிருவடிகளிலேசொன்ன தமிழாயிரத்திலும்வைத்துக்கொண்டு இந்தப்பத்து மவன்றிருவடிகளிலே சென்றடைவிக்கும்; நீங்களுமதுக் குறுப்பாகத் திருவடிகளிலேசென்று கிட்டுங்கோள். அவன்றிருவடிகளிலே இட்டக்கொள்ள, அடிசிற்பானைபோலே, உங்களுக்குமாயிராதே அவன்றிருவடிகளில் நித்யகைங்கர்யத்திலே யந்வயிக்கப்பாருங்கோள். "𑌸𑌾𑌯𑍁𑌜𑍍𑌯𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌨𑍍𑌨𑌾𑌯𑍇" (ஸாயுஜ்யம்ப்ரதிபந்நாயே) என்றும், "𑌯𑍇𑌨 𑌯𑍇𑌨 𑌧𑌾𑌤𑌾 𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 𑌤𑍇𑌨 𑌤𑍇𑌨 𑌸𑌹 𑌗𑌚𑍍𑌛𑌤𑌿" (யேநயேநதாதாகச்சதிதேநதேநஸஹகச்சதி) என்றும்சொல்லுகிறபடியே, இளையபெருமாளைப்போலே பிரியாதேநின்று அவன்நினைவுக்கீடாக வடிமைசெய்யப்பாருங்கோள். இப்படியடிமை செய்வார்க்கு, இவர்விட்டவையும்விட்டுப் பற்றிற்றும் பற்றவேணுமோவென்னில்; இவரருளிச்செய்த விந்தத்திருவாய்மொழியை யநுசந்திக்கவே, தன்னடையே சப்தாதிகளில் விரக்தியையும் பிறப்பித்து அவன்றிருவடிகளிலேசேர விடுமிதுதானே......... ........ ...........*

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் (திருவடியையித்யாதி) "திருவடியேயடைவிக்கும்" இத்யாதியைக்கடாக்ஷித்து-அவதாரிகை. இதுதானே-இத்திருவாய்மொழிதானே.

"திருவடியை" இத்யாதியாலே விசேஷணமிட்டேத்துகிற தெதுக்காகவென்ன (புறம்புண்டானவித்யாதி) உபகாரத்தை-கீழ்ப்பாட்டிற்பண்ணின வுபகாரத்தை. பஹுவ்ரீஹியைக் கடாக்ஷித்தருளிச்செய்கிறார் (கேவலமித்யாதி) விரோதிகளைப்போக்கு மவனென்றதுக்கு-கேசிஹந்த்ருத்வத்திலேநோக்கு.

மநோரதமென்று தொடங்கியென்ன (அடியேபிடித்தித்யாதி) "செழும்" என்றதுக்குபாவம் (அவ்வூரிலித்யாதி) மண்பாடு-பூஸ்வபாவம்.

"ஒன்றுமின்" என்றதுக்கு-அவன்நினைவுக்கீடாக நித்யகைங்கர்யத்திலே யந்வயியுங்கோளென்றர்த்தாந்தரம் (அவன்றிருவடிகளிலேயித்யாதி) (அடிசிற்பானைபோலே-நித்யகைங்கர்யத்திலே யந்வயிக்கப்பாருங்கோள்) என்றந்வயிப்பது. உங்களுக்குமாயிராதே - ஸ்வாதந்த்ர்யம் கொண்டாடாதே, அடிசிற்பானைபோ

லேயென்றது-பாரதந்த்ர்யம் கொண்டாடியென்றபடி. "ஒன்றுமின்" என்று-"[illegible]" (தஸ்மிந்நேவலயம்ப்ரயயௌ) என்கிறபடியே. ஐக்யம்போலே யிராநிற்க, அவனோடே சேர்ந்தடிமைசெய்யுங்கோளென்று சொல்லுகிறபடியெங்ஙனேயென்ன (ஸாயுஜ்யமித்யாதி) "[illegible]" (ஸாயுஜ்யம்ப்ரதிபந்நாயே தீவ்ரபக்தாஸ்தபஸ்விந꞉ । கிங்கரா மம தே நித்யம்பவந்தி நிருபத்ரவா꞉)" "[illegible]" (யேநயேந தாதா கச்சதி தேந தேந ஸஹ கச்சதி) இதிபரமஸம்ஹிதாயாம். "கிங்கரா꞉" என்று-முன்னேபோகிறவனொருவனும், பின்னேசெல்லுகிறவனொருவனுமாகச் சொல்லாநின்றதிறே யென்றுகருத்து.

"இப்பத்தும்" என்கிறசப்தம்-அவதாரணார்த்தமென்கிறத்தை சங்கைமுன்னாகக்காட்டுகிறார் ஸிம்ஹாவலோகநந்யாயத்தாலே (இப்படியித்யாதி) அதாவது - "திருவடியேயடைவிக்கும்" என்னுதல், "திருவடிசேர்ந்தொன்றுமின்" என்னுதலமைந்திருக்க, இரண்டும் சொல்லுகையாலே - இப்படியடிமைசெய்வார்க்கிவர் விட்டவையும்விட்டு, பற்றிற்றும் பற்றவேணுமோவென்ன ; இத்திருவாய்மொழியை யநுசந்திக்கவே, சப்தாதிகளில் விரக்தியைப்பிறப்பித்துத் தன்னையே அவன்றிருவடிகளிலே சேர்த்துவிடுமிதுதானே ; நீங்களுமிருக்குவாதம்பிடித்தாற்போலேயிராதே யிசையப்பாருங்கோளென்றபடி.

க்ரமேணாந்வய꞉.................................................................................*

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

(நண்ணாதார்முறுவலிப்ப)

[illegible] (௪௪)

(காருண்யாதப்திமாதி) கண்ணாளாகடல் கடைந்தாய்-தேவதைகளுக்கம்ருதம்நிமித்தமாக, கருணையாலே கடலைக்கடைந்தவனாய்; (தத்புரிஶயி꞉) அரவணையாயம்மானே-லோகரக்ஷணார்த்தமாகத் திருப்பாற்கடலிலே திருவநந்தாழ்வான்மேலே கண்வளர்ந்தருளுமவனாய் ; (தத்ஸமாநாங்கவர்ண꞉) கடல்வண்ணாவடியேனை-கடல்போலே ஶ்ரமஹரமான திருநிறத்தையுடையனுமாய்; (ஶ்யாமௌதார்யஸ்ஸ்வதாநே) வள்ளலேமணிவண்ணா-தன்றிருமேனியை யாஶ்ரிதருக்கநுபவிக்கவழங்கி, அதிலே ப்ரசித்தமான வௌதார்யத்தை யுடையவனுமாய் ; (ருசிரமணிருசி꞉) மணிவண்ணாவடியேனை-மணிபோலே ஸ்ப்ருஹணீயமான காந்தியையுடையனுமாய் ; (வேஷதோதிவபோக்ய꞉) வெறித்துளவமுடியானேயித்யாதி - பரிமளிதமான திருத்துழாயைத் திருமுடியிலேயுடையவனாய், அத்தாலே மிகவும் போக்யபூதனுமாய் ; (ஆத்மத்வேநாநபாவ்ய꞉) ஆயேயிவ்வுலகத்து நிற்பனவுந்

திரிவணவும்-சர்வாந்தராத்மத்வேநாறு பாவ்யனுமாய் ; (தாதிகமபத:) கூட்டரியதிருவடிக்கள் - "ஸ்வயத்நத்தாலேபெறவேணும்" என்றிருப்பார்க்கு துஷ்ப்ராபங்களான திருவடிகளையுடையனுமாய் ; (பந்தமோக்ஷஸ்வதந்த்ர:) கூட்டுதிநின்குரைகழல்களிமையோருந்தொழாவகை செய்தாட்டுதி-தான்நினைத்தபேரைத் திருவடிகளிலே சேர்த்துக்கொள்ளுகைக்கும், தானுபேக்ஷித்தாரையகலவிடுகைக்கும் சக்தனுமாய் ; (ஸ்வாங்யப்ரேமோபரோதி) கண்டுகேட்டித்யாதி-ஆஸ்ரிதர்க்குத் தானும் பிராட்டியுமா யெழுந்தருளியிருக்கும் நிலையைக்காட்டி, ஸ்வவ்யதிரிக்தசப்தாதி ப்ராவண்யத்தைக் கழிக்குமவனாயிருக்கிற வெம்பெருமான், தன்னுடையபதத்திலே யுத்கண்டையுடையவர்களுக்கு மிகவும்போக்யனாகிறானென்று "நண்ணுதார்முறுவலிப்ப" என்கிறதசகத்திலே யாழ்வாருக்கு விவக்ஷிதமெனகிறார்.

தாபைஸ்ஸ்வைஸ்ஸம்பந்திது:கைஸ்ஸ்வவிபவமரணைஸ்தாபக்ருத்போக்யஸங்கை-
ர்துர்கத்யாஜ்ஞாதிவ்ருத்தேரநிதரவிததேரண்டகாராநிரோதாத்।
ப்ரஹ்வீபாவோஜ்ஜிதத்வாத் ப்ரலகுஸுககபரிஷ்வங்கதஸ்சாவஸாத்யம்
வீக்ஷ்ய த்ரஷ்டுமஶக்தோ நிஜபதநயநே நாயகம் நாயகோऽயாசீத். (௪௫)

இத்தசகத்திலேயாழ்வார் லோகவ்யாபாரத்தை யநுசந்தித்தபடியை யொருஸ்லோகத்தாலேகாட்டி யருளுகிறார்.

(தாபை:) எண்ணாராத்துயர்விளைக்கும் - எண்ணிமுடியாத து:கங்களாலும் ; (சம்பந்திது:கை:) தமருற்றார் தலைத்தலைப்பெய்தே மாறிக்கிடந்தலற்றும் - அநுபந்திகளுடைய து:கங்களாலும் ; (ஸ்வவிபவமரணை:) கொண்டாட்டுமித்யாதி-தம்முடையவும் தம்விபவங்களுடையவும் விநாசங்களாலும் ; (தாபக்ருத்போக்யசங்கை:) கொள்ளென்று கிளர்ந்தெழுந்தவித்யாதி-து:ககரமான போக்யவஸ்த்துக்களி லாசக்திகளாலும் ; (துர்க்கத்யா) இதன்மேல் வெந்நரகம்-நரகாதிக்லேசத்தாலும் ; (அஜ்ஞாதிவ்ருத்தே:) மறுக்கி வல்வலைப்படுத்திக் குமைத்திட்டுக்கொன்றுண்பர்-ஸ்வோதாபூரணார்த்தமாக பரஹிம்சிக்கைமுதலான வாஜ்ஞாதிலங்கநத்தாலும் ; (அநிதரவிததே:) நோயேமூப்பித்யாதி - சேஷசேஷிகரசனவாத்மாவை ஜந்மஜராமரணாதிகளிலே தள்ளுகையாலும் ; (அண்டகாராநிரோதாத்) இமையோர்வாழ்தனி முட்டைக்கோட்டையித்யாதி-அண்டமாகிற காராக்ருஹநிரோதத்தாலும் ; ப்ரஹ்வீபாவோஜ்ஜிதத்வாத்) இமையோருந் தொழாவகைசெய்து-வணக்கமில்லாமையாலும் ; (ப்ரலகுஸுககபரிஷ்வங்கதஸ்ச) கண்டுகேட்டித்யாதி-அத்யல்பமான வைஷயிகசுகசங்கத்தாலு மதிஸோச்யமாயிருக்கிற லோகத்தை யாழ்வார்காணமாட்டாதே, இந்தசம்சாரிகள் நடுவினின்று மீண்டென்வென்னை யுன்திருவடிகளிலே சேர்த்துக்கொள்ளவேணுமென் றெம்பெருமானை ப்ரார்த்தித்தருளினா ரென்கிறார்..............................................(௪௫)

ஸ்வாநாம் நிர்வாஹகத்வாதஹிபதிஶயநாத் ஸூரிவர்க்கஸேவ்யபாவாத்
உத்த்ரோத்தாரஸ்வபாவாத் ஸமுசிதபவதுஶ்யோ நீயஸேவ்யோ மமாஸௌ।
ஸந்தோஷாச்சாத்ததேஹ்யாத்ரியகரணதயோ வர்ணவ்ருஷ்டிர்விபூஷ்யா
ஸ்ம்ருத்வா ஸ்வாபாவிகாஹிதம் ஸமுசிதசேஷ்டிதைர்ஜுஷ்டாசேஷ்டா நாயக: (௪௬)

இத்தசகத்தில் "ஆயேயிவ்வுலகத்து" இத்யாதியான மேல் நாலுகாதைகளுங் கர்த்தாந்தர மருளிச்செய்யக்கடவராய், ததர்த்தமாக வித்தஸாகார்த்தத்தைப் பின்னையுமொரு ஶ்லோகத்தாலே சங்க்ரஹித்தருளுகிறார்.

(ஸ்வாநாம்நிர்வாஹகத்வாத்) கண்ணாளாகடல்கடைந்தாய்-சமுத்ரமதநசமயத்திலே ஸ்வாஶ்ரிதரான தேவர்களுடைய சமீஹிதநிர்வாஹகனுகையாலும்; (அஹிபதிசயநாதித்யாதி) சமாநம்; (ப்ரியகரணமுநை:) ஆயேயிவ்வுலகத்து-தாய்போலேயெல்லார்க்கும் ப்ரியங்களான வ்யாபாரங்களைப்பண்ணுகையாலும்; (அண்டஸ்ருஷ்டௌபடுத்வாத்) ஈட்டிநீவைத்தமைத்த விமையோர்வாழ்தனிமுட்டை-மஹதாதி ப்ரஹ்மாண்டபர்யந்தஸ்ருஷ்டியிலே சமர்த்தனுகையாலும்; (ஸ்வாப்ராபத்வாதிபி:) ஆதிசப்தத்தாலே-ஶ்ரீமத்த்வஞ்சொல்லப்படுகிறது; திருவடிக்கட்கூட்டினை நான்கண்டேனே, ஒண்டொடியாள் திருமகளும் நீயுமேநிலாநிற்ப-ஆஶ்ரிதராலே சுப்ராபனுகையாலும், பெரியபிராட்டியாரோடு பிரிவில்லாதவனுகையாலும் எம்பெருமான் தன்னையடைந்த பேர்களுக்குத்தானே நிரதிசயபுருஷார்த்த ரூபனுயிருக்குமென்று நிஷ்கர்ஷித் தருளினுரென்கிறார்.................... (௩௮)

# திருவாய்மொழி நூற்றந்தாதி.

நண்ணாதுமாலடியைநானிலத்தேவல்வினையா
லெண்ணாத்துன்பமுறுமிவ்வுயிர்க டண்ணிமையைக்
கண்டிருக்கமாட்டாமற்கண்கலங்குமாறனரு
ளுண்டெமக்குற்றதுணையொன்று. (௩௯)

(நண்ணாதுமாலடியை) இதில்-சம்சாரிகளுடைய வநர்த்தத்தைக்கண்டு வெறுத்தபாசுரத்தை யநுவதித் தருளிச்செய்கிறார். அதெங்ஙனேயென்னில்; கீழ்-ஆத்மாத்மீயங்களில் நசையற்றவிடத்திலும், அவைபேரக்காணுமையாலே விரஹவ்யஸநமதிசயித்து, "தம்மிழவுக்குக்கூட்டாவாருண்டோ" என்று சம்சாரிகளைப் பார்த்தவிடத்தில், அவர்கள் பகவத்விஷயத்தைக் காற்கடைக்கொண்டு இதரவிஷயங்களினுடைய லாபாலாபங்களே பேறுமிழவுமாய் நோவுபடுகிறபடியைக்கண்டு அதுபொறுக்கமாட்டாமல் சர்வேஶ்வரனைப்பார்த்து, "ரக்ஷகனுனநீயுளனுயிருக்க இவைநோவுபடுகை போருமோபிரானே" என்றுவிஷண்ணராய், "இவர்கள் நோவைப்போக்குதல்,இதுகண்டு பொறுக்கமாட்டாதவென்னை முடித்தல்செய்தருளவேணும்" என்ன, "இவர்களுக்கிச்சையில்லாமையாலே யும்மோபாதிநாமும் நொந்துகாணுமிருக்கிறது" என்ன, "ஆனுலிவர்கள்நடுவில்நின்று மென்னைவாங்கவேணும்" என்ன; இவர்க்லேசந்தீரும்படி, பிராட்டியுந்தானுமாகத் திருநாட்டிலேயிருக்கிறவிருப்பை யவன்காட்டிக்கொடுக்க, அத்தைக்கண்டநுபவித்து க்ருதார்த்தராகிற * நண்ணாதார்முறுவலிப்பவிலர்த்தத்தை "நண்ணாதுமாலடியை" இத்யாதியாலே யருளிச்செய்கிறுரென்கை.

(நண்ணாதுமாலடியை) ஆஶ்ரித வ்யாமுக்தனுன சர்வேஶ்வரன்றிருவடிகளை யாஶ்ரயியாமல், (நானிலத்தே) நாலுவகைப்பட்ட பூமியிலே. அதாவது-

குறிஞ்சிநிலமான திருமலைகளிலும், முல்லைநிலமான திருக்கோட்டியூர் திருமோகூர்தொடக்கமான ஸ்த்தலங்களிலும், மருதநிலமானகோயில் பெருமாள்கோயில் தொடக்கமான ஸ்த்தலங்களிலும், நெய்தல்நிலமான திருவல்லிக்கேணி திருப்புல்லாணி திருவல்லவாழ் திருவண்வண்டூர் தொடக்கமான ஸ்த்தலங்களிலும், சுலபனாயிறே யவனிருப்பது ; அந்தசௌலப்யமேஹேதுவாக வவன்திருவடிகளை யாஸ்ரயியாதே. (நானிலத்தேவல்வினையா லெண்ணாராத்துன்பமுறுமிவ்வுயிர்கள்) இப்படிவிலக்ஷணமானபூமியிலே பகவதாஸ்ரயணம்பண்ணி உஜ்ஜீவியாமல். "மாலைத்தாம்வாழ்த்தாதிருப்பரிதவன்றே । மேலைத்தாம்செய்யும்வினை" என்னும்படி ப்ரபலகர்மங்களாலே அசங்க்யாதமான துக்கத்தை மிகவுமடைந்துபோருகிற வில்வாத்மாக்கள். "நந்தந்த்யுதிதஆதித்யே நந்தந்த்யஸ்தமிதேரவௌ। ஆத்மநோநாவபுத்யந்தே மநுஷ்யா ஜீவிதக்ஷயம்" (நந்தந்த்யுதிதஆதித்யேநந்தந்த்யஸ்தமிதேரவௌ । ஆத்மநோநாவபுத்யந்தேமநுஷ்யாஜீவிதக்ஷயம்) என்னும்படி. (தண்ணிமையைக்கண்டிருக்கமாட்டாமல்) இவர்களநர்த்தத்தைக்கண்டாற்றமாட்டாமல். அதாவது - "எண்ணாராத்துயர்விளைக்குமிவையென்னவுலகியற்கை" "ஏமாறிக்கிடந்தலற்றுமிவையென்னவுலகியற்கை" "கண்டாற்றேனுலகியற்கை" "தமமூடுமிவையென்னவுலகியற்கை" "ஈங்கிதன்மேல்வெந்நரகமிவையென்னவுலகியற்கை" "அறப்பொருளையறிந்தோராரிவையென்னவுலகியற்கை" "கொடுவுலகங்காட்டேலே" இத்யாதிகளாலே யிதின்கொடுமையைப் பலகாலுமருளிச்செய்து. (கண்கலங்குமாறன்) திருக்கண்களுந் திருவுள்ளமுங்கலங்கிப் போருமாழ்வார். அதாவது - "கூயேகொள்ளடியேனைக் கொடுவுலகங்காட்டேலே," "வாங்கெனை" "கூட்டரியதிருவடிக்களெஞ்ஞான்று கூட்டுதியே" என்றுகூப்பிட்டபின்பு, எம்பெருமானாலே "கூட்டரியதிருவடிக்கட்கூட்டினை" "அடைந்தேனுன்திருவடியே" என்னும்படி சமாஹிதராய், சம்சாரிகள்நோவுக்கு நொந்தருளிச்செய்தவாழ்வார். (அருளுண்டு நமக்குற்றதுணையொன்று) இப்படி ஈஸ்வரனுங்கூடக்கைவிட்ட சம்சாரிகளையு மகப்படவிடமாட்டாமல் ஈஸ்வரனோடேமன்றுடு மாழ்வாருடையவருள், அந்தரங்கமானரக்ஷையாக நமக்கொன்றுண்டு, வேறொருரக்ஷகாந்தரந்தேடவேண்டா, தானேரக்ஷகமாயிருக்கும். "அருள்கொண்டாயிரமின்றமிழ்பாடின னருள்கண்டீ ரிவ்வுலகினில் மிக்கதே" என்னக்கடவதிறே..........................................................................*

நாலாம்பத்தில் - ஒன்பதாந்திருவாய்மொழி முற்றிற்று.

ஆக - திருவாய்மொழி - ௩௯—பாட்டு - ௩௯௧.



ஸ்ரீ

# திருவாய்மொழி.

## நான்காம்பத்து.

## பத்தாந்திருவாய்மொழி.

### ஒன்றுந்தேவும் - ப்ரவேஶங்கள்.

### ஆறாயிரப்படி.

(ஒன்றுந்தேவும்) "அவைஷ்ணவ ஜநசஹவாசத்திற்காட்டில்முடிகைநன்று" என்று "ஈண்டவென்னை முடித்தருளவேணும்" என்றெம்பெருமானை யபேக்ஷிக்கச்செய்தேயு மவன் செய்தருளாமையாலே, "இனியிவர்களோடுள்ள சஹவாஸமவர்ஜநீயமானபின்பு இவர்களைவைஷ்ணவர்களாக்கிக் கொண்டாகிலுமிவர்களோடேகூட வர்த்திப்போம்" என்றுபார்த்து; எம்பெருமானுடைய சர்வேஶ்வரத்வ சர்வசுலபத்வாதிகளை யுபபாதித்து, அவனை யாஶ்ரயியுங்கோளென்று அவர்களுக் கருளிச்செய்கிறார். எம்பெருமானைக்கண்டு சம்ஶ்லேஷித்தபக்ஷத்தில்; அந்த சம்ஶ்லேஷஜநித ப்ரீத்யதிசயத்தாலும், எம்பெருமானை யிழந்துகிடக்கிறவாத்மாக்கள் பக்கலுள்ள க்ருபையாலும், "எம்பெருமானை யாஶ்ரயியுங்கோள்" என்று அவர்களைக்குறித் தருளிச்செய்கிறாரென்னுமது.......

### பன்னீராயிரப்படி.

பத்தாந்திருவாய்மொழியில், கீழ்-சம்சாரதோஷாநுசந்தாநபூர்வகமாக பகவத்ப்ராப்தியை ப்ரார்த்தித்தவர் ப்ராப்யமான பரதசையை யவனாவிஷ்கரிக்கக்கண்டு சந்துஷ்டராய், "இப்பரத்வமறியாமல் சம்சாரிகளிழக்கவொண்ணாது" என்றுபார்த்து, ப்ராப்யத்வபர்யந்தமான வவனுடையபரத்வத்தை யுபதேசிப்பதாக வுத்யோகித்து, அதுக்குபகாரகமான; சர்வகாரணத்வத்தையும் காரணத்வாநுகுணமான நித்யகல்யாணகுணயோகத்தையும், சார்யருபமானஜகத்விஷயரக்ஷணவ்யாபாரம், பரத்வாவஹமானபடியையும், சோபபாதகமான சர்வேஶ்வரத்வத்தையும், அந்தவீஶ்வரத்வ ப்ரகாசகமான சௌலப்யாதிசயத்தையும், சம்சாரநிர்வஹண சாமர்த்யத்தையும், பரத்வப்ரகாசகமானகருடத்வஜத்வத்தையும், அல்லாததேவதைகள் பலப்ரதத்வத்துக்கும்சக்த்யாதாயகனவனே யென்னுமிடத்தையும், அந்யதரவ போதகனானவவன் வர்த்திக்கிறதேசமே யுஜ்ஜீவநார்த்திகளுக்கு ஞா

செய்கிறார் (இனிகண்ணனையித்யாதி) அப்படிசொல்லுகிறவர்களை பரிஹாசம்பண்ணுவானென்னென்ன (தான்சொல்லப்புக்கவித்யாதி) "சமணரும்" (ஆர்ஹதரும்) ஜைநரும்.

"வலிந்துவாதுசெய்வீர்களும்" என்று-பலாத்காரத்தாலே வாதம்பண்ணுவர்களென்கையாலே; கேவலதர்க்கத்தாலொழிய, ப்ரமாணத்தாலும் ப்ரமாணாநுக்ராஹக தர்க்கங்களைக்கொண்டு சாதியாரென்னுமது சித்தமாகையாலே, அத்தையருளிச்செய்கிறார் (உத்க்ருஷ்டதமமானவித்யாதி) இப்படியாயும், "வேதம்ப்ரமாணம்" என்கையாலே குத்ருஷ்டிகள் பாஹ்யரில் வ்யாவ்ருத்தரன்றோ; பாசுபதராகிற குத்ருஷ்டிகளையும் பாஹ்யரையுங்கூட்டிச் சொல்லலாமோவென்ன (யாவேதபாஹ்யாஇத்யாதி) "யா வேதபாஹ்யா: ஸ்ம்ருதயோ யாஸ்ச காஸ்ச குத்ருஷ்டய: । ஸர்வாஸ்தா நிஷ்பலா: ப்ரேத்ய தமோநிஷ்டா ஹி தா: ஸ்ம்ருதா:" (யாவேதபாஹ்யாஸ்ஸ்ம்ருதயோயாஸ்சகாஸ்சகுத்ருஷ்டய: । ஸர்வாஸ்தாநிஷ்பலா:ப்ரேத்யதமோநிஷ்டாஹிதாஸ்ஸ்ம்ருதா: ) இதிமாநவே தர்மஸாஸ்த்ரே. தாமஸத்வம் - தமோகுணாபிபூதத்வம். அதிவர்களுக்குமொக்குமிறே. இங்கே - "பாஹ்யா: குத்ருஷ்டய இதி த்விவிதா பரம் கோரம் தமஸ்ஸமுபயந்தி நஹி கஸ்சேதா । ஜகத்ஸ்வகாரண ம்ருகைர் ம்ருகதத்ருஷ்டிகேப்ஸோ: காஸாரஸத்வநிஹதஸ்ய ச கோ விஸேஷ:" (பாஹ்யா:குத்ருஷ்டயஇதித்விதயேப்யபாரம்கோரம்தமஸ்ஸமுபயந்திநஹீக்ஷஸேதாந் । ஜக்தஸ்யகாநநம்ருகைர்ம்ருகதத்ருஷ்டிகேப்ஸோ: காஸாரஸத்வநிஹதஸ்யசகோவிஸேஷ: ) என்றதநுசந்தேயம்.

"ஆகிநின்றான்" என்கிறசாமாநாதிகரண்யம்-சரீராத்மபாவ நிபந்தநமென்கிறார் (உங்களோடித்யாதி) பலிதார்த்தம் (நீங்களவ்வவர்க்கித்யாதி) பாஹ்யாதிகள் தேவதையை யங்கீகரிப்பர்களோ, "நுந்தெய்வம்" என்கைக்கென்ன (இனித்தான்பக்ஷங்களித்யாதி) பக்ஷங்கள்-மதங்கள். பௌத்தாதிகள் "ஸர்வஜ்ஞஸ்ஸுகதோ புத்த:" (ஸர்வஜ்ஞஸ்ஸுகதோபுத்த:) என்று சொல்லப்பட்ட ஸர்வஜ்ஞனை தேவதையாக வங்கீகரித்தார்களிறே; சைவனுக்கு ருத்ரன்தேவதை. (ஸ்வபக்ஷத்தாலேசொல்லுகிறதோ) இத்யாதிக்குத் தாத்பர்யம்-ஸ்வபக்ஷத்தாலே சொல்லில், "பக்ஷபாதத்தாலேசொன்னது" என்று அவனநங்கீகாரத்துக்குடலாம்; பரபக்ஷத்தாலே சொல்லவொண்ணாது, அவனப்படி யங்கீகரியாமலிருக்கையாலேயென்று. ப்ரமாணந்தானப்படி சொல்லுகிறதோவென்ன; ப்ரமாணத்வயங்காட்டுகிறார் (ஒருதேவதையித்யாதி) அதிமாநுஷவ்யாபாரம்-த்ரிபுரதஹநம். "விஷ்ணுராத்மா பகவதோ பவஸ்யாமிததேஜஸ: । தஸ்மாத்தநுர்ஜ்யாஸம்ஸ்பர்ஸம் ஸ விஷேஹே மஹேஸ்வர:" (விஷ்ணுராத்மாபகவதோபவஸ்யாமிததேஜஸ: । தஸ்மாத்தநுர்ஜ்யாஸம்ஸ்பர்ஸம்ஸவிஷேஹேமஹேஸ்வர:) அதர்வசிரஸ்ஸிலேநின்று - அதர்வசிகையிலே ப்ரதிபாத்யனாய்நின்ற. தன்படிகளைச்சொல்லாவென்றது - "தேவா ஹ வை ஸ்வர்க்கம் லோகமகமந்" (தேவாஹவைஸ்வர்க்கம்லோகமகமந்) இத்யாரப்ய, "நாந்ய: கஸ்சிந்மத்தோ வ்யதிரிக்த இதி" (நாந்ய:கஸ்சிந்மத்தோவ்யதிரிக்தஇதி) என்றுசொன்னானிறே யென்றபடி. (ஸோந்தராதந்தரம்ப்ராவிஸத்) ஸ:-ருத்ர:, அந்தராத்-தேஹேந்த்ரியாதோந்தராத் க்ஷேத்ரஜ்ஞாத். அந்தரம்-பரமாத்மாநம், ப்ராவிஸத் - "ப்ரஹ்மாஹம்" (ப்ரஹ்மாஹம்) இதிபாவநயா பரமாத்மாநம் ப்ரகர்ஷேணகச்சத்; ஏகீபூத இத்யர்த்த:. ஸ:-

பரமாத்மா, கரணக்ராமாதந்தரபூசம் ஜீவாத்மாநம் ப்ரவிஶதீதிவார்த்த:. “ 𑌦𑍇𑌵𑌾 𑌹 𑌵𑍈 𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑌂 𑌲𑍋𑌕𑌮𑌾𑌯𑌂𑌸𑍍𑌤𑍇 𑌦𑍇𑌵𑌾 𑌰𑍁𑌦𑍍𑌰𑌮𑌪𑍃𑌚𑍍𑌛𑌨𑍍 𑌕𑍋 𑌭𑌵𑌾𑌨𑌿𑌤𑌿 𑌸𑍋𑌽𑌬𑍍𑌰𑌵𑍀𑌦𑌹𑌮𑍇𑌕𑌃 𑌪𑍍𑌰𑌥𑌮𑌮𑌾𑌸𑌂 𑌵𑌰𑍍𑌤𑌾𑌮𑌿 𑌚 𑌭𑌵𑌿𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 𑌚 𑌨𑌾𑌨𑍍𑌯𑌃 𑌕𑌶𑍍𑌚𑌿𑌨𑍍𑌮𑌤𑍍𑌤𑍋 𑌵𑍍𑌯𑌤𑌿𑌰𑌿𑌕𑍍𑌤 𑌇𑌤𑌿 𑌸𑍋𑌽𑌨𑍍𑌤𑌰𑌾𑌦𑌨𑍍𑌤𑌰𑌂 𑌪𑍍𑌰𑌾𑌵𑌿𑌶𑌤𑍍 ” ( தேவாஹவை ஸ்வர்க்கம்லோகமகமந்த தேவாருத்ரமப்ருச்சந் கோபவாநிதி ஸோப்ரவீத் அஹமேக: ப்ரதமமாஸம் வர்த்தாமி சபவிஷ்யாமி ச நாந்ய: கஶ்சிந்மத்தோ வ்யதிரிக்த இதி ஸோந்தராதந்தரம்ப்ராவிஶத் ) இத்யதர்வசிகாயாம். இப்படி பரமாத்ம ப்ரவேசத்தாலே சொன்ன பேருண்டோவென்ன ( மத்தஸ்ஸர்வமித்யாதி ) “ 𑌮𑌤𑍍𑌤𑌃 𑌸𑌰𑍍𑌵𑌮𑌹𑌂 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌮𑌯𑌿 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌸𑌨𑌾𑌤𑌨𑍇 । 𑌅𑌹𑌮𑍇𑌵𑌾𑌵𑍍𑌯𑌯𑍋𑌽𑌨𑌨𑍍𑌤𑌃 𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌤𑍍𑌮𑌸𑌂𑌶𑍍𑌰𑌯𑌃 ” ( மத்தஸ்ஸர்வமஹம்ஸர்வம்மயிஸர்வம்ஸநாதநே । அஹமேவாவ்யயோநந்த: பரமாத்மாத்மஸம்ஶ்ரய: ) இதிப்ரதமேம்ஶே ஏகோநவிம்ஶே. ப்ரஹ்லாதனை த்ருஷ்டாந்தமாகச்சொன்னதுக்குக் கருத்தேதென்ன ( ப்ரஹ்லாதன்பக்கலித்யாதி )

கீழோடேகூட்டிபாவம் ( இப்படியித்யாதி ) அசேதநமானசெந்நெல் கவரிவீசக்கூடுமோவென்ன ( சர்வசமாஶ்ரயணீயனித்யாதி ) தரும்பெழுந்தாடும்படியான வடிவழகெனறபடி. தாத்பர்யாந்தரம் ( செந்நெலானதித்யாதி ) ப்ரதமதாத்பர்யத்தில், “ செந்நெல் ” என்று- அசேதநங்களுக்கெல்லா முபலக்ஷணம் ; “ கவரிவீசும் ” என்றதம்-அநுகூலவ்ருத்திகளுக் கெல்லாமுபலக்ஷணம். இளையபெருமாளை த்ருஷ்டாந்தமாகச்சொன்னது - “ 𑌛𑌤𑍍𑌰𑌚𑌾𑌮𑌰𑌪𑌾𑌣𑌿𑌸𑍍𑌤𑍁 ” ( சத்ரசாமரபாணிஸ்து ) என்றிருக்கையாலே. ( செந்நெல்-மலிந்து-கவரிவீசும் ) செந்நெலானது மிகுந்தகதிர்க்கனத்தாலே சாமரம்போலே யசைகிறதித்யர்த்த:. ( திருக்குருகூரதனுள் ” இதிஹேதுகர்ப்பவிசேஷணம், “ பொலிந்து ” இத்யத்ரநிருபபதத்வஞ்சஹ்ருதிநிதாய, ததுபயஸந்நிதமர்த்சம் வ்யாவர்த்யபூர்வகம் தர்ஶபதி (பரமபதத்தையித்யாதிநா) “பொலிந்துநின்ற” என்றதுக்கு - ஐஶ்வர்யம் ஸம்ருத்தமாம்படி நின்றவென்று ப்ராதமிகார்த்த:. “ வலிந்துவாதுசெய்வீர்களும் ” என்றதோடே. சேர்த்த தாத்பர்யாந்தரம் (சொன்னரீத்யாதி) அதாவது - இவர்கள்சொன்னயுக்திகளால் பாதிதராயிருக்கையன்றிக்கே, ஸ்வரூபகுணங்களால் பூர்ணராயிருக்கையென்றபடி.

இதரதேவதைகளுக்குச்சொல்லு முத்கர்ஷம் பொய்யாயிருக்கைக்கும், இவ்விஷயத்தில் பொய்யில்லாமைக்கும்படியேதென்ன (அவ்வோதேவதைரயித்யாதி)

“ போற்றுமின் ” என்றுநீர்சொல்லுமது “ ஆப்தம் ” என்றுவிஶ்வஸிக்கைக்கு ஹேதுவேதென்ன ( நீங்களித்யாதி ) * ஏகாரார்த்தம் (க்ரமத்திலேயித்யாதி)

வலிந்துவாதுசெய்வீர்களும் - குதர்க்கங்களாலே மேலிட்டுவாதம்பண்ணுகிற வைசேஷிகாதிகளானநீங்களும்.

க்ரமேணுக்வய: ....................................................................*

# ஆறாம்பாட்டு.

போற்றிமற்றோர்தெய்வம்பேணப்புறத்திட்டும்மையின்னே
தேற்றிவைத்ததெல்லீரும்வீடுபெற்றாலுலகில்லையென்றே
சேற்றிற்செந்நெல்கமலமோங்குதிருக்குருகூரதனு
ளாற்றவல்லவன்மாயங்கண்டதறிந்தோடுமினே.

## ஆருயிரப்படி.

(போற்றி) இப்படி நாராயணனே சர்வநியந்தாவாகில், தன்னையே யாஶ்ரயிக்கும்படி யெங்களைப்பண்ணாதே வேறொருதைவங்களை யாஶ்ரயிக்கும்படி பண்ணுவானென்னென்னில் ;

போற்றிமற்றோர்தெய்வம் பேணப்புறத்திட்டும்மை யின்னேதேற்றிவைத்தது எல்லீரும் வீடுபெற்றால் சதசத்கர்மயுக்தஜந்துக்கள் தத்தத்கர்மாநுகுணபலங்களை யநுபவிக்கக்கடவதான விந்தலோகமர்யாதையழியுமென்று, இந்தலோகமர்யாதா ஸித்யர்த்தமாக, அசத்கர்மகாரிகளானவுங்களை யந்தவசத்கர்மாநுகுணமாக விப்படிதேவதாந்தரத்தை யாஶ்ரயித்து ஸம்சரிக்கும்படி சர்வசக்தியான பரமபுருஷன்றானே பண்ணியருளினான் ; ஆதலாலத்தையறிந்து, இந்தஸம்சார நிவ்ருத்திபூர்வகமான பரமபுருஷ கைங்கர்யார்த்தமாக வவனைப்பிண்டச் சென்றாஶ்ரயியுங்கோளென்கிறார்..........................................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இவ்வர்த்தமுங்களுக்கு ப்ரகாஶிபாசொழிகிறத கர்மாநுரூபமாக அவன் ஸம்சாரத்தை நிர்வஹிக்கிற சாமர்த்யமென்கிறார்.

மற்று - வேறு. ஓர்-ஒரு. தெய்வம்-தேவதையை. போற்றி - ஸ்தோத்ரம்பண்ணி. பேண-ஆதரிக்கும்படியாக. புறத்திட்டு-தனக்குப்புறம்பாக்கி. உம்மை - தத்ப்ரவணரானவுங்களை. இன்னே-நான் தன்விஷயத்திலே விஶ்வஸித்திருக்குமாபோலே இப்படி. தேற்றிவைத்தது-இதரதேவதாவிஷயத்திலே விஶ்வஸிப்பித்துவைத்தது. எல்லீரும்-எல்லாரும். வீடு-பகவத்ப்ராப்திரூபமோக்ஷத்தை. பெற்றால் - பெற்றால். உலகு - "கர்மாநுரூபமாக பலபோக்தாக்களாய் நடக்கக்கடவர்கள்" என்கிறலோகமர்யாதை. இல்லை - குலையும். என்றே - என்றாயிருக்கும். அதுக்குமூலம், சேற்றில்-சேற்றுநிலத்தில். செந்நெல்-செந்நெலும். கமலம்-கமலமும். ஓங்கு-இசலிவளரக்கட‌வ. திருக்குருகூரதனுள்-திருநகரியிலேவர்த்திக்குமவனாய். ஆற்றவல்லவன்-அதிசயிதவிவிதசக்தியுக்தனாய்க்கொண்டு கர்மபலாநுபவத்தைப்பண்ணுவிக்கிறவனுடைய. மாயங்கண்டீர்-லீலோபகரணமாய் ஆஶ்சர்யமையாய் மாயாசப்தவாச்யமான ப்ரக்ருதியோடுண்டான ஸம்பந்தமாயிருக்கும். அது-அத்தை. அறிந்து-அறிந்து. அறிந்து - தந்நிஸ்தரணோபாயமான ப்ரபத்தஜ்ஞாநத்தையுடையீர்களாய். ஓடுமின்-அந்தமாயாநிஸ்தரணத்தைப்பண்ணிக்கடக்கப்பாருங்கோள்.

உலகில்லையென்றேயென்று - லோகமில்லையாமென்று நினைத்தோ; அதல்லவிறே, ப்ரக்ருதிஸம்பந்தமிறேயென்றுஞ்சொல்லுவர்..................................*

## ஈடு - ஆறாம் பாட்டு.

பகவத்பரத்வம் நீரருளிச்செய்யக்கேட்டபோது வெளிச்சிறந்து, அல்லாதபோது தேவதாந்தர ப்ராவண்யமுண்டாகாநின்றது, இதுக்கடியேதென்ன ; உங்கள்பாபமென்கிறார். எம்பெருமானே ஸர்வேஶ்வரனாகில் எங்களைத்தேவதாந்தர ப்ரவணராக்கிவைப்பானென்னென்ன ; உங்களைப் பிங்ஙனேவைத்தது, ஸதஸத்கர்மகாரிகளான ஜந்துக்களவ்வோ கர்மா

நுகுணபலங்களை யநுபவிக்கக்கடவதான சாஸ்த்ரமர்யாதை யழியுமென்று; ஆனபின்பு, அத்தையறிந்து எம்பெருமானைசமாஸ்ரயித்து அவன்வஞ்சநத்தைத் தப்புங்கோளென்கிறார்.

(போற்றி) நான்பகவத்விஷயத்தில் செய்யுமதடைய நீங்களிதரதேவதைகள்பக்கலிலே செய்துபோருவுதிகோள், உங்கள்பக்கலொருகுறையில்லை, அப்ராப்தமானதுவேகுறை. (மற்றோர்தெய்வம்) "யெவாு நாுெஉவதா்ஹநாஃ" (யேப்யந்யதேவதாபக்தாஃ) என்னுமாபோலே. (பேண) அவைதனக்கென்ன வொன்றில்லாமையாலே, ஆஸ்ரயிக்கிறவுங்களுக்கேபரமிறே யவற்றுக்குத்கர்ஷத்தை சாதிக்கை. (புறத்திட்டு) தனக்குப் புறம்பாம்படிபண்ணி. (உம்மையின்னேதேற்றிவைத்தது) உங்களையிப்படியே தெளியும்படிபண்ணிவைத்தது. "நவிஜெதிகூடஹது" (நபிபேதிகுதஸ்சந) என்கிறபடியே நான்மேல் வருமநர்த்தங்களுக்கஞ்சாதே நிர்ப்பரனாயிருக்கிறுப்போலே, ஓட்டையோடத்தோடொழுகலோடமான இதரதேவதைகளை யாஸ்ரயித்து உங்களுக்கவர்கள்பக்கலிலே ருசிவிஸ்வாசங்களுண்டாம்படிபண்ணிவைத்தது. (எல்லீருமித்யாதி) எல்லாருமிருந்ததேகுடியாக மோக்ஷத்தைப்பெற்றால், லீலைக்கடியான சாஸ்த்ரம்நிரர்த்தகமாய்விடும். சத்கர்மத்தைப்பண்ணுவாரும் அசத்கர்மத்தைப்பண்ணுவாருமாயிறே நாடுதானிருப்பது; பாபம்பண்ணினவர்களும் புண்யம்பண்ணினவர்களுடைய பலத்தையநுபவிக்குமன்று, "வுணுஃவுணெநகஃணா-வாவஃவாவெந" (புண்யஃபுண்யேநகர்மணா - பாபஃபாபேந) என்கிறசாஸ்த்ரமர்யாதை குலையுமென்கை. பாபம்பண்ணினவர்களதின்பலத்தை யநுபவிக்கவும், புண்யம்பண்ணினாரதின்பலத்தை யநுபவிக்கவுமாகிற சாஸ்த்ரமர்யாதை குலையாதபடியாக. "அதொஸ்ஸிலொகெவெஜெவுயிதஃவுருஷொத்தமஃ" (அதோஸ்மிலோகேவேதேசப்ரதிதஃபுருஷோத்தமஃ) என்கிறவிடத்தில், லோகசப்தத்தால-ப்ரமாணத்தைச் சொல்லிற்றென்று கோண்டவோபாதி, இங்கும்லோகசப்தம்—சாஸ்த்ரத்தைச்சொல்லுகிறது.

(சேற்றிலித்யாதி) அவ்வூரிலே பதார்த்தங்களிலொன்றிலொன்றுகுறைந்திருப்பதில்லையாயிற்று. "உரம்பெற்றமலர்க்கமலம்" இத்யாதிபோலே. அவ்வூரில் பதார்த்தங்களுள்ளவை யடையவொன்றுக்கொன்று இசலிவளராநிற்கும். (ஆற்றவல்லவன்) மிகவும்வல்லவன். அதிசயிதசக்திகன். சம்பந்தமொத்திருக்கச்செய்தே, புண்யம்பண்ணினாரதின் பலமநுபவிக்கவும் பாபம்பண்ணினாரதின் பலமநுபவிக்கவும் பண்ணவல்லவன். (மாயங்கண்டீர்) "ஓஓாயாஜுரதுயா" (மமமாயாதுரத்யயா) என்கிறபடியே, தானகற்றநினைத்தாரைத் தன்பக்கல்வந்துகிட்டாதபடி ப்ரக்ருதியையிட்டு வஞ்சித்துவைத்தபடி கிடிகோள்.

(அதறிந்து) இது அவனுடைய மாயமென்னுமத்தையறிந்து. (அறிந்தோமினே) "மாமேவயே ப்ரபத்யந்தே மாயாமேதாம்தரந்திதே" (மாமேவயேப்ரபத்யந்தேமாயாமேதாந்தரந்திதே) என்கிறபடியே, மாயாதரணோபாயமான ப்ரபத்தியையும்தானே யருளிச்செய்துவைத்தான்; அத்தையறிந்து, அவ்வழியாலே யவனைப்பற்றித் தப்பப்பாருங்கோ ளிந்தமாயையை. இது அவன்செய்துவைத்ததானபின்பு, அவனை வெல்லவேண்டில் அவனோடேபிரியநின்று வெல்லப்பாராதே யவனையே காற்கட்டி யித்தைத்தப்பப்பாருங்கோள்.........................*

## ஜீயர் அரும்பதம்.

ஆரம்பாட்டு (போற்றியித்யாதி) "எல்லீரும்வீடுபெற்றாலுலகில்லை" என்ற திருவேங்கடாநவதாரிகை (பகவத்பரத்வமித்யாதி) பாட்டெல்லாம்கடாக்ஷித்து உக்தவிவரணம் (எம்பெருமானையித்யாதி) "மாயம்" என்றத்தைப்பற்ற (வஞ்சகத்தையென்றது)

(நான்பகவத்விஷயத்திலிதி) *போற்றியென்றேகைகளாரத்தொழுதுநான் பகவத்விஷயத்திலே செய்யுமதென்றபடி. "மற்றோர்தெய்வம்-போற்றி-பேணப்புறத்திட்டு" என்றர்வயிப்பது. வேறொருதேவதையை ஸ்தோத்ரம்பண்ணி யாதரிக்கும்படியாகத் தனக்குப்புறம்பாக்கியென்று சப்தார்த்தம். ஒருதெய்வமென்னாதே, "மற்றோர்தெய்வம்" என்று - இவர்களைத்தனியே ஸ்வதந்த்ராக்கிச்சொல்லுகிற தென்னென்ன; அவர்கள் தங்களை ஸ்வதந்த்ரமாக வபிமாநித்துக்கொண்டிருக்கையாலே யென்றுவிவக்ஷித்து, அதுக்குப்ரமாணம் (யேப்யந்யேத்யாதி) "யேப்யந்யதேவதாபக்தா யஜந்தே ச்ரத்தயாந்விதா: । தேபி மாமேவ கௌந்தேய யஜந்த்யவிதிபூர்வகம்" (யேப்யந்யதேவதாபக்தா8 யஜந்தேச்ரத்தயாந்விதா8, தேபிமாமேவகௌந்தேயயஜந்த்யவிதிபூர்வகம்) இதிகீதாஸூக்தமே. பேண - தத்ததுத்கர்ஷாதரார்த்தமித்யர்த்த8. ததுபபாதயதி (அவைதனக்கென்னவித்யாதி) தனக்கு-சர்வசரீரியானதனக்கு. "இப்படியேதெளியும்படிபண்ணி" என்றத்தை விவரிக்கிறார் (நபேதித்யாதி)

"எல்லீரும்" என்ற - சேதநர்க்குண்டான பரஸ்பரவைஷம்யத்தைக்காட்டுகிறார் (சத்கர்மத்தையித்யாதி) "வீடுபெற்றாலுலகில்லை" என்றதுக்கர்த்தம் (பாபம்பண்ணினவர்களுமித்யாதி) ஆகையாலே.(பாபம்பண்ணினவர்களதின்பலத்தையநுபவிக்கவும்) என்றுகூட்டுவது. ஏதேந-தேவதாந்தரபஜநஸ்யபலம் ஸம்ஸார இதியுக்தம்பவதி. "உலகு" என்றால்-சாஸ்த்ரவாசியாமோவென்ன (அதோஸ்மீத்யாதி) "ஸாது காரீ ஸாது பவதி பாபகாரீ பாபோ பவதி புண்ய: புண்யேந கர்மணா பவதி பாப: பாபேந" (ஸாதுகாரீஸாதுர்ப்பவதிபாபகாரீபாபோபவதிபுண்ய8புண்யேநகர்மணாபவதிபாப8பாபேந) இத்யாதி ப்ருஹதாரண்யகே. "யஸ்மாத் க்ஷரமதீதோஹமக்ஷராதபி சோத்தம: । அதோஸ்மி லோகே வேதே ச ப்ரதித: புருஷோத்தம:" (யஸ்மாத்க்ஷரமதீதோஹமக்ஷராதபிசோத்தம8 । அதோஸ்மிலோகேவேதசப்ரதித8புருஷோத்தம8) இதிகீதோபஞ்சதமே. லோக்யதே அநேநேதிலோக8 - சாஸ்த்ரமிதிபாவ8. உலகில்லையென்றே - சாஸ்த்ரமர்யாதை குலையுமென்றபடியிருக்கும்,

செந்நெலும் கமலமுமோங்குகையாலே (துறைந்திருப்பதில்லையாயிற்றென்றது) இதுக்கு சம்வாதம் (உரம்பெற்றவித்யாதி) உரம்பெற்ற - சேற்றுவாய்ப்பாலே பலம்பெற்றிருக்கிற, மலர்க்கமலம்-தாமரைப்பூவானது, உலகளந்தசேவடிபோல் - திருவுலகளந்தபோது மேலெடுத்த சிவந்ததிருவடிபோலே, உயர்ந்துகாட்ட-கிளர்ந்துவளர்ந்து பரகாசித்துநிற்க; அப்போதுதேவர்கள் முதலானவர்கள் திரண்டுகொலிநீட்டித் தலைவணக்கித் தெண்டனிட்டுக்கிடந்தாப்போலே,வரம்புற்ற-வரம்பிலேசேர்ந்துவளர்ந்து நிற்கிற, கதிர்ச்செந்நெல்- செந்நெல்கதிர்களானவை, தாள்சாய்த்து - தாள்களைநீட்டி, தலைவணக்கும் - தலையைவளைக்கும் சிறப்பையும். தண்ணரங்கமே-சர்வர்க்கும் தாபஹரமான குளிர்த்தியையுமுடைய திருவரங்கமே இத்யர்த்தஃ. பெரியாழ்வார்திருமொழி நாலாம்பத்து *மரவடியிலெட்டாம்பாட்டு, "உரம்பற்றி" இத்யாதி. தாத்பர்யம் (அவ்வூரிலித்யாதி) இசலி-ஸ்பர்தித்து. சேற்றுநிலத்தில் செந்நெலும்கமலமும் இசலிவளரக்கடவ திருநகரியிலே இதிஸம்தார்த்தஃ. "செந்நெல்" இத்யேகவசநேந-ஏகைகவ்யக்திர்யாவத்கேதாராவகாஸம்பரிவர்த்ததேஇதி, "ஓங்கும்" இத்யநேந - யாவத்ப்ரதிரோதமபிவ்ருத்த்யபிதாநேந நிரதிஸயோச்ச்ராயத்வஞ்ச ஸூச்யதஇதிபாவஃ. அதிஸயிதஸக்திமத்தைதயைக்காட்டுகிறார் (ஸம்பந்தமித்யாதி)

ஸவிசேஷம்கர்மாகாங்க்ஷாம்பூரயந்நர்த்தமாஹ (மாமேவேத்யாதி) அறிந்து-மாயாதரணோபாயமறிந்தென்று * இரண்டாமறிந்துக்கர்த்தம். (அவனைப்பற்றி-இந்தமாயையை-தப்பப்பாருங்கோள்) என்றந்வயிப்பது. " ஆற்றவல்லவன் " இத்யாதிக்குபாவம் (இதவனித்யாதி)

மாயங்கண்டீர்-ப்ரக்ருதிசம்பந்தம்கிடிகோள். ப்ரக்ருதியையிட்டு வஞ்சித்தபடி கிடிகோளென்றபடி. ஒழிமின்-தப்பப்பாருங்கோள். க்ரமேணாந்வயஃ ... ...*

---

## ஏழாம்பாட்டு.

ஓடியோடிப்பலபிறப்பும்பிறந்துமற்றோர்தெய்வம்
பாடியாடிப்பணிந்துபல்படிகால்வழியேறிக்கண்டீர்
கூடிவானவரேத்தநின்றதிருக்குருகூரதனு
ளாடுபுட்கொடியாதிமூர்த்திக்கடிமைபுகுவதுவே.

## ஆறாயிரப்படி.

(ஓடியோடி) தேவதாந்தரத்தை யாஸ்ரயித்தால் மோக்ஷாதிப்ரயோஜநங்கள் சித்தியாதோவென்னில்; இவ்வளவும்வர லிவ்வநாதிகால மெல்லாம் தேவதாந்தரத்தையாஸ்ரயித்து என்னப்ரயோஜநம்பெற்றீர்; ஆனபின்பு இந்ததேவதாந்தரங்களைவிட்டு, பொலிந்துநின்ற பிரான்திருவடிகளை யாஸ்ரயிப்பதென்கிறார்.........................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், நீங்களிதற்குமுன்பாஸ்ரயித்துப்பெற்றபலமிறே யினியாஸ்ரயித்தாலும்பெறுவது, ஆனபின்பு, பரத்வசிஹ்நமான கருடத்வஜத்தையுடைய சர்வகாரணபூதனுக்கடிமைபுகுங்கோளென்கிறார்.

மற்று-வேறு. ஓர்-சொல்லப்பற்றொரு. தெய்வம்-தேவதையை. பாடி யாடி-ப்ரீதிப்ரேரிதராய்க்கொண்டு பாடுவதாடுவதாய். பணிந்து-வணங்கி. பல்-பல. படிகால்-ப்ரகாரத்தாலும். வழி-ஆஸ்ரயிக்கச்சொல்லுகிற சாஸ்த்ரமார்க்கத்தாலே. ஏறி-மேன்மேலுமாஸ்ரயித்து. ஓடியோடி - அதின்பலமான சர்ப்பாசங்களிலேயோடி. பலபிறப்பும்பிறந்து-பலவகையாகப்பிறந்து. கண்டீர்-அபரோக்ஷித்துக் கண்டீர். ஆனபின்பு, வானவர்-நீங்களாஸ்ரயிக்கிற தேவர்களெல்லாரும். கூடி - கூடி. ஏத்த-சங்களாபந்நிவ்ருத்த்யாதிகளுக்காக ஸ்தோத்ரம்பண்ணியாஸ்ரயிக்கும்படி. திருக்குருகூரதனுள்-திருநகரியிலே. நின்ற-நிற்குமவனாய். ஆடு-பகவதநுபவப்ரீதியாலேயாடிவருகிற. புள்-பெரியதிருவடியை. கொடி - பாத்வப்ரகாசகமான கொடியாகவுடையனாய். ஆதி-சர்வகாரணபூதனுன. மூர்த்திக்கு - சர்வேஸ்வரனுக்கு. அடிமைபுகுவது-அடிமைபுகுங்கோள்.

புகுவதென்றது - புகுகவென்றபடி, விதியாயிருக்கிறது ........................*

## ஈடு - ஏழாம்பாட்டு.

அதுசெய்கிறோம், "இதரதேவதைகளுக்கும் சிலவுத்கர்ஷமுண்டு" என்றுநெடுநாளவற்றுக்குப் பச்சையிட்டுப்போந்தோம், அப்பச்சை வெறுமனாகாமே இன்னம்சிலநாளவை பலிக்கும்படிகண்டு பின்னைபகவத்ஸமாஸ்ரயணம் பண்ணுகிறோமென்ன; அவையுமெல்லாம்செய்து கண்டிகோளிறே, இனியமையுங் காணுங்கோளென்கிறார்.

(ஓடியோடியித்யாதி) "𑌗𑌤𑌾𑌗𑌤𑌂 𑌕𑌾𑌮𑌕𑌾𑌮𑌾 𑌲𑌭𑌂𑌤𑍇" (கதாகதம்காமகாமாலபந்தே) என்கிறபடியே; போவது, ஜந்மங்களோடே வருவதாய்த் திரிந்ததித்தனையிறே. (பலபிறப்பும்பிறந்து) ஆத்மாநித்யன், அசித்துமப்படியே, அசித்ஸம்ஸர்க்கமும் நித்யமாய், கர்மப்ரவாஹத்தாலே ஜந்மபரம்பரையுமுருவப்போருகிறது; நீங்கள் முன்னும்பின்னுமறியாமலிறே "இதொருஜந்மமேயுண்டாயிற்று" என்றிருக்கிறது. (மற்றேரித்யாதி) இப்படியநாதியாய்ப் போருகிற ஜந்மபரம்பரைகளில் ஒருஜந்மமொழியாமல் இதரதேவதாசமாஸ்ரயணம் பண்ணிப்போந்திகோள். அதுசெய்கிறவிடத்தில் த்ரிவிதகரணங்களாலும்செய்தும். ஆஸ்ரயணத்தில் குறையால் பலியாதிருந்ததன்று, அதில்குறையில்லை. ப்ரீதிப்ரேரிதராய்ச்சொல்லி, அவ்வளவில் பர்யவசியாதே விக்ருதராய், "𑌮𑌾𑌂 𑌨𑌮𑌸𑍍𑌕𑍁𑌰𑍁" (மாம்நமஸ்குரு) என்றுபகவத்விஷயத்தில் லவகாஹிக்குமளவுமுட்புகுந்து. (பல்படிகால்) ஒருபடியாஸ்ரயித்து விட்டிகோளோ, அநேகம்ப்ரகாரங்களாயாஸ்ரயித்து. (வழியேறிக்கண்டீர்) அத்தேவதைகளையாஸ்ரயிக்கச்சொன்ன சாஸ்த்ரமர்யாதை தப்பாமலாஸ்ரயித்து அதின்பலமும் கண்டிகோளன்றே. "பல்படிகால் வழியேறிக்கண்டீர்" என்கைக்கு, "இவர்களொரு ஜந்மத்திலும் பகவத்ஸமாஸ்ரயணம் பண்ணிற்றிலர்கள்" என்றறிந்தபடியெங்ஙனேயிவரொன்னில்; இப்போது தாமிவ்வர்த்தமுபதேசிக்க வேண்டும்படி இவர்களிருக்கக் காண்கையாலே, "இதுக்குமுன்பு பகவத்ஸமாஸ்ரயணம் பண்ணிற்றிலர்கள்" என்

றியத் தட்டில்லையிறே; "𑌮𑍋𑌕𑍍𑌷𑌮𑌿𑌚𑍍𑌛𑍇𑌜𑍍𑌜𑌨𑌾𑌰𑍍𑌦𑌨𑌾𑌤𑍍" (மோக்ஷமிச்சேஜ்ஜநார்த்தநாத்) என்கிறபடியே, பகவத்ஸமாஶ்ரயணம் பண்ணினார்களாகில் முக்தராவர்களிறே. இதரதேவதாசமாஶ்ரயணம் பண்ணுகையாலே இவ்வளவும்வர சம்சரித்துப்போந்திகோள். "𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌣𑌂𑌶𑌿𑌤𑌿𑌕𑌣𑍍𑌠𑌞𑍍𑌚𑍇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿, 𑌪𑍍𑌰𑌤𑌿𑌬𑍁𑌦𑍍𑌧𑌾𑌨𑌸𑍇𑌵𑌨𑍍𑌤𑍇" (ப்ரஹ்மாணம்ஶிதிகண்டஞ்சேத்யாதி, ப்ரதிபுத்தாநஸேவந்தே) "மோக்ஷபலம்சித்திக்கவேணும்" என்றிருக்கிறவர்கள் க்ஷுத்ரதேவதைகளைப் பின்செல்லார்களிறே; அதுக்கடி - அவைதரவல்லதநித்யபலங்களாகையாலே. "𑌸𑍍𑌕𑌨𑍍𑌦𑌰𑍁𑌦𑍍𑌰𑌮𑌹𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌾𑌦𑍍𑌯𑌾𑌃𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑌿𑌦𑍍𑌧𑌾𑌸𑍍𑌤𑍁𑌪𑍂𑌜𑌨𑍇" (ஸ்கந்தருத்ரமஹேந்த்ராத்யா: ப்ரதிஷித்தாஸ்துபூஜநே) என்றதிறே. [ த்வயாபிப்ராப்தமித்யாதி ] ஒருவன் பகவத்ஸமாஶ்ரயணம் பண்ணாநிற்கச்செய்தே, "இவன்சமாதிநின்றநிலையறியவேணும்" என்றுபார்த்து சர்வேஶ்வரனிந்த்ரவேஷ பரிக்ரஹம்பண்ணி ஐராவதத்திலே யேறிவந்து முன்னேநின்று, "உனக்குவேண்டுவதென்" என்ன, "ஒருபுழுவுந் தானுமாய்வந்து நிற்கிறவனார்" என்றான், "சர்வேஶ்வரன் பெரியதிருவடியை மேற்கொண்டுவந்தான்" என்னுமிடமறியானிறே கொண்டுவந்தவேஷ மிதுவாகையாலே; அவனைப்பார்த்து; நீயாவனொருவனை யாஶ்ரயித்து இந்தவைஶ்வர்யமடையப் பெற்றாய், அப்படிப்பட்டவனைக்காண் நானாஶ்ரயிக்கிறது; இப்படிவழிபோவார்க்கெல்லாம் பச்சையிட்டுத்திரியு மவனல்லேன்காண், இப்போது முகங்காட்டாதே போகவல்லையேபிரானே, உன்னைக்கும்பிடுகிறேன் என்றானிறே. பகவத்ஸமாஶ்ரயணம்பண்ணி ஜ்ஞாநாதிகராயிருப்பாரொருவரிருந்து தம்முடையவஸ்த்ரத்தைப் புரையாநின்றாராய், அவ்வளவிலேதேவனும் தேவியுமாகப் போகாநிற்க அநாதரித்திருந்தாராய், தேவியானவள், "நீர்சர்வாதிகராயிருக்க, உம்மைக்கண்டவிடத்தி லிவனநாதரித்துக் காலைநீட்டிக்கொண்டிருந்தானே" என்ன, "அவன்பகவத்பக்தன்போலேகாண்" என்ன, "அதுதானிருக்கிறபடி யறிவோம்" என்று இருவருமிவர் பக்கலிலேவந்து, "நீயென்; தேவர்களை மநுஷ்யர்கள்கண்டால் அநுவர்த்தித்து வேண்டும்வரங்களும் வேண்டிக்கொள்ளக்கடவர்களா யிருப்பர்கள், நீநம்மைக்கண்டவிடத்தில் நீட்டினகாலை முடக்குதல், சில உபசாரங்களைப்பண்ணுதல், சிலவற்றைவேண்டிக்கொள்ளுதல் செய்யாதேயிருந்தாயே" என்ன, "அழகிது, அவையெல்லாம் செய்க்கடவேன், மோக்ஷம்தரலாமோ" என்ன, "அதுநம்மாலே செய்யலாமதன்று, பகவத்ஸமாஶ்ரயணம்பண்ணி அவன்ப்ரஸாதத்தாலே பெறவேணும்" என்ன "ஆகில், இன்றுசாவாரை நாளைச்சாவப்பண்ணலாமோ" என்ன, "அதுவும் கர்மாநுகுணமாயிறே யிருப்பது, நம்மால்செய்யப்போகாது" என்ன, "ஆகில் நீசெய்புமது, இவ்வூசிபோனவழியே நூலும்போம்படி அநுக்ரஹித்து நடக்குமித்தனை" என்ன, தேவனும்கோபத்

தாலே நெற்றியிற்கண்ணைக்காட்ட, இவரும்காலிலே அநேகங்கண்ணையுண்டாக்கிக்காட்டினார். (கூடியித்யாதி) நீங்களாஶ்ரயிக்கிற தேவதைகள் இவ்வளவுமுங்களைக் கும்பிடுகொண்டு, இத்தனைபோதுபோய அங்கே ஆஶ்ரயியாநிற்பர்கள். அவர்கள்செய்கிறவற்றைக் கண்டாகிலும் நீங்களுமவனை யாஶ்ரயிக்கப்பாருங்கோள். தலையறுப்பாரு மறுப்புண்பாருமாய், க்ராமணிகளைப்போலே யொருவரையொருவர் வேரோடேயலம்பிப்பொகடவேண்டும்படியான விரோதம்செல்லாநிற்கச் செய்தேயும், ஆபத்தெல்லார்க்கு மொத்திருக்கையாலே எல்லாருமொருமிடறு யாஶ்ரயிப்பர்கள். பரஸ்பரவிரோதமுங் கிடக்கச்செய்தே "ஊராகக்கூடிவந்தது" என்பார்களிறே. (ஆடுபுட்கொடி) வெற்றிப்புட்கொடி. ஆடு-வெற்றி. வெற்றிப்புள்ளைக்கொடியாக வுடையவன். "சர்வேஶ்வரவாஹநம்" என்கிற ஹர்ஷப்ரகர்ஷத்தாலே மதித்தாடாநின்ற புள்ளென்றுமாம். ஆஶ்ரிதவிரோதி நிரஸநத்துக்கு சர்வேஶ்வரனுக்குச் செய்யவேண்டுவதில்லை, திருவடி திருத்தோளிலே சலியாமலிருக்கு மத்தனையேவேண்டுவது. "கருடத்வஜன், கருடவாஹநன்" என்றுசொல்லப்படு மவனாயிற்று மோக்ஷப்ரதனாவான். (ஆதிமூர்த்திக்கு) "காரணந்து த்யேயஃ" (காரணந்து த்யேயஃ) என்கிறபடியே, ஜகத்காரணவஸ்துவேயிறே உபாஸ்யமாவது. மோக்ஷப்ரதனுமாய் சர்வநியந்தாவுமான சர்வேஶ்வரனுக்கு. (அடிமைபுகுவதுவே) அடிமைபுகுமதுவே கர்த்தவ்யம். உங்களுக்குச் செய்யவேண்டுவதொன்றில்லை, அவனுடைமையை யவனுக்காக விசையவமையும். அவனித்தை "என்னுடைமை" என்றிருக்க, நீங்களும் "என்னுடைமை" என்றிராதே, "அவனது" என்றிசையவமையும். அடிமைபுகுவது வென்கிறவிடம்-விதியாய், கண்டொன்கிறவிடம்-அதுவும்செய்து பார்த்திகோளிறே, இனியிவன் றிருவடிகளிலே யடிமைபுகப் பாருங்கோளென்கிறார். யயாதிசரிதத்தை பட்டர்வாசித்துப் போந்திருக்கச்செய்தே, பிள்ளைவிழுப்பரையரும் ஆப்பான்திருவழுந் தூரரையருங்கூட, "வேதோபப்ரும்ஹணார்த்தமாக ப்ரவ்ருத்தமான ப்ரபந்தங்களிலிதெவ்வர்த்தத்தை விஶதீகரிக்கிறது" என்றுகேட்க, "க்ஷுத்ரதேவதைகள், தந்தாமையாஶ்ரயித்துப் பெற்றாலும் பிறர்பக்கலிலே யோருத்கர்ஷங்கண்டாலது பொறுக்கமாட்டார்களென்றும், சர்வேஶ்வரனே 'பிறர்வாழ்வுநம்வாழ்வு' என்றுநினைத்திருப்பானென்றும்சொல்லி, ஆனபின்பு இதரதேவதைகளாஶ்ரயணீயரன்று, இவனொருவனுமே ஆஶ்ரயணீயனென்னுமர்த்தத்தைச்சொல்லுகிறது" என்றருளிச்செய்தார். "இமௌஸ்ம" (இமௌஸ்ம) என்றுதாழநிற்கவல்லானிவனேயிறே. "யாதவர்கள்முடிவிலேவந்தவாறே வாட்கோரையையிட்டொருவரையொருவரெறிந்து முடிந்துபோனார்கள்" என்றுகேட்டவாறே, "க்ருஷ்ணனிவர்கள்விஷயமாக சங்கநிதிபத்மநிதிதொடக்கமானவற்றைக்கொடுவந்து கொடுத்துச்செய்யாதனவில்லை, பின்னையும் முடிவிலேவந்தவாறே யிப்படியேயாயிருந்தது; 'நம்மு

டையபகவத்ஸமாஸ்ரயணத்துக்கும் பலமங்ஙனேயாகிறதோ’ என்றஞ்சியிருந்தோம்” என்ன, “அங்ஙனாகாது, அஞ்சவேண்டா, அவர்கள் ‘இவனென்தோழன், மைத்துனன்’ என்று தேஹ சம்பந்தத்தைக்கொண்டு விரும்புகையாலே யவர்களுக்கு தேஹாவதியாய்விட்டது ; நாம்ஸ்வரூபஜ்ஞாநத்தாலே, ‘நித்யனான ஆத்மாவுக்கு வருத்தபேறுபெறவேணும்’ என்றுபற்றுகையாலேபேறும் யாவதாத்மபாவியாயிருக்கும்” என்றருளிச்செய்தார்.........*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு. (ஓடியோடியித்யாதி) “மற்றோர்தெய்வம் பாடியாடிப்பணிந்து பல்படிகால்வழியேறி-ஓடியோடி-கண்டீர் ; அடிமைபுகுவதுவே” என்றதுக்கநுகுணமாக ப்ரஸ்நப்ரதிவசநரூபேணவதாரிகை (அதுசெய்கிறோமித்யாதி)

“ஓடியோடி” என்கிறவீப்ஸைக்கர்த்தம் (கதாகதமித்யாதி) “[illegible] । [illegible]” (தேதம்புக்த்வாஸ்வர்க்கலோகம்விஸாலம் க்ஷீணேபுண்யேமர்த்யலோகம்விஸந்தி । ஏவம்த்ரயீதர்மமநுப்ரபந்நாகதாகதம் காமகாமாலபந்தே) இதிகீதாஸூநவமே. ஓடியோடி-திரிந்துதிரிந்து. “ஓடியோடி” என்கிறபதத்வயமும் - கமநாகமநபரம். அதாவது-பலாநுபவார்த்தமாகப்போவது, ஜந்மபரிக்ரஹார்த்தமாக வருவதாய்த் திரிந்துதிரிந்தென்றபடி. “ஓடியோடிப்பலபிறப்பும்பிறந்து” என்றது-சாமாந்யமாய், ஸ்வர்க்கநரகசாதாரணமாயிருக்க; “[illegible]” (கதாகதம்காமகாமாலபந்தே) என்கிறப்ரமாணத்தில், கீழே “[illegible]” (திவ்யாந்திவிதேவபோகாந்) என்று-ஸ்வர்க்கத்துக்கேகாந்தமாயிருக்க, அந்தக்ரந்தமிங்கு சாதாரணத்திலே ப்ரமாணமெப்படியாமென்ன; ப்ரகரணபலத்தாலே, இங்கும்-ஸ்வர்க்கபலத்திலேதானே யொதுக்கிக்கொள்ளவேணும். அதெப்படியென்ன; “மற்றோர்தெய்வம் பாடியாடிப்பணிந்து பல்படிகால்வழியேறி” என்று-தேவதாந்தரசமாஸ்ரயணமும்பண்ணி தத்பலமும் கண்டிகோளென்கையாலே, இது ஸ்வர்க்கபோக்தாவுக்கொழியக்கூடாதிறே. காம்யந்த இதிகாமா:-ஸ்வர்க்காதிபோகா:; தேஷு, காம:-இச்சாயேஷாந்தே, காமகாமா:. கமநாகமநபரமான “ஓடியோடி” என்கிறபதத்வயோபபாதகம் (கதாகதமித்யாதி) ஜந்மங்களோடேவருவதாய்-ஜந்மபரிக்ரஹார்த்தமாக வருவதாய். இப்போது ஒருபிறவிபிறந்திருக்க, பலபிறவியுண்டோவென்ன (ஆத்மாவித்யாதி) பலபிறப்பும்பிறந்து - சகலயோநிகளிலுமஸங்க்யாதமாக ஜந்மங்களைப்பண்ணி. (மற்றோர்தெய்வம்) ஈஸ்வரவ்யதிரிக்தத்வமாத்ரமே அபேக்ஷிதம், விஷயநியமமில்லையென்றபடி. “பிறந்து” என்கிறல்யப்பினாலே - ஜந்மங்களுக்கு தேவதாந்தர சமாஸ்ரயணசேஷத்வம் ஸூச்யதே ; ததாஹ (இப்படியநாதியாயித்யாதி) “பாடியாடிப்பணிந்து” என்கையாலே (த்ரிவிதகரணங்களாலும் செய்துமென்றது) “பணிந்து” என்கிறவிது - மாநஸவ்யாபாரத்தைக்காட்டுகிறது. கரணத்ரயவ்யாபாரத்தையும் சொன்னதுக்குதாத்பர்யம் (ஆஸ்ரயணத்திலித்யாதி) சப்தார்த்தம் (ப்ரீதிப்ரேரிதராயித்யாதி) இந்தபக்ஷத்தில், “ஆடி, பணிந்து” என்கிறவிரண்டும்-காயிகத்தைக்காட்டிற்றாகில் - “[illegible]” (மந:பூர்வோவாக்ருத்தர:) என்கிறதனுக்கிலே மாநஸவ்யாபாரமு

ம் தன்னடையே ஸித்திக்கும். படி-ப்ரகாரம். பல்படிகால் - பலப்ரகாரங்களால். ப்ரகாரங்களாவன-தர்ப்பணஜபஹோமப்ராஹ்மண போஜநாதிகள். வழியேறி-சாஸ்த்ரமார்க்கத்திலே நின்றாஶ்ரயித்து. கண்டீர்-அதின்பலமும் கண்டிகோள்.

தடஸ்த்தஶங்கையை யநுவதித்து பரிஹரிக்கிறார் (பல்படிகாலித்யாதி) "பலஜந்மங்களிலு மிதரதேவதைகளைப்பணிந்து அதின்பலமும்கண்டீர்" என்றபோதே-ஒருஜந்மத்திலும் பகவத்ஸமாஶ்ரயணம் பண்ணவில்லை என்றபடியாயிற்றேயென்று சங்காதாத்பர்யம். பகவத்ஸமாஶ்ரயணம்பண்ணினு லுபதேசிக்கவேண்டும்படியிராதே முக்தராவர்களோவென்ன (மோக்ஷமிச்சேதித்யாதி) "𑌆𑌰𑍋𑌗𑍍𑌯𑌂 𑌭𑌾𑌸𑍍𑌕𑌰𑌾𑌦𑌿𑌚𑍍𑌛𑍇𑌤𑍍 𑌧𑌨𑌮𑌿𑌚𑍍𑌛𑍇𑌦𑍍𑌧𑍁𑌤𑌾𑌶𑌨𑌾𑌤𑍍 । 𑌈𑌶𑍍𑌵𑌰𑌾𑌜𑍍𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌨𑍍𑌵𑌿𑌚𑍍𑌛𑍇𑌨𑍍𑌮𑍋𑌕𑍍𑌷𑌮𑌿𑌚𑍍𑌛𑍇𑌜𑍍𑌜𑌨𑌾𑌰𑍍𑌦𑌨𑌾𑌤𑍍" (ஆரோக்யம்பாஸ்கராதிச்சேத்தநமிச்சேத்துதாஶநாத்।ஈஶ்வராதஜ்ஞாநமந்விச்சேந்மோக்ஷமிச்சேஜ்ஜநார்த்தநாத்) இதிப்ரஹ்மாண்டபுராணே. விபர்யயேபர்யவஸாநம்ப்ரகரணாநுகுண்யேநதர்ஶயதி (இதரதேவதேத்யாதி)

"தேவதாந்தரபஜநம்ஸம்ஸாரஹேது" என்னுமதக்குப்ரமாணம் (ப்ரஹ்மாணமித்யாதி) "𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌣𑌂 𑌶𑌿𑌤𑌿𑌕𑌣𑍍𑌠𑌂 𑌚 𑌯𑌾𑌶𑍍𑌚𑌾𑌨𑍍𑌯𑌾 𑌦𑍇𑌵𑌤𑌾𑌃 𑌸𑍍𑌮𑍃𑌤𑌾𑌃। 𑌪𑍍𑌰𑌤𑌿𑌬𑍁𑌦𑍍𑌧𑌾 𑌨 𑌸𑍇𑌵𑌨𑍍𑌤𑍇 𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌪𑌰𑌿𑌮𑌿𑌤𑌂 𑌫𑌲𑌮𑌿𑌤𑌿 நாராயணீயே" (ப்ரஹ்மாணம்ஶிதிகண்டஞ்சயாஶ்சாந்யாதேவதாஸ்ஸ்ம்ருதா꞉ । ப்ரதிபுத்தாநஸேவந்தே யஸ்மாத்பரிமிதம்பலம் இதிநாராயணீயே) "𑌸𑍍𑌕𑌨𑍍𑌦𑌰𑍁𑌦𑍍𑌰𑌮𑌹𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌾𑌦𑍍𑌯𑌾𑌃 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌾𑌸𑍍𑌤𑍁 𑌪𑍂𑌜𑌨𑍇। 𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑍈𑌵𑌂 𑌭𑌕𑍍𑌤𑌿𑌸𑌾𑌙𑍍𑌕𑌰𑍍𑌯𑌂 𑌨 𑌕𑍁𑌰𑍍𑌯𑌾𑌦𑍍𑌦𑍇𑌵𑌮𑍇𑌵 𑌹𑌿" (ஸ்கந்தருத்ரமஹேந்த்ராத்யா꞉ப்ரதிஷ்த்தாஸ்துபூஜநே । ஜ்ஞாத்வைவம்பக்திஸாங்கர்யம்நகுர்யாதேவமேவஹி) "𑌪𑍍𑌰𑌤𑌿𑌬𑍁𑌦𑍍𑌧𑌸𑍍𑌤𑍁 𑌮𑍋𑌕𑍍𑌷𑌭𑌾𑌕𑍍" (ப்ரதிபுத்தஸ்துமோக்ஷபாக்) என்கையாலே, ப்ரதிபுத்தராகிறார் - மோக்ஷாதிகாரிகள்; அத்தையருளிச்செய்கிறார் (மோக்ஷபலமித்யாதி) "𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌪𑌰𑌿𑌮𑌿𑌤𑌂 𑌫𑌲𑌮𑍍" (யஸ்மாத்பரிமிதம்பலம்) என்றதுக்கர்த்தம் (அதுக்கடியித்யாதி) இதரதேவதாசமாஶ்ரயணம் பரிமிதபலப்ரதமாகையேயன்றிக்கே நிஷித்தமுமென்றுவிவக்ஷித்து, அதுக்குப்ரமாணம் (ஸ்கந்தேத்யாதி) பூர்வமேவலிகிதமிதம்ப்ரமாணம். "முமுக்ஷுக்களிதரதேவதைகளைபஜியார்கள்" என்னுமதுக்கு அநுஷ்ட்டாநங்களும் காட்டுகிறார் (த்வயாபீத்யாதி) "𑌤𑍍𑌵𑌮𑌿𑌨𑍍𑌦𑍍𑌰𑌸𑍍𑌸𑌤𑍍𑌯𑌮𑍇𑌵𑍈𑌤𑌤𑍍𑌦𑍇𑌵𑌸𑍍𑌤𑍍𑌰𑌿𑌭𑍁𑌵𑌨𑍇𑌶𑍍𑌵𑌰𑌃 । 𑌤𑍍𑌵𑌯𑌾𑌪𑌿 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌮𑍈𑌶𑍍𑌵𑌰𑍍𑌯𑌂 𑌯𑌤𑌸𑍍𑌤𑍍𑌵𑌂 𑌤𑍋𑌷𑌯𑌾𑌮𑍍𑌯𑌹𑌮𑍍" (த்வமிந்த்ரஸ்ஸத்யமேவைதத்தேவஸ்த்ரிபுவநேஶ்வர꞉ । த்வயாபிப்ராப்தமைஶ்வர்யம்யதஸ்தம்தோஷயாம்யஹம்) இதிவைஷ்ணவேதர்மே. ஒருவன் - அம்பரீஷன். புழு - ஐராவதம். ஒருவர் - திருமழிசைப்பிரான். புரையாநின்றாராய் - தையாநின்றாராய். தேவனும்தேவியும் - ருத்ரனும் பார்வதியும். இவரும்-ஆழ்வாரும். அக்ஷபாதராகையாலேயென்றபடி.

தாத்பர்யம் (நீங்களித்யாதி) "கூடி" என்றுவிசேஷிக்கையாலே -பரஸ்பரவிரோதமுண்டென்னுமத்தையும்; இப்படிவிரோதமுண்டாயிருக்க, கூடுகைக்கு ஹேதுவையும் ஸத்ருஷ்டாந்தமாகவருளிச்செய்கிறார் (தலையறுப்பாருமித்யாதி) எல்லாமானாலும், பரஸ்பரவிரோதமாயிருக்க, கூடும்படியெப்படியென்ன (பரஸ்பரேத்யாதி) "ஆடுபுட்கொடி" என்றுவிசேஷித்ததுக்குபாவம் (ஆஶ்ரிதேத்யாதி) "அடிமைபுகுவதுவே" என்றதுக்கநுகுணமாக விசேஷணகர்ப்பிதம்ஹார்த்தபாவமாஹ (கருட்த்வஜனித்யாதி) காரணத்வகதநத்துக்குபலிதம் (காரணத்வித்யாதி)

"ஆடுபுட்கொடி, கூடிவானவரோத்தநின்ற" என்கிற விசேஷணங்களாலே பலித்த குணங்களையருளிச்செய்கிறார் (மோக்ஷப்ரதனுமாயித்யாதி) ஆதிமூர்த்திக்கு-காரணபூதனான சர்வேஸ்வரனுக்கு.

"அடிமை" இத்யாதிக்கர்த்தம் (அடிமைபுகுமதுவே கர்த்தவ்யமென்று) கர்த்தவ்யமென்று - அத்யாஹார்யம். ஏவகாரவ்யவச்சேத்யவிசேஷம்தர்ஸபதி (உங்களுக்கித்யாதி) "பாடியாடிப்பணிந்து" இத்யாதிகள் - வேண்டாவென்றுகருத்து.

அவனுடைமையென்றதுக்கு - "ஆதிமூர்த்தி"; இத்யத்ரஹ்ருதயம். தத்விஸதயதி (அவனித்தையித்யாதி) "அடிமைபுகுவதுவே" என்றதும், "கண்டீர்" என்றது மந்வயிக்கிறபடியெங்ஙனேயென்ன (அடிமைபுகுவதுவென்கிறவிடமித்யாதி) மோக்ஷப்ரதத்வ மவர்களுக்கில்லையேயாகிலும், ஸ்வர்க்காதிபுருஷார்த்தப்ரதத்வமாகிற வதிசயமுண்டேயென்ன; அவர்கள் ஸ்வாஸ்ரிதர்பக்க லஸூயாளுக்களாகையாலே யவ்வழியாலு மவர்களுக்குத்கர்ஷமில்லையென்னுமத்தை யாப்தஸம்வாதத்தாலே காட்டுகிறார் (யயாதீத்யாதி) ஆஸ்ரிதர்வாழ்வே தனக்குவாழ்வாகக்கொண்டு நினைத்திருக்குமோவென்ன; அவ்வளவேயன்று, அவர்களை யுத்க்ருஷ்டராக்கித் தன்னைத்தாழநினைக்குமென்கிறார் (இமௌஸ்மேத்யாதி) "𑌇𑌮𑍌 𑌸𑍍𑌮 𑌮𑍁𑌨𑌿𑌶𑌾𑌰𑍍𑌦𑍂𑌲 𑌕𑌿𑌙𑍍𑌕𑌰𑍌 𑌸𑌮𑍁𑌪𑌸𑍍𑌥𑌿𑌤𑍌 । 𑌆𑌜𑍍𑌞𑌾𑌪𑌯 𑌯𑌥𑍇𑌷𑍍𑌟𑌂 𑌵𑍈 𑌶𑌾𑌸𑌨𑌂 𑌕𑌰𑌵𑌾𑌵 𑌕𑌿𑌮𑍍" (இமௌஸ்மமுநிஸார்த்தூலகிங்கரௌஸமுபஸ்திதௌ । ஆஜ்ஞாபயயதேஷ்டம் வைஸாஸநம்கரவாவகிம்) இதிபாலகாண்டே விஸ்வாமித்ரம்ப்ரதி ராமலக்ஷ்மணௌ. "இதரதேவதாஸமாஸ்ரயணம்பண்ணிக்கண்டிகோளே, பலமில்லை" என்றுசொன்னீர்; பகவத்ஸமாஸ்ரயணம்பண்ணினார்க்கும் பலத்தில்தட்டுப் பிறந்ததேயென்று சங்கித்து பரிஹரிக்கிறார் (யாதவர்களித்யாதி) முடிவிலே - அவஸாநத்திலே. வாட்கோளா - கத்திக்கோளா.

க்ரமேணாந்வய: ......................................................................*

## எட்டாம்பாட்டு.

புக்கடிமையினாற்றன்னைக்கண்டமார்க்கண்டேயனவனை
நக்கபிரானுமன்றுய்யக்கொண்டதுநாராயணனருளே
கொக்கலர்தடந்தாழைவேலித்திருக்குருகூரதனுள்
மிக்கவாதிப்பிரானிற்கமற்றைத்தெய்வம்விளம்புதிரே.

### ஆறாயிரப்படி.

(புக்கடிமையினால்) ருத்ரனை யாஸ்ரயித்தன்றோ மார்க்கண்டேயன் ஸ்வாபிலஷிதம்பெற்றதென்னில்; அவனும் ஸ்வாபிலஷிதம்பெற்றது நாராயணனுடையப்ரஸாதத்தாலே, அவ்விடத்தில் ருத்ரன்புருஷகாரமாத்ரமே; ஆதலாலிப்படி சர்வேஸ்வரனான நாராயணனையொழிய மற்றென்னதைவத்தைக் கொண்டாடுகிறீரென்கிறார்.........................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், மார்க்கண்டேயனுக்கு ருத்ரன் பலப்ரதனாயிற்று மீஸ்வரன்க்ருபையாலேயென்று, "இதரதேவதைகளுக்கும்பலப்ரதாநசக்த்யாதாயகனவனே" என்னுமிடத்தை யுதாஹரணநிஷ்டமாக்கி யருளிச்செய்கிறார்.

அடிமையினால்-சேஷவ்ருத்திமுகத்தாலே. புக்கு-உட்புக்கு. தன்னை-ஆஶ்ரயணீயனான தன்னை. கண்ட-அபரோக்ஷித்துக்கண்ட. மார்க்கண்டேயன்-மார்க்கண்டேயனென்ற. அவனை-புராணப்ரசித்தனானவனை. நக்கன்-திகம்பரனாகையாலே நக்நனென்றுபேராய். பிரானும் - ஆஶ்ரிதருக்கும்ருத்யுவைஜயித்து நித்யத்வத்தைக் கொடுத்தவுபகாரகனானும். அன்று - ப்ரளயதசையிலே. உய்யக்கொண்டது-பிழைப்பித்துபகவத்பரனாக்கியுஜ்ஜீவிப்பித்தது. நாராயணன்-அந்தராத்மபூதனான நாராயணன. அருளே-அவனுக்குபலப்ரதனாம்படிதன்னைப்பண்ணிவைத்த க்ருபையாலேயாயிருக்கும். ஆதலால், கொக்கு-கொக்கின்நிறம்போலே. அலர்-அலருகிறபூவையுடைய. தடம்-பெரிய. தாழை-தாழைகளை. வேலி-வேலியாகவுடைய. திருக்குருகூரதனுள்-திருநகரிக்குள்ளேநிற்கிற. மிக்க-சர்வாதிகனாய். ஆதி-நிரபேக்ஷகாரணபூதனான. பிரான்-மஹோபகாரகன். நிற்க-நிற்க. எம்மற்று-வேறுதத்ஸாபேக்ஷமானவெத்தை. தெய்வம்-தைவமாக. விளம்புதிர்-சொல்லுகிறிகோள்............*

## ஈடு - எட்டாம்பாட்டு.

இங்ஙனேயிருக்கச்செய்தேயும், இதரதேவதாசமாஶ்ரயணம் பண்ணியன்றோ மார்க்கண்டேயாதிகள் ஸ்வாபிலஷிதம்பெற்றதென்ன; ஆகிலதிருந்தபடியைக் கேட்கலாகாதோ வென்கிறார்.

(புக்கடிமையினால்) அடிமையினால்-புக்கு. "சர்வேஶ்வரனுக்கடிமை" என்றுபுக்கானல்லன், "ருத்ரனுக்கடிமை" என்றுபுக்கானாயிற்று. (தன்னைக்கண்ட) காணப்பெறுமையாலே தானிழந்தானல்லன்; (புக்கித்யாதி) ஆஶ்ரயணக்குறையா விழந்ததல்ல, காணப்பெறுமையா விழந்ததல்ல. (மார்க்கண்டேயனவனை) மார்க்கண்டேயனானவனை. (நக்கபிரான்) நக்கனென்றது-நக்நனென்றபடி. ஸ்வகோஷ்டிக் குபகாரகனாயிருக்கையாலேயாதல், ஜ்ஞாநப்ரதத்வத்தைப் பற்றவாதல்-பிரானென்கிறது. மேல், நாராயணனென்கையாலே - "அவனுக்குசேஷமாமிடத்திலுன்னோடென்னோடுவாசியில்லை" என்று அவன்திருவடிகளிலே காட்டிக்கொடுத்தானென்கை. (அன்றுய்யக்கொண்டது) ஆபத்தசையிலேரக்ஷித்தது. (நாராயணனருளே) "நீநெடுநாள்பச்சையிட்டு ஆஶ்ரயித்தாய், அவ்வாஶ்ரயணம் வெறுமன் போயிற்றதாகவொண்ணாது" என்று அவனையழைத்து, "நானுமுன்னோபாதி யொருவனையாஶ்ரயித்துக் காணிப்பதம்பெற்றது; இனிஊண்கொடுத்தல், உபதேசங்கொடுத்தலிறே" அவனைக்கொண்டுபோய் சர்வேஶ்வரன்பக்கலிலே காட்டிக்கொடுத்தானாயிற்று. அருளென்கிறவிடம்-எல்லாவிபக்தியிலு மொட்டலாயிருக்கையாலே, அருளாலேயென்னுதல்; அவனிவனை ரக்ஷித்துக்கொண்டது சர்வேஶ்வரன் ப்ரஸாதத்தைப் பண்ணிக்கொடுத்தென்னுதல்.

(கொக்கலரித்யாதி) கொக்குப்போலே வெளுத்த நிறத்தையுடைய அலரையுடைத்தா யிருப்பதாய்ப் பெருத்திருந்துள்ள தாழைகளை வேலியாக வுடைத்தாயிருந்துள்ள திருநகரியாயிற்று. நிலத்தியல்பிருக்கிறபடி. (மிக்க [illegible]

ன்நிற்க. ( மிக்க ) சொல்லும்போது கனக்கச்சொல்லி, கிட்டினவாறே குறைந்திராதொழிகை. நெடுநாளாஸ்ரயிப்பித்துக்கொண்டு, பின்புகார்யகாலத்திலேவந்தவாறேவேறேயொருவன்வாசலேறக்கொண்டுபோகவேண்டாதிருக்கை. (மற்றைத்தெய்வம் விளம்புதிரோ) ப்ரகாரங்களிலேயொன்றை ஈஸ்வரனாகச்சொல்லுகிறிகோளே ; அவனுக்குப்ரகாரமாயல்லதொன்றுக்கும் வஸ்துத்வமின்றிக்கேயிருக்க, ப்ரகாரியாகச்சொல்லி அநர்த்தப்படுகிறிகோளே கெடுவிகாள். ( விளம்புதிரோ ) "வ்யவஹரிக்கைக்கும்யோக்யதையில்லை" என்றிருக்கிறாராயிற்றிவர்.........................*

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு. ( புக்கடிமையினாலித்யாதி ) பூர்வார்த்தத்தைக் கடாக்ஷித்தவதாரிகை ( இங்ஙனேயிருக்கச்செய்தேயுமித்யாதி ) இங்ஙனேயிருக்கச்செய்தேயுமென்றது - இதரதேவதைகள் ஸம்ஸாரவர்த்தகராய், "சர்வேஸ்வரன் மோக்ஷப்ரதன்" என்று ப்ரசித்தியுண்டாயிருக்கச்செய்தேயு மென்றபடி.

"புக்கடிமையினால் தன்னைக்கண்ட" என்றிருக்கையாலே யருளிச்செய்கிறார் ( சர்வேஸ்வரனுக்கித்யாதி ) சர்வேஸ்வரனுக்கு - ப்ராப்தவிஷயத்துக்கென்றபடி. "தனக்கு - அடிமையினால் - புக்கு - தன்னைக்கண்ட" என்றந்வயிப்பது. தன்னை - ருத்ரனை. இரண்டுபதத்தையுங்கூட்டி யர்த்தம் ( ஆஸ்ரயணேத்யாதி ) மார்க்கண்டேயனவனை - மார்க்கண்டேயனானவனை.

ஜ்ஞாநப்ரதத்வத்தையென்றது - மார்க்கண்டேயவிஷயத்திலேயென்றபடி. "[illegible]" ( ஈஸ்வராத்ஜ்ஞாநமந்விச்சேத் ) என்று- ஜ்ஞாநப்ரதத்வமுண்டிறே யவனுக்கும். "அன்றுய்யக்கொண்டது" என்று - அவ்வாபத்திலே யுஜ்ஜீவிப்பித்தது தானேயோவென்ன ( மேல் நாராயணனித்யாதி ) அதாவது - அவனுடைய திருவடிகளைக்காட்டி யுஜ்ஜீவிப்பித்தானென்றபடி. இங்கு, நாராயண சப்தார்த்தம் - தத்புருஷ சித்தமான சேஷித்வம். ( வாசியில்லையென்று ) ஜ்ஞாநோபதேசத்தைப்பண்ணி யென்று கூட்டி நிர்வஹிப்பது. நாராயணனருளை யுபதேச முகத்தாலே யவனுக்குப் பண்ணிக்கொடுத்த ப்ரகாரத்தை விஸ்தரமாக வருளிச்செய்கிறார் ( நீ நெடுநாளித்யாதி ) வெறுமன் - வ்ருதாவாக. ( இப்பதம்பெற்றது ) என்றவநந்தரம், ஆகையாலே யினி யுன்னுடைய அபீஷ்டம் நம்மால்செய்து தரக்கூடாது என்று சிலகூட்டி, அநந்தரம் ( இனியூண்கொடுத்தல் ) இத்யாத்யநுசந்திப்பது. ( உபதேசங்கொடுத்தலிறே ) என்ற வநந்தரம், என்று என்று கூட்டுவது. ஊண்கொடுத்த லுபதேசங்கொடுத்தலாவது - ஒருவன் க்ருஹத்திலே யொருவன் பசியாளனாய்வந்து "எனக்கு க்ஷுத்பாதை யாற்றவேணும்" என்றால், உண்டானாலிடக்கடவன், இல்லாவிடில் "இன்னாரகத்தே பசியாளர்க்கிடுவார், அங்கே போ" என்றுசொல்லுதல் செய்வர்கள் ; அத்தைச் சொல்லுகிறது. ஒட்டலாய் - கூட்டலாய். த்விதீயார்த்தத்தில், அருளைப் பண்ணிக்கொடுத்தென்றபடி.

நைர்மல்யப்ரஹத்வஹேதும்தர்ஸயதி ( நிலத்தியல்பிருக்கிறபடியென்று ) இயல்பு - ஸௌஷ்டவம். "ஆதிப்பிரான்" என்று காரணத்வஞ் சொன்னபோதே - சர்வாதிகத்வம் சித்தமாயிருக்க, "மிக்க" என்று விசேஷித்ததுக்கு பாவம் ( சொல்லும்போதித்யாதி ) அப்படி குறைந்திருக்க வெங்கே கண்டோமென்ன ( கெடுநாளித்யாதி, )

ஙிழ்ச்சொன்ன * நாராயணபத சித்தமான-பகவத்வ்யதிரிக்த ஸமஸ்தவஸ்துக்களுடைய சத்ப்ரகாரதையை யநுசந்தித்து, "விளம்புதிரோ" என்கிற க்ஷேபோக்திக்கு பாவம் (ப்ரகாரங்களிலே யித்யாதி) ஏதத்விவரணம் (அவனுக்கித்யாதி) (ப்ரகாரியாக) அந்யதேவதையை (ப்ரகாரியாக) "விளம்புதிரோ!" என்ற ஸ்வரத்துக்கு பாவம் (வ்யவஹரிக்கைக்குமித்யாதி) விளம்புதல்-சொல்லுதல். "மற்றைத்தெய்வம்" என்று பாடமானபோது - மற்றெத்தையாகிலுமொன்றைத் தெய்வமாகவென்று சப்தார்த்தம்.

அடிமையினால் - புக்கு - தன்னை யென்று தொடங்கி, நாராயணனருளே; ஆகையாலே, கொக்கலர்தடமென்று தொடங்கி, விளம்புதிரோ இத்யந்வய8.......*

# ஒன்பதாம்பாட்டு.

விளம்புமாறுசமயமுமவையாகியுமற்றுந்தன்பா
லளந்துகாண்டற்கரியனாகியவாதிப்பிரானமரும்
வளங்கொடண்பணைசூழ்ந்தழகாயதிருக்குருகூரதனை
யுளங்கொண்ஞானத்துவைம்மினும்மையுய்யக்கொண்டுபோகுறிலே.

## ஆறாயிரப்படி.

(விளம்பும்) கூடித்ரஜைதவங்களை விட்டு, வேதபாஹ்யகுத்ருஷ்டிப்ரப்ருதி ஸமஸ்த துஸ்தர்க்க துரபஹ்நவ ஸ்வரூப ரூபகுண விபூதிகனான பரமபுருஷனெழுந்தருளி யிருக்கிற திருநகரியை யாஶ்ரயியுங்கோளுஜ்ஜீவிக்கவேண்டியிருந்திகோளாகி லென்கிறார்..............................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இதர துரவபோதன் வர்த்திக்கிற திருநகரியை யுங்களுக்குஜ்ஜீவனார்த்தமாக வநுசந்தியுங்கோளென்கிறார்.

விளம்பும் - தர்க்ககோலாஹலத்தாலே சப்தமாத்ரஸாரமாயிருக்கிற. ஆறு- சார்வாக ஶாக்ய க்ஷபணக வைசேஷிக ஸாங்க்ய பாசுபத ரூபமான ஆறு. சமயமும் - பாஹ்யஸமயமும். மற்றும் - மற்றுமுள்ள குத்ருஷ்டிவர்க்கமும். அவையாகியும் - சபையாகத்திரண்டாலும். தன்பால் - அபரிச்சிந்நஸ்வபாவனான தன்விஷயத்தில். அளந்து - நிஷேத்யதயாவும் பரிச்சேதித்து. காண்டற்கு - காண்கைக்கு. அரியனாகிய - அரிதானஸ்வபாவத்தையுடைய. ஆதி-சர்வகாரணபூதனான. பிரான்- மஹோபகாரகன். அமரும் - பொருந்தி வர்த்திக்கும் தேசமாய். வளங்கொள்- தர்ஶநீயமாய். தண் - ஶ்ரமஹரமான. பணை - நிலங்களாலே. சூழ்ந்து - சூழப்பட்டு. அழகாய - நிரதிசயபோக்யமான. திருக்குருகூரதனை - திருநகரியை. நீங்கள்; உம்மை - உங்களை. உய்யக்கொண்டு - உஜ்ஜீவிப்பித்துக்கொண்டு. போகுறில் - நடக்கவேண்டியிருந்தீர்களாகில். உளங்கொள்ஞானத்து - உங்கள் மாநஸஜ்ஞாநத்துக்குள்ளே. வைம்மின் - வையுங்கோள்..................................*

## ஈடு - ஒன்பதாம்பாட்டு.

உங்களுடைய வுஜ்ஜீவநத்துக் கவ்வளவும்செல்லவேணுமோ, அவன் வர்த்திக்கிற திருநகரியை யுங்கள் ஜ்ஞாநத்துக்கு விஷயமாக்கவமை யுமென்கிறார்.

(விளம்புமாறுசமயமும்) சிலவற்றைச்சொல்லாநின்றால், தாங்களும் சிலதர்க்கங்கள் சொல்லாநிற்குமத்தனைபோக்கி, ப்ரமாணாநுகூல தர்க்கமல்லாமையாலே கேவலம் உக்திசாரமேயாயிருக்கிற பாஹ்யசமயங்களாறும். அவையாகிறன — "ஶாக்யோலூக்யாக்ஷபாதக்ஷபணகபில பதஞ்ஜலிமதாநுஸாரிண:" (ஶாக்யோலூக்யாக்ஷபாதக்ஷபணகபில பதஞ்ஜலிமதாநுஸாரிண:) என்றுபாஷ்யகாரரருளிச்செய்தாரிறே. (அவையாகியுமற்றும்) மற்றுமவற்றோடொத்த குத்ருஷ்டிகளும்; "தமோநிஷ்டாஹிதாஸ்ஸ்ம்ருதா:" (தமோநிஷ்ட்டாஹிதாஸ்ஸ்ம்ருதா:) (தன்பாலித்யாதி) தன்னளவில்வந்தால் "இல்லை" என்கைக்கும் "இவ்வளவு" என்று பரிச்சேதிக்க வரிதாயிருக்கும். "இல்லை" என்னும்போதும், வஸ்துவை "இது" என்று பரிச்சேதிக்கவேணுமே. அதாவது—இவனுடைய ஸ்வரூபரூப குணவிபூதிகள் பாஹ்யகுத்ருஷ்டிகளாலவிசால்யமாயிருக்குமென்கை. அதுக்கடியென்னென்றால் (ஆதிப்பிரான்) "மேமாதாவந்த்யா" (மேமாதாவந்த்யா) என்னவொண்ணாதிறே. (அளந்தித்யாதி) துஸ்தர்க்கங்களால் "இவ்வளவு" என்றுபரிச்சேதிக்கவொண்ணாதபடி யிருக்கிறஜகத்காரண பூதனானவன் விரும்பிவர்த்திக்கிற. (வளங்கொளித்யாதி) சம்பத்தையுடைத்தாய் ஶ்ரமஹரமான நீர்நிலங்களாலேசூழப்பட்டு, கண்டார்க்குவைத்த கண்வாங்கவொண்ணாதபடி தர்ஶநீயமான திருநகரியை. (உளங்கொள்ஞானத்துவைம்மின்) உளங்கொள்ஞானம்—மாநஸஜ்ஞாநம். ஜ்ஞாநமுதித்து, பாஹ்யேந்த்ரியங்களாலே பாஹ்யவிஷயத்தை க்ரஹிப்பதுக்குமுன்னே, மாநஸஜ்ஞாநத்துக்குத் திருநகரியை விஷயமாக்குங்கோள். பஹிர்விஷயமாக்காதே ஜ்ஞாநத்தை ப்ரத்யகர்த்த ப்ரவணமாக்கப் பாருங்கோள். என்செய்யவென்னில் (உம்மையுய்யக்கொண்டுபோகுறிலே) "ஸந்தமேநம்" (ஸந்தமேநம்) என்கிறபடியே, உந்தாமுடைய சத்தைபெற்றுப் போகவேண்டியிருக்கில். "அஸந்நேவ" (அஸந்நேவ) என்கிறபடியே "சென்றற்றது" என்றேயிருக்கிறாராயிற்றிவர். "நேயமஸ்தி" (நேயமஸ்தி) என்னுமாபோலே. [மஹாத்மநா] [மஹாத்மநா] (தன்னிற்றான்வாசி சொல்லுமித்தனைபோக்கிப் புறம்பொரு வொப்புச்சொல்லவொண்ணாதபடியான பெருமாளோடே..................................*

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு. (விளம்புமித்யாதி) "திருக்குருகூரதனை உளங்கொள் ஞானத்துவைம்மின்" என்றத்தைக் கடாக்ஷித் தவதாரிகை (உங்களுடையவித்யாதி) அவ்வளவும் - பகவத்பர்யந்தமும்.

சமயங்களெல்லாம் உக்திஸாரங்களாயிருக்க, சமயங்களை "விளம்பும்" என்று விசேஷிக்கிற தென்னென்ன (சிலவற்றையித்யாதி) சிலவற்றைச் சொல்லாநி

ன்ருல் - வேதாந்திகள் ப்ரமாணநுகூலமாக சில தர்க்கங்களைச் சொல்லாநின்ருல். ஶாக்யாஃ - பௌத்தாঃ - உலூக்யாஃ - உலூகவத் ப்ரத்யக்ஷ மாத்ராரா்த்ர ...ஞப்தி ஸாதநாஸ்சார்வாகாஃ. அக்ஷபாதஃ - கௌதமஃ. தேந - நையாயிக வை... கா வுச் யேதே. க்ஷபணাঃ - ஜைநாঃ. கபிலঃ - ஸேஸ்வரஸாங்க்யஃ. பதஞ்சலி மதாநுஸாரி ணஃ - யோகமதாநுஸாரிணঃ. குத்ருஷ்டிகளை - "அவையாகியும் மற்றும்" என்று பாஹ்யரோடே கூட்டிச் சொல்லலாமோவென்ன (தமோநிஷ்டாஇத்யாதி)

தன்பால் - ஸ்வவிஷயே. (இவ்வளவென்று) ஏதாவத்ஜ்ஞாந ஶக்த்யாதிகு ணகமிதி பரிச்சேத்துமஶக்யமித்யர்த்தஃ. தத்ரஹேதுமாஹ (வஸ்துவையித்யாதி) அதாவது - வஸ்துவை "இது" என்று பரிச்சேதித்து, பின்னையிறே தூஷிப்பது; அபரிச்சிந்நமாகையாலே பரிச்சேதித்து தூஷிக்கவொண்ணு தென்றபடி. அவர்களி வனை யங்கீகரித்தாலன்ருே பரிச்சேதிக்க வேண்டுவது, இவனை யிசையாதார்க்கது வேண்டாவேயென்ன வருளிச்செய்கிருர் (இல்லையென்னும்போதுமென்று) இல்லை யென்னும்போதும்) என்று பாடமில்லாவிட்டால், (பரிச்சேதிக்கவேணுமே) என் றவநந்தரம், இல்லையென்னும்போதும் என்றத்யாஹரிப்பது. ப்ரதிஜ்ஞாதார்த்தே ஹேதுகர்ப்பமுத்தரம் பதமவதாரயதி (அதுக்கடியிதி) அதுக்கடி. பரிச்சேதாநர் ஹதைக்கடியென்னுதல், இல்லையென்னக் கூடாமைக் கடியென்னுதல். ஸ்வரூபாதி களவிசால்யங்களாகையாலே இல்லையென்னவொண்ணு தென்னுமத்தை விசதீகரி க்கிருர் (மேமாதேத்யாதி) யத்வா, (ஆதிப்பிரான்) நிகில ஜகத்காரணத்வா திதி பாவஃ. சப்தார்த்தம் (துஸ்தர்க்கங்களாலித்யாதி)

சப்தார்த்தம் (ஸம்பத்தையித்யாதி) "உளங்கொள்ஞானம்" என்று - மாந ஸஜ்ஞாநத்திலே வைக்கச் சொல்லுகிறதென்னென்ன (ஜ்ஞாநமுதித்தித்யாதி) "ஆ திப்பிரானமரும்" இதிவிசேஷண விவக்ஷயா பாவாந்தரமாஹ (பஹிர்விஷயேத் யாதி) விவரணம் (பஹிரித்யாதி) என்னுதல், (ப்ரத்யகர்த்தேதி) ப்ரத்யக்ப்யா ம் - பரமாசார்ய பரமாத்மப்யாம், அர்த்யதே - ப்ராப்யத்வேந ப்ரார்த்யதே இதி, ப்ரத்யகர்த்தঃ - திருநகரி. நித்யமான வாத்மவஸ்துவையிப்போது "உய்யக்கொண் டுபோகுறில்" என்பானென்னென்ன (அஸந்நேவேத்யாதி) அவர்கள் "ஸத்தையு ண்டு" என்றிருக்க, அப்படி "இல்லை" என்று சொன்னபேருண்டோவென்ன (நே யமஸ்தீத்யாதி) "நேயமஸ்தி புரீலங்கா நயூயம்நசராவணঃ।யஸ்யத்விக்ஷ்வாகுநாதேநபத்தம்வைரம்மஹாத்மநா" (நேயமஸ்திபுரீலங்கா நயூயம்நசரா வணঃ।யஸ்யத்விக்ஷ்வாகுநாதேநபத்தம்வைரம்மஹாத்மநா) இதி ஸுந்தரகாண்டே மாருதிঃ. அதாவது - ராவணனாலே யேவப்பட்ட ராக்ஷஸர்களைக் குறித்து, தன்னை க்கட்டிக்கொண்டு போகாநிற்க, "பெருமாளோடு விரோதமுண்டாகையாலே லங் கையும் ராவணனும் நீங்களுமில்லை" என்றே சொன்னனிறே திருவடி யென்றபடி. உபாத்த ஶ்லோகே வ்யாக்யேயம்பதம்விவ்ருணோதி (மஹாத்மநேதி) ஆத்மாঃ பர த்வாதிரூபாந்மஹாநித்யர்த்தঃ. தன்னில்தான் வாசிசொல்லுமித்தனையென்றது - அ வதாரவேஷத்தோடே நின்ற தனக்கு பரத்வாகாரமே யொப்பென்று சொல்லுமத் தனைபோக்கி வேறொப்புச் சொல்லுவாரில்லை யென்றபடி.

விளம்புமாறுசமயங்களாலும் - மற்றும் - அவையாகிய வைகளாலும் தன் பாலளந்து காண்டற்கென்றுதொடங்கி, திருக்குருகூரதனை - உம்மையுய்யக்கொண் டுபோகுறில் - உளங்கொள் ஞானத்து வைம்மினென்றந்வயம். விளம்புமாறுசமய மும் - சுஷ்கதர்க்கங்களைச் சொல்லுகிற ஷட்ஸமயங்களாலும், (அவையாகியும்

மற்றும்) மற்றும் - அவையாகியும். மற்றுமவற்றோடொத்த குத்ருஷ்டிகளாலும். "அவையாகியும் - ஸபையாகத்திரண்டாலும்" என்றுமா. அவை - ஸபை. உம்மையுய்யக்கொண்டுபோகுறில் - உங்களை யுஜ்ஜீவிப்பித்துக்கொண்டு நடக்கவேண்டியிருந்திகோளாகில். உளங்கொள்ஞானத்து - மாநஸஜ்ஞாநத்துக்குள்ளே.................*

---

# பத்தாம்பாட்டு.

உறுவதாவதெத்தேவுமெவ்வுலகங்களுமற்றுந்தன்பான்
மறுவின்மூர்த்தியோடொத்தித்தனையுநின்றவண்ணநிற்கவே
செறுவிற்செந்நெல்கரும்பொடோங்குதிருக்குருகூரதனுட்
குறியமாணுருவாகியநீள்குடக்கூத்தனுக்காட்செய்வதே.

## ஆறாயிரப்படி.

(உறுவதாவது) ஸ்வாசாதாரண விக்ரஹம்போலே விதேயமான சர்வஜகத்தையு முடையனு யஜஹத்ஸ்வபாவனுய்க்கொண்டு, செறுவிற்செந்நெல் கரும்பொடோங்கு திருக்குருகூரதனுள் நின்றருளின குறியமாணுருவாகிய நீள்குடக்கூத்தனுக் காட்செய்வதே யுறுவதாவதென்கிறார்........................................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், சர்வசரீரியாய் நிரதிசயசீலவானுய் சர்வமநோஹரசேஷ்டிதத்தை யுடையனுனவனுக் கடிமைசெய்வதே யுத்தேஶ்யமா யுசிதமுமான புருஷார்த்தமென்கிறார்.

எத்தேவும்-சகலதேவதாவர்க்கமும். எவ்வுலகங்களும்-சமஸ்தலோகமும். மற்றும்-மற்றுமுண்டானசிதசித்வர்க்கமுமான.இத்தனையும்-இவையித்தனையும்.தன்பால்-தன்ஸ்வரூபத்திலே. மறுவில்-நிரவத்யமான. மூர்த்தியோடொத்து-அசாதாரணவிக்ரஹத்தோபாதி அத்தலைக்கதிசயகரமானப்ரகாரமாய்க்கொண்டு. நின்றவண்ணம்-தான்நிற்கிற ஸ்வரூபபேதமும் ஸ்வபாவபேதமும் குலையாதபடி. நிற்கவே - நிற்கச்செய்தே. அம்மேன்மையோடொக்க, செறுவில் - விளைநிலங்களில். செந்நெல்-செந்நெலானது. கரும்பொடு-கரும்போடொக்க. ஓங்கு-வளரும்படியான. திருக்குருகூரதனுள்-திருநகரிக்குள்ளேநிற்குமவனுய். குறிய-ஆஶ்ரிதர்க்குச்சிறும்பித்தநுபவிக்கலாம்படிவாமநனுய். மாணுருவாகிய - அர்த்தித்வமேநிரூபகமென்னலாம்படியான ப்ரஹ்மசாரிவேஷத்தையுடையனுய். நீள்-கேட்டாரெல்லாரு மீடுபடும்படியான நிரதிசயபோக்யதா மாஹாத்ம்யத்தையுடைய; குடக்கூத்தனுக்கு-குடக்கூத்தைப்பண்ணினக்ருஷ்ணனுக்கு. ஆட்செய்வதே-அடிமைசெய்வதே.உறுவது-சீரியதாயும். ஆவது-உசிதமாயுமுள்ளபுருஷார்த்தம்..................................................*

## ஈடு - பத்தாம்பாட்டு.

தன்னைஶ்வர்யத்தி லொன்றுங் குறையாமல்வந்து திருநகரியிலே நின்றருளின பொலிந்துநின்ற பிரானுக்கடிமைசெய்கையே உசிதமென்கிறார்.

(உறுவதாவதித்யாதி) நீள்குடக்கூத்தனுக் காட்செய்வதே – உறுவதாவது. உறுவதுமிது, ஆவதுமிது – சீரியதுமிது, ஸுஃஸகமு மிது வென்னுதல்; உறுவதாவது–இதுவேயென்னுதல். (எத்தேவுமித்யாதி) எல்லாத் தேவதைகளும், தேவதைகளுக்கு போகஸ்தாநமான வெல்லா லோகங்களும். (மற்றும்) மற்றுமுண்டான சேதநாசேதநங்களும். (தன்பால் மறுவில் மூர்த்தியோடொத்து) தன்னிடத்துவந்தால் மறுவில்லாதபடி மூர்த்தியோ டொத்து. இவை மூர்த்தியாமிடத்தில் அப்ராக்ருதமான விக்ரஹத்தோபாதி குறைவின்றிக்கேயிருக்கை. மறுவாகிறது–குற்றம். அதாவது–குறைவு. அதின்றிக்கேயிருக்கை. ப்ருதக்ஸ்த்தித்யாதிகளின்றிக்கேயிருக்கை. அன்றிக்கே, மறுவையுடைத்தான மூர்த்தியுண்டு–ஸ்ரீவத்ஸத்தையுடைத்தான விக்ரஹம்; அத்தோடொத்தென்னுதல். அன்றிக்கே, மறுவில்மூர்த்தியுண்டு–ஹேயப்ரத்யநீகமான விக்ரஹம்; அத்தோடொத்தென்னுதல். இவைசரீரத்தோடொக்கை யாவதென்னென்னில்; ப்ருதக்ஸ்த்தித்யநர்ஹாதாராதேயபாவ, நியந்த்ருநியாம்யபாவ, சேஷசேஷிபாவமான சரீரலக்ஷணங்க ளிவற்றுக்குண்டாகையாலே. வ்ருக்ஷத்திலே தேவதத்தன்நின்றால் அதவனுக்கு சரீரமாகாதிறே, இங்கநங்ஙனன்றிக்கேயிருக்கை. (இத்தனையுமித்யாதி) இவையடங்கலு மிருந்தபடியே தன்பக்கலிலேநிற்க. தன்னையொழிந்த சகலபதார்த்தங்களும் தனக்கு சரீரதயாசேஷமாம்படியிருக்கிற இவ்வைஸ்வர்யத்திலொன்றுங் குறையாதபடிவந்துநிற்கை. உபயவிபூதி யுக்தனுகையால் வந்தவைஸ்வர்யமடையத் தோற்றும்படிக்கீடாக வாயிற்றிங்குவந்துநிற்கிறது. ராஜபுத்ரனொரு ஒலியலையுடுத்துத் தாழவிருந்தாலும் ஐஸ்வர்யத்திற்குறைந்து தோற்றாதிறே. (செறுவிலித்யாதி) செய்களில் செந்நெற்களானவை கரும்போடொக்க வோங்காநின்றுள்ள திருக்குருகூரதனுள். அவ்வூரில் பதார்த்தங்களி லொன்றிலொன்று குறைந்திருப்பதில்லை, தேசவிசேஷத்தி லெல்லாருமொருபடிப் பட்டிருக்குமாபோலே. (குறிய) கோடியைக்காணியாக்கினாற்போலே, கண்ணாலேமுகக்கலாயிருக்கும்படி வடிவையமைத்தபடி. (மாணுருவாகிய) இட்டபோதோ டிடாதபோதோ டுவாசியற முகமலர்ந்துபோம்படியாக இரப்பிலே தழும்பேறினபடி. (நீள்குடக்கூத்தனுக்கு) குடக்கூத்தாடி விட்டபின்பும், அம்மநோஹாரி சேஷ்டிதத்தைப் பிற்பட்டகாலத்திற் கேட்டார்க்கும் சமகாலத்திலே கண்டாற்போலே ப்ரீதிபிறக்கும்படியாயிற்றுக் குடக்கூத்தாடிற்று. (ஆட்செய்வதே) அச்சேஷ்டிதந்தானே யடிமையிலேமூட்டும், நீங்களிசையுமத்தனையே வேண்டுவது.............................................*

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு. (உறுவதாவதித்யாதி) யதோபக்ரமம் நிகமயதீத்யாஹ (தன்னைஸ்வர்யத்திலித்யாதி) தன்னைஸ்வர்யத்திலொன்றும் குறையாமலென்ற

து - “ இத்தனையும்நின்றவண்ணம்நிற்கவே ” என்றத்தைப்பற்ற. “ திருக்குருகூரதனுள் ” என்றுதொடங்கி, “ ஆட்செய்வதே-உறுவதாவது ” என்னுமளவும் கடாக்ஷித்து ( திருநகரியிலேயித்யாதி )

பாட்டுக்கந்வயங்காட்டுகிறார் ( நீள்குடக்கூத்தனுக்கித்யாதி) பதச்சேதம் பண்ணின வடைவிலேயர்த்தம் ( சீரியதுமித்யாதி ) சீரியது-ப்ராப்தம். த்விதியார்த்தத்துக்கு, “ உறுவதாவது ” என்று - முழுச்சொல்லாய். ப்ராப்தமாவதென்றபடி.

இவையென்றது - “ எத்தேவுமெவ்வுலகங்களும் ” என்றத்தை. “ மறுவில் மூர்த்தி ” என்றதுக்கு அர்த்தத்ரயம் ; முந்தினது ( மறுவில்லாதபடி மூர்த்தியோடொத்தென்று ) விவரணம் ( இவையித்யாதி ) மறுவென்று-குற்றமாய், அதாவது-சங்கோசமாய், அதில்லாதே, மூர்த்தியோடு-அசாதாரணவிக்ரஹத்தோடு, ஒத்திருக்குமென்றபடி. த்விதீயார்த்தத்துக்கு, மறுவுக்கில்லான-ஸ்ரீவத்ஸத்துக் கிருப்பிடமான, மூர்த்தியென்றபடி. ஆக, அர்த்தத்ரயத்தாலும்-சரீரதயாசேஷ மென்றதாயிற்று. ஆதாராதேயபாவம் சொன்னால்போராதோ, “ ப்ருதக்ஸ்த்திதி நர்ஹம் ” ( ப்ருதக்ஸ்த்தித்யநர்ஹம் ) என்று விசேஷிக்க வேணுமோவென்ன ( வ்ருக்ஷத்திலேயித்யாதி) ஜாதிகுணவ்யாவ்ருத்யர்த்தமாக த்ரவ்யத்வேஸதியென்றுவிசேஷித்துக்கொள்வது. சப்தார்த்தம் (இவையடங்கலுமித்யாதி) தாத்பர்யம் ( தன்னையொழிந்தவித்யாதி) கீழ்வாக்யவிவரணம் (உபயவிபூதீத்யாதி) தாழநிற்கிறவிடத்தி லேஸ்வர்யந்தோற்றுமோவென்ன ( ராஜபுத்ரனித்யாதி ) ஒலியல்-சிறுவஸ்த்ரம்.

பலிதம் ( அவ்வூரிலித்யாதி ) இவ்விடத்திலே யொன்றிலொன்று குறையாதிருக்கக்கூடுமோவென்ன ; குறைந்திராமைக்குஹேது திவ்யதேசமாகையாலேயென்று விவக்ஷித்து, அதுக்குத்ருஷ்டாந்தம் ( தேசவிசேஷத்திலித்யாதி ) கோடியைக்காணியாக்கினாற்போலே-மஹாசங்க்யையை அல்பசங்க்யையாக்கினாற்போலே. முகக்கலாய்-க்ரஹிக்கலாய். அமைத்தபடி-சங்கோசிப்பித்தபடி. பதஸ்வாரஸ்யசித்தார்த்தம் ( இட்டபோதோடித்யாதி ) “ நீள் ” என்றதுக்குபாவம் ( குடக்கூத்தித்யாதி ) * நீட்சிபோக்யதையாலேயென்றபடி. “ நீள்குடக்கூத்தன் ” என்றத்தோடேகூட்டிபாவம் ( அச்சேஷ்டிதந்தானேயித்யாதி )

எத்தேவுமென்றுதொடங்கி, நின்றவண்ணம் நிற்கச்செய்தே அம்மேன்மையோடே, செறுவிலென்றுதொடங்கி, திருக்குருகூரதனுள் நிற்கிறகுறியமாணுருவாயநீள் குடக்கூத்தனுக்காட்செய்வதே-உறுவதாவதென்றந்வயம். இது-வில்பூட்டு. சறு-விளைநிலம்.......................................................................*

---

# பதினொன்றாம்பாட்டு.

---

ஆட்செய்தாழிப்பிரானைச்சேர்ந்தவன்வண்குருகூர்நகரா
னாட்கமழ்மகிழ்மாலைமார்பினன்மாறன்சடகோபன்
வேட்கையாற்சொன்னபாடலாயிரத்துள்ளிப்பத்தும்வல்லார்
மீட்சியின்றிவைகுந்தமாநகர்மற்றதுகையதுவே.

## ஆ று யி ர ப் ப டி.

( ஆட்செய்து ) பகவத்கைங்கர்யாதி சீதளாம்ருதமய தடாகாவ காஹந சுப்ரஸந்நாத்மஸ்வரூபகாத்ர நிரதிசயசுகந்த விகஸத்கேசரமாலாலங்க்ருதவக்ஷஸ்த்தலரான வாழ்வார்,பரமபுருஷவிஷய நிரதிசயபக்தியாலே சொன்னவாயிரத்து ளிப்பத்தும் வல்லார்க்கிதுவே வல்லராமதுவே பரமப்ராப்யம்; மற்றுத்திருநாடு வேண்டியிருக்கில், அது இவர்கள்கையதென்கிறார். ... ... ... ... ... ... ... *

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழியை யப்யசித்தவர்களுக்கு பரமபதம்கையிலேயென்று பலத்தையருளிச்செய்கிறார்.

ஆட்செய்து-பரோபதேசமுகமான வாசிககைங்கர்யத்தைப்பண்ணி. ஆழி-ஆஸ்ரிதாநுபாவ்யமான திருவாழியைக்கையிலேயுடைய. பிரானை-உபகாரகனை. சேர்ந்தவன்-ப்ராபித்தவராய். வண்-விலக்ஷணமான. குருகூர்நகரான் - திருநகரிக்குநிர்வாஹகராய். நாட்கமழ் - அபிநவபரிமளத்தையுடைய. மகிழ்மாலை-திருமகிழ்மாலையை. மார்பினன்-மார்பிலேயுடையராய். மாறன்-மாறனென்கிறகுடிப்பேரையும். சடகோபன்-பாஹ்யகுத்ருஷ்டிகளான சடரைநிரசிக்கையாலே சடகோபரென்னும்திருநாமமுடையவாழ்வார்.வேட்கையால் - பகவத்விஷயத்திலே யபிநிவேசத்தாலே. சொன்ன-அருளிச்செய்த. பாடல்-காநரூபமான. ஆயிரத்துள்-ஆயிரந்திருவாய்மொழியிலும். இப்பத்தும்-பரோபதேசமான இப்பத்துப்பாட்டையும். வல்லார்-அர்த்தாநுசந்தாநத்தோடே யப்யசிக்கவல்லார்கள். கையது-கையது. மற்று-இதினுடைய அப்யாசமாகிறப்ரயோஜநத்துக்குமேலே. அது-அவ்வருகுண்டாய். மீட்சியின்றி-புநராவ்ருத்தியில்லாத. வைகுந்தம்-ஸ்ரீவைகுண்டமாகிற. மாநகர்-மஹாநகரமானது.

இது-அறுசீராசிரியவிருத்தம்............................................................*

## ஈடு - பதினொன்றும்பாட்டு.

நிகமத்தில்—இத்திருவாய்மொழி கற்றார்க்குப்பரமபதம் சுலபமென்கிறார்.

( ஆட்செய்தாழிப்பிரானைச்சேர்ந்தவன் ) அடிமைசெய்து சர்வேஸ்வரனைக்கிட்டினவர். முறையிலே சர்வேஸ்வரனைப்பற்றினவ ராயிற்றிவர். அதாவது— " விசித்ராதேஹஸம்பத்திரீஸ்வராய " ( விசித்ராதேஹஸம்பத்திரீஸ்வராய ) என்கிறபடியே, அவன்கொடுத்த உபகரணங்களைக்கொண்டு அப்ராப்தவிஷயங்களிலேபோகாதே, "தந்தநீகொண்டாக்கினை " என்கிறபடியேவகுத்த விஷயத்துக்கே சேஷமாக்கிக்கொண்டுகிட்டுகை. ஆட்கொள்ளுகைக் குபாயமவன்கையிலே யுண்டுபோலேகாணும். தான்வ்ருத்தவானுய்க்காணு மிவரைவ்ருத்தியிலே யந்வயிப்பித்தது. கையில்திருவாழி சேர்ந்தாற்போலேயாயிற் றிவரும்சேர்ந்தபடி. (சேர்ந்த ) கெடுமரக்கலம் கரைசேர்ந்தாற்போலே. ஆட்செய்கையாவது—அடிமைசெய்கை. அடிமைதான்த்ரிவிதம்—மாநசவாசிக காயிகங்கள். இவற்றில், மாநசகாயிகங்களுக்காளல்லர் ; என்றியவென்னில் ; " காலாழும்

நெஞ்சழியும்கண்சுழலும் " என்கையாலே. இனிவாசிகமொன்றுமேயானால், வாசிகமாகத் திருவாய்மொழிபாடி யடிமைசெய்தாரென்கிறதோவென்னில் ; அன்று, அப்படியாமன்றிப்பாசுரம் * முனியேநான்முகனிலேயாகவேணும் ; இல்லையாகில், சர்வசங்க்ரஹமான முதற்றிருவாய்மொழியிலேயாகிலு மாகவேணும் ; இல்லையாகில் இவர்வாசிகமாக வடிமைசெய்த * புகழுநல்லொருவனிலேயாகப்பெறில்முக்யம். ஆனால், தேவதாந்தரபரத்வ நிரஸநபூர்வகமாக சர்வேஸ்வரனுடையபரத்வத்தை யருளிச்செய்கையாலே யானாலோவென்னில் : அதுவாகில், முதற்றிருவாய்மொழியிலேயாகவமையும். பரத்வநிர்ணயத்திலே பரோபதேசமுமாகையாலே யானாலோவென்னில் ; அதுவாகில், * திண்ணன்வீட்டிலேயாதல், * அணைவதரவணையிலே யாதலாகவமையும். ஆனால், அர்ச்சாவதாரத்திலே பரத்வமருளிச்செய்கையாலே யானாலோவென்னில்: அதுவுமொண்ணாது, அது * செய்யதாமரைக்கண்ணனிலே யாகவமையும். பரோபதேசம்பண்ணுகையாலே சொல்லிற்றானாலோவென்னில் ; அதுவுமொண்ணாது,*வீடுமின்முற்றவுந்தொடங்கிப் பலவிடங்களிலும் பரோபதேசம்பண்ணினார், அவற்றிலுமாகப் பெற்றதில்லை. ஆனாலேதாவதென்னில் ; * இவ்வொன்றுந்தேவிலே, " திருக்குருகூரதனுள் பரன்றிறமன்றிப்பல்லுலகீர் தெய்வம்மற்றில்லைபேசுமினே " என்று -'பொலிந்துநின்றபிரானே சர்வஸ்மாத்பரனென்றிவ ரருளிச்செய்யக்கேட்டு, " கபாலநன்மோக்கத்துக்கண்டுகொண்மின் " என்னக்கண்டு, ஜகத்தாகத்திருந்தி ஸ்ரீவைஷ்ணவர்களாயிற்று ; இவர்தாமவர்களுக்கு மங்களாஶாஸநம்பண்ணும்படியிறே யவர்கள்தாம்திருந்தினபடி, " பொலிகபொலிக " என்று இதுக்கென்ன வொருதிருவாய்மொழி நேருகிறாரிறே. சர்வேஸ்வரனவதரித்துத் திருத்தப்பார்த்தவிடத்தும் திருந்தாதசம்சாரத்திலே யிவர்திருத்தத்திருந்தினபடி ; இனி இவர்க்குத் தத்வநிர்ணயம் பண்ணவேண்டாதபடி * இடங்கொள் சமயத்தையெல்லா மெடுத்துக்களைவனபோலே தடங்கடற்பள்ளிப் பெருமான்றன்னுடைப் பூதங்களேயாம்படி ( யாயிற்று. இப்படி ) திருத்துகையாலே—ஆட்செய்தாழிப்பிரானைச் சேர்ந்தவனென்கிறார். (வண்குருகூர்நகரான்) இந்நன்மைக்கடி யவ்வூரில் பிறப்பாயிற்று. ( நாட்கமழ்மகிழ்மாலைமார்பினன் ) * நண்ணாதார் முறுவலிப்பவிலே-சம்சாரிகள் படுகிறக்லேசத்தை யநுசந்தித்து, சாத்தினமாலையும் வாடியிருந்ததுமுன்பு ; இப்போது - பகவத்பரத்வத்தை யுபபாதித்து, " இனி இவர்களுக்கொருகுறையில்லை " என்றுதேறினபின்பு, இட்டமாலையும் செவ்விபெற்றதாயிற்று. ( மாறன்சடகோபன் ) பகவத்ப்ராப்திப்ரதிபந்தகமான வற்றுக்கெல்லாம் ம்ருத்யுவானவர். ( வேட்கையித்யாதி ) சிலர்தாந்தராய்வந்துகேட்க, சொல்லுகிறானன்றே ; தம்முடையவபிநிவேசாதிசயத்தாலே யருளிச்செய்த பாடலாயிரத்திலு மிப்பத்தையும் வல்லார்கையது, மீட்சியின்றி வைகுந்தமாநகர். (( மற்றது ; ) வீ

